தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை—55

# பொருளாதாரம்-ஓர் அறிமுகம்

இரண்டாம் பகுதி

(AN INTRODUCTION TO ECONOMICS)

PART II

ஆசிரியர்
அலெக் கேர்ன்கிராஸ்
பிரயோகப் பொருளாதாரப் பேராசிரியர்
கிளாஸ்கோ பல்கலைக் கழகம்

தமிழாக்கம்
எம். அபூர்வசாமி
உதவி விரிவுரையாளர், பொருளாதாரத்துறை
அரசர் கல்லூரி, புதுக்கோட்டை

பி. வி. ஸ்ரீநிவாசன்
விரிவுரையாளர், பொருளாதாரத்துறை
அரசாங்கக் கல்லூரி, கும்பகோணம்




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு - அரசாங்கம்

# அணிந்துரை

(திரு. எம். பக்தவத்ஸலம், தமிழக முதலமைச்சர்.)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி நான்கு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்ல மெல்ல மறைந்துவருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித்தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி—இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே திருப்திகரமாக நடைபெற்றுவருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே, குறுகிய காலத்தில், அரிய முறையில் நூல்கள் எழுதித்தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'பொருளாதாரம் ஓர் அறிமுகம்' என்ற இந் நூல், தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 55ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து, இதுவரை 90 நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளையெல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலையாசனத்தில் அமர்ந்துள்ளாள். எனவே, இவ் வன்னையை வாழ்த்துவோமாக. உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றிகாண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெற வேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக்கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனங்கலந்த நன்றி உரித்தாகுக.

எம். பக்தவத்ஸலம்

# பொருளடக்கம்

## பாகம் IV—வருமானப் பகிர்வு

அத்தியாயம் பக்கம்

**22. வருமானப் பகிர்வு ... 549**

அளிப்பு—அளிப்பு விலை—அளிப்பு விலையும், மாற்றுச் செலவும்—வாரமும் செலவும்—தேவை—இறுதி நிலை ஆக்கப்பாடு—இறுதிநிலை ஆக்கப்பாடும் பதிவீடும்—தேவை நெகிழ்ச்சி—கோட்பாட்டின் உட்கருத்துகள்—இறுதிநிலை ஆக்கமும், இறுதிநிலை நிகர ஆக்கமும்—இறுதிநிலை ஆக்கப்பாடும் எச்சப்பாடும்—நெடுங்காலத்தில் சம்பாத்தியம்—புத்தாக்கமும் கூலியும்—சர்வாதீனமும் வேலையின்மையும்—சர்வாதீனமும் கூலியும்—சர்வாதீனமும், முதலின் சம்பாத்தியமும்—சுருக்கம்.

**23. கூலி ... 584**

கூலியும் போட்டியும்—கூலியில் படுகிடை வேறுபாடுகள்—கூலிகளில் செங்குத்து வேறுபாடுகள்—சுருக்கம்—பேரசக்திகள்—உயர்ந்த கூலிகளின் சிக்கனம்—தொழிலாளர் சங்கங்கள்—தொழிலாளர் சங்க பேரசக்தியின் எல்லை—அரசாங்கமும் கூலிகளும்—பொருளாதார முன்னேற்றத்தில் தொழிலாளர் பங்கு—கூலிப் பூசல்களின் விளைவுகள்.

**24. வட்டியும் இலாபமும் ... 615**

வட்டி—முதல் அளிப்பு — சேமிப்பு — கம்பெனிகளின் சேமிப்பு — அரசாங்கச் சேமிப்பு — வட்டி செலுத்தப்படுவது நியாயமானதா?—காலத் தேர்வும் ரொக்க விருப்பமும்—வட்டி வீதங்களிடையே காணப்

படும் வேறுபாடுகள்—முதலின் தேவை—முதலின் இறுதிநிலை ஆக்கம்—இறுதிநிலை ஆக்கத்தின் மாறுதல்கள்—முதல் பெயர்ச்சி—வட்டி வீதம்—இலாபம்—மொத்த இலாபமும், நிகர இலாபமும்—இலாபத்தின் சிறப்பு அம்சங்கள்—இலாபத்தின் மூலம்—இலாபமும் செலவும்— இலாபமும், வர்த்தக நிலவரங்களும்—தொழிலுக்குத் தொழில் இலாபம் வேறுபடுவதேன்?—சர்வாதீனஇலாபம்—இலாபப் பொது மட்டம்—இலாபமும் நாட்டு வளர்ச்சியும்.

**பாகம் V—வருமானம், வேலை, பணம்**

**25. தேசீய வருமானம்** ... **657**

தேசீய வருமானம் — வருமானம், உற்பத்தி, செலவு—சேமிப்பும், சேமிப்பை அழித்தலும்—ஒரு தனி நிறுவனத்தின் வருமானமும் உற்பத்தியும்—சில அடிப்படைச் சமன்பாடுகள்—தேசீய வருமானத்தை மதிப்பீடு செய்யும் முறைகள்—சமுதாயக் கணக்கு முறை.

**25ஆவது அதிகாரத்தின் பிற்சேர்க்கை** ... **671**

தேசீயக் கணக்குகள் — தேசீய வருமானம்—நாட்டின் செலவு — எச்சப் பிழைகள் — வருமானமும் செலவும் சமமாக இருத்தல்—சேமிப்பும் முதலீடும்—தனிப்பட்டவர்களுடைய வருமானம்—நிறுவனங்கள்—பொதுத்துறை—அயல்நாடுகளுடன் தொடர்பு.

**26. தேசீய வருமானத்தில் ஏற்படும் மாறுதல்கள்** ... **698**

வேலையின்மை — விருப்பத்துடன் வேலையில்லாமல் இருத்தல்—பிறழ்ச்சி காரண வேலையின்மை—தொழில் நிலைமாற்ற வேலையின்மை—வேலைநிறைவு—வேலையின்மையில் மாறுதல்கள்—வேலைநிறைவு இருப்பதால் ஏற்படும் விளைவுகள்—வேலையின்மையின் காரணங்கள்—வர்த்தகச் சகடம்—வர்த்தகச் சகடமும், பொருளாதார வளர்ச்சியும்—திரள் முறை—வர்த்தகச் சகடமும், விலைவாசியும்—பாங்குகளுடைய பணிகள்—போட்டியினால் முதலீடு மிகுதியடைதல்—தொழிலில் நம்பிக்கை—வர்த்தகச் சகடத்தில் அளிப்பும் தேவையும்—அளிப்பு—தேவை—வட்டி வீதங்கள்

—இயற்கையான வட்டிவீதம்—கீன்ஸ் பிரபுவின் வட்டிவீத விதி—ரொக்க விருப்பம்—சேமிப்பும் முதலீடும்—பூர்த்தியடைவதற்கு முன்பும் பின்பும்—சிக்கனம் என்பது எதிர்மறையாக இருக்கின்றது—கட்டட வேலை வளர்ச்சியடைவதால் ஏற்படும் விளைவுகள்—வேலை நிறைவும், அந்த நிலையில் சேமிப்பும் முதலீடும்—வீக்க காலத்தில் முதலீடு—பொருளாதாரத்தின் நிலையற்ற தன்மையும், அயல்நாட்டு வர்த்தகமும்—பெருக்கியும் வேகவிசையும்—பெருக்கி—வேக விசை.

**27. பணத்தின் மதிப்பில் ஏற்படும் மாறுதல்கள் ... 788**

செலாவணி ஏன் நிலையான மதிப்பைக் கொண்டிருக்க வேண்டும்?—விலைகள் வெகு விரைவில் மாறும் காலம்—பணத்தின் மதிப்பு மாறுவதால் ஏற்படும் விளைவுகள்—பங்கீட்டில் ஏற்படும் மாறுதல்கள்—உற்பத்தியில் ஏற்படும் மாறுதல்கள்—பணப்பரிமாணக் கோட்பாடு—மற்றொரு வழி—தேவைப் பணவீக்கம் வளர்ச்சியடைதல்—அடக்கச் செலவுப் பணவீக்கம்—அடக்கப்பெற்ற பணவீக்கம்.

**27ஆவது அதிகாரத்தின் பிற்சேர்க்கை ... 764**

குறியீட்டெண்கள் — நிறையிடுதல் — குறியீட்டெண்ணைத் தயார் செய்வதற்கு இடையூறுகள்—பொருள்களை மக்கள் வாங்கும் பழக்கத்தில் ஏற்படும் மாறுதல்கள்—சங்கிலிக் குறியீட்டெண்கள் — இடையூறுகள்—மற்றக் குறியீட்டெண்கள்.

**28. பணத்தின் தேவை ... 774**

பணம் என்ற சொல்லின் பொருள்—பரிவர்த்தனைச் சாதனம்—பணம் மதிப்பின் உறைவிடம்—பணம் மதிப்பின் அளவுகோல்—கட்டணங்களைத் தாமதித்துச் செலுத்தும் சாதனம் — பணத்தின் தேவை—பதுக்குதல்—ரொக்கத் தன்மையும் வட்டி வீதமும்.

**29. பணத்தின் அளிப்பு ... 788**

செலாவணித்தாள் — செலாவணித் தாள் வெளியீட்டுக்கு எல்லை—பாங்குச் செலாவணி—பணமும்,

மற்ற ரொக்கத் தன்மையுடைய சொத்துகளும்—பாங்குச் செலாவணியும், பாங்குச் செலாவணி ஆக்கமும்—பணத்தை உற்பத்திசெய்தல்—ரொக்க ஆதாரம்—பாங்குச் செலாவணி ஆக்கமும், பாங்குகள் பெறும் இலாபமும்—பாங்குகளும், மற்ற நிதிநிலையங்களும்—பாங்குப் பணமும், ரொக்க ஆதாரமும்—செலாவணிக் கட்டுப்பாட்டின் முறைகள்—ஆங்கிலேய முறையின் சிறப்பான இயல்புகள்—ரொக்கத் தன்மையுடைய சொத்துகள் அளிக்கும் ஆதாரம்—நேரடியான நடவடிக்கை—இங்கிலாந்தின் முறையும், மற்ற நாடுகள் பின்பற்றும் முறையும்—செலாவணிக் கொள்கையும், கடன் நிருவாகமும்—பணத்தின் அளிப்பும், ரொக்கத் தன்மையும்—காப்பு நிதியில் ஏற்படும் மாறுதல்கள்—அயல்நாட்டுத் தொடர்பும், பணத்தின் அளிப்பும்—அயல்நாட்டுச் செலாவணியைக் காப்பு நிதியாக வைத்துக்கொள்ளுதல்.

**80. ஆங்கிலேய நிதிநிலையங்கள்** ... **812**

தொழிலதிபர்கள் சொந்த நிதியைப் பயன்படுத்துதல்—புதிய பங்கு வெளியீட்டு மார்க்கட்டு—வர்த்தகத்திற்கு நிதியுதவி—தனியாட்கள் பெறும் கடன் உதவி—ஆங்கிலேயப் பாங்குகள்—செக்கு தீர்வகப் பாங்குகள்—மற்ற பாங்குகள்—அமெரிக்க பாங்குகள்—பாங்கின் சொத்துகள்—தவணைக் கடன்—தாமாகவே தீர்ந்துபோகும் கடன்கள்—பாங்குகள் கொடுக்கும் கடனுக்கு ஓர் எல்லை—பத்திர முதலீடுகள்—ரொக்கத் தன்மையுடைய சொத்துகள்—மற்ற நிதி நிலையங்கள் — வர்த்தக உண்டியல்கள் — தள்ளுபடி நிலையங்கள் — ஏற்பகங்கள் — வெளியீட்டகங்கள் — இன்ஷூரன்சு கம்பெனிகளும், ஓய்வூதிய நிதியும்—முதலீட்டு டிரஸ்டு—கட்டடச் சங்கங்கள்—தவணைக் கடன் முறையில் நிதியுதவி அளிக்கும் நிறுவனங்கள்—இங்கிலாந்தின் தலைமை பாங்கு—பெடரல் ரிசர்வ் சபை.

**81. பன்னாட்டு வாணிகம்** ... **858**

உள்நாட்டு வாணிகமும், அயல்நாட்டு வாணிகமும்—பன்னாட்டு வாணிகத்திற்குத் தனிக் கோட்பாடு தேவையா?—உற்பத்திச் சாதனங்களின் இடப்

பெயர்ச்சியற்ற தன்மையும், அதன் விளைவுகளும்—முழு வசதியும், தராதர வசதியும்—சிறப்பான உற்பத்தி முறை பூர்த்தியற்றிருத்தல்—பன்னாட்டு வர்த்தக விதி இரண்டுக்கு மேற்பட்ட பண்டங்களுக்கும் பொருந்தும் — விலைகளின் முக்கியத்துவம் — பன்னாட்டு வர்த்தக விதி இரண்டுக்கு மேற்பட்ட நாடுகளுக்கும் பொருந்தும்—பல நாடுகளிடையே நடைபெறும் வாணிகம்—வேறு ஒரு வழி—பன்னாட்டு வர்த்தகமும், பல்வேறு உற்பத்திச் சாதனங்களும்—மேலே விளக்கப்பெற்றுள்ள கோட்பாட்டின் உட்கருத்துகள்.

32. பன்னாட்டு வழி ... 875

அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை—அயல்நாட்டுக் கொடுப்பல்நிலையைப் பாதிக்கும் சக்திகள்—அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையில் சமநிலையை ஏற்படுத்தும் வழி—நிலையான நாணயமாற்று வீதங்கள்—பொன் நாணயத் திட்டம்—பொன்நாணயத் திட்டத்தில் சமநிலை ஏற்படுதல்—மறைமுக நாணய மதிப்புக் குறைப்பு—காப்பு நிதி: நாணயமாற்றுச் சமன்பாட்டு நிதி — ஸ்டெர்லிங் நிதி — நிலையற்ற நாணயமாற்று வீதங்கள்—வாங்குதிறன் சமநிலை—நிலையற்ற நாணயமாற்று வீதத்தின் இயங்கும் தன்மை—நாணயமாற்று வீதங்களில் திறன்முறை மாறுதல்கள்—டாலர் பற்றுக்குறை—நாணயமாற்றுக் கட்டுப்பாடு — கடினச் செலாவணியும், மென்மைச் செலாவணியும் — இருமுக வாணிகம் — ஸ்டெர்லிங் பகுதி—ஐரோப்பிய நாட்டுச் செலுத்துவோர் சங்கம்—பன்னாட்டு நாணய நிதி.

## பாகம் VI—பொருளாதாரக் கொள்கை

33. தலையிடாக் கொள்கையின் வளர்ச்சியும், அது நலிவுறுதலும் ... 918

தலையிடாக் கொள்கையின் வளர்ச்சி—தத்துவ ரீதியில் தலையிடாக் கொள்கையை ஆதரித்தவர்கள்—தொழிலதிபர்கள்—பொருளியலார்—மெர்க்கன்டலிசம் — மெர்க்கன்டலிசத்தின் வீழ்ச்சி — சுருக்கமான

விளக்கம் — தலையிடாக் கொள்கை நலிவுறுதல்—போரும், அரசினர் தலையீடும்—நீண்ட காலத்தில் கட்டுப்பாடுகள் வளர்ச்சியடைதல்.

34. அரசாங்கத்தின் பொறுப்பு ... 937

சமத்துவமின்மையும், சமுதாய நலனும்—வளர் வீத முறை—சமுதாயப் பணிகள்—செல்வத்தைச் செயற்கை முறையில் அரசினர் பங்கீடு செய்வதற்கு ஓர் எல்லை உண்டு—தொழிலைக் கட்டுப்படுத்துதல்—தேசீயமயமாக்குதல்—சர்வாதீனங்களைக் கட்டுப்பாடு செய்தல்—வேலைவாய்ப்புபற்றிய கொள்கை—வரவு செலவுத் திட்டக் கொள்கை—முதலீட்டைக் கட்டுப்பாடு செய்தல் — வேலைவாய்ப்புக் கொள்கையின் முரண்பாடுள்ள நோக்கங்கள்—விலைவாசியை நிலைப் படுத்தல்—விரைவில் ஏற்படும் பொருளாதார வளர்ச்சியும், மிகுதியான முதலீடும்—அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் சமநிலையை ஏற்படுத்தல்—பற்றுக் குறையை நீக்குதல்.

35. திட்டம் வகுத்தல் ... 977

திட்டம் வகுக்கும் முறைகள்—இங்கிலாந்தில் திட்டமிடுதல்—திட்டங்களும் திட்டமிடுதலும்—தூண்டுதல்களும் கட்டாயப்படுத்தலும்—பொதுத்திட்டம்—பொருளாதாரத் துறையில் பின்தங்கிய நாடுகளில் திட்டம் வகுத்தல்—திட்டம் வகுத்தலும், அரசினர் செலுத்தும் அதிகாரமும்.

பொருட்குறிப்பு அகராதி ... 989

கலைச்சொல் அகராதி

ஆங்கிலம்—தமிழ் ... 1007

தமிழ்—ஆங்கிலம் ... 1031

பிழைதிருத்தம் ... 1055

இரண்டாம் பாகம்

# பாகம் IV—வருமானப் பகிர்வு

## 22. வருமானப் பகிர்வு

மக்களில் ஒருசிலர் செல்வர்களாகவும் வேறுசிலர் ஏழைகளாகவு மிருப்பதற்குக் காரணம் என்ன என்பதையும், இந்த வருமான வேறுபாடுகள் நம்மிடையே காணப்படுவது நியாயமா என்பதையும் வருமானப் பகிர்வுக் கோட்பாடு விளக்கவேண்டும் என்று நாமெல்லாம் எதிர்பார்க்கிறோம். அன்றிலிருந்து இன்றுவரை, பொருளாதார அறிஞர்கள் இதே வினவை வேறொரு முறையில் எழுப்பிவந்திருக்கின்றனர். மக்களிடையே நாட்டு வருமானம் எவ்வாறு பகிர்வுசெய்யப்படுகிறது என்பதைப்பற்றி ஆராயாது, உற்பத்திக்காரணிகளான நிலம், உழைப்பு, முதல் ஆகியவற்றிடையே நாட்டு வருமானம் எவ்வாறு பகிர்வு செய்யப்படுகிறது என்பதைப்பற்றியே அவர்கள் ஆய்வு நடத்திவந்திருக்கின்றனர். அதாவது வாரம், வட்டி, இலாபம், கூலி முதலியவை எவ்வாறு நிர்ணயிக்கப்படுகின்றன என்ற பிரச்சினையின்மீதே அவர்கள் தங்களது கவனத்தைச் செலுத்திவந்திருக்கின்றனர். உற்பத்திக்காரணிகளின் உரிமையாளர்களிடையே, அவைகளின் சம்பாத்தியம் எவ்வாறு பகிர்வு செய்யப்படுகிறது என்பதைப்பற்றி அவர்கள் அதிகம் கவலைப்படவில்லை. இப் பொருளாதார அறிஞர்கள் பகிர்வுப் பிரச்சினையை இரு பகுதிகளாகப் பிரிக்கின்றனர். மதிப்புக்கோட்பாட்டின் சுவடுகள் தெரிகின்ற முதற்பகுதியில், உற்பத்திக்காரணிகளின் விலைகளை நிர்ணயிக்கின்ற சக்திகள் யாவை என்பது விளக்கப்படுகின்றது; போட்டியின் போக்குகள் இங்கே கவனிக்கப்படுகின்றன. பொருளாதாரக் கொள்கைகளை நிறுவுவதைவிட, குறிப்பிட்ட சமுதாயங்களின் சமூக அமைப்பினைப்பற்றி ஆராய்ச்சி செய்யப்படுகின்ற இரண்டாவது பகுதியில், உற்பத்திக்காரணிகள் எவ்வாறு ஒருசிலரின் சொந்தப் பொருள்களாக ஆகின்றன என்பது விளக்கப்படுகிறது; சொத்துப்பேறு (inheritance), அரசியல் அதி

காரம் முதலியவைகளின் செல்வாக்கு இங்கே ஆராயப்படுகிறது. உற்பத்திக்காரணிகளின் உடைமையையும், ஊதியத்தையும் நிர்ணயிப்பவை யாவை என்பது நமக்குத் தெரிந்தால், வருமானத்தை மக்களிடையே பகிர்வு செய்வன யாவை என்பதும் நமக்குப் புரிந்துவிடும். அவற்றைப் புரிந்துகொள்வதன் வாயிலாக வருமான ஏற்றத்தாழ்வு அவசியமானதா அல்லது நியாயமானதா என்பதைப்பற்றி ஆராய்வது சுலபமாக இருந்துவிடுகிறது.

இந்த அத்தியாயத்தில், முதற் பிரச்சினையின்மீது நமது கண்ணோட்டத்தைச் செலுத்துவோம். நிறைவுப்போட்டி நிலவிவருவதாக இங்கே நாம் எடுத்துக்கொண்டாகவேண்டும். அதோடு, வேலைநிறைவு ஏற்படக்கூடிய சூழ்நிலைகளும் இருப்பதாக எடுத்துக்கொள்ளவேண்டியிருக்கிறது. அதாவது, ஒவ்வோர் உற்பத்திக் காரணியையும், அதன் உரிமையாளன் விரும்புகின்ற அளவிற்கு வேலைக்கு எடுத்துக்கொள்வது சாத்தியமாக இருக்கிறது என்றும் நாம் எடுத்துக்கொள்ளவேண்டும். இந்த எடுகோள்களை நிறுவிக் கொள்வதாலும், சர்வாதீனச் சக்திகளையும் வேலையில்லாத் திண்டாட்டத்தின் விளைவுகளையும் புறக்கணிப்பதாலும், நமது ஒன்றுபட்ட கவனத்தை ஒரே ஒரு பிரச்சினையின்மீது திருப்பி விடுவது சாத்தியமாகிறது. போட்டியின் போக்குகள் யாவை என்பதே அப் பிரச்சினை.

ஒரு பண்டத்தின் விலையைப்போன்று, எந்த ஓர் உற்பத்திக்காரணியின் விலையும், அக் காரணியின் அளிப்பாலும் தேவையாலும் நிர்ணயிக்கப்படுகிறது. காரணி அரிதாகவும், அதன் பணிகளுக்குள்ள தேவை மிகையாகவு மிருக்குமானல், அதன் சம்பாத்தியம் அதிகமாக இருக்கும். அது மிகையாகக் கிடைக்கக் கூடியதாக இருந்து, உடனடியாகத் தேவைப்படுவதாகவு மில்லையென்றல், அதன் சம்பாத்தியம் குறைவாக இருக்கும். அளிப்பையும் தேவையையும் நிர்ணயிப்பவை யாவை?

## அளிப்பு

பழைய மதிப்புக் கோட்பாடுகளில், தேவை முக்கியமானதாகக் கருதப்படவில்லை. அளிப்பு மட்டுமே—அதாவது உற்பத்திச் செலவு மட்டுமே விலையைப்பொறுத்தவரை மிகவும் முக்கியமானதாகக் கொள்ளப்பட்டது. பண்டங்களைப் பொறுத்து மட்டுமல்லாது, உற்பத்திக்காரணிகளைப் பொறுத்தும் இஃது உண்மை என்று கருதப்பட்டது. 'அரிதாக இருக்கின்ற சிலைகள், ஓவியங்கள், புத்தகங்கள், நாணயங்கள்' முதலியவைகளின் அளிப்பைப் போட்டியினல் அதிகப்படுத்த முடியாது. எனவே, அவைகள் விதிவிலக்குகள் என்று

கொள்ளப்பட்டன. இதைப்போலவேதான் நிலமும் ஒரு விதி விலக்கு என்று கருதப்பட்டது; ஏனெனில், போட்டியினுல் நிலத்தின் அளிப்பை அதிகப்படுத்த முடியாது. அரிதாக இருக்கின்ற சிலைகள், ஓவியங்கள் ஆகியவைகளின் விலைகள் அவைகளது தேவையால் நிர்ணயிக்கப்படுவதாகக் கருதப்பட்டது. இதைப் போலவே நிலத்தின் வாரமும் அதன் தேவையால் நிர்ணயிக்கப் படுவதாகக் கருதப்பட்டது. ஆனுல் வட்டி, இலாபம், கூலி முதலியவை அளிப்பால் நிர்ணயிக்கப்படுவதாகக் கருதப்பட்டது. உதாரணமாக, பராமரிப்புக் கூலிக்கோட்பாடு (Subsistence Theory of Wages) அல்லது கூலி நிர்ணய இரும்பு விதி (Iron Law of Wages) என்பதன் முக்கியக் கருத்து, உழைப்புக்குத் தரப்படும்கூலியானது, உழைப்பாளியின் உற்பத்திச் செலவிற்குச் சமமாக இருக்கிறது என்பதாகும். கூலியானது, உழைப்பாளிகளின் வாழ்க்கைச் செலவுமட்டத்தைச் சுற்றி வட்டமிடுவதாகக் கருதப்பட்டது. கூலியானது உழைப்பாளிகளின் வாழ்க்கைச்செலவுமட்டத்திற்கு மேலே ஏறினுல், மக்கள்தொகை பெருகுமென்றும், அதன் விளைவால் உழைப்பாளிகளின் அளிப்பு அதிகரிக்குமென்றும், இது கூலிமட்டத்தை மீண்டும் வாழ்க்கைச்செலவுமட்டத்திற்கு இறக்கும் என்றும் கூறப்பட்டது. இதற்கு மாருக, கூலியானது, வாழ்க்கைச்செலவு மட்டத்திற்குக் கீழே இறங்கினுல், மக்கள் மடிந்து, பிறப்பு விகிதம் குறைந்து, அதன் விளைவாக, மீண்டும் கூலிமட்டம் வாழ்க்கைச் செலவுமட்டத்திற்கு உயருமென்றும் கூறப்பட்டது.

இருள் படர்ந்த இக் கோட்பாடு மால்தூசின் கருத்தைச் சார்ந்திருந்தது. உணவு வசதிகள் பெருகும் வீதத்தைவிட அதிகமான வீதத்தில் மக்கள்தொகை பெருகுவதாக இருக்கிறது என்று மால்தூஸ் கூறினுர். மனிதவர்க்கம் வளர்கிறது; அவ்வாறு வளரும் போது, அது போதிய அளவு தடுக்கப்படாவிட்டால், உணவுப் பற்ருக்குறையை ஏற்படுத்துவதோடு, பஞ்சம், போர், பிணி முதலியவைகளை உருவாக்கி, அதன்மூலம் மரண விகிதத்தை அதிகப்படுத்துகிறது என்பது மால்தூசின் முக்கியக் கருத்தாகும். ஏழை மக்களிடையே காணப்படும் இனப்பெருக்கத்திற்குக் காரணமான இயற்கை ஊக்கிகளை (instincts) கட்டுப்படுத்துவது முடியாது என்று நம்பிவந்த நடுத்தர வகுப்பு மக்களுக்கு மால்தூசின் கருத்துகள் ஒத்துக்கொள்ளக்கூடியனவாக இருந்தன. ஏழை மக்களுக்குத் தரப்படும் பணம், அவர்களின் மக்கள்தொகையை அதிகப்படுத்தக் கூடியதாக இருந்தால், அப் பணம் தயாள சிந்தையுடையவர்களிடமும், அவர்களின் மக்களிடமும் இருந்துவிடுவதே சாலச் சிறந்தது என்று வற்புறுத்தப்பட்டது. மால்தூசின் கொள்கைகளை ஏற்றுக்கொண்ட சிலர், தொழிலாளர்களின் வாழ்க்கைத்

தரத்தை உயர்த்தவேண்டும் என்று முயன்றபோது, மக்கள் தொகை பெருகிக்கொண்டிருக்கின்றவரை தம் முயற்சிகளெல்லாம் விழலுக்கிறைத்த நீர் என்று உணரவாரம்பித்தனர். மால்தூசின் கொள்கைகளுக்கு ஆதரவு இருந்தவரை, இங்கிலாந்தின் பொதுச் சமூகப் பணிகள் திட்டத்தில் எந்தவித முன்னேற்றமும் ஏற்படா மலே போயிற்று.

பத்தொன்பதாம் நூற்ருண்டின் அனுபவம், மால்தூசின் அச்சங்களுக்குக் காரணமே இல்லை என்றும், ஒருசில கருத்துகளை அவர் மிகைப்படுத்திச் சொல்லியிருக்கிருர் என்றும் எடுத்துக்காட்டுவதாக இருக்கிறது. இங்கிலாந்து நாட்டு மக்கள்தொகையும், வேல்ஸ் பகுதி மக்கள்தொகையும் நான்கு மடங்காக அதிகரித்தது என்பது உண்மையே. ஆனுல், அதன்விளைவாக வாழ்க்கைச்செலவு மட்டத்திற்குக் கீழே கூலி இறங்குவதை விட்டு, அதற்குமாருக நான்கு மடங்கு அதிகமாகக் கூலி உயர்ந்தது என்பதும் உண்மையே. அது மட்டுமல்ல, மரணவீதம் அதிகரிப்பதற்குப் பதிலாக, பிறப்புவீதம் குறையவாரம்பித்தது. கூலி உயர்ந்ததன் காரணமாக உழைப்பாளிகளின் அளிப்பு அதிகரிக்கவில்லை; மாருக அவர்களின் அளிப்பு குறைந்தது என்பதே உண்மை. எந்தெந்த நாடுகளில் கூலி உயர்ந்தபட்சமாக இருந்ததோ, அங்கங்கெல்லாம் பிறப்புவீதம் குறைந்தபட்சமாக இருந்திருக்கிறது. எனவே, மால்தூசின் கோட்பாடு மிகவும் முரண்பட்டதாகக் கருதப்பட்டது. ஏழை மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதற்கென எடுத்துக்கொள்ளப்படும் முயற்சிகள் மக்கள்பெருக்கத்தை ஓரளவிற்குக் குறைக்குமே தவிர, அதை அதிகப்படுத்துவதில்லை.

இதில் உண்மை என்னவென்ருல், மக்கள்பெருக்கம் கூலிமட்டத்தைப் பொறுத்திருக்கிறது என்ருலும், இவையிரண்டுக்குமிடையே காணப்படுவது ஒரு நேரிடையான தொடர்பாக இருக்கவில்லை. கூலியோடு தொடர்பற்றிருக்கின்ற பல்வேறு சக்திகள்கூட மக்கள்தொகையில் மாறுதல் ஏற்படுத்துகின்றனவாக இருக்கின்றன. அவைகளை ஆராய்வதன்மூலம் மக்கள்தொகயின் போக்கினைப்பற்றி நம்மால் முன்கூட்டியே சொல்லமுடியும். கூலி மட்டத்தில் ஏற்படும் மாறுதல்கள் எவ்வாறு மக்கள்தொகையை மாற்றியமைக்கின்றன என்பதையும் நாம் ஆராயவேண்டியது தான். என்ருலும், மக்கள்தொகைக்கு எது நேர்ந்தாலும், கூலியானது வாழ்க்கைச் செலவுமட்டத்திற்கு இறங்கும்; எனவே, உழைப்பின் தேவை புறக்கணிக்கப்படவேண்டும் என்று சொல்வதை நம்மால் ஒப்புக்கொள்ள முடியாது. ஆகவே, இதையொட்டி செலவுக் கூலிக் கோட்பாட்டை நிறுவுவதும் கைவிடப்படவேண்டியதே ஆகும்.

**உண்மைச் செலவுகள்: முயற்சிகளும் சிரமங்களும்**

தொழில்துறை சமுதாயத்தில், கூலி எப்போதும் உழைப்பாளிகளை உற்பத்தி செய்வதற்காகும் (அதாவது குழந்தைகளை வளர்ப்பதற்காகும்) செலவோடு தொடர்புபடுத்தப்படுவதில்லை. எனினும், இன்னலையும் நலக்கேட்டையும் பொருட்படுத்தாது தொழிலாளர்களை வேலை செய்யவைப்பதில் செலவு ஏற்படுகிறது என்பது உண்மையே. ஒவ்வொரு மணி உழைப்பிலும், தொழிலாளி எடுக்கின்ற முயற்சிக்கும், செய்கின்ற தியாகத்திற்கும் செலவு செய்யப்பட வேண்டியிருக்கிறது என்பதை யாரேனும் மறுக்க முடியுமா? இம் முயற்சிகளையும் தியாகங்களையும் ஈடுகட்டவேண்டும் என்பதற்காகவேதான் கூலி தரப்படுகிறது. ஆகவே, மக்கள்தொகையை எப்படி பாதிப்பதாக இருந்தாலும், உயர்ந்தபட்சக் கூலியானது, நல்ல முயற்சிகளையும் தியாகங்களையும் செய்யத் தொழிலாளர்களைத் தூண்டுவதன்மூலம் உழைப்பின் அளிப்பை அதிகப்படுத்துவதாக இருக்கிறது. கொடுக்கப்படுகின்ற கூலியை வேலையைச் செய்வதற்காகும் 'செலவோடு' ஒப்பிட்டுப் பார்த்தபிறகே, எவ்வளவு வேலையைச் செய்ய விரும்புகிறோம் என்பதை நாம் தெரிவிக்கின்றோம். விருப்பமற்ற வேலையைச் செய்வதற்கு நம்மிடமிருக்கும் வெறுப்பை நீக்குகின்ற அளவிற்குக் கூலி உயர்வாக இருக்கவேண்டும். எந்த வேலையைச் செய்வது என்று தீர்மானிப்பதற்கு நமக்கு உரிமையிருக்குமானால், அதிகக் கூலி தரப்பட்டால்தான் மிகவும் விருப்பமில்லாத வேலைகளைச் செய்ய நாம் ஒப்புக்கொள்வோம். கூடுதலாக ஒருமணி நேரம் வேலைசெய்வதினாலோ அல்லது துரிதமாக வேலை செய்வதினாலோ அல்லது வசதி குறைந்த சூழ்நிலையில் வேலை செய்வதினாலோ விளைகின்ற அதிகப்படியான சிரமத்தோடு அதிகப்படியாகக் கிடைக்கின்ற சம்பாத்தியத்தை ஒப்பிட்டுப் பார்க்கிறோம். உழைப்பின் இறுதிநிலைப் பயன்கேடு (marginal disutility of work) என்பதே—அஃதாவது எந்த வேலைகளைச் செய்ய நாம் மறுக்கின்றோமோ அவ் வேலைகளுக்கு நம்மிடமிருக்கின்ற வெறுப்பே—உழைப்பின் அளிப்பைத் தீர்மானிக்கிறது.

செலவுகளைப்பற்றிய இக் கருத்தில் இரு குறைபாடுகள் காணப்படுகின்றன. முதலாவதாக, கூலியில் ஏற்படும் உயர்வு, தொழிலாளர்களிடமிருந்து அதிக உழைப்பைப் பெற உதவுகிறது என்று இது சொல்லுகிறது. ஆனால், கூலியில் ஏற்படும் உயர்வு தொழிலாளர்களுக்குத் தேவைப்படும் வாழ்க்கைத்தரத்தை ஏற்படுத்தித் தருவதன்மூலம் அவர்களைத் திறமைக் குறைவாக உழைக்கவோ அல்லது அதிக நாட்கள் விடுமுறை எடுத்துக் கொள்ளவோ அல்லது அடிக்கடி வேலைக்குப் போகாமலிருக்கவோ தூண்டுவதாகவும் இருந்துவிடுவதுண்டு. மற்றொன்றும் உண்மை

யாக இருக்கிறது. வாணிப மந்தநிலையின்போது, கூலி இறங்கிக் கொண்டிருக்கின்ற நிலையில், வேலை போய்விடுமோ என்ற அச்சத்தின் காரணமாகவும், பழைய வருமானத்தைத் திரும்பப் பெற வேண்டும் என்ற வேட்கையின் காரணமாகவும் தொழிலாளர்கள் நன்றாக உழைத்து, உற்பத்தியைப் பெருக்க முயலுவதுண்டு. எந்த அளவிற்குத் தொழிலாளர்கள் ஒரு மாறாத வாழ்க்கைத்தரத்தை விடாப்பிடியாகப் பிடித்துக்கொண்டிருக்கின்றனரோ, அந்த அளவிற்கு, கூலிக்கு எதிர்த்திசையில் உழைப்பின் அளிப்பு நகர்ந்துசெல்வதாக இருக்கிறது.

இரண்டாவதாக, கூலியை உண்மைச் செலவுகளோடு தொடர்புபடுத்துவது என்பது, கூலியானது உண்மைச் செலவுகளுக்கேற்றவாறு அமைந்துவிடும் என்று சொல்வதாகப்படுகிறது. ஆனால், ஒரு பேராசிரியரின் கடமைகள், ஒரு சுரங்கத் தொழிலாளி அல்லது கொதிஉலைத் தொழிலாளியின் கடமைகளைப்போல் பத்து மடங்கு வெறுப்பூட்டுவதாக இருக்கிறது என்று சொல்லுவதோ, அல்லது அதிக முயற்சிகள், தியாகங்கள் காரணமாக, பேராசிரியரின் வருமானம் அவர்களின் வருமானத்தைவிடப் பத்துமடங்கு அதிகமாக இருக்கிறது என்று சொல்லுவதோ மிகவும் அர்த்தமற்ற ஒரு கூற்றாகும். சம்பாத்தியத்திற்கும் சிரமம் அல்லது தியாகம் என்பதற்குமிடையே தொடர்பு இருக்கலாம். ஆனால், சம்பாத்தியமானது, சிரமம், தியாகம் ஆகியவைகளின் அளவிற்கேற்ப அமைவதில்லை. மற்ற இரு காரணிகளின் சம்பாத்தியத்தை நன்கு ஆராய்ந்து பார்த்தால் இந்த உண்மை தெளிவாகப் புலப்படும். எந்தச் சிரமங்களுக்காகவும் தியாகங்களுக்காகவும் உழைப்பு ஊதியம் பெறுகிறதோ, அவை உண்மையாகவே உழைப்போடு காணப்படுவனவாக இருக்கின்றன. ஆனால், எந்தச் சிரமத்திற்காக அல்லது தியாகத்திற்காக, முதலுக்கு வட்டியும் நிலத்திற்கு வாரமும் நாம் தருகிறோம்? நிலத்திற்கும் சிரமத்திற்கும் தொடர்பு ஏதாவது உண்டா? இல்லையே. நிலம் ஏற்கெனவே நம்மிடமிருக்கிறது—நம்மைவிட்டு அது போக்ப் போவதும் இல்லை. முதலுக்கும் சிரமத்திற்கும் சற்றுத் தொடர்பு உண்டு என்பது உண்மையே. சேமிப்பிலிருந்து பிறப்பது முதல். சேமிப்பது சிரமத்தைத் தரக்கூடியது. ஏனெனில், தற்போதைய இன்பத்தை விட்டுக்கொடுத்தால்தான் சேமிப்புச் செய்யமுடியும். பணத்தைச் செலவழிக்காமலிருப்பதில் அசௌகரியமிருக்கிறது; ஆகவே, சேமிப்பதற்காக வட்டி கொடுக்கப்படுவது தன்னல மறுப்பை (self-denial) ஈடுகட்டுவதாக இருக்கிறது. ஆனால், கூலிக்காரனின் தன்னல மறுப்பு இலட்சாதிபதியின் தன்னல மறுப்பைவிடப் பன்மடங்கு துன்பந்தரக்கூடியதாக இருந்தாலும்,

இவ்விருவருக்கும் ஒரே வீதத்தில்தான் கூலி தரப்படுகிறது. மேலும், முந்தைய சந்ததியினரால் சேர்க்கப்பட்ட முதலுக்கு வட்டி கொடுப்பதாக இருக்கிறது; அம் முதலைப் பெறுவதற்குப் புதிதாக எந்தவிதத் தியாகமும் செய்யப்படவேண்டியதில்லை. இதிலிருந்து விளங்குவது என்னவென்றால், உற்பத்திக் காரணிகளுக்குத் தரப்படும் ஊதியம், அவைகளின் தியாகத்திற்கேற்றவாறு அமைவதில்லை என்பதேயாகும். யாரும் எந்தவிதச் சிரமும் படாமலிருக்கும்போது வாரம் தரப்படுகிறது; சிக்கனப்படுத்தியதற்காகவோ அல்லது சொத்துப் பேறு உரிமை பெற்றிருப்பதற்காகவோ வட்டி கொடுக்கப்படுகிறது; வியர்வை சிந்துவதற்காகக் கூலி கொடுக்கப்படுகிறது. ஒரு பவுனிற்குத் தன் பணியை விற்ற ஒருவனது தியாகம், ஒரு ஷில்லிங்கிற்குத் தன் பணியை விற்ற மற்றொருவன் தியாகத்தைவிடச் சிறிதாக இருக்கக்கூடும் என்பதை நாம் உணரவேண்டும்.

**அளிப்பு விலை**

உற்பத்திக் காரணிகளுக்கு ஊதியம் தரப்படுவதற்குக் காரணம், அவைகளின் தியாகங்களுக்கு ஈடுசெய்யவேண்டும் என்பதற்காக அல்ல; சிரமங்களை ஏற்பதற்கு அவைகளைத் தூண்டுவதற்கேயாகும். உற்பத்திக் காரணிகளின் உரிமையாளர்கள், அவற்றைத் தொடர்ந்து அளித்துவரத் தூண்டுகின்ற அளவிற்கு இந்த ஊதியங்கள்—அதாவது காரணிகளுக்குத் தரப்படும் விலைகள்—உயர்வாக இருக்கவேண்டும். ஒவ்வொரு காரணிக்கும் அதன் அளிப்பு விலை (supply price) தரப்படவேண்டும். குறைந்தபட்சமாக இருக்கின்ற இவ் விலையானது கிடைக்கும் என்று எதிர்பார்க்கப்படும்போதுதான், தேவைப்படும் அளவில் உற்பத்திக் காரணி அளிக்கப்படும். இல்லையெனில், அவைகளின் பணிகள் நமக்குக் கிடைக்காமற்போகக்கூடும். இந்த அளிப்பு விலையானது, காரணிகளுக்கிருக்கின்ற மாற்று வழிகளைப் பொறுத்திருக்கின்றது. ஒருமணிநேர உழைப்போடு ஒப்பிடும்போது, ஒருமணிநேர ஓய்வு விரும்பக்கூடியதாக இருந்தால், உழைப்பின் அளிப்பு விலை உயர்வாக இருக்கும். பின்னால் வரக்கூடிய ஒரு மழை நாளைப்பற்றி நாம் சற்றும் கவலைப்படாதவர்களாகவும், தற்போதைய இன்பத்தின் மீது மிகுந்த நாட்டமுடையவர்களாகவு மிருப்போமானால், மிக அதிகமான வட்டி கொடுக்கப்பட்டால்தான் நாம் பணத்தைச் சேமிப்போம். உழைப்பதிலோ அல்லது ஓய்வு எடுத்துக்கொள்வதிலோ நேரம் செலவழிக்கப்படலாம்; செலவழிப்பதற்கோ அல்லது சேமிப்பதற்கோ பணம் பயன்படுத்தப்படலாம். வேலை செய்வதற்குள்ள விருப்பத் தராதரம் (preference) மிகையாக இருக்குமானால், உழைப்பின் அளிப்பு விலை குறைவாக இருக்கும். விருப்பத் தராதரத்

தின் சக்தி இறுதிநிலையில் வெளிப்படுத்தப்படுவதாக இருக்கிறது. நம்மை நோக்கியிருக்கின்ற மாற்று வழிகள், சற்று அதிகமாக உழைப்பதா அல்லது சற்றுக் குறைவாக உழைப்பதா, சற்று மிகையாகச் செலவு செய்வதா அல்லது சற்றுக் குறைவாகச் செலவு செய்வதா என்பவையேயாகும். இவ்வாருக, ஓய்வோடு ஒப்பிடும் போது, வேலை செய்வதற்குள்ள இறுதிநிலை விருப்பத் தராதரமே உழைப்பின் அளிப்பை நிர்ணயிப்பதாக இருக்கிறது; இதைப் போலவே, சேமிப்பதற்குள்ள இறுதிநிலை விருப்பத் தராதரமே முதலின் அளிப்பை நிர்ணயிப்பதாக இருக்கிறது.

கூலிவீதமும் வட்டிவீதமும், முறையே உழைப்பு, முதல் ஆகியவைகளின் அளிப்புக்குச் சமமாகவாவது இருக்கவேண்டும். இந்த அளிப்பு விலைகள், வேலைசெய்வதற்கும் சேமிப்பதற்கும் உள்ள இறுதிநிலை விருப்பத் தராதரங்களால் நிர்ணயிக்கப்படுகின்றன. அதாவது, எந்த மாற்று வழிகளைக் கடைப்பிடிப்பதற்குப் பதிலாக வேலை செய்யவோ அல்லது சேமிக்கவோ விரும்புகின்ருேமோ, அந்த மாற்று வழிகளின் கவர்ச்சியைக் கூலிவீதமும் வட்டிவீதமும் இறுதிநிலையில் அளவிடுகின்றன. இந்த மாற்று வழிகளின் மதிப்பே வேலை செய்வதற்கும் சேமிப்பதற்கும் ஆகின்ற செலவாகும்.

**அளிப்பு விலையும் மாற்றுச் செலவும்**

செலவைப்பற்றிய இக் கருத்தினை நாம் முன்பே விளக்கியிருக்கின்ருேம். எவ்வாறு ஒரு பண்டத்தை உற்பத்தி செய்வதற்காகும் செலவு, அப் பண்டத்தை உற்பத்திசெய்ய உதவுகின்ற காரணிகளுக்குப் பல உபயோகங்களில் உள்ள மதிப்புக்குச் சமமாக இருக்கிறது என்பதை அப்போது பார்த்தோம். 'அளிப்பு விலை'க்குள்ள மற்ருெரு பெயரே 'மாற்றுச் செலவு' என்பதாகும். நாம் முன்பு ஒரு குறிப்பிட்ட தொழிலை எடுத்துக்கொண்டு, அதில் உழைப்பின் அளிப்பு விலை என்ன, முதலின் அளிப்பு விலை என்ன என்பதைப் பற்றி ஆராய்ந்தோம். ஆனால், தற்போது நாம் ஆராய விரும்புவது, எந்த ஓர் உபயோகத்திலும் உழைப்பின் அளிப்பு விலை என்ன, முதலின் அளிப்பு விலை என்ன என்பதைப்பற்றியே யாகும். வேலை நாடிவரும் உழைப்பு, முதல் ஆகியவையின் மொத்தஅளவை நிர்ணயிப்பது எது என்ற வினுவிற்கும், கொடுக்கப்பட்டிருக்கும் உழைப்பையும் முதலையும் போட்டியிட்டுக்கொண்டிருக்கும் தொழில்களிடையே பகிர்வுசெய்வது யாது என்ற வினுவிற்கும் வேற்றுமை உண்டு.

மூன்ருவது உற்பத்திக் காரணியான நிலத்தை நாம் கவனிக்கும்போது, இவ் வேற்றுமை மிகவும் முக்கியமானதாக இருக்கிறது.

பொதுவாக நிலத்தின் அளிப்பு விலை பூஜ்யமாக இருக்கிறது. உபயோகப்படுத்தாமலிருப்பது என்பதைத் தவிர நிலத்திற்கு வேறு மாற்று வழி இல்லை. அதை உபயோகப்படுத்தாமலிருக்கும்போது எந்தவிதப்பயனும் கிடைக்காமலிருப்பதால், நிலத்தின் அளிப்பு விலை பூஜ்யமாக இருக்கிறது. ஆகவே, நிலத்தின் முழு சம்பாத்தியம், நிலத்தின் அளிப்பு விலைக்கதிகமாக இருக்கின்ற ஓர் எச்சத்தைச் சுட்டிக்காட்டுவதாக இருக்கிறது. மாற்றுச் செலவிற்கோ அல்லது அளிப்பு விலைக்கோ கூடுதலாக இருக்கின்ற நிலத்தின் சம்பாத்தியம் 'வாரம்' என்று அழைக்கப்படுகிறது. விவசாயத்தின் எந்த ஒரு பகுதியிலும் நிலத்தின் அளிப்பு விலை பூஜ்யமாக இருப்பதில்லை. உதாரணமாக, கோதுமையை உற்பத்தி செய்வதற்கோ அல்லது பார்லியை உற்பத்தி செய்வதற்கோ நிலம் பயன்படக்கூடும் என்றால், இவை ஏதாவது ஒன்றில் நிலத்தின் அளிப்பு விலை, மற்றொன்றின் உற்பத்தியில் நிலத்திற்குள்ள மதிப்புக்குச் சமமாக இருக்கிறது. எனவே, கோதுமை உற்பத்திக்காக நிலத்தைப் பயன்படுத்துவதற்காகும் செலவு, நிலத்தை வெறுமனே வைத்திருப்பதற்காகும் செலவிலிருந்து மாறுபட்டதாகும். நிலத்திற்கிருக்கும் மாற்று வழி அதைப் பயன்படுத்தாமல் வைத்திருப்பதன்று— பார்லி உற்பத்தி செய்வதற்கு அதைப் பயன்படுத்துவதேயாகும்.

**வாரமும் செலவும்**

இக் கருத்தை மேலும் புரியவைப்பதற்குப் பொருளாதார வாரக் (economic rent) கோட்பாட்டை விளக்கவேண்டியது அவசியமாகிறது. நிலத்தின் உபயோகத்திற்காகக் குடியானவனால் செலுத்தப்படுகின்ற தொகை பொருளாதார வாரம் என்று சொல்லப்படுகிறது. இங்கிலாந்தில், ஒரு குடியானவனால் செலுத்தப்படுகின்ற வாரம்(ஒப்பந்த வாரம்), பொதுவாகப் பொருளாதார வாரத்தைவிட மிகையாக இருக்கிறது. ஏனெனில், அவனால் செலுத்தப்படுகின்ற வாரத்தில், கட்டிடங்கள், வேலி முதலியவைகளின் உபயோகத்திற்காகவும் நிலத்தில் செய்யப்பட்டிருக்கின்ற சீர்திருத்தங்களுக்காகவும் செலுத்தப்படுகின்ற தொகையும் இடம்பெறுகிறது.

ரிக்கார்டோ (Ricardo) சொல்வதைப்போன்று, பொருளாதார வாரக் கோட்பாட்டின் முக்கியக் கருத்து என்னவென்றால், வாரம் என்பது 'ஒருசிறிதுகூட விலையில் இடம்பெறுவதில்லை; பெறவும் முடியாது'. மாறாக, அது விலையால் நிர்ணயிக்கப்படுகிறது என்பதேயாகும். நிலத்தைப் பொதுவாக எடுத்துப் பார்க்கும்போது மட்டுமே இஃது உண்மையாகப்படுகிறது. நிலத்தை ஒரே ஓர் உபயோகத்திற்குமட்டுமே, உதாரணமாகக் கோதுமை உற்பத்தி செய்வதற்குமட்டுமே ஆளமுடியும் என்ற நிலை காணப்படுமானால்,

அப்போது, நிலத்தின் வாரத்தால் கோதுமையின் விலையில் மாறுதல் ஏற்படுத்தமுடியாது. நிலத்தின் அளிப்பு விலை பூஜ்யமாக இருக்கும். அதாவது, எந்த மட்டத்திலிருந்தால் கோதுமை உற்பத்திக்கு நிலம் கிடைக்கக்கூடியதாக இருக்குமோ, அந்த மட்டத்திற்குக்கீழே வாரம் காணப்படுவதில்லை. ஆகவே, வாரம் என்பது ஓர் எச்சமாக இருக்கிறது. அது கோதுமையின் விலையாலும் உழவுச் செலவாலும் நிர்ணயிக்கப்படுகிறது. கோதுமையின் விலை அதிகமாகவோ அல்லது உழவுச் செலவு குறைவாகவோ இருக்குமானால், வாரம் மிகையாக இருக்கும். இதற்கு எதிரிடையாக, விவசாயத்தில் மந்தநிலை ஏற்பட்டுக் கோதுமையின் விலை, உழவுச் செலவோடு ஒப்பிட்டுப்பார்க்கும்போது, அதைவிடக் குறைவாக இருந்து, உற்பத்தி செய்வதில் விவசாயிகளுக்குச் சிரமம் இருக்குமானால் வாரம் குறைவாக இருக்கும். வாரம் மிகையாகக் கொடுக்கப்படவேண்டி யிருக்கிறது என்பது கோதுமையின் விலை ஏற்றமாக இருப்பதற்குக் காரணமல்ல. இதற்கு நேர்மாறானதே உண்மையாக இருக்கிறது. மிகையான வாரம் செலுத்தப்படுவதற்குக் காரணம், கோதுமையின் விலை ஏற்றமாக இருப்பதேயாகும்.

இறுதிநிலைக் கருத்தோடு தொடர்புபடுத்தினால், இக் கூற்று இன்னும் சற்று நன்றாகப் புரியும். நிறைவுப் போட்டியின்கீழ்க் கோதுமையின் விலை, கோதுமை உற்பத்தியின் இறுதிநிலைச் செலவிற்கு, அதாவது இறுதிநிலை நிலத்தில் கோதுமையை உற்பத்தி செய்வதற்காகும் செலவிற்குச் சமமாக இருக்கும். விலையானது, இச் செலவைவிட அதிகமாயிருந்தால், அதிகப்படியான நிலம் விவசாயத்திற்குக் கொண்டுவரப்படும்; குறைவாயிருந்தால், விவசாயத்திலிருந்து சில நிலங்கள் வெளியேற்றப்படும். இறுதிநிலை நிலத்திற்கு வாரம் செலுத்தப்படுவதில்லை; ஏனெனில், அதிலிருந்து கிடைக்கின்ற வருவாய், செலவைச் சரிக்கட்டுவதற்கு மட்டுமே போதுமானதாக இருக்கிறது. எனவே, வாரமானது இறுதிநிலை உற்பத்திச் செலவில் இடம்பெறுவதில்லை. இந்த இறுதிநிலை உற்பத்திச் செலவே கோதுமையின் விலைக்குச் சமமாக இருக்கிறது. ஆகவே, வாரத்தால் கோதுமையின் விலையை மாற்ற முடிவதில்லை. இறுதிநிலை நிலத்தில் காணப்படும் உழவுச் செலவைவிடக் குறைந்த உழவுச் செலவு காணப்படும் இறுதிநிலைக்குள்ளான (intra-marginal) நிலப்பகுதிகளுக்காக வாரம் செலுத்தப்படுகிறது. இறுதிநிலை நிலம், நல்ல வளமும் சாதகமான இட அமைப்புமுடைய நிலம் ஆகிய இரண்டில் ஏதாவது ஒன்றை எடுத்துக்கொள்ள விவசாயிகளுக்கு உரிமை இருப்பதால், எந்த ஒரு நிலப்பகுதிக்கும் அவர்கள் தர இருக்கின்ற வாரம், அந்த நிலப்பகுதி, இறுதிநிலை நிலத்தைவிட

எத்தகைய வேறுபாட்டுப் பயன் (differential advantage) பெற்றிருக்கிறது என்பதை அளவிடுவதாக இருக்கிறது. கோதுமையின் தேவை அதிகரித்து, அதன் விலை உயர்ந்து, அதன் விளைவாக முன்பு இறுதிநிலைக்குக் கீழேயிருந்த நிலப்பகுதியைத் தற்போது அதிகப்படியான செலவில் பயிரிடுவது இலாபகரமானதாகுமானல், கொடுக்கப்பட்டிருக்கும் நிலப்பகுதியின் வேறுபாட்டுப் பயனும் தானகவே அதிகமாகிறது. இதன் காரணமாக, அதற்குச் செலுத்தப்படும் வாரமும் அதிகமாகிறது. ஆனல், வாரத்தில் ஏற்படும் உயர்வு, கோதுமையின் விலையில் ஏற்படும் உயர்வின் விளைவேயன்றி, அவ்வுயர்விற்கு அது காரணமாக இருப்பதில்லை. வாரமற்ற இறுதிநிலை நிலத்திற்காகும் உழவுச் செலவால்மட்டுமே கோதுமைமையின் விலை நிர்ணயிக்கப்படுவதாக இருப்பதால், விவசாயிகள் வாரத்தையே செலுத்தாமலிருந்தால்கூட அதனுல் கோதுமையின் விலை மாறுதலடைவதில்லை.

இந்த முடிவு, நகர வாரத்தைப் (urban rent) பொறுத்தும் உண்மையாகவே இருக்கிறது. பாண்டு தெருவில் (Bond Street) பொருள்களின் விலை உயர்வாக இருப்பதற்குக் காரணம், கடைகள் மிகையான வாரத்தைக் கொடுக்கவேண்டியிருக்கின்றன என்பதல்ல வாடிக்கைக்காரர்கள் அதிகமான விலையைக் கொடுக்கச் சித்தமாயிருக்கின்றனர் என்பதேயாகும். அதிகமான விலைகள் கொடுக்கப்படவிருக்கின்றன என்பது பாண்டு தெருவில் கடைகளின் தேவையை அதிகப்படுத்துகிறது. இதன் வாயிலாக வாரம் பிறக்கிறது. பாண்டு தெருவில் காணப்படும் வாரம், லண்டனுக்கு வெளியே இருக்கின்ற மனைகளைவிட லண்டன் மத்தியில் இருக்கும் மனைகள் வேறுபாட்டுப் பயனைப் பெற்றிருக்கின்றன என்பதைப் பிரதிபலிக்கிறது.

அடுத்து, கோதுமையே அல்லாது மற்றத் தானியங்கள் இருப்பதாகவும், பாண்ட் தெருவிலுள்ள கடைகள் ஒரேவிதப் பொருள்களை விற்றுவருவதாக இல்லை என்பதாகவும் எடுத்துக்கொள்வோம். தற்போது, எந்த ஓர் உபயோகத்திற்கும் நிலத்தின் அளிப்பு விலை பூஜ்யமாக இருப்பதில்லை. மற்றத் தானியங்களின் உற்பத்திக்கு நிலம் கொடுக்க மறுக்கப்படும்போதுதான், கோதுமை உற்பத்தி செய்வதற்கு நிலமானது வாரக்குத்தகைக்கு விடப்படும். மற்றத் தானியங்களில் ஏதாவது ஒன்றை இலாபகரமாக உற்பத்தி செய்வதற்கு நிலம் ஆளப்படும்போது, அதற்குத் தரப்படக்கூடிய வாரமானது—அதாவது நிலத்தின் மாற்றுச் செலவானது, செலவிலும் கோதுமையின் விலையிலும் இடம்பெறுவதில்லை. இந்தச் செலவு ஏற்கப்படவில்லையென்றால், கோதுமை உற்பத்தி செய்வதற்கு

நிலம் கிடைக்காமற் போய்விடும்; நிலமானது மற்றேர் இலாபகர மான தானியத்தை உற்பத்தி செய்வதற்குப் பயன்படுத்தப்பட்டு விடும். உழவின் இறுதிநிலையிலிருக்கின்ற நிலம் வாரம் செலுத்துவ தில்லை; ஆனல், மாற்றலின் (transference) இறுதிநிலையிலிருக்கின்ற நிலம் வாரம் செலுத்துகிறது. இந்த வாரமானது, ஒரு குறிப்பிட்ட விவசாயப் பொருள்களின் உற்பத்திச் செலவில் இடம்பெறுகிறது; ஏனெனில், இஃது இறுதிநிலை உற்பத்தியாளர்களது செலவில் இடம் பெறுவதாக இருக்கிறது. உழவுச் செலவிற்கதிகமாயிருக்கும் எச்ச மாக இவ் வாரம் இருக்கவில்லை. மாருக, உழவுச் செலவின் ஓர் அங்கமாக இஃது இருக்கிறது. இது விலையை நிர்ணயிக்கிறதே ஒழிய, விலையால் நிர்ணயிக்கப்படுவதில்லை.

ஆகவே, வாரத்தின் பொதுமட்டமானது, எல்லா விவசாயப் பொருள்களின் தேவையாலும் உழவின் இறுதிநிலையில் காணப்படும் செலவாலும் நிர்ணயிக்கப்படுகிறது. நிலத்தைப் பொதுவாக எடுத் துப் பார்க்கும்போது, பொருளாதார வாரம் என்பது ஓர் எச்சமாகத் தெரிகிறதே தவிர, செலவாக இல்லை. ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதி யின் வாரமானது, முதலாவதாக, வாரத்தின் பொதுமட்டத்தையும் இரண்டாவதாக அந் நிலப்பகுதிகளின் வளம், சாதகமான இட அமைப்பு, தட்பவெப்பநிலை போன்ற வேறுபாட்டு நன்மைகளையும் பொறுத்திருக்கிறது. விவசாயத்தின் ஒரு தனிப் பிரிவை எடுத்துப் பார்க்கும்போது, இவ்வாரம் முழுவதுமோ அல்லது ஒரு பகுதியோ செலவாக இருக்கிறதே ஒழிய எச்சமாக இல்லை.

## தேவை

எந்த ஓர் உற்பத்திக் காரணியின் சம்பாத்தியமும் அக் காரணி யின் பணிகளுக்குள்ள தேவையைப்பொறுத்திருக்கிறது. இங்கே முக்கியமானதாகக் கருதப்படுவது காரணியின் ஆக்கப்பாடே (productivity)யாகும். காரணியின் ஆக்கப்பாடு மிகையாக இருக்குமேயானுல், காரணியின் தேவையும் அதற்குத் தரப்படும் விலையும் அதிகமாக இருக்கும். ஆக்கப்பாடு என்ற பதத்திற்கு, சமூகத்திற்குப் பயன்படும் ஒரு பொருளை உற்பத்தி செய்வதற்குத் தேவைப்படும் ஆற்றல் என்று பொருள்கொள்ளலாம். ஆனல், பொருளாதாரத்தில் 'ஆக்கப்பாடு' என்ற சொல், பயன்பாட்டை உருவாக்குவதற்குத் தேவைப்படும் ஆற்றலைச் சுட்டிக்காட்டுவதாக இருக்கிறது. விரல்நகத்திற்கு வண்ணம் தீட்டுவோர்களும், விலங்குகளுக்குப் பல்வைத்தியம் செய்வோர்களும் அறவே இல் லாதுபோவார்களேயானுல், அதனல் சமூகம் சிறிதும் பாதிக்கப் படுவதில்லை; ஆனல், உழவர்களும் கொத்தர்களும் அறவே

இல்லாதுபோவார்களேயானால், அதனால் சமூகம் மிகவும் பாதிக்கப்படுவதாக இருக்கிறது. எனினும், விரல்நகத்திற்கு வண்ணம் தீட்டுவோர்கள் உழவர்களைவிட மிகுந்த ஆக்கமுள்ளவர்களாகக் கருதப்படுவதால், அவர்கள் உழவர்களைவிட அதிகமான ஊதியம் பெறக்கூடியவர்களாக இருக்கின்றனர். இவர்களின் பணிகளுக்குச் செல்வர்கள் நல்ல மதிப்புக் கொடுக்கின்றனர் என்பதாலேயே, இவர்கள் மிகுந்த ஆக்கமுள்ளவர்களாகக் கருதப்படுகின்றனர். உழவர்கள் எந்த எண்ணிக்கையில் இருக்கின்றனரோ அந்த எண்ணிக்கையில் விரல்நகத்திற்கு வண்ணம் தீட்டுவோர்களும் இருப்பார்களேயானால், இவர்களைவிட உழவர்கள் மிகுந்த ஆக்கத் திறமையுள்ளவர்களாகக் கருதப்படுவர். நமக்குத் தேவைப்படும் அளவிற்கதிகமாக இவர்கள் இருப்பர். ஆகவே, எந்தத் தொகையை வாங்கிக்கொண்டும் தம் பணிகளைத் தர இவர்கள் தயாராயிருப்பர். எவ்வாறு ஒரு பண்டத்தின் அளவு அதிகமாகும்போது அதன் பயன்பாடு குறைந்து செல்வதாக இருக்கிறதோ, அதைப்போலவே எந்த ஓர் உற்பத்திக் காரணியின் அளவும் அதிகரிக்கும்போது அதன் ஆக்கப்பாடு குறைந்துசெல்வதாக இருக்கிறது. குறைந்துசெல் பயன்பாட்டு விதியைப்போன்று, குறைந்துசெல் ஆக்கப்பாட்டு விதி என்று ஒன்றிருக்கிறது.

## இறுதிநிலை ஆக்கப்பாடு (Marginal Productivity)

ஒரு காரணியின் ஆக்கப்பாடுதான், அக் காரணியின் பணிகளுக்கு நாம் தரவிருக்கும் விலையை (தேவை விலையை) நிர்ணயிக்கிறது என்று நாம் நினைக்கக்கூடாது. இறுதிநிலையில் காணப்படும் காரணியின் ஆக்கப்பாடே அல்லது இறுதிநிலை ஆக்கப்பாடே, அக் காரணியின் விலையை நிர்ணயிக்கிறது. எந்த உற்பத்திக் காரணியின் சம்பாத்தியமும் அக் காரணியின் இறுதிநிலை ஆக்கப்பாட்டின் மதிப்புக்குச் சமமாக இருக்கிறது. மிகவும் குறைவான ஆக்கத்திறமை தேவைப்படும் வேலையில் ஈடுபடுத்தப்பட்ட காரணியின் ஓர் அலகினால் மொத்த உற்பத்தி எந்த அளவிற்குக் கூடுகிறதோ, அந்தக் கூடுதல் உற்பத்தியின் மதிப்பே இறுதிநிலை ஆக்கப்பாட்டின் மதிப்பு என்று வழங்கப்படுகிறது.

உதாரணமாக, ஒரேவிதத் திறமையுடைய உழைப்பாளிகளை ஒரு விவசாயி வேலைக்கு எடுத்துக்கொள்வதாகவும், நிறைவுப் போட்டி நிலவுமானால் இவ்வுழைப்பாளிகளுக்கெல்லாம் ஒரேவிதமான கூலி கொடுக்கப்படவேண்டியிருக்கிறது என்றும் எடுத்துக் கொள்வோம். வாரம் ஒன்றிற்கு, முதலாவது உழைப்பாளிக்கு 8 பவுன்கள் கொடுப்பதும், இரண்டாவது உழைப்பாளிக்கு 6 பவுன்கள் கொடுப்பதும், மூன்றாவது தொழிலாளிக்கு 5 பவுன்கள்

கொடுப்பதும் தக்கதாகஇருக்கலாம். நிலத்தின் ஒரு சிறு பகுதியைப் பயிரிட்டு, மற்றப் பகுதிகளைப் புல் வளர்வதற்கு விட்டுவிடுவது விவசாயிக்குச் சிரமத்தைக் கொடுப்பதாக இல்லையென்றால் அல்லது பயிர்த் தொழிலில் ஒருவனுக்குமட்டுமே போதிய வேலைகள் இருப்ப தாகக் காணப்படுமானால், முதல் தொழிலாளி ஒருவனே போதும் என்ற நிலையிருக்கிறது. எனவே, இரண்டாவது தொழிலாளியை வேலைக்கு எடுத்துக்கொள்வது அவசியமற்றதாகப்படுகிறது. இதைப்போலவே, இரண்டே இரண்டு உழைப்பாளிகள் போதும் என்ற நிலை இருக்கும்போது, மூன்றாவது உழைப்பாளி அவசிய மற்றவனாக இருக்கிறான். இவர்களைப்போன்ற திறமைபெற்றிருக் கும் வேறு பல உழைப்பாளிகளும் ஆடுமாடுகளை மேய்த்துவருவ தற்காகப் பண்ணையில் அமர்த்தப்பட்டிருக்கலாம். வேலைக்கு எடுத்துக்கொள்ளப்படவேண்டிய விவசாய உழைப்பாளிகளின் கூலி மாறாத ஒன்றாக இருக்குமானால், இறுதியாக எடுத்துக்கொள் ளப்படும் உழைப்பாளியினால் கிடைக்கின்ற வருமானம் அவனுக் குத் தரப்படும் கூலிக்குச் சமமாக இருக்கிறது என்ற நிலை காணப் படும்வரைதான், வேலைக்கு எடுத்துக்கொள்ளப்படும் உழைப்பாளி களின் எண்ணிக்கையை விவசாயி அதிகப்படுத்திக்கொண்டிருப் பான். இறுதிநிலையில் தொழிலாளர்களை மேலும் எடுத்துக்கொள் வது இலாபத்தைக் கெடுக்கும்; குறைவாக எடுத்துக்கொள்வது சற்று இலாபம் தரக்கூடிய வாய்ப்பைத் தடுக்கும். இவ்வாறாக, இறுதிநிலை தொழிலாளிக்குத் தரப்படும் கூலி, அவனால் செய்யப் படுகின்ற வேலைகளின் மதிப்புக்குச் சமமாக இருக்கிறது. மற்றத் தொழிலாளர்களால் செய்யப்படும் வேலைகளின் மதிப்பு எப்படி இருந்தாலும், அவர்கள் இறுதிநிலைத் தொழிலாளியைப்போன்று ஒரேவிதத் திறமை பெற்றிருப்பதனால், அவர்களுக்கும் இறுதிநிலைத் தொழிலாளிக்குத் தரப்படும் கூலியே தரப்படவேண்டியிருக்கிறது. தொழிலாளர்கள் அனைவரும் ஒரு வேலையிலிருந்து மற்றொரு வேலைக்கு மாற்றப்படக்கூடியவர்களாக இருப்பார்களேயானால், ஒருவனுக்குக் குறைவான கூலியையும் மற்றொருவனுக்கு அதிக மான கூலியையும் கொடுப்பதில் நியாயமில்லை. ஆகவே, விவசாயி, தொழிலாளர்கள் அனைவருக்கும் உழைப்பின் இறுதிநிலை ஆக்கப் பாட்டின் மதிப்புக்குச் சமமான தொகையைக் கூலியாகத் தருகிறான்.

ஒரு பண்ணையைப்பொறுத்து எது உண்மையாக இருக் கிறதோ, அது எல்லாப் பண்ணைகளைப்பொறுத்தும் உண்மையாக இருக்கிறது. எல்லாப் பண்ணைகளிலும் தரப்படும் கூலியானது, உழைப்பின் இறுதிநிலை ஆக்கப்பாட்டின் மதிப்புக்குச் சமமாக இருக்கிறது. இப்படிப்பட்ட ஒரு நிலை ஏற்படுவதற்கு எத்தனை

ஆட்கள் எடுத்துக்கொள்ளப்பட வேண்டுமோ, அத்தனை ஆட்கள் மட்டுமே பண்ணை எங்கணும் எடுத்துக்கொள்ளப்படுவர். இதைச் செய்யவேண்டும் என்று எல்லா விவசாயிகளும் முயலும்போது, தொழிலாளர் பற்றுக்குறை ஏற்படும். அப்போது, எந்த நிலங்களில் உழைப்பின் இறுதிநிலை ஆக்கம், தொழிலாளர்களுக்குத் தரப்படும் கூலியைவிட அதிகமாக இருக்கின்றதோ, அந் நிலங்களின் சொந்தக்காரர்கள், எந் நிலங்களில் தொழிலாளர்கள் போதிய அளவில் பயன்படுத்தப்படவில்லையோ, அந் நிலங்களிலிருந்து தொழிலாளர்களை எடுத்துக்கொள்ள விரும்புவர். இது கூலிமட்டத்தை உயர்த்தும். அப்போது, முன்பு தொழிலாளர்களால் செய்யப்பட்ட பலதரப்பட்ட வேலைகள் பயனற்றவையாகப் போகும். எனவே, தொழிலாளர்களின் தேவை குறையும். கூலிமட்டமும் இறுதிநிலை ஆக்கப்பாடும் உயர்வாக இருக்கின்ற நிலையில், தேவைக்கும் அளிப்புக்குமிடையே மறுபடியும் ஒரு சமநிலை ஏற்படுத்தப்படும். அதே வேளையில், கூலிமட்டம் உயர்வாக இருந்து, தொழிலாளர்கள் அனைவரையும் வேலைக்கு எடுத்துக் கொள்வது விவசாயிகளுக்குச் சாத்தியமில்லையென்றால், கூலிமட்டம் இறங்கவேண்டியது அவசியமாகிறது. அப்போது முன்பு இறுதிநிலைக்குக் கீழான வேலைகள் என்று கருதப்பட்டவை, தொழிலாளர்களால் செய்யப்படத் துவங்கும். இதன் வாயிலாக, முன்பு வேலையில்லாமலிருந்த தொழிலாளர்களுக்குத் தற்போது வேலை கிடைக்கும்.

உழைப்பின் இறுதிநிலை ஆக்கப்பாடு, ஒரு பண்ணையிலிருப்பதைவிட மற்றொரு பண்ணையில் மிகையாக இருக்கக்கூடும். தொழிலாளர்களை வேலைக்கு எடுத்துக்கொள்வதில், விவசாயிகளிடையே போட்டி ஏற்படுமானால், செழிப்பானதாகவும் பெருகக்கூடியதாகவுமிருக்கின்ற பண்ணையில் உழைப்பின் இறுதிநிலை ஆக்கப்பாடு, கூலிமட்டத்திற்கு மேலிருக்கும். மந்தமாகவும் குறுகக் கூடியதாகவும் இருக்கின்ற பண்ணையில், உழைப்பின் இறுதிநிலை ஆக்கப்பாடு, கூலிமட்டத்திற்குக் கீழிருக்கும். முதலாவது பண்ணை, தன் தொழிலாளர்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்துவதில் ஈடுபட்டிருக்கும்; இரண்டாவது பண்ணை, தன் தொழிலாளர்களின் எண்ணிக்கையைக் குறைப்பதில் ஈடுபட்டிருக்கும். ஆனால், போட்டியானது சக்தி வாய்ந்ததாக இருக்குமேயானால், முதல் பண்ணை உயர்ந்த கூலியையும் இரண்டாவது பண்ணை குறைந்த கூலியையும் தருவதாக இருக்கமுடியாது. ஒரு பண்ணையிலிருந்து மற்றொரு பண்ணைக்குத் தொழிலாளர்கள் நகரக் கூடியவர்களாக இருக்கின்றவரை, ஒரு குறிப்பிட்டபண்ணை இலாபகரமாக இருக்கிறது என்பது அப்பண்ணையால் எடுத்துக்கொள்ளப்

படவிருக்கும் தொழிலாளர்களின் கூலியை மாற்றமுடியாது. எந்த ஒரு தனிப்பட்ட பண்ணையிலும் உழைப்பின் இறுதிநிலை ஆக்கம் உயர்வாகவோ அல்லது குறைவாகவோ இருக்கிறது என்பதற்காக, அப் பண்ணையில் காணப்படும் கூலியானது உயர் வாகவோ அல்லது குறைவாகவோ இருக்கமுடியாது. மிகவும் செழிப்பாகவோ அல்லது மிகவும் மந்தமாகவோ இருக்கின்ற பண்ணையில் காணப்படும் உழைப்பின் இறுதிநிலை ஆக்கப்பாட்டை நாம் எடுத்துக்கொள்வது கூடாது; பயிர்த் தொழிலின் போக்கை நன்கு பிரதிபலிப்பதாக இருக்கின்ற ஒரு மாதிரிப் (representative) பண்ணையில் காணப்படும் உழைப்பின் இறுதிநிலை ஆக்கப் பாட்டையே நாம் எடுத்துக்கொள்ளவேண்டும். பயிர்த்தொழில் சமநிலையிலிருக்கும்போது, இந்த மாதிரிப்பண்ணையும் சமநிலையி லிருக்கும். தொழில் வளர்வதையோ அல்லது வளராமலிருப்ப தையோ பொறுத்து இப் பண்ணையின் இலாபம் மிகையாகவோ அல்லது குறைவாகவோ இருக்கும். எந்த வீதத்தில் இந்த மாதிரிப்பண்ணை தன் தொழிலாளிகளுக்குக் கூலி கொடுக்கிறதோ, அந்த வீதத்தில்தான் மற்றப் பண்ணைகளும் தங்கள் தொழிலாளர் களுக்குக் கூலி கொடுக்கும். மாதிரிப்பண்ணையில் காணப்படும் உழைப்பின் இறுதிநிலை ஆக்கப்பாடே, தேவைப் பக்கமிருந்து, விவசாயத் தொழிலாளர்களின் கூலியை நிர்ணயிக்கிறது. இது விவசாயமேயன்றி மற்ற எல்லாத் தொழில்களுக்கும் பொருந்து வதாக இருக்கிறது. ஒவ்வொரு தொழிலிலும் தரப்படும் கூலி, மாதிரி நிறுவனத்தில் காணப்படும் உழைப்பின் இறுதிநிலை ஆக்கப் பாட்டிற்குச் சமமாக இருக்கும்.

இதுவரை விளக்கப்பட்டுவந்த உண்மை எவ்வாறு ஒரு முழுத் தொழிலுக்கும் பொருந்துவதாக இருக்கிறது என்பதையும் நம்மால் விளக்கமுடியும். தொழில்களிடையே உழைப்புத் தடையின்றிப் பெயர்வதாக இருந்தால் — நிறுவனங்களிடையே பெயர்வதை விடத் தொழில்களிடையே பெயர்வது சற்று சிரமமானதே—தொழி லாளர்களுக்குத் தரப்படும் கூலியானது, எல்லாத் தொழில்களிலும் ஒரே மாதிரியாக இருக்கும். ஒரு தொழிலில் காணப்படும் செழிப்பு நிலையால், அந் நிறுவனத்தால் கொடுக்கப்படும் கூலியைக் கூட் டவோ அல்லது குறைக்கவோ முடியாது. வேலைப் பொதுமட்டம் (general level of employment) அதிகரிப்பதையோ அல்லது குறை வதையோபொறுத்து, பெருகவோ அல்லது குறுகவோ செய்கின்ற மாதிரி நிறுவனத்தில் காணப்படும் உழைப்பின் இறுதிநிலை ஆக்கப்பாடே, கூலி எவ்வாறிருக்க வேண்டும் என்பதை நிர்ணயிக் கிறது.

**இறுதிநிலே ஆக்கப்பாடும் பதிலீடும்**

ஒரு பண்டத்தின் இறுதிநிலேப் பயன்பாட்டைப்போன்று, ஒரு காரணியின் இறுதிநிலே ஆக்கப்பாடும் அதன் அளவு அதிகரிக்கும் போது குறைவதாக இருக்கிறது. ஒரு பண்டத்தின் தேவையை ஆராய்ந்தபோது, இறுதிநிலேக் கருத்து பதிலீட்டுக் கருத்தோடு தொடர்புடையதாக இருக்கக் கண்டோம். ஓர் உற்பத்திக் காரணியின் தேவையை ஆராயும்போதும், இத்தகைய தொடர்பையே திரும்பக் காண்கிருேம். எந்த வீதத்தில் ஒரு காரணியின் இறுதி நிலே ஆக்கப்பாடு குறையும் என்பது, எந்த வீதத்தில் மற்றக் காரணிகளுக்குப் பதிலாக அக் காரணியின் கூடுதல் அலகுகளே எடுத்துக்கொள்ளமுடியும் என்பதைப்பொறுத்திருக்கிறது. ஒரு காரணியை மற்ருெரு காரணிக்குப் பதிலாகச் சுலபமாக ஆள முடியுமென்ருல், இவ்விரண்டு காரணிகளின் இறுதிநிலே ஆக்கப் பாடும் மெதுவாகக் குறையும். ஏனெனில், இரண்டாவது காரணி மிகையாக இருக்குமானுல், முதல் காரணியால் செய்யப்படும் அத்தனே வேலேகளும் அதனுல் செய்யக்கூடியதாக இருக்கிறது. ஒரு காரணிக்குப் பதிலாக மற்ருெரு காரணியைப் பதிலீடு செய் வது என்பது, குறைந்துசெல் விளேவு விதியால் தடைசெய்யப்படு வதாக இருக்கிறது. ஒரு காரணிக்குப் பதிலாக மற்ருெரு காரணி யைப் பதிலீடு செய்வது என்பது, காரணிகளேக் கலவைசெய்கின்ற வீதம் மாறும்போது மிகவும் சிரமமானதாகிறது என்பதையே குறைந்துசெல் விளேவு விதி எடுத்துக்காட்டுகிறது. இதைக் குறைந்துசெல் பதிலீட்டு விதியென்றும் சொல்லலாம். ஆகவே, இறுதிநிலே ஆக்கப்பாடு ஏன் குறைகிறது என்பதற்குக் குறைந்து செல் விளேவு விதியில் ஒரு காரணத்தைக் காண்கிருேம். அக் காரணம் தொழில்நுட்பத்தோடு தொடர்புடையதாகும். எந்த ஒரு காரணியையும் அதிகமாக வேலேக்கு எடுத்துக்கொள்வதில் மிகுந்த சிரமம் இருக்கிறது. ஏனெனில், அக் காரணி பயன்படுத்தப்படப் போகின்ற அதிகப்படியான உபயோகங்களில், மற்றக் (மாருத) காரணிகளுக்குப் பதிலாக இதை ஆள்வதென்பது அவ்வளவு பயன்தரக்கூடிய ஒன்ருக இல்லே. இந்த அதிகப்படியான உப யோகங்களில் காரணியின் மதிப்பு, அதாவது அதன் இறுதிநிலே ஆக்கப்பாட்டின் மதிப்பு குறைவதாக இருக்கிறது. இதனுல் அதற்குத் தரப்படுகின்ற விலேயும் குறைகிறது.

குறைந்துசெல் இறுதிநிலே ஆக்கக் கருத்திலும், குறைந்துசெல் பயன்பாட்டு விதியின் சுவடுகள் காணப்படுகின்றன. எந்த ஒரு காரணியும் அரிதாக இல்லேயென்ருல், அதன் உற்பத்திப் பொரு ளும் அரிதாக இருப்பதில்லே. ஆகவே, அவைகளின் பயன்பாடும் குறைவாக இருக்கும்; அவைகளுக்குத் தரப்படும் விலேயும் குறை

வாக இருக்கும். அவற்றை உற்பத்திசெய்யும் காரணி குறைந்த ஊதியத்தைப் பெறவேண்டியிருக்கிறது. இறுதிநிலை ஆக்கப்பாடு ஏன் குறைகிறது என்பதற்கு இங்கே இரண்டாவது காரணம் காணப்படுகிறது. இஃது உளவியல் சம்பந்தப்பட்ட ஒரு காரண மாகும்.

ஆகவே, எந்த ஓர் உற்பத்திக் காரணியின் அளிப்பும் அதி கரிக்கும்போது, இருவிதப் பதிலீடுகள் செய்யப்படுகின்றன. குறைந்துசெல் விளைவு விதியை அனுசரித்து, உற்பத்தியாளர்கள் ஒருவிதப் பதிலீடு செய்கின்றனர்; குறைந்துசெல் பயன்பாட்டு விதியை அனுசரித்து, நுகர்வோர்கள் மற்றொருவிதப் பதிலீடு செய் கின்றனர். உதாரணமாக, விவசாயத்தில் வேலை செய்யவேண்டும் என்று பலர் முயலுவதாக வைத்துக்கொள்வோம். தொழிலாளர்க ளிடையே காணப்படும் இப் போட்டி கூலியை இறக்கும். இவ்வாறு கூலி இறங்குவது என்பது, தொழிலாளர்களை நிறைய எடுத்துக் கொள்ளவேண்டும் என்ற ஊக்கம் விவசாயிகளுக்குப் பிறக்கின்ற வரை நீடிக்கும். இவ்வூக்கம் இரு வழிகளில் உதயமாகிறது.

முதலாவதாக முதலோடும் நிலத்தோடும் ஒப்பிட்டுப்பார்க்கும் போது, உழைப்பு மலிவாகக் காணப்படுமானால், எந்த ஒரு தானி யத்தைப் பயிரிடுவதற்கும் உழைப்பை மிகையாவும், முதலையும் நிலத்தையும் குறைவாகவும் ஆள்வது பயன்தரக்கூடியதாக இருக் கிறது. தொழிலாளர்கட்கு அதிகக் கூலி தரவேண்டியிருந்ததன் காரணமாகப் பால் கறப்பதற்குப் பொறிகளையும், உழுவதற்கு எந்தி ரக் கலப்பைகளையும் ஆளத் துவங்கிய விவசாயிகள், தற்போது மறுபடியும் சாதாரண முறையில் பால் கறக்கவும், குதிரைகளைக் கொண்டு உழவும் ஆரம்பிப்பர். உழைப்பைச் சிக்கனப்படுத்து வதற்காக, முன்பு அகல உழும் முறை பின்பற்றப்பட்டது; உழைப்பு மலிவாக இருப்பதால் அதை அதிகமாக ஆளவேண்டும் என்ற நோக்கத்தில், இப்போது ஆழ உழும் முறை பின்பற்றப்படும். இவ்வாறுகக் குறைந்த முதலைக்கொண்டோ அல்லது குறைந்த நிலத்தை வைத்தோ, மிகுதியான தொழிலாளர்கள் தற்போது ஒரு பண்டத்தை உற்பத்தி செய்வதில் ஈடுபட்டிருப்பர்.

இரண்டாவதாகக் கூலிஇறங்குவதால், விவசாயத்தின் எல்லாப் பகுதிகளும் ஒரே அளவாகப் பாதிக்கப்படுவதில்லை. கம்பளி உற் பத்திச் செலவைவிட, கோதுமை உற்பத்திச் செலவில் கூலியானது பெரும் அளவில் இடம்பெறுகிறது. காய்கறி உற்பத்திச் செலவில், கூலியானது, இன்னும் சற்றுப் பெருமளவில் இடம்பெறுகிறது. ஆகவே, கூலி இறங்குவதால், கம்பளியின் விலையைவிடக் கோது மையின் விலை அதிகமாகவும், காய்கறிகளின் விலை இன்னும் சற்று

அதிகமாகவும் இறங்குகிறது. விலை மிகவும் குறைந்தால், தேவை மிகவும் அதிகரிக்கும்; மலிவான பண்டங்களை மிகையாகவும், மலி வற்ற பண்டங்களைக் குறைவாகவும் நுகர்வோர்கள் வாங்குவர். காய்கறி உற்பத்தித் தொழிலும், உழைப்பை அதிகமாகப் பயன் படுத்திவரும் மற்ற விவசாயப் பகுதிகளும் தற்போது மிகவும் பெருகும். ஆடு வளர்ப்புத் தொழிலும், உழைப்பைச் சற்றுக் குறைவாகப் பயன்படுத்திவரும் மற்ற விவசாயப் பகுதிகளும் கொஞ்சம் பெருகும். உழைப்பைக் குறைவாகப் பயன்படுத்தி உற்பத்தி செய்யப்படும் பொருள்களுக்காக, உழைப்பை மிகை யாகப் பயன்படுத்தி உற்பத்தி செய்யப்படும் பொருள்களை நுகர் வோர்கள் தற்போது பதிலீடு செய்வர். ஆகவே, உழைப்பின் மொத்தத் தேவை தற்போது அதிகரிக்கும். ஒருவிதப் பொருள் களுக்குப் பதிலாக மற்றொருவிதப் பொருள்களை வாங்குவது நுகர் வோர்களுக்கு மிகவும் சுலபமாக இருக்கிறதென்றால், கூலியின் மாறுதலுக்கேற்ப உழைப்பின் தேவை மிகவும் மாறுதலடைவதாக இருக்கிறது. அதாவது, தேவை மிகவும் நெகிழ்ச்சியுள்ளதாக இருக்கிறது.

**தேவை நெகிழ்ச்சி**

ஒரு காரணியானது தன் இறுதிநிலை ஆக்கப்பாட்டிற்குச் சம மான ஊதியத்தை எப்போதும் பெறுவதாயிருந்து, அக் காரணி யின் அளிப்பு அதிகமாகும்போது அதன் இறுதிநிலை ஆக்கப்பாடு குறைந்துசெல்கின்ற வீதம், அக் காரணியின் தேவை நெகிழ்ச்சி யைச் சுட்டிக்காட்டுவதாக இருக்கிறது. எனவே, குறைந்துசெல் இறுதிநிலை ஆக்கப்பாட்டைப்பற்றிய நமது முடிவுகளைத் தேவை நெகிழ்ச்சி வாயிலாகவும் வேறொரு முறையில் எடுத்துச்சொல்லமுடி யும். ஒரு காரணியின் தேவை நெகிழ்ச்சியானது, மற்றக் காரணி களுக்குப் பதிலாக அக்காரணியை ஆள்வதிலிருக்கும் தொழில்நுட் பத் தடைகளாலும், மற்றக் காரணிகளால் உற்பத்திசெய்யப்படும் பொருள்களுக்குப் பதிலாக அக்காரணி உற்பத்திசெய்யும் பொருள் களை உபயோகப்படுத்துவதிலிருக்கும் உளவியல் தொடர்பான தடைகளாலும் (psychological obstacles) நிர்ணயிக்கப்படுவதாக இருக்கிறது. அடுத்து, உற்பத்தியாளர்களுக்கும் நுகர்வோர்களுக் கும் கிடைக்க இருக்கும் தகுந்த பதிலீட்டுப் பொருள்களைப்பொறுத் தும் தேவை நெகிழ்ச்சி இருக்கிறது.

இறுதிநிலையில் ஒவ்வொரு காரணியையும் மற்றொரு காரணிக் குப் பதிலாக ஆள்வதென்பது முடிவதாக இருந்தாலும், எந்த ஒரு காரணியையும் அறவே எடுத்துக்கொள்ளாது, அதற்குப் பதிலாக மற்றக் காரணிகளை ஆள்வதென்பது முடியாது. நிலம், உழைப்பு,

முதல் ஆகிய காரணிகளில் ஏதாவது ஒன்று இல்லாமல், எதையும் உற்பத்திசெய்யமுடியும் என்பதை நம்மால் நினைத்துக்கூடப் பார்க்க முடியாது. இவ்வாருக, உற்பத்திக் காரணிகள் ஒன்ருேடொன்று போட்டியிட்டுக்கொண்டிருக்கின்றனவாயும், அதே வேளையில் ஒன்ருேடொன்று ஒத்துப்போகின்றனவாயும் இருக்கின்றன. அதாவது, எதிரிகளாகவும், அதே வேளையில், இணைந்துபோகின்றனவாகவும் அவை இருக்கின்றன. காரணிகளின் தேவை கூட்டுத் தேவையாகவும், அவைகளின் அளிப்பு, கலப்பு அளிப்பாகவும் இருப்பதனுல் ஏற்படுகின்ற இவ்விரு தரப்பட்ட தொடர்பு, ஏற்கெனவே நாம் 20ஆம் அத்தியாயத்தில் கண்ட பல பிரச்சினைகளை எழுப்புவதாயிருக்கிறது. உதாரணமாக, ஒரு காரணியின் அளிப்பில் ஏற்படும் ஒரு மாறுதல், மற்றக் காரணிகளின் ஊதியங்களை எவ்வாறு பாதிக்கும்?

முதலில், உழைப்பும் சொத்தும் என்ற இரண்டு உற்பத்திக் காரணிகளே இருப்பதாக வைத்துக்கொள்வோம். அப்போது, ஒன்றின் அளிப்பு அதிகமாவது மற்ருென்றின் ஊதியத்தை உயர்த்தவே செய்யும். தொழிலாளர்களை அதிகமாக எடுத்துக்கொள்ளவேண்டியிருந்தால், உழைப்பின் இறுதிநிலை ஆக்கப்பாடு குறையும். ஒவ்வொரு தொழிலாளியும், ஒவ்வொரு கூடுதல் தொழிலாளியைப் போல்அல்லாது, குறைந்த ஊதியத்தைப் பெற்றுவருவான். அதிகப்படியாக எடுத்துக்கொள்ளப்படுகின்ற தொழிலாளர்கள் அனைவரும், அவர்களுக்குத் தரப்படும் கூலிக்குச் சமமான மதிப்புடைய வேலையையாவது செய்வதாயிருப்பதால், கூலி போக மீதமிருக்கின்ற உற்பத்தியின் ஆக்கம் (residue of product) மிகையாக இருக்கும். இது சொத்தின் சம்பாத்தியத்திற்குச் சமமாக இருக்கும். சொத்துமூலம் வருகின்ற வருவாய் நிச்சயம் அதிகரிக்கும். ஆனுல், மொத்த உற்பத்தியில் சொத்தின் பங்கு அதிகரிக்காது. உழைப்பின் தேவை நெகிழ்ச்சியுள்ளதா யிருந்தால், உழைப்பு மலிவாகும்போது, உழைப்பிற்காக வேலையளிப்போன் நிறைய பணத்தைச் செலவிடுவான். இதன் காரணமாக, மிகுதியான தொழிலாளர்களிடையே மிகுதியான மொத்தக் கூலித்தொகை பகிர்வுசெய்யப்படும். அப்போது, உழைப்பின் மொத்த சம்பாத்தியமும் சொத்தின் மொத்த சம்பாத்தியமும் அதிகரிக்கும். உழைப்பின் தேவை போதிய அளவு நெகிழ்ச்சியுள்ளதாயிருந்தால், அதாவது, சொத்துக்குப் பதிலாக உழைப்பைச் சுலபமாக ஆள முடியுமென்ருல், உழைப்பின் பங்கு அதிகரிக்கும். ஒவ்வொரு தனிமனிதனுக்கும் கிடைக்கின்ற கூலித்தொகை குறைவாயிருந்தாலும், நாட்டு வருமானத்தின் ஒரு பெரும்பகுதியாகக் கூலித் தொகை இருக்கும்..

உழைப்பையும் சொத்தையும் பொறுத்தவரை, ஒன்றிற்காக மற்றொன்றைச் சுலபமாக ஆள்வதென்பது முடியாது என்பதற்குக் காரணமிருக்கிறது. எனினும், சொத்து என்பதற்கு எந்திரங்கள் என்று நாம் பொருள்கொண்டால், இந்த முடிவு குழப்பத்தை விளைவிப்பதாக இருக்கிறது. உழைப்பிற்குப் பதிலாக எந்திரங்கள் அடிக்கடி ஆளப்படுகின்றன; உழைப்பு மலிவாகுமானால், அஃது எந்திரங்களுக்குப் பதிலாக ஆளப்படும். ஆனால், சொத்து என்பது வீடுகள், மின்சார நிலையங்கள், புகைவண்டிச் சாதனம், சாகுபடி செய்யக்கூடிய நிலங்கள் ஆகியவைகளைக் கொண்டிருப்பதாக எடுத்துக்கொண்டால், எந்த விதத்தில் பதிலீடுசெய்வது என்ற பிரச்சினை எழுகிறது. பதிலீடுசெய்வதென்பது சுற்றுவழி முறையில் அமைவதாக இருக்கிறது. உதாரணமாக, வீட்டு வேலைக்காரர்களின் பற்றுக்குறை ஏற்படும்போது, எந்த வீட்டில் குடியிருந்தால் அதிகமான வேலைக்காரர்களை வைத்துக்கொள்ள வேண்டியது அவசியமாகிறதோ, அந்த வீட்டைக் காலிசெய்துவிட்டு, எந்த வீட்டில் குடியிருந்தால் குறைவான வேலைக்காரர்கள் தேவைப்படுகின்றனரோ அந்த வீட்டிற்குச் செல்லவேண்டியிருக்கிறது. முதல் வகைச் சொத்தைவிட இரண்டாவது வகைச் சொத்துச் சிறந்ததாக இருப்பதால், உழைப்பும் சொத்தும் ஒன்றிற்கு மற்றொன்று சிறந்த பதிலிகளாக இருக்கவில்லை. எதிரிகளாக இருப்பதைவிட இணைந்து போகின்றவையாக இவையிரண்டுமிருப்பதால், ஒன்றின் அளிப்பு அதிகமாகும்போது, அதன் பங்கு நாட்டு வருமானத்தில் குறைந்து, மற்றொன்றின் பங்கு அதிகரிக்கிறது.[1]

இரு காரணிகளுக்கதிகமான காரணிகள் இருக்கும்போது, ஒரு காரணியின் அளிப்பு அதிகமாவது ஒருசில காரணிகளுக்கு நன்மை பயப்பதாகவும், வேறுசில காரணிகளுக்குக் கேடு விளைவிப்பதாகவுமிருக்கலாம். உதாரணமாக, அமெரிக்க நாடு, சீனக் குடியேற்றக்காரர்களைப் பெரும் அளவில் அனுமதிப்பதாயிருந்தால், அதன் விளைவாக அமெரிக்க நாட்டு வேலைக்காரர்கள், கப்பல் தளத் தொழிலாளர்கள், சலவைத் தொழிலாளர்கள் ஆகியவர்களின் கூலிமட்டம் இறங்கும். சீன நாட்டுத் தொழிலாளிகளைக் குறைந்த கூலியில் வேலைக்கு எடுத்துக்கொள்வது சாத்தியமாயிருக்கிறது. ஆகவே, அமெரிக்க நாட்டு நடுத்தர வகுப்பினர் இதனால் நன்மை பெறுகின்றனர். சீனக் குடியேற்றக்காரர்கள், அமெரிக்க

[1] கடந்த நூறு ஆண்டுகளில், உழைப்பைவிடச் சொத்தே துரிதமாக வளர்ந்து வந்திருக்கிறது. எனினும், இவையிரண்டின் பங்குகளும் நாட்டு வருமானத்தில் சற்றேறக்குறைய ஒரே நிலையில் இருந்துவந்திருக்கின்றன. சொத்து அதிகமாக வளர்ந்துவந்திருக்கின்றபோதிலும், அதன் இறுதிநிலை ஆக்கப்பாடு குறையாமலிருந்துவந்திருப்பதற்குக் காரணம் புத்தாக்கமே (invention) யாகும்.

நாட்டு வேலைக்காரர்களுக்கு எதிரிகளாகவும், அதே வேளை யில் கப்பல் தளத் தொழிலாளர்கள் போன்றவர்களோடு இணைந்து போகின்றவர்களாகவு மிருக்கின்றனர். இவர்களால் நன்மையோ அல்லது தீமையோ அடையாத விவசாயிகள் போன்ற இடைத் தரப்பட்ட தொழிலாளர்களும் அமெரிக்காவில் இருக்கக்கூடும்.

## கோட்பாட்டின் உட்கருத்துகள்

மேலே நாம் செய்திருக்கும் முடிவுகளில் பல முக்கியக் கருத் துகள் பொதிந்துகிடக்கின்றன. உதாரணமாக, எந்த ஒரு வகுப்பு மக்களும் நலம்பெற வேண்டும் என்றால், ஒரு வாணிபத் துறையில் இருக்கும் தொழிலாளர்களின் எண்ணிக்கை மிகையாகவும், அவர் கள் கடின உழைப்பும் நல்ல திறமையுமுடையவர்களாகவு மிருக்க வேண்டும்; அதே வேளையில் மற்றொரு வாணிபத்துறையில் இருக் கும் தொழிலாளர்களின் எண்ணிக்கை குறைவாகவும், அவர்கள் சோம்பேறிகளாகவும் திறமை குறைந்தவர்களாகவுமிருக்க வேண்டும். முதல் நிபந்தனை, பொருள்களைக் குறைந்தவிலையில் வாங்க வழிசெய்கிறது. இரண்டாவது நிபந்தனை, பொருள்களை உயர்ந்த விலையில் விற்க வழிசெய்கிறது. அடுத்து, தொழிலாளர் வகுப்பினர் நலம்பெற வேண்டும் என்றால், முதலாளி வர்க்கத்தினர் தங்கள் சொத்துக்களைப் பல்வேறு வழிகளில் கரைத்துவிடாது அதைக்வே விக்ககுண்டும். ஏனெனில், சொத்தின் இருப்பு அதி கரிக்கும்போது, அதன்மேல் வருகின்ற வருவாய் குறையும். இத னால் தொழிலாளர்களின் சம்பாத்தியம் உயர்ந்து, நாட்டு வருமானத் தில் உழைப்பின் பங்கு அதிகரிக்கும்.[1] பணம் படைத்தோர் நலம்பெற வேண்டு மென்றால், மக்கள்தொகை துரிதமாகப் பெருகவேண்டும்; வேலை நேரம் நீண்டதாயிருக்க வேண் டும். அதோடு தொழிலாளர்கள் கடுமையாக உழைக்கக்கூடிய வர்களாகவும், பணத்தைச் சேமிக்காதவர்களாகவு மிருக்க வேண்டும். இந்த அத்தியாயத்தில் செய்யப்பட்டிருக்கும் பகுத்தாய்வு (analysis), பல்வேறு வகுப்பினரிடையேயும் நாடுகளி டையேயும் காணப்படும் பூசல்களைப்பற்றிப் புரிந்துகொள்வதற்குச் சற்று உதவியாக இருக்கக்கூடும்.

## இறுதிநிலை ஆக்கமும் இறுதிநிலை நிகர ஆக்கமும்

இதுவரை விளக்கப்பட்டுவந்திருக்கும் இறுதிநிலை ஆக்கக் கோட்பாடு, நாம் இதுவரை ஆராயாமல் விட்டிருக்கும் ஓர் எடு கோளைச் சார்ந்திருக்கின்றது. ஒவ்வோர் உற்பத்திக் காரணியின் ஆக்கப்பாட்டையும் அளவிட முடியும் என்பதே அவ் எடுகோள்.

1 இவ்வாறு உழைப்பின் பங்கு அதிகரிப்பது, மக்கள்தொகை பெருகும் வீதத் தையும், சொத்தின் தேவை நெகிழ்ச்சியையும் பொறுத்திருக்கிறது.

ஆனல், உழைப்பானது, எப்போதும் முதலோடும் நிலத்தோடும் சேர்ந்தே ஆளப்படுவதாயிருந்தால், இம் மூன்றின் கூட்டு உற்பத்தியிலிருந்து உழைப்பின் பங்கை எவ்வாறு பிரித்தெடுப்பது? மரவெட்டியால் வெட்டப்பட்டிருக்கும் மரங்களில் எவ்வளவை உழைப்பிற்கென்று ஒதுக்குவது? எவ்வளவைக் கோடரிக்காகியிருக்கும் முதலுக்கென்று ஒதுக்குவது? எவ்வளவை நிலத்தின் வளத்திற்கென்று ஒதுக்குவது? இக் கேள்விகளுக்கு நாம் விடை காணவேண்டும் என்ருல், இறுதிநிலைக்குச் சென்று, அங்கே ஓர் அதிகப்படியான மரவெட்டியினல் வெட்டப்பட்டிருக்கும் மரங்களின் மதிப்பை நாம் அளவிடவேண்டும் என்று இறுதிநிலை ஆக்கக் கோட்பாடு (marginal productivity theory) சொல்கிறது. அவனிடம் கோடரி இல்லை என்று வைத்துக்கொண்டால், அவனது ஆக்கப்பாடு பூஜ்யமாயிருக்கும்; காரணம், அவனுல் ஒரு மரத்தைக் கூட வெட்டமுடியாது. அவனிடம் கோடரி இருக்கிறதென்று வைத்துக்கொண்டால், அக் கோடரியின் ஆக்கப்பாட்டையும் நாம் கண்டாகவேண்டும். இது சற்றுச் சிரமமானதாகும். மற்றக் காரணிகளைப் பெருமளவில் எடுத்துக்கொண்டால்தான் ஒரு காரணியை அதிகமாக எடுத்துக்கொள்வது சாத்தியமென்ருல், இறுதிநிலை ஆக்கக் கோட்பாடு பயனற்றதாகிவிடுகிறது. சுருங்கச் சொன்ஞல், உற்பத்திக் காரணிகளைப் பல்வேறு அளவுகளில் கலவை செய்து, அவற்றை ஆள்வதென்பது முடியும் என்பதை இக் கோட்பாடு ஒரு முற்கோளாக எடுத்துக்கொள்கிறது.

இவ் வெடுகோள் மிகவும் கடினமான ஒன்று அன்று. எல்லா இடங்களிலும் உற்பத்தி முறைகள் நுட்பவினை முறையால் (technique) நிர்ணயிக்கப்படுவதாயிருந்தால், மேற்கண்டவாறு காரணிகளைக் கலவை செய்வதென்பது வேலையளிப்போனுக்குச் சிரமம் தரக்கூடியதாயில்லை. புதிய முறைகளை ஆள்வதன்மூலமும், பதிலீடு செய்வதன்மூலமும்தாம் செலவுகளைக் குறைக்க முடியும் என்ற அவசியமில்லை. வழக்கமான நுட்பவினை முறையைப் பின்பற்றுவதன் மூலம் எல்லாமே எதிர்பார்க்கின்ற வகையில் நடைபெறுவதாயிருக்கிறது. என்ருலும், நடைமுறையில், வேலையளிப்போர்கள் அவ்வளவு அதிருஷ்டசாலிகளாக இருக்கவில்லை. உற்பத்திக் காரணிகளின் அருமைத்தன்மைக்கேற்றவாறும், அவைகளின் விலைக்கேற்றவாறும், இந்த நுட்பவினைமுறை மாறக்கூடியதாயிருக்கிறது. நுட்பவினைக் கெழு (technical coefficient) வில் மாறுதல்கள்—அதாவது, உற்பத்திக் காரணிகள் எடுத்துக்கொள்ளப்படுகின்ற விகிதங்கள் மூன்று வழிகளில் செய்யப்படுகின்றன.

முதலாவதாக, மாருத அளவில் மற்றக் காரணிகளை எடுத்துக்கொண்டு, அவைகளின் அமைப்பை மாற்றி, அவற்ருேடு ஒரு குறிப்

பிட்ட காரணியின் அதிகப்படியான அலகுகளை வேலையளிப்போர்கள் ஆண்டுவரலாம். உதாரணமாக, அதிகமான மரவெட்டிகளையும் தரங்குறைந்த கோடரிகளையும் அவர்கள் பயன்படுத்துவதாயிருக்கலாம். முன்பு இருந்த கோடரிகளைப்போலத் தற்போதிருக்கும் கோடரிகள் உறுதியானவை அல்ல என்றாலும், தற்போது ஒவ்வொரு மரவெட்டிக்கும் ஒரு கோடரி கொடுப்பது சாத்தியமாயிருக்கிறது. இம் மாதிரியான மாறுதலைச் செய்வதுகூட ஒரு சராசரி தொழில் நிறுவனத்தில் அவசியமற்றதாயிருக்கிறது. இருக்கின்ற எந்திரங்களை வைத்துக்கொண்டு, இரவில் வேலையைச் சற்று நீடிக்கச் செய்வதுகூடப் போதுமானதாயிருக்கிறது.

இரண்டாவதாக, ஒரு தொழிலில் இருக்கும் நிறுவனங்களால் பின்பற்றப்படும் நுட்பவினை முறைகளிடையே பல வேற்றுமைகள் காணப்படுகின்றன. ஒருசில நிறுவனங்கள் எந்திரங்களைப் பெரும் அளவில் ஆள்கின்றன; வேறு சில நிறுவனங்கள் உழைப்பைப் பெரும் அளவில் ஆள்கின்றன. உற்பத்தி அளவுகளும் நிர்வாக அமைப்பும் மாறுபட்டுக் காணப்படுவதாலேயே, இவ்வேறுபாடுகள் காணப்படுகின்றன. உழைப்பிற்கோ அல்லது முதலுக்கோ ஆகின்ற செலவு அதிகரிக்குமானால், ஒருசில நிறுவனங்களின் இலாபம் குறைகிறது. ஏனெனில், எந்தக் காரணியின் விலை ஏறியிருக்கிறதோ, அந்தக் காரணியை அந் நிறுவனங்கள் பெரிதும் நம்பியிருக்கின்றன. ஆகவே, இதுபோன்ற வேளைகளில் இந்நிறுவனங்கள் உற்பத்தியைக் கைவிட நேரிடும். ஆனால், மற்றக் காரணியைப் பெருமளவில் எடுத்துவரும் மற்ற நிறுவனங்கள் தொழிலில் தொடர்ந்து இருந்துவரும்.

மூன்றாவதாக, பல்வேறு தொழில்களின் செழிப்பு நிலையானது, அவசியமான உற்பத்திக் காரணிகளைப் பயன்படுத்துவதற்காகும் செலவைப் பொறுத்திருக்கிறது. முதலைவிட உழைப்பை முக்கியக் காரணியாகக் கொண்டிருக்கின்ற நிலக்கரித் தொழில், கூலிமட்டம் உயரும்போது, இரசாயனத்தொழிலைவிட மிகவும் அதிகமாகப் பாதிக்கப்படுகிறது. ஏனெனில், இரசாயனத் தொழிலில் உழைப்பைவிட முதலே முக்கியமானகாரணியாக இருக்கிறது. உழைப்பு அல்லாத மற்றக் காரணிகளின் அளிப்பு மாறாமலிருக்கும்போது, சில குறிப்பிட்ட தொழில்களைப் பெருக்கி, வேறு சில தொழில்களைக் குறுக்கிக் கொள்வதன்மூலம் உழைப்பைப் பல்வேறு உபயோகங்களுக்குப் பல்வேறு அளவுகளில் ஆள்வதென்பது சாத்தியமாயிருக்கிறது.

இப்படிப்பட்ட மாறுதல்கள் நுட்பவினைக் கெழுவில் நிகழ்ந்துகொண்டிருப்பதால், வேலையளிப்போர்களால் ஒவ்வொரு காரணியின் இறுதிநிலை ஆக்கத்தையும் அளவிடமுடியும் அல்லது அள

விடவேண்டும் என்று எடுத்துக்கொள்வது அவசியமற்றதா யிருக்கிறது. சமநிலையின்போது இறுதிநிலை ஆக்கத்திற்குச் சமமாயிருக்கின்ற வேறு ஏதாவது ஒன்றைவேலையளிப்போர்கள் அளவிட்டால், அதுவே போதுமானதாயிருக்கிறது. வேறு ஏதாவது ஒன்று என்று நாம் குறிப்பிடுவது இறுதிநிலை நிகர ஆக்கப்பாடே யாகும்.

மற்றக் காரணிகளைத் தகுந்த அளவில் எடுத்துக்கொண்டிருக்கும்போது, ஒரு காரணியின் இறுதிநிலை அலகினால் மொத்த உற்பத்தி எவ்வளவு கூடுவதாயிருக்கிறதோ, அக்கூடுதல் உற்பத்தியின் நிகர மதிப்பே 'இறுதிநிலை நிகர ஆக்கப்பாடு' என வழங்கப்படுகிறது. மிகக் குறைவான ஆக்கமுள்ள உபயோகத்திற்கு எடுத்துக்கொள்ளப்படும் எந்த அலகும் 'இறுதிநிலை அலகு'என்று கொள்ளப்படவேண்டும். மொத்த மதிப்பிலிருந்து மற்றக் காரணிகளின் அதிகப்படியான அலகுகளுக்காகின்ற செலவைக் கழித்து வருகின்ற தொகையே 'நிகர மதிப்பு' என்று சொல்லப்படுகிறது. ஆகவே, மரவெட்டியின் இறுதிநிலை நிகர ஆக்கம் எதுவென்றால், இறுதிநிலை மரவெட்டியால் வெட்டப்பட்ட மரங்களின் மதிப்பிலிருந்து அவனது கோடரிக்காகியிருக்கும் செலவையும், மரங்களுக்குத் தரப்படவேண்டியிருக்கும் ராயல்டி (royalty) யையும் கழித்து வருகின்ற தொகை என்று பொருளாகும். கோடரியின் விலையும் ராயல்டி தொகையும் எவ்வாறு நிர்ணயப்படுத்தப்படுகிறது என்பது நமக்குத் தெரியுமானால், இறுதிநிலை நிகர ஆக்கப்பாட்டை எடுத்துக்கொள்வதே போதுமானதாயிருக்கிறது. மரவெட்டிகளின் இறுதிநிலை நிகர ஆக்கப்பாடு, அவர்களின் பணிகளுக்குள்ள தேவையை நிர்ணயிக்கிறது. நிறைவுப் போட்டி நிலவுகின்ற சூழ்நிலையில், இந்த இறுதிநிலை நிகர ஆக்கப்பாடு மரவெட்டிகளின் கூலிக்குச் சமமாயிருக்கும்.

### இறுதிநிலை ஆக்கப்பாடும் எச்சப்பாடும்

ஓர் உற்பத்திக் காரணியானது, இறுதிநிலை உபயோகத்தில் தன்க்குள்ள மதிப்புக்குச் சமமான கூலியைப் பெற்றுவருவதாயிருந்தால், மற்ற உற்பத்திக் காரணிகள் ஓர் எச்ச வருமானத்தைப் பெற்றுவருவதாகத் தோன்றலாம். அல்லது உற்பத்திக் காரணிகள் அனைத்தும்,தங்களது இறுதிநிலை ஆக்கத்தின் மதிப்புக்குச் சமமான கூலியைப் பெற்றுவருவதாயிருந்தால், அவைகளது கூட்டு வருமானம் அவைகளின் மொத்த உற்பத்தியின் மதிப்பைவிடக் குறைவாயிருப்பதாகத் தோன்றலாம். ஆனால், நிறைவுப் போட்டியின்கீழ் விலையானது சராசரிச் செலவிற்குச் சமமாயிருக்கிறது என்பதை முன்பே பார்த்திருக்கின்றோம். இச் சராசரிச் செலவானது, இயல்பான இலாபத்தைத் தன்னுடன் சேர்த்துக்கொள்கிறது. ஆகவே,

தொழில் முயல்வோனுக்கு (entrepreneur) எச்ச வருமானம் எதுவும் கிடைப்பதாக இல்லை. விலையும் இறுதிநிலைச் செலவிற்குச் சமமாக இருக்கிறது. எனவே, உற்பத்தியில் ஏற்படும் இறுதிநிலைக் கூடுதலின் மதிப்பானது உத்தம விகிதத்தில்(optimum ratio)கலப்புச் செய்யப்பட்டிருக்கும் ஒவ்வொரு காரணியின் இறுதிநிலை அலகுகளின் கூட்டுச் சம்பாத்தியத்திற்குச் சமமாக இருக்கிறது. ஒவ்வொரு காரணியும், அதன் இறுதிநிலை நிகர ஆக்கத்தின் மதிப்புக்குச் சமமான கூலியைப்பெறுகிறது என்பதே இதன் பொருள். எச்ச வருமானம் இங்கே காணப்படுவதாக இல்லை. ஏனெனில், உற்பத்தியின் ஒவ்வோர் அலகும் ஒரே மதிப்புடையதாயிருக்கிறது; ஒரேவித முயற்சியில் உருவாகின்றதாக இருக்கிறது. அதோடு, எல்லா உற்பத்திக் காரணிகளின் அலகுகளும் ஒரேவித சம்பாத்தியத்தைப் பெற்றுவருவதாக இருப்பதால், இறுதிநிலையைப் பொறுத்து எது உண்மையாக இருக்கிறதோ, அது மொத்த சம்பாத்தியத்தைப் பொறுத்தும் மொத்த உற்பத்தியைப் பொறுத்தும் உண்மையாக இருக்கிறது. ஒவ்வொரு காரணியும் தன் இறுதிநிலை நிகர ஆக்கத்தின் மதிப்புக்குச் சமமான ஊதியத்தைப் பெறும்போது, சமூக உற்பத்தி தீர்ந்துவிடுவதாயிருக்கிறது. நிறைவுப் போட்டி நிலவும்போது, இந்த ஊதியம் அக் காரணியின் இறுதிநிலை ஆக்கத்தின் மதிப்புக்குச் சமமாக இருக்கும்.

**நெடுங்காலத்தில் சம்பாத்தியம்**

மேலே விளக்கப்பட்டிருக்கும் பொதுக் கோட்பாடு நன்கு புரிய வேண்டும் என்றால், நெடுங்காலத்தில் உற்பத்திக் காரணிகளின் சம்பாத்தியத்தை அதிகப்படுத்துவன யாவை என்பதை நாம் குறிப்பிட்டாக வேண்டும். தற்போது உழைப்பின்மீது நமது கவனத்தைச் செலுத்துவோம். எவ்விதச் சூழ்நிலைகளில் கூலி உயரும் என்று எதிர்பார்க்கப்படும்?

(1) உழைப்பு அரிதாகுமானால், எந்த வேலைகளுக்கு உழைப்புப் பயன்படுவதாக இருக்கிறதோ, அவ்வேலைகளின் எண்ணிக்கை குறையும்; பலனற்ற வேலைகள் தவிர்க்கப்படும். இவை வாயிலாக உழைப்பின் ஆக்கப்பாடு இறுதிநிலையில் உயரும். மாறா வருவாய் கிடைத்துவருகின்ற நிலையிலாவது இது நிச்சயம் நிகழும். ஆனால், தொழில்நுட்பத்தில் பல புதிய முன்னேற்றங்களை அடைவதற்கு, உதாரணமாகப் புகைவண்டிச் சாதனத்தை ஏற்படுத்துவதற்கோ அல்லது நீர்மின்சார நிலையங்களை ஏற்படுத்துவதற்கோ பெருமளவில் மக்கள் தேவைப்படுவதாயிருந்தால், பல பிரச்சினைகள் நம் கண்முன் தோன்றுகின்றன.

(2) நிலமும் முதலும் சற்று அருமையாவதாயிருக்கலாம். அல்லது ஏற்கெனவே இருக்கின்ற அளிப்பை எவ்வளவிற்குப் பயன் படுத்த முடியுமோ அவ்வளவிற்குப் பயன்படுத்துவது சாத்தியமா யிருக்கலாம். உதாரணமாக, ஒரு தானியத்தைச் சாகுபடி செய் வதற்குப் பதிலாக இரு தானியங்களைச் சாகுபடி செய்வதும், வேலை யைப் பொறுத்தவரை ஒருமுறைக் (shift) குப் பதிலாக இரு முறை கள் வைத்துக்கொள்வதும் சாத்தியமாயிருக்கலாம். இது, நிலத் தின் இறுதிநிலை ஆக்கப்பாட்டையும் முதலின் இறுதிநிலை ஆக்கப் பாட்டையும் குறைத்து, குறைந்த அளவில் காணப்படும் உழைப்பை எடுத்துக்கொள்ள வேலையளிப்போர்களைப் போட்டி யிடத் தூண்டும். உழைப்போடு மற்றக் காரணிகளை அதிகப்படி யாக வைத்துக்கொண்டு பல செயல்களில் ஈடுபடவேண்டியிருந் தால், எச் செயல்களுக்கு உழைப்பிற்குப் பதிலாக மற்றக் காரணி களைப் பயன்படுத்த முடியாதோ அச் செயல்களுக்கு உழைப்பை இருப்புச்செய்வது அவசியமாகிறது. மிகுந்த ஆக்கமுள்ள வேலை களுக்குமட்டுமே உழைப்புப் பயன்படுத்தப்படும். இதனால், உழைப் பின் இறுதிநிலை ஆக்கம் அதிகரிக்கும். உதாரணமாக, விவசாயி களுக்குத் திடீரென்று நிலங்கள் அதிகமாகக் கிடைத்து, அவற்றை யெல்லாம் உழுது பயிரிடுகின்ற வாய்ப்புக் கிடைக்குமானால், இந் நிலங்களில் வேலை செய்வதற்குச் செலவிற்குச் சமமான வருமானத் தையே கொடுத்துவரும் இறுதிநிலைப் பண்ணையிலிருந்து தொழி லாளர்கள் கொண்டுவரப்படுவர். இறுதிநிலைப் பண்ணையில் வேலை செய்வதைவிடப் புதிய நிலங்களை உழுது பயிரிடுவது மிகுந்த ஆக்க முள்ளதாயிருப்பதால், தொழிலாளர்களுக்குஅதிகக்கூலி கொடுப்பது விவசாயிக்குச் சாத்தியமாயிருக்கிறது. தொழிலாளர்களை வேறு இடங்களுக்குச் செல்லவொட்டாமல் தடுக்க வேண்டும் என்ற நிலை ஏற்பட்டால், விவசாயிகள் தங்கள் தொழிலாளர்களுக்கு இன்னும் சற்று அதிகமான கூலி கொடுக்கவேண்டிய அவசியம் ஏற்படும்.

(3) தொழிலாளர்கள் கடினமாகவோ அல்லது துரிதமாகவோ அல்லது நீண்ட நேரம் உழைப்பவர்களாகவோ இருக்கக்கூடும். உழைப்பின் அளிப்பு அதிகரிக்காவிட்டாலும், வேலையின் அளிப்பு இங்கே அதிகரிப்பதாக இருக்கிறது. இதனால், உழைப்பைப் பயன் படுத்தும் வேலைகளின் எண்ணிக்கை பெருகும்; இதன் விளைவாக வேலையின் இறுதிநிலை ஆக்கப்பாடு குறையும். தங்கள் உழைப் பிற்குக் குறைவான கூலியைத் தொழிலாளர்கள் பெற்றுவருவர். ஆனால், வேலையின் தேவை நெகிழ்ச்சியுள்ளதாயிருக்குமானால், உழைப்பிற்குத் தரப்படும் மொத்த வெகுமானம் (மொத்தக் கூலித் தொகை) அதிகரிக்கும். இந்த மொத்த வெகுமானம் மாறாத எண் ணிக்கையிலிருக்கின்ற தொழிலாளர்களிடையே பகிர்வுசெய்யப்படு

வதால், அவர்களின் கூலியும் அதிகரிக்கும். எவ்வாறு தொழிலாளர்களின் தொகைஅதிகரிப்பது மற்றக் காரணிகளுக்கு நன்மை பயப்பதா யிருக்கிறதோ, அதைப்போலவே அவர்களின் உழைப்பு அதிகரிப்பதும் மற்றக் காரணிகளுக்கு நன்மை பயப்பதா யிருக்கிறது. மற்றக் காரணிகளின் கண்கொண்டு பார்க்கும்போது, தொழிலாளர்களின் தொகை பெருகுவதற்கும், அவர்கள் கடின உழைப்புள்ளவர்களாக இருப்பதற்கும் வேற்றுமை யிருப்பதாகத் தெரியவில்லை. இவ்விரு வேளைகளிலும் உழைப்பின் அளிப்பு அதிகரிப்பதாகவே இருக்கிறது. உழைப்பின் கண்கொண்டு பார்க்கும் போதுதான், இவையிடையே வேற்றுமை யிருப்பது புலனாகிறது. தொழிலாளர்களின் தொகை மிகையாயிருந்தால், ஒவ்வொருவனும் குறைந்த கூலியைப் பெற்றுவருவான். ஒவ்வொருவனும் கடின உழைப்புள்ளவனுயிருந்து, அதோடு உழைப்பின்தேவை நெகிழ்ச்சி யுள்ளதாயிருந்தால், ஒவ்வொரு தொழிலாளியும் அதிகமான கூலி பெறுபவனுயிருப்பான். இதற்கு எதிரிடையாக, உழைப்பின் தேவை நெகிழ்ச்சியற்றதாயிருந்து, அதோடு உழைப்பும் பற்றுக் குறையாக இருந்தால், அதிக உழைப்பைத் தராமலேயே தொழிலாளர்களால் அதிகக் கூலி பெறமுடியும். எவ்வாறு தொழிலாளர்களின் தொகை குறைவது மற்றக் காரணிகளுக்குப் பாதகமாக இருக்கிறதோ, அதைப்போலவே உழைப்பின் அளிப்புக் குறைவதும் அவைகளுக்குப் பாதகமாக இருக்கிறது.

(4) தொழிலாளர்கள் சாமர்த்தியமுள்ளவர்களாகவோ அல்லது நன்கு பயிற்சிபெற்றவர்களாகவோ அல்லது நல்ல திறமையுடையவர்களாகவோ மாறக்கூடும். இம் மாறுதல்கள் அனைத்தும் உழைப்பின் ஆக்கப்பாட்டை அதிகப்படுத்துவதாயிருந்தால், இவை ஒவ்வொன்றும் கூலியை உயர்த்துவதாயிருக்கிறது. நல்ல பயிற்சியையும் திறமையையும் பெற்றிருப்பது கூலியை உயர்த்தும். ஆனால், சாமர்த்தியம் அதிகரிப்பது கூலியைக் குறைக்கும். நாம் முன்பு பார்த்ததைப்போல உழைப்பின் தேவைநெகிழ்ச்சியற்றதா யிருக்கும்போது, துரித உழைப்பு கூலியைக் குறைப்பதாக இருக்கிறது. துரிதவேலை என்பது சாமர்த்தியத்தால் விளைவது. ஆகவே, சாமர்த்தியம் கூலியைக் குறைக்கிறது. என்றாலும், ஒருசில விதங்களில் சாமர்த்தியம் அதிகரிப்பதென்பது கூலியை உயர்த்துவதாகவே இருக்கிறது. உதாரணமாக, சொத்தைச் சாமர்த்தியமாகப் பயன்படுத்தினுல், அதனுல், வீடுகள் இடிவதும் தீப்பற்றுவதும் குறைந்து சொத்தின் அளிப்புத் துரிதமாக அதிகரிக்கலாம். இதைப் போலவே, கடனுகப் பெற்ற பணத்தைப் பயன்தரக்கூடிய தொழில்களில் முதலீடு செய்வதைப்போன்ற காரியங்களுக்கு உபயோகப் படுத்தினுல், சொத்தின் அளிப்பு அதிகரிக்கிறது. இவ் வழிகளில்

பாதுகாத்துவைக்கப்படும் சொத்து, எந்திரத்தைப்போன்று உழைப்போடு போட்டியிடுவதாயிருந்தாலொழிய, அதன் அளவு அதிகரிப்பது உழைப்பிற்கு நன்மை பயப்பதாயிருக்கிறது.

(5) உழைப்பு அல்லாத மற்றக் காரணிகளின் ஆக்கப்பாடு அதிகமாகலாம். உதாரணமாக, புதிய கருவிகள் கண்டுபிடிக்கப் படலாம். இப் புத்தாக்கங்கள் (inventions) ஒவ்வொருவரின் வாழ்க் கைத் தரத்தையும் உயர்த்துகின்றனவா? அல்லது வேலையில்லாத் திண்டாட்டத்தையும் குறைவான கூலியையும் உருவாக்கு கின்றனவா?

**புத்தாக்கமும் கூலியும்**

புத்தாக்கம் பொதுவாக 'உழைப்பைக் குறைப்பதாக' இருக் கின்றது; அதாவது, முதலையோ அல்லது நிலத்தையோ சிக்கனப் படுத்துவதைவிட உழைப்பையே அஃது அதிக அளவில் சிக்கனப் படுத்துவதாக இருக்கிறது. உழைப்பு மிகவும் குறைக்கப்படுவதாக இருந்தால், வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்படுவதாகவும் கூலி இறங்குவதாகவு மிருக்கலாம். ஆனால், ஒரு புத்தாக்கம், உழைப் பைக் குறைப்பதாகவும், அதே நேரத்தில் வேலையையும் கூலியை யும் அதிகப்படுத்துவதுமாகவு மிருப்பதுண்டு. உதாரணமாக, எந்த ஒரு புத்தாக்கத்தையும்விட, புகைவண்டி எஞ்சின் உழைப்பை மிக வும் குறைத்திருக்கிறது. ஆனால், பத்தொன்பதாம் நூற்றாண்டில், புகைவண்டிச் சாதனம் வேலைவாய்ப்புகளை அதிகப்படுத்தியது போன்றும், மக்களின்வாழ்க்கைத் தரத்தை உயர்த்தியதுபோன்றும் வேறெதுவும் செய்தது என்பதற்கு வரலாறு இல்லை. உழைப்பைக் குறைக்கும் எந்திரம், அஃது ஆளப்பட்டுவரும் தொழில்களில் வேலை யில்லாத் திண்டாட்டத்தை ஏற்படுத்துவதோடல்லாது கூலியையும் குறைக்கிறது என்றாலும், புத்தாக்கத்தின்மூலமாகச் செலவுகளும் விலைகளும் குறைவதாக இருப்பதனால், மற்றத் தொழில்களில் இருந்துவரும் தொழிலாளர்கள் பல நன்மைகளை அடைந்துவரு கின்றனர் என்பதை நாம் மறுக்கமுடியாது. உழைப்பைக் குறைக் கின்ற புத்தாக்கங்களின் சரித்திரத்தை உற்றுநோக்குவோமே யானால், தொழிலாளர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தியதன் மூலமும், உழைப்பைச் சலிப்பற்றதாக மாற்றியதன்மூலமும், அவை கள் எவ்வாறு கூலி உயர்வதற்குக் காரணமாக இருந்திருக்கின்றன என்பது நன்கு புலனாகும். உழைப்பிற்கு நன்மைபயப்பதாக அவை இருந்திருக்கின்றபோதிலும், முதலுக்கு இன்னும் சற்று அதிக நன்மை பயப்பதாக அவை இருந்திருக்கின்றன. உழைப்பின் ஆக் கத்தைவிட முதலின் ஆக்கத்தையே அவை அதிகப்படுத்தி, அதன் மூலம் நாட்டு வருமானத்தில் அதன் பங்கை அதிகப்படுத்தியிருக்

கின்றன.[1] புத்தாக்கங்கள் எல்லா வகுப்புத் தொழிலாளர்களுக்கும் ஒரே அளவான நன்மையையும் தீமையையும் கொடுப்பதாக இல்லை என்பதை இங்கே நாம் கவனிக்கவேண்டும். உதாரணமாக, ஒரு புத்தாக்கம் திறமையைச் சிக்கனப்படுத்துவதாகவோ அல்லது கடின வேலையைக் குறைப்பதாகவோ இருக்கலாம். புத்தாக்கம் திறமையைச் சிக்கனப்படுத்துவதாக இருந்து, கைத்தறி நெசவைப் போன்ற ஒரு நல்ல கைத்தொழிலைப் பாதிப்பதாக இருக்குமானால், அதனால் திறமைமிக்க தொழிலாளர்களின் சம்பாத்தியம் குறைந்து விடும். அப் புத்தாக்கம் கடின உழைப்பைக் குறைப்பதாயிருந்து, உடலுழைப்பைச் சிக்கனப்படுத்துவதாக இருக்குமானால், அதனால் திறமையற்ற தொழிலாளர்களின் சம்பாத்தியம் குறைந்துவிடும். இவ்விரு நேரங்களிலும் எந்திரங்கள் ஆளப்படுவனவாக இருப்பதனால், எந்திரங்களை இயக்குவோர் ஓரளவிற்கு நன்மை பெறுவர்.

சில புத்தாக்கங்கள் உழைப்பைக் குறைப்பனவாக இல்லாமல், முதலையோ அல்லது நிலத்தையோ குறைப்பனவாக இருக்கின்றன. தொலைபேசி மூலமாகவோ அல்லது கடலடித் தந்தி (cable) மூலமாகவோ தொடர்புகொள்வதற்குக் குறைந்த முதலே தேவைப்படுகிறது. பாதாளப் புகைவண்டிச் சாதனத்திற்குத் தேவைப்படும் முதலைவிடக் குறைவான முதலே நகரப் போக்குவரத்தில் காணப்படும் பஸ்ஸிற்குத் தேவைப்படுகிறது. நிலத்தின் வளத்தை அதிகப்படுத்துகின்ற ஒரு புதிய இரசாயன உரம், நிலத்தைச் சிக்கனப்படுத்துவதாக இருக்கிறது. வானளாவிய கட்டடங்களைக் கட்டுவதன்மூலம் நகரத்தில் காணப்படும் மனைகள் (sites) சிக்கனப்படுத்தப்படுகின்றன. உழைப்பைக் குறைக்கும் புத்தாக்கங்கள் உண்மைக் கூலிகளை உயர்த்துவதைப்போன்று, இப்புத்தாக்கங்கள், முதல், நிலம் ஆகியவைகளின் மொத்த சம்பாத்தியங்களை அதிகப்படுத்துகின்றன என்றாலும், நாட்டு வருமானத்தில் முதலின் பங்கையும் நிலத்தின் பங்கையும் குறைத்துவிடுவனவாக இருக்கின்றன. ஏனென்றால், இது கடந்த இருநூறு ஆண்டுகளில், வேறு எந்தக் காரணியின் விலையையும்விட, உழைப்பின் விலையே அதிகமாக உயர்ந்துவந்திருக்கிறது. அதோடு புத்தாக்கங்கள் பெரும்பாலும் உழைப்பைக் குறைப்பனவாகவே இருந்துவந்திருக்கின்றன. முதலையும் நிலத்தையும் சிக்கனப்படுத்தும் புத்தாக்கங்கள் அவ்வளவு முக்கியமானவையாகக் கொள்ளப்படவில்லை. மொத்தத்தில் பார்த்தால், உழைப்பைவிடச் சொத்திற்கே புத்தாக்கம்

[1] உதாரணமாக, நாட்டு வருமானம், உழைப்பிற்கும் முதலுக்குமிடையே 55: 45 என்ற வீதத்தில் பிரிக்கப்படுவதாக இருக்கும்போது, உழைப்பைக்குறைக்கின்ற புத்தாக்கங்கள் நாட்டு வருமானத்தை 20 சதவீதம் அதிகப்படுத்துவதாக இருக்குமானால், இந்தப் புதிய வருமானம் உழைப்பிற்கும் முதலுக்குமிடையே 60: 60 என்ற வீதத்தில் பிரிக்கப்படவேண்டி யிருக்கும்.

மிகவும் பயனுள்ளதாக இருந்துவந்திருக்கிறது என்பதை நம்மால் மறுக்கமுடியாது. கூலியைவிடச் சொத்தின் வருமானத்தை உயர்த்தவே அது பெரிதும் பாடுபட்டுவந்திருக்கிறது.[1]

## சர்வாதீனமும் வேலையின்மையும்

**சர்வாதீனமும் கூலியும்**

இந்த அத்தியாயம் முழுவதும்நிறைவுப்போட்டி நிலவிவருவதாக எடுத்துக்கொண்டோம். தற்போது அந்த எடுகோளைச் சற்றுத் தளர்த்திவைப்போம். வேலையளிப்போர்கள், உழைப்பு, நிலம், முதல் ஆகியவைகளை அதிகம் பெறவேண்டும் என்று போட்டியிட்டுக்கொள்ளும்போது, அவ்வாறு போட்டியிட்டுக்கொள்வதனுல் இக் காரணிகளின் விலைகளில் ஏற்படும் மாறுதல்களைப்பற்றி சிந்திக்கச்செய்வர். எதை எடுத்துக்கொள்வது, என்ன விலை தருவது என்பவைகளைத் தீர்மானிக்க முயலும்போது, பணம் தகுந்த வழியில் செலவழிக்கப்படவேண்டும் என்பதில் கவனமாயிருக்கின்றனர். தனிப்பட்ட தொழிலாளர்களோடு பேரம்செய்து, அதன்மூலம் கூலிமட்டத்தை நிர்ணயிக்கும் முயற்சியில் அவர்கள் ஈடுபடுவதில்லை. பெரும்பாலான தொழில்களில், வேலையளிப்போர் சங்கங்களுக்கும்,தொழிலாளர் சங்கங்களுக்குமிடையே செய்யப்படும் கூட்டு பேரம் (collective bargaining) வாயிலாகவே கூலி நிர்ணயிக்கப்படுகிறது. ஒருசில வேலைகளில் நேர்முகப் பேச்சுவார்த்தைமூலமாகவும், இன்னும் சில வேலைகளில் நடுவர் தீர்ப்புக்கு விடுவதன்மூலமாகவும் கூலி நிர்ணயிக்கப்படுவதுண்டு. சமரச உடன்பாடு செய்துகொள்வதன்மூலமாகவும் கூலி நிர்ணயிக்கப்படுவதுண்டு.

கூட்டு பேரம் எந்த உருவில் அமைவதாக இருந்தாலும், அதில் சர்வாதீன சக்தியானது இருதரப்பினராலும் காட்டப்படுவதாக இருக்கிறது. இதனுல் ஏற்படுகின்ற விளைவை, போட்டி மாற்றியமைக்க முயலுகிறது. எனினும், போட்டி தன் முழுச் சக்தியைப் பிரயோகப்படுத்துவதென்பது இங்கே முடியாமற்போகிறது. அதிகபட்சமாக எவ்வளவு கூலியை வேலையளிப்போர்கள் தர முடியும் என்பது அவர்களுக்கிருக்கின்ற மாற்றுவழிகளைப் பொறுத்திருக்கின்றது. குறைந்தபட்சமாக எவ்வளவு கூலியை உற்பத்திக்

[1] ஒரு புத்தாக்கத்தினுல், ஒருசில தொழிலாளர்கள் நன்மையும், வேறு சில தொழிலாளர்கள் தீமையும் பெறுவதைப்போன்று, ஒருசில சொத்துக்காரர்கள் நன்மையும், வேறுசில சொத்துக்காரர்கள் தீமையும் பெறுகின்றனர் என்பது சொல்லாமலே புரியக்கூடும். எவர்களின் சொத்துகள் பயனற்றனவாக ஆகின்றனவோ, அவர்கள் இழப்புப் பெறுகின்றனர். புதிய எந்திரங்களை வைத்திருப்பவர்களோ அல்லது அவைகளின் பண்டங்களை உபயோகித்துவருபவர்களோ நன்மை பெறுகின்றனர்.

காரணிகள் வாங்கிக்கொள்ளமுடியும் என்பதும் அவைகளுக்கிருக்கின்ற மாற்றுவழிகளைப் பொறுத்திருக்கின்றது. போட்டியின் தரத்திற்கேற்ப, இம் மாற்றுவழிகள் மாறுவனவாக இருக்கின்றன. நிறைவுப் போட்டியின்கீழ், எந்த ஒரு வேலையளிப்போனும், உழைப்பின் இறுதிநிலை ஆக்க மதிப்புக்கு அதிகமான கூலியைத் தருவதாக இல்லை. ஏனெனில், கூலியானது இறுதிநிலை ஆக்கத்திற்கு அதிகமாக இருக்குமானால், உழைப்பாளிகளை வேலையை விட்டுநீக்கிவிடுவது இலாபத்தை அதிகப்படுத்துவதாகஇருக்கிறது[1]. எந்த ஓர் உழைப்பாளியும், தனது இறுதிநிலை ஆக்க மதிப்புக்குக் குறைந்த கூலியை ஏற்றுக்கொள்வதாக இல்லை. தனது இறுதிநிலை ஆக்க மதிப்புக்குக் குறைந்த கூலியை ஒரு வேலையளிப்போன் தருவானேயானால், அவனைவிட்டு உழைப்பாளி அதிகக் கூலி கிடைக்கின்ற மற்றோர் இடத்திற்குச் சென்றுவிடுவான். அவ்வாறு அவன் செல்ல எத்தனிக்கும்போது, முன்பு ஒவ்வொரு தொழிலாளிக்கும், வேலையளிப்போனுக்குமிடையே செய்யப்பட்டுவந்த தனியார் பேரத்திற்குப் பதிலாகத் தற்போது கூட்டு பேரம் செய்யப்படத் துவங்கும். அப்போது மாற்றுவழிகள் மாறுதலடைகின்றன. இப்போதுகூட, வேலையளிப்போர்களால் தரக்கூடிய ஓர் உயர்ந்த பட்ச கூலி இருக்கிறது. உழைப்பாளி வேறிடத்திற்குச் சென்றுவிட்டால், அதனால் வேலையளிப்போனுக்கு ஏற்படுகின்ற இழப்புக்கு இக் கூலி சமமாக இருக்கும்.

[1] இக் கூலித்தொகை, இருவிதக் காரணங்களால், இறுதிநிலை ஆக்க மதிப்புக்குக் குறைவாக இருக்கும்.

முதலாவதாக, வேலையளிப்போர்கள் தங்களது உற்பத்தியை நிறைவுப் போட்டி நிலவுகின்ற சூழ்நிலைகளில் விற்றுவருவதாக இல்லை. ஒரு தொழிலாளியை இழக்கும்போதோ அல்லது வேலையைவிட்டு நீக்கும்போதோ, வேலையளிப்போர்கள், இறுதிநிலை ஆக்கத்தை இறுதிநிலை வருவாயால் பெருக்கி வருகின்ற தொகையையே இழக்கின்றனரே தவிர, இறுதிநிலை ஆக்கத்தை விலையால் பெருக்கி வருகின்ற தொகையை அன்று. மாறுமலிருக்கின்ற விலைகளில் கூடுதலான விற்பனைகள் செய்யப்படுவதாகவும், ஓர் அதிகப்படியான தொழிலாளியின் உற்பத்தி (வாரம் ஒன்றிற்கு) 10 பவுன்கள் மதிப்புடையதாக இருப்பதாகவும் எடுத்துக்கொள்வோம். அப்போது விலைகள் குறைக்கப்படவேண்டியனவாக இருக்குமானால், வேலையளிப்போனுக்குக் கிடைக்கக்கூடிய நிகர வருமானம் 10 பவுன்களுக்குக் குறைவாக இருக்கும். ஆகவே, அங்காடி எந்த அளவிற்கு நிறைகுறைவாக இருக்கிறதோ, அந்த அளவிற்கு உழைப்பின் தேவை விலை அதன் இறுதிநிலை ஆக்கத்திற்குக் குறைவாக இருக்கும். இதனால் உழைப்பை எடுத்துக்கொள்வது குறைக்கப்படும்.

இரண்டாவதாக, நிறைவுப் போட்டி நிலவுகின்றபோதுகூட, உழைப்பை அதிகப்படியாக எடுத்துக்கொள்வது கூலியை அதிகப்படுத்துவதாக இருக்குமானால், உழைப்பின் தேவை விலையைச் சற்றுக் குறைக்கவேண்டும் என்று வேலையளிப்போர்கள் கருதுவர். உழைப்பின் இறுதிநிலை ஆக்க மதிப்பு 12 பவுன்களாக இருக்குமானால், வேலையளிப்போர்கள், தொழிலாளர்களுக்குத் தலா 10 பவுன்களைக் கூலியாகக் கொடுத்துவருவர். அதோடு, தொழிலாளர்களை அதிகமாக எடுத்துக்கொள்வதை அவர்கள் தவிர்க்கின்றனர். காரணம், தொழிலாளர்களை அதிகமாக எடுத்துக்கொண்டால், புதிய தொழிலாளர்களின் கூலியும், பழைய தொழிலாளர்களின் கூலியும் ஏறும் என்று அவர்கள் கருதுகின்றனர். மற்ற வேலையளிப்போர்களோடு ஒத்துப்போகவேண்டும் என்பதற்காகவும் இவர்கள் அவ்வாறு தொழிலாளர்களின் எண்ணிக்கையைக் குறைத்துக்கொள்வதாக இருக்கலாம்.

தொழிலாளர்களால் ஏற்றுக்கொள்ளப்படக்கூடிய ஒரு குறைந்த பட்சக் கூலியும் இருக்கிறது; மற்றொரு தொழிலில் அவர்களால் சம்பாதிக்கப்படக்கூடிய தொகையிலிருந்து, தொழிலை மாற்றுவதற் வதற்காகும் செலவைக் கழித்து வருகின்ற தொகையே இது. ஆனால், வேலையளிப்போர்களின் தேவை விலைக்கும், உழைப்பாளி களின் அளிப்புவிலைக்குமிடையே பல்வேறான கூலிமட்டங்கள் காணப்படுகின்றன என்பதை நாம் கருத்தில் கொள்ளவேண்டும். இவைகளில், எது தொழிலாளர்களுக்குக் கொடுக்கப்படவேண்டும் என்பதைப் பேர சக்தி முடிவுசெய்யும்.

கூலி சம்பந்தப்பட்ட பூசல்கள் எவ்வாறு கூலியை ஏற்றவோ அல்லது இறக்கவோ செய்கின்றன என்பதை அடுத்த அத்தியாயத் தில் காண்போம். தற்போது, முக்கியமான மற்றொன்றைக் கவனிப்போம்.

**சர்வாதீனமும் முதலின் சம்பாத்தியமும்**

உழைப்பின் சம்பாத்தியத்தைப்போன்று முதலின் சம்பாத் தியம் நிறைவுப் போட்டியால் நிர்ணயிக்கப்படுவதாக இல்லை. ஒரு நிறுவனத்திற்கு அதன் நிர்வாகிகளின் உதவியினால், சுலபத்தில் முதல் கிடைக்கக்கூடியதாக இருக்கிறது. ஆனால், மற்றொரு நிறுவனமோ தன் இலாபத்தை வைத்தே தொழிலை அபிவிருத்தி செய்யவேண்டி யிருக்கிறது. ஒரே நிர்வாகத்தின்கீழ் பல நிறுவனங்கள் காணப்படுவதாலும், ஹோல்டிங் கம்பெனிகளுக்குப் (Holding Companies) பல கிளைகள் இருப்பதாலும், பல்வேறு காரணங்களுக்காக ஒரு நிறுவனம் மற்றொரு நிறுவனத்தோடு நெருங்கிய உறவுகொண்டிருப்பதாலும், முதல் அங்காடியில் (Capital Market) பல அரை சர்வாதீனக் (semi-monoplistic) கூட்டுகள் காணப்படுவனவாக இருக்கின்றன. நிற்க, முதல் குறை வாக இருக்கின்ற நாடுகளில் ஒருசில நிதி அமைப்புகள் (Financial institutions) மட்டுமே காணப்படுவனவாக இருக்கலாம். இவைகளின் வாயிலாகவே சேமிப்புகள் மூலதனம் செய்யப்பட வேண்டியவனவாக இருக்கலாம். ஆகவே, இந்த அமைப்புகள் மிகவும் சக்தி வாய்ந்தவையாக இருக்கும். இவைகள் தங்களது முதலைக் கடனாகத் தருவதற்கு மிகவும் அதிகமான வட்டிவீதங்களை வசூலிப்பனவாக இருக்கும். செலவைச் சரிக்கட்டுவதற்காக மற்றொரு பாங்கினால் வசூலிக்கப்படும் வட்டிவீதத்திற்கும், இதற்கும் நிறைய வித்தியாசங்கள் இருக்கும். இங்கிலாந்தில், முதல் அதிக அளவில் கிடைப்பதாக இருப்பதனால், பாங்குகளின் ஆதிக்கமும் மற்ற நிதி அமைப்புகளின் ஆதிக்கமும் குறைவாக இருக்கின்றன. ஆனால், பின்தங்கிய நாடுகளில் இந்த பாங்குகளின் ஆதிக்கம் கொடிகட்டிப் பறக்கிறது.

**வேலையின்மை**

வேலையின்மைபற்றிய கருத்து, பெரும்பாலும் இறுதிநிலை ஆக்கக் கோட்பாட்டிலிருந்து தன் வடிவத்தைப் பெறுகிறது. உற்பத்திக் காரணிகள் அனைத்தும் வேலைக்கு எடுத்துக்கொள்ளப் படுகின்றன என்பதாகவும், இவ்வாறுன ஒரு வேலை நிறைவை ஏற்படுத்துவதுபோல் அவைகளின் ஊதியங்கள் அமைகின்றன என்பதாகவும், இறுதிநிலை ஆக்கக் கோட்பாடு எடுத்துக்கொள் கிறது. ஆனால், நடைமுறையில், இவைகளின் சம்பாத்தியங்கள் ஒரே சீராக இருந்து, அவைகளின் வேலைமட்டுமே மாறுதலுக் குள்ளாவதாக இருக்குமானால், இக் கோட்பாடு, பிரச்சினையைத் தவறுன கோணத்திலிருந்து பார்க்கிறது என்று அர்த்தமாகும். ஆகவே, வேறொரு வழியில் பிரச்சினையை ஆராயவேண்டியது அவசியமாகிறது.

நெடுங்காலத்தில், சம்பாத்திய வீதங்கள் உற்பத்திக் காரணி களின் அளிப்புக்கும் தேவைக்கும் சமநிலை ஏற்படுத்தும் என்பதில் சந்தேகமில்லை. வேலையின்மை இருக்காது என்ற எடுகோளை எடுத்துக்கொள்வதனுல், இக் கோட்பாடு அறவே பயனற்றதாகி விடுவதில்லை. அளிப்பு அல்லது தேவையில் ஏற்படும் மாறுதலுக் கேற்ப உற்பத்திக்காரணிகளின் சம்பாத்தியங்கள் எவ்வாறு மாறுத லடைகின்றன என்பதை அறிந்துகொள்வதற்கு இக் கோட்பாடு உதவிபுரிகிறது. ஆனுல், குறுகிய காலத்தில், வேலை நிலவரத்தில் மாறுதல்கள் நிகழ்வதற்கும், கட்டாய வேலையின்மை (involuntary unemployment) தொடர்ந்து காணப்பெறுவதற்கும் காரணமாயிருப் பவைகள் யாவை என்பது கண்டுபிடிக்கப்படவேண்டியிருக்கிறது. அதோடு, வருமானப்பகிர்வை மாற்றியமைப்பதற்கு அவைகளிடம் உள்ள வல்லமைபற்றிய விளக்கத்திற்கு, பொதுக் கோட்பாட்டில் (general theory) இடம் ஒதுக்கித் தரப்படவேண்டும்.

பகிர்வுக் கோட்பாட்டை மேலும் விவரித்து, வேலை நிலவரத் தில் ஏற்படும் மாறுதல்களுக்கான காரணங்களை இங்கே விளக்குவ தென்பது இயலாது. ஆனுல், இறுதிநிலைக் கோட்பாடு தகுந்த கோணத்திலிருந்து பார்க்கப்படாவிட்டால், எவ்வாறு ஒரு தவறுன முடிவிற்கு நம்மை இழுத்துச்செல்லும் என்பதைச் சுட்டிக் காட்டுவது அவசியமாகிறது. கூலி வீதங்கள் குறைந்தால், வேலை வாய்ப்புகள் பெருகும் என்று இக் கோட்பாடு சொல்லுவதாகத் தோன்றலாம். ஆனுல், உண்மைக் கூலி வீதங்கள் (real wage rates) குறைந்தால்மட்டுமேதான் வேலைவாய்ப்புகள் பெருகுவனவாக இருக்கின்றன. பணக்கூலிகள் குறைந்தால், வாழ்க்கைச் செலவு அநேகமாகக் குறைவதாக இருக்கும். ஆனுல், உண்மைக் கூலி

யானது, முன்பு இருந்ததைப் போலவேதானிருக்கும். உண்மைக் கூலியைக் குறைப்பதென்பது, நாம் சாதாரணமாக நினைப்பதைப் போன்று அவ்வளவு எளிதான ஒன்று அன்று. ஆகவே, பணக் கூலிகளைக் குறைப்பதன்மூலம் வேலையின்மையை நீக்கிவிடமுடியும் என்பது மிகவும் சிரமமே.

**சுருக்கம்**

இந்த அத்தியாயத்தின் கருப்பொருள், கற்பனையின் துணை கொண்டு விளக்கப்பட்டிருக்கிறது என்பது உண்மையே. ஆனால், பகிர்வுப் பிரச்சினையானது, மிகவும் சிக்கலான ஒரு பிரச்சினை யாகும். எனவேதான், படிப்படியாக அதை நாம் ஆராய முயன் றிருக்கிறோம். முதன்முதலில் போட்டியின் போக்கினை ஆராய்ந் தோம். சர்வாதீனம், வேலையின்மை ஆகியவைகளின் இடையீடு களைத் தள்ளிவைத்துப் பார்க்கும்போது, உற்பத்திக் காரணி களிடையே நாட்டு வருமானத்தைப் பகிர்வுசெய்வது என்பது, காரணிகளின் தராதர அருமைத்தன்மையையும் (relative scarcity), அவைகளின் இறுதிநிலை ஆக்கத்தையும் பொறுத்திருக்கிறது என்பது புலனாகிறது. உழைப்பின் அளிப்பும், முதலின் அளிப்பும், உழைப்பிற்கும் சிக்கனத்திற்கும் நம்மிடமுள்ள இறுதிநிலை விருப்பத் தராதரத்தைப் பொறுத்திருக்கின்றது. நிலத்தின் அளிப்பு இயற்கை யால் நிர்ணயிக்கப்படுகின்றது. காரணிகள் எந்த வீதங்களில் கலவை செய்யப்படவேண்டும் என்பதை வேலையளிப்போர்கள் தீர்மானிக்கின்றனர். வேலையளிப்போர்கள் காரணிகளை வேலைக்கு எடுத்துக்கொள்ளும்போது, பதிலீட்டு விதியையும் குறைந்துசெல் இறுதிநிலை ஆக்க விதியையும் கவனத்திற்கு எடுத்துக்கொண்டு, ஒரு காரணியின் இறுதிநிலை ஆக்கம், அக் காரணியின் விலை அல்லது சம்பாத்தியத்திற்குச் சமமாக இருக்கின்றவரை, அக் காரணியை எடுத்துக்கொள்ளுகின்றனர். ஒரு காரணியின் ஊதிய மானது அக் காரணியின் அளிப்பு விலையால் நிர்ணயிக்கப்பட்ட கீழ் வரம்பிற்கும், வேலையளிப்போர்களால் நிர்ணயிக்கப்பட்ட மேல் வரம்பிற்குமிடையே காணப்படுகிறது. அஃது எந்த இடத்தில் இருக்கும் என்பதைத் திட்டவட்டமாகச் சொல்லமுடியாததற்குக் காரணம், நிறைவுப்போட்டி நிலவவில்லை என்ற எடுகோளை நாம் எடுத்துக்கொள்வதேயாகும்.

# 23. கூலி

## (1) கூலியும் போட்டியும்

கூலிக் கோட்பாடு இரு முக்கியப் பிரச்சினைகளை ஆராய்கிறது. அவையாவன: பொதுவான கூலிமட்டத்தையும் நாட்டு உற்பத்தியில் உழைப்பின் பங்கையும் நிர்ணயிப்பது எது? இடத்திற்கு இடம், துறைக்குத் துறை கூலி வேறுபட்டுக் காணப்படுவதற்கான காரணம் என்ன? முதல் பிரச்சினையைப்பற்றி இதற்கு முந்திய அத்தியாயத்தில் ஆராய்ந்தோம். அவ்வாறு ஆராய்ந்தபோது, கூலி சம்பாத்தியக்காரர்கள் அனைவரும் ஒரேவித சம்பாத்தியமும், பயிற்சியும், திறமையும் பெற்றிருக்கிறார்கள் என்றும், ஆகவே, எந்த ஒரு வேலையளிப்போனும் ஒரு தொழிலாளிக்குக் கூடுதலான கூலியையும், மற்றொரு தொழிலாளிக்குக் குறைவான கூலியையும் தருவதாக இல்லை என்றும் எடுத்துக் கொண்டோம். அடுத்து, கூலி சம்பாத்தியக்காரர்கள் அனைவரும், ஒரேவித குணமும் விருப்பமும் பெற்றிருப்பதோடல்லாது, ஒரேவித வேலைச் சூழ்நிலைகளில் பணியாற்றிவருவதால், எந்த ஒரு தொழிலாளியும் ஒரு குறிப்பிட்ட வேலையைச் செய்ய அதிகமான கூலியையோ அல்லது மற்றொரு வேலையைச் செய்யக் குறைவான கூலியையோ கேட்பதாக இல்லை என்றும் எடுத்துக்கொண்டோம். இவை காணப்படுகின்ற சூழ்நிலைகளில், போட்டியானது, பொதுவான கூலிமட்டத்தை உழைப்பின் இறுதிநிலை ஆக்கத்தின் மதிப்புக்குச் சமமாக இருக்கவைக்கிறது என்று சென்ற அத்தியாயத்தில் கண்டோம்.

இவ் எடுகோள்களை நாம் விட்டுவிட்டால், இரண்டாவது பிரச்சினை நம் முன்னே எழுகிறது. தொழிலாளர்கள் அனைவரும் ஆற்றலிலும், பயிற்சியிலும், திறமையிலும் வேறுபட்டுக் காணப்படுகின்றனர்; ஆகவே, அவர்களிடையே கூலி வேறுபாடுகள் காணப்படுகின்றன. ஒரேவிதத் திறமை பெற்றிருக்கும் தொழிலாளர்

களிடையேகூடக் கூலி வேறுபாடுகள் காணப்படுகின்றன. இதற்குக் காரணம் என்ன? எத் துறைக்கும் செல்கின்ற உரிமையுள்ள தொழிலாளர்கள் ஓர் இடத்தில் குறைவான கூலி பெறுவதை விட்டு, மற்றோர் இடத்திற்குச் சென்று அதிகக் கூலி பெறுவதற்கானவற்றைச் செய்யாதிருப்பதேன்? ஓரேவித வேலைக்குத் தரப்படும் கூலி தொழிலுக்குத் தொழில், மாநிலத்திற்கு மாநிலம் மாறிக் காணப்படுவதேன்?

**கூலியில் படுகிடை (Horizontal) வேறுபாடுகள்**

ஆற்றலிலும், பயிற்சியிலும், திறமையிலும் தொழிலாளர்கள் ஓரேவிதமாயிருக்கும்போது, அவர்களிடையே கூலி வேறுபாடுகள் காணப்படுவதற்கான காரணத்தை முதலில் ஆராய்வோம். அவர்கள் ஒரே மாதிரியாக இருக்கும்போது அவர்களது கூலியில் வேறுபாடுகள் காணப்படுமானால், அவைகள் 'படுகிடை வேறுபாடுகள்' என வழங்கப்பெறும். இவ் வேறுபாடுகளுக்கு ஒரு காரணம் வாரக் கூலி தரப்படுவதாகும். இஃது ஒருசில வேலைகளில் 'பெயரளவுக் கூலி' (Nominal wage) என வழங்கப்படுகிறது. ஆனால், எந்த ஒரு தொழிலிலும் தரப்படுகின்ற பெயரளவுக் கூலியானது, அத் தொழிலில் தொழிலாளர்களால் சம்பாதிக்கப்படக் கூடிய சராசரிக் கூலித்தொகைக்குக் கூடுதலாகவோ அல்லது குறைவாகவோ இருக்கலாம். பணக்கூலியோ அல்லது நிலக்கரியோ அல்லது உருளைக் கிழங்குகளோ அல்லது வீடுகளோ தொழிலாளர்களுக்கு இலவசமாகக் கொடுக்கப்படலாம். குறிப்பாக, விவசாயத் தொழிலாளிகளின் சம்பாத்தியத்தில் முக்கிய அங்கம் வகிக்கின்ற இப் பொருள்கள், தொழிலாளர்களின் 'உண்மைக் கூலியில்' இடம்பெறுகின்றன. தொழிலாளர்களின் கடமைகளில் ஒன்றாக இருக்கின்ற சீருடை அணிதல், பயணம் செய்தல் முதலியவைகளுக்காகின்ற செலவுத்தொகையை நாம் 'பெயரளவுக் கூலி'யிலிருந்து கழிக்கவேண்டியிருக்கிறது. அதிக நேர வேலையோ குறைந்த நேர வேலையோ அல்லது வேலையின்மையோ தொழிலின் சாதாரண அம்சமாயிருந்தாலும், பெயரளவுக் கூலி உண்மைக் கூலியிலிருந்து வேறுபட்டுக் காணப்படும். கொத்தனும் தபால்காரனும் ஒரே அளவான பெயரளவுக் கூலி பெற்றுவருவதாயிருந்தாலும், கொத்தனைவிடத் தபால்காரன் அதிக நன்மை பெற்றுவருபவனாக இருக்கிறான். ஏனெனில், அவனது தொழில் ஒரே சீரானதாயிருக்கிறது; கொத்தனது தொழிலோ சீதோஷ்ணநிலை சரியில்லையென்றால், அடிக்கடி பாதிக்கப்படக் கூடியதாக இருக்கிறது. வேலையின்மையைப் பொறுத்தவரை, அடிக்கடி மந்த நிலைக்குள்ளாவதாயிருக்கின்ற கப்பல் கட்டும் தொழிலைப்போன்ற ஒரு தொழில், தொழிலாளர்களுக்குக் கிடைக்கக்

கூடிய உண்மைக் கூலி ஓரளவிற்கு உயர்வதற்கு முன்னல், (உண்மைக்) கூலியை மிக அதிகமாகக் கொடுக்கவேண்டிய நிலேயி லிருக்கின்றது. பெயரளவுக் கூலிக்கும் உண்மைக் கூலிக்குமுள்ள கடைசி வேறுபாடு என்னவென்ருல், பெயரளவுக் கூலியானது பணமாகத் தரப்படுகிறது; ஆனல், உண்மைக் கூலியோ, பொருள் களாகவும் பணிகளாகவும் தரப்படுகிறது. ஆகவே, வாரம் ஒன்றிற்கு, லண்டனிலுள்ள ஒரு காரோட்டி பத்துப் பவுன்களும், கிளாஸ்கோவிலுள்ள ஒரு காரோட்டி ஏழு பவுன்களும் பெற்று வருவதாயிருந்தால், கூலிமட்டம் கிளாஸ்கோவிலிருப்பதைவிட லண்டனில் உயர்வாக இருக்கிறது என்ற முடிவிற்கு நாம் உடனே வந்துவிடக்கூடாது. ஏனெனில், கிளாஸ்கோவில் எது ஏழு பவுன் களுக்கு வாங்கப்படுகிறதோ, அதுவே லண்டனில் பத்துப் பவுன் களுக்கு வாங்கப்படுவதாக இருக்கலாம். எனவே, தொழிலுக்குத் தொழில், இடத்திற்கு இடம் பெயரளவுக் கூலி மாறிக் காணப்படுவ தாக இருந்தாலும், அதனல் வாங்கப்படுகின்ற பொருள்களின் அளவு இடத்திற்கு இடம் மாறிக் காணப்படவேண்டும் என்ற அவசியம் இல்லே. அஃதாவது, உண்மைக் கூலி ஒரே அளவில் இருப்பதாகக் காணப்படலாம்.

நிகர நன்மைகள் (Net advantages): ஒரு குறிப்பிட்ட இடத்திலோ அல்லது தொழிலிலோ குறைந்த கூலி பெற்றுவருவதைத் தொழி லாளர்கள் விரும்புவதாக இருக்கலாம். ஏனெனில், அவ்விடத்தில் அல்லது தொழிலில் வேலே செய்வது, அதிகக் கூலி கிடைக்கின்ற மற்ருேர் இடத்திலோ அல்லது தொழிலிலோ வேலே செய்வதைவிட அதிக நன்மை பயப்பதாக இருக்கலாம். உதாரணமாக, அவ் விடத்தில் கூலி குறைவாயிருக்கின்றதென்ருலும், அதை ஈடுசெய் வதற்கு மற்ருெரு வேலேயைச் செய்வது தொழிலாளிக்கோ அல்லது அவனது குடும்ப அங்கத்தினர்களுக்கோ சுலபமாக இருக்கலாம். ஒரு துணியில் தொழிலாளி, லிங்கனுக்கோ (Lincoln) அல்லது ஷிரியூஸ்பரிக்கோ (Shrewsbury) சென்று அங்கே நல்ல ஊதியம் தருகின்ற ஒரு வேலேயில் அமர்வதைவிட, லங்காஷையரில் குறைந்த ஊதியம் தருகின்ற ஒரு வேலேயில் அமர்வதையே விரும்பு வான். ஏனெனில், லங்காஷையரில், அவனது குடும்பத்திலுள்ள அத்தனே பேர்களுக்கும் வேலே கிடைக்கக்கூடியதாக இருக்கிறது. இதைப்போலவே, சிறு குழந்தைகளே வைத்துக்கொண்டிருக்கின்ற ஒரு தொழிலாளிக்கு விவசாயத் தொழிலே விட்டுவிடுவதற்கு மனம் வருவதில்லே. காரணம், நிலத்தில் அவனுடைய குழந்தைகளுக் கெல்லாம் சுலபத்தில் வேலே கிடைப்பதாக இருக்கிறது. மழைக் காலத்தில் அவனுக்கு ஓய்வுநேரம் நிறைய கிடைப்பதாக இருந்து, அவ்வோய்வு நேரத்தைப் பொம்மைகள் செய்வதில் செலவிடுவது

அவனுக்கு முடியுமென்றால், விவசாயத்தை விட்டுப்போகவே அவனுக்கு மனம் வராது.

வேலையுயர்வும் கூலியுயர்வும் ஏற்படுவதற்கான வாய்ப்புகள் இருக்குமானால், அவை துவக்கத்தில் குறைந்த கூலி பெற்று வருவதை ஈடுசெய்துவிடுகின்றன. ஆகவே, துவக்கநிலையில் குறைந்த கூலி பெற்றுவருவதனால் நாம் பாதிக்கப்படுவதில்லை. ஒரு தொழிலில் 'கிடைக்கக்கூடிய அதிகபட்ச சம்பாத்தியமே நமது கவனத்தை ஈர்க்கிறதே தவிர, அதைப் பெறவேண்டுமென்றால் துவக்கத்தில் குறைந்த கூலி பெறவேண்டியிருக்கிறது என்ற உண்மை அல்ல. முன்னேற விரும்பும் ஓர் இளைஞனுக்கு, ஒரு சராசரி மருத்துவன்—ஒரு சராசரி வழக்கறிஞனைவிட அதிகமாகச் சம்பாதிக்கிறான் என்பதைவிட, மிகச் சிறந்த வழக்கறிஞர்கள், மிகச் சிறந்த மருத்துவர்களைவிட அதிகமாகச் சம்பாதிக்கின்றனர் என்பதே மிகவும் கவர்ச்சியுள்ளதாக இருக்கிறது.

ஓர் உத்தியோகத்தோடு தொடர்புள்ள பல்வேறு வசதிகள், அந்த உத்தியோகத்திற்குக் கவர்ச்சியூட்டுவதோடல்லாது, குறைந்த கூலி பெற்றுவருவதையும் ஈடுசெய்வதாக இருக்கலாம். கூலியோடு வருகின்ற இவ் வசதிகளை, 'பணத்தோடு வருகின்ற நன்மைகள்' என்று நாம் கருதலாம். குறைந்த ஊதியம் தருகின்ற ஒரு வேலையை ஒரு தொழிலாளி ஏற்றுக்கொள்ளலாம்; காரணம், கூலிக்குறைவை ஈடுசெய்கின்ற பல வசதிகளை அவ்வேலையை ஏற்றுக்கொள்வதன்மூலம் அனுபவிப்பது சாத்தியமாக இருக்கிறது. அவ்வேலையானது, தொழிலாளியின் தாய்நாட்டில் செய்யப்பட வேண்டியதாயிருக்கலாம் அல்லது நல்ல காற்றோட்ட வசதியுள்ள தொழிற்சாலையில் செய்யப்படக்கூடியதாக இருக்கலாம் அல்லது உடல்நலத்தை மிகவும் பாதிக்காத ஒரு வேலையாக இருக்கலாம். எனவே, அது தொழிலாளியின் மனத்திற்குகந்ததாக இருக்கிறது. வேலையானது நிரந்தரமானதாகவோ அல்லது நல்ல ஓய்வு தரக் கூடியதாகவோ அல்லது அதிகாரமும் மதிப்புமுடையதாகவோ அல்லது திறமையை வெளிப்படுத்தத் தொழிலாளிக்கு வாய்ப்பு நல்குவதாகவோ இருக்கலாம். இவ்விதக் காரணங்களாலும் ஒரு தொழிலாளி ஒரு வேலையை விரும்புவதாக இருக்கலாம். ஆனால், ஒரு வேலையானது கடினமானதாகவோ (உ-ம். சுரங்கத் தொழில்) அல்லது சிரமம் தரக்கூடியதாகவோ (உ-ம். சாலை செப்பனிடுதல்) அல்லது உயிருக்கு ஆபத்து விளைவிப்பதாகவோ (உ-ம். கப்பலோட்டுதல்)அல்லது வசதியற்ற சூழ்நிலையில் செய்யப்படவேண்டியதாகவோ (உ-ம். இரசாயனப் பொருள்களை உற்பத்தி செய்தல்) இருக்குமானால், அவ்வேலையைத் தொழிலாளி தவிர்க்க விரும்புகிறான். சலிப்புத்தருகின்ற வேலையையும் அவன் விரும்புவதில்லை.

ஒரு வேலைக்குக் கவர்ச்சியூட்டுவது அவ்வேலையை ஏற்பதனால் கிடைக்கப்போகின்ற நிகர நன்மைகளேயன்றிக் கூலியன்று. தொழிலாளர்கள் அனைவரும் ஒரேவிதத் திறமையுள்ளவர்களா யிருந்து, அதோடு ஒரு தொழிலிலிருந்து மற்றொரு தொழிலுக்குச் செல்கின்ற உரிமையும் பெற்றிருக்கின்ற நிலையில்கூட, எல்லா இடங்களிலும் தொழில்களிலும் கூலி ஒரே மட்டத்தில் இருக்குமாறு போட்டி ஏற்படுவதில்லை. ஒவ்வோர் இடத்திலும் தொழிலிலும் சம மட்டத்திலிருப்பது வேலையின் நிகர நன்மைகளேயாகும். ஆனால், உழைப்பின் பெயர்ச்சியைக் கெடுக்கின்ற தடைகள் காணப்படுவ துண்டு. ஆகவே, இந்தத் தடைகளின் காரணமாக அந் நிகர நன்மைகள் சமமட்டத்தில் காணப்படாதுபோகின்றன. இத் தடைகளும், இவைகளால் விளைகின்ற பெயர்ச்சியற்ற உழைப்பும், கூலியானது ஏன் இடத்திற்கு இடம், தொழிலுக்குத் தொழில் வேறு பட்டுக் காணப்படுகிறது என்பதற்கு இரண்டாவது காரணமாக அமைகின்றன.

**இடப்பெயர்ச்சியும் பெயர்ச்சியின்மையும்:** 1921ஆம் ஆண்டிற்குப் பிறகு நிலக்கரிச் சுரங்கத் தொழிலில் காணப்பட்டதைப்போன்று, ஒரு தொழிலில் தொழிலாளர்கள் மிக அதிகமாகக் காணப்படுவார் களேயானால், அத் தொழிலைவிட்டு வேறிடத்திற்கு உடனே செல்வ தென்பது தொழிலாளர்களுக்குச் சாத்தியமாயிருப்பதில்லை. ஒரு தொழிலிலிருந்து மற்றொரு தொழிலுக்குச் செல்வதன்மூலம் சிரமப் பட்டுப் பெற்ற பயிற்சி வீணாகிறது; அதோடு மற்றொரு பயிற்சி பெறக் காலம் வீணாகச் செலவழிக்கப்படுகிறது. ஒரு தொழிலிலிருந்து மற்றொரு தொழிலுக்குச் செல்வது வயோதிகர்களுக்கு மிகவும் சிரம மாக இருக்கிறது. புதிய பயிற்சி பெறுவது அவர்களுக்கு இன்னல் தரக்கூடிய ஒரு செயலாகும். ஆகவே, தொழிலின் மீட்சியின்போது, அவர்கள் அவதிக்குள்ளாகின்றனர். ஒரு குறிப்பிட்ட தொழிலில் மட்டுமே அவர்கள் அனுபவம் பெற்றிருக்கின்றனர்; அத் தொழிலுக் கேற்ப தம் வாழ்க்கைமுறைகளை அவர்கள் ஒழுங்குபடுத்திவந்திருக் கின்றனர். எனவே, அத் தொழிலைவிட்டு வேறு தொழிலுக்குச் செல்ல அவர்கள் மிகவும் தயங்குகின்றனர். அத் தொழில் நசித்துப் போனால்கூட, அவர்கள் வேறு தொழில்களுக்குச் செல்ல முயலுவ தில்லை; ஏனெனில், வேறு தொழில்களில் அவர்களுக்கு வேலை கிடைப்பதற்கான வாய்ப்புகள் குறைவு. இருந்துவந்த தொழிலில் மறுபடியும் நுழையவே அவர்கள் விழைகின்றனர். இளந் தொழி லாளிகளின் அளிப்பு மிகையாக இருந்துகொண்டிருக்கின்றவரை, வேலையளிப்போர்கள் முதியவர்களைப் பழக்கமற்ற புதிய தொழில் களில் ஈடுபடுத்துவதில்லை. இதனால், வேலையை மாற்றிக்கொள்ள வேண்டிய சிரமம் இவ்விளந் தொழிலாளர்களுக்குக் கிடைக்கிறது.

இடப்பெயர்ச்சியைப் பொறுத்தும் இஃது உண்மையாயிருக்கிறது. நாட்டின் ஒரு பகுதி மந்தநிலைக்குள்ளாகுமானால், அப் பகுதியை விட்டு வேறு பகுதிகளுக்கு வேலை தேடி அலைவது முதியவர்களுக் குத் துன்பம் தரக்கூடியதாக இருக்கிறது. குடும்பக் கடமைகள், தொடர்புகள் காரணமாக, ஓரிடத்தில் வேலை செய்வது அவர் களுக்கு அவசியமாகிறது. வேறிடங்களுக்குச் செல்ல முயலும் போது, தங்களது வீடுகளையும் உடைமைகளையும் குறைந்த விலைக்கு கொடுத்துவிட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படலாம். இதை அவர் கள் விரும்புவதில்லை. அதேநேரத்தில், வேலை புதிதாகக் கிடைக்கக் கூடிய இடங்களில், வீட்டை வாங்குவதோ அல்லது வாடகைக்குப் பெறுவதோ அதிகச் சிரமம் கொடுப்பதாக இருக்கலாம். ஒரு மாநிலத்திலிருந்து மற்றொரு மாநிலத்திற்குக் குடும்பத்தை அழைத் துச் செல்வதற்காகின்ற மாற்றுச்செலவேகூட, ஒரு தொழிலாளியை நல்ல ஊதியம் தருகின்ற ஓர் உத்தியோகத்தை உதறித் தள்ளி விடச் செய்யப் போதுமானதாக இருக்கிறது. ஆனால், குடும்பமும் சொத்துமற்ற மற்றொரு தொழிலாளி ஓரிடத்திலிருந்து மற்றோரிடத் திற்குச் செல்ல எப்போதும் தயாராக இருக்கிறான்.

இவ்வாறாக, நசித்துப்போகின்ற தொழில்களிலிருந்து முதியவர் கள் வெளியேறிச் செல்வதைவிட, நல்ல வேலை தேடி இளைஞர்கள் சுற்றிவருவதே பல்வேறு இடங்களிலும், தொழில்களிலும் பகிர்வு செய்யப்பட்டிருக்கும் உழைப்பின் அளவில் மாறுதல்களைச் செய் வதாக இருக்கிறது. இளைஞர்கள் எதையும் விடாப்பிடியாகப் பிடித்துக்கொண்டிருப்பதில்லை. அவர்களைப் பொறுத்தவரை, ஓரிடத் திலிருந்து மற்றோர் இடத்திற்குச் செல்வதிலுள்ள தடைகள் குறைவு. முன்னுக்கு வரவேண்டும் என்ற ஆவல் அவர்களிடம் மலைபோல் கிடக்கிறது. ஆகவே, இளவயதில் காணப்படும் தொழிலாளிகளின் வீதம் எந்த அளவிற்கு அதிகமாயிருக்கிறதோ, அந்த அளவிற்கு உழைப்புப் பெயர்ச்சியும் அதிகமாயிருக்கும். இந்த வீதமானது, கடந்த நாற்பதாண்டுக்காலமாகக் குறைந்துவந்திருப் பதாலும், இன்னும் சில காலத்திற்குக் குறைவது நிச்சயமாக இருப் பதாலும், உழைப்பின் பெயர்ச்சி எதிர்காலத்தில் சற்றுக் குறைவாக இருக்கும் என்பதற்கான அறிகுறிகள் தற்போது காணப்படு கின்றன.

இளந் தொழிலாளர்களின் பெயர்ச்சியேகூட, தற்போது குறை வாகத்தானிருக்கிறது. அவர்களுக்குக் கிடைக்க இருக்கின்ற வேலைகளின் எண்ணிக்கை, குறிப்பாகத் தென் வேல்ஸ் (South Wales) போன்ற மாவட்டங்களிலும், பிராட்ஃபோர்டு (Bradford) போன்ற நகரங்களிலும் குறைவாக இருக்கிறது. விருப்பமுள்ள

வேலைகளை எடுத்துக்கொள்ள அவர்களுக்கிருக்கும் வாய்ப்புகளும் குறைவே. இதற்குக் காரணம் குடும்பச் சூழ்நிலைகள். ஏழ்மையின் காரணமாக, தொழிலாளர் வகுப்புக் குழந்தைகள் கண்ணை மூடிக் கொண்டு கண்ட தொழில்களில் நுழைந்துவிடுகின்றனர்; அல்லது தங்களது பெற்றோர்களும் உறவினர்களும் இருக்கிறார்கள் என்பதற்காகக் குழந்தைகள் ஒரு குறிப்பிட்ட தொழிலில் நுழைவதும் உண்டு. அத் தொழில் அவர்களுக்கு மிகவும் பழக்கப்பட்ட ஒரு தொழிலாக இருக்கலாம். தொழிலானது நசித்துக்கொண்டு இருக்கின்ற போதும், அத் தொழிலிலிருந்து வயோதிகர்கள் வேலையில்லாததன் காரணமாக வெளியேறிக்கொண்டிருக்கின்ற நிலையின்போதுங்கூட, குழந்தைகள் அத் தொழிலில் நுழைய முயலலாம். இவ்வாறு குழந்தைகள் தங்கள் தந்தைகளின் அடிச்சுவட்டைப் பின்பற்றிச் செல்வதற்குக் காரணம், வேறிடங்களிலுள்ள வேலைவாய்ப்புகளைப் பற்றிய விவரங்களை அறியக்கூடாமையேயாகும். கிடைக்கக்கூடிய மாற்று வேலைகளைப்பற்றித் தந்தைக்கோ அல்லது தனயனுக்கோ எதுவுமே தெரிவதில்லை. தன் மகனை வேறொரு தொழிலில் இறங்கச் செய்வதற்குத் தந்தையிடம் பணமோ அல்லது செல்வாக்கோ இருப்பதில்லை. ஆகவே, சிறுவர்களின் உழைப்புப் பெயர்ச்சி குடும்பச் சூழ்நிலைகளின் காரணமாகக் குறைவாகக் காணப்படுகிறது.

ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் செல்லத் தொழிலாளர்கள் விரும்பாததன் காரணமாகப் பெயர்ச்சியின்மை (immobility) விளைவதுண்டு. அறியாமை, நிலையின்மை, ஏழ்மை, குடும்ப பந்தம், சுறுசுறுப்பின்மை முதலியவைகளிலிருந்து பிறப்பதே இவ் விருப்பமின்மை. இவைகளேயன்றி, தொழிலாளர்களின் விருப்பமின்மைக்குச் சில புறக்காரணங்களும் இருக்கக் காண்கின்றோம். பெயர்ந்து செல்வதில் தொழிலாளர்களுக்குப் பல தடைகள் ஏற்படுவதுண்டு. ஓர் அயல் நாட்டில் கூலி உயர்வாக இருக்கிறது என்பதற்காக, ஒரு தொழிலாளி தன் நாட்டைவிட்டு அந்நாட்டிற்குச் சென்றுவிடமுடியாது. ஏனெனில், குடியேற்றத்தைக் கட்டுப்படுத்துகின்ற சட்டங்கள் அவனுக்குக் குறுக்கே நிற்கின்றன. ஒரு நாட்டிற்குள்ளேயேகூட, அநேக இடையூறுகள் பெயர்ச்சியைக் குறைக்கின்றன. தொழில் துறையில் ஒரு வேலையை ஏற்பதற்கு விவசாயத் தொழிலாளி அனுமதி பெறவேண்டியது அவசியமாக இருக்கலாம். இதுபோலவே, ஒரு நாட்டில் பிறந்த ஓர் ஆசிரியர் மற்றொரு நாட்டில் வேலை பெறுவதிலிருந்து தடுக்கப்படலாம்; அல்லது இனம், மொழி, மதம் ஆகியவை காரணமாக ஒரு குறிப்பிட்ட வகுப்பைச் சார்ந்த மக்களுக்குமட்டுமே சில வேலைகள் கொடுக்கப்படுவனவாக இருக்கலாம். சட்டத்தின் வல்லமை இத் தடைகளுக்கு இல்லை

என்பது உண்மையே. என்றாலும், பகைமை, வெறுப்பு, பழக்கம் முதலியவை ஒருசில மக்களுக்குள்ள வேலை வாய்ப்புகளைக் குறைத்துவிடும் வல்லமை பெற்றிருக்கின்றன. சட்டப்படி பார்த்தால், பல தொழில்களில் நுழைவதற்குப் பெண்களுக்கு உரிமை இருக்கிறது; ஆனால், சமீப காலம்வரை அத் தொழில்களில் நுழைவதில் அவர்களுக்குப் பெருந் தடைகள் இருந்திருக்கின்றன. இத் தடைகளை உருவாக்குகின்றவை யாவை? அவை தொழிலாளர் சங்கங்களின் (Trade Union) நடவடிக்கைகளும், தொழிற்சங்கங்களின் (Professional Associations) சட்ட திட்டங்களுமேயாகும். தொழிற் சங்கத்திற்கு ஓர் உதாரணம், பொது மருத்துவர் குழு (General Medical Council). தங்களது சர்வாதீன சக்திகளை அதிகப்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டிருக்கும் இச் சங்கங்கள், தொழிலில் நுழைவதைப் புதிய தொழிலாளர்களுக்கு மிகவும் சிரமமானதாக்கி, அதன் வாயிலாகத் தொழிலில் காணப்படும் தொழிலாளரின் எண்ணிக்கையைக் குறைத்துவிடுகின்றன. இதனால் பெரிதும் பாதிக்கப்படுபவர் பெண்களேயாவர். நுழைவது எளிதாக இருக்கின்ற தொழில்களில்மட்டுமே அவர்கள் நுழையவேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. இதனால், அத் தொழில்களில் தொழிலாளர்களின் நெரிசல் மேலும் அதிகமாகிறது. ஆகவே, பெண்களின் கூலி ஆண்களின் கூலியைவிடக் குறைவாக இருப்பதற்கு ஒரு காரணம், 'பாதுகாக்கப்படும்' தொழில்களில் நுழைந்து, அவைகளின் சர்வாதீன நன்மைகளைப் பெற அவர்களுக்கு வாய்ப்புக் கிடைப்பதில்லை என்பதாகும். இதனால், அவர்கள் நெரிசல் அதிகமாயுள்ள ஒருசில தொழில்களில் நுழைந்து அல்லற்படவேண்டியிருக்கிறது.

**நியாயமற்ற கூலிகள்:** தொழிலாளர்களின் விருப்பமின்மை அல்லது வேண்டுமென்றே கொண்டுவரப்பட்ட தடைகள் காரணமாக எழுகின்ற பெயர்ச்சியின்மையே, வேலையின்மூலம் கிடைக்கின்ற நிகர நன்மைகளை இடத்திற்கு இடம், தொழிலுக்குத் தொழில் மாறிக் காணப்படவைக்கின்றது. ஒரு தொழிலில் உழைப்பு எச்சமாயிருப்பது, அத் தொழிலின் உழைப்பின் இறுதிநிலை ஆக்கப்பாட்டைக் குறைத்துவிடுகிறது. அதேவேளையில், மற்றொரு தொழிலில் காணப்படும் உழைப்பின் பற்றுக்குறை, அத் தொழிலில் உழைப்பின் இறுதிநிலை ஆக்கப்பாட்டை உயர்த்துவதாக இருக்கிறது. ஆகவே, இவ்விரண்டு தொழில்களில் கொடுக்கப்படும் கூலிகள் வெவ்வேறான அளவுகளிலிருக்கும். முதலாவது தொழிலைவிட்டுத் தொழிலாளர்கள் வெளியேறி, இரண்டாவது தொழிலுக்கு வந்து சேர்கின்றவரை இத்தகைய வேறுபாடு தொடர்ந்து காணப்படும். உதாரணமாக, புகைவண்டியில் பிரயாணம் செய்கின்ற மக்களின்தொகை குறையுமானால், புகைவண்டியில் பணியாற்றும் தொழிலாளர்களின் கூலி,

வேறு தொழில்களில் தொழிலாளர்களுக்குக் கிடைத்துவரும் கூலியைவிடக் குறைவாயிருக்கும். இதனால் புகைவண்டிச் சாதனத்தில் வேலை செய்வது கவர்ச்சியற்றதாகப் போகக்கூடும். என்றாலும், தொழிலாளர்கள் அதைவிட்டு வேறு தொழில்களுக்குச் செல்ல முயலுவதில்லை; ஏனெனில், வேறிடங்களில் வேலை கிடைக்கும் என்பது என்ன உறுதி?

வேறு தொழில்களில் கிடைத்துவரும் நிகர நன்மைகளைவிட, புகைவண்டிச் சாதனத்தில் வேலை செய்வதன்மூலம் கிடைக்கின்ற நிகர நன்மைகள் குறைவாகவே இருக்கும். இவ்வாறு ரெயில்வே தொழிலாளர்கள் குறைந்த நிகர நன்மைகளைப் பெற்றுவருவதைப் பார்க்கும்போது, அவர்களுக்கு நியாயமற்ற கூலிகள் தரப்படுகின்றன என்று நாம் ஒருசில வேளைகளில் சொல்லுகின்றோம். அவர்களுக்குத் தரப்படுவது நியாயமற்ற கூலி என்று ஏன் சொல்லுகின்றோம் என்றால், அவர்களது திறமையையொத்த திறமையைப் பெற்றிருக்கும் மற்றத் தொழிலாளர்கள் வேறு தொழில்களில் அவர்கள் பெறுவதைவிட அதிகமான கூலி பெற்றுவருகிறார்கள் என்பதாலேயேயாகும். யுத்தத்திற்கு முன்னர் விவசாயத் தொழிலாளர்களின் கூலிகூட நியாயமற்ற கூலியாகவே இருந்துவந்தது. விவசாயத்தில், தொழிலாளர்களின் எண்ணிக்கை மிகவும் அதிகமாயிருந்தது; விவசாயப் பொருள்களுக்குள்ள தேவையோ குறைவாகவே இருந்தது. உணவுப் பொருள்களைக் குறைந்த விலைகளில் கொடுக்கவேண்டியிருந்தது. விவசாயிகளின் வருமானமும் விவசாயத் தொழிலாளர்களின் வருமானமும், அவர்களால் வேறு தொழில்களில் சம்பாதிக்கக்கூடிய வருமானத்தைவிடக் குறைவாகவே இருந்தன. விவசாயத் தொழிலாளர்கள் அனைவருமே குறைந்த கூலியையே பெற்றுவந்தனர். இவ்வாறாக, விவசாயத்தில் உழைப்பு மிகவும் அதிகமாயிருந்ததன் காரணமாகவே, உழைப்புக்குத் தரப்படும் கூலித்தொகை குறைந்தது. கூலித்தொகை குறைந்ததன் விளைவாக உணவுப் பண்டங்களின் விலைகள் இறங்கின. இதனால் நன்மை பெற்றவர்கள், மற்றத் தொழில்களில் வேலைசெய்துவந்த சகதொழிலாளர்களேயாவர். ஆகவே, விவசாயத்தில் நியாயமற்ற கூலி தரப்படுவதற்குக் காரணமாயிருந்தது விவசாயத் தொழிலாளர்களின் பெயர்ச்சியின்மையேயாகும்.

எதிர்கால உலகத்தில் உழைப்பின் பெயர்ச்சி அதிகமாக இருக்கவேண்டியது அவசியமாகிறது. ஏனெனில், எதிர்காலத்தில் தொழில்நுட்பத்திலும், தொழிலின் போக்கிலும் பலத்த மாறுதல்கள் ஏற்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. அதோடு, தொழிலாளர்கள் மத்தியில் வயோதிகர்களும், பெயர்ச்சிக் குறைவான

தொழிலாளர்களும் மிகுதியாகக் காணப்படுவர் என்றும் நம்பப்படுகிறது. கடந்த முப்பதாண்டுக் காலமாக உற்பத்தி முறைகளில் பல புத்தகங்கள் வியக்கத்தக்க அளவில் தோன்றியிருக்கின்றன; தோன்றிக்கொண்டுமிருக்கின்றன. மாபெருந் தொழில்களெல்லாம் மிகவும் நொடித்துப்போய், ஆங்காங்கே புதிய தொழில்கள் உற்சாகத்தோடு தம் பிஞ்சுக்கரங்களை அசைத்துக்கொண்டிருக்கின்றன. ஆனால், தொழில்களிலும் உற்பத்தி முறைகளிலும் தோன்றியிருக்கின்ற மாறுதல்களுக்கேற்பத் தொழிலாளர்கள் தங்களை மாற்றிக்கொண்டார்களா என்றால், அதுதான் இல்லை. இந்த நிலை இன்னும் ஒரு முப்பதாண்டுக் காலம் தொடர்ந்து காணப்பெறும். ஆகவே, எந்த அளவிற்கு உழைப்பின் பெயர்ச்சியை நாம் அதிகப்படுத்துகிறோமோ, அந்த அளவிற்கு நம்மை நோக்கிப் பல நன்மைகள் காத்துக்கொண்டிருக்கின்றன.

உழைப்பின் பெயர்ச்சியை அதிகப்படுத்த பல வழிகள் உண்டு. வேற்றிடங்களிலுள்ள வேலை வாய்ப்புகளைப்பற்றி விவரம் தருவது, மாற்றுச் செலவை ஈடுசெய்ய மானியம் தருவது, கல்வியும் பயிற்சியும் பெறுவதற்கான வசதிகள் செய்துகொடுப்பதுபோன்ற வழிகளில் உழைப்பின் பெயர்ச்சி அதிகமாகக்கூடும். வேலையைப்பற்றித் தகவல்தரும் ஸ்தாபனமும் வேலை தேடித்தரும் ஸ்தாபனமும், இளைஞர்களுக்கேற்ற வேலைகளைப்பற்றி அவ்வப்போது தகவல் கொடுத்துவரலாம். உழைப்புப் பற்றுக்குறையாக இருக்கின்ற தொழில்களிலுள்ள வேலைகளுக்குச் சில சலுகைகளைக் காட்டுவதன் மூலமும் வேலை தேடித்தரும் ஸ்தாபனத்தால் தொழிலாளர் பெயர்ச்சியை அதிகப்படுத்தமுடியும். ஒரு மாவட்டத்திலிருந்து மற்றொரு மாவட்டத்திற்குச் செல்வதில் தொழிலாளிக்கு ஆகின்ற செலவை ஈடுசெய்யும் வகையில், அவனுக்குப் பணவுதவி அளிக்க உழைப்புத் துறை அமைச்சுக்கு (The Ministry of Labour) அதிகாரம் உண்டு. குறிப்பிட்ட சில தொழில்களில் காணப்படும் உழைப்பின் பற்றுக்குறையைப் போக்குவதற்காகவோ அல்லது வேலை இல்லாமலிருக்கின்ற தொழிலாளர்களுக்கும் வேலைசெய்ய முடியாமலிருக்கின்ற தொழிலாளர்களுக்கும் பயிற்சியளித்து அவர்களைப் புதிய தொழில்களில் ஈடுபடுத்துவதற்காகவும், உழைப்புத்துறை அமைச்சு நாடெங்கணும் அரசினர் பயிற்சிக்கூடங்களை நடத்துவதும் உண்டு.

உழைப்பின் பெயர்ச்சிக்கும் வேலை வாய்ப்புகளுக்கும் தொடர்பு உண்டு. வேலைகளின் எண்ணிக்கை மிகுதியாக இருக்குமானால், ஒரு வேலையிலிருந்து மற்றொரு வேலைக்குச் செல்லவோ அல்லது ஒரு மாவட்டத்திலிருந்து மற்றொரு மாவட்டத்திற்குச் செல்லவோ, மக்கள் எப்போதும் தயாராயிருக்கின்றனர். வேலை நிறைவு

காணப்படுகின்ற சூழ்நிலையில், நிறுவனங்களிடையே காணப்படும் உழைப்பின் பெயர்ச்சி மிகவும் அதிகமாயிருக்கிறது; தொழில்களிடையேயும் மாவட்டங்களிடையேயும் காணப்படும் உழைப்பின் பெயர்ச்சியானது, தொழிலின் மந்த நிலையின்போது காணப்படும் உழைப்பின் பெயர்ச்சியைவிட மிகமிக அதிகமாக இருக்கிறது. வேலைகள் கிடைக்காமலிருக்கின்றபோது உழைப்பின் பெயர்ச்சியை அதிகப்படுத்துவதில் அர்த்தமில்லை. புதிய வேலை கிடைக்கும் என்ற உறுதி இல்லையென்றால், பயிற்சி பெறுவதற்குத் தொழிலாளர்கள் விரும்புவதில்லை. வேறெங்கும் போவதற்கும் அவர்கள் முயலுவதில்லை. தாங்கள் இருக்கின்ற இடத்தில் வேலையில்லாமல் இருந்தாலும், அங்கே இருக்கவே அவர்கள் விரும்புகின்றனர்.

**கூலிகளில் செங்குத்து (Vertical) வேறுபாடுகள்**

ஒரேவித ஆற்றலும், பயிற்சியும், திறமையுமுடைய தொழிலாளர்கள் பெற்றுவரும் கூலிகளில் காணப்படும் படுகிடை வேறுபாடுகளுக்கான காரணம் என்ன என்பதை இதுவரை ஆராய்ந்தோம். ஆனால், கூலிகளில் காணப்படும் வேறுபாடுகளை நாம் கவனிக்க முயலும்போது, தொழிலாளர்களிடையே காணப்படும் ‘படுகிடை’ வேறுபாடுகளைவிட, ‘செங்குத்து’ வேறுபாடுகளே பெரிதும் நமது கவனத்தில் இடம்பெறுகின்றன. நாம் அடிக்கடி வழக்கறிஞர்கள், சினிமா நடிகர்கள், கம்பெனி நிர்வாகிகள் முதலியவர்களை எடுத்துக்கொண்டு, அவர்களின் சம்பாத்தியங்களைக் குமாஸ்தாக்கள், வீட்டு வேலைக்காரப் பெண்கள், சாலை—கால்வாய் செப்பனிடும் தொழிலாளர்கள் ஆகியவர்களின் சம்பாத்தியங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கிறோம். கூலிகளிடையே காணப்படும் வேறுபாடுகள், தொழிலாளர்களால் அனுபவிக்கப்படும் வசதிகளிடையே காணப்படும் வேறுபாடுகளால் ஈடுசெய்யப்படுவனவாக இருந்தாலும், அதிகச்சம்பளம் தருகின்ற உத்தியோகமே குறைந்த முயற்சியில் செய்யக்கூடியதாகவும், நிறைந்த ஓய்வைத் தருவதாகவும் நமக்குப் படுகிறது. உச்சத்திலுள்ள வேலைகள் இவ்வாறு கவர்ச்சிகரமாக இருக்கும்போது, அடிவாரத்தில் ஏன் மக்கள் அதிகமாக்க் காணப்படுகின்றனர்? இதற்கு மூன்று காரணங்கள் உண்டு. அவையாவன: *திறமையின்மை, பயிற்சியின்மை, வாய்ப்பின்மை.*

நிலப்பகுதிகளிடையே இயற்கை வளம் வேறுபட்டுக் காணப்படுவதைப்போன்று, தொழிலாளர்களிடையே இயற்கைத் திறமை வேறுபட்டுக் காணப்படுகின்றது. எவ்வாறு வளம் மிகுந்த நிலப்பகுதிகள் வளம் குறைந்த நிலப்பகுதிகளைவிட அதிகமான வாரம் பெற்றுவருவனவாக இருக்கின்றனவோ, அதைப்போலவே திறமை மிகுந்த தொழிலாளர்கள் சராசரித் தொழிலாளர்களைவிட அதிக

மான கூலிபெற்றுவருபவர்களாக இருக்கின்றனர். திறமை மிகுந்த தொழிலாளி பெற்றுவரும் கூலிக்கும், திறமை குறைந்த தொழிலாளி பெற்றுவரும் கூலிக்குமுள்ள வேறுபாட்டைப் பொருளாதார அறிஞர்கள் •'திறமைக்குத் தரப்படும் வாரம்' என்று அழைக்கின்றனர். இவ் வேறுபாடு, வாரத்தைப்போன்று ஒரு வேறுபாட்டு எச்சமாகக் கருதப்படுகிறது. இந்த எச்சமானது, வாரத்தைப்போன்று தேவையால்மட்டுமே நிர்ணயிக்கப்படுவதாக இருக்கிறது. மிக அதிகமான வருமானம் பெறவேண்டுமென்றால், மற்றவர்களைவிடத் திறமையில் நாம் உயர்ந்திருந்தால்மட்டும் போதாது. அத் திறமைக்குத் தேவை இருக்கவேண்டும்; இது மிகவும் அவசியமானதாகும். பணம் சம்பாதிப்பதோ அல்லது நல்ல வாழ்க்கை நடத்துவதோ எல்லாக் கலைஞர்களுக்கும் முடிவதில்லை; ஒருசிலரே அதில் வெற்றி பெறுகின்றனர். நிலச்சுவான்தார்கள் அத்தனை பேருமே பணம் சேர்த்துவிடுவதில்லை; ஒருசிலரே அதிருஷ்டசாலிகளாக இருக்கின்றனர். அரசியல் ஞானி, சமூகச் சீர்திருத்தவாதி, தத்துவப் பேரறிஞன் போன்றவர்களுக்குப் புகழ் ஒன்றுதானிருக்கின்றதே தவிர, அவர்களுக்குக் கிடைக்கின்ற வருமானம் அவர்களது திறமைக்கு மிகவும் குறைவாகவேயிருக்கிறது. அந்த வருமானம், எத்தர்களுக்கும் ஏமாற்றுக்காரர்களுக்கும் கிடைக்கின்ற வருமானத்தைவிடக் குறைவே. வளமான நிலப்பகுதிகளைப் போன்று, திறமையுள்ள தொழிலாளர்கள், எப்பணிகளுக்கு மக்கள் விலை கொடுக்கத் தயாராக இருக்கின்றனரோ, அப் பணிகளைச் செய்கின்றவர்களாக இருக்கின்றனர். ஒழுக்கநலம் அல்லது கலையின் கண்கொண்டு பார்க்கும்போது, இவர்களுக்குத் தரப்படும் ஊதியமானது இவர்களது திறமையின் அளவுக்கேற்றவாறு அமைவதில்லை என்பது புலனாகும்.

பயிற்சி வேறுபாடுகளாலும் ஊதியங்களில் வித்தியாசங்கள் காணப்படுவதுண்டு. நீண்டகாலம் கல்வி பயில்வதற்கோ (உதாரணமாக ஒரு பல்கலைக்கழகத்தில்) அல்லது திறமை பெறுவதற்கோ (உதாரணமாக, தொழிற்பயிற்சி பெறுவது) ஒருவன் பணம் செலவழிக்கவேண்டியிருந்தால், கல்வி அல்லது பயிற்சி முடிந்த பிறகு, மனத்திற்குப் பிடித்தமான வேலையோ அல்லது நல்ல ஊதியம் தருகின்ற வேலையோ தனக்குத் தரப்படவேண்டும் என்று அவன் எதிர்பார்க்கிறான். உதாரணமாக, ஒரு பாரிஸ்டர்(Barrister) பயிற்சி பெறுவதில் பல ஆண்டுகளைச் செலவிடவேண்டியிருக்கிறது. இவ்வாண்டுகளில் அவனால் எதுவுமே சம்பாதிக்கப்படாமற் போகலாம்; எந்தத் தேர்விலுமே தேர்ச்சிபெறுமற் போகலாம். தேர்வுக் குழுவினருக்கும் தொழிற் சங்கங்களுக்கும் அவன் நிறைய கட்டணம் செலுத்தவேண்டியவனாக இருக்கிறான்,

மற்றொரு பெரிய வக்கீலிடம் பயிற்சி பெறுவதற்குக்கூடக் கட்டணம் செலுத்தவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படலாம். பயிற்சிக்குப் பிறகு பணமோ அல்லது நன்மைகளோ தன்னைப் பெருமளவில் தேடிவரும் என்ற நம்பிக்கை இருந்தால்தான், அவன் இத்தகைய சிரமங்களையும் தியாகங்களையும் ஏற்றுக்கொள்வான். தனது சிரமங்கள் அத்தனையையும் ஈடுசெய்கின்ற வகையில் வருமானம் வரவேண்டும் என்று அவன் எதிர்பார்க்கிறான்.

பயிற்சி பெறுவதற்காகின்ற செலவு, உழைப்பின் அளிப்பு விலையில் ஓர் அங்கமாக இருக்குமானால், அதாவது பயிற்சி பெறத் தூண்டுவதற்காகத் தொழிலாளர்களுக்கு அதிக ஊதியம் தருவது அவசியமானதாக இருக்குமானால், பயிற்சி பெற்ற தொழிலாளர்கள் பெற்றுவருகின்ற அதிகப்படியான சம்பாத்தியங்களில், திறமைக்காகத் தரப்படும் ஓர் எச்ச ஊதியம் காணப்படுவதில்லை. ஆனால், எந்த ஒரு நேரத்திலும் பயிற்சி பெற்ற தொழிலாளர்களின் பற்றாக்குறை ஏற்பட்டு, புதிய தொழிலாளர்களுக்குப் பயிற்சியளிப்பதும் சாத்தியமில்லை யென்றால், அப்போது குறைந்த எண்ணிக்கையிலிருக்கின்ற பயிற்சி பெற்ற தொழிலாளர்கள் அபரிமிதமான சம்பாத்தியங்களைப் பெறக்கூடியவர்களாக இருக்கின்றனர். அவர்களது சம்பாத்தியமானது, தொழிலாளர்களுக்குப் பயிற்சியளிக்க முடியாமலிருக்கின்ற குறுகிய காலத்தில், தேவையால்மட்டுமே நிர்ணயிக்கப்படுவதாக இருக்கிறது. போலிவாரம் (quasi-rent) என்பது இச்சம்பாத்தியத்தைச் சுட்டுகிறது.[1] செலவிற்கோ அல்லது அளிப்பு விலைக்கோ அதிகமாயிருக்கின்ற ஓர் எச்சத்தைச் சுட்டிக்காட்டுவதாலேயே, போலிவாரம் என்பது வாரத்தை ஒத்திருக்கிறது. ஆனால், நெடுங்காலத்தில் அளிப்பு அதிகரிக்கும்போது, போலிவாரம் மறைந்துவிடுவதாக இருக்கிறது என்ற வகையில் அது வாரத்திலிருந்து வேறுபட்ட ஒன்றாக இருக்கிறது. உதாரணத்திற்கு, ஒரு கணிதப்பேராசிரியரின் சம்பாத்தியங்களை ஒரு காரோட்டியின் சம்பாத்தியங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கலாம். உயர்ந்த சம்பளத்தைப் பேராசிரியரால் தொடர்ந்து பெற்றுவர முடியும். ஏனெனில், ஐன்ஸ்டீன் விதிகளை மிகச் சிலரால் மட்டுமே நன்கு விளக்கிச் சொல்ல முடியும். ஆனால், காரோட்டியால், திறம்படாத் தொழிலாளி ஒருவன் பெறுகின்ற சம்பாத்தியத்தைவிட அதிகமான சம்பாத்தியத்தைப் பெற்றுவிட முடியாது. ஏனெனில், காரோட்டக் கற்றுக்கொள்வது திறம்படாத் தொழிலாளர்கள்

[1] அடுத்த அத்தியாயத்தில் போலிவாரம் என்ற சொல் 'உற்பத்திச் சாதனத்தின் சம்பாத்தியங்களை'க் குறிக்க ஆளப்படுகிறது. உதாரணமாக, வீட்டிற்குத் தரப்படும் வாடகையைப் போலிவாரம் என்று கொள்ளலாம். ஆனால், இந்த அத்தியாயத்தில் போலிவாரம் என்ற சொல்லை வேறொரு பொருளில் ஆள்கிறோம்.

பலர்க்கு மிகவும் சுலபமாக இருக்கிறது. திறமைக்குத் தரப்படும் வாரம் பேராசிரியரின் சம்பளத்தில் இடம்பெறுகிறது. தற்காலிக மாக காரோட்டிகளின் பற்றுக்குறை ஏற்பட்டு அவர்களின் கூலிகள் அதிகரிக்குமானால், அப்போது காரோட்டிகளின் கூலியில் வாரம் காணப்படும். போலிவாரம் என்று அழைக்கப்படுகின்ற இந்த வாரம், நிரந்தரமானதல்ல; மாறாக, மறையக்கூடியது. ஏனெனில், காலப்போக்கில் பலர் காரோட்டக் கற்றுக்கொள்வர். இதனால் காரோட்டிகள் நிறைய கிடைப்பர்.

வாய்ப்புச் சமன்பாடு இல்லாததன் காரணமாகவும் கூலி வேறு பாடுகள் காணப்படுவதுண்டு. அதிகக் கூலி பெறுகின்ற வாய்ப்பை எல்லாத் தொழிலாளர்களுமே பெற்றுவிடுவதில்லை. தொழிலாளர் களின் குடும்பச் சூழ்நிலைகள் வெவ்வேறாக இருக்கின்றன. தங்களது பெற்றோர்கள், செல்வாக்கோ அல்லது கல்வியோ அல்லது செல்வமோ பெற்றிருப்பதன் வாயிலாக, ஒருசில தொழிலாளர் களுக்கு நல்ல வேலைக்குச் செல்வது சுலபமாக இருக்கிறது. உதாரணமாக, செல்வர்களின் குழந்தைகளுக்குக் கல்வியும், செல்வாக்குள்ளவர்களின் ஆதரவும் கிடைக்கக் கூடியனவாக இருப்பதால், அவர்களால் தங்களது மனத்துக்குப் பிடித்த வேலை யையோ அல்லது நல்ல ஊதியம் தருகின்ற வேலையையோ தேர்ந்தெடுத்துக்கொள்ள முடியும். இவ்வாறாக, பல நன்மைகள் புடைசூழ இவர்கள் தங்களது வாழ்க்கையைத் துவக்குகிறார்கள். சாதாரணத் திறமை இருந்தாலே போதுமானது; அதை வைத்தே இவர்களால் நல்ல உயர்ந்த வருமானத்தைப் பெற்றுவிட முடியும். ஆகவே, சமூகப் பெயர்ச்சியானது (social mobility) பொதுவாகக் குறைவாக இருக்கிறது. எந்த வகுப்பில் ஒரு தொழிலாளி பிறக் கின்றானோ, அந்த வகுப்பிலேயே அவன் இருந்து தொலைக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது.

ஓர் இடத்திலிருந்து மற்றோரிடத்திற்கும், ஒரு தொழிலிலிருந்து மற்றொரு தொழிலுக்கும் செல்வதற்கிருக்கும் செயற்கைத் தடை களைப்போலவே, சமூகத்தின் ஒரு வகுப்பிலிருந்து மற்றொரு வகுப்பிற்குச் செல்வதற்கும் செயற்கைத் தடைகள் உண்டு. உதாரணமாக, சாதிமுறையின்கீழ், சமூகப் பெயர்ச்சியே காணப் படுவதில்லை. பல்வேறு இனங்கள் காணப்படுகின்ற நாடுகளில், பொறுப்புள்ள பதவிகளெல்லாம் வலிவுள்ள ஓர் இனத்தின் ஏக போக சொத்துகளாகிவிடுகின்றன. ஆகவே, மற்ற இனங் களுக்கு நல்ல வேலைகளை அடைகின்ற வாய்ப்புகள் இல்லாது போகின்றன. இதுபோன்ற தடைகளின் விளைவாக, செல்வாக் குள்ள ஒரு வகுப்பைச் சார்ந்த மக்கள் மற்றவர்களின் போட்டி

யிலிருந்து காப்பாற்றப்படுவதோடல்லாது, அவர்களின் வருமானமும் அதிகரிப்பதாக இருக்கிறது. இந்த வருமானத்தில் ஓர் எச்சமோ அல்லது வாரமோ காணப்படுகிறது. இது சர்வாதீனனின் எச்ச இலாபத்தை ஒத்திருக்கிறது. வாய்ப்புச் சமன்பாடு இல்லாததன் காரணமாகச் சமூகப் பெயர்ச்சி தடைப்படும்போதும், இதுபோன்ற ஓர் எச்சம் பிறப்பதுண்டு. உயர்குலத்தில் பிறப்பது வேறுபாட்டு நன்மைகளைத் (differential advantage) தருவதைப் போல, செல்வக்குடியில் பிறப்பதும் வேறுபாட்டு நன்மைகளைத் தருகிறது. மனிதனால் உருவாக்கப்படுகின்ற சொத்துப்பேறு, சாதி போன்ற அமைப்புகளின் விளைவாகவே இந் நன்மைகள் பிறக்கின்றன. ஆகவே, இந் நன்மைகள் வாயிலாகக் கிடைக்கின்ற எச்ச வருமானத்தை 'அமைப்பு வாரம்' (institutional rent) என்று நாம் அழைக்கலாம். தகுந்த சட்டங்களை நிறைவேற்றுவதன் மூலம் இச்சமூக அமைப்புகள் மாற்றியமைக்கப்படக்கூடியனவாக இருப்பதால், இவைகளால் ஏற்படுகின்ற வேறுபாடுகளை அரசியல் அதிகாரம் படைத்தவர்களால் குறைக்கமுடியும். உதாரணமாக, சாதிகளை ஒழிப்பதற்கோ அல்லது சொத்துப்பேறு உரிமைகளைக் குறைப்பதற்கோ சட்டங்கள் இயற்றப்படலாம். ஆனால், இச் சமூக அமைப்புகளினால் ஏற்படுகின்ற வேறுபாடுகளை அறவே ஒழித்துவிடுவது என்பது முடியாது. எல்லோருக்கும் வாய்ப்புச் சமன்பாட்டைத் தருவது என்பது இயலாது. உதாரணமாக, பள்ளியிலும் பல்கலைக்கழகங்களிலும் கல்வி பயிலுவதற்கு இளைஞர்களுக்குச் சமமான வாய்ப்புகளை ஓரளவுக்குத் தரமுடியுமென்றாலும், இளைஞர்களை அவர்களது பெற்றோர்கள் வளர்த்துவருகின்ற முறை ஒரேவிதமாக அமையுமாறு செய்வதென்பது நம்மால் முடியாது. சமூகப் பெயர்ச்சியை நம்மால் அதிகப்படுத்த முடியும்; ஆனால், பூரண சமூகப் பெயர்ச்சியை நம்மால் உருவாக்க முடியாது.

**சுருக்கம்**

படுகிடைத் தளத்திலிருந்து(horizontal plane)பார்க்கும்போது, போட்டியானது நிகர நன்மைகளைப் பல்வேறு இடங்களிலும் தொழில்களிலும் சமமாக இருக்கச் செய்கிறது என்றும், அதே வேளையில் பெயர்ச்சியின்மையானது போட்டியின் சக்தியைக் குறைத்து வேறுபாடுகளை இருக்கச் செய்கிறது என்றும் படுகிறது. குறிப்பிட்ட வகுப்புகளைச் சார்ந்த தொழிலாளர்களின் சர்வாதீன நன்மைகளைப் பத்திரப்படுத்திவைக்கின்ற செயற்கைத் தடைகள், பெயர்ச்சியின்மையை அதிகப்படுத்துவனவாக இருக்கின்றன. செங்குத்துத் தளத்திலிருந்து பார்க்கும்போது, போட்டியானது, தொழிலிலிருந்து கிடைக்கின்ற சம்பாத்தியங்களை இயற்கைத்திறமை வேறுபாடுகளோடோ அல்லது கல்வி, மற்றும் பயிற்சி வேறுபாடு

களோடோ சமன்படுத்திவைப்பதாகத் தெரிகிறது. வாய்ப்பு வேறு பாடுகளை ஏற்படுத்துவதன்மூலம் சமூகப் பெயர்ச்சியைக் குறைக்கின்ற அமைப்பின்கீழ்தான் இப்போட்டியானது தோன்றக்கூடியதாக இருக்கிறது. உயர்ந்த சம்பளம் தருகின்ற வேலைகளை அடைகின்ற வாய்ப்புகளை இவ்வேறுபாடுகள் குறைத்துவிடுகின்றன. செல்வர்களே இவ்வேலைகளுக்கு எடுத்துக்கொள்ளப்படுகின்றனர். ஆகவே, ஊதியங்களில் காணப்படும் வேறுபாடு, பெயர்ச்சியின்மையாலும், திறமை வேறுபாடுகளாலும் ஏற்படுவதாக இருக்கிறது. எனவே, வேறுபாட்டைக் குறைக்க வேண்டும் என்று நாம் விரும்பினால், ஒன்று பெயர்ச்சியை அதிகப்படுத்த வேண்டும் அல்லது திறமையை ஒரு பொருட்டாக எடுத்துக்கொள்வதைத் தவிர்க்க வேண்டும்.

## (2) பேர சக்திகள்

ஒரு தொழிலின் கூலி வீதமானது, அத்தொழிலிலுள்ள தொழிலாளர்களுக்கு மற்றத் தொழில்களில் இருக்கும் போட்டியையும், கவர்ச்சிகரமாக இருக்கின்ற மற்றொரு தொழிலுக்குச் செல்வதில் தொழிலாளர்களுக்காகும் மாற்றுச் செலவையும், பெயர்ந்து செல்வதற்குத் தொழிலாளர்களிடமுள்ள விருப்பமின்மையின் சக்தியையும் பொறுத்திருக்கிறது. அதாவது, அத்தொழிலின் கூலிவீதம், உழைப்பின் அளிப்பு விலையைப் பொறுத்திருக்கிறது. அது வேலையளிப்போர்களின் தேவை விலையையும் பொறுத்திருக்கிறது என்பது சொல்லாமலே புரியும். அது தொழிலின் உற்பத்தி விலையால் (அல்லது நிறைகுறைப் போட்டியின் இறுதிநிலை வருவாயால்) நிர்ணயிக்கப்படுகிறது. குறுகிய காலத்தில், கூலி வீதங்களில் காணப்படும் நெளிவுகள், விலைகளின் நெளிவுகளோடு தொடர்புடையனவாக இருக்கின்றன. பொருள்களின் விலை அதிகமாவதோ அல்லது குறைவாவதோதான், எந்த ஒரு வகுப்பைச் சார்ந்த தொழிலாளர்களின் கூலி வீதத்தைக் கூட்டுவதாகவோ அல்லது குறைப்பதாகவோ இருக்கிறது. நெடுங்காலத்தில், ஒரு தொழிலிலிருந்து தொழிலாளர்கள் வெளியேறுவதாகவோ அல்லது அத்தொழிலுக்கு வருவதாகவோ இருக்கின்ற நிலை காணப்படும்போது, உழைப்பின் அளிப்பு விலையே மிகவும் முக்கியமானதாக இருக்கிறது.

கூலி வீதம், மூன்றாவதாக, தொழிலாளர்களின் அமைப்புகளையும், வேலையளிப்போர்களின் அமைப்புகளையும் பொறுத்திருக்கிறது. கூலி நிர்ணயிக்கப்படவேண்டிய வீதம்பற்றித் தொழிலாளர்களுக்கும் வேலையளிப்போர்களுக்குமிடையே கருத்து வேறு

பாடு எழுந்து, அவர்களால் எந்த ஒரு முடிவிற்கும் வரமுடியவில்லை யென்றால், வேலையளிப்போர் சங்கங்கள் தொழிலாளர்களை வேலை யைவிட்டு நீக்கிவிடுவதாகப் பயமுறுத்தலாம்; தொழிலாளர் சங்கங் களோ வேலைநிறுத்தம் செய்வதாக அறிவிக்கலாம்.

இவ்விரு பக்கங்களும் வெற்றியோ தோல்வியோ பெறுவது, தொழிலின் நிலவரத்தைப் பொறுத்திருக்கிறது. கடுவேலையில் லாத் திண்டாட்டம் காணப்படுமானால்,தொழிலாளர் சங்கம் மிகவும் பலமற்றிருக்கும். அங்கத்தினர்களுக்குப் போதிய பணவுதவி தர முடியாத நிலையில் அது இருக்கலாம். வேலை போய்விடுமோ என்னவோ என்ற பீதியில் தொழிலாளர்கள் இருப்பதால், அவர் களது ஆதரவை இச்சங்கம் பெறமுடியாதுபோகலாம். பிடிவாத மான, விட்டுக்கொடுக்காத போக்கினை அது பின்பற்றுமானால், தொடர்ந்து இருந்துவரக்கூடிய நிறுவனங்கள் சில மூடப்பட வேண்டிய நிலை ஏற்படலாம். அடுத்து வேலைநிறைவை எடுத்துக் கொள்வோம். வேலைநிறைவு காணப்படும்போது, உழைப்பிற்கு விற்பனையாளர் அங்காடி (seller's market) இருக்கக் காண்கிறோம். உற்பத்தியைத் தொடர்ந்து செய்து, சாதகமாயிருக்கின்ற அங்காடி நிலவரங்களைப் பயன்படுத்தி இலாபம் பெறுவதற்காக, வேலையளிப் போர்கள் சற்று அதிகமான கூலி கொடுத்துத் தொழிலாளர்களை வேலைக்கு எடுத்துக்கொள்ளச் சித்தமாயிருக்கின்றனர். வேலை யின்மை ஒரு குறைந்த மட்டத்திற்கு இறங்குகின்றவரை, பெருகி வரும் பொருளாதார நடவடிக்கைச் செலவுகளை ஏற்றத் துவங்கு கின்றவரை, அதிகக் கூலி கேட்பதைத் தொழிலாளர் சங்கங்கள் தள்ளிப்போடுகின்றன. செலவுகளும் விலைகளும் ஏறுகின்ற அளவிற்குப் பணக்கூலிகளும் உயரவேண்டும் என்று அவை முயலு கின்றன.

வேலைநிறைவு காணப்படுகின்ற நேரத்தைத் தவிர, மற்ற நேரங்களில் வேலையளிப்போர் சங்கம் வலிவுள்ளதாக இருக்கிறது. முதலாளிகள் சிலராகவும், தொழிலாளர்கள் பலராகவுமிருக்கின்ற போது,தொழிலாளர்களைவிட முதலாளிகளிடமே ஒற்றுமை காணப் படுவதாக இருக்கிறது. தங்களுக்கென ஒரு பொதுக் கொள்கையை ஏற்படுத்திக்கொள்வது அவர்களுக்குச் சுலபமாக இருக்கிறது. அதோடு, எதுவும் அவர்களால் நிச்சயமாகச் செய்யக்கூடியதாக இருக்கிறது; அவர்களிடம் கல்வி இருக்கிறது; செல்வாக்கு இருக் கிறது. தாங்கள் சொல்ல விரும்புவதைப் பொதுமக்கள் ஒப்புக் கொள்ளுகின்ற வகையில் அவர்களால் சொல்லமுடியும். அவர்கள் ஒப்புக்கொண்டேயாகவேண்டிய நிலையையும் அவர்களால் உரு வாக்கமுடியும். இதற்கு மேலாக, அவர்களிடம் இருப்புகள்

(reserves) பெருமளவில் கிடைக்கின்றன. மந்த நிலையின்போது உற்பத்தி செய்வதைச் சில காலத்திற்கு நிறுத்திவைத்து, எச்சமாக இருக்கின்ற பொருள்களைமட்டுமே விற்றுவருவது அவர்களுக்குச் சாத்தியமாக இருக்கிறது. இதுபோன்ற வேளைகளில் நிர்வாகத்தையும் எந்திரங்களையும் திருத்தியமைக்க அவர்கள் முயலுகின்றனர். ஆனால், தொழிலுக்கோ கூலி சம்பாத்தியம் மட்டுமே முக்கிய வருமானமாக இருக்கிறது. தொழிலாளர் சங்கத்தால் கொடுக்கப்படுகின்ற வேலைநிறுத்தச் சம்பளம் (strike pay) மிகவும் குறைவான ஒரு தொகையேயாகும். ஆகவே, கடுமையான வெறுப்போ அல்லது முரட்டுப் பிடிவாதக் கொள்கையோதாம் தொழிலாளர்களை வேலைநிறுத்தம் செய்யத் தூண்டுவதாக இருக்கமுடியும்[1].

வேலைநிறைவு காணப்படும்போது நிலைமை வேறு விதமாக இருக்கிறது. எவ்வளவு உற்பத்தி செய்யமுடியுமோ அவ்வளவையும் உற்பத்தி செய்ய வேண்டும் என்று அரசாங்கமும் பொதுமக்களும் வேலையளிப்போனைக் கேட்டுக்கொள்வதாக இருக்கலாம். எனவே, இது போன்ற சூழ்நிலையில் ஆட்குறைப்புச் செய்வதென்பது வேலையளிப்போனுக்கு இயலாதுபோகிறது. ஒருவனை வேலையைவிட்டு நீக்கி, அவனுக்குப் பதிலாக மற்றொருவனை வேலைக்கு எடுத்துக்கொள்வது, வேலையளிப்போனுக்கு ஒரு சரியான செயலாகப் படுவதில்லை. அதோடு கூலியைப்பற்றி ஒரு பிடிவாதக் கொள்கையைப் பின்பற்றி, அதன் மூலம் தன் பெயரைக் கெடுத்துக் கொள்ள அவன் விரும்புவதில்லை.

பொருளாதார சக்திகள் அல்லாத மற்ற சக்திகள் வேலையளிப்போனைப் பலவீனப்படுத்துகின்றனவாக இருக்கின்றன. பல வேலையளிப்போர்களுக்குத் தொழில் நடத்துவதென்பது பெருமை தரக்கூடியதாக இருக்கிறது. ஆகவே, தொழிலை நடத்திவர வேண்டுமென்பதற்காக இவர்கள் தொழிலாளர்களோடு நல்லுறவை ஏற்படுத்திக்கொள்கின்றனர். ஆகவே, கூலிப் பிரச்சினையைப்பற்றிய பேச்சுவார்த்தை பாதியிலிருக்கின்றபோது, வேலையளிப்போர்கள் அனைவரும் தங்கள் மூட்டை முடிச்சுகளைக் கட்டிக்கொண்டு கடற்கரை ஓரங்களில் கோல்ஃப் (golf) விளையாடப் போய்விடுகின்றனர். பிரச்சினையைப் பற்றித் தலையை உடைத்துக்கொள்வது தொழிலாளர்களேயாவர் என்று சொல்வது உண்மைக்கு முற்றிலும் புறம்பானதாகும். பேச்சுவார்த்தை நடத்தியாக வேண்டும் என்ற

[1] பெரும்பாலான வேலைநிறுத்தங்கள் கூலிப்பிரச்சினை காரணமாக எழுவதில்லை. வேலைச்சூழ்நிலைகள், வேலைநீக்கம், சங்கத்திற்கு அங்கீகாரம்தர மறுத்தல் போன்ற காரணங்களால் வேலைநிறுத்தங்கள் அடிக்கடி நிகழ்கின்றன. வேறெந்தக் காரணமுமின்றி, ஏமாற்றம், அதிருப்தி காரணமாகக்கூடப் பல வேலைநிறுத்தங்கள் ஏற்படுவதுண்டு.

கட்டாயம் அவர்களுக்கு இல்லையென்றாலும், பிரச்சினையைத் தீர்க்க வேண்டும் என்று தொழிலாளர்கள் எந்த அளவிற்கு விரும்புகின்றனரோ அந்த அளவிற்கு வேலையளிப்போர்களும் விரும்புகின்றனர். வேலையளிப்போனும் தொழிலாளியும் ஒருவரோடு ஒருவர் ஒத்துப் போவது சுலபமென்றாலும், எப்படியோ ஒருவரை ஒருவர் பகைத்துக்கொண்டுவிடுகின்றனர். சொந்த அபிப்பிராயங்களை ஒவ்வொருவரும் வலியுறுத்த முயலுவதனால், இரு தரப்பினருக்குள்ளும் ஒற்றுமை குலைந்துபோய்க் கூட்டு முயற்சி தடைபட்டுவிடுகிறது. ஆகவே, சங்கங்களின் சட்டபூர்வமான கொள்கைகளை ஏற்றுக் கொள்ள மறுத்துவரும் அங்கத்தினர்கள் இரு தரப்பிலும் காணப் படுவதுண்டு.

**உயர்ந்த கூலிகளின் சிக்கனம்**

வேலையளிப்போர்களை அதிகக் கூலி கொடுக்கவைக்கின்ற பொருளாதாரக் காரணங்களும் உண்டு. வேலையளிப்போனின் இலாபத்திற்கு வழிவகுப்பது குறைந்த கூலிச்செலவுகளே (wage-costs)யன்றிக் குறைந்த கூலிகள் அல்ல. பணக்கூலி கொடுத்து, அதற்குப் பதிலாகப் பணிகளைத் தொழிலாளர்களிடமிருந்து அவன் பெறுகிறான். இவர்களின் பணிகளைக் குறைந்த விலைகளில் பெற முடியுமென்றால், அவனது இலாபம் கூடுதலாக இருக்கும். இதனால் குறைந்த வீதங்களில் கூலிகளைத் தருவது பயனுள்ளதாக இருக்கிறது என்பது பொருளல்ல; குறைந்த கூலிக்குக் கிடைக்கின்ற உழைப்பே அடிக்கடி செலவைக் கூட்டுவதாக இருக்கிறது.

முதலாவதாக, குறைந்த கூலிகள் என்றால், குறைந்த வாழ்க்கைத்தரம் என்று பொருள். குறைந்த வாழ்க்கைத்தரம் என்றால், திறமை குறைந்த அளவில் இருக்கிறது என்று பொருளாகும். உணவு, மற்றும் வீட்டு வசதிகள் பெற்றிராத தொழிலாளர்களாலோ அல்லது ஓய்வு அறவே இல்லாத தொழிலாளர்களாலோ உயர்ந்த சம்பளக்காரர்களால் உற்பத்தி செய்கின்ற அளவிற்கு எதையும் உற்பத்திசெய்ய முடிவதில்லை. உயர்ந்த சம்பளக்காரர்களைப் போல், இவர்களால் நவீனத் தொழில் முறையின் பளுவைச் சுமப்பதற்குச் சித்தமாயிருப்பதோ அல்லது ஆர்வங்காட்டுவதோ அல்லது பொறுப்புள்ள பணிகளை ஏற்றுக்கொள்ளத் துணிவதோ முடியாததாக இருக்கிறது. இங்கிலாந்து நாட்டிலுள்ள தொழிலாளர்களை விட இந்தியாவிலும் சீனாவிலுமுள்ள தொழிலாளர்கள் குறைந்த கூலியைப் பெற்றுவருகின்றனர் என்பதைப் பார்த்து, இந்நாடுகளில் கூலிச்செலவு குறைவாக இருக்கிறதென்றும், ஆகவே, இந்நாடுகளோடு இங்கிலாந்தால் போட்டியிட முடியாது என்றும் நாம் உடனே முடிவுசெய்துவிடக்கூடாது. இந்திய நாடு இங்கி

லாந்து நாட்டின் மிகப் பெரிய அங்காடிகளில் ஒன்றாக இருக்கிறது என்ற உண்மையிலிருந்து, குறைந்த கூலிகளினால் தீமைகளும் உண்டு என்பது புலனாகிறது. அதே வேளையில், இந்தியாவில் காணப்படும் வேலையளிப்போர்கள் அதிகக் கூலி கொடுப்பார்களே யானால், இந்தியாவினால் வெற்றிகரமாகப்போட்டியிட முடியும்என்ற முடிவிற்கும் நாம் வந்துவிடக்கூடாது. கூலி அதிகரிக்கும்போது, தங்கள் திறமையை அதிகப்படுத்தத் தொழிலாளர்கள் முயலுவ தில்லை. கூலி உயர்வதைப் பார்த்தவுடன் அவர்கள் முதலில் செய்வது, தங்கள் வேலையின் அளவைச் சற்றுக் குறைத்துக்கொள் வதேயாகும். உயர்ந்த கூலி பெற்றுவரும்போது, கடுமையாக அவர்கள் வேலைகளைச் செய்வதில்லை. அப்படியே, கடுமையாக வேலைகளைச் செய்வதாக இருந்தாலும், கூலியுயர்வினால் கிடைக் கின்ற எச்ச வருமானத்தைத் தங்கள் திறமையை அதிகப்படுத்தும் வழிகளில் செலவிடாது, அதைப் பயனற்ற வழிகளில் செலவிடு கின்றனர். உயர்ந்த கூலி தருவதென்பது, கொஞ்ச காலத்திற்குப் பிறகே தொழிலாளர்களின் திறமையை அதிகப்படுத்துவதாக இருக்கிறது. அதுவரை உயர்ந்த கூலி கொடுத்துவருவதென்பது வேலையளிப்போர்களுக்கு முடிவதில்லை. ஆகவே, தொழிலாளர்கள் இவர்களை விட்டு வேற்றிடங்களுக்குச் செல்வதுண்டு. தொழிலாளர் களின் வாழ்க்கைத்தரம் ஏற்கெனவே மிகவும் உயர்ந்ததாக இருக்குமானால், கூலியில் ஏற்படும் உயர்வு மிகச்சிறிய அளவில் தான் அவர்களது திறமையை அதிகப்படுத்தும்.

வேலையளிப்போர்கள் ஏன் அதிகக் கூலி தருகின்றார்கள் என்பதற்கு இன்னும் இரண்டு காரணங்கள் உண்டு. முதலாவதாக, அதிகக் கூலி தருவதன்மூலம் சராசரித் திறமைக்கதிகமான திறமை யுடைய தொழிலாளர்களைக் கவர்வது சாத்தியமாக இருக்கிறது. இரண்டாவதாக, அதிகக் கூலி தருவதன்மூலம் வேலையளிப்போர் தொழிலாளர்களின் நன்மதிப்பைப் பெறுகின்றனர். அதோடு வெறுப்போ, அதிருப்தியோ இல்லாது தொழிலாளர்கள் முழுமனத் தோடு நிறுவனத்தின் முன்னேற்றத்திற்குப் பாடுபடக்கூடிய ஒரு சூழ்நிலையும் உருவாகிறது. இவ்விரு காரணங்களாலும் ஓரிடத்தில் தொழிலாளர்களுக்குத் தரப்படுகின்ற கூலியானது, அந்தத் தொழி லாளர்கள் எந்த மாவட்டத்திலிருந்து வந்தனரோ, அம் மாவட்டத் தில் தரப்பட்டுவரும் கூலியைவிட உயர்வாக இருக்கலாம். ஆனால், இவ்விரு காரணங்களால், தொழில் முழுவதுமோ அல்லது மாவட்டம் முழுவதுமோ கூலி உயர்வதென்பது முடியாது.

### தொழிலாளர் சங்கங்கள்

கூலி உயர்விற்கு வேலையளிப்போர்களைமட்டும் நம்பியிருப்பது போதாது. தொழிலாளர்கள், பொதுவாகத் தங்கள் வாழ்க்கைத்

தரத்தையும் வேலைச் சூழ்நிலைகளையும் முன்னேற்றுவதற்குத் தங்களது சங்கங்களையே நம்பியிருக்கின்றனர். உயர்ந்த கூலி, குறைந்த வேலைநேரம், சிறப்பான வேலைச் சூழ்நிலை ஆகியவற்றைப் பெறப் பாடுபடவேண்டும் என்பதே தொழிலாளர் சங்கங்களின் முக்கியக் குறிக்கோளாகும். நேரடி நடவடிக்கைமூலம் முதலாளித்துவ முறையை ஒழிக்கவேண்டும் என்பதுபோன்ற தீவிரக் குறிக்கோள்களும் ஒருசில தொழிலாளர் சங்கங்களிடம் காணப்படுவதுண்டு. ஆனால், இங்கிலாந்து நாட்டிலுள்ள தொழிலாளர் சங்கங்களிடம் இத்தகைய புரட்சிப் போக்குக் காணக்கூடியதாக இல்லை.

இதனால், அரசியல் அதிகாரத்தைப் பிரயோகிப்பதிலிருந்து தொழிலாளர் சங்கங்கள் தடுக்கப்படுவதில்லை. நாட்டின் இருபெருங் கட்சிகளிடம் இச்சங்கங்களுக்கு மிகுந்த செல்வாக்கு உண்டு. தொழிற் கட்சியின் திட்டத்தை இத் தொழிலாளர் சங்கங்கள் உற்சாகப்படுத்துகின்றன. இவைகளின் உத்தியோகஸ்தர்களும் அங்கத்தினர்களுமான பலர் பாராளுமன்றத்தின் உறுப்பினர்களாக இருக்கின்றனர். அவைகளிடம் புரட்சிகரமான கருத்துகள் இல்லை என்பது உண்மையே. என்றாலும், அவை கடந்த ஐம்பதாண்டுக் காலமாக, சமுதாயப் புரட்சிபோன்ற ஒரு புரட்சிக்கு வலிவூட்டிவந்திருக்கின்றன என்பதை யாரும் மறுக்க முடியாது.

தன் நிலையைப்பற்றி ஒரு தொழிலாளியை உணரச் செய்ய வேண்டுமென்பது, தொழிலாளர் சங்ககங்களின் தலையாய நோக்கங்களில் ஒன்றாக எப்போதும் இருந்துவந்திருக்கிறது. அதாவது, பாதுகாப்பு ஏதுமின்றி, வேலையளிப்போனின் தயவை மட்டுமே நம்பியிருக்கும் ஒரு தனியாளாகத் தான் இல்லாது, தங்களது உரிமைகளையும் நலன்களையும் பாதுகாத்துக்கொள்வதற்காகத் தொழிலாளர்களால் துவக்கப்பட்டிருக்கும் ஓர் அமைப்பின் ஒரு பகுதியாகத்தான் இருக்கிறான் என்பதை ஒரு தொழிலாளி உணர வேண்டும். தொழிலாளர்களின் கோரிக்கைகளைச் சாதுரியமாகவும், முறையாகவும், தெளிவாகவும் எடுத்துச் சொல்லக்கூடிய மத்தியஸ்தர்களை வேலையளிப்போர்களிடம் அனுப்புவதன்மூலம், தொழிலாளர் சங்கங்கள் தங்களது அங்கத்தினர்களின் குறைகளைப் போக்க முயலுவதுண்டு. இம்முறை வேலையளிப்பவர்களுக்கும் நன்மை பயப்பதாக இருக்கிறது. ஏனெனில், தொழிலாளர்களின் குறைபாடுகளைக் கேட்டறிந்துகொள்வதற்கும், அவர்களோடு எந்த உடன்படிக்கையையும் செய்துகொள்வதற்கும் தற்போது வாய்ப்பிருக்கிறது.

சமுதாயத்தின் கண்கொண்டு பார்க்கும்போதும், தொழிலாளர் சங்கங்கள் ஒரு நல்ல பணியைச் செய்துவருவதாகத் தெரிகிறது.

இழப்பு ஏற்படுகின்ற வேளைகளில் செலவுகளைக் கட்டுப்படுத்துவதற்காக, வேலையளிப்போர்கள் கூலிகளைக் குறைக்க முயலும்போது, அவர்களை அவ்வாறு செய்யவொட்டாது தடுத்து, உழைப்பைச் சிக்கனப்படுத்தும் வேறு புதிய முறைகளை அவர்கள் ஆராயும்படி தொழிலாளர் சங்கங்கள் செய்கின்றன. ஆனால், இச்சங்கங்களின் முயற்சியானது எப்போதுமே உழைப்பின் திறமையை அதிகப்படுத்துவதாக இல்லை. பெருந்தொழில்களைவிடக் கைவினைத் தொழிலில் (craft) காணப்படும் சங்கங்களின் சட்டங்கள் ஒருசில மக்களின் நன்மைக்காகவே இயற்றப்பட்டவையாக இருக்கின்றன. கொடுக்கப்பட்டிருக்கும் வேலைகளைச் செய்வதற்கு எந்தவிதத் திறமையும் தேவையில்லை யென்றாலும், மற்றவர்களால் அவற்றை வெகு சுலபத்தில் செய்துவிட முடியுமென்றாலும், அவ்வேலைகளைக் கைவினைத் தொழிலைச் சார்ந்தவர்கள்மட்டுமே செய்ய வேண்டும் என்று இச்சங்கங்களின் சட்டங்கள் வற்புறுத்துவனவாக இருக்கின்றன. இச்சட்டங்களின் விளைவாக அவசர வேலை தடைப்படுகின்றது; காலத்திற்கு ஒவ்வாத தொழிற் பழக்கங்கள் சாகாமல் இருந்துவருகின்றன. இதனால், காலமும் உழைப்பும் வீணாகிச் சமூகத்தின் நலம் பாதிக்கப்படுகின்றது. இதைப் போலவே தொழில் பயில விரும்புவோரின் எண்ணிக்கையைக் கட்டுப்படுத்துகின்ற சட்டங்களும், சமூகத்திற்குக் குந்தகம் விளைவிப்பனவாக இருக்கின்றன. போதிய பயிற்சியற்ற தொழிலாளர்களை வைத்துக்கொண்டு குறைந்த செலவில் வேலைகளைச் செய்துவிட வேண்டும் என்று வேலையளிப்போர்கள் விரும்புவதாலேயே, இச்சட்டங்கள் நடைமுறைக்குக் கொண்டுவரப்படுகின்றன. இத் தொழிலாளர்களின் எதிர்காலத்தைப்பற்றி இவர்கள் சற்றும் கவலைப்படுவதில்லை. இச்சட்டங்கள் சர்வாதீன சக்திகளை உருவாக்குகின்றன. ஆகவே, இவைகளால் பொதுநலம் அடிக்கடி பாதிக்கப்படுவதுண்டு. இறுதியாக, தொழில் முழுவதுமே கூலி உயரவேண்டும் என்று தொழிலாளர் சங்கங்கள் முயலும்போது, தன் உற்பத்தியின் அளவைக் குறைத்துக்கொள்கின்ற சர்வாதீனனைப்போல், இச்சங்கங்கள் வேலைப்பருமனைக் (volume of employment) குறைப்பதில் ஈடுபடலாம். சில தொழிலாளர்களுக்கு வேலை கிடைப்பது சாத்தியமில்லாதுபோவதால், தொழிலில் தொடர்ந்து இருந்துவருகின்ற தொழிலாளர்களின் வாழ்க்கைத்தரம் உயர்வதற்கான வாய்ப்பிருக்கிறது.

### தொழிலாளர் சங்க பேரசக்தியின் எல்லை

வேலையின்மை ஏற்பட்டுவிடுமோ என்ற அச்சம் தொழிலாளர் சங்கங்களை அதிகக் கூலி கேட்பதிலிருந்து தடுத்துவிடுவதில்லை. கூலிகளைக் குறைத்து, அதன் வாயிலாக வேலையின்றியிருக்கும்

தொழிலாளர்களை வேலைக்கு எடுத்துக்கொள்ளவைப்பதை, பெருகி வரும் தொழில்களிலுள்ள தொழிலாளர் சங்கங்கள் தங்கள் கடமை களில் ஒன்ருகக் கருதுவதில்லை. கூலி உயர்வதனுல் விலைகள் ஏறு வதாகவும், பணவீக்கம் அதிகமாவதாகவும் இருந்தால்கூட, கூலி யுயர்வு கேட்பதைத் தொழிலாளர் சங்கங்கள் நிறுத்திவிடுவதில்லை. என்ருலும், வேலையின்மை, பணவீக்கம்காரணமாக, ஓர் அமைப்பு என்ற வகையில் ஒரு தொழிலாளர் சங்கம் தனது போக்கினை மாற்றிக் கொள்வதாக இருக்கலாம். தொழிலாளர் சங்கங்கள் அனைத்தும் தொழிற் சங்கக் கூட்டமைப்பு (Trade Union Congress) ஒன்றைக் கூட்டி, அதன்மூலம் கூலியுயர்வு கேட்பதைத் தொழிலா ளர் சங்கங்கள் ஒருசில வேளைகளில் தவிர்க்க வேண்டும் என்று முடிவெடுக்கலாம். இதை ஒவ்வொரு சங்கமும் ஏற்றுக்கொண்டு, அதற்கேற்றவாறு நடப்பதாகவும் இருக்கலாம். இம்முடிவுகளைத் தவிரத் தொழிலாளர் சங்கங்களின் போக்கு, முக்கியமாக, அவை காணப்படுகின்ற தொழில் அல்லது தொழில்களின் நிலைமையையும் பொறுத்திருக்கிறது. பொதுமக்களைப் பகைத்துக்கொள்வது தன் னைப் பலவீனப்படுத்துவதாக இருக்கிறது என்ற நிலையின்போது தான், தொழிலாளர் சங்கம் பொதுமக்களின் குரலுக்குச் செவிசாய்க்கிறது.

ஒரு தனிப்பட்ட தொழிலில், நிலைத்திருக்கும் கூலியுயர்வைப் பெறவேண்டும் என்று தொழிலாளர் சங்கம் முயலும்போது, அதன் சக்தி, அடியிற் கண்ட மூன்று காரணங்களால் கட்டுப்படுத்தப் படுகிறது:

(1) பதிலீட்டு நெகிழ்ச்சி (Elasticity of Substitution): வேறு உற் பத்தி முறைகளை ஆண்டு உழைப்பைச் சிக்கனப்படுத்துவது வேலை யளிப்போர்களுக்கு முடியுமென்ருல், தொழிலாளர்கள் கூலியுயர்வு கேட்பதை அவர்களால் சமாளிக்க முடியும். சாதாரணமான ஒரு வழி எந்திரங்களை அதிகமாக ஆள்வதைவிடப் பழைய எந்திரங் களை எடுத்தெறிந்துவிட்டு அவைகளுக்குப் பதிலாக உழைப்பைக் குறைக்கும் நவீன முறைகளை ஆண்டு அதன்மூலம் அவர்கள் தொழில்முறையையே மாற்றியமைக்கலாம். அல்லது நல்ல புதிய எந்திரங்களை உபயோகித்துத் தொழில் முழுவதையும் எந்திரமாக்கி விடலாம். இவ்விரண்டு முறைகளிலுமே, உழைப்பும் முதலும் எடுத் துக்கொள்ளப்பட்டுவந்த வீதம் மாறி, உழைப்பிற்குப் பதிலாக முதல் ஆளப்படத் துவங்கும். இந்தப் பதிலீடு செய்யப்படுகின்ற வீதம்—அதாவது உழைப்பு, முதல் ஆகியவற்றின் விலையின் மாறு தலுக்கேற்ப, அவை ஒவ்வொன்றின் அளவும் மாற்றியமைக்கப்படு கின்ற வீதம்—'பதிலீட்டு நெகிழ்ச்சி' என்று அழைக்கப்படுகின்றது கூலியுயர்விற்கு இருக்கும் முதல் தடை பதிலீட்டு நெகிழ்ச்சி.

உழைப்பிற்குப் பதிலாக முதலை ஆள்வதோடு பதிலீடு செய்வது நின்றுவிடுவதாக இல்லை. ஒரு தொழிலாளிக்குப் பதிலாக மற்றொரு தொழிலாளி எடுத்துக்கொள்ளப்படுகின்றபோதும், பதிலீடு செய்யப்படுகின்றது. 'கருங்காலிகள்' (blacklegs) கிடைப்பதோ அல்லது வேற்றிடங்களிலிருந்து உழைப்பை இறக்குமதி செய்வதோ அல்லது முன்பு திறம்பட்ட தொழிலாளர்களால் செய்யப்பட்ட வேலைகளைச் செய்யக்கூடிய பெண்கள் அல்லது திறம்படாத் தொழிலாளர்கள் கிடைப்பதோ சுலபமென்றால், வேலையளிப்போர்கள், பதிலீடு செய்வதைப்பற்றிக் கவலைப்படவே தேவையில்லை. ஒரு தொழிலிலுள்ள தொழிலாளர்களுக்குப் பதிலாக மற்றொருதொழிலிலுள்ள தொழிலாளர்களை அவர்கள் எடுத்துக்கொள்ளலாம். உதாரணமாக, ஏர் உழுபவர்கள் அதிகமான கூலி கேட்பதாயிருந்தால், கொஞ்ச நிலத்தைப் பயிர்செய்ய வைத்துக்கொண்டு மீதி நிலத்தை வேறு உபயோகங்களுக்கு விட்டுவிடுவதன்மூலம், ஏர் உழுபவர்களுக்குப் பதிலாக மாட்டு இடையர்களையும் ஆட்டு இடையர்களையும் எடுத்துக்கொள்வதையே விவசாயிகள் விரும்புவர். இதுபோலவே, கருங்கல் வைப்பவர்கள் (stone-masons) மிகவும் அதிகமான கூலி கேட்பதாகவும், செங்கல் வைப்பவர்களும் தச்சர்களும் பழைய வீதத்தில் கூலி கேட்பதாகவுமிருந்தால், வீடு கட்ட விரும்புகின்றவர்கள், செங்கல் அல்லது மரம்கொண்டு கட்டுகின்ற வீடுகளை அதிகமாகவும், கருங்கல்கொண்டு கட்டுகின்ற வீடுகளைக் குறைவாகவும் கட்டுவர்.

(2) **மாற்றுக் காரணிகளின் அளிப்பு நெகிழ்ச்சி:** எந்த அளவிற்குப் பதிலீடு செய்யமுடியும் என்பது தொழில்நுட்ப மாறுதலைச் செய்யக்கூடிய வாய்ப்பைமட்டும் பொறுத்திருக்கவில்லை; பதிலீட்டுப் பொருள்கள் அதிகப்படியாகக் கிடைக்கக்கூடிய வாய்ப்பையும் பொறுத்திருக்கிறது. செழிப்புநிலையின்போதோ அல்லது யுத்த காலத்திலோ, எந்திர உற்பத்தியாளர்களுக்கு நிறைய வேலையிருக்கிறது; ஆகவே, சற்றேறக்குறைய எல்லாத் தொழிலாளர்களுமே வேலைக்கு எடுத்துக்கொள்ளப்படுவர். கூலியுயர்வு கேட்பதற்கு இவை சரியான நேரங்கள். ஆனால், மந்தநிலையின்போது, பதிலீட்டுப் பொருள்களின் தேவை மிகவும் நெகிழ்ச்சியுள்ளதாக இருக்கிறது. அப்போது தொழிலாளர் சங்கங்களின் சக்தி மிகவும் குறைவாக இருக்கிறது. எனவே, கூலியுயர்வு கேட்பது முடியாது.

(3) **தேவை நெகிழ்ச்சி:** நுகர்வோர்களும், உற்பத்தியாளர்களும் பதிலீடு செய்வதில் ஈடுபடலாம். அவர்களால் எந்த அளவிற்குப் பதிலீடு செய்யமுடியும் என்பது தொழிலின் உற்பத்திப் பொருளின்

தேவை நெகிழ்ச்சியைப் பொறுத்திருக்கிறது. தேவை நெகிழ்ச்சியுள்ளதாயிருப்பதால், கூலிச்செலவில் ஏற்படும் உயர்வை நுகர்வோர்கள்மீது சுமத்துவது உற்பத்தியாளர்களுக்குச் சிரமம் தரக்கூடியதாக இருக்கிறது; ஆகவே கூலியுயர்வு கேட்பதை அவர்கள் ஆட்சேபிக்கின்றனர். உதாரணமாக, கடந்த இரு போர்களுக்கிடையில், மிகவும் போட்டிமயமான அங்காடிக்குப் பொருள்களை அளித்துவரும் ஏற்றுமதித் தொழில்களில், கூலியை ஒரே சீராக வைப்பதற்கு மிகவும் சக்திவாய்ந்த தொழிலாளர் சங்கங்கள்கூட சிரமப்பட்டன. ஆனால், மற்றத் தொழில்களிலோ கூலி உயர்ந்த வண்ணமாக இருந்தது.

தொழிலாளர் சங்க பேரசக்திக்குள்ள மேற்கண்ட தடைகள், உண்மையில் உழைப்பின் தேவை விலைக்குள்ள தடைகளாகும். குறிப்பிட்ட தொழிலில் கூலி அதிகமாக உயர்த்தப்பட்டால், அது வேலையின்மையை உருவாக்கும் என்று அவை எடுத்துக்காட்டுகின்றன. இவைகளையன்றி, தொழிலின் அன்றுட நிலைமையைப் பொறுத்தும் கூலி வீதங்களிருக்கின்றன. உதாரணமாக, இலாபம் மிகையாக இருந்து, வேலையளிப்போர்கள் சர்வாதீன நன்மைகளையோ அல்லது குறை சர்வாதீன (semi-monopolistic) நன்மைகளையோ அனுபவித்துவருவதாக இருந்தால், தொழிலாளர்களால் மற்றத் தொழில்களில் கொடுக்கப்படும் கூலியைவிட அதிகமான கூலி பெற்று, அதன்மூலம் வேலையளிப்போர்களின் இலாபத்தில் பங்குபெற முடியும். தனது சர்வாதீனத்தை மற்றவர்கள் தூற்றக்கூடாது என்பதற்காக, வேலையளிப்போர்களேகூட தம் மிச்சையாகக் கூலியைக் கூட்டித்தருவதுண்டு. செய்தித்தாள்களை அச்சிட்டுவருவதைப்போன்ற பெருந் தொழில் துணிவுகளில் (enterprises), இன்றியமையாததாக இருக்கின்ற ஒரு தொழிலில் காணப்படும் தொழிலாளர் சங்கம் வேறொரு முறையிலும் கூலியுயர்வைப் பெறுவதுண்டு. ஒருசில தொழிலாளர்கள் அடிக்கடி கூலியுயர்வு கேட்டுத் தொல்லைகொடுப்பதனால் வேலைகள் தடைப்படுவதை விரும்பாத வேலையளிப்போர்கள், தாங்களாகவே முன்கூட்டிக் கூலிகளை உயர்த்தி, இவ்வாறு கூலி அதிகமாவதைத் தொழிலின் வழக்கமான ஒரு செலவாக அவர்கள் ஏற்றுக்கொள்விதுண்டு.

**அரசாங்கமும் கூலிகளும்**

இங்கிலாந்து நாட்டில் அரசாங்கமானது கூட்டு பேரத்தில் வழக்கமாகத் தலையிடுவதில்லை. தொழிலாளர்களும் வேலையளிப்போர்களும் ஈடுபடுகின்ற செயல்களில் எது சட்டப்பூர்வமானது, எது சட்டபூர்வமற்றது என்பதை, உதாரணமாக, அமைதியான

மறியல் செய்வதோ அல்லது பொது வேலைநிறுத்தும் செய்வதோ சட்டபூர்வமானதா அல்லவா என்பதைப்பற்றி அரசாங்கமானது அடிக்கடி எடுத்துச்சொல்லிவந்திருக்கிறது. தொழிலாளர் சங்க நிதி எந்த வழிகளில் செலவழிக்கப்பட வேண்டும் என்பதற்கான சட்டங்களையும் அரசாங்கம் இயற்றிவந்திருக்கிறது. உதாரணமாக, ஓர் அரசியல் கட்சியை ஆதரிப்பதற்காகத் தொழிலாளர்களை நிதி கொடுக்கக் கட்டாயப்படுத்தலாமா என்பதைப்பற்றிச் சட்டங்கள் இயற்றப்பட்டிருக்கின்றன. ஆனால், குறிப்பிட்ட பூசல்களைத் தீர்ப்பதற்காக, அரசாங்கம் பொதுவாக முயன்றதில்லை. எம்முறைகளில் சமரசம் செய்துவைக்கமுடியும் என்பதைப்பற்றியும் அது அதிகமாகக் கவலைப்பட்டதில்லை.

என்றாலும், ஒருசில முயற்சிகளை அரசாங்கம் எடுத்துவந்திருப்பதை நம்மால் குறிப்பிடாமலிருக்க முடியாது. 1909ஆம் ஆண்டிற்குப் பிறகு, எத் தொழில்களில் கூலி மிகமிகக் குறைவாக இருந்ததோ அல்லது கூட்டு பேரம் செய்வதற்கு வாய்ப்பில்லாமலிருந்ததோ, அத் தொழில்களில் அரசாங்கம் வர்தக சபைகளை (Trade Boards) ஏற்படுத்திற்று. 1945 ஆம் ஆண்டில் இச் சபைகளுக்கு அதிகமான அதிகாரங்கள் கொடுக்கப்பட்டன. அவைகள் கூலிக் குழுக்கள் (Wage Councils) என்ற பெயரால் அழைக்கப்பட வாரம்பித்தன. தனிச் சட்டங்கள் இயற்றப்பட்டதன் வாயிலாக விவசாயத் தொழிலிலும், ஓட்டல் தொழிலிலும் கூலிச் சபைகள் (Wage Boards) ஏற்படுத்தப்பட்டன. குறைந்தபட்சக் கூலிகளையும், மற்ற வேலைச் சூழ்நிலைகளையும் நிர்ணயிப்பதற்கு இக் கூலிக்குழுக்களுக்கும் சபைகளுக்கும் அதிகாரம் உண்டு. நாட்டின் மூன்றில் ஒரு பங்குத் தொழிலாளர்களுக்குச் சட்டம் மூலம் கூலி நிர்ணயிக்கும் ஏற்பாடுகள் செய்துகொடுக்கப்பட்டிருக்கின்றன.

சட்டம்மூலம் கூலியை நிர்ணயிப்பதைத் தவிர, அரசாங்கமானது, இருதரப்பினரும் வேண்டுகோள் விடுத்தால், தொழிற்பூசலில் தலையிட்டு, அவர்களிடையே சமரசம்செய்துவைக்க முயலுவதுண்டு. வேலையைத் தடைப் படுத்தக்கூடிய எந்தப் ஒரு தொழிற்பூசலும் உழைப்புத்துறை அமைச்சின் பார்வைக்குக் கொண்டுவரப்பட்டாகவேண்டும். வேலை தடைப்படுவதனால் உண்டாகும் தீமை பெரிதென்றால், அரசாங்கமே சமரசம் செய்துவைக்கும் முயற்சியில் ஈடுபடும். மேலும், பூசல்களை நடுவர் அல்லது மத்தியஸ்தர் தீர்ப்பிற்கு விடுவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தால், பூசல்களை ஆராயும் மன்றங்கள் (Tribunals) அல்லது கமிட்டிகளின் அங்கத்தினர்கள், ஓரளவிற்கு அரசாங்கத்தின் கொள்கை

களை அனுசரித்தே தம் தீர்ப்புகளைச் சொல்லுகின்றனர். இறுதியாக, குறிப்பிட்ட பூசல்களில் தலையிடுவதைத் தவிர, மற்றொன்றையும் அரசாங்கம் செய்யலாம். குறிப்பிட்ட சில நேரங்கள் அல்லது நிலவரங்களில்மட்டுமே (உதாரணமாக, உழைப்புப் பற்றுக்குறையாக இருக்கின்ற தொழில்களில்மட்டுமே) கூலியில் மாறுதல்களைச் செய்ய முயலவேண்டும் என்று வேலையளிப்போர் சங்கங்களோடும், தொழிலாளர் சங்கங்களோடும் அரசாங்கம் ஓர் ஒப்பந்தம் செய்துகொள்ளலாம். இதைப்போன்று ஒரு நிலைமை ஏற்படும்போது, கூட்டு பேரமானது (collective bargaining), அரசாங்கத்தின் பொதுப் பொருளாதாரக் கொள்கையின் ஓர் அங்கமாக இருக்கும் கூலிக்கொள்கையின் கைப்பாவையாகிவிடுகின்றது. வேலையளிப்போர்களுக்கும் வேலையிலிருப்போர்களுக்குமிடையே நடத்தப்படும் பேச்சுவார்த்தைமூலமாகக் கூலி நிர்ணயிக்கப்படுவதாக இருக்கும்போது, கூலித்தொகையின் அளவும், கூலி வேறுபாடுகளும் அரசாங்கத்தால் மாற்றியமைக்கக்கூடியனவாக இருக்கின்றன.

மற்றொன்றையும் நாம் இங்கே கவனிக்கவேண்டும். வேலைநிறுத்தம் செய்வதற்குத் தொழிலாளர்களுக்கு உரிமை இருப்பதாகவும், தொழிற் பூசல்கள் தொடர்ந்து இருந்துவருவதாகவும் காணப்படுகின்றவரையில், கூலிக் குழுக்கள், நடுவர் மன்றங்கள், மத்தியஸ்த கமிட்டிகள் ஆகியவையின் தீர்ப்புகள் ஓரளவிற்கு நியாயமானவை என்றால்மட்டுமே அவை ஏற்றுக்கொள்ளப்படுவனவாக இருக்கின்றன. பல்வேறு மன்றங்களாலும், குழுக்களாலும் அரசாங்கத்தின் கொள்கைகள் ஏற்றுக்கொள்ளவோ அல்லது மறுக்கவோ படக்கூடும். வேலையளிப்போர், வேலையிலிருப்போர் மைய அமைப்புகளான தொழிற் சங்கக் கூட்டமைப்பும், வேலையளிப்போர் சம்மேளனமும், தனிப்பட்ட தொழிலாளர் சங்கங்கள் அல்லது வேலையளிப்போர் அமைப்புகள் ஆகியவற்றைக் கட்டுப்படுத்தாத வகையில் கூலியைப்பற்றி அரசாங்கத்தோடு ஓர் உடன்படிக்கை செய்துகொள்வதாக இருக்கலாம். இது தனிப்பட்ட தொழிலாளர்களையும், வேலையளிப்போர்களையும் கட்டுப்படுத்துவதில்லை. ஆகவே, தொழிற் சங்கத்தின் பிரதிநிதிகள் ஒரு திசையிலும், கடை முதலாளிகள் மற்றொரு திசையிலும் செல்வதாக இருக்கலாம். தொழிலாளர் சங்கங்கள், அரசாங்கத்தோடும் வேலையளிப்போர்களோடும் இணைந்துபோக முயலும்போது, அங்கத்தினர்களின் பூரண ஒத்துழைப்பு அவைகளுக்குக் கிடைப்பதில்லை; சிறந்த பேரம் செய்யவேண்டும் என்று அவர்கள் நச்சரிப்பதுண்டு. எப்படியாவது கூலியை ஒழுங்குபடுத்தியாக வேண்டும் என்று அரசாங்கம் விரும்பினாலும், தொழிலாளர் சங்கக் கூட்டமைப்போடும்,

வேலையளிப்போர் சம்மேளனத்தோடும் அது எத்தகைய நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தாலும், தொழிலாளர் சங்கத்தை அவமதிப்பதையோ அல்லது வேலைநிறுத்த உரிமையை மறுப்பதையோ செய்யக்கூடாது என்று அது நினைத்தால், தொழிலாளர்களிடையே நிலவுகின்ற கருத்துகளுக்கு அது மதிப்புக் கொடுத்தாகவேண்டும்.

### பொருளாதார முன்னேற்றத்தில் தொழிலாளர் பங்கு

செலவுகளைக் குறைப்பதற்காக ஒரு வேலையளிப்போன் புது எந்திரங்களை ஆளத் துவங்குவானேயானால், அவ்வாறு செய்வதனால் ஏற்படுகின்ற சேமிப்பின் ஒரு பகுதி தன் சகாக்களுக்கு வந்து சேரவேண்டும் என்று ஒரு சராசரித் தொழிலாளி நினைக்கிறான். இவ்வாறு நினைப்பதில் ஏதோ ஓர் அர்த்தம் இருக்கிறது என்பது உண்மையானாலும், எந்திரங்களை உற்பத்தி செய்தவர்களையோ அல்லது அவ் வெந்திரங்களை உற்பத்தி செய்யக் கச்சாப் பொருள்களைக் கொடுத்துதவியவர்களையோவிட எந்திரங்களை உபயோகித்துவரும் தொழிலாளர்களுக்குமட்டுமே எந்திரங்களினால் விளையும் இலாபத்தில் பங்கு கொடுக்கப்படவேண்டும் என்று சொல்வதில் என்ன அர்த்தமிருக்கிறது? பொருளாதார முன்னேற்றத்தினால் ஏற்படும் நன்மைகள் விலைக்குறைப்பு மூலமாக நுகர்வோர்களுக்குத்தான் செல்லவேண்டுமே தவிர, உற்பத்தியாளர்களுக்கல்ல. புதிய எந்திரங்களை ஆள்வதற்குக் கூடுதலான உழைப்பும் திறமையும் தேவைப்பட்டால்—வேண்டுமென்றால்—நிலைமை வேறுவிதமாக இருக்கும். ஆகவே, மற்ற வேலைகளுக்குத் தரப்படும் கூலியைவிட அதிகமான கூலி இங்கே தரப்பட வேண்டியிருக்கும். ஆனால், வேலை மாறுமலிருக்கும்போது கூலியும் மாறுமலிருக்கவேண்டும். மலிவான கச்சாப் பொருள்களை ஆளுதல், உறுதிப் பொருள்களை உற்பத்தி செய்தல், முற்றிலும் புதிய ஓர் உற்பத்திமுறையைப் பின்பற்றுதல் என்பனபோன்ற வழிகளில் தொழில்நுட்ப முன்னேற்றம் அடியெடுத்து வைக்கும்போது, தொழிலாளர்கள் அதிகப்படியான கூலியைக் கேட்பதில்லை. அப்படியிருக்க, தொழில்நுட்பத்தின் ஒரு வகையாகவிருக்கின்ற புதிய எந்திரங்களை ஆள்வதுமட்டும் ஏன் வேறுவிதமாகக் கருதப்படவேண்டும்?

எந்திரங்களை ஆள்வதன்மூலம் இலாபம் கூடுதலாகிறது. ஆகவே, கூலியும் உயர்த்தப்படவேண்டும் என்று தொழிலாளர்கள் கருதுகின்றனர். போட்டி துவங்குகின்றவரையில் இந்த இலாபம் ஒரு போலி வாரத்தைச் சுட்டிக்காட்டுவதாக இருக்கிறது; இது சர்வாதீன இலாபத்தை ஒத்திருக்கிறது. நுகர்வோனிடமிருந்து அதிக விலை வசூலிப்பது எந்த அளவிற்கு நியாயமானதாக இருக்கிறதோ, அந்த அளவிற்குச் சர்வாதீன இலாபத்திலிருந்து அதிகக் கூலி பெறு

வது நியாயமானதாக இருக்கிறது. மற்றவர்கள் என்ன சம்பாதிக்கிறார்கள் என்பது இங்கு முக்கியமானதாகக் கருதப்படவில்லை; இலாபத்தில் பங்குபெறுவதே முக்கியமானதாகக் கருதப்படுகிறது. புதிய எந்திரங்களை ஆள்வதில் உண்மையான சர்வாதீனம் ஏற்படுவதாக இருந்தால், மேற்கண்ட கருத்தில் உண்மை இருக்கும். ஆனால், உண்மையான சர்வாதீனம் ஏற்படுவதாக இல்லையென்றால், கூலி உயர்வதனால் எந்திரங்களின் உபயோகம் குறைக்கப்பட்டு, சிறந்த உற்பத்தி முறைகளினால் ஏற்படும் நன்மைகளை அடைவதிலிருந்து நுகர்வோன் தடுக்கப்படுகிறான். போட்டியானது இந்நன்மைகளைச் சமுதாயம் முழுவதும் பரப்புகிறது; ஆனால், தொழிலாளியோ, வேலையளிப்போனிடமிருந்து தனக்குரிய பங்கைப் பெற முயலும்போது, ஒரு சர்வாதீனனைப்போல் நடந்துகொண்டு, போட்டியின் சக்திகளைக் குறைத்து, சமுதாயத்திற்குச் செல்லவிருக்கும் மொத்த நன்மையைக் குறைத்துவிடுகிறான்.

தொழில்நுட்ப முன்னேற்றங்கள் காரணமாக விலைகள் இறங்கியாகவேண்டும் என்பதை இக் கருத்து சுட்டிக்காட்டுவதாகத் தோன்றலாம். உதாரணமாக, இம் முன்னேற்றங்கள் காரணமாக, ஒவ்வோர் ஆண்டும் தலைவீதச் செலவுகள் 2 சதவீதத்திலிருந்து 3 சதவீதம் இறங்குவதாக இருக்குமானால், வாழ்க்கைச் செலவு இறங்கும். இதனால் பணவாட்டத்தோடு தொடர்புடைய பல பிரச்சினைகள் காணப்பெறும். ஆனால், ஏதோ ஒரு காரணத்தினால், ஒவ்வோர் ஆண்டும் தலைவீதக் கூலி 2 சதவீதத்திலிருந்து 3 சதவீதம் உயர்வதாக இருந்தால், விலைகள் மாறாமலிருக்கும். கூலிகள் அதிகமாக உயர்வதாயிருந்தால், விலைகளும் உயரும். எனினும், பொது விலைமட்டத்தை அதிகப்படுத்தாத வகையில், ஒருசில தொழில்களில் (ஒவ்வோர் ஆண்டும் பல்வேறு தொழில்களில்கூட) பணக்கூலிகளை உயர்த்துவது என்பது சாத்தியமே. தொழில்நுட்ப முன்னேற்றங்கள் ஒருசில பொருள்களின் விலைகளை இறக்குவனவாக இருக்கலாம்; கூலிகள் உயர்வது மற்றப் பொருள்களின் விலைகளை ஏற்றுவதாக இருக்கலாம். முடிவில் இவையிரண்டும் ஒன்றுக்கொன்று சமமாக இருக்கக்கூடும்.

**கூலிப் பூசல்களின் விளைவுகள்**

ஒரு தொழிலில் இருக்கும் தொழிலாளர்கள் கூலியுயர்வைப் பெற்று, முன்பு செய்துவந்த வேலைகளையே திரும்பவும் செய்துவருவதாக இருந்தால், இவர்களது நலனுக்காகத் தன் வருமானத்தை விட்டுக்கொடுத்தவன் யார்? அவன் நிச்சயம் பாதிக்கப்படுபவனாகத்தானிருக்க முடியும். நாட்டு வருமானம் ஒன்றும் பெரிதாக இல்லை; என்றாலும், ஒருசில தொழிலாளர்கள் கூடுதலான ஊதியத்தைப் பெற்றுவருகின்றனர். இதனால் 'பாதிக்கப்படுபவன்' யார்?

அதிகப்படியான கூலிகள் இலாபத்திலிருந்து தரப்படுகின்றன. ஆகவே, பாதிக்கப்படுவோர் வேலையளிப்போர்கள் என்று நாம் சாதாரணமாக நினைக்கக்கூடும். ஆனால், கூலியைக் கூட்டித் தருவதனால் செலவில் ஏற்படும் உயர்வை, விலையை உயர்த்துவதன் மூலம் வேலையளிப்போர்கள் தவிர்க்கக்கூடும் என்றால், கூலி உயர்வதனால் பாதிக்கப்படுவோர் நுகர்வோர்களேயன்றி வேலையளிப்போர்கள் அல்லர். ஒரு பெருந்தொழிலை எடுத்துக்கொள்ளும்போது, மற்றத் தொழிலாளர்களும், இலாபம் அல்லது வாரத்திலிருந்து செலவுசெய்பவர்களும் நுகர்வோர்களாக இருக்கின்றனர். ஆகவே, ஒருசில தொழிலாளர்கள் நன்மை பெறுவது என்பது மற்றத் தொழிலாளர்களுக்குத் தீமை பயப்பதாக இருக்கிறது. தொழில் எங்கணுமே கூலி உயர்வதாக இருந்தால், வாழ்க்கைச் செலவும் கூடவே ஏறும். ஆகவே, தொழிலாளர்களின் உண்மை வருமானம் முன்பு இருந்ததைவிடத் தற்போது பெரிதாக இருந்துவிடுவதில்லை.

இது புத்தகங்களில்மட்டும் காணக்கூடிய ஓர் உண்மை அன்று. நடைமுறையிலும் இது சாதாரணமாகக் காணப்படுகிறது. யுத்த காலத்தில் கூலிகளும் விலைகளும் இருமுறை கடுமையாக உயர்ந்ததை நாம் பார்த்திருக்கிறோம். இவ்விரு சந்தர்ப்பங்களிலும் கூலியும் விலையும் ஒன்றை ஒன்று தழுவியே சென்றிருக்கின்றன. விலைகள் உயர்ந்ததன் காரணமாகக் கூலிகள் உயர்ந்ததாகவோ அல்லது கூலிகள் உயர்ந்ததன் காரணமாக விலைகள் உயர்ந்ததாகவோ இருந்திருக்கக்கூடும். ஆனால், கூலிகள் உயரும்போது விலைகள் ஏறுகின்றன என்ற உண்மை எப்போதும் காணக்கூடியதாக இருக்கிறது. 1936ஆம் ஆண்டு பிரான்சு நாட்டில் செய்யப்பட்ட பிளம் பரிசோதனையின்மூலம் (Blum experiment), விலைகள் ஏறுவதென்பது கூலிகள் உயர்வதைப் பொறுத்திருக்கிறது என்பது தெள்ளத் தெளிவாகியது. நாட்டு மறுமலர்ச்சி நிர்வாகத்தின் (National Recovery Administration)கீழ் 1933ஆம் ஆண்டு ஐக்கிய நாடுகள் பெற்ற அனுபவமும் இதே உண்மையைத்தான் சுட்டிக்காட்டியது.

தொழிலாளர்களிடையே அமைப்புகள் இல்லாது வேலையளிப்போர்களிடையே அமைப்புகள் காணப்படுமானால், தொழிலாளர் சங்கங்களை ஏற்படுத்துவதோடு தொடர்புள்ள கூலிப்பூசல்கள் நாட்டு வருமானத்தில் உழைப்பின் பங்கை அதிகப்படுத்துவனவாக இருக்கலாம். ஆனால், இவ் விருதரப்பினருக்குள்ளும் நல்ல அமைப்புகள் காணப்படுமானால், கூலிப்பூசல்கள்மூலமாக வேலையளிப்போர்களிடமிருந்து தொழிலாளர்கள் நன்மை பெறுவதற்கான வாய்ப்புகள் மிகவும் குறைவாக இருக்கும். பணவீக்கத்தின்போதும் வாழ்க்கைச் செலவு உயர்கின்றபோதும்மட்டுமே, தொழிலாளர்

களால் ஓரளவிற்குக் கூலியுயர்வு பெறமுடியும். கூலிப்பூசல்கள், இருவகைத் தொழிலாளர்களிடையேயும், இருவிதத் தொழில்களிடையேயும் கூலித்தொகையைப் பகிர்வு செய்கின்றன. ஒரு தொழிலில் கூலி அதிகமாவது, மற்றத் தொழில்களையும் நுகர்வோனையும் பாதிக்கிறது. அத் தொழிலால் உற்பத்தி செய்யப்படும் பொருள்களை வாங்குவதை நுகர்வோர்கள் குறைத்துக்கொள்ள முடியவில்லை என்ருல், அதிக விலைகள் தருவதன்மூலம் இவர்கள் கூலியுயர்வுப் பளுவைத் தம்மீது சுமத்திக்கொள்ள நேரிடும். ஆனுல், தேவை நெகிழ்ச்சியுள்ளதாக இருக்குமானுல், வேலையளிப்போர்களின் இலாபம் குறையும்; அதோடு தொழிலாளர்களுக்குக் கிடைக்கவிருக்கின்ற வேலைப்பருமனும் குறையும். இதனுல் கூலியுயர்வுப் பளுவின் ஒரு பகுதி இவர்களுக்கும் செல்லும்.

ஆகவே, கூலிப்பூசல்கள், தராதரக் கூலிவீதங்களைப்பற்றிய பூசல்களாக இருக்கின்றன. அவை முதலின் விளைவை (return on capital) நிர்ணயிப்பவையாக இல்லை. அப்படியென்ருல், முதலின் விளைவை நிர்ணயிப்பது எது? இதை நாம் அடுத்து ஆராய்வோம்.

# 24. வட்டியும் இலாபமும்

## (1) வட்டி

கடனாகத் தரப்படும் முதலுக்குச் செலுத்தப்படும் விலையே வட்டி. சுருங்கச் சொன்னால், கடனின் விலைக்குப் பெயரே வட்டி எனப்படும். இது, கடனாகத் தரப்படும் முதலின் அளவிற்கேற்ற வாறு ஆண்டிற்கு இவ்வளவு வீதம் என்று வசூலிக்கப்படும். உதாரணமாக, 100 பவுன்களை நான் ஓர் ஆண்டிற்குக் கடனாகப் பெறுவதாக இருந்தால், ஆண்டின் முடிவில் கடன் கொடுத்தவனுக்கு நான் 105 பவுன்களைத் திருப்பிக் கொடுக்கவேண்டி நேரிடலாம். அதாவது, ஆண்டு ஒன்றிற்கு 5 சதவீத வட்டி என்னிடமிருந்து வசூலிக்கப்படுவதாக இருக்கலாம். நான் ஏன் வட்டி செலுத்தவேண்டும்? 5 பவுன்களை வட்டியாகப் பெறுவதற்குக் கடன் ஈவோன் என்ன செய்துவிட்டான்?

### முதல் அளிப்பு

வட்டி ஏன் செலுத்தப்படவேண்டும் என்பதற்கான முதல் காரணம், கடன் முதல் (loan capital) அரிதாக இருக்கிறது என்பதேயாகும். மக்கள் கடனாகத் தர விரும்பும் பணத்தின் அளவு ஒவ்வோர் ஆண்டும், வட்டியில்லாதிருக்கும்போது மக்கள் கடனாகப் பெற விரும்பும் பணத்தின் அளவிற்குக் குறைவாக இருக்கிறது. ஆகவே, குறைவாக இருக்கின்ற பணத்தை மக்களிடையே பங்கீடு செய்வதற்காக, கடன்களுக்கு ஒரு விலை வசூலிப்பது அவசியமாகிறது. அவ்விலைக்குப் பெயரே வட்டி. வட்டி கொடுக்கத் தயாராயிருப்போர்களுக்குமட்டுமே கடன்கள் தரப்படும்; வட்டி கொடுக்க முடியாதவர்களுக்குக் கடன்கள் கொடுக்கப்படமாட்டா.

கடன் முதல் ஏன் அரிதாக இருக்கிறது? மக்கள் ஏன் அதிகமாகக் கடன் கொடுப்பதில்லை? இதற்கு மூன்று காரணங்கள் உண்டு. அவையாவன:

(அ) நாம் பாங்கர்களாக இருந்தாலொழிய, சேமிப்புச் செய்யாமல் நம்மால் கடன் தருவதென்பது முடியாது. அதோடு சேமிக்கும் மனவுறுதிக்கும், சேமிக்கும் சக்திக்கும் ஓர் அளவு உண்டு என்பதை நாம் கருத்தில் கொள்ளவேண்டும். இருந்தாலும், ஒரே ஒரு மனிதனுக்குக் கடன் கொடுப்பதற்காகச் சேமிப்பு அதிகமாகச் செய்யப்படவேண்டியதில்லை. வேறொருவனிடம் கொடுத்திருக்கும் பணத்தைத் திருப்பி வாங்கி இம் மனிதனுக்கு நாம் கடன் கொடுக்கலாம்.

(ஆ) சேமிப்பை நமக்காகப் பயன்படுத்தாமலிருந்தால் தான், மற்றவர்களுக்கு அதைக் கடனாகத் தரமுடியும். நாம் அதிகமாகச் சேமிக்கும்போது, அதிகமாகக் கடன் கொடுக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை. கடன் கொடுப்பதற்குப் பதிலாக, நமது சேமிப்புகளை நாம் நமது பொருள்களின் இருப்பை அதிகப்படுத்தும் வழிகளில் ஈடுபடுத்தலாம். உதாரணமாக, தொழிலுக்குப் பயன்படும் எந்திரங்களை நாம் வாங்கிவைக்கலாம்; அல்லது விலைகள் ஏறுமென்றோ அல்லது இலாபம் வருமென்றோ எதிர் பார்த்துக் கச்சாப் பொருள்களை முன்கூட்டியே வாங்கிவைக்கலாம்; அல்லது யுத்தம் வரும் என்று பயந்து உணவுப் பண்டங்களை வாங்கி இருப்புச் செய்யலாம்; அல்லது வீடு, கார் போன்ற உறுதிப் பொருள்களில் எதையாவது ஒன்றை வாங்கிவைக்கலாம். சுருங்கச் சொன்னால், மற்றவர்களுக்குக் கடன் கொடுப்பதைவிட நமக்கே நாம் கடன் கொடுத்துக்கொள்ளலாம் என்று நாம் கருதலாம். நமது சேமிப்புகள் கடன் உருவில் இருப்பதைவிடப் பொருள்கள் உருவில் இருப்பது நல்லது என்று நாம் கருதலாம்.

(இ) கடன் தருவதனால், ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு நமது பணத்திடமிருந்து நாம் பிரிந்திருக்கவேண்டியிருக்கிறது. இக் காலப்பகுதியில் நாம் நீர்மையற்ற நிலையில் (illiquid position) இருக்கிறோம். கடன் தரப்படாமல் பணம் கையிலிருக்குமானால், அது பல்வேறு காரியங்களுக்குப் பயன்படுவதாக இருக்கிறது. இதன் காரணமாகவே, பணம் முழுவதையும் கடன் தருவதற்கு நாம் விரும்புவதில்லை. இதையே வேறுவிதமாகச் சொல்ல வேண்டும் என்றால், நமது சேமிப்பின் ஒரு பகுதி கடனாகவோ அல்லது உறுதிப் பொருள்களாகவோ இருப்பதைவிட, பணமாக இருப்பதையே நாம் விரும்புகிறோம்.

**சேமிப்பு**

மேலே காணப்படும் மூன்று காரணங்களில் முதல் காரணத்தைத் தற்போதைக்கு நாம் விட்டுவிடலாம். இரண்டாவது

காரணத்தை முதல் காரணத்திலிருந்து வேறுபட்டதாகக் கருதி அதிகமாக மக்கள் சேமித்தால், அதிகமாகக் கடன் தருவார்கள் என்பதாக எடுத்துக்கொள்ளலாம். இப்படி எடுத்துக்கொண்டால், சேமிப்பின் அருமைத் தன்மைமட்டுமே, கடன் முதலின் அருமைத் தன்மைக்குக் காரணமாக இருக்கிறது. அப்படி யென்றால், சேமிப்பை நிர்ணயிப்பவை யாவை?

(1) வட்டிவீதம்: சேமிப்பின் அளிப்பு, ஆரஞ்சுப் பழங்களின் அளிப்பைப்போன்று, அதன் விலையை, அதாவது வட்டி வீதத்தைப் பொறுத்திருக்கிறது என்பதாகக் கருதப்படலாம். எனினும்,வட்டி செலுத்தப்படுவது சேமிப்புச் செய்வதற்குத்தூண்டு கோலாக இருந்தாலும், மற்றப் பல காரணங்களும் சேமிப்புச் செய் வதற்குத் தூண்டுகோலாக இருக்கின்றன என்பது பொதுவாக எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்படுகின்றது. விலை குறைவாயிருந் தால், ஆரஞ்சுப் பழங்கள் உற்பத்திசெய்வதை நாம் நிறுத்தி விடுவோம்; ஆனால், வட்டி வீதம் எதிர்க்கணியமாக (negative) இருந்தால் ஒழிய, சேமிப்புச் செய்வதை நாம் நிறுத்திவிடுவதில்லை. ஆரஞ்சுப் பழங்களின் விலை 3 பென்னியிலிருந்து 4 பென்னியாக உயர்ந்தால், அதிகப்படியான ஆரஞ்சுப் பழங்கள் அங்காடிக்குக் கொண்டுவரப்படும் என்று நாம் நிச்சயமாகச் சொல்லலாம். ஆனால்,வட்டிவீதம் 3சதவீதத்திலிருந்து 4 சதவீதமாக உயர்ந்தால், சேமிப்பு அதிகமாகும் என்று நாம் உறுதியாகச் சொல்லமுடியாது. பதவியிலிருந்து ஓய்வுபெறும்போது, ஆண்டு ஒன்றிற்கு 300 பவுன்களை வட்டியாகத் தருகின்ற தொகையைச் சேமித்தால் போதுமானது என்று நினைக்கும் ஒருவன், வட்டிவீதம் உயர்வாக இருந்தால் குறைவாகவே சேமிப்பான். வட்டிவீதம் 3 சதவீதமாக இருக்கும்போது, அவன் 7,500 பவுன்களைச் சேமிக்கவேண்டி யிருக்கிறது; ஆனால், வட்டிவீதம் 4 சதவீதமாக இருக்கும்போது, அவன் 10,000 பவுன்களைச் சேமிக்கவேண்டியிருக்கிறது. இது போலவே, வட்டிவீதங்கள் உயர்வாக இருக்கும்போது, ஆயுள் இன்சூரன்ஸ் கம்பெனிகளின் மதிப்பெச்ச வருமானம் (இது சமுதாயத்தின் மொத்தச் சேமிப்பின் ஒரு பெரும்பகுதியாக இருக் கிறது) குறைந்துவிடுவதாக இருக்கிறது. ஆனால், பெரும்பாலான மக்கள், தாங்கள் எதிர்காலத்தில் பெற விரும்பும் வருமானத்தைப் பற்றித் திட்டவட்டமான கொள்கைகளைக் கொண்டிருக்கிறார்களா என்பது சந்தேகமே. ஆகவே, வட்டிவீதம் அதிகரிப்பது சேமிப்பை அதிகப்படுத்துவதாகவுமிருக்கலாம்.

வட்டிவீதங்கள் குறைவாக இருக்கும்போது, சேமிப்பு அநேக மாகப் பெருமளவில் குறைவதாக இருக்கும்; வட்டிவீதங்கள் உயர்

வாக இருக்கும்போது, சேமிப்புப் பெருமளவில் அதிகரிப்பதாக இருக்கும். உதாரணமாக, வட்டிவீதம் 2 சதவீதமாக இருக்குமானுல், முதலை வைத்துக்கொண்டு வட்டிக்குக் கொடுத்துவருவதைவிட, அதை ஆண்டுத்தொகை (annuity) வாங்கச் செலவிடுவதையே பெரும்பாலான மக்கள் விரும்புவர். மாருக, வட்டிவீதமானது 8 சதவீதமாகவோ அல்லது 10 சதவீதமாகவோ இருக்குமானுல், மக்கள் தங்களது வழக்கமான செலவுகளைக் குறைத்துக்கொண்டு, பணத்தைச் சேமிப்பதில் கவனமாயிருப்பர். இதனுல், அவர்களது பிற்கால வருமானம் அதிகரிக்கும். ஆனுல், வட்டிவீதங்களுக்கேற்றவாறு சேமிப்புப் பெருமளவில் நெகிழ்ச்சியடையுமா என்பது சந்தேகமேயாகும். இங்கிலாந்தில் பொதுவாக வட்டிவீதங்கள் 3 சதவீதத்திலிருந்து 5 சதவீதம்வரை காணப்படுகின்றன.

பெயரளவு வட்டிவீதமானது, சேமிப்பதற்குள்ள பயன்படு தூண்டுகோலைப் (effective inducement) பூராவும் அளவிடுவதாக இல்லை. முதன்முதலாக, பெயரளவு வட்டியிலிருந்து கடன் கொடுப்போனுல் செலுத்தப்படுகின்ற வரிகளை நாம் கழித்துக்கொள்ள வேண்டும். 1 பவுனுக்கு 5 ஷில்லிங்கு வருமானவரியாகச் செலுத்தப்படவேண்டியிருந்தால், இந்த ஒரு பவுனை நான் செலவழித்தாலும் சரி அல்லது சேமித்தாலும் சரி, 5 ஷில்லிங்கை நான் வரியாகச் செலுத்தியே தீரவேண்டும்; ஆனுல், இந்த ஒரு பவுனை நான் சேமித்தால், எனக்குக் கிடைக்கவிருக்கும் வட்டியிலிருந்தும் நான் வருமானவரி செலுத்தவேண்டியிருக்கும். எனவே, பெயரளவு வட்டிவீதம் 4 சதவீதமாக இருக்கும்போது, சேமிப்போனுக்குக் கிடைக்க இருக்கின்ற உண்மையான வட்டிவீதம் 3 சதவீதமாக இருக்கிறது. 100 பவுன்களை இவ்வாண்டு செலவு செய்வதா அல்லது 103 பவுன்களை அடுத்த ஆண்டு வைத்திருப்பதா என்பதை அவன் தீர்மானிக்கவேண்டியிருக்கிறது. அவனுல் சேமிக்கப்படுகின்ற ஒவ்வொரு 100 பவுன்களாலும் அவனுக்குக் கிடைக்கின்ற வருமானம் 3 பவுன்கள்மட்டுமேயாகும். இரண்டாவதாக, பணத்தின் மதிப்பில் ஏற்படும் மாறுதல்களை நாம் கணக்கிற்கு எடுத்துக்கொள்ளவேண்டும். விலைகள் 5 சதவீதம் ஏறும் என்று நான் எதிர்பார்த்தால், பணத்தை 4 சதவீத வட்டிக்குக் கடன் தருவதனுல் நான் பாதிக்கப்படுவேன். ஏனெனில், அடுத்த ஆண்டு 104 பவுன்களைக் கொண்டு வாங்கப்படுகின்ற பொருள்களின் அளவு, இவ்வாண்டு 100 பவுன்களைக் கொண்டு வாங்கப்படுகின்ற பொருள்களின் அளவைவிடக் குறைவாக இருக்கும். இதற்கு மாருக, விலைகள் 5 சதவீதம் இறங்கும் என்று நான் எதிர்பார்த்தால், அவ்வாறு எதிர்பார்த்தபடியே

விலைகள் இறங்குவனவாக இருந்தால், உண்மையான வட்டிவீதம் 9 சதவீதமாக இருக்கும். ஆகவே, கொடுக்கப்பட்டிருக்கும் வட்டி வீதம், விலைகள் ஏறும்போதைவிட இறங்கும்போதே, சேமிப்பதற்கு அதிகமான ஊக்கம் தருவதாக இருக்கிறது. உண்மையான வட்டிவீதம் மாறுமலிருக்கவேண்டும் என்றல், விலைகள் இறங்கும்போது பெயரளவு வட்டிவீதம் குறையவேண்டும்; விலைகள் ஏறும்போது பெயரளவு வட்டிவீதம் ஏறவேண்டும். பணத்தின் மதிப்பில் ஏற்படும் மாறுதல்களோடு ஒப்பிடும்போது, வட்டி வீதத்தில் ஏற்படும் மாறுதல்கள் சிறியனவாக இருந்தாலும், வட்டிவீதம் இவ்வாறு தான் நடந்துகொள்கிறது. இவ்வாறு வட்டிவீதங்களும் விலைகளும் ஒன்றை மற்றொன்று பார்த்து மாறுதலடைவதற்குக் காரணம், விலைகள் இறங்கும்போது அதிகமாகச் சேமிக்கப்படுகிறது என்பதோ அல்லது கடன் தருவதற்கு விருப்பமிருக்கிறது என்பதோ அல்ல. அதற்குக் காரணம், கடன் பெறுவதை மக்கள் அவ்வளவாக விரும்புவதில்லை என்பதேயாகும். கடன்பெற அவர்கள் தயங்குவதற்குக் காரணம், பெயரளவு வட்டிவீதம் குறைவாக இருந்தாலும், உண்மையான வட்டிவீதம் (விலைகளோடு ஒப்பிடும்போது) அதிகமாக இருக்கிறது என்பதேயாகும்.

(2) சமூக அமைப்புகள் : சேமிப்பது என்பது சமூக அமைப்புகளாலும், பழக்கவழக்கங்களாலும் தரப்படுகின்ற ஆதரவையும் ஊக்கத்தையும் பொறுத்திருக்கிறது. சேமிப்பதற்கு நிறைய வழிகள் இருக்குமானல், கடன் தருபவர்களுக்கும் கடன் பெற விரும்புவோர்களுக்குமிடையே உறவு ஏற்படுவது மிகவும் சுலபமாக இருக்கிறதென்றல், அதோடு சேமிப்பது ஒரு சிறந்த செயலாகக் கருதப்படுமானல், சேமிக்கவேண்டும் என்ற ஆவல் மக்களிடையே பெருமளவில் காணப்படும். ஆனல், எந்தெந்தச் சமுதாயங்களில் முதலுக்குத் தேவையில்லாமலும், முதல் அங்காடி (capital market) நன்கு அமையப்பெருமலும், சேமிப்பதற்குச் சமூகத்தின் ஆதரவு இல்லாமலுமிருக்கின்றதோ, அந்தந்தச் சமுதாயங்களில் சேமிக்கவேண்டும் என்ற ஆவல் மக்களிடையே மிகவும் குறைவாக இருக்கும். வர்த்தகத்தில் காணப்படும் ஒழுக்க நெறியாலும் சேமிப்பு அதிகரிப்பதுண்டு. எல்லோரும் நாணயமுள்ளவர்களாக நடந்துகொள்ளும்போது, கொடுத்த பணம் திரும்பிவரும் என்ற நம்பிக்கை கடன் தருவோர்களுக்கு இருக்கிறது; ஆகவே, தடையின்றிக் கடன் கொடுக்கப்படும். சமூகத்தில் அமைதியும் ஒழுங்கும் நிலவி, வாழ்வும் சொத்தும் நன்கு பாதுகாக்கப்பட்டு வருமானல், சேமிப்பினல் ஏற்படும் நன்மைகளை மக்கள் அடைவது நிச்சயமாக இருக்கிறது. ஆகவே, அவர்களிடையே சேமிப்பு அதிகமாக இருக்கும். எனவே, சேமிக்கின்ற பழக்கங்கள் சமூகத்-

திற்குச் சமூகம் வேறுபட்டுக் காணப்படுவனவாக இருக்கின்றன. எலிசபெத் அரசி காலத்திலிருந்ததைவிட அதிகமாகவும், பொடீஷியா (Boadicea) அரசி காலத்திலிருந்ததைவிட மிக அதிகமாகவும், விக்டோரியா அரசி காலத்தில் சேமிக்க வேண்டும் என்ற ஆவல் மக்களிடையே நிலவியது. சொத்துப் பறிபோவதோ அல்லது கொள்ளைபோவதோ மிகையாக இருக்கின்ற சமுதாயங்களை விடவும், முதலை வைத்திருப்பது துன்பம் தரக்கூடியதாகவும், உயிருக்கு உலைவைப்பதாகவுமிருக்கின்ற சமுதாயங்களைவிடவும், நிலையான முதலாளித்துவ சமூகத்தில் சேமிக்கும் பழக்கம் அதிகமாக இருக்கிறது.

(3) **வருமானம்** : வருமானம் அதிகரிக்கும்போது, சேமிக்கும் சக்தியும் அதிகரிப்பதாக இருக்கிறது. என்றாலும், அதிகப்படியான வருமானம் முழுவதையும் நாம் சேமித்துவிடுவதில்லை; ஏனெனில், வருமானம் அதிகரிக்கும்போது, நமது வாழ்க்கைத்தரத்தையும் நாம் உயர்த்திக்கொள்கிறோம். அதே நேரத்தில், அதிகப்படியான வருமானம் முழுவதையும் நாம் செலவழித்துவிடுவதும் இல்லை. நம்மில் சிலர் சேமிப்பதை அதிகப்படுத்தக்கூடும்—குறிப்பாக, வழக்கமான வாழ்க்கைத்தரம் வருமான மாறுதலுக்கேற்றவாறு மாறுதலடையாமலிருக்கும்போது. அனுபவவாயிலாகப் பார்க்கும் போது, வருமானம் அதிகரிக்கும்போது சேமிப்பை அதிகப்படுத்துவோர் தொகையே பெரிதாக இருக்கிறது. பெருந்தொகையைச் சேமிப்பதோடல்லாது, வருமானத்தின் பெரும் பகுதியையும் நாம் சேமிப்பதாக இருக்கிறோம். அனுபவத்தின்மூலம் மற்றொன்றும் தெரிகிறது. ஒரு மனிதனின் நிலையைப் பல்வேறு வருமான அளவுகளில் ஒப்பிட்டுப்பார்ப்பதை விட்டு, ஏழை மக்களைச் செல்வந்தர்களோடு ஒப்பிட்டுப்பார்த்தால், ஏழைமக்களைவிடச் செல்வந்தர்கள் தங்களது வருமானத்தின் பெரும்பகுதியைச் சேமிப்பதாகத் தெரிகிறது. செல்வம் பெருகப்பெருக, சேமிக்கப்படுகின்ற வருமானத்தின் பகுதியும் பெருகுகிறது. ஆகவே, செல்வமிக்க சமுதாயத்தில், தீமை விளைவிக்கின்ற அளவிற்குச் சேமிப்புப் பெருகிவிடுகிறது.

(4) **செல்வம்** : நமது சேமிக்கும் சக்தி நமது செல்வத்தையும் பொறுத்திருக்கிறது. செல்வம் அதிகமாக இருக்குமானால், அதிலிருந்து கிடைக்கின்ற வருமானமும் அதிகமாகஇருக்கும்; ஆகவே, நாம் அதிகமாகச் சேமிப்போம். செல்வம், பனிப்பந்தைப் போல் (snowball) வளர்வதாக இருக்கிறது. செல்வம் வருவது கடினம்; வந்துவிட்டால், அது வளர்பிறையாகிவிடுகிறது.

செல்வம் அதிகரிக்கும்போது, வருமானமும் கூடவே அதிகரித்தால்தான், நாம் அதிகமாகச் சேமிப்போம். செல்வம் அதிகரித்து,

வருமானம் அதிகரிக்காமலிருந்தால், வருமானத்தின் சிறு பகுதியையே நாம் சேமிப்போம். ஏனெனில், செல்வம் நம்மிடம் அதிகமாக இருக்குமானல், சேமிக்கவேண்டும் என்ற ஆவல் குறைவாக இருக்கும். நம்மிடமுள்ள பங்குமாற்றப் பத்திரங்களின் (Stock Exchange Securities) விலை ஏறுமானல் (வட்டிவீதங்கள் இறங்கும் போது இது நிகழும்), தற்போதைய வருமானத்திலிருந்து செலவிடுவதற்கு நாம் தயங்குவதில்லை. ஆனல், இப் பத்திரங்களின் மதிப்புகள் குறைந்து நாம் பாதிக்கப்படுவோம் என்று நினைத்தால், நமது வருமானத்தை நாம் தாராளமாகச் செலவிடுவதில்லை. ஐக்கிய நாட்டில் செலவு செய்கின்ற ஒவ்வொருவனும், இப் பத்திரங்களின் மதிப்புகளில் ஏற்படும் மாறுதல்களின்மீது ஒரு கண் வைத்துக் கொண்டிருக்கிருன்.

(5) சிக்கனம்: ஒரு குறிப்பிட்ட சமூகத்தில், ஒரு குறிப்பிட்ட வருமானத்தில், நம்மால் எவ்வளவு சேமிக்க முடியும் என்பது நம்மைச் சிக்கனப்படுத்தத் தூண்டுகின்ற ஊக்கக் காரணங்களைப் (motives) பொறுத்திருக்கிறது. ஒரு குறிப்பிட்ட தொகையைச் சேமிக்குமாறு இவ்வூக்கக் காரணங்கள் தூண்டுவதில்லை. வீடு கட்டிக்கொடுத்ததற்குச் சொசைட்டிக்குப் பணம் கொடுக்கவேண்டுமென்பதற்காகவோ அல்லது இன்சூரன்ஸ் பத்திரம் எடுத்துக்கொண்டதற்கு மதிப்பெச்சம் (premium) கட்டவேண்டும் என்பதற்காகவோ வேண்டுமென்ருல், நாம் ஒரு குறிப்பிட்ட தொகையைச் சேமித்து வருவதாக இருக்கலாம். இவைகளைத் தவிர, நமது செலவீட்டைப் பெரும்பாலும் நிர்ணயிப்பது, வழக்கமான வாழ்க்கைத்தரத்தைத் தொடர்ந்து வைத்துக்கொள்ள வேண்டும் என்ற வேட்கையேயாகும். இந்த வாழ்க்கைத்தரத்தை வைத்துக்கொள்ளத் தேவைப்படும் தொகைக்கு அதிகமாக நமது வருமானம் இருக்குமானல், எச்சமாயிருப்பது சேமிக்கப்படும்; குறைவாக இருக்குமானல், பற்றுக்குறையைப் போக்கக் கடன் வாங்குவோம் (உதாரணமாக, பாங்கிடம் அதிகப் பற்று வைத்துக்கொள்வதன்மூலம்) அல்லது முதலின் உதவியை நாடுவோம். ஆகவே, குறுகிய காலத்தில், வழக்கமான செலவுகள் போக மீதமிருப்பதே சேமிக்கப்படுகிறது. ஆனல் நெடுங்காலத்தில், சிக்கனமும் செலவீடும் மாறுதலடைவனவாக இருக்கின்றன. தாங்கள் விரும்புவதற்கதிகமாகச் சேமித்து வருவதாக மக்கள் நினைத்தால், தங்களது வாழ்க்கைத்தரத்தை அவர்கள் உயர்த்திக்கொள்வார்கள். இதற்கு மாருக, கடன்களை நிறைய பெற்றுவருவதாகவோ அல்லது தாங்கள் விரும்புவதற்குக் குறைவாகச் சேமித்துவருவதாகவோ அவர்கள் நினைத்தால், செலவுகளைக் கட்டுப்படுத்த அவர்கள் முயலுவார்கள். நெடுங் காலத்தில், பணம் மிச்சமாவதைப் பொறுத்துச் சேமிப்பு அதிகமாவ

தாகவோ அல்லது குறைவதாகவோ இல்லை; அது மாறாத ஒன்றாக இருக்கிறது.

நமது சிக்கனத்தரங்களைத் (standards of thrift) தற்போதைய பொருள்களோடு ஒப்பிட்டுப்பார்க்கும்போது, பிற்காலப் பொருள்களுக்கு அவை, நம்மிடமுள்ள விருப்பத் தராதரத்தைப்பொறுத்திருக்கின்றன. வட்டிவீதம் 5 சதவீதமாக இருக்குமானால், 'இவ்வாண்டு 100பவுன்களை வைத்திருப்பதா அல்லது அடுத்த ஆண்டு 105பவுன்களை வைத்திருப்பதா என்பதை நாம் தீர்மானிக்க வேண்டும். சிக்கனப்படுத்த வேண்டும் என்ற ஆவல் உள்ளவர்கள், அடுத்த ஆண்டு 105 பவுன்கள் வைத்திருப்பதையே விரும்புவர். பிற்காலத்தில் ஏற்படக்கூடிய நெருக்கடியான சந்தர்ப்பங்களைச் சந்திக்க வேண்டும் என்று நாம் நினைத்தாலோ அல்லது சுதந்திரத்தோடு வாழவேண்டும், வாழ்க்கைத்தரமும் உயர்ந்திருக்க வேண்டும் என்று நாம் விரும்பினாலோ அல்லது தொழிலைப் பெருக்குவதற்கு நம்மிடம் முதல் நிறைய இருக்கவேண்டும் என்று கருதினாலோ அல்லது சொத்துகளைப் பெருக்கிச் சமூகத்தில் ஓர் உயர்ந்த நிலையை அடையவேண்டும் என்று ஆவலுற்றாலோ அல்லது பிற்காலத் தேவைகளையும், அவசியங்களையும்பற்றி மற்றவர்களைவிட முன்கூட்டியே நமக்குத் தெரிந்திருந்தாலோ, தற்போது பணத்தைச் சிக்கனப்படுத்தி அதைச் சேமிப்புச் செய்வதில் நாம் ஈடுபடுவோம். கஞ்சத்தனம் காரணமாகவும் நாம் சேமிப்பதுண்டு.[1] பிற்காலத்தைப்பற்றிச் சற்றும் கவலைப்படாதவர்களாகவும், செல்வம் சேமிப்பதற்கு முக்கியத்துவம் தராதவர்களாகவுமிருக்கின்ற மற்றவர்கள் பிற்காலப் பொருள்களைக் கழிவு செய்கின்றவர்களாக இருப்பதனால், தற்போது 100 பவுன்கள் வைத்திருப்பதையே பெரிதும் விரும்புவர். ஒவ்வொருவனும் அவனைச் சிக்கனப்படுத்தத் தூண்டுகின்ற ஊக்கி எதுவாக இருந்தாலும், அவனால் சேமிக்கப்படுகின்ற வருமானத்தின் பகுதி பெரிதாகும்போது, பிற்காலப் பொருள்களுக்குத் தன்னிடமுள்ள விருப்பத் தராதரத்தை மாற்றிக்கொள்வான். இறுதிநிலைவரை அவன் இவ்வாறு தன் விருப்பத் தராதரத்தை மாற்றிக்கொண்டிருப்பான். இறுதிநிலையில், ஒரு பவுனைச் செலவிடுவதும், வட்டிக்கு விடுவதும் ஒரேவிதத் திருப்தியைத் தருவதாக இருக்கிறது.

[1] சார்லஸ் பூத் (Charles Booth) என்பார் செல்வர்களைச் சிக்கனப்படுத்தத் தூண்டும் ஊக்கிகளை, ஏழை மக்களைச் சிக்கனப்படுத்தத் தூண்டும் ஊக்கிகளிடமிருந்து பின்வருமாறு வேறுபடுத்திக் காண்பிக்கின்றார்: மாறுகின்ற வருமானம் மாறாத செலவீட்டிற்குச் சமமாக இருக்கவேண்டும் என்பதற்காக ஏழைகள் சேமிக்கின்றனர். செல்வர்களைப் பொறுத்தவரை இது நேர்மாறாக இருக்கிறது. மாறாத வருமானத்தைக் கொண்டு மாறிக்கொண்டிருக்கும் செலவைச் சந்திக்க வேண்டும் என்பதற்காகச் செல்வர்கள் சேமிக்கின்றனர்.

அதாவது பிற்காலப் பொருள்களுக்குள்ள அவனது இறுதிநிலை விருப்பத் தராதரம், வட்டிவீதத்தால் அளவிடப்படுகின்றவரை, அவன் தனது விருப்பத் தராதரத்தை மாற்றியமைத்துக்கொண்டிருப்பான்.

**கம்பெனிகளின் சேமிப்பு**

தற்காலத் தொழிற் சமுதாயச் சேமிப்புகளின் பெரும்பகுதி கம்பெனிகளால்தான் செய்யப்படுகின்றதே தவிர, தனி நபர்களால் அல்ல. கம்பெனிகள், தங்களது மொத்த இலாபத்தின் ஒரு பாதியை இலாப ஈவுகளாகத் (dividends) தந்துவிட்டு, மறு பாதியைத் தொழிலில் 'மறுபடியும் ஈடுபடுத்திவிடு'கின்றன. எந்த ஊக்கிகள் தனி நபர்களை யூகத்திட்டங்களுக்காகச் (speculative projects)சேமிக்கச் செய்யத் தூண்டுகின்றனவோ, அதே ஊக்கிகள், இலாபத்தைத் தொழிலில் 'மறுபடியும் ஈடுபடுத்துமாறு' கம்பெனிகளைத் தூண்டுகின்றன. இங்கே முக்கியமாக இருக்கின்ற ஊக்கிகள்தொழில்துணிவும் (enterprise), முன்னெச்சரிக்கையு (prudence) மாகும். அதிக இலாபத்தைப் பெற்றுவரும் தொழில் மேலும் பெருகவே விரும்பும். பங்கு மாற்றத்தின் (stock exchange) உதவிகொண்டு தொழிலைப் பெருக்குவதைவிட, சொந்த இலாபத்தைக்கொண்டு தொழிலைப் பெருக்குவதே சற்றுச் சிரமமற்றதாக இருக்கிறது. இலாப ஈவு உயரும்போதெல்லாம், கம்பெனியின் நிர்வாகிகள் புகழப்படுகின்றனர். திறமை கூடுதலாவதைவிட, இலாபத்தை மறுபடியும் முதலீடு செய்வதாலேயே இலாப ஈவு உயர்வதாக இருக்கிறது. ஆகவே,இருப்புக்காக (reserve) பங்கீடு செய்யப்படும் தொகை சற்றுப் பெரிதாக இருப்பதே நல்லது. எதிர்பாராமல் நிகழக்கூடிய அதிகமான போட்டி, வேலைநிறுத்தங்கள், தொழிலின் மந்தநிலை, அதிகமான வரிகள் முதலியவைகளைத் தொழில் தாங்கிக் கொள்ளவேண்டும் என்றால், அதனிடம் நீர்மை இருப்புகள் (liquid reserves) இருப்பது நல்லது. எனவே, இதற்காகவும் இலாபத்தின் ஒரு பகுதி சேமிக்கப்படலாம். எந்திரத்திற்காகும் ஈடுசெய் செலவைச் (replacement cost) சரிக்கட்டுவதற்கென்றும் இலாபத்தின் ஒரு பகுதி ஒதுக்கிவைக்கப்படலாம். இவ்வாறு செய்வது, முதலைப் பயன்படுநிலையில் வைப்பதைத் தவிர வேறெதையும் செய்யவில்லையென்றால், இது சேமிப்பாகாது. தேய்மானத்திற்காகக் காலங்கடந்து ஒதுக்கப்படுகின்ற ஒரு தொகையையே இது சுட்டிக் காட்டுகிறது.

**அரசாங்கச் சேமிப்பு**

அரசாங்கமும் ஒரு நேரத்தில் சேமிக்கிறது. உதாரணமாக, வருமானத்திற்குக் குறைவாகச் செலவிருக்கும்போது, அது சேமிக்

கிறது. இவ்வாறு, உபரி பட்ஜட் உருவாகிக்கொண்டிருக்கும்போது, கூடுதல் வருமானத்தைச் சேமித்துவைக்கின்ற அளவிற்கு வரிவீதங்கள் மாருமலிருக்கின்றன. நாட்டின் முதல் இருப்பை அதிகப்படுத்துகின்ற எந்த ஒரு செலவீடும், பெறப்படுபவர்களால் (recipients) முதல் எனக் கொள்ளப்படுகின்ற எந்த ஒரு செலுத்தலும்(உதாரணம்: யுத்த நஷ்டஈடு தருதல்) அரசாங்கத்தின் சேமிப்பில் சேர்த்துக் கொள்ளப்படவேண்டும். முதற்பொருளிலிருந்து (capital) செலுத்தப்படுகின்ற எந்தத்தொகையும் (உதாரணம்: மரணவரிகள்) அரசாங்கத்தின் சேமிப்பில் இடம்பெறுது. மத்திய அரசாங்கத்தின் பட்ஜட் உபரியைத் தவிர, ஸ்தல ஸ்தாபனங்களிடமும், நாட்டுமயமாக்கப்பட்ட தொழில்களின் சபைகளைப்போன்ற பொது ஸ்தாபனங்களிடமும் உபரி வருமானம் காணப்படுவதாக இருக்கலாம்.

**வட்டி செலுத்தப்படுவது நியாயமானதா?**

பல்வேறு காரணங்களினுல் சேமிப்பு அரிதாக இருக்கிறதென்றும், ஆகவே அதற்கு வட்டி என்று சொல்லப்படுகின்ற ஒரு விலை செலுத்தப்பட வேண்டியிருக்கிறது என்றும் முன்பு நாம் பார்த்தோம். இதனுல் வட்டி செலுத்தப்படுவதை நியாயம் என்று நாம் ஒத்துக் கொள்ள முடியுமா? உதாரணமாக, உழைப்பதிலிருக்கும் சிரமத்தை ஈடுசெய்வதற்காக எவ்வாறு கூலிகள் தரப்படுகின்றனவோ, அதைப்போல, சேமிப்பதிலிருக்கும் சிரமத்தை ஈடுசெய்வதற்காக வட்டி செலுத்தப்படுகிறது என்று நாம் கொள்ள முடியுமா?

மற்றக் காரணிகளின் சம்பாத்தியங்களைப்போன்று, வட்டியானது ஒரே சமயத்தில் விலையாகவும், வருமானத்தின் பிறப்பிடமாகவுமிருக்கிறது. விலை என்ற வகையில், கடன்பெறப் போட்டியிட்டுக்கொள்வோர்களிடையே, குறைவாக இருக்கின்ற சேமிப்பைப் பங்கீடு செய்கின்ற ஒரு சமூகப் பணியை வட்டியானது செய்கிறது. சமதர்ம சமுதாயத்தில்கூட, வட்டியானது இப் பணியைத் தொடர்ந்து செய்துவருவதாக இருக்கக்கூடும். ஏனெனில், அச் சமுதாயத்திலும், போதிய பலனைத் தராத திட்டங்களைத் தவிர்த்து, பலன்தருகின்ற திட்டங்களுக்குமட்டுமே முதலைப் பயன்படுத்துவது விரும்பக்கூடிய ஒன்ருக இருக்கும். இப் பலன்களைப் பணத்தின் மூலம் அளவிடுவது முடியுமென்ருல், வட்டி வசூலிக்கப்படும்போது, நல்ல பலன்களைத் தருகின்ற திட்டங்களுக்குமட்டுமே முதல் ஆளப்படுவதாக இருக்கும். ஆக்கம் குறைவாக இருக்கின்ற திட்டங்கள் கைவிடப்படும். வருமானத்தின் பிறப்பிடமாக வட்டி கருதப்படும்போது, அதை நியாயம் என்று சொல்வதில் சிரமமிருக்கிறது. வட்டி ஒருசிலருக்குச் செலுத்தப்படுவதற்குக் காரணம், அவர்களிடம்

கடன் முதல் (loan-capital) இருக்கிறது என்பதாகும். மற்றவர் களுக்கு வட்டி செலுத்தப்படாததற்குக் காரணம், அவர்களிடம் கடன் முதல் இல்லை என்பதாகும். ஆகவே, வட்டி செலுத்துதல் (interest payments) நியாயமானதென்று நாம் சொல்ல விரும்பினால், முதலைப் பெற்றிருப்பவர்களுக்கும், முதலைப் பெற்றிராதவர்களுக்கு மிடையே காணப்படும் வேறுபாடுகளை நியாயமானவை என்று முதலில் எடுத்துக்காட்டவேண்டும். இரண்டாவதாக, வட்டி செலுத்தப்படாவிட்டால், முதல் சேர்க்கப்படாது அல்லது கடனாகத் தரப்படாது என்பதைச் சுட்டிக்காட்டவேண்டும். முதலாவது கருத்தோடு தொடர்புடைய பிரச்சினைகளை விளக்குவதற்கு இப் புத்தகத்தில் இடம் போதாது; எனவே, அதை நாம் விட்டு விடலாம்.

இரண்டாவது கருத்து, இதற்கு முற்றிலும் வேறுபட்ட பிரச் சினைகளோடு தொடர்புடையதாகும். சிக்கனப்படுத்தத் தூண்டு வதற்கு இறுதிநிலையில்மட்டுமே வட்டிவீதமானது முக்கியமான தாக இருக்கிறது என்பதும், குறைந்த வட்டிவீதங்கள் நிலவும் போது சேமிப்புப் பெருமளவில் தொடர்ந்து செய்யப்படும் என்பதும் நமக்குத் தெரிந்தவையே. வட்டிவீதங்கள் குறைவாக இருக்கும் போது, முதலாளிகள் (capitalists) தங்களது சேமிப்பின் ஒரு பகுதி யைச் (அல்லது தங்களது முந்தைய சந்ததியினரின் சேமிப்பை) செலவிடுவார்கள் என்பது உண்மையே. வட்டி செலுத்தப்படுவது, செலவு செய்வதிலிருந்து முதலாளிகளைத் தடுப்பதாக இருக்கலாம். முதலைச் செலவிடும் வழக்கம் ஏற்கெனவே முதலாளிகளிடம் காணப்படுவதாக இருக்கிறது. மரணவரிகள், வருமானவரிகள் முதலியவை அதிகமாவதன் காரணமாக, சிக்கனப்படுத்தவேண் டும் என்ற ஊக்கம் குறைந்துபோய், தங்களது வழக்கமான வாழ்க்கைத்தரத்தைத் தொடர்ந்து அனுபவித்துவருவதே நல்லது என்று இவர்கள் கருதுவதனால், முதலைச் செலவிடுவதில் ஈடுபடு கின்றனர். விலைகள் ஏறப்போவதாக இருக்கின்ற நிலையில் கடன் தருவதனால், செல்வர்களுக்கு உண்மையானபலன் கிடைப்பதில்லை. ஆகவே, சேமிப்பதைவிட்டுச் செலவு செய்வதில் ஈடுபடுகின்றனர். மற்றொன்றையும் நாம் இங்கே கவனிக்கவேண்டும். வட்டிவீதங்கள் குறைவாக இருப்பதனால், சேமிப்போ அல்லது முதலின் இருப்போ குறைவதற்கு முன்னால், முதலாளிகள் கடன் தருவதற்கு மறுப்ப துண்டு.

**காலத்தேர்வும் (Time-preference), ரொக்க விருப்பமும் (Liquidity-preference)**

கடன் முதல் அரிதாக இருப்பதற்கான இரண்டாவது காரணத் திற்குத் தற்போது வருவோம் சேமிப்பதற்குள்ள தயக்கத்தையன்றிக்

கடன் தருவதற்குள்ள தயக்கத்தையும் நாம் தவிர்க்கவேண்டியிருக்கிறது. எவ்வாறு எதிர்காலத்துப் பொருள்களைவிட நிகழ்காலப் பொருள்களுக்குள்ள 'காலத்தேர்வை'த் தவிர்ப்பதற்கு வட்டி தரப்படவேண்டி யிருக்கிறதோ, அதைப்போலவே, எதிர்காலப் பணத்தைவிட நிகழ்காலப் பணத்திற்குள்ள 'ரொக்க விருப்பத்தை'த் தவிர்ப்பதற்கு வட்டி தரப்படவேண்டியிருக்கிறது. பணத்தைக் கடன் தருவதைவிடக் கையில் வைத்திருக்கத் தூண்டுகின்ற பல்வேறு ஊக்கிகளை 'ரொக்க விருப்பம்' என்ற பதம் சுட்டிக்காட்டுகிறது. பணத்தை ரொக்கமாக வைத்திருப்பதை நாம் அதிகமாக விரும்புவோமானுல், அதாவது நம்மிடம் ரொக்க விருப்பம் மிகையாக இருக்குமானுல், கடன்தர நாம் மிகவும் தயங்குவோம். ஆகவே, வட்டிவீதம் அதிகமாவதாக இருக்கும்.

பணம் என்ருல் என்ன, அதன் பணிகள் யாவை என்பதை நாம் விளக்காவிடில், ரொக்க விருப்பக் கருத்தைப் புரிந்துகொள்வதில் சிரமமிருக்கும். இவ்விளக்கத்தைத் தற்போதைக்குத் தள்ளிவைக்கவேண்டியிருக்கிறது என்ருலும், ரொக்க விருப்பக் கருத்தை ஓரளவிற்குப் புரியவைக்கவேண்டும் என்பதற்காக, பணத்திற்கு நம்மிடமுள்ள தேவையைச் சுட்டிக்காட்ட 'நீர்மை விருப்பம்' என்ற பதம் ஏன் ஆளப்படுகிறது என்பதைத் தற்போது ஆராய்வோம். 'ரொக்கம்' என்ருல் என்ன? அதற்கும் பணத்திற்கும் என்ன தொடர்பு? 'ரொக்கம்' என்பதற்கு, 'இறுதியாகக் கடனைத் தீர்ப்பதற்கு ஏற்றுக்கொள்ளப்படும் பண்டங்களாகவோ அல்லது ஏதாவது ஒன்ருகவோ மாற்றக்கூடிய சக்தி' என்று பொருளாகும். எல்லாப் பொருள்களையும்விடப் பணமே சுலபத்தில் மற்றப் பண்டங்களாக மாற்றப்படக்கூடியதாகவும், கடனைத் தீர்ப்பதில் மிகவும் ஏற்றுக்கொள்ளப்படக் கூடியதாகவுமிருக்கிறது. எந்தச் சமயத்திலும் பயன்படக்கூடிய ஒரு பொருள் பணம். எந்த ஒரு பொருளும் பணத்தைவிட அதிகமான ரொக்கத்தன்மை பெற்றிருக்கவில்லை. பணத்திடம் ஒரு தரமான ரொக்கத்தன்மை காணப்படுகிறது. எனவே, இதைவைத்து மற்ற எந்தப் பொருளின் ரொக்கத் தன்மையையும் நம்மால் அளவிடமுடியும். ஆகவே, 'ரொக்கம்' என்ருல், 'பணமாக மாற்றக்கூடிய சக்தி' என்று பொருளாகும். ரொக்கத்திற்குள்ள விருப்பம், பணத்திற்குள்ள ஒரு விருப்பமாகும்.

பாங்குகள் தரும் முன்பணத்தை உதாரணத்திற்கு எடுத்துக்கொள்வோம். பொருள்களை வாங்குவதற்காக ஒரு வியாபாரிக்குக் கடன்தருகின்ற ஒரு பாங்கு, கொடுத்த கடன் விரைவில் திரும்பி வரும் நெருக்கடியான நிலையில்கூடத் தவருது திரும்பிவரும் என்று

உறுதியாக நம்பலாம். ஏனெனில், வியாபாரியின் பொருள்கள் ரொக்க நிலையிலிருக்கின்றன. நுகர்வோர்கள் வாங்கிக்கொண்டிருக்கின்றவரையில், இப் பொருள்கள் பணமாக மாற்றப்படக் கூடியனவாக இருக்கின்றன. விற்கப்பட்டபிறகு, பொருள்களெல்லாம் பணமாக மாறிவிடுகின்றன. ஆகவே, இதைப்போன்ற கடன்கள் ரொக்கத்தன்மையைப் பெற்றிருக்கின்றன. ஏனெனில், கடனுக்கு உத்தரவாதமளிக்கின்ற பொருள்கள் ரொக்கத்தன்மை பெற்றிருக்கின்றனவாயுள்ளன. இதற்கு மாறுக, வீடு வாங்குவதற்கு ஒருவனுக்குத் தரப்படும் முன்பணம், குறிப்பாக ரொக்கத் தன்மையைப் பெற்றிருக்காது. வீடு வாங்கியவனுக்குக் கடனைத் திருப்பித்தருவதற்கான பணவசதிகள் இருப்பதில்லை. நெருக்கடியான நிலையில், அவன் கடனைத் திருப்பித் தருவது என்பது, சேமிப்பிலிருந்து (இது போதிய அளவு இல்லாமலிருக்கலாம்) எடுத்துக்கொள்வதன் மூலமாகவோ அல்லது வேற்றிடங்களிலிருந்து புதிய கடன்களைப் பெறுவதன் மூலமாகவோ (இது நிச்சயம் சிரமம் தரக்கூடியது), அல்லது வீட்டை விற்பதன் மூலமாகவோதான் (இது இன்னும் அதிகமான சிரமத்தைத் தரக்கூடியது) முடியும். கொடுத்தகடனை உடனே திரும்பப்பெறமுடியும் என்பது, அதாவது கடனைப் பணமாக மாற்ற முடியும் என்பது பாங்கிற்கு சாத்தியமன்று. இதனுல், அது கொடுத்திருக்கும் கடன் ரொக்கத்தன்மையற்றிருக்கிறது.

### வட்டிவீதங்களிடையே காணப்படும் வேறுபாடுகள்

பல்வேறு வகைக் கடன்களுக்குப் பல்வேறு வட்டிவீதங்கள் வசூலிக்கப்படுவதற்கான காரணங்களில் ஒரு காரணம் இங்கே பொதிந்து கிடக்கிறது. பாங்கில், நடப்புக் கணக்கில், நாம் பணம் வைத்துக்கொள்கிருேம். இப்பணத்தை நாம் முன்னறிவிப்புத் தராமலேயே எடுத்துக்கொள்ளமுடியும். நடப்புக் கணக்கில் வைக்கப்படும் பணம், ஒரு குறுகிய காலத்திற்கு, பாங்கிற்குக் கடனுகத் தரப்படுகிறது. எந்த அளவிற்கு இக்காலப்பகுதி குறுகியிருக்கும் என்பது வைப்பாளிகளின் (depositors) விருப்பத்தைப் பொறுத்திருக்கிறது. இதற்கு மாறுக, நீண்ட காலத்திற்கும் கடன் தரப்படுவதுண்டு. இங்கிலாந்து அரசாங்கக் கான்சல்களைப் (Consols) போன்ற பத்திரங்களை வாங்கி வைத்திருப்பவர்கள், கடனைத் திருப்பித்தரும்படி கேட்கமுடியாது. இந்தக் கான்சல்களை வைத்திருப்பவர்கள் வரையற்ற ஒரு காலத்திற்குக் கடன்கொடுத்திருக்கின்றனர். பணம் வேண்டும் என்ருல், அப் பத்திரங்களை இவர்கள் மற்றவர்களுக்கு விற்கவேண்டும். இவ்விரு காலப்பகுதிகளுக்கிடையே, பல்வேறு காலப்பகுதிகள் காணப்படுகின்றன. நெடுங்காலக் கடன்கள் குறைவான நீர்மையைப் பெற்றிருக்கின்றன,

ஆகவே, அவைகளுக்குத் தரப்படவேண்டிய வட்டிவீதம் அதிகமாக இருக்கவேண்டும். சாதாரண நேரங்களில், குறுகிய காலக் கடன்களின் வட்டிவீதம் குறைவாகவும், நெடுங்காலக் கடன்களின் வட்டிவீதம் மிகையாகவுமிருக்கவேண்டும். நாற்பதாண்டுக் காலத்தில் கெடு முடிவதாக இருக்கின்ற பிரிட்டிஷ் அரசாங்கக் கடனுக்குத் தரப்படும் வட்டிவீதமானது, இருபதாண்டுக் காலத்தில் கெடு முடிவதாக இருக்கின்ற ஒரு கடனுக்குத் தரப்படும் வட்டிவீதத்தை விட மிகையாக இருக்கவேண்டும். இருபதாண்டுக் காலத்தில் கெடு முடிவதாக இருக்கின்ற ஒரு கடனுக்குத் தரப்படும் வட்டிவீதமானது, மூன்று மாதகாலத்தில் கெடு முடிவதாக இருக்கின்ற கருவூல உண்டியல் (Treasury Bills)களுக்குத் தரப்படும் வட்டிவீதத்தைவிட மிகையாக இருக்கவேண்டும். என்றாலும், அசாதாரண சந்தர்ப்பங்களில், குறுகிய காலக் கடன்களுக்குத் தரப்படும் வட்டிவீதமானது, நெடுங்காலக் கடன்களுக்குத் தரப்படும் வட்டிவீதத்தைவிட அதிகமாக இருக்கலாம். பணநெருக்கடியின்போது, மூன்று மாதத் தவணைக்குக் கடன்பெறவேண்டியிருக்கிறதென்றால், 6 சதவீதத்திற்குக் குறைவான வட்டி கொடுத்துக் கடன்பெற முடிவது என்பது சாத்தியமன்று. அதே வேளையில், மூன்று வருடத் தவணைக்கு 4 சதவீத வட்டியில் கடன்பெறுவது சாத்தியமாக இருக்கக்கூடும். இதைப்போன்று, நெடுங்காலக் கடன்களைக் குறைந்த வட்டிவீதத்திற்கும், குறுகிய காலக் கடன்களை அதிகமான வட்டிவீதத்திற்கும் கடனளிப்போர்கள் தருவதைப் பார்க்கும்போது, நமக்குத் திகைப்புஏற்படுவதாக இருக்கலாம். அவர்கள் ஏன் இவ்வாறு செய்கின்றனர்? இவ்வாறு அவர்கள் செய்வதற்குக் காரணம், நெருக்கடி நிலைமை மறைந்தபிறகு, வட்டி மறுபடியும் குறையும் என்றும், அவ்வாறு குறையும்போது, நெடுங்கால வட்டிவீதங்களைவிட (long-term rates) குறுகிய கால வட்டிவீதங்கள் (short-term rates) மிகவும் அதிகமாகக் குறையும் என்றும் அவர்கள் எதிர்பார்க்கின்றனர். நெடுங்கால வட்டிவீதங்களில் ஏற்படும் ஒரு சிறு மாறுதல், குறுகிய கால வட்டிவீதங்களில் ஏற்படும் ஒரு பெருமாறுதலை ஈடுசெய்வதற்குப் போதுமானதாக இருக்கிறது. இங்கே முக்கியமாகக் கவனிக்கப்படவேண்டியது என்னவென்றால், குறுகிய கால வட்டிவீதங்களில் ஏற்படும் மாறுதல் நிலையற்றது என்று அவர்கள் நம்பவேண்டும். அவ்வாறு அவர்கள் நம்புவார்களேயானால், குறுகிய கால வட்டிவீதங்களின்மீது அவர்களது நாட்டம் செல்லாது. ஆகவே, பழைய வீதத்தில் நெடுங்காலக் கடன்களை அவர்கள் கொடுத்துவருவர். நெடுங்கால வட்டிவீதங்களைவிடக் குறுகியகால வட்டிவீதங்கள் அடிக்கடிமாறுகின்றனவாக இருக்கின்றன. கடனளிப்போர்களின் போக்கில் ஒரு குறிப்பிடத்தக்க மாறுதல் ஏற்பட்டாலொழிய, நெடுங்கால வட்டிவீதத்தில்

ஒரு பெரும் மாறுதல் ஏற்படுவதில்லை. ஆனால், குறுகிய கால வட்டி வீதமோ, வர்த்தகத்தின் நிலவரத்திற்கேற்றவாறும் நாணயத்திற் கேற்றவாறும் அடிக்கடி மாறுவதாக இருக்கிறது.

வட்டி வேறுபாடுகளுக்கு மற்றொரு காரணம், கடன் வாங்க விரும்புவோர் அத்தனை பேராலும் ஒரேவிதமான உத்தர வாதத்தைத் தரமுடியாது என்பதாகும். கொடுத்த கடன் திரும்பி வருவது உறுதியாக இருக்கும்போது (உதாரணமாக, பிரிட்டிஷ் அரசாங்கப் பத்திரங்களை வாங்கினால் பணம் திரும்பக் கிடைக்கும் என்ற உறுதி இருக்கிறது), கடன்கள் மிகவும் குறைவான வட்டி வீதங்களில் கொடுக்கப்படுவனவாக இருக்கும். ஆனால், கடன் பெற விரும்புவோனின் நடத்தையையோ அல்லது பொருளாதார நிலையையோ கடனளிப்போர்கள் சந்தேகப்படுவார்களேயானால், கடன் கொடுப்பதற்கு அவர்கள் தயங்கி, ஒன்று கடன் கொடுப் பதற்கு மறுத்துவிடுவர் அல்லது கடனைத் திருப்பித் தராது போவதனால் ஏற்படுகின்ற ஆபத்தைச் சரிக்கட்டுவதற்காக அதிக வட்டி வசூலிப்பர். சந்தேகப்பட முடியாதவர்களிடமிருந்து வசூலிக்கப்படும் வட்டிவீதத்திற்கு அதிகமான ஒரு மதிப்பெச் சத்தை (premium) இவர்களிடமிருந்து கடனளிப்போர்கள் வசூலிப்பர். இந்த மதிப்பெச்சத்தின் தொகை, கடன் பெற விரும்புவோனின் தற்போதைய நடத்தையையும், பழைய நடத் தையையும், கடனுக்கு அவன் தருகின்ற உத்தரவாதத்தையும் பொறுத்து வேறுபடுவதாக இருக்கும். இந்தத் தொகை காலத் தவணையைப் பொறுத்தும் வேறுபடும்.

வட்டிவீதங்கள் வேறுபடுவதற்கு அடுத்த காரணம், அங்காடி யில் நிறைகுறைவு காணப்படுவதாக இருக்கலாம். பண அங்காடி யில் (capital market) பல்வேறு கடன்களைத் தருவதில் ஈடுபட்டிருக் கும் பல உப அங்காடிகள் காணப்படுகின்றன. இவை ஒவ்வொன் றும் மற்றொன்றோடு அதிகமாகப் போட்டியிட்டுக்கொள்வதில்லை. பாங்குகள், ஒருவிதக் கடன்காரர்களுக்குக் கடன் கொடுத்துவரு கின்றன; வீடு கட்டும் சொசைட்டிகள் மற்றொருவிதக் கடன்காரர் களுக்குக் கடன் கொடுத்துவருகின்றன. இன்சூரன்ஸ் கம்பெனி கள் ஒருவிதக் கடனளிப்போர்களுக்குக் கடன் கொடுத்துவருகின் றன; முதலீடு டிரஸ்டுகள் (investment trusts) மற்றொருவிதக் கடனளிப்போர்களுக்குக் கடன் கொடுத்துவருகின்றன. குறுகிய காலக் கடன்களைத் தருகின்ற அங்காடி, நெடுங்காலக் கடன்களைத் தருகின்ற அங்காடியிலிருந்து பிரிந்து காணப்படுகின்றது. கடன் வாங்குவோர், கொடுப்போர், பழக்கம் அல்லது அறியாமை காரணமாக ஓர் உப அங்காடியோடு தொடர்புகொண்டிருப்

பதனுல், மற்ற உப அங்காடிகளில் காணப்படும் வீதங்களைவிடக் குறைந்த வீதங்களில் கடனைப் பெறுவதாகவோ அல்லது கொடுப்ப தாகவோ இருக்கலாம். உதாரணமாக, குறுகிய காலக் கடன் களைத் தருவதனுல் ஏற்படும் நன்மைகளைத் தெரிந்துகொள்ள முடியாததனுல், ஒரு கடனளிப்போன், நெடுங்காலக் கடன்களைக் குறைந்த வட்டிவீதத்தில் கொடுத்துவருவதாக இருக்கலாம்; அல்லது, வீடுகட்டும் சொசைட்டிகளில் டெபாசிட்டுகள் வைத்துக் கொள்வதனுல் என்ன கிடைக்கும் என்பதைப்பற்றியோ அல்லது ஸ்தல ஸ்தாபனங்களுக்குக் குறுகியகாலக் கடன்களைத் தருவதனுல் என்ன கிடைக்கும் என்பதைப்பற்றியோ கடனளிப்போர்கள் கவலை கொள்ளாது, சேமிப்புக் கணக்கில் தங்களது பணத்தைப் போட்டு வருவதாக இருக்கலாம்.[1] மேலும், கடனளிப்போர்கள், தொழிலி லிருக்கும் தங்கள் சகாக்களுக்குப் போட்டிவீதத்தைவிட (competitive rate) குறைவான வீதத்தில் கடன் கொடுத்துவருவதாக இருக்கலாம்; அல்லது, தங்களது நண்பர்களுக்குப் பெயரளவு வீதத்தில் அவர்கள் கடன் கொடுத்துவருவதாக இருக்கலாம். ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் செல்வதில் மக்களுக்குத் தடையிருக்குமானுல், அங்காடி மிகவும் நிறைகுறைவாக இருக்கும். ஒரு நாட்டில் அல்லது நாட்டின் ஒரு பகுதியில் செலுத்தப்படும் வட்டிவீதம், மற்ற இடங்களில் செலுத்தப்படும் வட்டிவீதத்திற்கு அதிகமாகப் பெரும்பாலும் இருக்கக்கூடும். ஏனெனில், கடன் பெற விரும்புவோர்களுக்கு அருகிலிருக்கும் பண அங்காடிக்குச் செல் வதே சுலபமாக இருக்கிறது. அதோடு, மற்ற அங்காடிகளில் கடன் வாங்குகின்ற அனுபவம் அவர்களுக்கு இல்லாதிருக்கலாம்; அல்லது மற்ற அங்காடிகளில் உள்ள கடனளிப்போர்களுக்கு அவர் கள் அறிமுகமானவர்களாக இல்லாதிருக்கலாம்.

இறுதியாக, செலாவணித் தன்மையில் (marketability) காணப் படும் வேறுபாடுகள் காரணமாக, பெருங்கடன்களுக்கு ஒரு வீதத் திலும், சிறு கடன்களுக்கு ஒரு வீதத்திலும் வட்டி செலுத்தப்படு வதாக இருக்கிறது. சிறு அளவில் பத்திரங்களை வெளியிடுகின்ற ஒரு கம்பெனியானது அதிகமான வட்டியைச் செலுத்தவேண்டி யிருக்கிறது. ஏனென்னில், இப் பத்திரங்கள் வர்த்தகத்தில் அவ்வள வாகப் பயன்படுவதில்லையாதலால், இவற்றை வாங்குவோர்களைக் காண்பது சிரமமாக இருக்கிறது. ஆகவே, இவற்றை விற்றுப் பணத்தைத் திரும்பப் பெறுவதில் கடனளிப்போர்கள் குறுகிய காலத்தில் பெரும் அவதிக்குள்ளாகின்றனர். அதோடு, ஒரு சிறு

1 1914ஆம் ஆண்டிற்கும் 1918ஆம் ஆண்டிற்குமிடையே கடன் பெறு வதற்கு அதிகமான வட்டி கொடுக்க அரசாங்கம் தயாராக இருந்தது என்றுலும், சேமிப்புக் கணக்கில் மக்களின் பணம் நிறைய இருந்தது.

அங்காடியில் இப் பத்திரங்களின் மதிப்பு ஒரேயடியாக இறங்குவதும் ஏறுவதுமாகவுமிருக்கிறது.

## முதலின் தேவை

கடன் பெற விரும்புவோர்கள், கடனுக்கு வட்டி கொடுக்கச் சித்தமாயிருக்கின்றனர் என்பதிலிருந்து வட்டிக்குச் சமமான மதிப்புடைய ஒரு பணியைக் கடன் செய்கிறது என்பது புலனாகிறது. அது எந்தப் பணியைச் செய்கிறது? இந்த ஆண்டு நான் கடனைப் பெறுகின்ற 100 பவுன்கள், அடுத்த ஆண்டு என்னிடமிருந்து கேட்கப்படும் 105 பவுன்களாக எந்த வழியில் மாறுகிறது? ஏதாவது ஒரு மாயமான வழியில், கடன்கள் தொழிலின் ஆக்கத்தை அதிகப் படுத்துகின்றனவா? கூடுதலாகக் கிடைக்கின்ற இந்த 5 பவுன்கள், தொழிலாளர்களைச் சுரண்டுவதனால் கிடைக்கக்கூடிய இலாபத்திலிருந்து செலுத்தப்படுகின்றனவா? இதுபோன்ற கேள்விகள், பொருளாதாரத்தில் பல வாக்குவாதங்களுக்கு வித்தூன்றியிருக்கின்றன.

தொழிலாளர்களைச் சுரண்டுவதனால் கிடைப்பது வட்டி என்று சொன்னவர்களில், மிக முக்கியமானவர் கார்ல் மார்க்ஸ் (Karl Marx). மனித உழைப்பும் இயற்கைச் சக்திகளும்மட்டுமே ஆக்கமுடைய காரணிகள் என்பது அவர் கருத்து. அவரது விளக்கம் வருமாறு: மற்ற எந்திரங்களின் உதவிகொண்டு, தாதுப் பொருள்களிலிருந்து மனிதன் எந்திரங்களைச் செய்கிறான். இவனுக்கு உதவியளிக்கின்ற மற்ற எந்திரங்கள் முன்பு இருந்த எந்திரங்களால் செய்யப்பட்டவையாகும். இவ்வாறாக ஓர் எந்திரத்திலிருந்து மற்றோர் எந்திரம் உருவாகிறது. ஆனால், முதன்முதலில் எந்திரங்களைச் செய்வதற்கு உதவியவை கருவிகளாகும் (tools). இந்தக் கருவிகளைச் செய்தது மனிதனின் உழைப்பாகும். ஆகவே, எந்திரமானது, ஓர் இருப்புச் செய்யப்பட்ட (stored-up) உழைப்பாகும். இந்தக் கடந்தகால உழைப்பிற்கு, நிகழ்கால உழைப்பிற்குத் தரப்படும் வீதத்தில் ஊதியம் தரப்படவேண்டும். வட்டியோ அல்லது இலாபமோ அதில் சிறிதளவேனும் இடம்பெறக்கூடாது. உழைப்பும் நிலமும் சேர்வதனால் கிடைப்பது முதல்; எந்த ஒரு பணியையும் அது சுயேச்சையாகச் செய்வதில்லை. உற்பத்தி செய்வதில் மனிதனுக்கு உறுதுணையாக இருக்கின்ற இயற்கை, தன் பணிகளுக்குப் பிரதி உபகாரமாக எதையும் கேட்பதில்லை. ஆகவே, உழைப்பின்மூலம் உருவாகின்ற பொருளின் முழு மதிப்புக்குச் சமமான ஊதியம் தொழிலாளிக்கு வந்து சேரவேண்டும். வாரம் அல்லது வட்டிமூலமாக, நிலக்காரன் அல்லது முதலாளிக்குச் செய்கின்ற எந்த ஒரு தொகையும் உழைப்பைச் சுரண்டுவதனால் கிடைக்கின்ற ஒன்றாகும்.

அர்த்தம் தொனிக்கின்ற இக் கருத்து நம்மையெல்லாம் ஈர்ப்ப தாக இருக்கிறது. எனினும், இதில் ஒரு குறை உண்டு. காலத்தின் மதிப்பை அது கவனத்திற்கு எடுத்துக்கொள்ளாது விட்டுவிடு கிறது. காலம் என்ற பணியை, முதலானது, உற்பத்தியாளர் களுக்கும் நுகர்வோர்களுக்கும் செய்கிறது. நமக்குக் கடன் தரப் படும்போது, அதாவது அவசரமாகப் பணத்தைச் செலுத்துவதற்கு நமக்குக் கடனளிக்கப்படும்போது, முதலின் பணியை நாம் நன்கு உணர்கிறோம். மிகவும் வசதியாக இருக்கின்ற ஒரு நிலையின் போது பணத்தைத் திரும்பச் செலுத்துவதற்கான உரிமையைப் பெறுவதற்காக, அதாவது காலத்தை வாங்குவதற்காக வட்டி கொடுக்க நாம் தயாராக இருக்கிறோம். கொடுக்கல் வாங்கலில் மட்டுமே காலம் மதிப்புடையதாக இருக்கவில்லை. உற்பத்திமுறை முழுவதிலும் அது மிகவும் முக்கியமானதாக இருக்கிறது. எல்லா வித உற்பத்தியிலும், பொருளின் உற்பத்திக்கும் அதன் நுகர்ச்சிக்கு மிடையே ஒரு காலம் குறுக்கிடுகிறது. நிலத்தை உழுவதற்கும் விதையிடுவதற்குமிடையேயும், விதையிடுவதற்கும் அறுவடை செய்வதற்குமிடையேயும், அறுவடை செய்வதற்கும் அரைப்பதற்கு (milling) மிடையேயும், அரைப்பதற்கும் அனுப்புவதற்குமிடையே யும் ஒரு காலம் குறுக்கிடுகிறது. இதைப்போலவே வீடு, கப்பல், எந்திரம் ஆகியவைகளைக் கட்டத் துவங்குவதற்கும், கட்டி முடிப் பதற்குமிடையே ஒரு காலம் குறுக்கிடுகிறது. அவைகளைக் கட்டி முடிப்பதற்கும், தங்களது பணிகளை அவைகள் ஆற்றி அழிவதற்கு மிடையே ஒரு நெடுங்காலம் குறுக்கிடுகிறது. இவ்வாறாக, ஒரு விவ சாயி அல்லது வீடு கட்டுவோனின் முயற்சிகள் உடனே விளைவைத் தருவனவாக இல்லை. சற்றுக் காலங்கழித்த பிறகே, அவைகள் விளை வைத் தருகின்றன. இவ் விளைவுகளைப் பெறுவதற்குச் சிறிது காலம் காத்திருக்கவேண்டியது அவசியமாகிறது. இவ்வாறு காத்திருப் பது என்பது யாராவது ஒருவர் சேமித்தால்தான் முடியும். தனது தானியங்கள் விற்பனையாகின்றவரை, விவசாயியானவன், தன்னை யும் தன் தொழிலாளர்களையும் பராமரித்துவர வேண்டியிருக் கிறது. அவனுக்குப் பணம் அவசியமாகிறதென்றால், ஒன்று அவன் சேமிக்கவேண்டும். அதாவது, தன் நுகர்ச்சியை அவன் தள்ளிவைக்கவேண்டும்; அல்லது மற்றொரு சேமிப்போனிடமிருந்து அவன் கடன் வாங்கவேண்டும். அதாவது, நுகர்ச்சியைத் தள்ளி வைக்குமாறு மற்றொருவனைத் தூண்டவேண்டும். ஆகவே, விவ சாயி செய்திருக்கும் வேலையோடு, சேமிப்போன் செய்திருக்கும் 'காத்திருத்தலும்' (waiting) சேர்த்துக்கொள்ளப்பட வேண்டும். வேலை செய்வது, எந்த அளவிற்கு உற்பத்திக்கு இன்றியமையாத தாக இருக்கிறதோ, அந்த அளவிற்குக் காத்திருத்தலும் இன்றி யமையாததாக இருக்கிறது. வேலையைச் செய்கின்ற உழைப்பு ஓர்

உற்பத்திக் காரணியாக இருக்கிறது. அதைப்போலவே காத்திருத்தலின் விளைவான முதலும் ஓர் உற்பத்திக் காரணியாக இருக்கிறது. இதையே வேறுவிதமாகச் சொல்லவேண்டுமென்றால், கடந்தகால உழைப்பாக முதலை நாம் முற்றிலும் கருதமுடியாது. ஏனெனில், எந்திரங்களாகவும் மற்ற மூதற்பொருள்களாகவும் இருப்புச் செய்யப்பட்டிருக்கும் உழைப்பு, தன் ஊதியத்தைப் பெறுவதற்கு முன்னால், காத்திருத்தல் (waiting) செய்யப்படவேண்டியிருக்கிறது.

முயற்சிக்கும் விளைவுக்குமிடையே குறுக்கிடுகின்ற இந்த 'உற்பத்திக் காலம்' (period of production) நீண்டதாக இருக்குமானால், நமது உழைப்பு மிகவும் ஆக்கமுள்ளதாக இருக்கும். உதாரணமாக, ராபின்சன் குரூசோ (Robinson Crusoe) மீன் பிடிக்கப் போவதாக வைத்துக்கொள்வோம். பழைய முறைப்படி அவன் மீன்பிடிக்க விரும்பினால், சிறுவர்களைப்போல் தன் கைகளைக் கொண்டே அவன் மீன் பிடிப்பான். அடுத்து ஈட்டியையோ அல்லது தூண்டிலையும் முள்ளையுமோ செய்து, அதைக்கொண்டு மீன்பிடிப்பதைப்போன்ற ஒரு சுற்றுவழி முறையை (roundabout method) அவன் பின்பற்றலாம். மீன்பிடிப்பதிலேயே தன் நேரத்தைச் செலவிடுவதைவிட்டு, தற்போது தூண்டிலைச் செய்வதற்கும், அதைப் பயன்படுத்துவதற்கும், அவன் தன் நேரத்தைச் செலவிடுகிறான். பிறகு, படகையும் வலையையும் செய்து, அவற்றைக் கொண்டு மீன்பிடிப்பதைப்போன்ற சற்று அதிகமான ஒரு சுற்றுவழிமுறையை அவன் பின்பற்றலாம். இப்படியாக, அவனால் ஆளப்படுவன, முதலில் ஈட்டி, பிறகு தூண்டில், அடுத்துப் படகும் வலையும். மீன்பிடிக்கும் முறையில் ஏற்படும் இந்த ஒவ்வொரு மாறுதலும் முதலை அதிகமாக ஆள்வதில் கொண்டுபோய் விடுகிறது. இவ்விதமாக, நீண்டகாலம் காத்திருக்கவேண்டும் என்ற நிலையின் போது, பெருமளவில் முதல் உபயோகப்படுத்தப்படுவதாக இருக்கிறது. படகு தண்ணீரில் விடப்படுகின்றவரை, படகைச் செய்வதற்கு ராபின்சன் குரூசோ எடுத்துக்கொள்ளும் பிரயத்தனங்கள் அத்தனையும் ஒரு மீனைக்கூட அவனுக்குத் தருவதில்லை. ஆனால், படகு தண்ணீரில் இறங்கிய பிறகு, குன்றுகளைப்போல் மீன்கள் அவனிடம் குவியும். படகு கட்டுவதற்கு அவன் எடுத்துக்கொண்ட நேரத்தில், கையால் மீன்பிடிப்பதை அவன் செய்துவந்திருப்பானால், தற்போது கிடைக்கின்ற மீன்களில் ஒரு சிறு பகுதியைக் கூட அவனால் பெற்றிருக்க முடியாது. தற்போது மீன்கள் அவனுக்கு மிக அதிகமாகக் கிடைத்துவருவதற்குக் காரணம், சுற்றுவழி அல்லது முதலாட்சி உற்பத்தி முறைகளின் (capitalistic methods of production) தொழில் நுட்பமேயாகும். ஆனால்,

நீண்டகாலம் அவனுல் காத்துக்கொண்டிருக்க முடியும் என்ருல் தான், இதைப்போன்ற முறைகளை அவனுல் பின்பற்ற முடியும். ஒரு படகு வாங்கத் தேவைப்படும் பணத்தை அவன் கடன் பெறக்கூடும் என்ருல், காத்துக்கொண்டிருக்க வேண்டிய பளுவை, வட்டி செலுத்த ஒப்புக்கொள்வதன்மூலம், மற்றவர்களுக்கு அவன் தள்ளிவிடலாம். படகைக் கொண்டு மீன்பிடிப்பதனுல் கிடைக்கின்ற அதிகப்படியான மீன்களை விற்றுவரும் தொகையிலிருந்து இந்த வட்டியானது செலுத்தப்படும்.

இந்த உதாரணம் எல்லாப் பண்டங்களுக்கும் பொருந்துவதாக இருக்கிறது. பண்டங்கள் பெரும்பாலும், பல்வேறு முறைகளில் உற்பத்தி செய்யப்படுவனவாக இருக்கின்றன. ஒருசில முறைகளுக்கு முதல் அதிகமாகவும், வேறுசில முறைகளுக்கு முதல் குறைவாகவும் தேவைப்படுகிறது. உற்பத்தியாளர்கள், முதலில் சுலபத்தில் செய்யப்படும் கருவிகளைக்கொண்டு, பூர்வ உற்பத்தி முறைகளைக் கையாண்டுவரலாம். பிறகு, சாதாரண எந்திரங்களைக்கொண்டு நுட்பமான உற்பத்தி முறைகளைக் கையாண்டுவரலாம். அடுத்து, மின்சார சக்தியில் இயங்குகின்ற எந்திரங்களைக்கொண்டு, பெருந்தொழிற்சாலைகளில் உற்பத்தி செய்துவரலாம். ஒவ்வொரு கட்டத்திலும் தலைவீத உற்பத்தி அதிகரிப்பதாக இருக்கிறது. எந்திரத்தை இயக்குகின்ற சாதாரணத் தொழிலாளியின் உற்பத்தியே யல்லாது, பொறியியல் வல்லுநர்கள், கொத்தர்கள், தொழிற்சாலை எந்திரங்களைச் செய்பவர்கள், அவற்றைப் பழுது பார்ப்பவர்கள் ஆகியவர்களின் தலைவீத உற்பத்தியும் அதிகரிப்பதாக இருக்கிறது. தலைவீத உற்பத்தி அதிகரிப்பதாக இருந்தாலும், ஒரு நீண்ட காலம் கழிவதற்கு முன்னுல், உற்பத்திப் பொருள்கள் நுகர்ச்சிக்குக் கிடைப்பனவாக இல்லை. மனிதனின் எந்த விருப்பங்களைப் பூர்த்தி செய்வதற்காக இங்கே வேலை செய்யப்படுகிறதோ (உதாரணமாக, பொறியியல் வல்லுநரின் வேலை), அந்த விருப்பங்கள், ஒரு நீண்ட காலத்திற்குப் பிறகே பூர்த்தி செய்யப்படுவனவாக இருக்கின்றன. நாளைக்கு, 'நிறைய ஜாம் கிடைக்கும்' என்பது உறுதி; ஆனுல், நாளைவரை காத்திருந்தால்தான் அந்த ஜாம் கிடைக்கும். ஆகவே, ஒருபுறம் பார்த்தால், முதல் ஆளப்படுவதனுல், கருவிகளைச் செய்வதற்கும் முடிந்த பொருள்களை (finished goods) வெளியில் அனுப்புவதற்குமிடையே காணப்படும் காலப்பகுதி நீள்கிறது. ஆகவே, மிகவும் ஆக்கமுடைய உற்பத்திமுறைகளைத் தொழிலில் புகுத்துவது சாத்தியமாகிறது என்பது புலனுகிறது. மறுபுறம் பார்த்தால், இம்முறைகளைப் பின்பற்றுவது என்பது, முட்டைகளை ஒருவன் உடனடியாகப் பயன்படுத்தாது குஞ்சு பொரிப்பதற்கு வைத்துக்கொள்

வதைப் போன்று, நிகழ்கால விருப்பங்களைப் பூர்த்தி செய்வதி லிருந்து சாதனங்களை எடுத்துக்கொள்வதன்மூலமே இயல்வதாக இருக்கிறது என்பது புலனாகிறது. காத்திருத்தல் அல்லது சேமித்தல் என்ற தியாகத்தைச் செய்யாமல், இந்த உற்பத்தி முறைகளை நம்மால் ஆளமுடியாது. நீண்டதாகவும், சுற்றுவழியில் அமைவதாகவுமிருக்கின்ற உற்பத்தி முறைகளின் தொழில்நுட்ப நன்மைகளை உத்தேசித்து, கடன்பெறுவோர் வட்டி செலுத்தத் தயாராக இருக்கின்றனர். சமுதாயத்தினால் சேமிக்கப்படுகின்ற தொகை சிறிதாக இருப்பதனாலேயே, வட்டி கொடுக்கவேண்டிய அவசியம் இவர்களுக்கு ஏற்படுகின்றது.

இவ்வாறாக, முதல் தேவைப்படுவதற்கு ஒரு முக்கியமான காரணம், உற்பத்தி செய்வதற்குக் காலம் தேவைப்படுகிறது என்பதாகும். சுற்றுவழி முறையில் பொருள் உற்பத்தி செய்யப்படும்போது, ஒரு வருட முடிவில் உற்பத்தி செய்யப்படும் பொருள்களைவிட, இருமடங்கு பொருள்களைத் தொழிலாளர்கள் இரண்டு வருட முடிவில் உற்பத்தி செய்வார்கள். ஆனால், சேமிப்பின் உதவி கொண்டுதான், இத் தொழிலாளர்களை இரண்டாவது வருட முழுவதும் பராமரித்துவர முடியும். வேறு பல காரணங்களுக்காகவும் முதல் தேவைப்படுவதுண்டு. முதலாவதாக, விளைவுக்குக் காத்திருக்கவேண்டும் என்ற நிலையின்போது, முதல் தேவைப்படுகிறது. கூடுதல் உழைப்பின் உதவியின்றியே, பொருள்களின் மதிப்புக் காலப்போக்கில் உயர்வதுண்டு. மனிதனின் உதவியின்றி, இயற்கைச் சக்திகளின் கரம் படுவதால், காலப்போக்கில் திராட்சை ரசத்தின் சுவை அதிகரிக்கிறது; செடி மரமாகிறது. சுற்றுவழி முறையை, முதல் இங்கே புகுத்துவதில்லை. ஆனால், ஒரு குறிப்பிட்ட காலம் காத்திருக்க நமக்குத் துணைபுரிகிறது. இங்கே காணப்படுகின்ற நுட்ப வினைமுறை, இயற்கை அன்னையால் வகுக்கப்பட்டது; மனிதனால் அல்ல. இரண்டாவதாக, அபரிமிதமாக இருக்கின்ற போது பொருள்களை இருப்புச் செய்து, அரிதாக இருக்கின்றபோது அவற்றைப் பகிர்வு செய்வதற்கோ அல்லது தேவை குறைவாக இருக்கின்றபோது அவற்றை இருப்புச் செய்து, தேவை அதிகமாக இருக்கின்றபோது அவற்றைப் பகிர்வு செய்வதற்கோ, முதல் தேவைப்படுகிறது. செப்டம்பர் மாதத்தில், உருளைக் கிழங்குகள் அபரிமிதமாக இருக்கின்றன. ஏப்ரல் மாதத்தில், அரியனவாக இருக்கின்றன. ஆகவே, ஒரு முதலாளி செப்டம்பர் மாதத்தில் உருளைக் கிழங்குகளை வாங்கி, ஏப்ரல் மாதம்வரை காத்துக்கொண்டிருக்கிறான். இதைப்போலவே, வியாபாரிகள் அதிகமாகக் கிடைக்கின்ற இடங்களிலிருந்து, அரிதாக இருக்கின்ற இடங்களுக்கு உருளைக் கிழங்குகளைக் கொண்டுசெல்கின்றனர். ஏப்ரல் மாதத்தில் உருளைக்

கிழங்குகள் அரியனவாக இருப்பது, அவைகளின் விலையை ஏற்றும். இதனால், முதலாளி இலாபம் பெறுவான். இந்த இலாபத்தின் ஒரு பகுதி அவனது முதலுக்கு வட்டியாக இருக்கும்.

மூன்றாவதாக, அவசரமாகத் தேவைப்படும் பொருள்களைப் பெறுவதற்காக முதல் தேவைப்படுகிறது. நம்மிடம் போதிய பண மில்லாத காரணத்தினால், மற்றவர்களிடமிருந்து கடன் வாங்கு கிறோம். கடனளிப்போர்கள் நமக்குக் கடன் தரும்போது, காத் திருக்கவேண்டிய பளுவை நம்மிடமிருந்து பெற்றுக்கொள்ளுகின் றனர். ஆகவே, ஒரு மதிப்பெச்சத்தை வட்டி செலுத்துவதன்மூலம் அவர்களுக்குத் தருகிறோம். தவணை முறையில்(instalment system) பொருள்களைப் பெறுகின்ற ஒருவனும், கடனில் மூழ்கும் ஓர் ஊதா ரியும், எதிர்காலப் பொருள்களைவிட நிகழ்காலப் பொருள் களையே விரும்புகின்றனர். இதைப்போலவேதான் யுத்தக் கடன் பெறுகின்ற அரசாங்கமும், இவர்கள் சேமிப்பைச் செலவிடுகின்ற னரே தவிர, சேமிக்க முயலவில்லை. எதிர்கால வருமானத்தை எதிர்பார்த்துக் கிடக்கின்றனரே ஒழிய, அதைக் கூடுதலாக்கும் முயற்சியில் இவர்கள் ஈடுபடக் காணோம். ஒவ்வொருவரும் சேமிப் பதைச் செலவிடுவதில் ஈடுபட்டிருக்கின்றனர். எனவே, தவணை முறையில் பொருள்களை வாங்குவோனைத் தவிர, இவர்களில் யாருமே சமுதாயத்தின் முதல் இருப்புக்கு ஒரு துரும்பைக்கூடக் கொண்டுவருவதாக இல்லை. என்றாலும், மற்றக் காரியங்களுக்குக் கடனாகத் தரப்பட்ட முதலைப்போல, இவர்களுக்குக் கடனாகத் தரப்படுகின்ற முதலும் இவர்களுக்கு ஓர் உண்மையான பணியைச் செய்வதாக இருக்கிறது. அதன் காரணமாகவே, இவர்கள் முதலுக்கு வட்டி தர ஒப்புக்கொள்கின்றனர்.

### முதலின் இறுதிநிலை ஆக்கம்

முதல் ஆக்கமுள்ளதாக இருக்கிறது; இதனால், அதைக் கடனா கப் பெறுவோர் நன்மை பெறுகின்றனர். என்றாலும், முதலின் ஆக் கப்பாடு, அதன் அளிப்பு அதிகரிக்கும்போது குறைவதாக இருக் கிறது. அதாவது, மற்ற உற்பத்திக் காரணிகளைப்போல், முத லின் இறுதிநிலை ஆக்கப்பாடும், மற்றவை மாறாதிருக்கும்போது குறைந்து செல்வதாக இருக்கிறது. உற்பத்திக் காலம் மேன் மேலும் அதிகரிக்கும்போது, உற்பத்தி ஓரளவுக்கே அதிகரிக்கும். முதல் அரிதாக இருக்கும்போது, காலத்தை அதிகமாக எடுத்துக் கொள்ளும் உற்பத்தி முறைகளில், எவை கூடுதலான பயன்களைத் தருவனவாக இருக்கின்றனவோ, அவைகளுக்கே முதல் பயன் படுத்தப்படும். ஆனால், முதல் நிறைய கிடைக்கப்படுகின்ற போது, குறைந்த பயன்களைத் தருகின்ற உற்பத்தி முறைகளுக்கும்

அது பயன்படுத்தப்படும். குறைவான முதலைச் செலவிட்டு, நிலக்கரியிலிருந்து மின்சாரத்தை நாம் பெறமுடியும். அதிகமான முதலைச் செலவிட்டு, அணைக்கட்டுகளையும், நீர்மின்சார உற்பத்தி நிலையங்களையும் நாம் ஏற்படுத்தி, மின்சாரத்தின் செலவைக் குறைக்கமுடியும். குறைவான முதலைக்கொண்டு ஒரு பழைய மோட்டார் காரை நாம் வாங்கமுடியும்; சற்று அதிகமான முதலைக் கொண்டு ஒரு புதிய காரையோ அல்லது நல்ல நிலையிலிருக்கின்ற ஒரு பழைய காரையோ வாங்கமுடியும். இவ்வாறாக, முதலை அதிகப்படியாகச் செலவிடுவதன்மூலம், அதிகப்படியான வசதிகளை நாம் அனுபவிக்கிறோம். ஆனால், முதல் அதிகரிக்கின்ற வீதத்தில் வசதிகள் அதிகரிப்பதில்லை. செலவு அதிகரிக்கின்ற அளவிற்கு நம் மகிழ்ச்சி அதிகரிப்பதில்லை. இதற்குக் காரணம், முதல் அதிகரிக்கும்போது, அதன் ஆக்கப்பாடு குறைகிறது என்பதாகும். இஃது ஒரு பொதுவான உண்மையாகும். ஒரு வியாபாரி, முதலை அதிகமாகச் செலவிடுவதனால், பொருள்களை நிறைய வாங்கமுடியும் அல்லது பலவிதப் பொருள்களை வாங்கமுடியும்; ஓர் உற்பத்தியாளன், உயர்ந்தரக எந்திரங்களையோ அல்லது முதலாட்சி உற்பத்தி முறைகளையோ ஆளமுடியும். ஆனால், கூடுதலான முதலினால் கிடைக்கின்ற வருமானம் ஏற்கெனவே இருக்கின்ற இருப்பைவிட (existing stock), குறைவாகவே இருக்கிறது.

இங்கே, முதலின் ஆக்கப்பாடு என்பதற்கு, கடன் முதலின் ஆக்கப்பாடு என்று பொருள். அஃதாவது, கடனைக்கொண்டு வாங்க முடிகின்ற பொருள்களின் ஆக்கப்பாடு என்று பொருள். கடன் முதலின் ஓர் அதிகப்படியான அலகை உபயோகப்படுத்துவதனால் கிடைக்கின்ற அதிகப்படியான வருமானத்தில், தேய்மானம் போக மீதமிருப்பதே முதலின் இறுதிநிலை ஆக்கமாகும். ஆகவே, முதலின் இறுதிநிலை ஆக்கப்பாடு, முதற் பொருள்களிலிருந்து எதிர்பார்க்கப்படுகின்ற வருட வருமானத்தை மட்டுமல்லாது, முதற் பொருள்களுக்காகும் செலவையும் பொறுத்து மாறுவதாக இருக்கிறது. முதல் குவிந்துகொண்டிருக்கும்போது, எந்திரங்களின் விலை ஏறுமானால், முதலின் இறுதிநிலை ஆக்கப்பாடு குறையும். ஏனெனில், அதிகப்படியான எந்திரங்கள் ஆளப்படுவனவாக இரா. அதோடு, எந்திரங்களை வாங்குவதற்கு முதலைப் பெருமளவில் உபயோகிப்பது அவசியமாகும்.

முதல் பயன்படுகின்ற பல உபயோகங்களில், அதன் ஆக்கத்தை அளவிடுவது என்பது மிகவும் சுலபமல்ல. சாலைகளைவிட வீடுகளும், போர்க்கப்பல்களைவிடச் சாலைகளும் ஆக்கமுடையனவாக இருக்கின்றனவா என்பதை யாரால் சொல்லமுடியும்? வீட்

டின்மூலம் கிடைக்கின்ற வருமானம் பண உருவில் இருப்பதால், வீட்டின்மீது முதலைச் செலவிடுவதனால் கிடைக்கின்ற வருட வருமானத்தை நம்மால் அறிந்துகொள்ள முடியும். ஆனால், சாலைகளும் போர்க்கப்பல்களும் தருகின்ற நன்மைகள் பண உருவில் இல்லையே! இதனால் அவைகளின் வருமானத்தை அறிந்துகொள்வது சாத்தியமன்று. இதன் காரணமாக, வீடுகள்மட்டுமே ஆக்கமுடையவை என்று நாம் சொன்னால், அதில் அர்த்தம் ஏதுமிருக்காது. நாம் சொல்லவேண்டியது என்னவென்றால்,முதலின் ஆக்கப்பாடு, கடன் பெறுவோனால் அளந்தறியப்படுகிறது என்பதேயாகும். அவன் விற்பனைக்காகப் பொருள்களை உற்பத்தி செய்துகொண்டிருக்கும்போது, இப் பொருள்களுக்கு நுகர்வோர்கள் தர விரும்பும் விலைகளைக்கொண்டு முதலின் ஆக்கப்பாட்டை அறிந்துகொள்கிறான். மாறாக, தனது விருப்பங்களைப் பூர்த்திசெய்வதற்காக, முதலை அவன் உபயோகித்துக்கொண்டிருக்கும்போது, முதலின் பயனை வைத்துத்தானே அதன் ஆக்கப்பாட்டை அறிந்துகொள்கிறான். முதலின் ஆக்கத்தைப்பற்றிய வியாபாரியின் சொந்தக் கருத்து, அவனால் எதிர்பார்க்கப்படும் இலாபத்தைப் பொறுத்திருக்கிறது. இஃது அளவிடப்படக்கூடியது. முதலின் ஆக்கத்தைப் பற்றிய ஓர் அரசாங்கத்தின் கருத்து, சமுதாயத்தின் தேவைகளைப் பற்றிய அதன் எண்ணத்தைப் பொறுத்திருக்கிறது. இஃது அளவிடப்பட முடியாதது.

முதலின் இறுதிநிலை ஆக்கமே, கடன் பெறுவோர்கள் கொடுக்கவிருக்கின்ற வட்டிவீதத்தை நிர்ணயிக்கிறது. உதாரணமாக, எந்த உபயோகங்களில் முதல் மேன்மேலும் அதிகமாக ஆளப்பட்டால் வருமானம் குறைந்து செல்வதாக இருக்கிறதோ, அந்த உபயோகங்களுக்கு உற்பத்தியாளர்கள் முதலைப் பயன்படுத்துவதாக இருக்கலாம். கூடுதலாகப் பெறும் கடனால் கிடைக்க இருக்கும் வருமானம், அக் கடனுக்குச் செலுத்தப்படவேண்டியிருக்கும் வட்டிக்குச் சமமாக இருக்கின்றவரை, அஃதாவது, முதலின் இறுதிநிலை ஆக்கப்பாடும் வட்டிவீதமும் ஒன்றுக்கொன்று சமமாக இருக்கின்றவரை, நிறைவுப் போட்டி நிலவும்போது, உற்பத்தியாளர்கள் கடன்களைப் பெற்றுவருவர். வட்டிவீதத்தோடு ஒப்பிட்டுப்பார்க்கப்படும் வருமானமானது, கடனை முதலின் சொத்துகளாக (capital assets) மாற்றுவதன்மூலம் கிடைக்கிறது. இந்த முதலின் சொத்துகள் தம் வாழ்நாள் முழுவதும் உற்பத்தியை அதிகரித்துச் செல்வனவாக இருப்பதனால், இவைகளின் மொத்த வருமானத்தை இவ்வளவு என்று நாம் நிச்சயமாகச் சொல்ல முடியாது. இருந்தாலும், கடந்தகால வருமானத்தைவைத்தும், எதிர்காலத்தில் கிடைக்கப்போகின்ற வருமானத்தைவைத்தும், உற்

பத்தியாளர்கள் இந்த முதலின் சொத்துகளால் ஏற்படும் வருமானத்தை அளந்தறியவேண்டும். இரண்டாவதாக, முதலின் சொத்துகள், காலப்போக்கில் தேய்வனவாக இருப்பதனால், இவைகளின் தேய்மானச் செலவுக்கென்று, மொத்த வருமானத்திலிருந்து ஒரு குறிப்பிட்ட தொகை கழித்துக்கொள்ளப்படவேண்டும். இவ்வாறு, மொத்த வருமானத்திலிருந்து தேய்மானச் செலவைக் கழித்து வருகின்ற தொகை, நிகர வருமானம். இதுவே வட்டியோடு ஒப்பிட்டுப்பார்க்கப்படுகிறது. மூன்றாவதாக, கடன் தரப்படுகின்ற கெடுவுக்கேற்றவாறு முதலின் ஆக்கம் வேறுபடுகிறது. குறுகிய காலக் கடன்களைவிட நெடுங்காலக் கடன்களே உற்பத்தியாளர்களுக்கு அதிகமான வருமானத்தைக் கொடுப்பனவாக இருக்கின்றன. ஆகவே, அவைகளுக்கு அதிக வட்டி கொடுக்க அவர்கள் விரும்புகின்றனர். எனினும், அதிகமான வட்டிகொடுத்து, குறுகிய காலக் கடன்களையும் அவர்கள் பெறுவதுண்டு. உதாரணமாக, கச்சாப் பொருள்களின் இருப்பையோ அல்லது முடிந்த பொருள்களின் அளிப்பையோ, தாற்காலிகமாக அதிகப்படுத்த வேண்டிய அவசியம் எழுகின்றபோது, குறுகிய காலக் கடன்களை அவர்கள் பெற விரும்புகின்றனர். அடுத்து, வாணிப மந்த நிலையைச் சமாளிப்பதற்கோ அல்லது எதிர்பாராத செலவுகளைச் சந்திப்பதற்குப் பணத்தை ரொக்கமாக வைத்துக்கொள்ளவேண்டும் என்பதற்கோ, அவர்கள் குறுகிய காலக் கடன்களைப் பெற விரும்புவதாக இருக்கலாம். ஒரு குறிப்பிட்ட காலப்பகுதிக்குத் தரப்படும் கடன்களுக்குச் செலுத்தப்படும் வட்டிவீதம், அக் காலப் பகுதியில் மூலதனம் செய்யப்படும் முதலின் இறுதிநிலை ஆக்கத்திற்குச் சமமாக இருக்கும்.

போட்டி நிறைவற்றதாக இருக்கும்போது, இரு காரணங்களினால் முதலின் இறுதிநிலை ஆக்கம், வட்டிவீதத்தைவிட மிகையாக இருக்கும். கடன்களுக்கு அங்காடியில் நிறைகுறைப் போட்டி இருக்குமானால், கூடுதல் வட்டி செலுத்தாமல் கடன் பெறுவோர்களால் கூடுதலான முதலைப் பெறமுடியாது. ஆகவே, கடன் வாங்குவதைக் குறைத்துக்கொள்வர். கூடுதலாக வாங்கப்படுகின்ற ஒவ்வொரு கடனும், உற்பத்தியை அதிகப்படுத்துகின்ற நேரத்தில், புதுக்கடனுக்குத் தரப்படவேண்டியிருக்கும் வட்டித் தொகையைக் கடன் பெறுவோர்களுக்கு ஆகின்ற செலவோடு கூட்டுவதோடல்லாது, பழைய கடன்களின் வட்டித் தொகையையும் அதிகப்படுத்துகிறது.[1] நாம் முன்பு பார்த்திருப்

[1] எல்லாக் கடன்களுக்கும் அவர்கள் ஒரே வீத வட்டி செலுத்திவருகின்றனர் என்பதாக இங்கே எடுத்துக்கொள்ளப்படுகிறது. கடனளிப்போர்களுக்குப் பல்வேறு வீதங்களில் வட்டி செலுத்தமுடியுமென்றால், எந்தக் கடனை வாங்கும்போது,

பதைப்போல, பொருள்களுக்கு அங்காடியில் நிறைகுறைப் போட்டி காணப்படுமானால், விலைகளை ஏற்றமாக இருக்கச்[1]செய்ய, உற்பத்தியாளர்கள் உற்பத்தியைக் குறைத்துக்கொள்ளும்போது, கடன் வாங்குவதையும் குறைத்துக்கொள்வர். ஏற்கெனவே, இருந்த முதலினால் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களின் மதிப்பில் ஏற்படும் இறக்கத்தைக் கூடுதலான முதலினால் உற்பத்தி செய்யப் படும் பொருள்களின் மதிப்போடு அவர்கள் ஒப்பிட்டுப்பார்ப்பர். இவ்வாறாக, இறுதிநிலையின்போது முதலை ஆள்வதனால் கிடைக்கின்ற நிகர வருமானம், முதலின் இறுதிநிலை ஆக்கத்திற்குக் குறைவாக இருக்கும். இதற்குக் காரணம், இறுதிநிலையின் போது முதலை ஆள்வதனால் விற்பனை அதிகரிப்பது, விலைகளை இறக்கிவிடும்.

## இறுதிநிலை ஆக்கத்தின் மாறுதல்கள்

முதலின் இறுதிநிலை ஆக்கம் உயரும்போதோ அல்லது இறங்கும்போதோ, முதலின் தேவை அதிகரிப்பதாகவோ அல்லது குறைவதாகவோ இருக்கும். புத்தாக்கத்தின் (invention) காரணமாக, முதலின் இறுதிநிலை ஆக்கம் உயர்வதாக இருக்கிறது. உதாரணமாக, புதிய போக்குவரத்துச் சாதனங்கள் (19ஆம் நூற்றாண்டில்-புகை வண்டி, நீராவிக் கப்பல்கள்; 20ஆம் நூற்றாண்டில்-வானவூர்தி) அல்லது செய்தியை அனுப்பும் புதிய முறைகள்( நீரிடைத் தந்தி, தொலைபேசி,கம்பியில்லாத் தந்தி) அல்லது இயக்கசக்தி பெறுவதற்கான புதிய வழிகள் (நீராவி, மின்சாரம், பெட்ரோல் எண்ணெய்) முதலியவை கண்டுபிடிக்கப்படும்போது, முதலின் இறுதிநிலை ஆக்கம் அதிகரிக்கிறது. இரண்டாவதாக, புலனீடான முதலை (concrete capital) அரிதாகச் செய்கின்ற எதுவும், முதலின் இறுதிநிலை ஆக்கத்தை அதிகப்படுத்துகிறது. பூகம்பம் அல்லது போரின் காரணமாகப் பெருமளவில் சொத்துகள் நாசமாக்கப்படுவதும், மக்கள் தொகை வளர்வதும், உழைப்பின் திறன் அதிகரிப்பதும், கனிப் பொருள்கள், எண்ணெய்போன்ற இயற்கைச் சாதனங்கள் கண்டு பிடிக்கப்படுவதும், முதலின் இறுதிநிலை ஆக்கத்தை அதிகப்படுத்து கின்றன. மூன்றாவதாக, வருமானத்தை எதிர்பார்த்து மற்றவர்களின் சேமிப்பைச் செலவிடுமாறு மக்களைத் தூண்டுகின்றஎதுவும், முதலின் இறுதிநிலை ஆக்கத்தை அதிகப்படுத்துகிறது. உதாரணமாக, போருக்கு ஆயத்தம் செய்வதற்காக ஓர் அரசாங்கம் கடன் பெறுவதுண்டு; பிறகு போரிடுவதும் உண்டு. நான்காவதாக, எப் பொருள்களை உற்பத்தி செய்வதற்கு முதல் குறைவாகத் தேவைப்

[1] முதலின் இறுதிநிலை ஆக்கத்திற்கு வட்டிவீதம் சமமாக இருக்கிறதோ, அந்தக் கடன்வரை, கடன்பெற விரும்புவோர்கள் கடன் வாங்கிவருவர்.

படுகிறதோ அப் பொருள்களை விட்டு, எப் பொருள்களை உற்பத்தி செய்வதற்கு முதல் அதிகமாகத் தேவைப்படுகிறதோ அப் பொருள்களை மக்கள் விரும்பத் துவங்குவார்களேயானால், முதலின் இறுதி நிலை ஆக்கம் அதிகரிக்கும். உதாரணமாக, முதல் மிகவும் அதிகமாக மூலதனம் செய்யப்படவேண்டியிருக்கும் வீடுகளுக்கு மக்கள் சென்று, அதிகமான வாடகையைக் கொடுத்துவருவதாக இருக்கலாம். அதே நேரத்தில், உற்பத்தி செய்வதற்கு முதல் குறைவாகத் தேவைப்படுகின்ற மதுபானத்தின்மீது குறைந்த பணத்தையே அவர்கள் செலவிட்டுவருவதாக இருக்கலாம். தேவையில் ஏற்படுகின்ற ஒவ்வொரு மாறுதலும், முதலின் இறுதிநிலை ஆக்கத்தை உயர்த்தும். ஏனெனில், தேவை மாறும்போது, ஒரு பண்டத்தை அதிகமாகவும் மற்றொரு பண்டத்தைக் குறைவாகவும் அளிக்கவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. இரண்டாவது பண்டத்தை உற்பத்திசெய்ய உதவிய இயந்திரங்களையும் சாதனங்களையும் முதலாவது பண்டத்தை உற்பத்தி செய்வதற்கு அனேகமாகப் பயன்படுத்த முடியாதாகையால், முதலாவது பண்டத்தை உற்பத்தி செய்வதற்குப் புதிய இயந்திரங்களையும் சாதனங்களையும் வாங்குவது அவசியமாகிறது. எனவே, முதலின் தேவை அதிகரிக்கும். இப் பண்டத்தை உற்பத்தி செய்வதில் உழைப்பைவிட முதலே மிகையாகப் பயன்படுத்தப்பட வேண்டியிருந்தால், முதலுக்குள்ள தேவை இன்னும் சற்று அதிகரிக்கும். ஐந்தாவதாக, எதிர்காலத்தைப்பற்றி வியாபாரிகளுக்கு நம்பிக்கையூட்டுகின்ற எதுவும், முதலின் இறுதிநிலை ஆக்கத்தை அதிகப்படுத்துவதாக இருக்கும். உதாரணமாக, வியாபாரிகள் எதிர்காலத்தைப்பற்றி நம்பிக்கையுள்ளவர்களாக இருப்பார்களானால், இலாபம் வரும் என்று எதிர்பார்ப்பார்கள். ஆகவே, கடன் வாங்கத் தலைப்படுவார்கள். அங்காடி பெருகிக்கொண்டிருப்பதாகக் காணப்படுமானால்,எதிர்காலத்தில் இலாபம் வரும் என்று அவர்கள் எதிர்பார்ப்பர். மக்கள்தொகையும் வர்த்தகமும் வளராமலிருக்கின்ற நிலையைவிட, அவை வளர்ந்துவரும் நிலையில், முதலின் இறுதிநிலை ஆக்கம் மிகையாக இருக்கிறது. இதற்குக் காரணம், வர்த்தகர்கள் துணிச்சலுள்ளவர்களாக இருப்பதன்றி, ஆண்டிற்கு ஆண்டு வருமானம் கூடுதலாகும் என்று எதிர்பார்க்கக்கூடியவர்களாகவுமிருக்கின்றனர். இந்த எதிர்பார்ப்புக்கு வித்தூன்றுவது வளர்ந்துவரும் மக்கள்தொகையும் அங்காடியுமேயாகும்.

### முதல் பெயர்ச்சி (Mobility of Capital)

கடந்தகாலச் சேமிப்பு ஏற்கெனவே முதலீடு செய்யப்பட்டிருக்கிறது. சமூகத்தின் கரத்தில் தவழும் புலனீடான முதலாக அது காட்சியளித்துக்கொண்டிருக்கிறது. நிகழ்காலச் சேமிப்பை

எதற்குப் பயன்படுத்துவது என்பது இன்னும் தீர்மானம் செய்யப் படவில்லை; அது சுயேச்சையாக இருக்கிறது. முதல் அவசர மாகத் தேவைப்படும் தொழில்களிலும் இடங்களிலும், இந்தச் சேமிப்பை நாம் பயன்படுத்தலாம். எந்த ஓர் உபயோகத்திலும் முதலின் தேவை அதிகரிக்கும்போது, இந்தச் சுயேச்சைச் சேமிப்பி லிருந்து ஒரு குறிப்பிட்ட தொகையை எடுத்துக்கொள்வதன்மூலமே, அந்தத் தேவை பூர்த்தி செய்யப்படுகிறது. முதலின் தேவை அதிகரிக்கும்போது, வட்டிவீதம் அதிகரிக்கிறது. அப்போது, சேமிப்பானது, ஏற்கெனவே முதலீடு செய்யப்பட்டிருக்கும் தொழில் களிலிருந்து வளர்ந்துவரும் வேறு தொழில்களுக்குப் பெயர்ந்து செல்கிறது. இளைஞர்கள் இடத்திற்கு இடம் பெயர்ந்து செல்வதைப் போன்று, சுயேச்சை முதலும் இடத்திற்கு இடம் மாறிச் செல்வ தாக இருக்கிறது. மாறுமுதலும் (fixed capital) ஓர் உபயோகத்தி லிருந்து மற்றோர் உபயோகத்திற்குப் பெயர்ந்து செல்வதாக இருக் கக்கூடும். ஒரு பண்டம் உற்பத்தி செய்யப்படுவது நிறுத்தப்படு மானால், அப்பண்டத்தை உற்பத்தி செய்வதற்கு உதவிய கட்டடங் களும் இயந்திரங்களும் மற்றொரு பண்டத்தை உற்பத்தி செய்யப் பயன்படுத்தப்பட ஆரம்பிக்கும். ஒரேவித இயந்திரத்தைக் கொண்டு பல்வேறு பண்டங்களை உற்பத்தி செய்வது இயலக்கூடும். இப் பண்டங்கள் ஒவ்வொன்றும் மற்றொன்றிற்குப் பதிலாகப் பயன் படுத்தப்படக்கூடியதாவுமிருக்கலாம். ஒரே கடையில் பல்வேறு பண்டங்கள் விற்கப்படுவதுண்டு. பிரிக்கப்படுகின்ற கப்பலிலிருந்து ஓர் ஓட்டலுக்குத் தேவையான மரச்சாமான்களும், ஒரு சுரங்கத் தொழிலுக்குத் தேவையான இயந்திரங்களும், ஓர் எஃகுத் தொழி லுக்குத் தேவையான பொருள்களும் கிடைப்பதுண்டு. இவ்வாறாக, ஒரு தொழில் நலியும்போது, மற்றொரு தொழில் சுயேச்சை முதலை அதிகம் எடுத்துக்கொள்ளாமலேயே வளர்ந்துவரமுடியும். மாறா முதல், சுயேச்சை முதலாக மாற்றப்படுவதன்மூலமும், முதல், பெயர்ச்சியுள்ளதாக மாறும். மாறாமுதல் தேயக்கூடியதாக இருக்கும்போது, அதன் தேய்மானத்திற்கென்று ஒரு குறிப்பிட்ட தொகை ஒதுக்கிவைக்கப்படும். இதை நாம் 'தேய்மான நிதி' என்று அழைக்கலாம். இந்தத் தேய்மான நிதி, உண்மையில் சுயேச்சை முதலாக இருக்கிறது. இச் சுயேச்சை முதலை வைத் திருப்போர், அதை ஒரு சொத்தை (property) மாற்றியமைப் பதற்குப் பயன்படுத்திக் குறைந்த வருமானம் பெறுவதை விட்டு, வேறுவிதச் சொத்துகளுக்கு—அதாவது, வேறுவிதத் தொழில்களுக்கு அதைப் பயன்படுத்திக் கூடுதலான வரு மானத்தைப் பெறலாம். தேய்ந்துவரும் ஒரு சொத்தை மாற்றி யமைத்து, முதல் இருப்பின் அளவை (physical stock of capital) மாறாத நிலையில் வைத்திருக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை.

இருந்தாலும், ஒருசில வேளைகளில் இது செய்யப்படுகிறது. புதிய இயந்திரத்தைப்போன்று பழைய இயந்திரம் அமைவது இயற்கைக்கு முரண்பட்டதென்றாலும், ஒரு பழைய இயந்திரம் மாற்றியமைக்கப்படுகின்றபோது ஓர் உயர்ந்தரக இயந்திரமே உபயோகப்படுத்தப்படத் துவங்குகிறது. தேய்மான நிதியின் உரிமையாளர்கள், அந் நிதியை இலாபமற்ற தொழில்களிலிருந்து விடுவித்து, இலாபம் தருகின்ற தொழில்களில் மறுபடியும் முதலீடு செய்வதாகக் காணோம். இதற்குக் காரணம் என்ன? ஒரு கம்பெனியின் நிர்வாகி அல்லது தொழில் முயல்வோன் (entrepreneur), எதிர்காலத்தைப்பற்றி நல்ல நம்பிக்கை கொண்டிருந்தால், அவன் இருந்துவரும் தொழில் அவனுக்குப் புகழீட்டுவதாக இருந்தால், அத் தொழிலில் தொடர்ந்து இருப்பதையே அவன் விரும்புகிறான். அவ்வாறு விரும்பும்போது, அத் தொழிலுக்குப் பயன்படும் கட்டடங்களையும் இயந்திரங்களையும் புதுப்பிக்கவே அவன் முயல்வானே தவிர, கவர்ச்சிகரமாக இருக்கின்ற மற்ற வழிகளில் முதலைச் செலவிடுவதில் ஈடுபடுவதில்லை. இவ்வாறாக, ஒரு தொழில்மய சமுதாயத்தில் (industrialised community), தேய்மான நிதியின் அளவு நிகழ்காலச் சேமிப்புக்குச் சமமாக இருக்கிறதென்றாலும், சேமிப்பே முதலைப் பெயர்ந்துசெல்ல வைப்பதாக இருக்கிறது. நலிகின்ற தொழில்களிலிருந்து வளர்கின்ற தொழில்களுக்கு முதல் செல்வதை விட, சேமிப்பிலிருந்து வளர்கின்ற தொழில்களுக்கு முதல் செல்வதன்மூலமே, முதலின் தேவை பூர்த்தி செய்யப்படுவதாக இருக்கிறது.

## வட்டிவீதம்

வட்டிவீதங்களை நிர்ணயிக்கின்ற சக்திகளை இதுவரை நாம் தெளிவாக எடுத்துச்சொல்லவில்லை. ஒரு முறை, வட்டிவீதம் நீர்மை-விருப்பநிலையைப் (state of liquidity-preference) பொறுத்திருக்கிறது என்றும், பணத்தைக் கையில் வைத்திருப்பதனால் ஏற்படும் நன்மைகளோடு சமப்படுத்திவைக்கின்ற பணியை வட்டிவீதம் செய்கிறது என்றும் சொன்னோம். மற்றொரு முறை, நமது கவனத்தைக் கடன் நிதிகளின் (loanable-funds) மீதும், அவைகளின் உபயோகத்திற்குள்ள தேவையின்மீதும் ஓட்டி, இவை இரண்டையும் ஒன்றுக்கொன்று சமமாக இருக்கச் செய்கின்ற பணியை வட்டிவீதம் ஆற்றுகிறது என்றும் சொன்னோம். தற்போதைய முதல் இருப்பின் (existing stock of capital) வாயிலாக முதலில் சொன்னது விளக்கப்பட்டது. கடன் நிதிகளின் போக்கு (flow of loanable-funds) வாயிலாக, இரண்டாவது சொன்னது விளக்கப்பட்டது. இவ்விரு விளக்கங்களிடையே வேறுபாடுகள்

இருப்பதைப்போன்று தோன்றலாம்; ஆனால், உண்மையில், அவை ஒரே கருத்தைத்தான் சுட்டிக்காட்டுகின்றன.

நீர்மை-விருப்பக் கருத்துப்படி பார்த்தால், பொதுமக்கள், தங்கள் செல்வத்தைக் கடன்கள் உருவில் வைத்துக்கொள்வதா அல்லது பணவுருவில் வைத்துக்கொள்வதா அல்லது சொத்துகள் (assets) உருவில் வைத்துக்கொள்வதா என்பதை அவர்களே தீர்மானிக்கவேண்டி யிருக்கிறது. பணத்தின் அளிப்பும் கடன்களின் அளிப்பும் தரப்பட்டிருக்கின்றபோது, இந்த அளிப்பு முழுவதையும் எடுத்துக்கொள்கின்ற அளவிற்குத் தேவை அமைந்திருக்கவேண்டும். ஆகவே, கடன்களிலிருந்து பணத்திற்கோ அல்லது பணத்திலிருந்து கடன்களுக்கோ தங்கள் விருப்பத்தை மாற்றிக்கொள்வதற்கு மக்களிடம் உள்ள ஊக்கம் மறைகின்றவரை, கடன்களுக்குத் தரப்படும் விலை மாறிக்கொண்டிருப்பதாக இருக்கும். கடன்களுக்குத் தரப்படும் விலைக்கு 'வட்டி' என்று பெயர். எனவே, வட்டிவீதமானது பணத்தின் தேவையாலும், பணத்தின் அளிப்பாலும் நிர்ணயிக்கப்படுகிறது. நீர்மை-விருப்பத்தில் ஏற்படும் ஒரு மாறுதல், பணத்தின் அளிப்பில் ஏற்படும் ஒரு மாறுதல், கடன் அளிப்பில் ஏற்படும் ஒரு மாறுதல் ஆகிய ஏதாவது ஒரு மாறுதலின் விளைவாக வட்டிவீதம் மாறுவதாக இருக்கும். இம்மூன்று மாறுதல்களில் கடைசியில் குறிப்பிட்ட மாறுதல், கடன் நிதித் தேவையின் மாறுதலுக்கு ஈடாக இருக்கிறது; முதல் இரண்டு மாறுதல்கள் கடன் நிதி அளிப்பின் மாறுதலுக்கு ஈடாக இருக்கிறது. உதாரணத்திற்கு, முதலின் இறுதிநிலை ஆக்கம் அதிகரிக்கிறது என்று வைத்துக்கொள்வோம். அப்போது, கடன்கள் நிறைய வாங்கப்படும்; அதோடு வட்டிவீதமும் அதிகரிக்கும். வட்டி ஏன் அதிகரிக்கிறது? ஒரு கோணத்திலிருந்து பார்த்தால், ஏற்கெனவேஇருந்துவரும் கடனிருப்போடு கூடுதலான முதல் வந்து சேருவதனால், இலாபம் அதிகரிக்கிறது. இதனால் வட்டி அதிகரிக்கும். மற்றொரு கோணத்திலிருந்து பார்த்தால், கடன்கள் நிறைய கேட்கப்படுவதனால்,கடன் நிதித் தேவை அதிகரிக்கிறது. இதனால் வட்டி அதிகரிக்கும். அடுத்து, பணஅளிப்புப் பெருகுகிறது என்று வைத்துக்கொள்வோம். அரசாங்கம், அதிக அளவில் பணநோட்டுகளை அச்சிட்டுப் பணவீக்கத்தை (inflation) ஏற்படுத்துவதன் மூலமாகவோ அல்லது பாங்குகள் கூடுதலான கடன்களைத்தருவதன்மூலமாகவோ பணஅளிப்புப் பெருகுவது, கடன் நிதிகளின் அளிப்பை அதிகப்படுத்தி, அவைகளின் விலையைக் குறைக்கும்; அதோடு, பணத்தின் இருப்பை அதிகப்படுத்தி, மக்கள் நீர்மைத்தன்மையையும் வாங்க விரும்புகின்ற விலையையும் குறைக்கும். இவ்விரு கோணங்களிலிருந்தும் நோக்கும்போது, பணஅளிப்புப் பெருகுவ

தென்பது, வட்டி வீதங்களைக் குறைப்பதாக இருக்கிறது. இறுதியாக, நீர்மை-விருப்பத்தில் ஏற்படும் மாறுதலை எடுத்துக்கொள்வோம். நீர்மை-விருப்பத்தில் ஏற்படும் ஒரு மாறுதல், கடனளிப்பதற்குப் பொது மக்களிடம் உள்ள விருப்பத்தில் ஏற்படும் ஒரு மாறுதலைச் சுட்டிக் காட்டுகிறது. செல்வத்தை ரொக்க உருவில் வைத்துக் கொள்வதை மக்கள் அவ்வளவாக விரும்பவில்லை என்றால், அவர்கள் கடன் தருவதற்கு மிகவும் விரும்புவர். எனவே, நீர்மை-விருப்பம் குறையும்போது, கடன் நிதி அளிப்பு அதிகரிக்கும்.

சமுதாயத்தினால் சேமிக்கப்படுகின்ற தொகைக்கும் கடன் நிதி அளிப்புக்குமிடையே ஒரு நெருங்கிய தொடர்பு காணப்படுகிறது என்றாலும், மக்கள் அதிகமாகச் சிக்கனம் செய்யும்போதெல்லாம் கடன் நிதியின் அளிப்பும் அதிகரிக்கும் என்று அர்த்தமில்லை. செலவைச் சிக்கனப்படுத்துவது என்பது ஒரு தனிப்பட்ட மனிதனின் சேமிப்பை அதிகப்படுத்துகிறது என்றாலும், சமுதாயத்தின் மொத்தச் சேமிப்பை அது அதிகப்படுத்தியாகவேண்டும் என்ற அவசியம் இல்லை. சிக்கனமாக வாழ்வதன்மூலம் சேமிப்பை அதிகப்படுத்துவது என்பது ஒரு தனி மனிதனின் சக்திக்குட்பட்டது. ஆனால், சமுதாயத்தின் சேமிப்பை அதிகப்படுத்துவதென்பது அவனது சக்திக்கப்பாற்பட்டது. அதிகமாகச் சேமிக்க வேண்டும் என்று அவன் முடிவு செய்வானேயானால், அது மற்றொருவனைக் குறைவாகச் சேமிக்கும்படி செய்துவிடும். உதாரணமாக, ரொட்டியின்மீது அவன் குறைவாகச் செலவிடுவானேயானால், ரொட்டி உற்பத்தி செய்பவனின் இலாபம் குறையும்; ஆகவே, அவனது சேமிப்பும் குறையும். ரொட்டி உற்பத்தியாளன், முன்பு சேமித்த தொகையையே தற்போதும் சேமிக்க முயலுவானேயானால், அதனால் மற்ற வர்த்தகர்களின் இலாபம் குறையும். இப்படியாக, ஒருவன் சேமிக்க முயல்வதனால் மற்றொருவனின் வருமானம் குறைவதென்பது தொடர்கதையாக வளர்ந்து சென்றுகொண்டிருக்கும். செலவு அதிகமாகச் சிக்கனப்படுத்தப்படும்போது, சேமிப்போ அல்லது கடன் நிதி அளிப்போ அதிகரிக்காது போவதோடல்லாது, தொழிலில் மந்த நிலைமையும் வேலையின்மையும் ஏற்படுவதுண்டு. கூடுதலான சிக்கனம், கூடுதலான கடன்-செலவீடு (loan-expenditure) மூலம் ஈடுசெய்யப்படும்போது மட்டுமே, சேமிப்பு அதிகரிப்பதாக இருக்கிறது. ஏனெனில், அப்போது சமுதாயத்தின் வருமானம் தொந்தரவு செய்யப்படாமலிருக்கிறது. ஒருசிலர் நஷ்டம் பெறுகின்றனர்; இதற்குக் காரணம், சேமிப்போர்கள் குறைவாகச் செலவிடுகின்றனர். வேறு சிலர் இலாபம் பெறுகின்றனர்; இதற்குக் காரணம், கடன் பெறுவோர்கள் அதிகமாகச் செலவிடுகின்றனர்,

உண்மை என்னவென்றால், சமுதாயத்தினால் சேமிக்கப்படுகின்ற தொகை, சேமிப்போர்களால் முன்கூட்டியே செய்யப்படும் தீர்மானங்களைப் பொறுத்திருக்கவில்லை. ஏனெனில், தங்களுக்கு என்ன வருமானம் கிடைக்கும் என்பதைச் சேமிப்போர்களால் முன்கூட்டியே தீர்மானிக்கமுடியாது. ஆனால், முன்பு நாம் பார்த்திருப்பதைப்போன்று, சேமிப்பானது வருமானத்தையே பொறுத்திருக்கிறது. இவ்வளவு சேமிக்கவேண்டும் என்று நாம் திட்டமிடலாம். ஆனால், மற்றவர்கள் என்ன திட்டமிடுகின்றனர் என்பதும், எதிர்காலம் நமக்கு என்ன கொண்டுவரும் என்பதும் நமக்குத் தெரிவதில்லையாதலால், எதிர்பார்க்கப்பட்ட வருமானம் ஒன்றாகவும், உண்மையில் கிடைக்கின்ற வருமானம் வேறொன்றாகவும் இருந்துவிடக்கூடும். அப்போது, நம்மால் சேமிக்கப்படுவதன் ஒரு பகுதி திட்டமிடப்படாததாக இருக்கும். இதற்கு மாறாக, திட்டமிடப்படாமல் எப்போதுமே கடன்தரப்படுவதில்லை. செல்வத்தில் எவ்வளவைக் கடனாகத் தருவது, எவ்வளவைப் பணமாகவும், மற்றச் சொத்துகளாகவும் (assets) வைத்துக்கொள்வது என்பதை எந்த ஒரு நேரத்திலும் நம்மால் திட்டமிட முடியும். இவ்வாறாக, கொடுக்கப்பட்டிருக்கும் வட்டி வீதத்தில் எவ்வளவை நாம் கடனாகத் தருவோம் என்பதைக் காட்டக் கடன் நிதியின் அளிப்பு வளைகோட்டை நம்மால் வரையமுடியும். கொடுக்கப்பட்டிருக்கும் வட்டி வீதத்தில் எவ்வளவைச் சேமிப்போம் என்பதைக் காட்டவும், திட்டமிட்ட சேமிப்பின் (planned savings) அளிப்பு வளைகோட்டை நம்மால் வரையமுடியும். ஆனால், உண்மையில் சேமிக்கப்பட்ட தொகைகளின் அளிப்பு வளைகோட்டை நம்மால் வரையமுடியாது. ஏனெனில், ஓர் அளிப்பு வளைகோடு, எதிர்காலத்தைப்பற்றிய ஒரு போக்கைப்பற்றிச் சொல்லுகிறதே தவிர, இறந்த காலத்தைப் பற்றி அல்ல.

நிற்க, இங்கே, வட்டி வீதத்தைப்பற்றிய பல சிக்கலான பிரச்சினைகள் ஆராயப்படவில்லை. என்றாலும், தற்போதைக்கு வட்டி வீதக் கோட்பாட்டை விட்டு, இலாபத்தை ஆராய முற்படுவோம். பொருளாதார நெளிவுகளைப் பிறகு நாம் ஆராயும்போது, இந்தப் பிரச்சினைகளைக் கவனத்திற்கு எடுத்துக்கொள்வோம்.

## இலாபம்

ஒரு பண்டத்தை உற்பத்தி செய்வதற்காகவோ அல்லது பெறுவதற்காகவோ ஆகின்ற மொத்தச் செலவுக்கும், அப் பண்டத்தை விற்பதானால் வருகின்ற மொத்த வருவாய்க்குமுள்ள வேறுபாடே இலாபம் என்று பொதுவாகச் சொல்லப்படுகிறது. இந்த வேறு

பாடு, முதலை மூலதனம் செய்வதனுல் வருகின்ற வருமானத்தைச் சுட்டிக்காட்டுகிறது. ஆகவே, மூலதனம் செய்யப்படும் முதலின் அளவிற்கும், மொத்த இலாபத்திற்கும் ஒரு தொடர்பு காணப்படு கிறது. அடுத்து, விற்கப்படுகின்ற பண்டத்தின் ஒவ்வோர் அலகின் விலையும், அப் பண்டத்திற்காகும் செலவைவிட எந்த வீதத்தில் அதிகமாக இருக்கிறதோ அந்த வீதத்தைச் சுட்டிக்காட்டவும் இலாபம் என்ற சொல் ஆளப்படலாம். அதாவது, புரள்வின் மேல் கிடைக்கின்ற ஒரு வீதமாக (as a rate on turn-over) அதை நாம் கொள்ளலாம். உதாரணமாக, கிராமத்திலுள்ள ஒரு மருந்து வியாபாரி, புரள்வின்மேல் மிகவும் அதிகமான இலாபத்தையும், மூலதனம் செய்யப்பட்ட முதலின்மேல் சாதாரணமான இலாபத்தையும் பெறுவதாக இருக்கலாம். அதே நேரத்தில், பொருள்களை மொத்தமாக விற்பனை செய்துவரும் ஒரு நிறுவனம், புரள்வின்மேல் மிகச் சிறிய இலாபத்தையும், மூலதனம் செய்த முதலின் மேல் மிகவும் அதிகமான இலாபத்தையும் பெற்றுவருவதாக இருக்கலாம். புரள்வின்மேல் கிடைக்கின்ற இலாபம், பகிர்வுக் கோட்பாட்டைப் பொறுத்தவரை முக்கியமற்றதாக இருக்கிறது. வருமானத்தின் பிறப்பிடமாக இருக்கிறது என்ற வகையில்தான் இலாபத்தை முக்கியமானதாக இங்கே கருதுகிறோம். ஆனுல், காலத்தை வைத்து வருமானம் கணக்கிடப்பட வேண்டியிருப்பதால், வருமானத்தின் ஒரு பகுதியாக இலாபம் இருக்க வேண்டும் என்றால், இலாபமும் காலத்தை வைத்துக் கணக்கிடப்பட வேண்டியதாக இருக்க வேண்டும். எனவே, இலாபத்தை முதலின்மேல் கிடைக்கின்ற ஒரு வருமானமாகக் கொண்டு அதை ஆராய முற்படுவோம்.[1]

## மொத்த இலாபமும் நிகர இலாபமும் (Gross Profits and Net Profits)

மேலே விவரிக்கப்பட்டிருக்கும் இலாபம், பொருளாதார ஆசிரியர்களால் மொத்தஇலாபம் என்றுஅழைக்கப்படுகிறது. ஏனெனில், இலாபமென்று கொள்ளமுடியாத பல இனங்கள் அதில் கலந்திருக்கின்றன. முதலாவதாக, நிர்வாக ஊதியம் (earnings of management) அதில் கலந்திருக்கிறது. ஒரு கூட்டுப் பங்குக் கம்பெனி (joint stock company) தனது செலவுகளோடு நிர்வாகிகளுக்குக் கொடுக்கும் சம்பளத்தையும் சேர்த்துக்கொள்கிறது. ஆகவே,

1 முதலின்மேல் கிடைக்கின்ற வருமானத்தை முதலின் புரள்வு வீதத்தால் வகுத்து வருகின்ற தொகையே புரள்வின்மேல் கிடைக்கின்ற வருமானமாகும். உதாரணமாக, முதலானது வருடம் ஒன்றிற்கு இருமுறை புரள்வதாக இருக்கும்போது, வருட இலாபம் 6 சதவீதமாக இருக்குமானுல், அப்போது முதலின்மேல் கிடைக்கின்ற இலாப வீதம் 3 சதவீதமாக இருக்கும்.

இந்தச் சம்பளம் இலாபத்தில் சேர்த்துக்கொள்ளப்படுவதில்லை. ஆனால், வர்த்தகத்தைத் (உதாரணமாக, பண்ணைகள், கடைகள் முதலியவை) தானே நடத்திவருகின்ற ஒருவன், தனது பணியின் மதிப்பையும் கணக்கில் பற்று எழுதலாம். இதனால், இலாபம் மிகை யாக இருப்பதாகக் காணக்கூடும். வர்த்தகத்தின் உரிமையாளர் கள் நிர்வாக வேலையை வேறொரு நிர்வாகிக்குக் கொடுப்பதாக இருந்தால், அவனுக்கு எவ்வளவு சம்பளம் கொடுக்கவேண்டியிருக் குமோ, அந்தச் சம்பளத்தை மொத்த இலாபத்திலிருந்து கழித்து வருகின்ற தொகையே உண்மை அல்லது நிகர இலாபம் என்று கொள்ளப்படவேண்டும். இதையே வேறு வழியில் சொல்ல வேண்டும் என்றால், வர்த்தகத்தின் உரிமையாளர்கள் ஒரு கூட்டுப் பங்குக் கம்பெனியில் நிர்வாக வேலையைச் செய்வதாக இருந்தால், அவர்களுக்கு ஊதியமாகத் தரப்படும் தொகையை மொத்த இலா பத்திலிருந்து கழித்து வருகின்ற தொகையே நிகர இலாபம் என்று கொள்ளப்படவேண்டும்.[1] இரண்டாவதாக, மொத்த இலாபம், முதலுக்குத் தரப்படும் வட்டியைத் தன்னகத்தே சேர்த்துக்கொள் வதாக இருக்கலாம். முதலைக் கடனாகப் பெறுகின்ற ஒரு நிறு வனம், அம் முதலுக்குத் தரப்படவேண்டியிருக்கும் வட்டியை ஒரு செலவாகக் கருதி, அதை இலாபத்திலிருந்து நீக்கிவிடுகிறது. தங் களது சொந்த முதலை ஆண்டுவரும் மற்ற நிறுவனங்கள் அவ்வாறு செய்வதில்லை. நிகர இலாபத்தை நாம் கண்டுபிடிக்கவேண்டும் என்றால், இந்த நிறுவனங்களின் மொத்த இலாபத்திலிருந்து இவை களால் பயன்படுத்தப்பட்டுவரும் முதல் வேறிடத்தில் ஆளப்பட் டால், அதனால் கிடைக்கக்கூடிய வட்டித் தொகையைக் கழித்துக் கொள்ளவேண்டும். மூன்றாவதாக, நிலத்திற்கோ அல்லது கட்ட டங்களுக்கோ செலுத்தப்பட வேண்டியிருக்கும் வாரத்தை, மொத்த இலாபத்திலிருந்து நாம் கழித்துக்கொள்ள வேண்டும். உதாரண மாக, ஒரு விவசாயி, தன் இலாபத்தைக் கணக்கிடும்போது, நிலத் தின் வாரமதிப்பை (rentable value) செலவாகக் கருதாமற்போகக் கூடும்.[2]

[1] சரியாகச் சொன்னால், மொத்த இலாபத்திலிருந்து ஒரு பெருந்தொகை கழிக்கப்பட வேண்டியிருக்கிறது. முதலையும், வர்த்தகத் திறமையையும் ஒன்று சேர்ப்பதற்குச் செலவு செய்யப்பட வேண்டியிருக்கிறது. ஆகவே, ஒரு வர்த்தகன் தன் முதலையும் பணியையும் ஒரு கூட்டுப் பங்குக் கம்பெனிக்குக் கடனாகத் தரும் போது, ஒரு முக்கியமான நன்மையை இழக்கிறான். சாதக இட அமைப்பின் காரண மாக ஒரு நிலத்தினால் ஏற்படும் நன்மையை ஒத்திருக்கின்ற இந்த நன்மை ஒரு வித வாரத்தை உருவாக்குவதாக இருக்கிறது. இது நிகர இலாபத்தைவிட, நிர்வாக ஊதியத்தில் மட்டுமே சேர்த்துக்கொள்ளப்பட வேண்டியிருக்கிறது.

[2] மொத்த இலாபத்திற்கும் நிகர இலாபத்திற்குமுள்ள வேறுபாடு, பொருளா தாரப் புத்தகத்திலன்றி நடைமுறையிலும் முக்கியமானதாக இருக்கிறது. உதாரண மாக, இலாபத்தின்மீது வரி போடப்படும்போது, மொத்த இலாபமே கணக்கிற்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது. இவ்வாறு மொத்த இலாபத்தின்மீது வரி போடுவ தென்பது, சொந்தக்காரர்களால் நிர்வகிக்கப்படும் நிறுவனங்களையும், புதியனவா

### இலாபத்தின் சிறப்பு அம்சங்கள்

மற்றவித வருமானங்களிலிருந்து, இலாபம் மூன்று வழிகளில் வேறுபடுகின்றது. முதலாவதாக, இலாபம் எதிர்க்கணியமாக (negative) இருக்கலாம். கூலியோ அல்லது வட்டியோ எதிர்க் கணியமாக இருப்பதில்லை. ஆனால், ஒவ்வோர் ஆண்டும் ஒருசில நிறுவனங்கள் இழப்பினைப் பெற்றுவருவனவாக இருக்கின்றன. ஏதாவது ஒரு நேரத்திலாவது இழப்பை அடையாதிருக்கின்ற ஒரு நிறுவனத்தைக் காண்பதென்பது மிகவும் அரிது. வர்த்தகத்தில் ஏற்படும் தோல்விகளை எடுத்துப்பார்க்கும்போது, நிகர இலாபங்கள் சராசரியாக எதிர்க்கணியமாகவே இருக்கின்றன என்று பொருளாதார ஆசிரியர்கள் சொல்லுகின்றனர். அதாவது, முதலின் சொந்தக் காரர்கள் அதைத் தொழிலில் ஈடுபடுத்தாது வட்டிக்கு விடுவார்களேயானால், அவர்களால் இன்னும் அதிகமான வருமானத்தைப் பெறமுடியும் என்று பொருளாதார ஆசிரியர்கள் சொல்லுகின்றனர். புள்ளிவிவரங்களை வைத்துப் பார்க்கும்போது, இக்கூற்றுச் சற்று மிகைப்படுத்திச் சொல்லப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. ஆனால், ஒரு நிறுவனத்தால் சம்பாதிக்கப்படும் சராசரி நிகர இலாபமானது, (இழப்புகளைக் கழித்த பிறகும், முதலுக்குத் தரப்படவேண்டியிருக்கும் வட்டிக்கென்று ஒரு தொகையை ஒதுக்கியபிறகும், மீதமாயிருக்கின்ற தொகை) சிறிதாக இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. இரண்டாவதாக, வேறெந்தவித வருமானத்தையும்விட இலாபமானது மிகவும் மாறுதலடைவதாக இருக்கிறது. பூரிப்பிற்கும் (boom) மந்த நிலைக்கும் (stump) இடையே, கூலிவீதங்களிலும் (அல்லது கூலி சம்பாத்தியத்திலும்), வட்டி வீதங்களிலும் (நெடுங்கால வட்டி வீதங்களில் மாறுதல் ஏற்படுவதென்பது அற்பமே) அல்லது வாரத்திலும் மாறுதல் நிகழ்வதென்பது சொற்பமே. மாறுதல்கள் அனைத்தும் இலாபத்தில்மட்டுமே நிகழ்வனவாக இருக்கின்றன. விலையில் மாறுதல் ஏற்படும்போது, இலாபம் உடனே மாறுவதாக இருக்கிறது; மற்ற வருமானங்கள் காலந்தாழ்ந்து மாறுவனவாக இருக்கின்றன. மூன்றாவதாக, இலாபம் மற்றவித வருமானங்களைப்போன்று முன்கூட்டியே நிர்ணயமாகின்ற ஓர் உறுதியான வருமானம் அன்று. சாதக நிகழ்ச்சிகளால் நிர்ணயிக்கப்படுகின்ற உறுதியற்ற ஒரு வருமானமே இலாபம் எனப்படும். உதாரணமாக, ஒரு மனிதனின் கூலி முன்கூட்டியே தீர்மானிக்கப்படுகிறது; அது

---

யும் வளர்கின்றனவாயுமிருக்கின்ற நிறுவனங்களையும் பாதிப்பதாக இருக்கிறது. இதைப்போலவே, எச்ச இலாபத்தின் மீது (Excess Profit) போடப்படும் வரியும், அதாவது, இயல்பான வருமானத்திற்கதிசமாக இருக்கின்ற எச்ச இலாபத்தின் மீது போடப்படும் வரியும், அதிகமான மொத்த இலாபத்தையும், அதே நேரத்தில் இயல்பான நிகர இலாபத்தையும் பெற்றுவருகின்ற நிறுவனங்களைப் பாதிப்பதாக இருக்கின்றது.

உறுதியானதுங்கூட. ஆனால், அவனை வேலைக்கு எடுத்துக்கொள்வோனின் வருமானம் உறுதியான ஒன்று அல்ல. எதிர்காலத் தேவையை உத்தேசித்து உற்பத்தி செய்யப்படும் பொருள்களுக்காகத் தற்போது தொழிலாளிக்குக் கூலி தரப்படுகிறது. எதிர்காலத்தைப்பற்றி எதுவும் திட்டவட்டமாகச் சொல்லமுடியாதாகையால், உற்பத்தி செய்யப்படும் பொருள்களின் மதிப்பு நிச்சயமற்றதாக இருக்கிறது. இவைகளின் விலைகள், இவைகளை உற்பத்தி செய்வதற்காகும் செலவுகளுக்கு அதிகமாக இருக்குமானால், வேலையளிப்போன் இலாபம் பெறுவான். இவைகளின் விலைகள், உற்பத்திச் செலவிற்குக் குறைவாக இருக்குமானால், அவன் இழப்பினைப் பெறுவான். ஆனால், இலாபம் வருமா என்பது அவனுக்கு முன்கூட்டியே தெரிவதில்லை; தெரியவும் இயலாது. இலாபம் வரும் என்று எதிர்பார்க்கிறான்; இதில் அவன் ஏமாறுவதும் உண்டு.

**இலாபத்தின் மூலம் (The Origin of Profit)**

இவ்வாறாக, இலாபமானது உறுதியின்மை (uncertainty) யிலிருந்து பிறக்கிறது. மாறிவரும் உலகத்தில் தொழிலை நடத்தி வருவதனாலும், தவறான எதிர்நோக்காலும் அந்த உறுதியின்மை எழுகிறது. எல்லாமே வழக்கம்போல் நடைபெற்றுவருவதாக இருக்குமானால் அல்லது எதிர்காலத்தைப்பற்றி எல்லாவற்றையுமே முன்கூட்டி அறிந்து கொள்ள முடியுமென்றால், தொழிலில் உறுதியின்மை காணப்படாது. அதிர்ஷ்டத்தை நம்பியிருக்க வேண்டிய அவசியமில்லை; அங்கே இலாபம் இருப்பதற்கும் வழியில்லை.[1] ஆனால், நாம் வாழுகின்ற உலகத்தில், உறுதியின்மை இருக்கவே செய்கிறது. நமது சிக்கலான பொருளாதாரத் திட்டத்தின் சிறப்பியல்புகளாலும் (specialisation), காலத்தாலும் இடத்தாலும் பிரிக்கப்பட்டிருக்கின்ற அங்காடிகளுக்குப் பண்டங்களை உற்பத்தி செய்யும் அதன் உற்பத்திமுறையாலும், உறுதியின்மையின் பாரம் மேலும் அதிகரிக்கிறது. இந்த உறுதியின்மையின் பாரத்தை யாராவது ஒருவர் ஏற்றுக்கொண்டாக வேண்டும். சொத்தின் சொந்தக்காரர்களை, உறுதியின்மையின் பாரத்தை ஏற்கச் செய்வதற்காக, அவர்களுக்கு இலாபம் தரப்படவேண்டியிருக்கிறது. இலாபம் வரும் என்று எதிர்பார்த்தால்தான், இழப்பினால் ஏற்படக்கூடிய ஆபத்தை (risk) ஏற்க அவர்கள் முன்வருவர்.[2] இலாபத்தைக் கருதாது தொழிலில் நுழைபவர்கள் இருக்கக்கூடும்;

1 என்றாலும், அங்கே சர்வாதீன இலாபம் காணப்பெறும்.

2 உறுதியின்மையின் பாரத்தை ஏற்றுக்கொள்வது பெரும்பாலும் சொத்தின் சொந்தக்காரர்கள் என்றாலும், அவர்கள்மட்டுமே உறுதியின்மையின் பாரத்தை ஏற்றுக்கொள்கின்றனர் என்று நாம் சொல்லமுடியாது. ஏனெனில், தொழிலாளர்களும் உறுதியின்மைப் பாரத்தின் ஒரு பெரும் பகுதியை ஏற்றுவருகின்றனர்.

என்றாலும், பெரும்பாலானோர் இலாபம் வரும் என்று எதிர்பார்த்தே தொழிலில் நுழைகின்றனர். இலாபம் கிடைக்கும் என்ற உறுதி யில்லை. ஒருசிலர் இலாபம் பெறுகின்றனர். வேறு சிலர் இழப்புப் பெறுகின்றனர், இழப்பை ஈடுசெய்யும் வகையில் இலாபம் அமையும் என்று மக்கள் எதிர்பார்த்தால்தான், அவர்கள் தொழிலில் ஈடுபடுவர்.

## இலாபமும் செலவும்

ஆகவே, எதிர்காலம் தம் பக்கமிருக்கும், இலாபம் தங்களைத் தேடிவரும் என்று மக்கள் நினைக்கும்போது, தொழிலில் அடியெடுத்துவைக்கின்றனர். இழப்பு வரும் என்ற பயத்தைவிட இலாபம் வரும் என்ற எதிர்பார்ப்பு (expectation) மிகையாக இருக்கும்போதுதான், முதல் மூலதனம் செய்யப்படுவதாக இருக்கிறது. இவ்வாறு எதிர்பார்க்கப்படும் இலாபமானது (prospective profit), கூலி, வட்டி, வாரம் முதலியவைகளைப்போன்று ஒரு செலவாக இருக்கிறது. இந்த இலாபம் கிடைக்காது என்ற நிலை காணப்பட்டால், முதல் மூலதனம் செய்யப்படமாட்டாது. ஆகவே, இது, முடிந்த பொருள்களின் (finished goods) அளிப்பு விலையில் இடம் பெறுகிறது. எதிர்பார்க்கப்படுகின்ற விலையானது, கூலிகளையும், வட்டித் தொகையையும் சரிக்கட்டுவதுபோல் அமைய வேண்டும். அதோடு, தற்செயலாக ஏற்படவிருக்கும் நிகழ்ச்சிகளை ஈடுசெய்வதற்கென்றும் அதில் ஒரு தொகை காணப்படவேண்டும். இந்தத் தொகை, ஒருசிலரைப் பொறுத்தவரை மிகையாகவும், வேறு சிலரைப் பொறுத்தவரை குறைவாகவுமிருக்கும். எச்சரிக்கையாயிருப்பவர்களும், ஆபத்துகளை ஏற்க விருப்பமில்லாதவர்களும், மற்றவர்களைவிட இந்தத் தொகையைப் பெரிதாக்கும் முயற்சியில் ஈடுபடுவர். விலைகளின் போக்கு தங்களுக்குச் சாதகமாக இருக்காது என்று கருதுவோர், எதிர்காலத்தைப்பற்றிய நம்பிக்கையுடையவர்களைப்போல் அல்லாது, ஆபத்துகளை ஏற்கத் தயங்குகின்றனர். இவ்வாறாக, இறுதிநிலைச் சேமிப்போர்களையும், இறுதிநிலைத் தொழிலாளர்களையும்போன்று, இறுதிநிலை ஆபத்து ஏற்போர்களும் (marginal risk-takers) காணப்படுகின்றனர். எதிர்பார்க்கப்படுகின்ற விலையானது, இந்த இறுதிநிலை ஆபத்து ஏற்

---

தொழிலில் ஈடுபடும்போது, அவர்களுக்குக் காயம், நலக்கேடு, வேலையின்மை போன்ற ஆபத்துகள் ஏற்படுவதுண்டு. எனினும், இந்த ஆபத்துகளினால் ஏற்படும் தீங்குகளிலிருந்து. சமூகநல இன்சூரன்ஸ் திட்டம, சமூகநலப் பணித் திட்டம் முதலியவை மூலமாகத் தொழிலாளர்கள் காப்பாற்றப்பட்டுவருகின்றனர். முதலுக்கு ஏற்படக்கூடிய ஆபத்தும், ஓரளவிற்கு அரசாங்கத்தால் தடுக்கப்படுகிறது. மந்தநிலைக்குள்ளாகின்ற தொழில்களுக்கு அரசாங்கம் உதவிநிதி தந்து, அதன் சொந்தக்காரர்களை இழப்பின் கோரப்பிடியிலிருந்து விடுவிப்பதுண்டு. அதோடு, தன்வசமுள்ள சொத்துகளுக்கு ஏற்பட இருக்கும் ஆபத்துகளை ஏற்கவேண்டிய சுமையும் அரசாங்கத்திற்குண்டு.

போர்களுக்குப் போதிய இலாபத்தைத் தருவதாக இருக்க வேண்டும்.

எதிர்பார்க்கப்படும் இலாபம் செலவில் இடம்பெறுகிறதென்ரு லும், உண்மையில் பெறப்படும் இலாபம் (realised profit) செலவில் இடம்பெறுவதில்லே. ஆபத்தை ஏற்பதில் வெற்றி பெறுவதற்குக் கிடைக்கின்ற வெகுமதியே இந்த இலாபம். இது ஓர் எச்சமாக இருக்கிறது. இது விலேயால் நிர்ணயிக்கப்படுகிறதே யொழிய, இது விலேயை நிர்ணயிப்பதாக இல்லே. அதே வேளேயில், பழைய அனு பவத்தை வைத்தே மக்கள் இவ்வளவு இலாபம் வரும் என்று எதிர் பார்த்துவருவதால், எதிர்பார்க்கப்படும் இலாபமும், உண்மையில் கிடைக்கின்ற இலாபமும் ஒரே அளவில் அமைந்துவிடுவதும் உண்டு. நெடுங்காலத்தில் ஒரு தொழில் தொடர்ச்சியாக இலா பத்தைத் தராமற்போகுமாஞல், அடுத்து இலாபம் கிடைக்கும் என்ற நம்பிக்கையை வர்த்தகர்கள் இழந்துவிடுவர். எனவே, கிடைக்கின்ற இலாபமானது (realised profit), நெடுங்காலத்தில், எதிர்பார்த்தலே மாற்றியமைப்பதன் மூலமாகவும், எதிர்பார்க்கப் படும் இலாபத்தைக் கட்டுப்படுத்துவதன் மூலமாகவும் மறைமுக மாக விலேயில் இடம்பெறுகிறது.

அதிர்ஷ்டம், நல்ல எதிர்நோக்கு, அவசியமற்ற ஆபத்துகளேத் தவிர்க்கும் தொழிலமைப்புத்திறன் முதலியவை காரணமாக இலா பம் பிறக்கிறது. ஆஞல், ஒருவன் முதலேப் பெற்றிருப்பதோ டல்லாது உயர்ந்த தொழிலமைப்புத்திறனேயும் பெற்றிருப்பாஞுஞல், அவனது முதலுக்குக் கிடைக்கின்ற வருமானத்தில் இலாபமும் நிர்வாக ஊதியமும் காணப்பெறும். ஏனெனில், நல்ல தொழி லாற்றல் பெற்ற ஒருவன், அவ்வாற்றலேப் பெற்றிராத மற்றெரு வனுக்குத் தன் பணிகளேத் தருவதன்மூலம், ஓர் ஊதியத்தைப் பெற முடியும். ஒருவன், தன் உயர்ந்த தொழிலமைப்புக் காரணமாக, ஆபத்துகளேத் தவிர்ப்பதிலோ அல்லது நீக்குவதிலோ மற்றவர் களேவிடச் சிறந்தவஞக இருப்பாஞுல், அவன் அதிகமான இலாபத்தைப் பெற்றுவருவான். அவன் இவ்வாறு மிகையான இலாபத்தைப் பெற்றுவருவதற்குக் காரணம், தொழிலமைப்புத்திற மையேயன்றி அதிர்ஷ்டமன்று. இலாபத்திலிருந்து தொழிலமைப் புத் திறமைக்கென்று ஒரு தொகையை ஒதுக்கிவிட்டால், மீதமா யிருப்பது உண்மையான இலாபமாகும் (pure profit). இது முற்றிலும் அதிர்ஷ்டத்தால் நிர்ணயிக்கப்படுகிறது.

**இலாபமும் வர்த்தக நிலவரங்களும்**

இலாபத்தில் மாறுதல் ஏற்படுத்தவல்ல ஒரு தனிப்பெருஞ் சக்தி பொருளாதார நடவடிக்கையின் போக்கு. வர்த்தகம் மிகவும் மும்முர

மாக நடந்து, நிறுவனங்கள் சற்றேறக்குறைய தங்கள் முழுத்திறமையையும் பயன்படுத்தி இயங்கிவருகின்ற நிலையில், நிறுவனங்களின் செலவுகள் மிகவும் குறைவாகவும், அவைகளின் விற்பனைகள் மிகவும் அதிகமாகவுமிருக்கின்றன. இதைப்போன்ற ஒரு சூழ்நிலை காணப்படும்போது, குறிப்பாக, விலைகள் செலவுகளைவிட அதிகமாக ஏறுவனவாக இருக்கின்றபோது, இலாபம் பெருமளவில் அதிகரிப்பதாக இருக்கிறது. இதற்கு எதிரிடையாக, பொருளாதார நடவடிக்கை மந்தமாகவும், விலைகள் இறங்குவனவாகவுமிருக்கின்றபோது, இலாபம் மறைந்து, அது இருந்த இடத்தில் இழப்பு தன் தலையை நீட்டுகிறது. இதே உண்மைதான், ஒரு முழுத் தொழிலுக்கும் பொருந்துவதாக இருக்கிறது. பூரிப்பின்போதும், பணவீக்கத்தின்போதும் மொத்த இலாபங்கள் அதிகரிக்கின்றன. மந்தநிலையின்போதும், பணவாட்டத்தின்போதும் மொத்த இலாபங்கள் குறைகின்றன.

இலாபத்தில் ஏற்படும் மாறுதல்களுக்கான காரணங்கள் வர்த்தக நெளிவுகளைப்பற்றிய பொதுக் கோட்பாட்டில் விளக்கப்படுகின்றன என்றாலும், ஒரு தொழிலில் காணப்படும் இலாபம் மற்றொரு தொழிலில் காணப்படும் இலாபத்தைவிட ஏன் மிகையாக இருக்கிறது என்பதற்கான காரணங்களும், நெடுங்காலத்தில் இலாபம் ஏன் அதிகரிக்கிறது அல்லது குறைகிறது என்பதற்கான காரணங்களும் அக் கோட்பாட்டில் இடம்பெறுவதில்லை. இவைகள் சுலபமாக விளக்கப்படக்கூடியவை. பொருளாதார நடவடிக்கைகளில் ஏற்படும் மாறுதல்களைப் புறக்கணிக்கக்கூடும் என்றாலும், ஒரு குறிப்பிட்ட துறையில் ஏற்படும் மாறுதல்களைப் புறக்கணிக்க முடியாது என்பதாகப் பின்வரும் விளக்கத்தில் எடுத்துக்கொள்வோம்.

### தொழிலுக்குத் தொழில் இலாபம் வேறுபடுவதேன்?

போட்டியானது, உறுதியின்மை நிறைந்து காணப்படுகின்ற தொழில்களில் இலாபத்தை உயர்ந்தபட்சமாக இருக்கச் செய்கிறது. உற்பத்தி முறைகள் அடிக்கடி மாறுவனவாக இருக்கின்ற தொழில்களிலும், தேவை அடிக்கடி மாறுவதாக இருக்கின்ற போகப் பொருள்களை (luxuries) உற்பத்தி செய்துவருகின்ற தொழில்களிலும், எதிர்காலத்தைப்பற்றி நிச்சயமற்றிருக்கின்ற புதிய தொழில்களிலும், முதலீடு செய்வதற்கும் வருமானம் கிடைப்பதற்குமிடையே ஒரு நீண்ட காலம் குறுக்கிடுவதாக இருக்கின்ற தொழில்களிலும், உழைப்பும் முதலும் குறிப்பிட்ட வேலைகளுக்கு (specialised tasks) மட்டுமே எடுத்துக்கொள்ளப்படுகின்ற தொழில்களிலும் இலாபம் உயர்வாகக் காணப்படுகிறது. மற்றும் பருவ

காலங்களை நம்பியிருக்கின்ற விவசாயத் தொழில், அரசாங்கத் தயவை நம்பியிருக்கும் மதுபானத் தொழில்போன்ற உறுதியின்மைப் பிடியிலிருக்கும் தொழில்களிலும், இலாபம் உயர்வாகக் காணப்படுகிறது. இத்தொழில்களில் காணப்படும் இலாபம் சம அளவில் இருப்பதில்லை. உறுதியின்மையின் அளவிற்கேற்ப இலாபம் தொழிலுக்குத் தொழில் மாறிக் காணப்படுகிறது.

**சர்வாதீன இலாபம்**

ஒருவித வாரத்தைத் தன்னுடன் சேர்த்துக்கொள்வதனால் கூலியோ அல்லது வட்டியோ சற்று மிகையாகக் காணப்படுவதைப் போன்று, இலாபமும், உறுதியின்மையை ஏற்க முதலாளிகளைத் தூண்டுவதற்கு அவசியப்படும் தொகைக்கு அதிகமாக இருப்பதுண்டு. நுழைவிற்கு முட்டுக்கட்டைகள் இருக்கின்ற தொழில்களிலும், சர்வாதீன நன்மைகளை அடைந்துவருகின்ற தொழில்களிலும், இந்த எச்ச இலாபம் காணப்படுகிறது. புதிய நிறுவனங்கள் நுழைவதற்குத் தடைகள் இருந்தாலோ அல்லது தொழிலைத் துவக்க விரும்புவோர்களுக்கு முதல் கிடைப்பது சிரமமாக இருந்தாலோ, இலாபப் பொதுமட்டம், செயற்கையான ஓர் உயர்ந்த மட்டத்தில் இருக்கும்.

**இலாபப் பொதுமட்டம்**

உறுதியின்மை மிகுதியாக இருக்கும்போது, இயல்பான இலாபவீதம் (normal rate of profit) மிகுதியாக இருக்கிறது. எதிர்காலத்தில் கிடைக்கவிருக்கும் இலாபத்தை மக்கள் குறைவாகவே மதிப்பிடுவர். ஆகவே, சராசரியாகப் பார்க்கும்போது, உண்மையில் கிடைக்கின்ற இலாபம் மிகையாகவே இருக்கும். ஆனால், தனிப்பட்ட ஆபத்து ஏற்போர்களை எடுத்துக்கொண்டால், அவர்களுக்குக் கிடைக்கின்ற இலாபம் பெரு நேர்க்கணியத் தொகையிலிருந்து (large positive amount) பெரும் எதிர்க்கணியத் தொகை (large negative amount) வரை பல்வேறு அளவுகளில் காணப்படுகின்றது. உதாரணமாக, ஒரு புதிய தொழிலில், ஒரு சில நிறுவனங்கள் பெரிய இலாபத்தைப் பெற்றுவருவனவாக இருக்கலாம்; அதே நேரத்தில், வேறு சில நிறுவனங்கள் தாங்கள் போட்ட முதலையேகூட இழந்துவருவதாக இருக்கலாம். உறுதியின்மை மிகவும் குறைவாக இருக்கும்போது, எதிர்பார்க்கப்படும் இலாபத்திற்கும் உண்மையில் கிடைக்கின்ற இலாபத்திற்குமிடையே, அதிக வேறுபாடு இருப்பதில்லை. ஆகவே, இலாபத்தின் வீச்சு (range of profit) ஒரு சிறு வட்டத்திற்குள்ளே காணப்படுவதாக இருக்கிறது. உதாரணமாக, ஆடை, உணவு போன்ற பண்டங்களை அளித்துவரும் தொழில்கள், கப்பல் கட்டும் நிறுவனத்

தையும் எஃகு உற்பத்தி செய்யும் நிறுவனத்தையும் விடச் சற்று உறுதியாகத் தங்களது எதிர்கால இலாபத்தைப்பற்றிச் சொல்லமுடியும். உறுதியின்மையின் அளவிற்கும் எதிர்பார்க் கப்படும் இலாபத்திற்கும் உள்ள தொடர்பும், உறுதியின்மைக் கும் உண்மையில் கிடைக்கின்ற இலாபத்திற்குமுள்ள தொடர்பும் ஒரு பூர்த்தியான தொடர்பாக இருக்கவில்லை. தற்செயலாக நிகழ விருக்கும் சாதகச் சூழ்நிலையைப் பயன்படுத்தித் தொழிலில் இலாபம் பெறவேண்டும் என்றுதான் பலர் கருதுகின்றனரே தவிர, தொழிலில் காணப்படும் சாதாரண ஆபத்துகளைப்பற்றி அவர்கள் கவலைப் படுவதில்லை. இவைகளால் பேரிழப்போ அல்லது இலாபமோ வந்துவிடப்போவதில்லை. எனவே, மிதமான ஆபத்துகள் காணப் படுகின்ற தொழில்களில்தான் இலாபம் உயர்ந்தபட்சமாக இருக் கிறது. ஆபத்துகள் ஏற்பதை அவசியமற்றதாகச் செய்கின்ற அளவிற்கு இத்தொழில்களில் ஆபத்துகள் குறைவாக இருந்து விடுவதில்லை. அதே வேளையில், அஜாக்கிரதையானவர்களையும், சூதவாணிகம் செய்வோர்களையும் ஈர்க்கின்ற அளவிற்கு ஆபத்து கள் மிகையாக இருப்பதில்லை. 19ஆம் நூற்றாண்டில் உயர்ந்த பட்ச இலாபத்தைப் பெற்றது புகைவண்டிச் சாதனமோ அல்லது தங்கச் சுரங்கத் தொழிலோ அல்ல; தற்போது உயர்ந்தபட்ச இலாபத்தைப் பெற்றுவருவது 'பிளாஸ்டிக்' தொழிலோ அல்லது சினிமாத் தொழிலோ அல்ல.

சமூக மாறுதலும், உற்பத்திச் சாதனங்களின் இடப்பெயர்ச்சி யின்மையும் மிகையாக இருக்குமானால், உறுதியின்மையின் அள வும், இலாபவீதமும் மிகையாக இருக்கும். மாறுதல் துரிதமாக நிகழ்வதாக இருக்குமானால், பிற்காலத்தைப்பற்றி எதிர்நோக்கு வதும், பிற்காலத் தேவைக்கேற்றவாறு சாதனங்களை ஆள்வதும் மிகவும் தொல்லை கொடுக்கக்கூடியனவாகவும் ஆபத்தை விளை விக்கக்கூடியனவாகவு மிருக்கும். எதிர்காலத் தேவையை உத் தேசித்துப் பண்டங்களை உற்பத்தி செய்வது அரசாங்கமாக இருந் தாலும் அல்லது தனியார் துறையாக இருந்தாலும், எதிர்கால உறுதியின்மையைச் சரிக்கட்டுவதற்கென்று தற்போதைய செலவு களோடு ஒரு பெரும் இலாபத் தொகையும் சேர்த்துக்கொள்ளப்பட வேண்டியிருக்கிறது. சாதனங்கள், குறிப்பிட்ட ஓர் உபயோகத் திற்குமட்டுமே பயன்படக்கூடியனவாகவும், பெயர்ச்சியற்றன வாகவுமிருக்கும்போது, அவைகளை எதிர்காலத் தேவைக்கேற்ற வாறு ஆள்வதென்பது மிகவும் சிக்கலான ஒரு பிரச்சினையாக இருக்கிறது. ஏனெனில், அவைகள் ஒரு குறிப்பிட்ட உபயோகத் திற்குமட்டுமே பயன்படக்கூடும் என்றால், புதிய சூழ்நிலைகள், கண்டுபிடிப்புகள் (discoveries) காரணமாக திட்டங்கள் மாற்றி

யமைக்கப்படும்போது, அவைகளை மற்றோர் உபயோகத்திற்கு எடுத்துக்கொள்வதென்பது இயலாதுபோய்விடுகிறது. சாதனங்கள் பெயர்ச்சியற்றனவாக இருக்கும்போது, அவைகளை எந்த உபயோகத்திற்கு எடுத்துக்கொள்வது என்பது உறுதியற்றதாக இருக்கிறது. அதோடு துரிதமாக முகிழ்த்துவரும் சமூக மாறுதல், சாதனங்கள் எடுத்துக்கொள்ளப்படும் அளவுகளில் பலமான மாறுதல்களை அடிக்கடி ஏற்படுத்தி, உறுதியின்மைப் பாரத்தை மேலும் அதிகரிக்கச் செய்கிறது. முதலை மூலதனம் செய்தால், இழப்பு என்ற ஆபத்து ஏற்பட்டுவிடுமோ என்ற அச்சம் தலைதூக்கி நிற்கிறது. இந்த அச்சத்தைப் போக்குகின்ற அளவிற்கு எதிர்பார்க்கப்படும் இலாபம் மிகையாக இருக்கவேண்டும்.

## இலாபமும் நாட்டு வளர்ச்சியும்

இலாப வீதமானது, நாட்டின் 'வளர்ச்சி'யோடு நெருங்கிய தொடர்புகொண்டதாகும். புதிய உற்பத்தி முறைகளையும், புதிய பண்டங்களையும் அறிமுகப்படுத்துவதன்மூலம், ஒரு தொழில் நாட்டின் வளர்ச்சிக்கு அடிகோலுகிறது. புதுமை (innovation) புகுத்துவதில் அது வாகை சூடுமானால், இலாபம் அதைத் தேடிவரும் துரதிர்ஷ்டமோ அல்லது ஆற்றலின்மையோ அதை ஆட்டிப்படைக்கிறதென்றால், இழப்பிற்கு அது இரையாகிவிடும். வளர்ச்சி என்றால் மாறுதல் என்று பொருள்; ஆகவே, அது உறுதியின்மையை உருவாக்குகிறது. வளர்ச்சி என்றால், திறமை உயர்வு என்றும் பொருள் உண்டு; ஆகவே, இலாபம் கிடைக்கும் என்ற நம்பிக்கை விதையை அது மக்களிடையே தூவுகிறது; எனவே, இலாப வீதத்தைப் பராமரித்துவரும் முக்கியமான சக்திகளில் ஒன்று நாட்டின் வளர்ச்சி. அதோடு, இலாபம் பிறப்பதற்குக் காரணமாக இருக்கின்ற சக்திகளில் ஒன்றாகவும் அது இருக்கிறது.

# பாகம் V—வருமானம், வேலை, பணம்

## 25. தேசீய வருமானம்

இந்த நூலின் முற்பகுதிகளில் மொத்த உற்பத்தி, தேசீய வருமானம் முதலியவற்றைக் கற்பனை செய்து கொண்டோம். தொடர்புகொண்ட விலைகளையும் பங்குகளையும்பற்றி நாம் ஆராய்ச்சி செய்தோம். ஆனால், தேசீய வருமானம், வேலை (employment), விலைவாசி (price level) முதலியவற்றைப்பற்றிய உண்மைகளை நாம் அறியவில்லை. அவைகளை இங்குக் காண்போம்.

### தேசீய வருமானம்

தேசீய வருமானம் நாம் இதுவரை பரிசீலனை செய்யாத கருத்துகளில் ஒன்றாகும். ஆனால் அது ஒரு புதிய கருத்தல்ல. சுமார் 200 ஆண்டுகளுக்குமுன் தேசீய வருமானங்கள் (The Wealth of Nations or National Incomes) என்ற நூல் எழுதப்பெற்றது. ஆனால், தேசீய வருமானம் என்ற கருத்தை அக்காலத்தில் தெளிவற்ற முறையில் விளக்கினர். அதன் அளவை ஒருவரும் திட்டவட்டமாகக் கூறவில்லை. இந்த நூற்றாண்டில்தான் நாம் தேசீய வருமானத்தையும் அதில் ஆண்டுதோறும் ஏற்படும் மாறுதலையும் அளக்க முயற்சி செய்தோம். ஆனால், ஒருசிலர் 17ஆம் நூற்றாண்டிலிருந்தே தேசீய வருமானத்தை மதிப்பீடு செய்தனர்.

தேசீய வருமானம் மிகுதியடைவதால், ஒருநாட்டின் நிலையில் முன்னேற்றம் ஏற்பட்டுவிடும் என்று நாம் சொல்லமுடியாது. தேசீய வருமானத்தைப் பணத்தின் மூலம்தான் மதிப்பிடுவது வழக்கம். ஒரு நாட்டில் பணவீக்கம் ஏற்பட்டால், தேசீய வருமானம் மிகுதியடைந்ததாகத் தோற்றமளிக்கும். ஆனால், உண்மையில் பணம் தன் மதிப்பில் ஒரு பகுதியை இழந்துவிடும். உண்மையாகவே தேசீய வருமானம் மிகுதியடையலாம். மக்கள்தொகையும் மிகுதியடையலாம். எனவே, நாட்டின்

நிலைமையில் முன்னேற்றம் ஏற்படாமல் இருக்கலாம். போர்க்காலத்தில் மக்களுடைய தேவைகள் கட்டாயமாகக் குறைக்கப்படுவதாலும், அவர்களுடைய வாழ்க்கைத்தரம் தாழ்வடைவதாலும், தேசீய வருமானம் மிகுதியடையும். மேலும், போர்க்காலத்தில் மக்கள் ஓய்வுநேரத்திலும் வேலைசெய்கின்றனர். கடுமையான உழைப்பு அவர்களுடைய உடல்நலத்தைப் பாதிக்கும். பலர் சுதந்திரமாகத் தம் அலுவல்களைக் கவனிக்காமல், கூலிக்காக வேலை செய்யவேண்டும். பலர் வெறுக்கத்தக்க சூழ்நிலையில் பணிபுரிய வேண்டும். தேசீய வருமானத்தின் பங்கீட்டில் (distribution) ஏற்படும் மாறுதல்களையும் நாம் மறக்கக்கூடாது. செல்வர்கள் மேலும் மிகுதியான செல்வத்தை அடையலாம். ஏழைகள் மேலும் கேவலமான நிலையை அடையலாம். தேசீய வருமானம் மிகுதியடையலாம். பொருளாதார வீக்ககாலத்திற்கும் மந்தகாலத்திற்கும் இடையே, அது அடிக்கடி மாறலாம். தேசீய வருமானத்தின் அளவு எவ்வளவு முக்கியமோ, அதேபோல் அது மாறுபாடடையாமல் இருத்தலும் முக்கியமாகும். நாம் நாட்டின் செல்வத்தைச் சரிவரப் பாதுகாக்காமல் ஊதாரித்தனமாகப் பயன்படுத்துவதால், தேசீய வருமானம் மிகுதியடையலாம். இதனால் ஏற்படும் இழப்பை எதிர்கால மக்களே ஏற்கவேண்டும். நாளை திறக்கவேண்டிய பழச்சத்துப் பெட்டியை (jam) இன்று திறப்பதால், நாம் இன்று பழச்சத்தைப் பயன்படுத்தலாம். ஆனால், மேற்கூறிய கருத்துகள் தேசீய வருமானத்தின் முக்கியத்துவத்தைக் குறைக்கவில்லை. தேசீய வருமானம் எவ்வாறு மிகுதியடைகின்றது, ஏன் மிகுதியடைகின்றது என்று நாம் ஆராய்ச்சி செய்யவேண்டும்.

**வருமானம், உற்பத்தி, செலவு**

தேசீய வருமானத்தின் பொருளை நாம் மூன்று கோணங்களில் காணலாம்: (1) ஒவ்வொருவரும் பெறும் வருமானத்தையும் சேர்த்துக் கணக்கிடுதல். (2) ஒவ்வொருவரும் உற்பத்தி செய்யும் பொருளின் அளவையும் தேசீய உற்பத்தியில் சேர்த்தல். (3) பொருள்களை வாங்குவதற்காக ஒவ்வொருவரும் செய்யும் செலவையும் சேர்த்துத் தேசீய வருமானத்தை மதிப்பீடு செய்தல். மேலே குறிப்பிட்டவைகளைப்பற்றி விளக்கங்களை நாம் கொடுக்கலாம். இயற்கை உற்பத்திச் சாதனங்கள், உழைப்பு, மூலதனம் முதலியவைகளைக் கொண்டு ஒரு குறிப்பிட்ட காலத்தில் நாம் உற்பத்திசெய்யும் பொருளின் அளவை 'நாட்டின் உற்பத்தி' என்று கூறலாம். அல்லது உற்பத்தியான பொருள்களின் மதிப்பை நாம் 'பொருள் உற்பத்தி' என்று கூறலாம். விலைகொடுத்து மக்கள் வாங்கும் பொருள்களையே நாம் பொருள் உற்பத்தியில் சேர்க்கலாம்.

வருமானம் மொத்த உற்பத்திக்குச் சமமானது என்பது நமக்கு உடனடியாகப் புலப்படவில்லை. இவ்விரண்டும் மக்களின் மொத்தச் செலவுக்கு நிகரானது என்பதும் நமக்குப் புலப்படவில்லை. மக்களுடைய வருமானமும் செலவும் வேறுபட்டிருக்கும் என்பதை நாம் அறிவோம். ஆனால் மக்களுடைய உற்பத்தியை எவ்வாறு கணக்கிடலாம் என்பதை நாம் புரிந்துகொள்ள முடியவில்லை. வருமானம், உற்பத்தி முதலியவைகளைத் தனிப்பட்ட முறையில் நாம் எளிதில் அறியலாம். ஆனால், இக்கருத்துகளைத் தேசீய ரீதியில் நாம் ஏன் புரிந்துகொள்ள முடியவில்லை? மேற்கூறிய மூன்று கருத்துகளுக்கும் ஒரு தொடர்பு இருக்கிறது. நம் வாழ்க்கைத்தரமும் (வருமானம்) உற்பத்தியும் தொடர்புகொண்டிருக்கின்றன என்பதையும், வருமானத்தைப் பொறுத்தே மக்கள் செலவு செய்வார்கள் என்பதையும் நாம் அறிவோம். ஆனால், அவை சமமானவையா?

இந்த நூலைப் படிப்பவர்கள், சமுதாயத்தின் பொருளாதாரப் பிரச்சினைகள் மக்களுடைய சொந்தப் பிரச்சினைகளைப்போல் அல்லாமல் வேறுபட்டிருக்கின்றன என்பதை அறியவேண்டும். ஒருவனுடைய சொந்த வருமானம் குறைந்தால், அவனுடைய செலவும் குறையவேண்டும். பொருளாதார மந்தகாலத்தில் நாட்டின் வருவாய் குறைவதால், அதன் செலவும் குறையவேண்டும் என்று அவன் கூறலாம். ஆனால், இக் கருத்துத் தவறானது. நாட்டின் செலவு குறைந்தால் பலர் வேலையை இழக்கலாம்; ஆகையால், நிலைமை மேலும் கேவலமாகலாம்.

அயல்நாட்டு வர்த்தகம்போன்றவை புகுத்தும் சிக்கல்களை விலக்கினால் நாம் வருமானம் சேமிப்புக்குச் சமமாகும் என்பதை எளிதில் அறியலாம். இதற்குச் சேமிப்பு, மூலதனம் பெருகுதல் முதலிய கருத்துகளை நாம் பயன்படுத்த வேண்டும். அயல்நாட்டு வர்த்தகம் இல்லை என்று நாம் கற்பனைசெய்துகொள்வோம் (இக்கருத்து உலகம் முழுவதையும் ஒரு நாடாகக் கொண்டால், உலகத்திற்குப் பொருந்தும்). சேமிப்பும் (saving), சேமிப்பை அழித்தலும் (dis-saving) இல்லை என்றும் நாம் கொள்வோம். மக்கள் தம் வருமானம் முழுவதையும் செலவு செய்யவேண்டும். அவர்களுடைய மொத்த உற்பத்தியும் செலவும் சமமாக இருக்கும். மக்கள் தொடர்ந்து செய்யும் செலவும், அவர்கள் பெறும் வருமானமும் தொடர்பு கொண்டிருக்கும். அவர்கள் பொருள்களை வாங்கும்பொழுது செய்யும் செலவுத் தொகையைக் (sales proceeds) கொண்டு கூலிகளும் (wages), சம்பளங்களும் (salaries) கொடுக்கப்பெறுகின்றன. மக்கள் பெறும் வருமானத்திற்கு அவர்கள் செய்யும் செலவு மூலா

தாரமாக அமைந்துள்ளது. உற்பத்தித்துறை எவ்வளவு பொருள்களையும் பணிகளையும் (services) ஈர்க்கின்றதோ, அதைப்போல் நுகர்வு அல்லது பயன்பாட்டுத்துறையும் அவைகளை ஈர்க்கும்.

### சேமிப்பும் (saving), சேமிப்பை அழித்தலும் (dis-saving)

சேமிப்பும், சேமிப்பை அழித்தலும் நாட்டில் இல்லை என்று நாம் கற்பனை செய்துகொண்டோம். இக்கற்பனையை நாம் நீக்கினாலும், நாம் மேலே கண்ட உண்மை மாறாது. நாட்டில் சிலர் சேமிப்பதும் மற்றவர்கள் சேமிப்பை அழிப்பதும் இவ்வுண்மையைப் பாதிக்காது. உதாரணமாக, ஒருவன் குளிர்சாதனப்பெட்டியை (refrigerator) வாங்கி, அதற்குத் தவணைமுறையில் பணம் செலுத்தலாம். மற்றொருவன், அவன் அதை வாங்குவதற்கு முன்பணம் கொடுத்து உதவலாம். எனவே, சேமிப்பும், அதை அழித்தலும் வருமானத்தையும் செலவையும் பாதிக்கவில்லை என்பது தெளிவாகின்றது. ஆனால், சிலர் சேமிப்பதை மற்றவர்கள் அழித்துவிடுகின்றனர் என்றும், நாட்டில் பொருள்கள் விற்பனையாகாமல்




குவிந்துவிடவில்லை என்றும் நாம் கற்பனை செய்துகொள்ள வேண்டும். ஆனால், இதைக்கூட நாம் கற்பனை செய்துகொள்ள வேண்டியதில்லை என்பது பிறகு தெளிவாகும். மக்கள் தம் வருமானத்தில் ஒரு பகுதியைச் சேமித்தால், அச் சேமிப்புக்குச் சம

மான பொருள்கள் (மூலதனப் பொருள்கள் அல்லது நுகர்வுப் பொருள்கள்) நாட்டில் குவிந்துவிடலாம். மக்களுடைய வருமானமும், மொத்த உற்பத்தியும் இரு பிரிவுகளாகப் பிரியும். ஆனால், அவை இரண்டும் ஒன்றுக்கொன்று சமமாக இருக்கும். மேற்கண்ட படம் இதை விளக்கும்.

சேமிப்புக்குச் சமமான பொருள்கள் நாட்டில் குவிந்துவிடத் தவறினால் மொத்த உற்பத்தி எப்படி மாறும் என்ற வினாவை நாம் இப்பொழுது கவனிக்கவேண்டாம். ஏனெனில், இவ்வினா வருமான நிர்ணயக் கோட்பாட்டுடன் (theory of income determination) பிணைந்திருக்கின்றது. நிகழ்ச்சிக்குப் பிறகு அதை ஆராய்ச்சி செய்து பார்த்தால், வருமானமும் உற்பத்தியும் சமமானவை என்பது புலனாகும். இவ்வாறு நாம் கூறும்பொழுது சொற்களின் விளக்கங் களைமட்டுமே கூறுகின்றோம். நிகழ்ச்சிகளின் காரணங்களை ஆராய்ச்சிக்குட்படுத்தவில்லை. சமுதாயத்தின் சேமிப்புக்குத் தகுந்த வாறு அதன் சொத்துகளும் (assets) மிகுதியடையும். நேற்றுச் சமுதாயத்தின் வருமானம் செலவைவிட எவ்வளவு மிகுதியாக இருந்ததோ அதற்குச் சமமான அளவு அதன் சொத்தும் பெருகி யிருக்கவேண்டும். ஆனால், இதன் காரணம் நமக்கு உடனடியாகப் புலப்படாமல் இருக்கலாம்.

**ஒரு தனி நிறுவனத்தின் வருமானமும் உற்பத்தியும்**

ஒரு தனி நிறுவனத்தின் நிலை, நாட்டின் (செலவு போக எஞ்சிய) வருமானமும் உற்பத்தியும் ஏன் சமமாக இருத்தல் வேண்டும் என்பதைத் தெளிவாக எடுத்துக்காட்டும். நிறுவனம் ஆண்டு தோறும் பெறும் வருமானத்தைக் கூலி, வட்டி முதலியவை கொடுப் பதற்கும், கச்சாப் பொருள்களை வாங்குவதற்கும், சேமிப்பதற்கும் பயன்படுத்தலாம். கூலி தொழிலாளர்களின் வருமானமாகும். இலாபம் (முதலாளிகளிடைப் பங்கீடு செய்யப்பெற்றாலும், சேமிக் கப்பெற்றாலும்) முதலாளிகளுடைய வருமானமாகும். வட்டி முன் பணம் கொடுத்துதவியோருடைய வருமானம். நிறுவனம் கச்சாப் பொருள்களை வாங்குவதால், மற்றவர்களுடைய வருமானம் மிகுதி யடைகின்றது. பொருள்களை உற்பத்தி செய்வதற்காக நிறுவனம் செலவு செய்கின்றது. மற்றவர்கள் இதைக் கூலி, வட்டி, இலாப ஈவு முதலியவைகளாகப் பெறுகின்றனர். நிறுவனம் செய்யும் மற்றச் செலவுகளும் பலருக்கு வருமானமாக அமைகின்றன. பொருளுற்பத்திக்காக நிறுவனம் கச்சாப் பொருள்களை வாங்கு கின்றது. இப் பொருள்களை நிறுவனத்திற்கு விற்பனை செய்வோர் பெறும் பணத்தை நாம் கணக்கில் சேர்க்கவில்லை. ஏனெனில், இவர்கள் நிறுவனத்தின் முதலாளிகளாகவோ அல்லது தொழிலா ளர்களாகவோ இல்லை. கச்சாப் பொருள்களை நிறுவனத்தின் எச்ச

உற்பத்தியில்(net output)நாம் சேர்க்க முடியாது. எனவே, கச்சாப் பொருள்கள் வேறு இடத்தில் செய்யப்பெற்ற உற்பத்தியாகும். ஒரு நிறுவனம் உற்பத்தி செய்யும் பொருள்களை விற்பனை செய்து பெறும் தொகையிலிருந்து அதன் அடக்கச் செலவைக்கழித்தால், நிறுவனத்தின் உற்பத்தியை நாம் கணக்கிடலாம். இவ் வுற்பத்தியின் மதிப்பு நிறுவனத்தின் வருமானத்திற்குச் சமமாகும். இந்த வருமானத்திலிருந்தே கூலி, இலாப ஈவு, வட்டி முதலியவை கொடுக்கப் பெறுகின்றன. எல்லா நிறுவனங்களுடைய (ஒரே மனிதன் நடத்தும் சிறிய தொழில் உட்பட) உற்பத்தியையும், பொதுத்துறையின் (public sector) பணிகளையும் சேர்த்தால், அதுவே நாட்டின் மொத்த உற்பத்தியாகும். இவ் வுற்பத்தியைச் செய்யும் பல்வேறு நிறுவனங்களுடைய வருமானமே தேசீய வருமானமாகும். ஒரு நிறுவனத்தின் உற்பத்திக் காரணிகள் பெறும் வருமானமும், அவைகள் சேர்ந்து உற்பத்தி செய்யும் பொருள்களின் மதிப்பும் ஒன்றாகவே இருக்கும் என்று நாம் பார்த்தோம். ஒரு நிறுவனத்திற்குப் பொருந்தும் இவ் வுண்மை ஒரு நாட்டுக்கும் பொருந்தும்.

எனவே, நாட்டின் உற்பத்தியைப் பெருக்காமல் தேசீய வருமானத்தைப் பெருக்க முடியாது என்பது தெளிவாகின்றது. நாம் மிகுதியான பொருள்களைப் பயன்படுத்த வேண்டுமென்றால், மிகுதியான அளவில் பொருள்கள் உற்பத்தியாக வேண்டும். சிலர் மக்களுடைய (பொருள்களை) வாங்கும் சக்தியை உயர்த்தினால், அவர்களுடைய நிலைமை முன்னேறும் என்று கருதுகின்றனர். வாங்கும் சக்தியை உயர்த்துவதோடல்லாமல் நாம் நாட்டில் மிகுதியான பொருள்களை உற்பத்தி செய்யவேண்டும். சில உற்பத்திச் சாதனங்கள் உற்பத்தியில் ஈடுபடாமல் இருந்தால், அவைகளைப் பயன்படுத்தி உற்பத்தியைப் பெருக்கலாம். உற்பத்திக் காரணிகள் (factors of production) முன்பைவிட மிகுதியான அளவில் வேலையில் ஈடுபட்டாலும், தொழிலாளர்களுடைய உற்பத்தி செய்யும் சக்தி உயர்ந்தாலும், நாட்டின் மொத்த உற்பத்தி மிகுதியடையும். கூலிகளை உயர்த்தினால் உற்பத்தி அதிகரித்துவிடாது. கூலிகள் உயர்ந்தால், தொழிலாளர்களுடைய வாங்கும் சக்தியும் மிகுதியடையும். ஆனால், நிறுவனத்தின் முதலாளிகளோ அல்லது மற்றவர்களோ பெறும் ஊதியம் குறைந்துவிடும். அல்லது மக்கள் உயர்ந்த விலைகளைக் கொடுத்துப் பொருள்களை வாங்கவேண்டும். உண்மை வருமானம் (real income) முன்பைவிட அதிகமாக இருக்காது. ஆகையால், நாட்டின் நிலைமையில் முன்னேற்றம் ஏற்படாது.

**சில அடிப்படைச் சமன்பாடுகள்**

வருமானம், உற்பத்தி, செலவு முதலியவைகளுக்கிடையே உள்ள தொடர்பை நாம் ஒரு சமன்பாட்டின்மூலம் விளக்கலாம்.

பொருளாதார நூல்களில் கொடுக்கப்பெற்றுள்ள குறிகளைப் பயன் படுத்தி நாம் கீழ்க்கண்ட முறையில் இச் சமன்பாட்டை எழுத லாம்.

$$Y=O=D. \quad \text{......(1)}$$

Y என்பது தேசீய வருமானமாகும்; O=நாட்டின் உற்பத்தி; D=நாட்டின் (மக்களுடைய) மொத்தச் செலவு. மொத்தச் செலவைக் குறிக்கும் D என்ற குறி செயற்படுத்தும் தேவையையும் (effective demand) எடுத்துக்காட்டுகிறது. முதல் சமன்பாட்டி லிருந்து செயற்படுத்தும் தேவை, வருமானத்திற்கும் உற்பத் திக்கும் சமமானது என்பது தெளிவாகின்றது. ஆனால், முதல் சமன்பாட்டிலிருந்து Y, O, D முதலியவை எப்படித் தொடர்பு கொண்டிருக்கின்றன என்பதை நாம் அறிய முடியவில்லை.

இரண்டாவது சமன்பாட்டைக் கீழ்க்கண்ட முறையில் எழுத லாம்:

$$Y=C+S. \quad \text{......(2)}$$

C=மக்களின் மொத்த நுகர்வு (பொருள்களைப் பயன்படுத் துதல்); S=சேமிப்பு (savings). மக்கள் தம் வருமானத்தைப் பொருள் களை வாங்கிப் பயன்படுத்துவதற்காகவோ அல்லது சேமிப்பதற் காகவோ பயன்படுத்துகின்றனர் என்பது இச் சமன்பாட்டிலிருந்து தெளிவாகின்றது. இச் சமன்பாட்டுக்கு நிகரான உற்பத்திபற்றிய சமன்பாட்டைக் கீழ்க்கண்டபடி எழுதலாம்:

$$O=C+I \quad \text{......(3)}$$

C=உடனடியாகப் பொருள்களைப் பயன்படுத்துவோரிடம் செய்யப்பெற்ற விற்பனை; I=நாட்டின் சொத்துகள் (உடனடி யாகப் பயன்படுத்தப்படும் பொருள்கள் உட்பட) பெருகுதல். I என்ற குறி முதலீட்டைக் காண்பிக்கின்றது. முதலீடு என்ற சொல் இங்குப் பத்திர முதலீட்டைக் குறிக்கவில்லை. முதலீடு செய்வதால் உற்பத்திச் சாதனங்களும், மூலதனமும் பெருகும். முதலீடு என்ற பதம் உற்பத்திச் சாதனத்தின் தேய்மானத்திற்கு (depreciation) ஈடுசெய்வதையும் குறிக்கின்றது.

நாம் இப்பொழுது கீழ்க்கண்ட சமன்பாட்டையும் எழுத லாம்:

$$S=I \quad \text{......(4)}$$

சேமிப்பும் முதலீடும் சமமாக இருக்கின்றன. இதற்கு S, I என்ற இரு குறிகளுக்கும் நாம் கொடுத்த விளக்கங்களே காரண மாகும்.

மேலே குறிப்பிட்ட சமன்பாடுகள் மிகவும் பயனுள்ளவை. அவைகளைக்கொண்டே நாம் ஆராய்ச்சியைத் தொடங்க வேண் டும். 26ஆவது அதிகாரத்தில் அவைகளை நாம் பயன்படுத்துவோம். நாட்டின் வருமானம், உற்பத்தி முதலியவைகளைப்பற்றிய விவரங் களை தேசீயக் கணக்குகள் (national accounts) என்ற தலைப்பில் அமைக்க இச் சமன்பாடுகள் உதவுகின்றன. தேசீய வருமானத் தைச் சரிவர மதிப்பீடு செய்ய இச் சமன்பாடுகள் உதவுகின்றன. மதிப்பீடு செய்யும் பிரச்சினையை இங்கே நாம் ஆராய்ச்சி செய்வோம்.

**தேசீய வருமானத்தை மதிப்பீடு செய்யும் முறைகள்**

தேசீய வருமானத்தை மதிப்பீடு செய்ய மூன்று முறைகள் உள என்று நாம் முதல் சமன்பாட்டிலிருந்து அறியலாம். உற் பத்தி, வருமானம், செலவு முதலிய மூன்றில் எதை வேண்டுமானு லும் அடிப்படையாகக்கொண்டு தேசீய வருமானத்தைக் கணக் கிடலாம். மக்கள் தம் வருமானம்பற்றிய புள்ளிவிவரங்களை உள் நாட்டு வருவாய் அதிகாரிகளுக்குக் (Inland Revenue Authorities) கொடுக்கின்றனர். இந்த விவரங்களை நாம் பயன்படுத்தி நாட் டின் வருமானத்தைக் கணக்கிடலாம். பல துறைகளிலிருந்து நாம் பெறும் உற்பத்திபற்றிய விவரங்களைக்கொண்டு நாம் தேசீய வரு மானத்தை மதிப்பீடு செய்யலாம். சில்லறை விற்பனையிலிருந்து மக்கள் செய்யும் செலவுபற்றிய விவரங்களை நாம் சேகரிக்கலாம். இரண்டாவது சமன்பாட்டின்மூலம் சேமிப்பையும் முதலீட்டையும் அளக்கலாம். அதாவது வருமானத்திற்கும், நாம் உடனடியாகப் பயன்படுத்தும் பொருள்களுக்காகச் செலவு செய்யும் தொகைக் கும் உள்ள வேறுபாடே சேமிப்பாகும். மூலதனப் பொருள்களின் மொத்த உற்பத்தியையும், மக்கள் மூலதனப் பொருள்களை வாங்கு வதற்காகச் செலவு செய்யும் தொகையையும் நாம் மதிப்பீடு செய்ய லாம். ஆனால், நமக்குக் கிடைக்கக்கூடிய புள்ளிவிவரங்கள் தவறா னவையாகவும், பூர்த்தியற்றவையாகவும் இருக்கலாம். ஆனால், பல மூலங்களிலிருந்து நாம் பெறும் விவரங்களைப் பயன்படுத்தும் பொழுது, பிழைகள் நீங்கி உண்மை புலப்படும்.

மேலே குறிப்பிட்ட முறைகளை நாம் பயன்படுத்தித் தேசீய வருமானத்தை மதிப்பீடு செய்யும்பொழுது, பல்வேறு சொற்களுக்கு நாம் கொடுத்த விளக்கங்களை மறக்கக்கூடாது. எந்தப் பொருள்

களையும் பணிகளையும் நாம், தேசீய வருமானத்திலும் உற்பத்தியிலும் சேர்க்க வேண்டும் என்பதைப்பற்றித் திட்டவட்டமான கருத்துகளைக் கொள்ளவேண்டும். தேசீய வருமானத்தில் சேர்க்கும் ஒரு பொருளை உற்பத்தியிலிருந்து நீக்கக்கூடாது. மக்கள் குடியிருக்கும் வீடுகளுக்காகச் செலுத்தும் வாடகையை வீட்டு வரியை நிர்ணயம் செய்யும் அதிகாரிகள் குறைத்து மதிப்பிடுவது வழக்கம். வீட்டின் சுவான்தார்களுடைய வருமானத்தைக் கணக்கிடும்பொழுதும், உற்பத்தியைக் கணக்கிடும்பொழுதும், இதே மதிப்பை நாம் பயன்படுத்த வேண்டும். புள்ளிவிவரங்களைச் சேகரிப்பவர்கள் நடைமுறையிலும், கருத்தளவிலும் பல முக்கியமான பிரச்சினைகளைத் தீர்க்க வேண்டும்.

(a) **காலப்போக்கில் தேசீய வருமானத்தில் சேர்க்கப்படும் பணிகளில் ஏற்படும் மாறுதல்கள்:** மக்கள் செய்யும் பணிகளுக்குப் பணத்தை ஊதியமாகப் பெறுகின்றனர். இத்தகைய பணிகளையே உற்பத்தியில் சேர்க்கின்றோம். ஆனால், ஒரு தலைமுறையில் மக்கள் செய்யும் சில பணிகளுக்கு அடுத்த தலைமுறையில் பணம் செலுத்தப்படலாம். முன்பு வீடுகளில் மக்கள் செய்த பல பணிகளை இப்பொழுது சிற்றுண்டிச்சாலைகள் (restaurants), சலவை நிலையங்கள் (laundries), தோட்டங்கள் முதலியன செய்கின்றன.[1] ஆகையால், இவைகளுடைய பணிகளை நாம் தேசீய வருமானத்தில் சேர்க்கின்றோம். ஆனால், இப்படி இவைகளைத் தேசீய வருமானத்தில் சேர்ப்பதால், வருமானம் பெருகியதாகத் தோற்றமளிக்குமே தவிர, உண்மையில் மக்களுடைய வாழ்க்கைத்தரம் உயர்ந்துவிடாது.

(b) **தேய்மானமும் மூலதனத்தைக் காப்பாற்றுதலும்:** உற்பத்தியில் நாம் சேர்க்கும் சில பணிகள் அவ்வப்போது நமக்குப் பயனளிக்கக் கூடியவை. மற்றும், சில மூலப்பொருள்களுடன் ஒன்றுகி அவைகள் மூலம் நமக்குப் பயனளிக்கக்கூடியவை. மூலதனப் பொருள்களை (capital goods) நாம் பயன்படுத்துவதால், அவைகள் தேய்வடையலாம். இத்தேய்மானத்தை ஈடுசெய்வதற்காக நமது பணியில் ஒரு பகுதியை ஒதுக்கவேண்டும். மூலதனப் பொருள்கள் எவ்வளவு தேய்வுற்றன என்பதையும், தேய்மானத்தை ஈடுசெய்வதற்காக நாம் எவ்வளவு பணம் ஒதுக்கவேண்டும் என்பதையும் எவ்வாறு நிர்ணயிக்க முடியும்? இந்த வினவுக்கு நாம் எளிய முறையில் விடையளிக்க முடியாது. தணிக்கையாளர்கள் சில முறைகளைப் பின்பற்றுகின்றனர். ஆனால், இவைகள் சிறந்த முறைகள் ஆகா. இவைகள் தணிக்கையாளர்களுக்கு வசதியளிப்பதாலேயே,

1 இது மேனாடுகளுக்கே பொருந்தும். இங்குக் குறிக்கப்பெற்றுள்ள பணிகளை இன்றும் நம் நாட்டில் வீடுகளில் பெண்மணிகளே செய்துவருகின்றனர்.

அவர்கள் இம் முறைகளைப் பின்பற்றுகின்றனர். உதாரணமாக, விலைகள் உயர்ந்தாலும் தணிக்கையாளர்கள் பழைய விலைகளையே அடிப்படையாகக்கொண்டு தேய்மானத்திற்கு ஈடுசெய்கின்றனர். தேய்மானத்திற்கு ஈடு செய்வதற்காக ஒதுக்கும் பணம் மிகக் குறைவாக இருக்கும். பல புள்ளியியலாளர்கள், உற்பத்திக் கருவிகள் ஒரு குறிப்பிட்ட காலம் வேலை செய்யும் என்று கொண்டு தேய்மானத்தைக் கணக்கிடுகின்றனர். ஆனால், இப்படி மதிப்பீடு செய்வதிலும் தவறுகள் ஏற்படுவது இயற்கை.

**வருமானத்தில் சேர்ந்துள்ள அடக்கச் செலவுப் பகுதிகள்:** மக்கள் செய்யும் பணிகளில் சில நேரடியாகப் பயனளிக்கின்றன. மற்றும் சில மற்றப் பணிகளுக்கு உதவியாக அமைகின்றன. உதாரணமாக, நகரங்கள் வளர்ச்சியடைவதால், மக்களை அவர்கள் வீடுகளிலிருந்து வேலை செய்யும் இடங்களுக்கு வண்டிகளில் ஏற்றிச் செல்ல வேண்டும். புதியதாக வளர்ச்சியடையும் போக்குவரத்து வசதிகளின் வருமானம் மக்கள் நகரத்தில் வாழ்வதற்காகச் செய்யும் செலவாகிவிடுகின்றது. மக்கள் முன்பைவிட இப்பொழுது மிகுதியான தொகையைப் போக்குவரத்துக்காகச் செலவு செய்யலாம். தேசீய வருமானம் மிகுதியடைந்துவிட்டதாகத் தோற்றமளிக்கும். ஆனால், உண்மையில் மக்கள் தொலைவிலுள்ள இடங்களுக்குச் சென்று வேலை செய்வதால், அவர்களுக்கு இடையூறுகளே ஏற்படுகின்றன. மக்கள் தாம் செய்யும் வேலையின் காரணமாக மிகுதியான தொகையை உடையிலும் உணவிலும் செலவு செய்யும்பொழுது, இதே விளைவு ஏற்படுகின்றது. அவர்கள்செய்யும் உபரிச் செலவுகள் வருமானத்தில் சேரா. அவை அவர்கள் செய்ய வேண்டிய அடக்கச் செலவாகும். எனவே, அவர்களுக்குக் கிடைக்கும் மொத்த ஊதியத்திலிருந்து நாம் இச் செலவுகளைக் கழிக்க வேண்டும்.

இச் செலவுகள் முக்கியமற்றவையாக நமக்குத் தோற்றமளிக்கலாம். ஆனால், சற்றுச் சிந்தித்துப் பார்த்தால், இச் செலவுகள் கணிசமானவை என்பதும், முக்கியமானவை என்பதும் நமக்குப் புலப்படும். சாதாரணமான மனிதன் தன் வருமானத்தில் ஒரு பெரும்பகுதியைச் செலவு செய்து வேலை செய்யும் சக்தியைக் காப்பாற்றிக்கொள்கிறான். தொழிலாளி காலை உணவு சாப்பிடும் பொழுது உண்ணும் சிற்றுண்டியும், மருத்துவர் பயன்படுத்தும் 'காடிலாக்' மோட்டார் வண்டியும், ஆசிரியருடைய விடுமுறை நாட்களும் அவர்களுடைய வருமானத்தை எவ்வளவு தூரம் பெருக்கியபோதிலும், அவர்களுக்கு வேலை செய்ய அவை வசதியளிக்கின்றன என்பதை நாம் மறுக்கமுடியாது. மக்களுக்கு வேலை

செய்ய வசதியளிக்கும் பணிகள் அவர்களுடைய வருமானத்தைப் பெருக்கினுல், அப் பணிகளை நாம் நாட்டின் மொத்த வருமானத்தில் சேர்த்துக் கொள்ளலாம். வருமானத்தைப் பெருக்காமல் வேலை செய்ய வசதி மட்டும் அளிக்கும் பணிகளை நாம் தேசீய வருமானத்தில் சேர்க்கக்கூடாது.

(d) மாற்றுக் கட்டணங்கள் (Transfer payments): அரசாங்கம் சமுதாயத்திற்கு ஆற்றும் பணிகள் தேசீய வருமானத்தில் சேரும் சில கட்டணங்களை இரட்டித்துக் காட்டுகின்றன. சிலர் அரசினருக்குப் பணம் செலுத்துகின்றனர். வேறு சிலர் அரசியலாரிடமிருந்து பணத்தை வாங்கிக்கொள்கின்றனர். இவ் விருவகைக் கட்டணங்களையும் தேசீய வருமானத்தில் சேர்க்கும்பொழுது, நாம் சற்று விழிப்புடன் இருக்க வேண்டும். தேசீய இன்சூரன்சு திட்டத்தினுல் (National Insurance) பயனடைவோர் குடும்பங்களுக்குக் கொடுக்கப்படும் உதவிப் பணம் (family allowance) போன்ற தொகைகளை அரசியலாரிடமிருந்து பெற்றுக்கொள்கின்றனர். அரசினர் தேசீயக் கடன் (national debt) தொகைக்காகக் கொடுக்கும் வட்டிப் பணத்தை வாங்கிக்கொள்கின்றனர். இத்தகைய தொகைகள் அவைகளைப் பெற்றுக்கொள்வோருக்கு வருமானமாகும் என்பதை நாம் மறுக்க முடியாது. ஆனுல்,வேறு சிலர் தம் வருமானத்தில் ஒரு பகுதியை வரியாகவும், தேசீய இன்சூரன்சு கட்டணமாகவும் (National Insurance Contribution) செலுத்துவதால்தான், அரசினர் இன்சூரன்சு திட்டத்தைச் செயலாற்றுகின்றனர். எனவே, அரசாங்கம் சிலர் வருமானத்தின் ஒரு பகுதியை வேறு சிலருக்கு மாற்றிவிடுகின்றனர். இன்சூரன்சு திட்டத்தினுல் பயனடைவோர் அதற்காக நாட்டுக்கு எவ்விதத் தொண்டையும் ஆற்றவில்லை. ஒரு முறை ஈட்டிய வருமானத்தை நாம் இருமுறை தேசீய வருமானத்தில் சேர்க்கக்கூடாது. எனவே, மக்கள் உதவிப் பணமாகவோ ஓய்வூதியப் பணமாகவோ (pension) தேசீயக் கடன்தொகையின் வட்டியாகவோ பெறும் தொகைகளை நாம் தேசீய வருமானத்துடன் சேர்க்கக்கூடாது. ஆனுல், சிலர் (உதாரணமாகப் போலீஸ் காரர்கள்) நாட்டுக்குத் தொண்டாற்றி ஊதியம் பெறுகின்றனர். இத்தகைய தொகைகளைத் தேசீய வருமானத்தில் சேர்க்க வேண்டும். ஏனெனில், மேலே குறிப்பிட்ட தொண்டுகள் நாட்டின் பொருளுற்பத்தியையும் பணிகளையும் பெருக்குகின்றன.

இவ் அத்தியாயத்தின் பிற்சேர்க்கையைப் படித்தபின், இந்த நூலைப் படிப்பவர்கள் மதிப்பீட்டுப் பிரச்சினைகளை நன்கு புரிந்து கொள்வார்கள். பிற்சேர்க்கையில் தேசீயக் கணக்குமுறை எளிய முறையில் வெளியிடப்பட்டிருக்கின்றது. சிலர் தேசீயக் கணக்கு

களைப் பார்த்தபின் தேசீய வருமானத்தின் பல்வேறு பகுதிகளின் தொடர்பு எவ்வாறு பயனுள்ளவையாக இருக்கின்றன என்பதை அறிவார்கள். சிலர் புள்ளி விவரங்களைப் பொறுமையுடன் பார்க்க முடியாமல் மேலே படிக்கத் தொடங்குவார்கள். பட்டியல்கள் சிக்கலானவையாகவும், அவர்களுடைய விமர்சனங்கள் தெளி வற்ற முறையிலும் இருக்கின்றன. ஆகையால், அவைகளை இந்த அதிகாரத்துடன் சேர்க்காமல் பிற்சேர்க்கையில் வெளியிட்டிருக் கின்றோம். புள்ளிவிவரங்களைப் பொறுமையுடன் கவனிக்க இயலா தவர்கள் அவைகளை ஊன்றிப் படிக்கவேண்டாம்.

**சமுதாயக் கணக்குமுறை (Social Accounting)**

சமுதாயக் கணக்குமுறை தேசீய வருமானத்தை அடிப்படை யாகக் கொண்டிருக்கின்றது. ஒவ்வொரு நிறுவனமும் இருப்பு நிலைக் குறிப்பையும் (balance sheet), இலாப இழப்புக் கணக்கையும் (profit and loss account) தயார் செய்கின்றது. இரட்டைப் பதிவுக் கணக்குமுறையைப் (double-entry book-keeping) பயன் படுத்தி நம் நாட்டுக்கு ஓர் இருப்புநிலைக் குறிப்பைத் தயார் செய்யலாம். ஒரு கணக்கில் வருமானமாக இருக்கும் தொகை மற்றொரு கணக்கில் செலவாக இருக்கும். இலாப ஈவு, வட்டி, வாரம் (rent) முதலிய வருமானங்கள், மக்கள் உணவு, உடை முதலிய பொருள்களை வாங்குவதற்காகச் செய்யும் செலவுக்கும் அவர்களுடைய சேமிப்புக்கும் சமமாக இருக்கும். மக்களுடைய சேமிப்பு (தொழிலதிபர்களுடைய சேமிப்பு உட்பட) சமுதாயத்தில் புதியதாகத் தோன்றும் கட்டடங்கள், கருவிகள்போன்ற நிலையான சொத்துகளுக்குச் சமமாக இருக்கும். சமுதாயத்தின் கணக்குகள் நாட்டின் ஏற்றுமதி, இறக்குமதி, அயல் நாடுகளுக்குச் செலுத்தும் கட்டணங்கள், அந்த நாடுகள் நம் நாட்டுக்குச் செலுத்தும் கட்டணங்கள் முதலியவற்றையும் காட்டும்.

தேசீயக் கணக்குகளில் காணும் எண்கள் பல இடங்களில் இருப்பதை நாம் காணலாம். இவ்வெண்கள் பல்வேறு மூலங்களி லிருந்து சேகரிக்கப்பெற்றதால், இவை உண்மையாகவும், நம்புத் தகுந்தவையாகவும் இருக்கின்றன. எனவே, இக் கணக்குகளைப் பற்றிய எவ்வித ஐயப்பாடுகளும் எழா. இவ்வெண்கள் ஒன்றுக் கொன்று பொருத்தமுள்ளவையாக இருக்கின்றன. மேலும், இவை நாம் எதிர்பார்க்கும் விளைவுகளுக்கும் பொது அறிவுக்கும் பொருத்த மாக இருக்கின்றன.

நாட்டின் பொருளாதாரத்தைப் பல்வேறு பகுதிகளாகப் பிரித்து ஆராய்ச்சி செய்வதே சமுதாயக் கணக்குமுறையின்

முக்கியமான நோக்கமாகும். இதுபற்றிய புள்ளிவிவரங்களைப் பட்டியலில் காணலாம். நீண்ட காலத்தில் பொருளாதார அமைப்பில் ஏற்படும் மாறுதல்களை இந்த விவரங்கள் எடுத்துக்காட்டும். குறுகிய காலத்தில் பொருளாதாரத்தின் சமநிலையைப் பாதிக்கும் சக்திகளையும் புள்ளிவிவரங்கள் எடுத்துக்காட்டும். மேலே குறிப்பிட்ட உண்மைகளை நாம் புரிந்துகொள்ளச் சமுதாயக் கணக்கு முறைமட்டுமே உதவுகின்றது என்றோ அல்லது இக் கணக்கு முறையே சிறந்தது என்றோ கூறமுடியாது. இங்கிலாந்தின் தலைமை பாங்கு (Bank of England) பொன் காப்புநிதியில் (gold reserves) ஏற்படும் மாறுதல்களைக்கொண்டு அயல் நாட்டுக் கொடுப்பல்நிலை (balance of payments) எவ்வாறு மாறுகின்றது என்பதை மதிப்பிடலாம். இதுபற்றிய அரசினர் அறிக்கைக்காக இங்கிலாந்தின் தலைமை பாங்கு காத்திருக்க வேண்டியதில்லை. சமுதாயக் கணக்குமுறையின் விவரங்களை அரசினர் வெளியிடுவதற்கு முன்பே பணவீக்கம் ஏற்படுவதை விலைவாசிகளில் ஏற்படும் மாறுதல்களைக்கொண்டு நாம் அறியலாம். வேலையின்மை (unemployment), வாழ்க்கைச் செலவு (cost of living) முதலியவைபற்றிய குறியீட்டெண்கள் (indices) நாட்டின் பொருளாதாரத்தைப்பற்றிக் கொடுக்கும் விவரங்களைவிட, சமுதாயக் கணக்குமுறை சிறந்த, பயனுள்ள பல விவரங்களைக் கொடுக்கின்றது. இந்த விவரங்களைக்கொண்டு நாம் எதிர்காலத்தில் எந்த மாறுதல்கள் ஏற்படும் என்று அறியலாம்.

இறந்த காலத்தின் நிகழ்ச்சிகளைப்பற்றி நாம் சரியான கருத்துகளைக் கொண்டால், அவை எதிர்காலத்தைப்பற்றிய சிந்தனைக்கு உதவும். ஆகையால், தேசியக் கணக்குகளைக்கொண்டு (national accounts) நாம் எதிர்காலத்திற்குச் சரியான திட்டத்தை வகுக்கலாம். அரசினர் நாட்டின் வரவு - செலவுத் திட்டத்தைக்கூட, தேசீயக் கணக்குகளுக்குத் தகுந்தவாறு அமைத்துக்கொள்கின்றனர். வரவு - செலவுத் திட்டம் (budget) அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கையை எடுத்துக்காட்டுகின்றது. இத் திட்டத்தை அரசியலார் தேசீயக் கணக்குகளின் உறுப்புகளாகிய தேசீய வருமானம் போன்றவைகளுக்குத் தகுந்தவாறு அமைத்துக்கொள்கின்றனர்.

தேசீய வருமானத்தையும், அதன் உறுப்புகளையும் நாம் பல்வேறு வழிகளில் பயன்படுத்தலாம். மக்கள் எவ்வாறு வருமானத்தைப் பெறுகின்றனர், எவ்வாறு செலவு செய்கின்றனர் என்பனவற்றை நாம் தேசீயக் கணக்குகளிலிருந்து புரிந்துகொள்ளலாம். தேசீய வருமானம் பல்வேறு வகுப்பினரிடையே எவ்வாறு பங்கீடு செய்யப்பெற்றிருக்கின்றது என்பதையும் இக் கணக்குகள் காண்பிக்

கின்றன. ஒரு நாட்டின் செழிப்பை மற்ற நாடுகளுடன் ஒப்பிடுவதற்கு இக் கணக்குகள் உதவுகின்றன. ஒரே நாட்டின் செழிப்பும் செல்வமும் பல்வேறு காலங்களில் எவ்வாறு மாறுகின்றன என்பதையும் நாம் அறிந்துகொள்ளலாம். நாட்டின் பொருளாதாரத்தில் ஏற்படும் மாறுதல்களை இக் கணக்குகள் எடுத்துக்காட்டுகின்றன. திட்டமிடுவதற்கும் இவை உதவுகின்றன.

## 25ஆவது அதிகாரத்தின் பிற்சேர்க்கை

# தேசியக் கணக்குகள்

இங்கிலாந்தின் தேசியக் கணக்குகளை அரசினர், 'Blue Book on National Income and Expenditure' என்ற நூலில் ஆண்டுதோறும் வெளியிடுகின்றனர். கால் ஆண்டுக் கணக்குகளை அவ்வப்போது 'Monthly Digest of Statistics' என்ற பத்திரிகையில் வெளியிடுகின்றனர். தொழில் பெருகியுள்ள மற்ற நாடுகளும் ஆண்டுதோறும் தேசிய வருமானம்பற்றிய அறிக்கையை வெளியிடுகின்றன.

13ஆவது பட்டியலிலிருந்து 19ஆவது பட்டியல்வரை நாம் இங்கிலாந்து நாட்டின் தேசியக் கணக்குகளைக் கொடுத்திருக்கின்றோம். 1938, 1948, 1958 ஆம் ஆண்டுகளின் விவரங்களையும் இப் பட்டியல்களில் காணலாம். இப் பட்டியல்களின் பல்வேறு உறுப்புகளுடைய தொடர்புகளை நாம் இங்குக் கவனிப்போம். பட்டியல்களில் காணும் எண்களைப்பற்றி நாம் அதிகம் பேச வேண்டிய தேவை இல்லை.

**தேசிய வருமானம்**

13ஆவது பட்டியலில் தேசிய வருமானம்பற்றிய விவரங்களை மூன்று தலைப்புகளில் நாம் காணலாம். அவை கீழ்வருமாறு: (1) வேலையிலிருந்து பெறும் வருமானம். (2) சொத்துகள் மூலம் பெறும் வருமானம். (3) வெளி நாடுகளிலிருந்து பெறும் வருமானம். கீழ்க்கண்டவைகளை முதல் தலைப்பில் சேர்க்கலாம். கூலி, சம்பளம், இராணுவத்தில் சேர்ந்தவர்கள் பணமாகவும் பொருளாகவும் பெறும் ஊதியம், சிறு தொழிலதிபர்கள் பெறும் வருமானம், இவைகளைப்பற்றிய முழு விவரங்களை 15ஆம் பட்டியலில் காணலாம். வாரம், வாடகை, வட்டி, இலாப ஈவு முதலியன இரண்டாவது தலைப்பில் சேர்ந்துள்ளன. வெளிநாடுகளிலிருந்து பெறும் வருமானத்தை உள்நாட்டு வருமானத்திலிருந்து பிரித்து

மூன்றுவது தலைப்பில் கொடுத்திருக்கின்றோம். இங்கிலாந்தில் சொத்துகளை வைத்துக்கொண்டிருக்கும் அன்னியர்கள் வருமானத்தைப் பெறுவர். அயல் நாடுகளில் சொத்துகளைக் கொண்டிருக்கும் ஆங்கிலேயர்கள் அந்த நாடுகளில் வருமானத்தைப் பெறுவர். அன்னியர்களைவிட ஆங்கிலேயர் மிகுதியான வருமானத்தைப் பெறலாம். இத் தொகையை மூன்றுவது தலைப்பில் சேர்த்திருக்கின்றோம்.

மூன்று தலைப்புகளில் காணும் தொகைகளைக் கூட்டினால், அத் தொகை கீழ்க்கண்டவைகளுக்குப் பொருத்தமாக இருக்கும்:

(a) விலைகள் மாறுவதால் பங்குகளுடைய மதிப்பு எதிர் பாராதபடி உயர்தல்.

(b) தொடர்ந்து பயன்படுத்தப்படுவதால் முதல் (உற்பத்திக் கருவிகள்) தேய்வுற்று மதிப்பில் ஒரு பகுதியை இழத்தல். இதை முதலையே அழித்தல் அல்லது பயன்படுத்தல் (capital consumption) என்று கூறுவார்கள்.

முதலின் மதிப்பு அல்லது பங்குகளின் மதிப்பு, விலைகள் உயர்ந்தால்தான் மிகுதியடையும். ஓராண்டுக் காலத்தில் விலைவாசி (price level) உயர்ந்தால், அவ்வாண்டின் இறுதியில் நாட்டில் முன்பு இருந்த பொருள்களும், உற்பத்திச் சாதனங்களுமே இருக்கும். ஆனால்,அவைகளுடைய மதிப்பு உயர்ந்ததாகத் தோற்றமளிக்கும். தொழிலதிபர்கள் பொருள்களையும் பங்குகளையும் ஒரே மாருத விலையில் மதிப்பீடு செய்தால், விலையுயர்வைச் சரிக்கட்ட எவ்வித ஏற்பாடும் செய்ய வேண்டியதில்லை. ஏனெனில், சொத்துகளிலிருந்து அவர்கள் பெறும் வருமானம் பெருகியதாகத் தோற்றமளிக்காது. ஆனால், நடைமுறையில். அவ்வப்போது நிலவும் விலைவாசியை அடிப்படையாகக்கொண்டே பங்குகளின் மதிப்பை நிர்ணயிக்கின்றனர். எனவே, விலைகள் மாறினால் அவைகளுடைய மதிப்பும் மாறும். ஆகையால், முதன்முதலில் அவைகள் கொண்டிருந்த மதிப்புக்கும்,பிற்காலத்தில் அவைகளுடைய மதிப்புக்கும் வேறுபாடு இருக்கும். விலைவாசிகள் உயரும்பொழுது (தற்காலத்தைப்போல்), வருமானத்தில் ஒரு பகுதியை நாம் கணக்கில் சேர்க்கக்கூடாது. விலைவாசி தாழ்வடையும்பொழுது, வருமானத்தில் ஒரு பகுதியைச் சேர்த்துக்கொள்ள வேண்டும். இவ்வாறு பணவீக்க காலத்திலும், பணச்சுருக்க காலத்திலும் ஏற்படும் மாறுதல்களை நாம் சரிக்கட்டாவிடில், இலாபம் எவ்வளவு தூரம் தேசீய வருமானத்தைப் பெருக்குகின்றது என்பதை அறியமுடியாது.

தொழிலதிபர்கள் பெறும் வருமானத்தை இரண்டாம் முறை நாம் சரிப்படுத்த வேண்டுமா என்பதை முடிவு செய்யவேண்டும். அதாவது, மூலதனப் பொருள்கள் தேய்வுறுவதை ஈடுசெய்ய நாம் ஒதுக்கும் தொகையை வருமானத்துடன் சேர்த்துக்கொள்ளலாமா அல்லது சேர்க்கக்கூடாதா என்பதை முடிவு செய்யவேண்டும். தொழிலதிபர்கள் பெறும் வருமானத்தை நாம் சரிப்படுத்துவது இத் தொகையைப் பொறுத்தே இருக்கும். நாட்டின் மொத்த உற்பத்திக்கு (gross national product) நாம் இங்கு முக்கியத்துவம் கொடுப்பது வியப்பாக இருக்கலாம். ஆனால், பல நாடுகளில் எச்ச உற்பத்தியைவிட (net national product)மொத்த உற்பத்திக்கே முக்கியத்துவம் கொடுக்கின்றனர். ஆங்கிலேய அரசாங்கம் சில ஆண்டுகள் எச்ச உற்பத்தியைப்பற்றிய புள்ளிவிவரங்களையே வெளியிடவில்லை; மொத்த உற்பத்தியைப்பற்றிய விவரங்களையே வெளியிட்டது. மூலதன உற்பத்திக் கருவிகளின் தேய்மானத்திற்காக (depreciation) எவ்வளவு பணத்தை ஒதுக்கவேண்டும் என்பதைப்பற்றி ஒருவரும் திட்டவட்டமான முடிவுக்கு வரமுடியாது. ஏனெனில், தேய்மானத்தைப்பற்றி நாம் கொள்ளும் கருத்துக்குக் கருவிகள் தொடர்ந்து பயன்படுத்தப்படுவதற்கு, அவைகள் பழையனவாகுதல், தொழிலதிபர்களின் எண்ணங்கள், பணத்தின் மதிப்பு மாறுதல் முதலிய பல காரணங்கள் உள. கருவிகள் ஒரு குறிப்பிட்ட காலம்வரை பயனளிக்கும் என்று கற்பனை செய்துகொண்டே புள்ளியியலார், தேய்மானத்தையும், அதை ஈடுசெய்யவேண்டிய தொகையையும் நிர்ணயம் செய்யவேண்டும். மொத்த வருமானத்தையும் உற்பத்தியையும்பற்றிய புள்ளிவிவரங்களை நாம் எளிதில் பெறலாம். இதற்கு மூலச்சொத்துகளின் நிலையான மதிப்பைமட்டும் நாம் அறிந்தால் போதும். தேய்மானத்தைப்பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை.

### நாட்டின் செலவு

13ஆம் பட்டியலில் கொடுக்கப்பெற்றிருக்கும் விவரங்களை நாம் வேறு கோணத்தில் பார்த்தால், அவைகள் நாட்டின் செலவாகும். 13ஆம் பட்டியலின் மூன்றுவது பகுதி நாட்டின் மொத்த முதலீட்டைக் (gross investment at home) காட்டுகின்றது. புதிய முதலீடுகளையும், உற்பத்தியான பொருள்களையும் நாம் இப் பகுதியில் சேர்த்துள்ளோம். நிலையான சொத்துகள் யாவை என்பதை நாம் திட்டவட்டமாகச் சொல்லமுடியாது. ஆனால், தேய்மானத்தைப்பற்றிய விளக்கத்தைக் கொடுப்பதைப்போல் நிலையான சொத்துகளைப்பற்றிய விளக்கத்தைக் கொடுப்பது கடினமான காரியமல்ல. வருமானம், உற்பத்தி முதலியவைபற்றிய எச்ச எண்களைக் (net figures) கொடுப்பதைவிட மொத்த எண்களைக் (gross

figures) கொடுப்பது எளிய காரியம் என்று நாம் கருதக்கூடாது. அப்படிச் செய்வதால், எச்ச எண்களைச் சேகரிப்பதில் எழும் தொல்லைகளை நாம் ஏற்காமல் தவிர்த்துவிடுகின்றோம். மொத்த எண்களுக்கும் எச்ச எண்களுக்கும் உள்ள வேறுபாட்டுக்கு மூலதனக் கருவிகள் தேய்வடைவதும், பழையனவாதலுமே காரணமாகும்.

புதிய முதலீடுகள் செய்வதால் மூலதனம் பெருகுவது இயற்கை. ஆகையால், புதிய முதலீடு செயற்படுத்தும் தேவையைப் பெருக்குகின்றது. அதாவது மக்கள் முன்பைவிட அதிகமாகப் பொருள்களை வாங்குகின்றார்கள். தனிப்பட்டவர்கள் செய்யும் செலவும் அரசாங்கம் செய்யும் செலவும் ஒரே விளைவுகளைக் கொண்டிருக்கின்றன. உற்பத்தியான பொருள்களில் ஒரு பகுதியை அயல் நாட்டினர் வாங்கிக்கொள்கின்றனர். மொத்தத் தேவையில் இப் பகுதியைக் கழித்துவிடவேண்டும். இப் பகுதியை நாம் ஏற்றுமதியில் (19ஆம் பட்டியல்) சேர்க்கவேண்டும். சில நாடுகளில் தயாராகும் கணக்குகளில் ஏற்றுமதியையும் இறக்குமதியையும் தேசீயச் செலவைக் காட்டும் பட்டியலில் சேர்த்துவிடுகின்றனர். அயல் நாட்டுத் தேவையையும் நாம் மொத்தச் செலவில் சேர்த்தால், 13ஆம் பட்டியலின் வலப்புறத்தில் தனிப்பட்டவர்களின் தேவை, அரசாங்கத்தின் தேவை, அயல் நாட்டினருடைய தேவை, முதலீட்டுத் தேவை (investment demand) முதலியவற்றைப் பதிவு செய்யவேண்டும். இடப்புறத்தில் இத் தேவைகள் எவ்வாறு பூர்த்தி செய்யப்படுகின்றன என்பதைக் குறிக்கவேண்டும். இந்த முறையில் பலர் கணக்குகளைத் தயார் செய்கின்றனர். ஆனால், 13ஆம் பட்டியலில் ஏற்றுமதி - இறக்குமதியின் வேறுபாடு எவ்விதம் செயற்படுத்தும் தேவையைப் பாதிக்கின்றது என்பதை மட்டும் நாம் காணலாம். முதல் மூன்று பகுதிகளைப்போல் இங்குக் குறிப்பிட்டுள்ள ஏற்றுமதி-இறக்குமதியின் வேறுபாட்டையும் நாம் மொத்தச் செலவுடன் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

மேலே குறிப்பிட்ட தொல்லையை நீக்க இரு வழிகளில் தேசீய வருமானத்தைச் சரிப்படுத்தலாம். முதல் வழியை முன்பே விளக்கிவிட்டோம். உள்நாட்டுச் சொத்துகளின் தேய்மானத்திற்கு ஈடுசெய்யவேண்டும். ஆனால், பங்குகளுடைய மதிப்பு உயர்வதால் ஏற்படும் மாறுதலை நாம் சரிப்படுத்தவேண்டியதில்லை. பங்கு மதிப்பின் உயர்வு மொத்த முதலீட்டில் (gross investment) அடங்கவில்லை. ஏனெனில், புதியதாக நிறுவப்படும் உற்பத்தி நிலையங்களும், மூலதனக் கருவிகளுமே மொத்தச் செலவைப் பாதிக்கும். இரண்டாவது வழி (சரிப்படுத்துதல்) சற்றுச் சிக்கலானது. மறைமுக வரிகளைச் (indirect taxes) செலவில் சேர்க்கக்

கூடாது. ஆனால், உதவிப் பணங்களைச் (subsidies) சேர்க்க வேண்டும். ஏனெனில், எதையும் கணக்கில் இருமுறை சேர்க்கக் கூடாது. கல்விபோன்ற பணிகளுக்காக அரசினர் (வரித் தொகையிலிருந்து) செய்யும் செலவை மொத்தச் செலவுடன் சேர்த்துக்கொள்ள வேண்டும். மக்கள் பீர் (beer), புகையிலை முதலிய பண்டங்களை வாங்குவதற்காகச் செய்யும் செலவையும், இப் பண்டங்கள்மீது விதித்த வரிகளைக்கொண்டு அரசினர் கல்விக் காகச் செய்யும் செலவையும் நாம் மொத்தச் செலவில் சேர்த்தால், ஒரே செலவை இருமுறையில் கணக்கில் சேர்த்துவிடுவோம். ஆகையால், மக்கள் பண்டங்களை வாங்குவதற்காகச் செய்யும் செலவுகளைமட்டுமே நாம் கணக்கில் சேர்க்கலாம். மறைமுக வரிகளைச் சேர்க்கக்கூடாது. இதிலிருந்து சில தொழில்களுக்கு அரசினர் கொடுக்கும் உதவிப் பணத்தை மொத்தச் செலவில் சேர்க்கவேண்டும் என்பது புலனாகின்றது. மறைமுக வரிகளை ஏன் மொத்தச் செலவில் சேர்க்கக்கூடாது என்பதையும், உதவிப் பணத்தை ஏன் சேர்க்கவேண்டும் என்பதையும் நாம் விளக்கி விட்டோம். ஸ்தல ஸ்தாபனங்கள் (local authorities) விதிக்கும் மறைமுக வரிகளும் இந்த விதிக்குட்பட்டவையே. மேலே குறிப் பிட்ட முறையில் நாம் செலவை மதிப்பீடு செய்வதால், உற்பத்திக் காரணிகளுடைய உண்மையான வருமானத்தைமட்டுமே நாம் கணக்கில் சேர்க்கின்றோம். அரசினர் செலவு செய்யாமல் தம் பயனுக்காகச் சேமிக்கும் தொகையைக் கணக்கில் சேர்க்கவில்லை. ஆகையால், தேசீய வருமானம் உற்பத்திக் காரணிகளுடைய அடக்கச் செலவுக்குச் (factor cost) சமமாக இருக்கின்றது.

**எச்சப் பிழைகள்** (Residual errors)

தேசீயக் கணக்குகளை முதன்முதலில் பார்வையிடுவோர் இருவகை எண்களின் கூட்டுத்தொகையும் சமமாக இருப்பதைக் கண்டு வியப்படையலாம். இவ் வியப்புக்கு இரு காரணங்கள் உள. (1) இருவகை எண்களின் கூட்டுத்தொகையும் ஒன்றாக இருத்தல் நாம் செய்த ஏற்பாடு என்று தோன்றலாம். (2) செம்மை யற்ற புள்ளிவிவரங்களைக்கொண்டு தயார்செய்த 13ஆவது அட்ட வணையில் இருவகை எண்களும் ஒரே கூட்டுத்தொகையைக் கொடுப்பதும் வியப்பைத் தூண்டலாம். ஒவ்வோர் எண்ணையும் தனித்தனியாக மதிப்பீடு செய்தால், கூட்டுத்தொகையில் பிழைகள் ஏற்படலாம். நடைமுறையில் இருவகை எண்களில் ஒருவகை எண்களை எச்சத்தைப் பயன்படுத்தி நிர்ணயிக்கின்றோம். அல்லது ஐயப்பாடுகள் உள்ள சில எண்களை இரு புறங்களிலும் சமன்பாடு உண்டாகும்படி நிரவுகின்றோம். 'எச்சப்பிழையை'ப் பயன்படுத்தி யும் சமன்பாட்டை ஏற்படுத்தலாம். சமன்பாட்டை ஏற்படுத்து

வதற்கு ஒவ்வொரு நாடும் வெவ்வேறு முறையைப் பின்பற்றலாம். ஒரே நாடு வெவ்வேறு முறைகளைக் கையாண்டு பல்வேறு பட்டியல்களைத் தயார்செய்யலாம். 13ஆவது பட்டியலில் ஒரு சிறு எச்சப்பிழையை இடப்புறம் காணலாம். அது 14 ஆம் பட்டியவிலும் இருப்பதை நாம் காணலாம். மற்ற எண்கள் தனித்தனியாகச் சேகரிக்கப்பெற்றவை என்றும், நம்பத்தகுந்தவை என்றும் நாம் கருதக்கூடாது. சில எண்கள் சரியானவையாகவும், மற்றும் சில செம்மையற்றவையாகவும் இருக்கின்றன. இங்குக் காணும் பட்டியல்களைப் பயன்படுத்தி நாம் எந்த முடிவுக்கு வந்தாலும், எந்த எண்கள் நம்பத்தகுந்தவை, எவை சரியானவை அல்ல என்பதை மறக்கக்கூடாது.

**வருமானமும் செலவும் சமமாக இருத்தல்**

வருமானமும் செலவும் சமமாக இருத்தல் வேண்டும் என்பது நம் அறிவுக்குப் புலப்படக்கூடிய உண்மையாகும். இச் சமன்பாடு புள்ளிவிவரங்களைப் பொறுத்து அமையவில்லை. ஒருவருடைய செலவு மற்றொருவருடைய வருமானமாக அமைகின்றது. ஆகையால், மொத்தச் செலவும் மொத்த வருமானமும் சமமாக இருத்தல் வேண்டும். புதியதாக உற்பத்தி செய்யப்படாத ஒரு பொருளை வாங்குவதற்காக ஒருவன் செய்யும் செலவை நாம் உற்பத்திச் செலவில் சேர்க்கவில்லை. அச் செலவுகளை 13ஆம் பட்டியலிலிருந்து நீக்கிவிட்டோம். உதாரணமாக, முன்பே கட்டப்பட்ட ஒரு வீட்டை வாங்குவதற்காகச் செய்யும் செலவு நாட்டின் உற்பத்தியைப் பெருக்கவில்லை. ஒருவன் ஒரு வீட்டை விற்றால், மற்றொருவன் அதை வாங்கவேண்டும். ஆகையால், விற்பனைத் தொகையும், வாங்குதல் தொகையும் சமமாக இருத்தல் வேண்டும். ஆனால், ஒருவன் புதியதாக ஒரு வீட்டைக் கட்டினாலோ, அல்லது ஒரு புதிய நிறுவனத்தின் பங்குகளை வாங்கினாலோ, அவனுடைய செலவு உற்பத்திப் பெருக்கத்திற்கு உதவியளிக்கின்றது. இத்தகைய செலவுகளையும், அவைகளால் கிடைக்கும் வருமானங்களையும் 13ஆம் பட்டியலில் காணலாம்.

**சேமிப்பும் முதலீடும்**

14ஆம் பட்டியல் நாம் முன்பு குறிப்பிட்ட 4ஆவது சமன்பாட்டுடன் தொடர்புகொண்டிருக்கின்றது. பட்டியலின் இடப்புறத்தில் சேமிப்புகளையும், வலப்புறத்தில் முதலீடுகளையும் காணலாம். விவசாயிகள், கடைகளைக் கொண்டிருப்பவர்கள், கூட்டமைப்பைப் பெற்ற சிறிய தொழிலதிபர்கள், கூட்டமைப்புத் தொழிலகங்களின் முதலாளிகள் முதலியவர்கள் தம் வருமானத்தில் ஒரு பகுதியைச் சேமிக்கலாம். பெரிய கூட்டமைப்புத் தொழி

லகங்கள் தம் இலாபத்தில் ஒரு பகுதியை பங்குதாரர்களுக்குக் கொடுக்காமல் முதலீட்டுக்குப் பயன்படுத்துகின்றன, அல்லது காப்பு நிதியுடன் சேர்த்துவிடுகின்றன. அரசினர் செலவைக் குறைத்தோ அல்லது அயல்நாடுகளிலிருந்து மானியம் பெற்ருே பணத்தைச் சேமிக்கலாம். மொத்தச் சேமிப்பை அரசாங்கம், தனிப்பட்டவர்கள், தொழிலதிபர்கள் முதலியவர்களிடையே நாம் செயற்கைமுறையில் பிரித்துள்ளோம். ஒரு கடையின் முதலாளி தன் சொந்தச் சார்பில் எவ்வளவு பணம் சேமிக்கின்ருன், தொழிலுக்காக எவ்வளவு பணம் சேமிக்கின்ருன் என்று கூறமுடியாது. அவன் இப்பொழுது பெறும் வருமானத்திற்காகப் பிறகு செலுத்த வேண்டிய வரியைத் தன் சேமிப்பிலிருந்து கழிக்கவேண்டும் என்று கருதலாம். ஆகையால், வரித்தொகை (அரசினர் வசூல் செய்யாவிடினும்) அரசாங்கத்தின் சேமிப்பாகும். அரசாங்கத்தின் சேமிப்பை மதிப்பிடும்பொழுது நாம் அரசினர் வசூல் செய்யும் சொத்து வரியை (அல்லது எஸ்டேட் வரி) வருமானத்துடன் சேர்க்கக்கூடாது. சொத்து வரியை மூலதன வருமானமாகக் (capital receipt) கருதவேண்டும். இப்படி மதிப்பிடுவதால் அரசாங்கத்தின் செலவு குறைவாகவும், தனிப்பட்டவர்களின் செலவு மிகுதியாகவும் இருக்கும். பாகுபாடு செய்யமுடியாத சில வகை வருமானங்களே நாம் ஒரே பிரிவில் சேர்க்கவேண்டும். 14ஆம் பட்டியலின் நான்காவது இனம் (தனிப்பட்டவர்களும், நிறுவனங்களும் செலுத்தும்) வரித்தொகையில் உபரியைக் காட்டுகின்றது. இந்த இனத்தை நாம் அரசினர் சேமிப்பாகவோ, அல்லது தனிப்பட்டவர்கள் சேமிப்பாகவோ கருதலாம்.

14ஆம் பட்டியலின் 11, 12ஆவது இனங்கள் உள்நாட்டின் மொத்த முதலீட்டைக் காண்பிக்கின்றன. 13 ஆம் இனம் வெளி நாட்டில் செய்யும் முதலீட்டைக் காண்பிக்கின்றது. இவ் இனம் 13ஆம் பட்டியலில் உள்ள ‘நடைமுறை வருமானத்திலிருந்து அயல்நாடுகளில் சொத்தைப் பெருக்குதல்’ என்ற இனத்திலிருந்து வேறுபட்டிருக்கின்றது. மார்ஷல் திட்டம் (Marshall Aid), போர்க் காலக் கடன் தொகையை உலகநாடுகள் திருப்பிச் செலுத்தியது, இங்கிலாந்து போர்த்தளவாடப் பொருள்களே வெளிநாடுகளில் வைத்துக்கொண்டிருந்தது முதலியவையே இதற்குக் காரணங்கள். 1948-ல் நமது நடைமுறை வருமானத்தைக்கொண்டு அயல்நாடுகளில் நம் சொத்தைப் பெருக்கமுடியாதபொழுது, மேற்கூறிய மூலதன வரவு நமது அயல்நாட்டு முதலீட்டைப் பெருக்கியது. எனவே, 13ஆம் பட்டியலின் 14ஆவது இனமாக நாம் பதிவு செய்திருக்கும் எண்கள், 14ஆம் பட்டியலில் 13, 3(b) இனங்களின் கூட்டுத்தொகைக்குச் சமமாக இருக்கும்.

# பட்டியல் 13

## இங்கிலாந்தின் வரவுபற்றிய கணக்கு, 1938-58

| தேசீய வருமானம் | மிலியன் பவுன்களில் 1938 | 1948 | 1958 |
|---|---|---|---|
| 1. வேலையிலிருந்து பெறும் வருமானம் (பட்டியல் 15, 3, 7) | 3669 | 8086 | 15249 |
| 2. சொத்துகளிலிருந்து கிடைக்கும் வருமானம் (பட்டியல் 15,8) | 1234 | 2438 | 4532 |
| 3. அயல்நாடுகளிலிருந்து பெறும் எச்ச வருமானம் (பட்டியல் 19, 7—19, 2)... ... ... | 192 | 189 | 269 |
| 4. எச்சப் பிழை (பட்டியல் 14, 5) | — | 58 | 60 |
| 5. பங்குகளின் மதிப்பு உயர்வு நீங்கலாக (பட்டியல் 14, 7) | 80 | —325 | 20 |
| 6. மொத்த தேசீய உற்பத்தி ... | 5175 | 10446 | 20130 |
| 7. உள்நாட்டு உற்பத்திக் கருவி களின் தேய்மானம் நீங்கலாக (பட்டியல் 14, 9) ... ... | 359 | 890 | 1895 |
| 8. தேசீய வருமானம் ... ... | 4816 | 9556 | 18235 |

| நாட்டின் செலவு (செயல்படுத்தும் தேவை) | மிலியன் பவுன்களில் 1938 | 1948 | 1958 |
|---|---|---|---|
| 9. தனிப்பட்டவர்களின் செலவு (பட்டியல் 15, 11) ... ... | 4394 | 8554 | 14953 |
| 10. அரசினர் பொருள்களை வாங்குவதற்காகச் செய்த செலவு (பட்டியல் 18,6) ... ... | 780 | 1804 | 3805 |
| 11. உள்நாட்டில் மொத்த முதலீடு (பட்டியல் 14, 11, 12) ... | 656 | 1627 | 3566 |
| 12. உள்நாட்டு உற்பத்திக் கருவி களின் தேய்மானம் நீங்கலாக (பட்டியல் 14, 9) ... ... | —359 | —890 | -1895 |
| 13. நடைமுறை வருமானத்தி லிருந்து அயல்நாடுகளில் சொத்தைப் பெருக்குதல் (பட்டியல் 19, 4—19, 8) ... | —70 | —95 | +437 |
| 14. மார்க்கெட்டு விலையின் அடிப் படையில் நாட்டின் செலவு ... | 5401 | 10957 | 20866 |
| 15. மறைமுகவரிகள்—உதவிப் பணம் நீங்கலாக (பட்டியல் 18,2) | 585 | 1450 | 2631 |
| 16. நாட்டின் செலவு—உற்பத்திக் காரணிகளின் விலைக்குச் சமமானது... ... ... | 4816 | 9556 | 18235 |

Source: National Income and Expenditure for 1958 and 1959 (H.M.S.O.)

# பட்டியல் 14

## இங்கிலாந்தின் மூலதனக் கணக்கு (Capital Account), 1938-58

| சேமிப்பு | மில்லியன் பவுன்களில் 1938 | 1948 | 1958 | முதலீடு | மில்லியன் பவுன்களில் 1938 | 1948 | 1958 |
|---|---|---|---|---|---|---|---|
| 1. தனிப்பட்டவர்கள் (பட்டியல் 15, 12) ... ... ... | 262 | 85 | 1341 | 11. உள்நாட்டில் நிலையான மொத்த மூலதனம் உருவாதல் (பட்டியல் 13, 11) ... | 656 | 1452 | 3516 |
| 2. நிறுவனங்கள் - கூட்டுப் பங்குக் கம்பெனிகள் (பட்டியல் 17, 8) | 303 | 987 | 1997 | | | | |
| 3. அரசாங்கம்— (a) வரவுசெலவுத்திட்டத்தின் உபரி (பட்டியல் 18, 8) ... ... ... | —81 | 591 | 700 | 12. பொருள்களுடைய பெருக்கத்தின் மதிப்பு (பட்டியல் 13, 11) | — | 175 | 50 |
| (b) மூலதன நன்கொடையும் வெளிநாடுகளிலிருந்து பெறும் வருமானமும் (பட்டியல் 19, 8) ... | — | 234 | 1 | 13. வெளிநாடுகளில் எச்ச முதலீடு (பட்டியல் 19, 4) ... ... | —70 | 145 | 438 |
| 4. வரித்தொகையுடன் உபரியாகச் சேர்த்த தொகை (பட்டியல் 15, 13, 17, 7) ... ... ... | 22 | 142 | —115 | 14. மொத்த முதலீடு ... ... | 586 | 1772 | 4004 |
| 5. எச்சப் பிழை (பட்டியல் 13) ... | — | 58 | 60 | 15. தேய்மானம் நீங்கலாக (பட்டியல் 13, 7) ... ... | 359 | 890 | 1895 |
| 6. | 506 | 2097 | 3984 | | | | |
| 7. பங்குகளின் மதிப்பு உயர்வு நீங்கலாக (பட்டியல் 13, 5) | 80 | —325 | 20 | | | | |
| 8. மொத்தச் சேமிப்பு ... ... | 586 | 1772 | 4004 | | | | |
| 9. தேய்மானம் நீங்கலாக (பட்டியல் 13,7) ... ... ... | 359 | 890 | 1895 | 16. எச்ச முதலீடு (net investment) | 227 | 882 | 2109 |
| 10. எச்சச் சேமிப்பு (net saving) | 227 | 882 | 2109 | | | | |

## பட்டியல்

### இங்கிலாந்து நாட்டின் தனிப்பட்டவர்களுடைய

| வருமானம் | மிலியன் பவுன்களில் | | |
|---|---|---|---|
| | 1938 | 1948 | 1958 |
| **வேலை செய்து பெறும் வருமானம்** | | | |
| 1. கூலிகளும் சம்பளங்களும் (இராணுவத்தில் வேலை செய்வோர் உள்பட) ... ... ... | 2896 | 6418 | 12488 |
| 2. தேசீய இன்சூரன்சுத் திட்டம், ஓய்வூதியத் திட்டம் முதலியவைகளுக்கு முதலாளிகள் செலுத்தும் தொகை ... ... ... | 126 | 348 | 925 |
| 3. மொத்தம் (பட்டியல் 13, 1) ... | 3022 | 6766 | 13413 |
| **தாமாகவே தொழில் செய்வோரின் வருமானம்[1]** | | | |
| 4. சில குறிப்பிட்ட தொழில்களில் ஈடுபட்டிருப்பவர்கள் ... ... | 118 | 209 | 290 |
| 5. விவசாயிகள் ... ... ... | 69 | 301 | 439 |
| 6. கூட்டுப் பங்குமுறையைப் பின்பற்ருத சிறிய நிறுவனங்கள் ... | 460 | 810 | 1107 |
| 7. மொத்தம் (பட்டியல் 13, 1) ... | 647 | 1320 | 1836 |
| **மற்ற வருமானம்** | | | |
| 8. வாரம், இலாப ஈவு, வட்டி (பட்டியல் 13, 2, 3—பட்டியல் 17, 7, 8—பட்டியல் 18, 4—7b) ... ... | 1134 | 1189 | 2191 |
| 9. தேசீய இன்சூரன்சுத் திட்டத்தின்கீழ் சிலர் பெறும் உதவிப் பணம் (பட்டியல் 18, 7a) ... | 275 | 705 | 1488 |
| 10. தனிப்பட்டவர்களின் மொத்த வருமானம் ... ... ... | 5078 | 9980 | 18928 |

[1] தேய்மானத்தையும் பங்குகளின் மதிப்பு

வருமானக் கணக்கு, 1938 – 58

| செலவு | மிலியன் பவுன்களில் | | |
|---|---|---|---|
| | 1938 | 1948 | 1958 |
| 11. துய்ப்போர் செலவு (வெளிநாடுகளுக்குச் செலுத்திய தொகை உள்பட) (பட்டியல் 13, 9) ... | 4394 | 8554 | 14953 |
| 12. சேமிப்பு[1] (பட்டியல் 17, 1) ... | 262 | 85 | 1341 |
| 13. வருமானவரி (உபரி வரிகள் உள்பட) (பட்டியல் 18, 1) ... | 313 | 1006 | 1775 |
| 14. தேசீய இன்சூரன்சுத் திட்டக் கட்டணங்கள் (பட்டியல் 18, 3) | 109 | 335 | 859 |
| 15. தனிப்பட்டவர்களின் மொத்தச் செலவு ... ... ... | 5078 | 9980 | 18928 |

[1] உயர்வையும் சரிப்படுத்துவதற்கு முன்.

## பட்டியல் 16

**தேசிய வருமானக் கணக்கையும், தனிப்பட்டவர்களுடைய வருமானக் கணக்கையும் பொருந்தச் செய்தல்**

| | மிலியன் பவுன்களில் | | |
|---|---|---|---|
| | 1938 | 1948 | 1958 |
| 1. தனிப்பட்டவர்களுடைய மொத்த வருமானம் (பட்டியல் 14, 15) ... | 5078 | 9980 | 18928 |
| 2. மாற்றுக் கட்டணங்கள் நீங்கலாக— ... ... ... | | | |
| (a) தேசிய இன்சூரன்சுத் திட்டத்தின்கீழ்ச் சிலர் பெறும் வருமானமும் அரசினர் நன்கொடையும் நீங்கலாக (பட்டியல் 15, 9) ... ... | —275 | —705 | —1488 |
| (b) கடன் தொகைக்கு அரசினர் செலுத்தும் வட்டி [பட்டியல் 18, 7(b)] | —281 | —575 | —1041 |
| 3. அரசாங்கம் சொத்துகள்மூலம் பெறும் வருமானத்தைச் சேர்த்தபின் (பட்டியல் 18, 4) ... ... ... ... ... ... | +175 | +280 | +826 |
| 4. இலாப ஈவாகக் கொடுக்கப்படாத (கம்பெனிகளின்) இலாபத்தைச் சேர்த்தபின் (பட்டியல் 17, 7, 8) ... ... ... ... | +398 | +1733 | +2825 |
| 5. எச்சப் பிழை (பட்டியல் 13, 4) ... ... ... ... | — | +58 | +60 |
| 6. பங்குகளின் மதிப்பு உயர்வு நீங்கலாக (பட்டியல் 13, 5) ... ... | +80 | —325 | +20 |
| 7. மொத்தத் தேசிய உற்பத்தி (பட்டியல் 13, 6) ... ... ... | 5175 | 10446 | 20130 |

## பட்டியல் 17

### இங்கிலாந்தின் கூட்டுப்பங்கு நிறுவனங்களின் பகிர்வுக் கணக்கு (Appropriation Account), 19385-8

| வருமானம் | மிலியன் பவுன்களில் 1938 | 1948 | 1958 | வருமானத்தைப் பகிர்வு செய்தல் | மிலியன் பவுன்களில் 1938 | 1948 | 1958 |
|---|---|---|---|---|---|---|---|
| 1. மொத்த வர்த்தக இலாபம் (பட்டியல்) 13, 2 ... | 700 | 1916 | 3348 | 5. இலாப ஈவும், வட்டியும் ... | 617 | 686 | 1383 |
| | | | | 6. வெளிநாடுகளில் செலுத்திய வரியும் மற்றக் கட்டணங்களும் ... | 33 | 95 | 213 |
| 2. அயல் நாட்டு வர்த்தகத்தில் கிடைத்த இலாபம் (பட்டியல் 13, 3) ... | 106 | 240 | 295 | 7. இங்கிலாந்தில் செலுத்திய வரியும், உபரி வரியும் ... | 95 | 746 | 828 |
| 3. வர்த்தகம் அல்லாத வேறு வழியில் கிடைத்த இலாபம் | 242 | 358 | 783 | 8. பகிர்ந்துகொடுக்கப் பெருத வருமானம் (பட்டியல் 14, 2) ... ... ... | 303 | 987 | 1997 |
| மொத்தம் | 1048 | 2514 | 4421 | | 1048 | 2514 | 4421 |

## பட்டியல் 18

**இங்கிலாந்து நாட்டின் வருவாய்க் (Revenue) கணக்கு (தேசீய இன்சூரன்சு நிதி உள்பட) 1938-58**

| வருவாய்[1] | மில்லியன் பவுன்களில் 1938 | 1948 | 1958 | செலவு | மில்லியன் பவுன்களில் 1938 | 1948 | 1958 |
|---|---|---|---|---|---|---|---|
| 1. வருமானவரி[2] (பட்டியல் 15, 13+17, 7—பட்டியல் 14, 4) ... | 386 | 1610 | 2718 | 6. பண்டங்களையும் பணிகளையும் வாங்குவதற்காகச் செய்த செலவு (பட்டியல் 13,10) ... | 780 | 1804 | 3805 |
| 2. மறைமுக வரிகள் (உதவிப் பணம் நீங்கலாக) (பட்டியல் 13, 15) ... | 585 | 1450 | 2631 | 7. மாற்றுச் செலவுகள்— (a) தேசீய இன்சூரன்சு திட்டத்தின் உதவியும், மற்ற மானியமும் (பட்டியல் 15, 9) ... | 275 | 705 | 1488 |
| 3. தேசீய இன்சூரன்சு திட்டத்தின் கீழ் அளித்த உதவி (பட்டியல் 15,14) ... ... | 109 | 335 | 859 | (b) கடனுக்குக் கொடுத்த வட்டி [பட்டியல் 16, 2 (b)] ... ... | 281 | 575 | 1041 |
| 4. சொத்துகள் மூலம் கிடைத்த வருமானம் (பட்டியல் 16, 3) ... | 175 | 280 | 826 | 8. வரவு செலவுத் திட்டத்தின் உபரி (பட்டியல் 14, 3 (a) ... ... | —81 | 591 | 700 |
| 5. மொத்தம் ... ... | 1255 | 3675 | 7034 | மொத்தம் ... ... | 1255 | 3675 | 7034 |

1 மூலதனம், அயல் நாடுகளிலிருந்து பெறும் மூலதனம் முதலியவற்றின்மீது விதித்த வரிகள் நீங்கலாக.

2 உபரிவரித் தொகை நீங்கலாக.

## பட்டியல் 19

### இங்கிலாந்து மற்ற நாடுகளுடன் கொண்ட வர்த்தகத் தொடர்பு 1938-58

| இங்கிலாந்து செலுத்திய தொகை | மிலியன் பவுன்களில் | | | இங்கிலாந்தின் வரவு | மிலியன் பவுன்களில் | | |
|---|---|---|---|---|---|---|---|
| | 1938 | 1948 | 1958 | | 1938 | 1948 | 1958 |
| 1. அயல் நாடுகளிலிருந்து பொருள்கள் வாங்கியதற்காக ... ... | 977 | 2195 | 4118 | 6. வெளிநாடுகளுக்கு விற்பனை செய்த பொருள்களும், பணிகளும் ... | 723 | 1992 | 4377 |
| 2. அயல் நாடுகள் சொத்துகள் மூலம் பெற்ற தொகை | 61 | 212 | 489 | 7. சொத்துகள்மூலம் வெளிநாடுகளிலிருந்து பெற்ற தொகை (பட்டியல்13,3) | 253 | 401 | 758 |
| 3. அயல் நாடுகளுக்குச் செலுத்திய மற்றத் தொகைகள்— | | | | | | | |
| (a) தனிப்பட்டவர்கள் (பட்டியல் 15, 11) ... | — | 34 | 28 | 8. வெளி நாடுகளிலிருந்து கிடைத்த மொத்த மானியம் [பட்டியல் 14,3 (b)] | — | 234 | 1 |
| (b) அரசாங்கம் (பட்டியல் 18, 6) ... ... | 8 | 41 | 63 | | | | |
| 4. அயல் நாடுகளில் செய்த எச்ச (net) முதலீடு (பட்டியல் 14, 13) ... ... | —70 | 145 | 438 | | | | |
| 5. மொத்தம் செலுத்தியதொகை | 976 | 2627 | 5136 | 9. மொத்த வரவு ... ... | 976 | 2627 | 5136 |

**தனிப்பட்டவர்களுடைய வருமானம்**

15ஆம் பட்டியல் தனிப்பட்டவர்களுடைய வருமானத்தை எடுத்துக்காட்டுகின்றது. இதில் நிறுவனங்களுடைய வருமானமும், அவை இலாப ஈவாகப் பிரித்துக்கொடுக்காத வருமானமும் அடங்க வில்லை. இதற்கும் தேசீய வருமானத்திற்கும் வேறுபாடு உண்டு. தேசீய வருமானத்தில் அரசினர் வருமானம் சேர்ந்திருக்கின்றது. முதல் ஏழு இனங்களின் கூட்டுத்தொகை 13ஆம் பட்டியலின் முதல் இனத்தின் தொகைக்குச் சமமாக இருக்கும். முதலாளிகள் தொழிலாளர்களுக்காகச் செலுத்திய தேசீய இன்சூரன்சு திட்டக் கட்டணங்களும், அவர்களுக்குக் கொடுத்த ஓய்வூதியமும் இக் கூட்டுத்தொகையில் சேர்ந்திருக்கின்றன. மற்ற இனங்கள் தனிப் பட்டவர்கள் பெறும் வாரம் (rent), வட்டி, இலாப ஈவு (dividend), அரசாங்கம் கொடுக்கும் நன்கொடை, மானியம், உதவிப்பணம் முதலியவைகளைக் காட்டுகின்றன. இந்த நன்கொடை, உதவிப் பணம் முதலியவைகளை நாம் இதே பட்டியலில் செலவு இனங்க ளாகவும் காணலாம். மக்கள் செய்யும் செலவில் முக்கியமான பகுதி, துய்ப்போர் பண்டங்களுக்காகச் (consumer goods) செய்யும் செலவேயாகும். இச் செலவை நாம் 13ஆம் பட்டியலில் காணலாம். மக்களுடைய சேமிப்பை நாம் 14ஆம் பட்டியலில் காணலாம். மற்ற இனங்கள் தேசீய இன்சூரன்சு கட்டணங்களை யும் வரிகளையும் குறிக்கின்றன.

தனிப்பட்டவர்கள் வருமானத்தையும் அரசினர் பெறும் வருமானத்தையும் நாம் இணைக்கும்பொழுது, முன்பு குறிப்பிட்ட 'மாற்றுக் கட்டணங்கள்' புகுத்தும் மாறுதலைக் கவனிக்கவேண்டும். நிறுவனங்கள் பங்குதாரர்களுக்குப் பகிர்ந்துகொடுக்காத இலாபமும் முக்கியமான மாறுதலைப் புகுத்துகின்றது. 14ஆம் பட்டியலில் சேர்த்துள்ள நிறுவனங்களுடைய சேமிப்பைவிட இந்த இனம் அதிகமாக இருக்கின்றது. ஏனெனில், இதில் அரசாங்கத்திற்குச் செலுத்தும் வரித் தொகையும் சேர்ந்திருக்கின்றது. இலாப ஈவு, வட்டி முதலியவைகள்மீது விதிக்கும் வரி இதில் சேரவில்லை. இந்த வரிகள் 15ஆம் பட்டியலில் காணும் வருமான வரியிலும், அதே பட்டியலின் இடப்புறத்தில் காணும் வட்டி, இலாப ஈவு, வாரம் முதலியவைகளுடனும் சேர்ந்திருக்கின்றன.

அரசினர் வைத்திருக்கும் சொத்துகளிலிருந்து பெறும் வாரம், இலாப ஈவு, வட்டி முதலிய வருமானங்களும் ஒரு மாறுதலைப் புகுத்து கின்றன. அஞ்சல் அலுவலகம் (Post Office), துறைமுகம் (Harbour), அரசினர் வசமிருக்கும் போக்குவரத்துச் சாதனங்கள் முதலியவைகளிலிருந்து அரசினர் வருமானம் பெறுகின்றனர்.

பொது நிறுவனங்கள் அரசாங்கத்திற்குச் செலுத்தும் வட்டிப் பணமும் இந்த இனத்துடன் சேரும். இந்த வருமான நிறுவனங்கள் இலாப ஈவாகப் பிரித்துக்கொடுக்காத இலாபத்தைப்போன்ற இனமாகும்.

மாற்றுக் கட்டணங்களை நீக்கி, அரசினர் சொத்துகள்மூலம் பெறும் வருமானத்தையும் நிறுவனங்கள் பங்குதாரர்களுக்குப் பகிர்ந்துகொடுக்காத இலாபத்தையும் சேர்த்தால் இத் தொகை 13ஆம் பட்டியலின் முதல் மூன்று இனங்களின் கூட்டுத்தொகைக் குச் சமமாக இருக்கும். பங்குகளின் விலையுயர்வைச் சரிப்படுத் தினல் இத் தொகை மொத்தத் தேசீய உற்பத்திக்குச் சமமாக இருக்கும். நிலையான சொத்துகளின் தேய்மானத்தைச் சரிப் படுத்தினல் இத் தொகை தேசீய வருமானத்திற்குச் சமமாக இருக்கும்.

**நிறுவனங்கள்**

தனியார் துறையை (private sector) தனியாள், கூட்டுப்பங்கு முறையைப் பின்பற்றுத நிறுவனங்கள், மற்றக் கம்பெனிகள் என்ற மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். முதல் இரு பகுதிகளின் வேற்றுமையை நாம் எளிதில் புரிந்துகொள்ள முடியாது. அவைகளை 13ஆம் பட்டியலில் ஒன்ருகவே இணைத்திருப்பதை நாம் காணலாம். மூன்ருவது பகுதியாகிய கம்பெனிகளைப்பற்றிய விவரங்களை நாம் புரிந்துகொள்ளலாம். இப் பகுதியின் வருமானத்தை 17ஆம் பட்டியலில் காணலாம். நாட்டுடைமை யாக்கப்பெற்ற (nationalised) தொழில்களின் வருமானத்தையும் நாம் 17ஆம் பட்டியலில் காணலாம். இத் தொழில்களையும் தனியார் துறையிலேயே சேர்ப்பது வழக்கம்.

இந்தப் பட்டியலின் முதல் இரண்டு இனங்களின் கூட்டுத் தொகை 13ஆம் பட்டியலின் சொத்துகள்மூலம் பெற்ற வருமானம், கம்பெனிகள் பெறும் வாரம் முதலிய இனங்களின் கூட்டுத் தொகைக்குச் சமமாக இருக்கும். வாரத்தை 17ஆம் பட்டியலின் 3ஆம் இனத்தில் சேர்த்துள்ளோம். இந்த இனத்தில் வாரத்தைத் தவிரக் கம்பெனிகள் கொண்டிருக்கும் அரசினர் பத்திரங்களுக் காகப் பெறும் வட்டியையும் சேர்த்திருக்கின்ருேம். இந்த வட்டி தேசீய வருமானத்தில் சேரவில்லை. ஏனெனில், இது ஒரு மாற்றுக் கட்டணமாகும். கம்பெனியின் வருமானத்தை இலாப ஈவாக வும், வட்டியாகவும் கொடுக்கின்றனர். வரிகள் செலுத்தியபின் எஞ்சிய தொகையைக் காப்புநிதியில் (reserve) சேர்த்துவிடு கின்றனர். இந்த இரண்டு இனங்களும் 16ஆம் பட்டியலில்

'பகிர்ந்து கொடுக்காத இலாபமாகவும்', 15ஆவது பட்டியலில் வாரம், இலாப ஈவு, வட்டி முதலியவைகளாகவும் சேர்க்கப்பெற்றிருக்கின்றன.

**பொதுத்துறை (public sector)**

இங்கிலாந்தின் வருவாய்க் கணக்குகளை (revenue accounts) 18ஆம் பட்டியல் காட்டுகின்றது. மத்திய அரசாங்கம், ஸ்தல ஸ்தாபனங்கள் முதலியவைகளுடைய வருவாயையும் செலவையும் கொண்டு இக் கணக்குகளைத் தயார்செய்திருக்கின்றனர். நாட்டுடைமையாக்கப்பெற்ற தொழில்களுடைய விவரங்களை மற்ற நிறுவனங்களுடன் சேர்த்து 17ஆம் பட்டியலில் வெளியிட்டிருக்கின்றனர். பட்டியலில் ஒருபுறத்தில் வருமான வரிகள் பதிவு செய்யப்பட்டிருப்பதைக் காணலாம். இந்த வரியை நிறுவனங்களும் தனியாட்களும் செலுத்துகின்றனர். மறைமுக வரிகளையும் நாம் பட்டியலின் ஒரு புறத்தில் காணலாம். ஆனால், உதவிப்பணமாகக் (subsidy) கொடுக்கப்படும் தொகை இதில் சேர்க்கப்படவில்லை. தேசீய இன்சூரன்சு கட்டணங்கள், சொத்துகள்மூலம் கிடைக்கும் வருமானம் முதலியவை பட்டியலின் மற்ற இனங்களாக இருக்கின்றன. பொருள்களையும் பணிகளையும் (services) வாங்குவதற்காக மக்கள் செய்த செலவு, மாற்றுக் கட்டணங்கள், அரசாங்கம் சேமித்த தொகை முதலிய இனங்கள் மற்றப் பட்டியல்களிலும் இருக்கின்றன. இந்தப் பட்டியலின் ஒவ்வோர் இனத்தையும் மற்றப் பட்டியல்களில் நாம் காணலாம். பட்டியலின் இரு புறங்களின் கூட்டுத்தொகைகளும் சமமாகவே இருக்கின்றன.

**அயல் நாடுகளுடன் தொடர்பு**

19ஆம் பட்டியல் அயல்நாடுகளுடன் கொண்டுள்ள தொடர்பை எடுத்துக்காட்டுகின்றது. இடப்புறத்தில் நம் நாடு அயல்நாடுகளுக்குச் செலுத்தும் தொகையையும், வலப்புறத்தில் அயல் நாடுகள் நம் நாட்டுக்குச் செலுத்தும் தொகையையும் காணலாம். ஒரு நாடு மற்றொன்றுக்கு ஏற்றுமதிக்காகவும் இறக்குமதிக்காகவும்மட்டுமே பணம் செலுத்துகின்றது என்று நாம் கருதக்கூடாது. ஒரு நாட்டின் கப்பற்படை செய்யும் தொண்டு, அயல் நாட்டின் சுற்றுலா (tourist traffic) முதலிய புலனாகாத இனங்களுக்காகவும் (invisible items) ஒரு நாடு மற்றொரு நாட்டுக்குப் பணம் செலுத்தலாம். புலனாகாத இனங்களைப்பற்றிய விவரங்களை நாம் தெரிந்துகொள்ள முடியாது. ஏனெனில், இவைகள் சுங்கச் சாவடியின் கட்டுப்பாடுகளுக்குட்படா. அயல்நாடுகளில் ஒரு நாட்டினர் கொண்டுள்ள சொத்துகள்மூலம், வட்டி இலாபம் போன்ற வருமானங்களைப் பெறலாம். ஒரு நாடு பெறும் இத்தகைய (எச்ச)

வருமானம் 13ஆம் பட்டியலில் குறிக்கப்பட்டிருக்கின்றது. மொத்த வருமானத்தில் அடங்கியுள்ள மொத்த வரவு, செலவு முதலியவைகளை 19ஆம் பட்டியலில் காணலாம். வேற்று நாடுகளின் நன்கொடைபோன்ற சில சிறிய இனங்கள் நீங்கலாக, மற்றவை அயல் நாடுகளில் நமது எச்ச முதலீட்டையே காட்டுகின்றன. அயல் நாடுகளில் நமது எச்ச முதலீட்டைக் காட்டும் இனம் மிகவும் முக்கியமானதாகும். இது அயல்நாட்டினர் இங்கிலாந்தில் செய்த உபரி முதலீட்டுக்கும், இங்கிலாந்து அயல்நாடுகளில் செய்த உபரி முதலீட்டுக்கும் உள்ள வேற்றுமையைக் காட்டுகின்றது.

பட்டியலின் எண்களைப்பற்றி நாம் இங்குச் சில வார்த்தைகள் கூறவேண்டும். இவ் எண்களை நன்கு ஆராய்ச்சி செய்யவேண்டுமென்றால் அதற்காக நாம் ஒரு பெரிய நூலையே எழுதவேண்டும். இவ் எண்கள் 1938-லிருந்து இங்கிலாந்தின் பொருளாதார வரலாற்றையே எடுத்துக்காட்டுகின்றன. ஆனால், இந்த வரலாற்றை இங்கு ஆராய்ச்சி செய்வது பொருத்தமாக இருக்காது. நாட்டின் பொருளாதார வளர்ச்சியை நாம் சிந்தித்துப் பரிசீலனை செய்ய இவ்வெண்கள் உதவுகின்றன என்பதை இங்குக் குறிப்பிடலாம். இவைகளைக்கொண்டு நாட்டில் நடந்த சில நிகழ்ச்சிகளையும், எதிர்காலத்தில் பொருளாதாரத்தில் உருவாகக்கூடிய சில நிகழ்ச்சிகளையும் நாம் அறியலாம். 26ஆம் அதிகாரத்தில் நாம் ஏன் நமது பொருளாதாரம் சமநிலையற்ற தன்மையைக் கொண்டிருக்கின்றது என்பதை ஆராய்ச்சி செய்வோம். அப்பொழுது நாம் இங்குக் கூறிய கருத்தைத் தெளிவாகப் புரிந்துகொள்ளலாம்.

தேசீய வருமானம் போருக்குமுன் இருந்ததைப்போல் நான்கு மடங்கு 20 ஆண்டுகளில் பெருகிவிட்டதை 13ஆம் பட்டியல் காட்டுகின்றது. எனவே, நாடு மிகவும் முன்னேற்றம் அடைந்துவிட்டது என்று நாம் கருதலாம். ஆனால், உண்மையாகவே நாடு செழிப்பாகிவிட்டதா என்பதைப்பற்றி நமது மனத்தில் ஐயப்பாடு எழலாம். பணவீக்கத்தின் காரணமாகச் செலாவணி மதிப்பிழந்துவிட்டது. ஆகையால், நாடு செழிப்பாகிவிட்டதைப்போல் தோற்றமளிக்கின்றது. நாம் சற்றுச் சிந்தித்துப் பார்த்தால், இவ்வுண்மையை அறியலாம். 1938-லிருந்து 1948-க்குள் விலைவாசி இரட்டித்துவிட்டது. 1948-லிருந்து 1958-க்குள் விலைகள் 50 சதவீதம் உயர்ந்துவிட்டன. 1958-ல், பவுன் நாணயம், 1938-ல் கொண்டிருந்த (பொருள்களை) வாங்கும் சக்தியில் மூன்றில் ஒரு பங்கையே கொண்டிருந்தது. ஆகையால், தேசீய வருமானம் 30 சதவீதமே உயர்ந்தது. மக்கள்தொகை 8 சதவீதம் பெருகிவிட்டதால், முன்பைவிட அதிக மக்கள் தேசீய வருமானத்தைப் பகிர்ந்து

கொள்ளவேண்டியதாயிற்று. 1948-ல் மக்களுடைய நிலை 1938-ல் இருந்ததைவிட மோசமாயிற்று என்பதை 13ஆம் பட்டியலின் வலதுபுறம் காட்டுகின்றது. ஆனால், 1958-க்குள் அவர்கள் நிலையில் கணிசமான முன்னேற்றம் ஏற்பட்டுவிட்டது.

தேசீய வருமானம் மாறுவதால் பல வகுப்பைச்சேர்ந்த மக்கள் எவ்வாறு பாதிக்கப்படுகின்றனர் என்பதை நாம் சிந்திக்கவேண்டும். தேசீய வருமானத்தைப்போல் மக்கள் பொருள்களைப் பயன்படுத்துவதும் மிகுதியடையாததற்கு ஒரு காரணம் உண்டு. அரசாங்கம் வருமானத்தில் ஒரு பெரும்பகுதியை எடுத்துக்கொண்டு விட்டது. பொருள்களை வாங்குவதற்காக அரசாங்கம் முன்பைவிட மிகுதியான தொகையைச் செலவுசெய்தது. இதை 13ஆம் பட்டியலில் நாம் காணலாம். இதன் முழு விவரங்களை நாம் 18ஆம் பட்டியலில் காணலாம். அரசாங்கத்தின் வருவாய் (தேசீய இன்சூரன்சு நிதி உட்பட) 1938-லிருந்து விரைவில் பெருகியது. 1958-ல் அரசினர் வருமானம், தேசீய வருமானத்தில் 40 சதவீதமாக இருந்தது. 1938-ல் அது 25 சதவீதமாக இருந்தது. அரசாங்கம் வருமானத்தில் ஒரு பகுதியை 'மாற்றுக் கட்டணமாக'ச் செலவு செய்கின்றது. இப் பகுதி தனிப்பட்டவர்களுடைய செலவாக மாறிவிடுகின்றது. கல்வி, சுகாதாரம் முதலியவைகளுக்காக அரசாங்கம் செலவு செய்யும் தொகையைப் பட்டியலில் 'அரசினர் பொருள்களையும் பணிகளையும் (services) வாங்குவதற்காகச் செய்யும் செலவு' என்ற இனம் காட்டுகின்றது. அரசினரும் மக்களும் இத்தகைய செலவுகளைச் செய்து பொருள்களை வாங்கும்பொழுது அவர்களிடம் செலவு செய்வதில் போட்டி ஏற்படுகின்றது. ஆனால், அரசாங்கம் சில சமூகப் பணிகளுக்கு உதவிப்பணம் கொடுக்கின்றது என்பதையும் நாம் மறக்கக்கூடாது. அரசாங்கம் தன் வருவாயில் ஒரு பகுதியைச் சேமித்து முதலீடு செய்கின்றது.

மொத்த முதலீடு (gross investment) தேசீய வருமானத்தைவிட விரைவில் பெருகிவிட்டது என்பதை நாம் கவனிக்கவேண்டும். தேசீய வருமானத்தின் எப் பகுதியும் மொத்த முதலீட்டைப் போல் பெருகவில்லை. 1930-க்குப்பின் 1940-க்குள், மூலதனம் மிகுதியாகப் பெருகவில்லை. அயல் நாடுகளிலும் நமது முதலீடு பெருகவில்லை. ஆனால், 1938-க்குப்பின் மூலதனமும், அயல் நாட்டு முதலீடும் கணிசமாகப் பெருகிவிட்டன. பல்வேறு முதலீடுகளைக் கூட்டி, தேய்மானத்திற்காக ஒரு தொகையை அதிலிருந்து கழித்தால், 1938-லிருந்து 1948-க்குள் நமது எச்ச (net) முதலீடு மிகவும் பெருகிவிட்டது என்பதையும், சேமிப்பு நமது மொத்த வரு

மானத்தில் 12 சதவீதமாக இருந்தது என்பதையும் நாம் காண லாம். தனியாட்களும், சிறிய தொழிலதிபர்களும், கூட்டுப் பங்கு நிறுவனங்களும் கணிசமான தொகைகளைச் சேமித்தனர். அர சாங்கமும் ஒரு சிறிய பகுதியைச் சேமித்தது.[1]

1948-லிருந்து துய்ப்போர் செலவும் (consumers' expenditure) தனியாட்களுடைய சேமிப்பும் எவ்வாறு பெருகின என்பதை 15ஆம் பட்டியலில் காணலாம். விலைகள் 50 சதவீதம் உயர்ந்தன. இதைச் சரிப்படுத்தியபின் துய்ப்போர் செலவு $\frac{1}{6}$ பாகம் உயர்ந்தது என்பது குறிப்பிடத்தக்கதாகும். அவர்கள் தம் வருமானத்தில் ஒரு பெரும்பகுதியைச் சேமித்தனர். 1948-ல் நிலையான சொத்துகளின் தேய்மானத்தை நாம் கணக்கில் சேர்க் கும்பொழுது, தனியாட்கள் சேமிக்கவே இல்லை என்று கூறவேண் டும். 1958-க்குள் 900 மிலியன் பவுன்களை மக்கள் சேமித்து விட்டனர். இது எச்சத்தொகை (net amount) ஆகும்.

15ஆம் பட்டியலில் நாம் தேசீய வருமானத்தின் பங்கீட் டைப்பற்றிய விவரங்களைக் காணலாம். கூலிகள், சம்பளங்கள், ஓய்வூதியத் திட்டம் (pension scheme), தேசீய இன்சூரன்சு திட்டம் முதலியவைகளுக்கு முதலாளிகள் செலுத்தும் கட்டணங் கள் முதலியவை 1938-ல் தேசீய வருமானத்தில் 60 சதவீதமாக இருந்தன. அவை 1958-ல் 70 சதவீதமாக உயர்ந்தன. எஞ்சிய 30 சதவீதத்தில் நாலில் ஒரு பங்கு, தேசீய இன்சூரன்சு திட்டத் தின்கீழ்ப் பலர் பெறும் உதவிப்பணமாகவும், அரசினர் கொடுக்கும் மானியமாகவும் இருந்தன. வாரம், இலாப ஈவு, வட்டி முதலிய தொகைகளுடன் மக்கள் செலுத்தும் வரி சேரவில்லை. அவை வரி கள் செலுத்தியதுபோக எஞ்சிய எச்சத்தொகைகளாகவே இருக் கின்றன. காப்பு நிதியில் சேர்க்கப்பட்ட இலாபத்தையும் நீக்கி விட்டதால், இலாப ஈவு குறைந்துவிட்டதாகத் தோற்றமளிக் கின்றது. இக் காப்பு நிதியில் சேர்க்கப்பட்ட தொகைக்காக மக்கள் பிற்காலத்தில் ஒரு வருமானத்தைப் பெறுவார்கள். ஆனால் வட்டி, இலாப ஈவு, வாரம் முதலியவைகளைத் தேசீய வருமானத்துடன் ஒப்பிட்டுப்பார்க்கும்பொழுது, அவை எவ்வளவு குறைந்த தொகை களாக இருக்கின்றன என்பது புலப்படுகின்றது. இத் தொகைகள் குறைவாகத் தோற்றமளிப்பதற்கு இலாபத்தில் ஏற்பட்ட குறைவே காரணம் என்று நாம் கருதக்கூடாது. உண்மையில் தேசீய வரு மானத்தைவிட இலாபம் மிகுதியான விகிதத்தில் பெருகியது.

[1] பங்குகளின் விலைகள் மாறுவதால் ஏற்படும் விளைவைச் சரிப்படுத்தாமல், 14ஆம் பட்டியலில் புள்ளிவிவரங்கள் சேர்க்கப்பெற்றிருக்கின்றன. ஆனால், இங்கு மேற்கூறிய விளைவுகளைச் சரிப்படுத்திய பிறகு ஏற்படுவதையே குறிப்பிட்டிருக் கின்றோம்.

ஆனால், இலாபத்தில் ஒரு பெரும்பகுதியை மக்கள் அரசினருக்கு வரியாகச் செலுத்திவிட்டனர். மற்றொரு பெரும்பகுதியை நிறுவனங்கள் காப்பு நிதியில் சேர்த்து முதலீட்டுக்குப் பயன்படுத்திவிட்டன. ஆகையால், நிறுவனங்கள் 1938ஆம் ஆண்டில் கொடுத்ததை விடக் குறைந்த தொகையை 1958-ல் இலாப ஈவாகவும், வட்டியாகவும் கொடுத்தன.

அரசாங்கத்தின் வேலைகளும் செலவும் பெருகிவருவதை 18ஆம் பட்டியல் தெளிவாக எடுத்துக்காட்டும். 1938-லிருந்து 1958-க்குள் அரசாங்கத்தின் வருவாய் இரட்டித்தது. செலவும் இரண்டு மடங்குக்குமேல் மிகுதியடைந்துவிட்டது. அரசாங்கத்தின் வரவு-செலவுத் திட்டத்தில் (budget) உபரிப் பணம் (surplus) அதிகமாக இல்லை. 1948-ல் அரசாங்கம் மிகுதியான உபரிப் பணத்தைக் கொண்டிருந்தது. ஆனால், இத் தொகை பத்தாண்டுகளில் படிப்படியாகக் குறைந்துவிட்டது.

இறக்குமதியைவிட ஏற்றுமதி மிகுதியடைந்ததை 19ஆம் பட்டியல் காட்டும். இதுவே இப் பட்டியலில் குறிப்பிடத்தக்க கூறுகும். போருக்குமுன் நமது ஏற்றுமதி-இறக்குமதிக் கணக்கில் இருந்த துண்டு (deficit) மறைந்து, ஓர் உபரி ஏற்பட்டது. நமது அயல் நாட்டு முதலீட்டிலும் 1930-க்குப்பின் ஓர் உபரி ஏற்பட்டது. இந்த உபரித் தொகை (200 மிலியன் பவுன்கள்) 1930-க்குப்பின் ஏற்பட்டது. இந்த ஈருபரித் தொகைகளும் நமது அயல் நாட்டுச் சொத்துகளைப் பெருக்கின.

# 26. தேசிய வருமானத்தில் ஏற்படும் மாறுதல்கள்

தேசீய வருமானத்தில் அடிக்கடி மாறுதல்கள் ஏற்படலாம். இந்த மாறுதல்கள் பல வகுப்பினரைப் பாதிக்கும். 1929-லிருந்து 1932-க்குள் அமெரிக்காவின் தேசீய வருமானம் 50 சதவீதம் குறைந்தது. கூலிகளும் சம்பளங்களும் 40 சதவீதம் குறைந்தன. 1938-லிருந்து 1942-க்குள் தேசீய வருமானமும், கூலிகளும், சம்பளங்களும் இரட்டித்தன. நாட்டின் பண வருமானம் (money income) மட்டுமே உயர்ந்தது. அதன் உண்மை வருமானத்தில் அதிக மாறுதல்கள் ஏற்படவில்லை. ஏனெனில், நாம் மேலே குறிப்பிட்ட காலத்தின் முற்பகுதியில், விலைகள் தாழ்வடைந்தன; பிற்பகுதியில், அவைகள் உயர்ந்தன. ஆனால், உண்மையில் நாட்டின் பொருளாதாரத்தில் கணிசமான மாறுதல்கள் ஏற்பட்டன.

## வேலையின்மை (Unemployment)

அறுவடை குறைவதாலோ அல்லது வேறு காரணங்களாலோ மேலே குறிப்பிட்ட மாறுதல்கள் ஏற்படுகின்றன என்று நாம் கருதக் கூடாது. நாட்டின் உற்பத்திச் சாதனங்களை (productive resources) முற்றிலும் நாம் பயன்படுத்தாமையே மாறுதல்களுக்கு முக்கியக் காரணமாகும். குறிப்பாக மனித சக்தியை நாம் முற்றிலும் பயன்படுத்துவதில்லை. அதாவது, வேலையின்மையினால் பலர் இன்னல்களுக்குட்பட்டனர். போர்க்காலத்தில் பலர் இராணுவத்தில் பணியாற்றுவதாலும், போர்த்தளவாடங்களைச் செய்வதாலும் எவ்வாறு மக்கள் பல முக்கியமான பொருள்களை இழக்கின்றனரோ, அதேபோல் அவர்கள் வேலையின்மையாலும் பல தொல்லைகளுக்கு இலக்காவது இயற்கை. இங்கிலாந்தில் போருக்குமுன் வேலையின்மையினால் மக்களுக்கு ஏற்பட்ட இழப்பு (loss) 10 சதவீதத்திற்குக் குறையாமல் இருந்தது.

போரும், வேலையின்மையும் ஒரு நாட்டின் பொருளாதாரத்தை மட்டும் பாதிக்கும் என்று நாம் கருதமுடியாது. 1933-ல் ஜெர்மனி நாட்டில் ஒரு தொழிலாளி வேலையில்லாமல் இருந்ததால், ஹிட்லருக்கு அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கு ஒரு வாய்ப்புக் கிடைத்தது. வேலையின்மை சமுதாயத்திற்கு விளைவிக்கும் தீமை,நாட்டின் பொருளாதாரத்தைச் சின்னபின்னப்படுத்துவதாகும். நீண்ட நாட்கள் ஒருவன் வேலையில்லாமல் திண்டாடினுல்,அவன் தன் மதிப்பை இழப்பான். வேலையின்மை அவனுடைய நம்பிக்கையையும், திறமையையும், நல்ல குணங்களையும் சீர்குலைத்துவிடும். மேலும், அது மனிதனுடைய குடும்ப வாழ்க்கையைப் பாதிக்கும். வேலையில்லாமல் திண்டாடும் ஒரு மனிதன், சமுதாயத்திற்குச் செய்ய வேண்டிய பணிகளையும், தன் பொறுப்புகளையும் மறந்துவிடுவான். அவன் தீய வழிகளைப் பின்பற்றத் தயங்கமாட்டான்.

இந்த நிலையில் வேலை கிடைத்தால் அதை மீண்டும் இழந்துவிடுவோமோ என்ற அச்சத்தால், அவன் வேலையில் ஊக்கங்காட்டமாட்டான். அவன் திறமையுடன் வேலை செய்யவும் முடியாது; திறமையற்ற முறையிலும் அதைச் செய்யமுடியாது. 'பலர் வேலையின்மையினுல் திண்டாடும்பொழுது, ஒருவன் நன்கு தொண்டாற்றுவதற்குப் பல தடைகளும் கட்டுப்பாடுகளும் ஏற்படுவது இயற்கை. தொழிலாளிகள் வேண்டுமென்றே உற்பத்தியைக் குறைப்பார்கள். உற்பத்திமுறையில் ஏற்படும் முன்னேற்றத்தை அவர்கள் எதிர்ப்பார்கள். உற்பத்தி செய்யும் சக்தியை நாடு நன்கு பயன்படுத்தாததால், பல தீமைகள் ஏற்படும்.[1]

### விருப்பத்துடன் வேலையில்லாமல் இருத்தல் (Voluntary unemployment)

ஒரு தொழிலாளி எப்பொழுதுமே தன் விருப்பத்திற்கு எதிராக வேலையில்லாமல் இருப்பதில்லை. சிலர் விருப்பத்துடன் வேலை செய்யாமல் இருக்கின்றனர். வேலை செய்தால்கூடச் சிலர் பெரிய குடும்பங்களைக் காப்பாற்றமுடியாத நிலையில் இருக்கின்றனர். ஆனுல், ஒருசிலர் விருப்பத்துடன் வேலை செய்யாமல் இருக்கின்றனர். இவர்கள் இங்கிலாந்தில் மிகக் குறைவாகவே இருக்கின்றனர். கட்டாய வேலையின்மையே (involuntary unemployment) சமுதாயத்தின் மிக முக்கியமான பிரச்சினையாகும். அதாவது,வேலை செய்யத் தயாராக இருப்பவர்களுக்கு வேலை கிடைக்காமல் இருக்கலாம். இதையே கட்டாய வேலையின்மை என்று நாம் குறிப்பிடுகிறோம்.

[1] பெவரிட்ஜ் பிரபு (Lord Beveridge) '*Full Employment in a Free Society*', p. 248.

**பிறழ்ச்சிக் காரண வேலையின்மை (Frictional unemployment)**

போர்க்காலத்தில் மிகுதியான தொழிலாளிகள் தேவைப்படுவது இயற்கை. அப்பொழுதுகூட நாட்டில் வேலையின்மை பூரணமாக நீங்குவதில்லை. போர்க்காலத்தில் சிலர் வேலையில்லாமல் இருக்கலாம். சாதாரணக் காலத்தில் வேலையில்லாதவர்களின் எண்ணிக்கை பெருகும். ஒருசில தொழில்களிலேயே வேலையிலிருப்பவர்களுடைய எண்ணிக்கை மாறுமல் ஒரே நிலையில் இருக்கின்றது. மோட்டார் கார்கள், விளையாட்டுப் பொம்மைகள், குடைகள் முதலிய பண்டங்களின் உற்பத்தி சில பருவங்களிலேயே பெருகுகின்றது. அவைகளுடைய தேவைகளும் அப் பருவங்களிலேயே மிகுதியடைகின்றன. விவசாயம், கட்டட வேலை முதலிய தொழில்கள் தட்பவெப்ப நிலையை ஒட்டி மாறுபாடடையும். தேவை மிகுதியாக இருக்கும் காலங்களில், திருமணமாகாத பெண்களை வேலையில் அமர்த்திப் பொருளுற்பத்தியைப் பெருக்குவார்கள். மக்களுடைய தேவை (demand) மாறுவதால் வேலையின்மை ஏற்படும் என்று நாம் கருதக்கூடாது. தேவை குறைந்தபின்பும், சில வேலைகளில் அமர்ந்திருப்பவர்களுக்குத் தொழிலதிபர்கள் வேறு வேலை கொடுக்கலாம். உதாரணமாக, வைக்கோல் ஹாட் (straw hat) என்னும் தலைப்பாகை செய்யும் தொழிற்சாலை பௌலர் ஹாட் (bowler hat) என்னும் தலைப்பாகையையும் செய்யலாம். சம்பளம் வாங்கும் அதிகாரிகள், தொழில் விறுவிறுப்பாக நடக்கும் காலத்தில், சற்றுக் கடுமையாக உழைக்கலாம். மந்தகாலத்தில் அவ்வளவு கடுமையாக வேலை செய்யாமல் இருக்கலாம். விவசாயத் துறையில் தொழிலாளிகளுக்குச் சில காலங்களில் போதிய அளவு வேலை இருக்காது.

சில பண்டங்களின் தேவை ஒரே மாதிரி ஆண்டு முழுவதும் இருப்பதில்லை. அவ்வப்போது தேவை மாறுவதால், தொழிலாளிகளுக்குக் கிடைக்கும் வேலைவாய்ப்பும் அடிக்கடி மாறும். துறைமுகத்தில் பல கப்பல்கள் வந்துவிட்டால், துறைமுகத் தொழிலாளர்கள் கடுமையாக உழைக்கவேண்டும். கப்பல் துறைமுகத்தில் வராத காலத்தில், அவர்களுக்கு அதிக வேலை இருக்காது. செப்பனிடும் வேலையில் அமர்ந்திருப்பவர்களும், நாகரிகம் மாறுவதால் புதிய பண்டங்களை மக்கள் தேவைக்கேற்றபடி உற்பத்தி செய்வோரும் இதே நிலையில் இருப்பார்கள். தொழிற்சாலைகள் செம்மையாக நிருவகிக்கப்படாமலிருந்தாலும், கச்சாப் பொருள் கிடைக்காவிடினும், வேலையின்மை ஏற்படலாம்.

சில தொழிற்சாலைகளில் சில வேலைகள் முடிந்து மற்றவை தொடங்குவதற்குமுன், தாற்காலிக வேலையின்மை ஏற்படலாம். இது சில நாட்களோ அல்லது சில வாரங்களோ நீடிக்கலாம். பல

வேலைகள் காலியாக இருக்கலாம். ஆனால், தொழிலாளர்கள் சில வேலைகளையோ அல்லது இடங்களையோ விட்டு வேறு இடங்களுக்கும் வேலைகளுக்கும் செல்ல மறுக்கலாம். தொழிலாளர்கள் மார்க்கட்டு (labour market) எவ்வளவு நன்கு அமைந்திருந்தபோதிலும், தொழிற்சாலைகள் எவ்வளவு அதிகமாகத் தொழிலாளர்களை வேலையில் அமர்த்த முன்வந்தாலும், நாட்டில் வேலையின்மை முற்றிலும் மறையாது.

**தொழில் நிலைமாற்ற வேலையின்மை (Structural unemployment)**

பிறழ்ச்சிக் காரண வேலையின்மையைப்போலவே, தொழில் நிலைமாற்ற வேலையின்மையும் முக்கியமானதாகும். இவ் வேலையின்மைக்குத் தொழில் அமைப்பில் ஏற்படும் மாறுதல் காரணமாகும். மேற்கூறிய இருவகைகளையும் சிலர் ஒரேவகையில் சேர்ப்பார்கள். சில தொழில்களின் அமைப்பும், உற்பத்தி முறைகளும் மாறலாம். சில தொழில்கள் ஓரிடத்திலிருந்து மற்ற இடங்களுக்குச் செல்லலாம். இக் காரணங்களால் இங்கிலாந்தில் 1920-லிருந்து 1940 வரை வேலையின்மை ஏற்பட்டது. உற்பத்திமுறையில் ஏற்பட்ட முன்னேற்றமும் இதற்குக் காரணமாகும். வேலையை இழந்த தொழிலாளர்களை வேறு வேலையில் அமர்த்த முடியவில்லை. தொழிலதிபர்கள் தொழிற்சாலைகளை மாற்றியமைத்ததாலும், பழைய பல தரப்பட்ட இயந்திரங்களைப் புறக்கணித்து ஒருசில பெரிய இயந்திரங்களைப் பயன்படுத்தியதாலும், பலர் வேலையை இழந்தனர். இரும்பையும் எஃகையும் உற்பத்தி செய்யும் தொழில், இயந்திர உற்புத்தித் தொழில், கப்பல் கட்டும் தொழில் முதலியவை போர்க்காலத்திய அமைப்பைக் கைவிட்டு, அயல் நாட்டுத் தொழில்களுடன் போட்டியிட வேண்டியதாயிற்று. ஏற்றுமதிப் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்கள் போருக்குப்பின் மீண்டும் வளர்ச்சியடையவில்லை. இப் பண்டங்களை இறக்குமதி செய்த நாடுகள், போர்க்காலத்தில் அவைகளை உற்பத்தி செய்தன. அவை, போருக்குப்பின் காப்பு வரிகளைக் (protective tariff) கொண்டு உள்நாட்டுத் தொழில்களைப் பாதுகாத்தன. மேலும், மோட்டார் உற்பத்தித் தொழில்போன்ற சில புதிய தொழில்கள், மக்கள் வேலை கிடைக்காமல் திண்டாடும் இடங்களில் வளர்ச்சியடையாமல், வேலை வாய்ப்புகள் மிகுதியாக உள்ள இடங்களில் வளர்ச்சியடைந்தன. இந்த மாறுதல்கள் நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்களைப் பாதித்தன. 1923ஆம் ஆண்டு, ஜூன் மாதம், 1,212,000 பேர்கள் வேலையில் இருந்தனர். 1933ஆம் ஆண்டு, ஜூன் மாதம், 638,000 பேர்களே வேலையில் இருந்தனர். தொழிலாளர்கள் ஓரிடத்திலிருந்து மற்ற இடங்களுக்குச் செல்ல மறுத்ததாலும், அவர்களுக்கு வேறு வேலை கிடைக்காததாலும்,

சுரங்கப் பகுதிகளில் வேலையின்மை பெருகியது. 1936ஆம் ஆண்டு, ஜூன் மாதம், 3,25,000 பேர்கள் வேலையில் இருந்தனர். இவர்களுள் 81,000 பேர்களே சுரங்கத் தொழிலாளர்கள். மற்றவர்கள் அவ்வப்போது கிடைத்த வேலைகளிலேயே ஈடுபட்டிருந்தனர்.

இத்தகைய தொழில் நிலைமாற்ற வேலையின்மை, வேலையில்லாத் திண்டாட்டத்தின் ஒரு மிக முக்கியமான பகுதியாகும். இது தாற்காலிகமான ஒரு பிரச்சினையல்ல; தொழிலமைப்பின் மாற்றத்தினால் ஏற்படும் ஒரு நிரந்தரப் பிரச்சினையாகும். ஒரே ஊரில் பல ஆண்டுகள் இருந்தவர்களும், ஒரே தொழிலைப் பல ஆண்டுகள் செய்தவர்களும் தம் தொழில்களையும் ஊர்களையும் புறக்கணிக்க மறுப்பதால், வேலையின்மைப் பிரச்சினை ஏற்படுகின்றது. எவ்வளவு தூரம் தொழிலாளர்கள் தம் இடங்களையும் வேலைகளையும் கைவிட மறுக்கின்றனரோ, அதற்குத் தகுந்தாற்போல் வேலையின்மையும் பெருகும். போருக்குமுன் இங்கிலாந்தில் ஏற்றுமதி இறக்குமதியில் இருந்த சமநிலையும், மூலதனப் பொருள் - துய்ப்போர் பொருள், வட பகுதி - தென்பகுதி முதலியவைகளில் இருந்தசமநிலையும் பாதிக்கப்பட்டதால், தொழில்களின் அமைப்பு மாறியது. இதன் விளைவாக நாட்டில் வேலையின்மை பெருகியது.

**வேலை நிறைவு** (Full Employment)

வேலை நிறைவு என்று பொருளியலார் குறிப்பிடும்பொழுது, வேலையின்மை முற்றிலும் நீங்கிவிட்டது என்று கூறவில்லை. எந்தச் சூழ்நிலையிலும் ஓரளவு வேலையின்மை இருக்கும். அதை நாம் தடை செய்யமுடியாது. வேலையின்மை எவ்வளவு தூரம் தவிர்க்க முடியாத நிலையில் இருக்கும் என்பதை மேற்கூறியவை நிர்ணயிக்கும். தொழில் அமைப்பில் ஏற்படும் மாறுதல்கள், ஏற்றுமதி மார்க்கட்டு வளர்ச்சியடைதல் அல்லது நலிவுறல், தொழிலாளர்கள் தம் ஊர்களையும் தொழில்களையும் விட்டுச்செல்லத் தயாராக இருத்தல் முதலியவை தொழில் நிலைமாற்ற வேலையின்மையின் அளவை (volume of structural unemployment) நிர்ணயிக்கும்.

போருக்குப்பின் பெவரிட்ஜ் பிரபு (Lord Beveridge) வேலையின்மையின் அளவை 3 சதவீதத்தில் நிலைநாட்ட முடியும் என்று கூறினார். இதில் ஒரு சதவீதத்திற்குப் பருவகாலத்திற்கேற்றவாறு தேவை மாறுவதும், ஒரு சதவீதத்திற்குத் தொழில் முன்னேற்றமும், ஒரு சதவீதத்திற்கு அயல் நாட்டுத் தேவை குறைவதும் காரணங்களாக இருக்கலாம் என்று அவர் கருதினார். இப் புள்ளிவிவரங்களை நாம் முன்பு இருந்த நிலையுடன் ஒப்பிட்டுப்பார்க்க வேண்டும். 1946 முதல் 1960 வரை இங்கிலாந்தில்

வேலையின்மையின் அளவு ஒன்றிலிருந்து மூன்று சதவீதத்திற்குள் இருந்தது. போருக்குமுன் (1921—1939) வேலையின்மை சராசரி 14 சதவீதம் இருந்தது. போருக்கு 50 அல்லது 60 ஆண்டுகளுக்கு முன் வேலையின்மை சுமார் 5 சதவீதத்தில் இருந்தது; சில பருவங்களில் அதிகமாகவும் இருந்தது;[1] இரு போர்களுக்குமிடையே உள்ள காலத்தில் வேலையின்மை மிகவும் பெருகிற்று என்பதை எவரும் மறுக்கமுடியாது. விக்டோரியா இராணி காலத்திலும் நாட்டில் வேலை நிறைவு (full employment) இல்லை. போருக்குப்பின் வேலையின்மை மிகவும் குறைந்துவிட்டது.

வேலையின்மை நீடிக்கும்பொழுது யார் யார் வேலையில்லாமல் இருக்கின்றனர் என்ற விவரம் நமக்குக் கிடைக்காததால், 'வேலையில்லாத பட்டாளம்' ('standing army' of the unemployed) ஒன்று நாட்டில் இருக்கின்றதா என்பதை நாம் அறிய முடியவில்லை. வேலையில்லாதவர்களில் பலர் ஓராண்டுக்குமுன் ஏதாவது வேலை செய்திருக்கலாம். சிறிது காலத்திற்குப் பின்பும் அவர்களுக்கு வேலை கிடைக்கலாம். ஆனால், போருக்குமுன் இருந்த அளவு வேலையின்மை பெருகினால், ஒரு வேலையை இழந்த ஒருவன் மற்றொன்றை அடைவதற்குப் பல நாட்கள் காத்திருக்க வேண்டும். 1936-ல் பதிவு செய்துகொண்ட (வேலையில்லாதவர்களில்) நான்கில் ஒரு பகுதியினர் புதிய வேலையை அடைவதற்கு ஓராண்டுக் காலம் காத்திருக்கவேண்டி இருந்தது.

**வேலையின்மையில் மாறுதல்கள்**

கடந்த 40 ஆண்டுகளில் ஏற்பட்ட மாறுதல்களை நாம் 11 ஆம் படத்தில் காணலாம். 1920-லிருந்து ஒரு மில்லியன் பேர்களுக்குமேல் வேலையில்லாமல் இருந்தனர். 1930 முதல் 1940 வரை $1\frac{1}{2}$ மில்லியன் பேர்கள் வேலையில்லாமல் இருந்தனர். போர் தொடங்கியதிலிருந்து இரண்டு ஆண்டுகளுக்குள் வேலையின்மை மறைந்தது. பிறகு ஓர் இலட்சம் பேர்களுக்கும் குறைவானவர்களே வேலையில்லாமல் இருந்தனர். போர் முடிந்ததும், கட்டாயமாக வேலையில் அமர்த்தப்பட்டவர்கள் வேலையிலிருந்து விலகினர். ஆகையால், வேலையின்மை ஓரளவு பெருகியது. 250,000-லிருந்து 500,000 பேர்கள் வரை வேலையில்லாமல் இருந்தனர்.

[1] இந்த எண்களைச் செம்மையான முறையில் ஒப்பிடமுடியாது. போருக்குமுன் தேசீய இன்சூரன்சு திட்டத்தின்மூலம் பயனடைந்தவர்களைவிட இப்பொழுது மிகுதியானவர்கள் பயனடைகின்றனர். 19ஆம் நூற்றாண்டின் புள்ளிவிவரங்களில் தொழிலாளர்கள் இயக்கத்தில் சேர்ந்திருந்த சிலரே சேர்க்கப்பட்டிருந்தனர்.

**வேலை நிறைவு இருப்பதால் ஏற்படும் விளைவுகள்**

வேலை நிறைவு என்பதை நாம் எவ்வாறு விளக்கியபோதிலும், அது தொழிலாளியின் நிலைமையைச் சீர்படுத்தும். வேலையின்மையின் கொடுமையைத் தொழிலாளர்களில் அரைப்பகுதியினர் போருக்குமுன் நேரடி அனுபவ வாயிலாகக் கண்டறிந்தனர். வேலை செய்யத் தயாராக இருந்தவர்களுக்கு வேலை கிடைக்கவில்லை. வேலை கிடைப்பது ஓரளவு ஒருவனுடைய விருப்பத்தையும், நற்பேற்றையும் பொறுத்திருந்தது. அப்பொழுது இருந்த நிலைமை தொழிலாளர்களுக்குச் சாதகமாக இல்லை. முதலாளிகள் தம் விருப்பம்போல் எந்தத் தொழிலாளியையும் வேலையில் அமர்த்த முடியும். ஆனால், தொழிலாளர்கள் தம் விருப்பம்போல் எங்கு வேண்டுமானாலும் வேலை செய்ய முடியாத நிலையில் இருந்தனர். வேலையை இழந்து விடுவோம் என்ற அச்சத்தினால் தொழிலாளர்கள் எங்கு வேண்டுமானாலும் வேலையை நாடிச் செல்லத் தயாராக இருந்தனர். வேலை நிறைவு ஏற்பட்டபொழுது, இந்தநிலைமை மாறியது. முன்பு முதலாளி ஒரு தொழிலாளியைப் பார்த்து, 'நீ இங்கு வேலை செய்ய விரும்பாவிடில், எத்தனையோ பேர்கள் வேலை செய்யத் தயாராக இருக்கின்றனர்' என்று சொல்லும் நிலையில் இருந்தனர். வேலை நிறைவு ஏற்

வரைபடம்—11

இங்கிலாந்தில் வேலையின்மை, 1922—1959




('Annual Abstract of Statistics' என்ற நூலிலிருந்து எடுக்கப்பெற்ற படம்)

பட்டபிறகு தொழிலாளி முதலாளியிடம், 'நீங்கள் என்னை வேலையில் அமர்த்த விரும்பாவிடில், வேறு பல முதலாளிகள் காத்துக் கொண்டிருக்கின்றனர்' என்று சொல்லும் நிலைமை உருவாயிற்று. எனவே, தொழிலகங்களில் அமைதியையும், தொழிலாளர்களிடையே ஒழுங்கையும் நிலைநாட்டுவதற்குப் புதிய முறைகளைப் பின்பற்ற வேண்டியதாயிற்று. தொழிலாளர்கள் மிகுதியாக இல்லாததால், தொழிலதிபர்கள் புதிய உற்பத்திமுறைகளைப் பின்பற்ற வேண்டியிருந்தது. இயந்திரங்களை முன்பைவிட அதிகமாகப் பயன்படுத்தினர். இந்த நிலையில் தொழிலாளர்களுடைய பேரம் செய்யும் சக்தி (bargaining power) மிகுதியடைந்தது. தொழிலாளர்களுடைய இயக்கம் கூலியை உயர்த்த வெற்றிகரமாகப் பாடுபட்டது. வேலை நிறைவு நீடித்தால் இவ் வியக்கம் மேலும் கூலியை உயர்த்த முயற்சி செய்யும். கூலிகள் உயர்ந்தால் பணவீக்கம் ஏற்படும். எனவே, வேலை நிறைவு ஏற்பட்டால், கூலிகள் உயர்ந்து, அதனுல் பணவீக்கம் (inflation) உருவாகலாம். பணவீக்கத்தைத் தடை செய்ய ஒரு குழுவை நிறுவி, கூலியை நிர்ணயிக்கும் அதிகாரத்தை அதற்குக் கொடுக்கவேண்டும்.

**வேலையின்மையின் காரணங்கள்**

நாட்டில் வேலை நிறைவை நிலைநாட்டவேண்டுமென்ருல், நாம் முன்பு நிலவிய வேலையின்மையின் காரணங்கள் யாவை என்று ஆராய்ச்சி செய்யவேண்டும். முன்பு நாட்டில் இருந்த சக்திகள் இப்பொழுதும் இருக்கின்றன. ஆனுல், இந்தச்சக்திகள் முன்பு ஏன் கட்டுப்பாட்டை மீறிவிட்டன என்பதை நாம் அறிந்தால்தான், பிற்காலத்தில் இவைகளுடைய விளைவுகளை நன்கு புரிந்துகொள்ள முடியும். வேலைநிறைவு எப்பொழுதுமே நாட்டில் இருக்கும் என்றும், வேலையின்மை இருந்தால் அதை நீக்கி வேலைநிறைவை எளிதில் நிலைநாட்டலாம் என்றும் நாம் கருதக்கூடாது.

## வர்த்தகச் சகடம் (Trade Cycle)

நாட்டின் பொருளாதாரத்திலும் தொழிலிலும் ஏற்படும் மாறுதல்களைப் பொருளியலார் இக்காலத்தில் வேலை வாய்ப்புகளைக் கொண்டே மதிப்பிடுகின்றனர். பொருளியலார் முதன்முதலில் இந்த மாறுதல்களைப் பரிசீலனை செய்தபொழுது அவர்களுக்கு வேலையைப்பற்றிய புள்ளிவிவரங்கள் கிடைக்காததால், விலைவாசியைக் (price level) கொண்டே தம் ஆராய்ச்சிகளை நடத்தினர். விலைவாசியில் ஏற்படும் மாறுதல்களை எளிதில் மதிப்பிடலாம். விலைவாசியை ஆராய்ச்சி செய்த பொருளியலார் அதில் ஏற்படும் ஏற்றத்

தாழ்வுகளையும், வீக்கத்தையும் (boom), மந்தத்தையும் (slump) கண்டு இந்த மாறுதல்களுக்கு 'வர்த்தகச் சகடம்' (trade cycle) என்ற பெயரைக் கொடுத்தனர். இவ் ஏற்றத்தாழ்வுகளால் சில குறிப்பிட்ட விலைகளும் தொழில்களும்மட்டுமே பாதிக்கப்படுகின்றன என்று நாம் கருதக்கூடாது. இந்த மாறுதல்கள் சில தொழில்களை மற்றத் தொழில்களைவிட அதிகமாகப் பாதிக்கலாம். ஆனால், வர்த்தகச் சகடம் எல்லாத் தொழில்களையும் விலைகளையும் பொதுவாக பாதிக்கின்றது. ஆறு ஆண்டுகளிலிருந்து பத்தாண்டுகளுக்குள் விலைகள் உயரலாம் அல்லது தாழ்வடையலாம்; தொழிலும் பெருகலாம் அல்லது குன்றலாம். நாட்டின் தொழில்கள் அனைத்தும் வளர்ச்சியடையும் அல்லது நலிவுறும். நீண்ட காலத்தில் விலைவாசி தாழ்வடைந்தபொழுது, வர்த்தகச் சகடம் மிகவும் நீண்டதாகவும் கடுமையாகவும் இருந்தது. 1874 முதல் 1896 வரை இந்த நிலை இருந்தது. *1873, 1882-83, 1890* ஆம் ஆண்டுகளில் இங்கிலாந்தில் பொருளாதார வீக்கம் (boom) ஏற்பட்டது. *1900*-க்குப் பின் பொருளாதார வீக்கம் அடிக்கடி ஏற்பட்டது. *1900, 1907, 1913* ஆம் ஆண்டுகளில் வீக்கம் ஏற்பட்டது. தொழில் செறிந்த எல்லா நாடுகளிலும் வர்த்தகச் சகடம் ஏற்படுவது இயற்கை. ஆனால், மற்ற நாடுகளில் பொருளாதார வீக்கம் இங்கிலாந்தில் உருவாகிய அதே ஆண்டுகளில் ஏற்படவில்லை. ஆனால், இங்கிலாந்துக்கும் மற்ற நாடுகளுக்கும் இடையே இருந்த வேறுபாடுகள் நாளடைவில் மறைந்தன. எல்லா நாடுகளிலும் ஒரேவிதமான வர்த்தகச் சகடங்கள் தோன்றின.

வர்த்தகச் சகடத்தின் மாறுதல்களை ஒட்டி விலைவாசியிலும் மாறுதல்கள் ஏற்பட்டன. ஆனால், உற்பத்தியிலும் தொழிலிலும் ஏற்பட்ட மாறுதல்களே மிகவும் முக்கியமானவை. வர்த்தகச் சகடத்தை ஒட்டி ஏற்படும் மாறுதல்கள் மற்றப் பொருளாதார, சமுதாய விளைவுகளையும் ஏற்படுத்துகின்றன. குறிப்பாகத் தொழிலதிபர்கள் பெறும் இலாபம், தொழிலாளர்கள் பெறும் கூலி, ஏற்றுமதி இறக்குமதி, பிறப்புவீதம் (birth rate), மக்களுடைய குடிப்பழக்கம், அவர்கள் செய்யும் குற்றங்கள் முதலியவைகளும் வர்த்தகச் சகடத்தை ஒட்டி மாறும். வர்த்தகச் சகடம் மக்கள் பீர்பானம் குடிக்கும் பழக்கத்தையும், அவர்கள் திருமணம் செய்துகொள்வதையும் பாதித்தது என்ற செய்தி நமக்கு வியப்பைக் கொடுக்கலாம். ஏனெனில், இவை வர்த்தகச் சகடத்துடன் கொண்டிருக்கும் தொடர்பை நாம் எளிதில் காண்பதில்லை.

### வர்த்தகச் சகடமும் பொருளாதார வளர்ச்சியும்

18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஏற்பட்ட தொழிற்புரட்சியை (industrial revolution) ஒட்டியே வர்த்தகச் சகடம் தொடங்கியதாகத்

தோற்றம் அளிக்கின்றது. அதற்குமுன்பு வர்த்தகச் சகடம் ஏற்பட்டதா என்பதை நாம் திட்டவட்டமாகச் சொல்லமுடியாது. ஏனெனில், அக் காலத்தில் இருந்த தொழிலைப்பற்றிய புள்ளிவிவரங்கள் நமக்குக் கிடைக்கவில்லை. ஆனால், பொருளாதார முன்னேற்றமும் வர்த்தகச் சகடமும் தற்செயலாக ஒன்றுசேர்ந்து நிகழவில்லை என்று பல பொருளியலார் கருதுகின்றனர். ஒரேவகைக் காரணங்கள் பொருளாதார வளர்ச்சியையும், வர்த்தகச் சகடத்தின் வீக்கப் பகுதியையும் (upward trend of the trade cycle) ஏற்படுத்துகின்றன என்று நாம் நம்புவதற்கு ஆதாரங்கள் இருக்கின்றன. தொழிற்புரட்சி உருவாக்கிய பொருளாதார அமைப்புடன் இக்காரணங்கள் தொடர்பு கொண்டிருக்கின்றன.

வர்த்தகச் சகடம் எதிர்காலத்தில் ஏற்படுமா, ஏற்படாதா என்பதைப்பற்றிக் கருத்து வேற்றுமைகள் இருக்கின்றன. அமெரிக்காவில் போருக்குப்பின் நான்காண்டுகளுக்கு ஒரு முறை தொழிலுற்பத்திக்கும், பொருளாதார நடவடிக்கைகளுக்கும் ஒருதடை ஏற்படுகின்றது. 1949, 1953-54, 1957-58 ஆம் ஆண்டுகளில் ஏற்பட்ட தடைகள் மற்ற நாடுகளையும் தாக்கின. இத்தகைய மாறுதல்கள் அமெரிக்காவில் நான்காண்டுகளுக்கொரு முறை ஏற்படுகின்றன. சென்றநூற்றாண்டுக் காலத்தில்நான்காண்டுகளுக்கொரு முறை அமெரிக்காவில் இந்த மாறுதல்கள் ஏற்பட்டன. ஆனால், (இங்கிலாந்து உட்பட) ஐரோப்பிய நாடுகளின் அனுபவம் வேறுபட்டிருந்தது. 1920, 1929, 1937 ஆம் ஆண்டுகளில் இங்கிலாந்தின் பொருளாதார அமைப்பில் மாறுதல் ஏற்பட்டது. 1929, 1937 ஆம் ஆண்டுகளில் மாறுதல்களைப் பொருளாதார வீக்கத்துடன் தொடர்புபடுத்த முடியாது. இவ்விரண்டு ஆண்டுகளுக்கிடையில் ஏற்பட்ட மந்தம், அதுவரை உலகம் காணாத அளவு கடுமையாக இருந்தது. போருக்கு முந்திய காலத்தின் நிலையற்ற தன்மைக்குச் சில சிறப்பான காரணங்கள் இருந்தன. விக்டோரியா இராணி காலத்திய வர்த்தகச் சகடத்தைத் தோற்றுவித்த காரணங்களைக்கொண்டு நாம் உலகப் போர்களுக்கிடையே ஏற்பட்ட பொருளாதார மந்தத்தைப் புரிந்துகொள்ளமுடியாது. போருக்குப்பின் பொருளாதாரம் நிலையான தன்மையைக் கொண்டிருக்கின்றது. இதன் காரணத்தையும் நாம் அறியவேண்டும்.

**திரள் முறை (Cumulative Process)**

வர்த்தகச் சகடத்தின் வீக்கப் பகுதியில் (upward trend) பொருளாதாரம் திரள்முறையில் விரிவடைவதையும், மந்தப் பகுதியில் (downward trend) அதே முறையில் குறுகுவதையும் நாம் காணலாம். பொருளாதாரம் வளர்ச்சியடையும்பொழுது, நாட்டில்

நடக்கும் ஒவ்வொரு நிகழ்ச்சியும் இவ் வளர்ச்சியைத் தூண்டுகின்றது. இவ் வளர்ச்சிக்கோர் எல்லையே கிடையாது என்று தோன்றுகிறது. மந்தப் பகுதியும் இதே தோற்றமளிக்கின்றது. பொருளாதார வீக்கம் வளர்ச்சியடையும்பொழுதே மந்தத்தைத் தூண்டும் சக்திகளுடன் வளர்ச்சியடைகின்றது. மந்தமும் பொருளாதார மீட்சியைத் தோற்றுவிக்கும் சக்திகளுடன் வளர்ச்சியடைகின்றது. ஓரளவு வளர்ச்சி ஏற்பட்டபிறகு, பொருளாதார வீக்கம் முடிவடைகின்றது. வளர்ச்சி உச்சநிலையை அடைந்தபின், நாட்டின் பொருளாதாரம் ஊசலியைப் (pendulum) போல் மீண்டும் கீழ்நோக்கிச் செல்கின்றது; அதாவது, மந்தம் தொடங்குகின்றது. வளர்ச்சி தொடர்ந்து நீடிக்காததற்குக் காரணம் என்ன? மந்தமும் வீக்கமும் முடிவடைவதை நாம் தடைசெய்ய முடியாதா? பொருளாதாரம் நிலையற்றதா? உச்ச நிலையில் உற்பத்தியை நிலைநாட்ட முடியாதா?

திரள்முறைப் பெருக்கத்தையும் சுருக்கத்தையும் (cumulative expansion and contraction) சற்றுக் கவனித்தபின் நாம் மேற்கூறிய வினாக்களுக்கு விளக்கம் கொடுக்கலாம்.

ஒரு மனிதனுடைய வருமானம் மற்றொருவனுடைய செலவாகும். மந்தம் முற்றியபின் செயற்படுத்தும் தேவை (effective demand) ஏதாவது ஒரு காரணத்தால் மிகுதியடைகின்றது என்றும் நாம் கற்பனை செய்துகொள்வோம். மக்கள் முன்பைவிட அதிகமாகப் பொருள்களை வாங்கலாம் அல்லது வியாபாரிகள் சரக்குகளின் இருப்பைப் பெருக்குவதற்காக அதிகமான அளவில் பண்டங்களை வாங்கலாம் அல்லது நாட்டில் மூலதனப் பெருக்கம் ஏற்படலாம். தேவை (demand) மிகுதியடைவதால், உற்பத்தியாளர்கள் முன்பைவிட அதிகமான தொழிலாளர்களை வேலையில் அமர்த்தி உற்பத்தியைப் பெருக்கவேண்டும். புதிதாக வேலையில் அமர்ந்த தொழிலாளர்கள் தம் வருமானத்தைச் செலவு செய்து பண்டங்களை வாங்குவார்கள். அவர்களுடைய செலவு செயற்படுத்தும் தேவையை மேலும் தூண்ட, அதன் விளைவாக உற்பத்தியும் பெருகும். புதிய பொருளுற்பத்தியும், வர்த்தகமும் பெருகுவதால், மக்களுடைய வருமானம் மேலும் பெருகும். இப் பெருக்கம் செயற்படுத்தும் தேவைக்கும் உற்பத்திக்கும் மீண்டும் ஒரு தூண்டுதலைக் கொடுக்கும். மந்த காலத்தில் இதே முறையில் திரள்முறைச் சுருக்கம் ஏற்படுவதை நாம் காணலாம். உற்பத்தியும் வேலையும் சுருங்குவதால் வருமானம் குறையும். இதை ஒட்டி உற்பத்தி மேலும் குறையும்.

## பெருக்கியும் (Multiplier) வேகவிசையும் (Accelerator)

பெருக்கி என்ற கருத்து பொருளாதாரத்தின் நிலையற்ற தன்மையின் அடிப்படையில் அமைந்திருக்கின்றது. இதை நாம் பிறகு நன்கு விளக்கலாம். மக்களுடைய செலவு மிகுதியடைந்தால், அதை ஒட்டி அவர்களுடைய வருமானமும் மிகுதியடையும் என்பதையே பெருக்கி என்ற சொல் குறிக்கின்றது. பொருளாதாரத்தின் நிலையற்ற தன்மையின் காரணத்தைக்கொண்டு வேக விசை என்ற சொல்லின் பொருளை விளக்கலாம். மக்களுடைய தேவையும் விற்பனையும் மீண்டும் பெருக ஆரம்பித்தால், வியாபாரிகள் தம் விற்பனையைவிட மிகுதியான அளவில் பொருள்களை வாங்குவார்கள். அவர்கள் மேலும் வாங்கும் சரக்குகளின் அளவை நாம் முன்பு செய்த விற்பனையுடன் தொடர்பு படுத்தக்கூடாது. விற்பனை வீதத்தில் ஏற்படும் உயர்வே அதை நிர்ணயம் செய்யும். விற்பனை மிகுதியடையும் என்று எதிர் பார்த்து, அதிகமான பொருள்களை விற்பனை செய்யத் தயாராக இருக்கவேண்டும் என்ற எண்ணத்துடன் வியாபாரிகள் தம் இருப்பைப் பெருக்கிக்கொள்வார்கள். ஆனால், வர்த்தகம் குறையும் பொழுது, வியாபாரிகள் தம் இருப்பைக் குறைத்துக்கொள்ள முயற்சி செய்வார்கள். ஆகையால், மேலும் அதிகமான அளவில் அவர்கள் சரக்கை வாங்கமாட்டார்கள். எதிர்காலத்தில் தேவை பெருகும் என்ற நம்பிக்கை இல்லாததால், அவர்கள் தொழிலைச் சுருக்கிக் கொள்வார்கள். இந்த நிலையில் தொழிலதிபர்களுடைய முதலீடு பற்றிய எண்ணம் (investment intentions) மாறும். அதாவது, அவர்கள் முதலீட்டைப் பெருக்கினால், உற்பத்தியும் வேலையும் நாட்டில் அதிகரிக்கும்.

## வர்த்தகச் சகடமும் விலைவாசியும்

விலைவாசி மாறுவதால் பொருளாதாரம் நிலையற்ற தன்மையில் இருக்கின்றது. உற்பத்தியாளர்கள் மந்த காலத்தில் உற்பத்திச் சாதனங்களை முழுமையாகப் பயன்படுத்துவதில்லை. நிலைமை முன்னேறும்பொழுது, அவர்கள் உற்பத்திச் சாதனங்களை நன்கு பயன்படுத்துவார்கள். ஆனால், அடக்கச் செலவு (cost of production) அதிகரிக்காது. உற்பத்திச் சாதனங்களைத் தொழிலதிபர்கள் முழுமையாகப் பயன்படுத்தினால், விலைவாசி உயர ஆரம்பிக்கும். கச்சாப்பொருள்களின் விலைகள் மற்ற விலைகளைவிட விரைவில் உயரும், ஏனெனில், தேவைக்கேற்றபடி அவைகளை உடனடியாக அதிக அளவில் உற்பத்தி செய்யமுடியாது. அவைகளுடைய அளிப்பு (supply) நெகிழ்ச்சியற்றதாக இருக்கின்றது. கச்சாப் பொருள்களை வாங்குவதற்கு உற்பத்தியாளர்கள் போட்டியிடு

கின்றனர். கச்சாப் பொருள்கள்மட்டுமல்லாமல், தேவைக்கேற்ற படி உற்பத்தி பெருகாத எல்லாப் பண்டங்களையும் மக்கள் போட்டிபோட்டுக்கொண்டு வாங்குவார்கள். உற்பத்திப் பெருக்கத்திற்கு ஏற்படும் இடையூறுகளும், வேண்டிய அளவில் கச்சாப் பொருள்களும் தொழிலாளர்களும் கிடைக்காததும் விலைகளை உயர்த்தும். வாழ்க்கைச் செலவு (cost of living) அதிகரிப்பதாலும், வேலையின்மை குறைவதாலும், வர்த்தகம் பெருகுவதாலும், தொழிலாளர்கள் அதிகக் கூலியைக் கோருகின்றனர். விலையுயர்வு பொருள்களின் அடக்கச் செலவைவிட அதிகமானால், தொழில் அதிபர்களுடைய இலாபம் பெருகும். ஆனால், விலைக் கட்டுப்பாடு (price control) இந்த நிலைமையை மாற்றிவிடும். விற்பனை பெருகுவதோடல்லாமல், உற்பத்தியாளர்கள் பொருள்களை முன்பைவிட உயர்ந்த விலையில் விற்பனை செய்யலாம். எதிர்காலத்தில் விலைகள் மேலும் உயரும் என்ற நம்பிக்கை பொருளுற்பத்திக்கு ஒரு தூண்டுதலைக் கொடுக்கும். விலையுயர்வைவிட அடக்கச் செலவுகள் குறைவாக இருப்பதால், அவர்களுடைய இலாபம் மிகுதியடையும். விலைகள் தாழ்வடையும்பொழுது, அடக்கச் செலவு கணிசமான அளவு குறையாது. ஆகையால், இலாபம் குறையும்; தொழிலதிபர்களுடைய நம்பிக்கை பாதிக்கப்படும். எனவே, அவர்கள் உற்பத்தியைக் குறைப்பார்கள்.

**பாங்குகளுடைய (Banks) பணிகள்**

வர்த்தகச் சகடத்தின் பல்வேறு கூறுகளைப் பொருளியலார் விளக்கியிருக்கின்றனர். பொருளாதார வீக்கத்திற்கும் மந்தத்திற்கும் ஓரளவு பாங்குகளின் செயல்களும் காரணங்களாக இருக்கின்றன. பாங்குகள் வீக்க காலத்தில் பாங்குச் செலாவணியைப் பெருக்குவதாலும் (expansion of bank credit), மந்த காலத்தில் அதைச் சுருக்குவதாலும் ஏற்றத்தாழ்வுகள் மிகுதியடைகின்றன. புழக்கத்திலிருக்கும் பணத்தின் அளவு பொருளாதாரத்தில் ஏற்படும் மாறுதல்களுக்கு எவ்வளவு தூரம் காரணமாக இருக்கின்றது என்பது தெளிவாகப் புலப்படவில்லை. சிலர் மந்தத்தின் கொடுமையை நீக்கப் பாங்குச் செலாவணிப் பெருக்கம் வேண்டுமென்று கருதுகின்றனர். ஆனால், வேறு சிலர், பாங்குகள் நிலைமையை மேலும் மோசமாக்க முடியுமே தவிர வேறு எதையும் செய்யமுடியாது என்று கூறுகின்றனர். வர்த்தகச் சகடத்தின் வீக்கப் பகுதியோ அல்லது மந்தப் பகுதியோ முதிர்வு பெற்று மற்றொரு பகுதி தொடங்குவதற்குப் பாங்குகள் உதவி புரியலாம் என்று பலர் கருதுகின்றனர். வீக்க காலத்தின் பிற்பகுதியில் வட்டி வீதம் (interest rate) உயர்ந்தால், மக்கள் பணத்தின் ரொக்கத் தன்மையை (liquidity) மிகுதியாக நாடுவார்கள். முன்பு செய்து

கொண்ட ஒப்பந்தங்களுக்குப் போதிய அளவு ரொக்கம் (cash) கிடைக்காமற்போகலாம் என்ற பீதி தொழிலதிபர்களுக்கு ஏற்படலாம். பொருளாதார வீக்கத்தின் விளைவாக அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை (balance of payments) பாதகமாகலாம். இந்த நிலையில் ஒரு நாடு அயல் நாடுகளுக்குப் பொன்னை ஏற்றுமதி செய்யலாம். பொன் இழப்பைத் தடைசெய்வதற்காக அந்த நாடு வட்டி வீதத்தை உயர்த்தலாம்.

**போட்டியினால் முதலீடு மிகுதியடைதல்**

முதலாளித்துவத்தைப் (capitalism) பின்பற்றும் நாடுகளில் தொழிலதிபர்கள் போட்டிபோட்டுக்கொண்டு உற்பத்தியையும் முதலீட்டையும் பெருக்குகின்றார்கள். முதலாளிகள் மற்றவர்கள் தொடங்கும் உற்பத்தி நிறுவனங்களைப்பற்றி ஒன்றுமே அறிந்து கொள்ளாமல், தேவைக்கு மீறிய அளவு உற்பத்தி நிறுவனங்களை நிறுவுகின்றனர். ஒவ்வொரு நிறுவனமும் உற்பத்தியைப் பெருக்கி அதிக இலாபம் அடைய முயற்சி செய்கின்றது. கடுமையான போட்டியின் விளைவாக மொத்த உற்பத்தி தேவைக்கு மீறிய அளவு பெருகிவிடும். இப் போட்டி முதன்முதலில் பொருளாதார வீக்கத்தைத் தூண்டுகிறது. ஆனால், விரைவில் இந்த நிலை மாறி மந்தம் தொடங்கிவிடும். உற்பத்தியாளர்கள் மக்களுடைய தேவையை நன்கு புரிந்துகொள்ளாததே இதற்குக் காரணமாகும்.

**தொழிலில் நம்பிக்கை**

வர்த்தகச் சகடத்தின் வேறு கூறு ஒன்றை ஆதாரமாகக் கொண்டு முதலாளிகளுடைய நம்பிக்கையைப் பொருளாதார மந்தம், வீக்கம் முதலியவைகளுடன் சில பொருளியலார் தொடர்பு படுத்துகின்றனர். உற்பத்தியாளர்களுடைய நம்பிக்கை அவ்வப் போது தொழிற் பெருக்கத்திற்கேற்றவாறு மாறுவது இயற்கை. வீக்க காலத்தில் விற்பனையும், உற்பத்தியும், இலாபமும் மிகுதி யடைகின்றன. ஆகையால், எல்லாத்தொழிலதிபர்களும் நம்பிக்கை யுடன் உற்பத்தியைப் பெருக்குகின்றனர். எதிர்காலத்தில் நிலைமை எவ்வாறு மாறும் என்பதை அறிந்து, அதற்குத் தகுந்த நடவடிக்கைகளை எடுப்பதில் எவரும் முழு வெற்றியடைய முடியாது. எதிர்கால நிகழ்ச்சிகளை ஊகித்தே தொழிலதிபர்கள் அதற்கேற்ற நடவடிக் கைகளை எடுக்கவேண்டும். அவர்கள் துணிச்சலுடன் நடக்க வேண்டும். எதிர்காலப் போக்கு எவ்வாறு இருக்கும் என்பதை அவர்கள் அறியாதபோதிலும், சில நடவடிக்கைகளை எடுக்க வேண்டும். அவ்வப்போது இருக்கும் நிலைமைக்கேற்றவாறு தொழிலதிபர்களுடைய மனப்பான்மையும் மாறும். வர்த்தகம் விறு

விறுப்பாக நடைபெறும் காலத்தில் தொழிலதிபர்கள் நம்பிக்கை யுடன் இருப்பதும், மந்த காலத்தில் அவர்கள் நம்பிக்கையை இழப் பதும் இயற்கை.

அவர்களுடைய நம்பிக்கை வளர்ச்சியடைவதால், வேகவிசை (accelerator) உற்பத்தியைத் தூண்டுவதை நாம் காணலாம். அதன் விளைவாக மக்களுடைய தேவை மிகுதியடைவதையும் நாம் காண லாம். சில தொழில்துறையில் பல நிறுவனங்கள் போட்டிபோட்டுக் கொண்டு உற்பத்தி செய்யும். இத் துறைகளில் தேவை மிகுதியடை யும்பொழுது, உற்பத்தியும் விரைவில் மிகுதியடையும். ஒருசில நிறு வனங்களே உற்பத்திசெய்யும் தொழில்துறைகளில் எவ்வாறு வேக விசை வேலைசெய்யும் என்பதைப்பற்றி நாம் ஒன்றும் திட்டவட்ட மாகச் சொல்லமுடியாது. இத் துறைகளில் உள்ள நிறுவனம், மற்ற நிறுவனங்கள் எவ்வாறு தேவைக்கேற்றபடி உற்பத்தியைப் பெருக் குவதற்குத் திட்டங்கள் வகுத்துள்ளன என்பதை அறியும். ஓரிடத் தில் ஒரு கூட்டம் இருந்தால், மற்றவர்களும் அக் கூட்டத்தில் சேர்ந்துகொள்வார்கள். கூட்டத்தில் இருப்பவர்களை அங்கு ஈர்ப்ப தற்கு ஏதாவது காரணம் இருக்கும் என்ற நம்பிக்கையுடன் மற்ற வர்களும் அங்குச் செல்வார்கள். சில உற்பத்தியாளர்கள் நம்பிக்கை யுடன் உற்பத்தியைப் பெருக்கினால், அதற்கு ஏதாவது காரணம் இருக்கும் என்று கருதி மற்றவர்களும் உற்பத்தியைப் பெருக்கு வார்கள். ஆகையால், தொழில் உற்பத்தியை முதலாளிகளுடைய நம்பிக்கை பாதிக்கும். விறுவிறுப்பான காலத்தில் தொழில், உற் பத்தி, வேலை முதலியன பெருகும். மக்கள் நீண்ட நாட்களாக எதிர் பார்த்த செழிப்பும் வளர்ச்சியடையும். மந்த காலத்தில் முதலாளிகள் நம்பிக்கையை இழப்பார்கள்; முதலீடு பாதிக்கப்படும். வேலை யின்மை எங்கும் பெருகும்; மக்கள் எதிர்பார்த்தபடி நாடெங்கும் ஒரு மந்தம் ஏற்படும். எனவே, மக்களுடைய மனப்பான்மை வர்த் தகச் சகடத்துக்கு ஒரு காரணமாகும். ஆனால், இந்த மனப் பான்மை திடீரென்று தானாகவே மாறாது. அரசியலில் ஏதாவது மாறுதல் ஏற்படலாம்; அல்லது தொழிலதிபர்கள் பெறும் இலாபத் தில் மாறுதல் ஏற்படலாம். இதை ஒட்டி மந்த காலமோ அல்லது வீக்க காலமோ தொடங்கலாம்.

## வர்த்தகச் சகடத்தில் அளிப்பும் (Supply) தேவையும் (Demand)

### (1) அளிப்பு

தற்காலத்தில் பொருளியலார் செயற்படுத்தும் தேவையில் ஏற் படும் மாறுதல்களைக்கொண்டே வர்த்தகச் சகடத்திற்கு விளக்கம்

கொடுக்கின்றனர். பொருள்களின் அளிப்பும், அதில் ஏற்படும் மாறுதல்களும் முக்கியமானவை என்பதை நாம் மறுக்க முடியாது. ஆனால், அளிப்பைவிடத் தேவையே முக்கியமானது என்பதை வர்த்தகச் சகடம்பற்றிய கோட்பாடுகள் எடுத்துக்காட்டும். பண்டங்களின் அளிப்பே வர்த்தகச் சகடத்தின் காரணமாக இருக்கின்றது என்று பழைய கோட்பாடுகள் கூறுகின்றன. சில தற்காலத்துக் கோட்பாடுகளும் இக் கருத்தை ஆதாரமாகக் கொண்டிருக்கின்றன.

*மிகுதியான உற்பத்தி:* ஒரு காலத்தில், அவ்வப்போது தோன்றும் மந்தத்திற்கு மிகுதியான உற்பத்தியே காரணமாகும் என்று பலர் கருதினர். இக் கருத்து நமக்கு விநோதமாகத் தோன்றுகிறது. மக்களுடைய விருப்பங்களும் தேவைகளும் பூர்த்தியாகாத மந்த காலத்தில் நாட்டில் மிகுதியான உற்பத்தி இருக்கமுடியாது. விற்பனையாகாத அளவு பொருளுற்பத்தி பெருகிவிட்டால், தேவை குன்றுவதே அதற்குக் காரணமாகும்; மிகுதியான உற்பத்தி காரணமாகாது. உற்பத்தி மிகவும் குறைவாக இருப்பதால், தேவையும் குறைவாக இருக்கின்றது. தேவை பெருகவேண்டுமானால், உற்பத்தியும் பெருகவேண்டும். சில குறிப்பிட்ட பொருள்கள் அதிகமான அளவிலும், வேறு சில பொருள்கள் மிகக் குறைவான அளவிலும் உற்பத்தி செய்யப்படலாம். பொருளுற்பத்தியில் ஒரு சமநிலை இல்லாததால், சில தொழில்களுக்கு வேண்டிய தொழிலாளர்கள் கிடைக்காமலும், வேறு சில தொழில்களில் வேலையின்மையும் (unemployment) இருக்கலாம். இத்தகைய தொழில்நிலை மாற்ற வேலையின்மை (structural unemployment) மந்த காலத்தில் அதிகமாக இருப்பதாகத் தோற்றமளிக்கும். ஏனெனில், நாடெங்கும் வேலையில்லாத் திண்டாட்டம் இருக்கும்பொழுது, தொழிலாளர்கள் வேலையை நாடிப் பல இடங்களுக்குச் செல்லமாட்டார்கள். சாதாரண காலத்தில் தொழில் நிலைமாற்ற வேலையின்மை ஏற்பட்டால், தொழிலாளர்கள் வேலை கிடைக்கும் இடங்களுக்குச் செல்வார்கள். மந்தம் முடிவடைந்து வீக்க காலம் தொடங்கிய பின், தொழிலாளர்கள் வேலையை நாடிப் பல்வேறு இடங்களுக்குச் செல்வார்கள். மந்த காலத்தில் இருந்ததைப் போலல்லாமல் வீக்க காலத்தில் பொருளாதாரத்தில் ஒரு நெகிழ்ச்சி ஏற்படும். பல இடர்ப்பாடுகளைச் சமாளித்து நிலைமையில் முன்னேற்றத்தை ஏற்படுத்துவதற்காக நாம் முயற்சி செய்தால், மந்தத்தின் கொடுமைக்குட்பட்ட தொழில்கள் விரைவில் முன்னேறும்; மந்த காலத்தில் இருந்த நிலைமை மாறிப் பொருளுற்பத்தியில் ஒரு சமநிலை ஏற்படும்.

**சூரியனில் புள்ளி:** டபிள்யு. எஸ். ஜெவன்ஸ் (W. S. Jevons) என்பவர் நூறாண்டுகளுக்குமுன் சூரியப் புள்ளிக் கோட்பாட்டை

(sunspot theory) வெளியிட்டார். இக் கோட்பாடும் பொருள்களுடைய அளிப்பையே அடிப்படையாகக் கொண்டிருக்கின்றது. சூரியனில் சில புள்ளிகள் தோன்றும். சில ஆண்டுகள் சென்றபின் மீண்டும் இப் புள்ளிகள் தோன்றும். புள்ளிகள் தோன்றும் காலத்தில் விவசாயமும் அறுவடையும் பாதிக்கப்படும். இதைத் தொடர்ந்து மந்தம் ஏற்படும். இந்தக் கோட்பாடு தவருனதாகத் தோற்றமளிக்கலாம். ஆனல், சூரியனில் தோன்றும் புள்ளி சாதாரணமாக விவசாயத்தைப் பாதிக்கலாம். விவசாயம் பாதிக்கப்பட்டால் தொழிலும் தாக்கப்படலாம். பொருளியலார் இதை ஏற்றுக்கொள்வார்கள். ஆனல், இதுவே வர்த்தகச் சகடத்தின் காரணம் என்று அவர்கள் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கமாட்டார்கள். மந்தமும் மீட்சியும் (revival) தொடங்கும்பொழுது, விவசாயத்திலும் அறுவடையிலும் மாறுதல்கள் ஏற்படலாம். ஆனல், இந்த மாறுதல்கள் வர்த்தகச் சகடத்தின் காரணங்களாகா. அறுவடை செழிப்பாக இருக்கும் காலத்தில், விவசாயப் பொருள்களுடைய விலைகள் தாழ்வடையலாம். விலைகள் குறையும்பொழுது சாதாரணமாக உற்பத்தியும் குறையும். இதுவே வர்த்தகச் சகடத்தின் முக்கியமான கூறுகும். இந்த நிலைமையைச் சூரியப் புள்ளிக் கோட்பாடு விளக்கவில்லை. ஆகையால், அளிப்பை அடிப்படையாகக் கொண்டுள்ள கோட்பாடுகளைத் தற்காலத்துப் பொருளாதார வல்லுநர்கள் ஏற்றுக்கொள்ள மறுக்கின்றனர்.

**(2) தேவை**

தேவையை அடிப்படையாகக் கொண்டுள்ள கோட்பாடுகளும் பல குறைகளைக் கொண்டிருக்கின்றன. ஃபிரான்சு நாட்டைச் சேர்ந்த ஜே. பி. சே (J. B. Say) என்பவர் விளக்கிய 'சே விதி'யை (Say's Law) நீண்ட காலம் பொருளாதார வல்லுநர்கள் நம்பினர்கள். உற்பத்தியான பொருள்கள் விற்பனையாவதற்கு வேண்டிய தேவையை உற்பத்தியே ஏற்படுத்தும் என்பது சே அவர்களின் விதியாகும். சில குறிப்பிட்ட பண்டங்களுக்குப் போதிய தேவை இல்லாமல் இருக்கலாம். ஒரு குறிப்பிட்ட நிறுவனமோ அல்லது தொழிலோ அல்லது ஒரு பகுதியில் உள்ள தொழில்களோ தம் பொருள்களை விற்பனை செய்ய முடியாத நிலையில் இருக்கலாம். ஆனல், மற்ற நிறுவனங்களும், தொழில்களும், பகுதிகளும் மிகுதியான தேவையைப் பூர்த்தி செய்யவேண்டிய நிலையில் இருக்கலாம். உற்பத்தியாளர்கள் கூலிகள், விலைகள் போன்ற பல கட்டணங்களைச் செலுத்தவேண்டும். உற்பத்தியாளர்களுடைய அடக்கச் செலவு மற்றவர்களுடைய வருமானமாகும். ஆகையால், பொருளுற்பத்திமூலம் பலர் பெறும் வருமானமும், பண்டங்களின் மதிப்பும் ஒன்ருகவே இருக்கும்.

25 ஆம் அதிகாரத்தில் தேசீய உற்பத்தியின் மதிப்பும் வருமானமும் ஒன்றாகவே இருக்கும் என்று நாம் கூறியது மேலே குறிப்பிட்ட கருத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றது. இக் கருத்து மிகவும் தெளிவாக இருக்கின்றது. ஆனால், மக்களுடைய சேமிப்பு இதன் எளிமையையும் தெளிவையும் பாதிக்கின்றது. ஏனெனில், மக்கள் தம் வருமானம் முழுவதையும் பொருள்களை வாங்குவதற்காகச் செலவு செய்யாமல் ஒரு பகுதியைச் சேமித்து விடுகின்றனர். அரசாங்கத்தின் வருமானமும் செலவும் சமமாக இல்லாவிடினும், ஏற்றுமதியும் இறக்குமதியும் சமமாக இல்லாவிடினும், மேலே குறிப்பிட்ட கருத்தின் எளிமை பாதிக்கப்படுகின்றது. உற்பத்தியின் அளவு எப்பொழுதும் மாறாமல் இருப்பதில்லை. ஆகையால், பொருள் உற்பத்தியே விற்பனைக்கு வேண்டிய தேவையை ஏற்படுத்துகின்றது என்ற 'சே விதி'யைப் (Say's Law) பற்றிய ஐயப்பாடுகள் நமது மனத்தில் எழுகின்றன. மக்களுடைய வருமானம் அவர்களுடைய செலவுக்குக் காரணமாகவும், அவர்களுடைய செலவு வருமானத்திற்குக் காரணமாகவும் இருக்கின்றன என்பது'சே விதி'யின் தத்துவமாகும். வருமானத்திற்கும் செலவுக்கும் உள்ள தொடர்பை சேமிப்பு, ஏற்றுமதி - இறக்குமதியின் வேறுபாடு, அரசாங்கச் செலவு-வருமானத்தின் வேறுபாடு முதலியன பாதிக்கின்றன.

**முதலீட்டின் முக்கியத்துவம்:** துய்ப்போர் பொருள்களை (consumer goods) உற்பத்தி செய்யும் தொழில்களைவிட மூலதனப் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்கள் வர்த்தகச் சகடத்தினால் அதிகம் பாதிக்கப்படும். இதை நாம் சற்றுக் கவனித்தால், 'சே விதி' (Say's Law) சரியானதா என்ற ஐயப்பாடு மீண்டும் எழுகின்றது. கப்பல் கட்டும் தொழில், எஃகுத் தொழில் முதலிய தொழில்களை மந்தம் கடுமையாகத் தாக்குகின்றது. பொருள்களைப் பங்கீடு செய்யும் தொழில்கள் அவ்வளவு கடுமையாகத் தாக்கப்படவில்லை. நிலையான மூலதனப் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்கள் மந்தத்தின் கொடுமைக்கு இலக்காகின்றன. ஆகையால், சேமிப்பும் முதலீடும் வர்த்தகச் சகடத்துடன் தொடர்பு கொண்டிருக்கின்றன என்பது புலப்படுகின்றது. எனவே, சேமிப்பையும் முதலீட்டையும் கொண்டே நாம் வர்த்தகச் சகடத்துக்கு ஒரு விளக்கம் கொடுக்கவேண்டும். சேமிப்பு மிகுதியடைவதால் மூலதனம் எவ்வாறு பெருகுகின்றது என்பதை இங்குக் காண்போம்.

**சேமிப்பும் முதலீடும்:** மக்கள் தம் வருமானத்தில் ஒரு பகுதியை சேமிக்கலாம். அவர்களுடைய சேமிப்புப்பற்றிய முடிவுகள் இருவகைப்படும். அவர்கள் இவ் விருவகை முடிவுகளையும் ஒரே காலத்

தில் செய்யவேண்டும் என்ற கட்டாயம் இல்லை. வருமானத்தில் எவ்வளவு தொகையைச் செலவு செய்யவேண்டும், எவ்வளவு தொகையைச் சேமிக்கவேண்டும் என்று துய்ப்போர் (consumers) முடிவு செய்யவேண்டும். அரசினரும், பொது வசதித் துறையினரும் (public utilities), உற்பத்தியாளர்களும் எவ்வளவு தொகையை முதலீடு செய்யவேண்டும் என்று முடிவு செய்யவேண்டும்.[1] துய்ப்போர் சேமிப்பதால், உற்பத்திச் சாதனங்களை அவர்கள் உடனடியாகப் பயன்படக்கூடிய பொருள்களை உற்பத்தி செய்வதிலிருந்து விடுவிக்கின்றனர். முதலீடுபற்றிய தீர்மானம் இச் சாதனங்களை மூலதனப் பொருளுற்பத்தியில் திருப்பிவிடுகின்றது. இவ் விருவகை முடிவுகளையும் தொடர்புபடுத்துவதற்குப் பொருளாதார அமைப்பில் எந்தச் சக்தியும் இல்லை. மக்கள் செய்யும் சேமிப்பு அவர்களுடைய பழக்கத்தை ஒட்டி இருக்கின்றது. இப் பழக்கம் எக் காரணத்தினாலும் குறிப்பிடத்தக்க முறையில் மாறாது. மக்கள் வழக்கம்போல் எல்லாச் செலவுகளையும் செய்தபின் எஞ்சிய தொகையைச் சேமிப்பார்கள். அவரவர் தத்தம் வருமானத்திற்கேற்ற தொகையைச் சேமிப்பார்கள். மக்கள் திடீரென்று சிக்கனப் பழக்கத்தைப் பெறமுடியாது. இப் பழக்கம் நாளடைவில் வளரவேண்டும். வருமானம் மாறினால், அதைத் தொடர்ந்து செலவைவிடச் சேமிப்பே உடனடியாக மாறும். ஒருவனுடைய வருமானம் இரட்டித்தால், அவன் உபரி வருமானத்தின் பெரும் பகுதியைச் சேமிப்பது இயற்கை. அவன் நாளடைவில் தன் வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக்கொள்வான். சாதாரணமாக ஒருவன் வருமானம் பெருகும்பொழுது, சேமிப்பை உடனடியாகப் பெருக்குவான்.

தேசீய வருமானம் மாறாமல் ஒரே நிலையில் இருக்கும்பொழுது, தனியாட்களுடைய சேமிப்பும், செயற்படுத்தும் தேவையும் கணிசமான அளவு மாறாது. துய்ப்போர் பொருள்களை வாங்குவதற்கு மக்கள் ஒரே தொகையைச் செலவு செய்வார்கள். அவர்களுடைய வருமானம் பெருகினால், செலவும் பெருகும். ஆனால், வருமானம் பெருகும் அதே விகிதத்தில் செலவு அதிகரிக்காது. முதலீடு ஒரே நிலையில் இருக்கும். இதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன.

**முதலீட்டின் நிலையற்ற தன்மை:** (1) துய்ப்போர் பொருள்களை உடனடியாக வாங்கி நாம் பயன்படுத்த வேண்டும். ஆனால், முதலீட்டுச் செலவை உடனடியாகச் செய்யவேண்டும் என்ற கட்டாயம் இல்லை; பிற்காலத்தில் அச் செலவைச் செய்யலாம். ஒரு விவசாயி

[1] பத்திரங்கள், ஒற்றிப் பத்திரங்கள், பங்குகள் முதலியவைகளை வாங்குவதை நாம் இங்கு முதலீடு என்று குறிப்பிடவில்லை. இயந்திரங்களை உற்பத்தி செய்தல், பாலங்களையும் சாலைகளையும் அமைத்தல், புதிய காடுகளை அமைத்தல் முதலியவைகளையே நாம் இங்கு முதலீடு என்று குறிப்பிடுகின்றோம்.

குதிரைக்குப் பதிலாக டிராக்டர் (tractor) இயந்திரத்தைப் பயன் படுத்த வேண்டுமென்று கருதலாம். ஆனால், டிராக்டரை உடனடியாக வாங்க வேண்டுமென்ற கட்டாயம் இல்லை. ஆனால், குதிரைக்கு வேண்டிய தீனியை அவ்வப்போது வாங்கவேண்டும்.

(2) இரண்டாவதாக, தொழிலதிபர்கள் முதலீட்டுக்காக எவ்வளவு தொகையை ஒதுக்கவேண்டும் என்பதை நிர்ணயம் செய்வது கடினம். துய்ப்போர் பொருள்களை அவ்வப்போது வாங்கி நாம் பயன்படுத்துகின்றோம். ஆனால், முதலீட்டின் தேவை நீண்ட காலத்தில் ஏற்படுவதால், அதைச் சரிவரக் கணக்கிட முடியாது. முதலீடுபற்றிய முடிவுகளை முதலாளிகள் நீண்ட காலத்தில் செய்ய வேண்டி இருந்தால், அதற்குத் தகுந்தாற்போல் அவர்கள் பல இடையூறுகளைச் சமாளிக்க வேண்டும். புதிய இயந்திரங்களை ஓட்டுவதற்காகச் செய்யும் செலவையும், மக்களுடைய தேவையையும், வட்டி வீதத்தையும் தொழிலதிபர்கள் மதிப்பிட முடியாது. எவ்வளவு தூரம் நீண்ட காலத்தில் முதலீடு செய்யவேண்டுமோ, அதற்குத் தகுந்தபடி தொழிலதிபர்கள் எதிர்காலத்துப் போக்குகளை ஊகித்த பிறகே முதலீடு செய்யமுடியும். அவர்கள் தற்காப்புடன் இருக்க விரும்பினால், முதலீடு கணிசமான அளவு பெருகாது. எதிர்காலத்துப் போக்குகள் தெளிவாகத் தோன்றினால், முதலாளிகள் மிகுதியான அளவில் முதலீடு செய்வார்கள்.

சில மூலதனப் பொருள்களை உற்பத்தி செய்வதற்கு நீண்ட காலம் செல்லும். நீண்ட காலம் சென்றபிறகே சில துறைகளில் செய்த முதலீடு பலன் அளிக்கும். பல ஆண்டுகளுக்குப் பிறகே முதலாளிகள் முதலீடு செய்த பணத்தைப் பெறமுடியும். இத்தகைய துறைகளிலும் தொழிலதிபர்கள் எதிர்காலத்துப் போக்குகளைச் சரிவர அறிந்துகொண்டு முதலீடு செய்வது கடினம். 19ஆம் நூற்றாண்டில் முதலாளிகள் ரயில்வே துறையில் தொடர்ச்சியாக முதலீடு செய்யவில்லை. இத்தகைய தொழில்கள் 27 அல்லது 50 ஆண்டுகளுக்குப் பிறகு எவ்வளவு இலாபம் கொடுக்கும் என்பதை எவரும் திட்டவட்டமாகச் சொல்லமுடியாது. ஆகையால், முதலாளிகள் சில சமயங்களில் மிகுதியான தொகையையும், சில சமயங்களில் குறைந்த தொகையையும் முதலீடு செய்தனர். அவர்களுடைய விருப்பமும், அப்பொழுது ரயில்வே கம்பெனிகள் பெற்ற இலாபமும், அவ்வப்போது செய்த முதலீட்டுத் தொகையை நிர்ணயம் செய்தன. மேலும், நிறுவனங்கள் திட்டமிட்டு இருப்புப் பாதையை அமைப்பதற்கும் காலதாமதமாயிற்று. ஒரு கம்பெனியை ஆரம்பித்துப் பங்குமாற்று நிலையத்தில் (stock exchange) பங்குகளை விற்பனை செய்து, இருப்புப் பாதையை அமைப்பதற்குள்

பல ஆண்டுகள் சென்றுவிடலாம். திட்டத்தைப் பிரித்துப் பெரிய தொகையை முதலீடு செய்யாமல் குறைந்த தொகையுடன் இருப்புப்பாதையை அமைக்க முடியாது. சில சமயங்களில் சில திட்டங்களைக் கைவிடவேண்டிய நிலை ஏற்படலாம். கனடாவிலும் அமெரிக்காவிலும் கண்டத்தின் குறுக்கே செல்லும் இருப்புப் பாதைகள்போன்ற திட்டத்தையும், இத்தாலி,ஃபிரான்சு நாடுகளில் செல்லும் டிரான்ஸ் - ஆல்பைன் இருப்புப்பாதைத் திட்டத்தையும், இதுபோன்ற பல்வேறு பெரிய திட்டங்களையும் முதன்முதலில் செயற்படுத்தத் தொடங்கிவிட்டால், செலவையும், அவைகள் கொடுக்கும் வருமானத்தையும் பொருட்படுத்தாமல் அவைகளைச் செயற்படுத்தி முடிக்கவேண்டும். தொடங்கியபின் இத் திட்டங்களிலிருந்து இலாபம் பெறவேண்டும் என்ற விருப்பத்துடன் மேலும் மிகுதியான தொகையை முதலாளிகள் முதலீடுசெய்து இவைகளைப் பூர்த்தி செய்தனர். இத்தகைய மாபெருந் திட்டங்களைக் கண்டு முதலாளிகள் அஞ்சினர்.

மாபெரு முதலீட்டுத் திட்டங்களே முதலீட்டின் நிலையற்ற தன்மைக்கு மூன்ருவது காரணமாக இருக்கின்றன. ஒரு திட்டத்தைச் செயற்படுத்தத் தொடங்கிவிட்டால், அதைக் கைவிட முடியாது. மேலும், எவ்வளவு தொகையை முதலீடு செய்யவேண்டும் என்பதை அவர்கள் அறியாததாலும், பூர்த்தியாகாத திட்டம் பயனளிக்காது என்ற அச்சத்தாலும், அவர்கள் மேலும் முதலீடு செய்து திட்டத்தைப் பூர்த்தி செய்வதில் ஊக்கம் காட்டுவார்கள். வீக்க காலம் உச்சநிலையை அடையும்பொழுது, முதலாளிகள் திட்டத்தைச் செயற்படுத்த வேண்டிய நிதியை எளிதில் திரட்டலாம். மந்தம் அருகில் இருந்தபோதிலும், வீக்கத்தின் உச்ச நிலையே முதலாளிகளுக்கு நிதி திரட்டுவதற்குச் சிறந்த பருவமாகும். மாபெருந் திட்டங்கள் பொருளாதார வீக்கத்திற்கு ஒரு தூண்டுதலைக் கொடுக்கும். ஆனல், இத் திட்டங்கள் சிறந்த பலனை உடனடியாகக் கொடுக்காததால், முதலாளிகள் மேலும் முதலீடு செய்ய அஞ்சுவார்கள். ஆகையால், அடுத்து வரும் மந்தம் நாட்டைக் கடுமையாகத் தாக்கும். மந்தத்திலிருந்து மீட்சியடைவதும் (recovery) எளிதல்ல.

மீண்டும் வேகவிசை (accelerator): மூலதனப் பொருள்களின் தேவை துய்ப்போர் பொருள்களின் தேவையுடன் தொடர்பு கொண்டிருக்கின்றது. இது மூலதனத்தின் நிலையற்ற தன்மைக்கு நான்காவது காரணமாகும். ஓராண்டுக் காலத்தில் ஒரு மிலியன் மோட்டார் வண்டிகள் விற்பனையாகின்றன என்றும், இந்த வண்டிகளைச் செய்யும் தொழிலில் ஆண்டுதோறும் 10 சதவீதம் இயந்

திரங்களை முதலாளிகள் புதுப்பிக்கின்றனர் என்றும் கற்பனை செய்து கொள்வோம். 20 சதவீதம் மோட்டார் வண்டிகள் அதிகமாக விற்பனையானுல், அதாவது 1·2மிலியன் வண்டிகள் விற்பனையானுல், இந்த வண்டிகளை உற்பத்தி செய்யும் தொழிலில் முதலீடு மிகுதி யடைய வேண்டும். உற்பத்திக்கு வேண்டிய இயந்திரங்களை அதே ஆண்டில் நிறுவவேண்டும் என்று நாம் கற்பனை செய்து கொண்டால், ஆண்டுதோறும் நிறுவுவதைப்போல் மூன்று மடங்கு அளவு இயந்திரங்களை நிறுவவேண்டும். ஆண்டுதோறும் 10 சத வீதம் இயந்திரங்களைப் புதுப்பிக்கின்றனர். ஆனுல், இப்பொழுது புதிதாகத் தோன்றிய தேவையைப் பூர்த்திசெய்வதற்காக 20 சதவீதம் உபரி இயந்திரங்களை நிறுவவேண்டும். தொழிலாளர் களுக்குக் கிடைக்கும் வேலைவாய்ப்புகள், மோட்டார் வண்டிகளை உற்பத்தி செய்யும் தொழிலைவிட, இந்த உற்பத்திக்கு வேண்டிய கருவிகளைச் செய்யும் தொழிலில் அதிகம் மாறுபாடடையும். கருவி களை உற்பத்தி செய்யும் தொழிலில் வேலை 200 சதவீதமும், மோட்டார் வண்டித் தொழிலில் 20 சதவீதமும் பெருகும்.

மக்கள் துய்ப்போர் பொருள்களை அதிகமாக வாங்குவதால், வியாபாரிகளிடம் இருக்கும் சரக்கு அனைத்தும் விற்பனையாகி விடு கின்றது. ஆகையால், அவர்கள் மீண்டும் இருப்பைப் பெருக்கு வதற்காக மிகுதியான அளவில் பொருள்களை வாங்குவார்கள். மக்களுடைய தேவையைப் பூர்த்தி செய்வதற்கு மூலதனப் பொருள் உற்பத்தி உதவியாக இருக்கின்றது. இப் பொருள்களைக்கொண்டு பிற்காலத்தில் துய்ப்போர் பொருள்களை மிகுதியான அளவில் உற் பத்தி செய்யலாம். மக்களுடைய பழக்கவழக்கங்களே அவர்கள் வாங்கும் துய்ப்போர் பொருள்களின் அளவை நிர்ணயம் செய் கின்றன. அவர்களுடைய பழக்க வழக்கங்களும் தேவையும் அடிக்கடி மாருமல் இருக்கும். ஆனுல், உற்பத்தியாளர்கள் வாங்கும் மூலதனப் பொருள்களின் அளவு மாறலாம். எனவே, மொத்த முதலீடும் மாறலாம்.

வேகவிசையைப் பற்றி நாம் முன்பு என்ன குறிப்பிட்டோமோ அதையே இங்கு மீண்டும் விளக்கியிருக்கிருேம். மோட்டார் வண்டிகளின் விற்பனையையும், உற்பத்தியையும் உதாரணமாகக் கொண்டு இங்கு வேகவிசையை விளக்கியிருக்கின்ருேம். மூலதனப் பொருள்களின் உற்பத்தியில் வேகவிசைத் தத்துவம் இயங்குவதை உதாரணம் எடுத்துக்காட்டுகின்றது. தொழிற்சாலை களின் முழுச் சக்தியும் பயன்படுத்தப்பட வேண்டிய அளவு தேவை பெருகினுல், மூலதனத் தொழிலில் முதலீடு விரைவில் பெருகும்; வேகவிசையும் விரைவில் இயங்கும். துய்ப்போர் பொருள்களை

உற்பத்தி செய்யும் தொழிலில் வேகவிசை அவ்வளவு விரைவில் இயங்காது.

## வட்டிவீதங்கள்

**வட்டிவீதமும் சமநிலையும்:** நமது ஆராய்ச்சியில் இப்பொழுது ஒரு புதிய தொல்லை ஏற்பட்டிருக்கின்றது. முதலீடு நிலையற்றதாக இருக்கின்றதா? மூலதனப் பெருக்கம் வேண்டுமா? முதலீடும் மூலதனப் பெருக்கமும் தொடர்பு கொள்ளவில்லையா? நாம் முன்பு குறிப்பிட்டபடி சேமிப்பு ஒரே நிலையில் இருந்தால், நாட்டில் முதலீடு பெருகும்பொழுது மக்கள் அதற்கு வேண்டிய உபரிப் பணத்தை எங்கிருந்து பெறுகின்றனர்? முதலீடு குறைந்தால் மக்கள் சேமித்த பணத்தை எவ்வாறு பயன்படுத்துகின்றனர்? ஒரு தலைமுறைக்குமுன் பொருளியலார் இந்த வினுக்களுக்குச் சரியான விடைகள் கொடுத்திருக்க முடியாது. மொத்த முதலீட்டையும் சேமிப்பையும் வட்டிவீதம் நிர்ணயம் செய்து, அவைகளுக்கிடையே ஒரு சமநிலையை ஏற்படுத்துகின்றது என்று சிலர் கூறியிருப்பார்கள். விலை (price) எவ்வாறு மொத்த அளிப்பையும் (supply) தேவையையும் (demand) நிர்ணயம் செய்து, அவைகளிடையே ஒரு சமநிலையை ஏற்படுத்துகின்றதோ, அதேபோல் வட்டி வீதமும் ஒரு சமநிலையை ஏற்படுத்தும் என்று சிலர் கருதினுர்கள். வட்டிவீதம் முதலீட்டையும் சேமிப்பையும் பாதிக்கும் என்று நாம் அறிவோம். இவைகளை வட்டி வீதம் எந்த அளவு பாதிக்கும் என்பதுபற்றிக் கருத்து வேற்றுமை இருக்கலாம். வட்டி வீதம் முதலீட்டைப் பாதிக்கும் என்பதை எல்லோரும் ஏற்றுக்கொள்வார்கள். முதலீடு மிகவும் கவர்ச்சியாக இருந்தால், வட்டிவீதத்தை மாற்றி அதைக் கட்டுப்பாடு செய்யலாம். விலை எவ்வாறு மக்களுடைய எல்லையற்ற தேவையை அளிப்பு என்ற எல்லைக்குட்படுத்துகின்றதோ, அதே போல் வட்டிவீதமும் முதலாளிகளுடைய தேவையைச் சேமிப்புக் குட்படுத்துகின்றதா?

சேமிப்பையும் முதலீட்டையும்பற்றி நாம் முன்பு கொடுத்த விளக்கத்தைச் சற்று நோக்கும்பொழுது, வட்டி வீதம் ஒரு சமநிலையை ஏற்படுத்தவில்லை என்பது நமக்குப் புலனுகின்றது. அளிப்புக்கும் தேவைக்கும் இடையே விலை ஏற்படுத்தும் சமநிலையோடு நாம் வட்டிவீதத்தை ஒப்பிடுவது சரியல்ல. வட்டி வீதம் சேமிப்புக்கும் முதலீட்டுக்கும் இடையே சமநிலையை ஏற்படுத்தினுல், பொருளாதாரமும் தானுக இயங்கும் சக்தியைக் கொண்டிருக்கும்; முதலீடு சேமிப்புக்குச் சமமாக இருக்கும்; மக்கள் சேமித்த தொகை அனைத்தும் முதலீடு செய்யப்படும். முதலீட்டுக்கு நல்ல வாய்ப்புகள்

ஏற்பட்டால், வட்டி வீதம் உயரும் அல்லது சேமிப்பு மிகுதி யடையும்.

**இயற்கையான வட்டிவீதம்**

பொருளியலார் பழைய காலத்தில் பல தவருன எண்ணங்களைக் கொண்டிருந்தனர். அவைகளுள் பாங்கு முறையைக் கொண்டு வட்டிவீதம் எவ்வாறு நிர்ணயிக்கப்படுகின்றது என்பதை அவர்கள் விளக்க முயற்சிசெய்தது ஒன்ருகும். பாங்குகள் பாங்குச் செலாவணியாக்கம் செய்யலாம். பாங்குகள் பாங்குச் செலாவணியைப் பெருக்கினுல், புழக்கத்தில் இருக்கும் பணம் மிகுதியடையும். சேமிப்பும் பாங்குச் செலாவணியும் மிகுதியடைவதால், வட்டி வீதம் 'இயற்கையான வீதத்தைவிடக்' (natural rate of interest) குறையும். பாங்குகள் பாங்குச் செலாவணியைச் (bank credit) சுருக்கினுல், வட்டி வீதம் இயற்கையான வீதத்தைவிட மிகுதியடையும். இயற்கையான வட்டி வீதம் சேமிப்புக்கும் முதலீட்டுக்கும் இடையே ஒரு சமநிலையை ஏற்படுத்தும். ஆனுல், பாங்குச் செலாவணியாக்கத்தால் இந்த இயற்கையான வட்டி வீதம் பாதிக்கப்படுகின்றது. இதன் விளைவாக வர்த்தகச் சகடம் ஏற்படுகின்றது என்று ஸ்வீடன் நாட்டைச் சேர்ந்த நட்விக்சல் (Knut Wicksell) என்பவர் கூறினுர். அவருடைய கருத்துகளுக்கு ஸ்வீடன் நாட்டைச் சேர்ந்த ஓலின் (Ohlin), மைர்டல் (Myrdal) என்ற பொருளாதார வல்லுநர்கள் மேலும் விளக்கம் கொடுத்தனர். கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த ஆல்ஃபிரட் மார்ஷல் (Alfred Marshall), சர் ரால்ஃப் ஹாட்ரி (Sir Ralph Hawtrey), சர் டென்னிஸ் ராபர்ட்ஸன் (Sir Dennis Robertson), கீன்ஸ் பிரபு (Lord Keynes) முதலியவர்களும் இதுபோன்ற கருத்தை வெளியிட்டனர். இங்குக் குறிப்பிட்ட ஒவ்வொருவருடைய கருத்தையும் நாம் இங்கு விளக்க முடியாது. அவர்கள் எல்லோரும் ஏற்றுக்கொண்ட முக்கியமான கருத்துகளைமட்டும் நாம் இங்குக் காண்போம்.

**கீன்ஸ் பிரபுவின் வட்டிவீத விதி**

சென்ற 30 ஆண்டுகளாகப் பொருளியலார் வட்டிவீதம் எவ்வாறு நிர்ணயிக்கப்படுகின்றது என்பதையும், அது பொருளாதாரத்தை எப்படிப் பாதிக்கின்றது என்பதையும்பற்றி ஆராய்ச்சி செய்துவருகின்றனர். வட்டிவீதத்திற்கும், உற்பத்தியைப் பாதிக்கும் அதன் சக்திக்கும் அவர்கள் அளவுக்கு மீறிய முக்கியத்துவம் கொடுத்தனர் என்று நாம் கருதலாம். ஆனுல், அவர்களுடைய ஆராய்ச்சிக்கும் செயலுக்கும் வேறு காரணங்கள் இருந்திருக்கலாம். கீன்ஸ் பிரபு இந்த ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தவர்களில் முக்கியமான ஒருவராவர். அவர் 'General Theory of Employment, Interest

and Money' என்ற நூலில் வட்டிவீதத்திற்கு ஒரு சிறப்பான இடம் கொடுத்திருக்கின்ருர். உற்பத்தியையும் வேலையையும் அது எவ் வாறு பாதிக்கும் என்று அவர் எடுத்துக்காட்டியிருக்கின்ருர். கீன்ஸ் பிரபு வட்டிவீதத்துக்கு எதிர்மறையான விளக்கம் கொடுத்திருக் கின்ருர். முதலீடும், சேமிப்பும் வட்டிவீதத்தை நிர்ணயம் செய்ய வில்லை, மற்றச் சக்திகளே வட்டிவீதத்தை நிர்ணயம் செய்கின்றன. முதலீடும் சேமிப்பும் கணிசமான அளவு மாறலாம். ஆனல், வட்டி வீதம் இதனல் பாதிக்கப்படாமல் இருக்கலாம். முதலீடும் சேமிப் பும் சமமாக இருக்கின்றன. இவைகளுடைய சமன்பாட்டை ஏற் படுத்தும் சக்தியைக் கீன்ஸ் விளக்கியிருக்கின்ருர். இதை நாம் எளி தில் புரிந்துகொள்ளலாம். ஆனல், அவருடைய வட்டிவீத விதி எளியதாக இல்லை. வருமானத்தை மாற்றும் சக்தியே முதலீட்டுக் கும் சேமிப்புக்கும் இடையே ஒரு சமன்பாட்டை ஏற்படுத்து கின்றது. முதலீடு குறையும்பொழுது மக்கள் முன்பைவிடச் சிக்கனமாகச் செலவு செய்து மிகுதியான தொகையைச் சேமிக் கின்றனர் என்று நாம் கருதமுடியாது. மந்த காலத்தில் அவர் களுடைய வருமானம் குறைவதால், அவர்களுடைய சேமிப்பும் குறையும்.

**ரொக்க விருப்பம்** (Liquidity-preference)

கடனுகக் கொடுக்கப்படும் தொகையின் (loanable funds) அளிப்பும் தேவையும் வட்டி வீதத்தை நிர்ணயம் செய்யவில்லை என் பது கீன்ஸ் பிரபுவின் கருத்தாகும். வட்டிவீதம் என்பது பணத்தின் ரொக்கத்தன்மைக்காகக் கொடுக்கப்படும் விலையாகும். பணத்தின் அளிப்பு மிகுதியடைந்தாலோ அல்லது அதன் தேவை குறைந் தாலோ, வட்டிவீதம் குறையும். குறுகிய காலத் தவணைப் பத்திரங் கள் (short-dated securities) அதிகமான ரொக்கத்தன்மையைக் கொண்டிருப்பதால், அவைகள் பெறும் வட்டி வீதம் குறைவாக இருக்கும்.

பணத்தின் அளிப்பு பாங்குகளுடைய கட்டுப்பாட்டுக்குட் பட்டிருக்கின்றது. ஆகையால், சிறந்த செலாவணிக் கொள்கை யைப் பின்பற்றினல், பாங்குகள் வட்டி வீதத்தைக் கட்டுப்பாடு செய்யலாம். ஆனல், பாங்குகள் நேரடியாக நீண்ட கால வட்டி வீதத்தை (long-term rates) மாற்றமுடியாது. அரசாங்கம் செலா வணிப் பெருக்கக் கொள்கையை (cheap money policy) தொடர்ந்து கடைப்பிடிக்கும் என்ற நம்பிக்கை முதலீடு செய் வோருக்கு ஏற்படவேண்டும். அரசினர் தொடர்ந்து செலாவணிப் பெருக்கக் கொள்கையைக் கடைப்பிடிக்கமாட்டார்கள் என்று அவர்கள் கருதினலும், அல்லது அரசினர் செம்மையற்ற செலா

வணிக் கொள்கையைப் பின்பற்றுவதால் குறுகிய கால வீதங்கள் இயற்கைக்கு விரோதமாகத் தாழ்வடைந்துவிட்டன என்று அவர்கள் நம்பினாலும், முதலீடு செய்வோர் எதிர்பார்த்தபடி நடந்து கொள்ளமாட்டார்கள். அவர்கள் ரொக்கத்தையே (liquidity) நாடுவார்கள். நீண்ட காலப் பத்திரங்களை அவர்கள் மிகுதியாக வாங்கமாட்டார்கள். அப் பத்திரங்களுடைய விலைகள் குறையும். அதாவது, நீண்ட கால வட்டிவீதங்கள் அதிகமாகும். நீண்ட காலத்தில் நடக்கும் நிகழ்ச்சிகளைப்பற்றி மக்கள் கொண்டிருக்கும் கருத்துகளே நீண்ட கால வீதங்களை நிர்ணயம் செய்கின்றன. மார்க்கட்டில் நிலவும் நிலைமையைவிட மக்களுடைய எண்ணமும் விளம்பரமும் நீண்ட கால வட்டிவீதத்தைப் பாதிக்கும். வீக்க காலத்தில் விட, மந்த காலத்தில் அவைகளைக் கட்டுப்படுத்துவது கடினமாகும். குறுகிய கால வீதங்களைக் குறைத்துக்கொண்டே சென்றால், நீண்ட கால வீதமும் குறைந்துவிடாது. ஆனால், குறுகிய கால வீதங்களை உயர்த்தினால், நீண்ட கால வீதங்களைக் குறைப்பதைவிட உயர்த்துவது எளிய காரியமாகும். மேலும், எதிர்காலத்தில் வட்டி வீதங்கள் எவ்வாறு மாறும் என்பதை ஒருவரும் அறியமுடியாது. ஆகையால், முதலீடு செய்த தொகையின் மதிப்பும் எவ்வாறு மாறும் என்பதையும் ஒருவரும் அறியமுடியாது. இக் காரணங்கள் நீண்ட கால வீதங்கள் குறைவதைத் தடை செய்யும். நீண்ட காலப் பத்திரங்கள் கொடுக்கும் வருமானம் நீண்ட கால வீதமாகும். நீண்ட காலப் பத்திரத்தின் விலை உயர்ந்தால், அது கொடுக்கும் வருமானம் குறையும். இப் பத்திரங்களை வாங்குவதால் ஆபத்துகள் ஏற்படலாம். அதாவது, இவைகளுடைய விலைகள் குறைந்தால், இவைகளை வாங்கியவர்கள் பணத்தை இழப்பார்கள். ஒருவன் உயர்ந்த விலை கொடுத்து நீண்ட காலப் பத்திரத்தை வாங்கினால் (அதாவது வட்டி வீதங்கள் குறைவாக இருக்கும்போது பத்திரத்தை வாங்கினால்), அவனுக்கு முதலீடு செய்வதால் ஏற்படும் ஆபத்துக்கு நிகரான ஊதியம் கிடைப்பதில்லை. ஆகையால், மந்த காலத்தில் பாங்குகள் வட்டி வீதங்களைக் குறைக்க எவ்வளவு பாடுபட்டாலும், அவைகளுடைய முயற்சி பயனளிக்காமல் போகலாம். ஏனெனில், மந்த காலத்தில் மக்கள் ரொக்கத்தையே மிகுதியாக நாடுவார்கள். பாங்குகள் மந்த காலத்தில் பாங்குச் செலாவணியைக் கட்டுப்பாடு செய்யவும், வீக்க காலத்தில் செலாவணிப் பெருக்கம் செய்யவும் முயற்சி செய்திருக்கின்றன என்பதை வரலாறு கூறுகின்றது.

வட்டிவீதங்களை இரு காரணங்கள் நிர்ணயம் செய்கின்றன என்பது கீன்ஸ் பிரபுவின் வட்டிவீத விதியின் தத்துவமாகும். அவை: (1) பணத்தின் அளிப்பு, (2) பணத்தின் தேவை. கடன்

தொகையின் அளிப்பும் தேவையும் வட்டிவீதத்தைப் பாதிக்கின்றன என்பதையும் நாம் இங்குக் கூறலாம். ஆனால், ரொக்க விருப்பம் (liquidity-preference) என்ற சொல்லில் கடன் என்ற பொருளும் அடங்கியிருக்கின்றது. ஆகையால், கடன் தொகையைப்பற்றி நாம் இங்குக் குறிப்பிட வேண்டியதில்லை. கீன்ஸின் விதி பணத்தின் அளிப்பு எவ்வாறு வட்டி வீதத்தை நிர்ணயம் செய்கின்றது என்பதை விளக்குகின்றது. இதை எவருமே மறுக்கமுடியாது. நாட்டில் உள்ள பணத்தின் அளவு மிகுதியுடைந்தால், வட்டிவீதம் குறையும். ஆனால், பணத்தின் அளவு பெருகும்பொழுது, வேறு எந்தச் சக்தியும் வட்டிவீதம் குறைவதைத் தடைசெய்யாமல் இருக்க வேண்டும். நீண்ட காலக் கடன் தொகையில் மாறுதல் ஏற்பட்டால், உதாரணமாக் நீண்ட காலக் கடன் பத்திரங்களுக்குப் பதிலாகக் குறுகிய காலக் கடன் பத்திரங்களை வெளியிடும்பொழுது, வட்டி வீதம் மாறும். பண மார்க்கட்டில் (Money Market) ஒரு குறிப்பிட்ட காலத் தவணைப் பத்திரம் மாறும்பொழுது, அதாவது, குறுகிய காலப் பத்திரம் நீண்ட காலப் பத்திரமாகவோ அல்லது நீண்ட காலப் பத்திரம் குறுகிய காலப் பத்திரமாகவோ மாறும்பொழுது, அப் பத்திரங்களுடைய வட்டிவீதங்களும் மாறும். அதாவது, ஒரு பத்திரத்தின் வீதம் அதன் ரொக்கத்தன்மையைப் பொறுத்திருக்கும்.[1] அதாவது, ஒரு கடன் பத்திரத்தின் வீதம் (rate) அதன் ரொக்கத்தன்மைக்குத் தகுந்தவாறு இல்லாவிடில், பத்திரத்தை விற்பனை செய்து ஒரு நிறுவனம் வேண்டிய நிதியைத் திரட்டமுடியாது. கடன் பத்திரங்களைப்போலவே எப் பண்டத்தையும் அதன் விலைக்குத் தகுந்தவாறு நாம் அதிகமாகவோ அல்லது குறைவாகவோ விற்பனை செய்யலாம். குறைந்த விலையில் மிகுதியான அளவையும் உயர்ந்த விலையில் குறைவான அளவையும் விற்பனை செய்யமுடியும். ஆனால், கடன் பத்திரங்களைப்பற்றிப் பேசும்பொழுதே, நாம் ரொக்க விருப்பம் (liquidity-preference) என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றோம். கம்பளி, ரப்பர் முதலிய பண்டங்களைப்பற்றிப் பேசும்பொழுது, ரொக்க விருப்பம் என்ற சொல்லை நாம் பயன்படுத்துவதில்லை. பண்டங்களுடைய அளிப்பும் (supply) தேவையுமே அவைகளுடைய விலையை

1 நீண்ட காலப் பத்திரத்தை வாங்கும் ஒருவன் காலத்தவணை முடிந்து பத்திரம் முதிர்வு (maturity) பெற்ற பிறகே ரொக்கத்தைப் பெறமுடியும். ஆகையால், அப் பத்திரங்களை ஒருவன் விற்பனை செய்யவேண்டுமானால், அவைகளுடைய விலையைக் குறைக்கவேண்டும். அதாவது, அவைகளுடைய வீதத்தை உயர்த்தவேண்டும். பத்திர வெளியீட்டின்மூலம் ஒரு நிறுவனம் ஒரு குறிப்பிட்ட தொகையைத் திரட்ட முயற்சி செய்யும்பொழுது, அது வெளியிடும் பத்திரங்களை வாங்குவோருள் இறுதி நிலையில் (marginal) இருப்பவர்கூடப் பத்திரத்தை வாங்கவேண்டும் என்று முடிவு செய்யவேண்டும். குறைந்த ரொக்கத்தன்மையைக் கொண்டிருக்கும் பத்திரங்கள் உயர்ந்த வீதத்தையும் (அதாவது குறைந்த விலை), மிகுதியான ரொக்கத்தன்மையைக் கொண்டிருக்கும் பத்திரங்கள் குறைந்த வட்டி வீதத்தையும் கொடுக்க வேண்டும்.

நிர்ணயம் செய்கின்றன என்று கூறுகின்றோம். ரொக்க விருப்பமே (liquidity-preference) வட்டிவீதத்தை நிர்ணயம் செய்கின்றது என்று கீன்ஸ் பிரபு கூறுகின்றார். ஒருவன் சிக்கனமாகச் செலவு செய்து சேமிப்பைப் பெருக்குவதால் மூலதனத்தைப் (capital) பெருக்க முடியாது என்பது ரொக்க விருப்ப விதியின் (liquidity-preference theory) உட்கருத்தா? கீன்ஸ் சில சமயங்களில், சிக்கனமும் சேமிப்பும் மூலதனம் பெருகுவதற்கு உதவியளிக்கமுடியாது என்று குறிப்பிட்டதாகத் தோன்றுகிறது. மந்த காலத்தில் சேமிப்பு (saving) வட்டி வீதத்தைப் பாதிக்காது. ஆனால், நாட்டில் வேலை நிறைவு (full employment) இருக்கும்பொழுது, சேமிப்பு மிகுதியடைவதால் வட்டி வீதம் குறையும். ஆனால், முதலீடு (investment) பெருகுவதால் அது உயரும்.

செலாவணி முறை (monetary system) எவ்வாறு இயங்குகின்றது என்பதையும், பண அளவும் (quantity of money), அதன் தேவையும் எவ்வாறு நிர்ணயிக்கப்படுகின்றன என்பதையும் நாம் விளக்கிய பிறகு வட்டிவீத விதியைப்பற்றிய விவரங்களை விளக்கலாம். நாட்டின் பொருளாதாரத்தில் வர்த்தகச் சகடம் புகுத்தும் மாறுதல்களை வட்டிவீதம் மிகைப்படுத்தலாம் அல்லது குறைக்கலாம். ஆனால், வட்டி வீதம் வர்த்தகச் சகடத்தைத் தடை செய்ய முடியாது.

**சேமிப்பும் முதலீடும்—பூர்த்தியடைவதற்கு முன்பும் பின்பும்**

நாட்டின் பொருளாதாரத்தில் ஏற்படும் மாறுதல்களை விளக்கும் விதியின் உறுப்புகளாகிய சமன்பாடுகளை நாம் இங்குக் காண்போம். நாம் 25ஆம் அதிகாரத்தில் கொடுத்த சமன்பாடுகளைக் கீழே காணலாம்:

$$Y = C + S \qquad \cdots \quad (2)$$

$$O = C + I \qquad \cdots \quad (3)$$

$$S = I \qquad \cdots \quad (4)$$

இச் சமன்பாடுகளில் நாம் தேசீய வருமானம் (Y), உற்பத்தி (O), சேமிப்பு (S), முதலீடு (I) முதலியவைகளை அவைகள் பூர்த்தியானபிறகு கணக்கிடுகின்றோம். இவ்வாறு நாம் கணக்கிடுவதால் சேமிப்பும் முதலீடும் சமமாக இருக்கும். வேறு முறைகளில் சேமிப்பையும் முதலீட்டையும் கணக்கிட்டால், அவைகளிடையே வேற்றுமை இருக்கும். உதாரணமாக நாம் சென்ற வாரம் கிடைத்த வருமானத்திற்கும், இந்த வாரம் செய்யும் செலவுக்கும் உள்ள வேறுபாட்டைச் சேமிப்பு என்று சொல்லலாம். இந்த வாரத்தின் செல

வுக்கும் வருமானத்திற்குமிடையே உள்ள வேறுபாட்டைச் சேமிப்பு என்று கூருமல் மேலே கொடுக்கப்பட்டுள்ள விளக்கத்தை நாம் ஏற்றுக்கொள்ளலாம். ஒருவன் செலவு செய்யும்வரை அவனிடமிருக்கும் பணம் அவனுடைய சேமிப்பாகும் என்பது நாம் கொடுத்துள்ள விளக்கத்தின் உட்கருத்தாகும். மற்ற விளக்கத்தின்படி அது அவனுடைய சேமிப்பாகாது.

நமது விளக்கப்படி சேமிப்பும் முதலீடும் பூர்த்தியான பிறகு சமமாக இருக்கும். ஆனுல், பூர்த்தியாவதற்குமுன் அவை சமமாகா. பூர்த்தியாவதற்குமுன், பூர்த்தியாவதற்குப்பின் என்ற வார்த்தைகளை ஸ்வீடன் நாட்டைச் சேர்ந்த பொருளாதார வல்லுநர் பயன்படுத்தினர். இந்த வார்த்தைகளை நாம் பயன்படுத்தாமல் கருத்தை எளிய நடையில் தெளிவாகக் கூறலாம். கடந்த காலத்தில் மக்கள் செய்த முதலீடும் சேமிப்பும் சமமாகவே இருக்கும். ஆனுல், அவர்கள் திட்டமிட்டுச் செய்யும் சேமிப்பும் முதலீடும் சமமாக இரா. நாட்டில் சிலர் பணத்தைச் சேமிப்பதற்கும், வேறு சிலர் கடன் வாங்கி முதலீடு செய்வதற்கும் திட்டமிடுகின்றனர். மொத்த முதலீடும் சேமிப்பும் எவ்வாறு பாதிக்கப்படும் என்பதை மக்கள் அறியமுடியாது. சேமிப்புச் செய்யும் ஒவ்வொருவனும் சேமிப்புப் பத்திரங்களையோ (savings certificates) அல்லது மற்றப் பத்திரங்களையோ வாங்குவான். மக்கள் சேமித்த தொகை எவ்வாறு பயன்படுத்தப்படுகின்றது என்பதை அவன் அறிய மாட்டான். சேமிப்புப்பற்றிய புள்ளிவிவரங்களில் அவன் அக்கறை காட்டமாட்டான். இந்த உண்மை முதலீட்டுக்கும் பொருந்தும். முதலீடு செய்யும் ஒவ்வொருவனும் இலாப நோக்கத்துடன் செய்கின்றுன். மொத்த முதலீடு பொருளாதாரத்தில் ஏற்படுத்தும் விளைவுகளை அவன் அறியவில்லை. ஆனுல், மொத்த முதலீடும் சேமிப்பும் எவ்வாறு பூர்த்தியானபிறகு சமமாக இருக்கின்றன?

நாம் முன்பு பெருக்கி (multiplier) என்ற வார்த்தைக்குக் கொடுத்த விளக்கம் இந்த வினுவுக்குச் சரியான விடையை அளிக்கின்றது. ஒருவன் பணத்தைச்சேமித்தால், செயற்படுத்தும் தேவை அதனுல் குறைகின்றது. இதன் விளைவாகச் சில உற்பத்திச் சாதனங்கள் பயன்படுத்தப்படாமல் இருக்கின்றன. இச் சாதனங்கள் உற்பத்தி வேலையிலிருந்து விடுவிக்கப்படுகின்றன. ஆனுல், மற்றொருவன் அதே தொகையை உபரியாக முதலீடு செய்தால், விடுவிக்கப்பட்ட உற்பத்திச் சாதனங்கள் மீண்டும் பயன்படுத்தப்படும். சிலர் செய்யும் சேமிப்புத் தொகைக்குச் சமமான தொகையை வேறு சிலர் முதலீடு செய்யாவிடில், அவை சில உற்பத்திப் பணியிலிருந்து விலகிவிடும். அதாவது, பலர் வேலையை இழப்பதால்

அன்றுடம் பெறும் வருமானத்தையும் இழப்பார்கள். இந்த நிலையில் மக்களுடைய உபரிச் சேமிப்புக்குச் சமமான மதிப்புள்ள பண்டங்கள் நாட்டில் பெருகிவிடும். இவை விற்பனையாகா. ஏனெனில், வேலையை இழந்த பலர் பொருளை வாங்கமுடியாத நிலையில் இருப்பார்கள். வேலையை இழந்தவர்கள் இன்சூரன்சு திட்டத்தின்படி அரசாங்கத்தின் உதவியைப் பெற்றால், விற்பனை பாதிக்கப்படாது. இன்சூரன்சு கட்டணங்களைச் செலுத்துவோர் செய்யும் சேமிப்பு செயற்படுத்தும் தேவையைக் குறைக்கின்றது. இத் திட்டத்தினால் பயனடைவோர் அரசாங்க உதவியைக்கொண்டு பொருள்களை வாங்குவதால், செயற்படுத்தும்தேவை மீண்டும் பெருகிவிடுகின்றது. சிலர் திட்டமிட்டுச் சேமிப்பதால், நாட்டில் உற்பத்தியான பொருள்களில் ஒரு பகுதி விற்பனையாகாமல் தேங்கிவிடுகின்றது. இன்சூரன்சு திட்டத்தின்கீழ்ச் சிலர் செய்யும் சேமிப்பை மற்றவர்கள் பயன்படுத்துவதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்கின்றது.

இந்த நிலை தொடர்ந்து நீடித்தால், அதாவது, உற்பத்தியான பொருள்கள் விற்பனையாகாமல் தேங்கிவிட்டால், வியாபாரிகள் மேலும் மிகுதியான பொருள்களை வாங்கமாட்டார்கள். உற்பத்தியாளர்களும் உற்பத்தியைக் குறைக்க ஏற்பாடு செய்வார்கள். அவர்கள் பல தொழிலாளர்களை வேலையிலிருந்து நீக்குவார்கள். மக்களுடைய மொத்த வருமானம் குறையும். ஆகையால், அவர்களுடைய தேவையும் குறையும். நாம் குறிப்பிட்டபடி பெருக்கி (multiplier), வருமானத்தையும் தேவையையும் மேலும் குறைக்கும். வருமானம் குறைந்துகொண்டே சென்றால், சேமிப்பும் குறையும். முதலீடு செய்வோருடைய கருத்துகள் மாறாமல் இருந்தால், ஒரு புதிய சமநிலை ஏற்படும். நாம் இங்குச் சேமிப்புக்கும் முதலீட்டுக்கும் இடையே உள்ள சமன்பாட்டைக் குறிக்கவில்லை. சேமிப்பும், முதலீடும் புதிய வருமானத்திற்குப் பொருத்தமாக மாறிவிடும். வருமானம் குறையும்பொழுது பொருள்கள் விற்பனையாகாமல் தேங்குவதால், உற்பத்தி குறையும். மொத்த வியாபாரிகள் உற்பத்தியாளர்களிடமிருந்து வாங்கும் பொருள்களை மேலும் குறைக்கவேண்டாமென்றும், மக்கள் வாங்கும் பொருள்களை மேலும் குறைக்கவேண்டாமென்றும் முடிவுசெய்யும்பொழுது, நாம் மேலே குறிப்பிட்ட சமநிலை முழு வளர்ச்சியடைகின்றது.

**சிக்கனம் (Thrift) என்பது எதிர்மறையாக இருக்கின்றது**

சமுதாயத்தின் ஒவ்வோர் அங்கத்தினரும் தம் வருமானத்தில் எவ்வளவு தொகையைச் சேமிக்கவேண்டும் என்பதை முடிவு செய்கின்றார். ஆனால், இந்த முடிவுகள் சமுதாயத்தின் மொத்தச் சேமிப்பை நிர்ணயம் செய்யவில்லை. முதலீடு பெருகாவிடில் சேமிப்

பும் பெருகாது. ஒரு மனிதன் மிகுதியாகவோ, அல்லது குறைவாகவோ செலவுசெய்யலாம். இதைக் கீன்ஸ் பிரபு, துய்ப்பை நாடும் பழக்கம் (propensity to consume) என்று கூறினர். இதே கருத்தை மக்களுடைய சிக்கனப் பழக்கம் (thriftiness) என்றும் கூறலாம். சிக்கனம் சேமிப்பாகாது. ஒருவன் செலவு செய்வதால், மற்றவர்களுடைய வருமானமும் சேமிப்பும் பெருகும். ஆகையால், சிக்கனத்துடன் முதலீடு சேராவிடில், நாட்டின் வருமானம் குறையும்; உற்பத்தியும் குறையும். இதன் விளைவாக உற்பத்திச் சாதனங்கள் வேலையிலிருந்து விலகும். எனவே, சிக்கனம் எதிர்மறையான விளைவையே ஏற்படுத்தும். சிக்கனத்துடன் முதலீடும் பெருகினல் தான் அது சிறந்த பயனளிக்கும்.

மந்தம் ஏற்படுவதற்குச் சிக்கனமே(thrift)காரணம் என்று நாம் கருதக்கூடாது. நாம் முன்பு குறிப்பிட்டபடி மக்களுடைய சேமிப்புப் பழக்கம் திடீரென்று மாருது. முதலீடே நிலையற்ற தன்மையைக் கொண்டிருக்கின்றது. சேமிப்பு மிகுதியடைவதால் ஏற்படும் தீமைகள் முதலீடு குறைவதாலும் ஏற்படும். மக்களுடைய செலவு பெருகினல் உற்பத்தி எவ்வாறு அதிகரிக்குமோ, அதே போல் முதலீடு பெருகினலும் உற்பத்தி மிகுதியடையும்.

**கட்டடவேலை வளர்ச்சியடைவதால் ஏற்படும் விளைவுகள்**

கட்டட வேலை வளர்ச்சியடைவதால் முதலீடு மிகுதியடைகின்றது என்று கற்பனை செய்துகொள்வோம். கட்டட வேலையிலும், மரத்தொழில், செங்கல் உற்பத்தி, இரும்பு–எஃகுத் தொழில் முதலிய தொழில்களில் முன்பைவிட அதிகமான தொழிலாளர்கள் வேலை செய்வார்கள். இத் தொழில்களில் ஈடுபட்டிருப்பவர்களுடைய வருமானம் மிகுதியடையும். அவர்களுடைய செலவும் பெருகும். கட்டடத் தொழிலில் வேலை செய்வோர் செய்யும் செலவு மற்றத் (பருத்தி ஆடை உற்பத்தி போன்ற) தொழில்களுக்கு ஒரு தூண்டுதலைக் கொடுக்கும். ஏனெனில், கட்டட வேலை வளர்ச்சியடைவதால் நேரடியாகப் பயனடையும் தொழிலாளர்கள் துணி போன்ற மற்றப் பண்டங்களை வாங்குவதால் அத் தொழில்களும் வளர்ச்சியடையும். அத் தொழில்கள் பெருகுவதால், மேலும் மற்றத் தொழில்கள் பெருகும். முதன் முதலில் முதலீடு பெருகுவதால், அதைத் தொடர்ந்து பல துறைகளில் உற்பத்தி மேலும்மேலும் பெருகும். ஒவ்வொரு படிவத்திலும் சேமிப்பும் முதலீடும் சமமாக இருக்கும். தொடக்க காலத்தில் இச் சமன்பாட்டைக் கீழ்க்கண்ட காரணங்கள் ஏற்படுத்துகின்றன: (1) அதிகமாகப் பெறும் வருமானத்தைச் செலவு செய்ய நேரமில்லாமையால் மக்கள் மிகுதியான தொகையை ரொக்கமாக வைத்

திருப்பார்கள். (2) தேவை பெருகுவதால் உற்பத்தியாளர்கள் வைத்திருக்கும் சரக்குகள் விற்பனையாகிவிடுகின்றன. இதனால் முதலீடு குறையும். (உற்பத்தியாளர்களும் வியாபாரிகளும் வைத்துக்கொண்டிருக்கும் சரக்கு முதலீட்டுடன் சேர்ந்திருக்கின்றது.) நிலைமையில் ஏற்பட்டுள்ள மாறுதல்களுக்குத் தகுந்தவாறு மக்கள் தம் செலவையும், உற்பத்தியாளர்கள் தம் உற்பத்தியையும் மாற்றிக்கொண்ட பிறகே சமநிலை பூர்த்தியாகும். புதிய சமநிலை ஏற்பட்ட பிறகு, மக்களுடைய வருமானம், சேமிப்பு முதலீடு முதலியவை எல்லாம் முன்பைவிட அதிகமாக இருக்கும். முதலீடு சேமிப்பைப் பெருக்கும். சேமிப்பு பெருகும்பொழுது முதலீடும் ஒரு தூண்டுதலைப் பெறும்.

**வேலை நிறைவும், அந்த நிலையில் சேமிப்பும் முதலீடும்**

முதலீட்டுக்குச் சேமிப்பு இன்றியமையாதது என்று கருதுவோர் நாம் இங்குக் கூறிய கருத்தை உண்மையின் எதிர்மறை என்று கருதலாம். ஒரு நாடு சேமிக்கவேண்டுமானால், அந்த நாட்டில் முதலீடு பெருகவேண்டும். அதாவது, முதலீடு பெருகினால்தான் சேமிப்பும் பெருகும். இக் கருத்துகள் ஒன்றுக்கொன்று முரணாக இருப்பதாகத் தோற்றம் அளிக்கலாம். எந்தச் சூழ்நிலைக்கும் இங்குக் குறிப்பிட்டுள்ள கருத்துப் பொருத்தமாக இருக்குமா? முதலீட்டைப் பெருக்கித் தேசீய வருமானத்தை நாம் அதிகரித்துக்கொண்டே செல்லமுடியுமா?

தேசீய வருமானம் அதிகரித்ததாகத் தோற்றமளிக்கலாம். அது முன்பைவிட அதிகத் தொகை மதிப்புள்ளதாகத் தோற்றமளிக்கலாம். ஆனால், உண்மையில் நிலைமையில் முன்னேற்றம் ஏற்படாமல் இருக்கலாம். உற்பத்திச் சாதனங்கள் முழுமையாகப் பயன்படுத்தப்படாமல் இருக்கும்பொழுது, முதலீடு பெருகினால் உண்மை வருமானம் (real income) மிகுதியடையும். நாட்டில் வேலை நிறைவு (full employment) ஏற்பட்ட பிறகு முதலீடு பெருகினால், அதன் விளைவாகப் பணவீக்கமே (inflation) ஏற்படும். வேலை நிறைவு ஏற்பட்ட பிறகு முதலீடு பெருகவேண்டுமானால், அதற்குப் பாங்குச் செலாவணியையே (credit) பயன்படுத்தவேண்டும். துய்ப்போர் பண்டங்களை (consumer's goods) உற்பத்தி செய்யும் தொழிலாளர்களை முதலாளிகள் கட்டட வேலையிலும், முதலீட்டுத் தொழில்களிலும் அமர்த்துவதற்காக அவர்களுக்கு உயர்ந்த கூலியைக் கொடுப்பார்கள். கூலியை உயர்த்துவதற்கு அவர்கள் பாங்குச் செலாவணியைப் பயன்படுத்துவார்கள். புதிதாகப் புழக்கத்தில் வந்த பணம் செலவு செய்யப்படும்வரை, அதைச் சேமிப்பு என்று நாம் கருதலாம். புதிய பணத்தை முதலாளிகள்

முதலீட்டுக்கே பயன்படுத்த விரும்புவதால் நாம் அதைச் சேமிப்புடன் சேர்க்காமலும் இருக்கலாம். சேமிப்பு தாற்காலிகமாக மிகுதியடைகின்றது. ஆனால், மக்கள் விரைவில் உபரி வருமானத்தைச் செலவு செய்துவிடுவார்கள். துய்ப்போர் பொருள்களின் உற்பத்தி உயர்ந்தபட்ச எல்லை (maximum limit) வரை மிகுதியடைகின்றது. இந்த நிலையில் தொழிலாளர்கள் மூலதனப்பொருள்களை உற்பத்திசெய்யும் தொழில்களை நாடிச்செல்வதால் துய்ப்போர் பொருள்களின் உற்பத்தி குறையலாம். ஆகையால், மக்கள் முன்பு எவ்வளவு பணத்தைச் செலவு செய்து துய்ப்போர் பொருள்களை வாங்கினார்களோ, அதே தொகையைக் கொண்டு முன்பு வாங்கிய அளவு அப்பொருள்களை வாங்க முடியாது. ஏனெனில், உற்பத்தி குறைவதால் துய்ப்போர் பொருள்களுடைய விலைகள் உயரும். இப்பொருள்களுடைய அளிப்பைவிடத் தேவை அதிகமாக இருப்பதால், இவைகளுடைய விலைகளும் உயரும். இதைத் தொடர்ந்து கூலிகளும் உயரும். முதலாளிகள் முதலீட்டைப் பெருக்குவதற்காக பாங்குச் செலாவணியை (credit) நாடுவார்கள். இதன் விளைவாகப் பணவீக்கம் மேலும் வளர்ச்சியடையும்.

இந்த நிலையில் துய்ப்போர் பொருள்களை உற்பத்தி செய்வோரும், மூலதனப் பொருள்களை உற்பத்தி செய்வோரும், போட்டி போட்டுக்கொண்டு உற்பத்தி சாதனங்களை வாங்குவதால் அவைகளுடைய விலைகள் விரைவில் உயருகின்றன. இப்போட்டியின் விளைவாக உற்பத்தி சாதனங்களுடைய விலைகளும், மற்றப் பொருள்களின் விலைகளும் விரைவில் உயருகின்றன. மூலதனப் பொருள்களை உற்பத்தி செய்வோர் புழக்கத்தில் வரும் உபரி பாங்குச் செலாவணியைப் பயன்படுத்துவர். மக்கள் பெறும் உபரிப்பணத்தை அவர்கள் துய்ப்போர் பொருள்களை வாங்குவதற்கே செலவு செய்வார்கள். இப் பொருள்களை உற்பத்தி செய்வோர் தாம் பெறும் உபரி வருமானத்தைக்கொண்டு உற்பத்திச் சாதனங்களை நாடுவார்கள்.

இந்த நிலையில் மக்கள் பணத்தைச் சேமித்தால், அவர்களுடைய தேவை குறையும். இதைத் தொடர்ந்து உற்பத்தியும் குறைய வேண்டும். ஆகையால் உற்பத்தி சாதனங்களைத் துய்ப்போர் பொருள்களை உற்பத்தி செய்யும் பணியிலிருந்து விடுவித்து மூலதனப் பொருள்களை உற்பத்தி செய்யும் பணியில் ஈடுபடுத்தலாம். மக்களுடைய சேமிப்பு அதிகரிப்பதால் தேவை குறையும்; முதலீடு பெருகும்; பணவீக்கமும் ஏற்படாது. இந்த நிலையில் பாங்குகள் பாங்குச் செலாவணியைப் பெருக்காவிடில் வட்டி வீதங்கள் உயரும். பாங்குகள் வட்டி வீதங்களை உயர்த்தி பாங்குச் செலா

வணியைப் பங்கீடு செய்யவேண்டும். இந்த நிலையில் வட்டி வீதம் சேமிப்புக்கும் முதலீட்டுக்குமிடையே ஒரு சமன்பாட்டை ஏற்படுத்தும். வட்டி வீதம் உயர்ந்துவிட்டதால் முதலீட்டின் அடக்கச் செலவும் (cost) அதிகரித்து விடுகிறது. ஆகையால், முதலாளிகள் தகுந்த வருமானம் கொடுக்கக்கூடிய திட்டங்களிலேயே பணத்தை முதலீடு செய்வர். இறுதியில் பயன்படுத்தப்படும் மூலதனத்தொகை கொடுக்கும் பயன் (marginal productivity of capi - tal) அதிகரித்தாலுங்கூட முதலாளிகள் முதலீட்டைப் பெருக்காமல் இருக்கலாம். ஏனெனில், வட்டி வீதம் உயர்வதால் முதலீட்டின் அடக்கச் செலவு மிகுதியடையும்.

**வீக்க காலத்தில் முதலீடு**

நீண்டகால வட்டி வீதங்களைக் கட்டுப்பாட்டுக்குட்படுத்தினாலும் வேலையை (employment) நாம் நிலைப்படுத்த முடியாது. பொருளாதார மந்தம் முடிவடைந்து வீக்க காலம் தொடங்கும்பொழுது முதலீட்டின் அளவும் ரகமும் மாறும். நாட்டில் நிலவும் வட்டி வீதத்தையும் முதலீட்டின் அடக்கச் செலவையும் கொண்டு நாம் கணக்கிடும் பொழுது சில முதலீடுகள் இலாபத்தைக் கொடுக்கா என்று திட்டவட்டமாக முடிவு செய்யலாம். ஆனால், இத்தகைய திட்டங்களிலும் உற்பத்தியாளர்கள் பணத்தை முதலீடு செய்கின்றனர். இந்த முதலீடுகளைக் கட்டுப்பாடு செய்யும் நோக்கத்துடன் வட்டி வீதத்தை உயர்த்தினால், உற்பத்தியாளர்கள் இவைகளைத் தவிர மிகுதியான இலாபத்தைக் கொடுக்கக்கூடிய மற்ற முதலீடுகளையும் செய்வார்கள். சிறிதுகாலம் சென்றபின் தவறு புலப்படும். ஆனால், அப்பொழுது வட்டி வீதத்தை அறவே நீக்கினாலன்றி நிலைமையைச் சீர்படுத்தமுடியாது. தாமதமாக ஆரம்பிக்கப்பெற்ற திட்டங்கள் மீண்டும் விரைவில் வளர்ச்சியடையா. சற்றும் கவனமில்லாமல் ஆரம்பிக்கப்பெற்ற திட்டங்கள் ஒரு நெருக்கடியை ஏற்படுத்திவிடும். ஆகையால், முதலாளிகள் இந்த நிலையில் மற்றத் திட்டங்களைக் கைவிடுவார்கள். இந்தத் திட்டங்கள் சாதாரண காலத்தில் எவ்வளவு இலாபகரமாக இருந்தாலும் நெருக்கடியான காலத்தில் கவர்ச்சிகரமாகத் தோன்றா.

**பொருளாதாரத்தின் நிலையற்ற தன்மையும் அயல்நாட்டு வர்த்தகமும்**

இதுவரை அயல்நாட்டு வர்த்தகம் எவ்வாறு ஒரு நாட்டின் பொருளாதாரத்தைப் பாதிக்கும் என்பதை நாம் ஆராய்ச்சி செய்யவில்லை. ஏற்றுமதிப் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்கள் சில சமயங்களில் பாதிக்கப்படுவதால் மந்தம் ஏற்படுகின்றது. ஆகையால் பொருளாதாரத்தில் ஏற்படும் மாறுதல்களுக்கு ஒரு நாடு

அயல்நாடுகளுடன் கொண்டிருக்கும் தொடர்பும் காரணமாகும். உள்நாட்டில் நடக்கும் நிகழ்ச்சிகள் மட்டுமே வர்த்தகச் சகடத்தின் காரணம் என்று நாம் கருதக்கூடாது. அயல்நாடுகளில் ஒரு நாட்டின் பொருள்களுக்கு ஏற்படும் தேவை மாறுவதால் ஏற்றுமதிப் பண்டங்களின் உற்பத்தி பாதிக்கப்படலாம். இப்பண்டங்களை உற்பத்தி செய்யும் தொழில்கள் நலிவுறுதலால் மற்றத் தொழில்களும் பாதிக்கப்படலாம். இதைத் தொடர்ந்து ஒரு பொருளாதார மந்தம் ஏற்படலாம். அமெரிக்கா தவிர மற்றத் தொழில் செறிந்த எல்லா நாடுகளும் இப்பிரச்சினைக்கு ஒரு முடிவுகாண வேண்டும். ஒரு நாட்டின் பொருளாதார அமைப்பில் அயல்நாட்டு வர்த்தகம் முக்கியமற்ற ஓர் இடத்தைப் பெற்றிருந்தால், வெளிநாட்டுத் தேவை குன்றுவதால் அந்த நாட்டின் பொருளாதாரம் தாக்கப் படமாட்டாது. ஒரு நாடு அமெரிக்காவைப் போல் உலக மார்க்கட்டின் நிலைமையையே மாற்றக்கூடிய வலிமையைப் பெற்றிருந்தால், அயல்நாட்டு வர்த்தகத்தில் ஏற்படக்கூடிய மாறுதல்கள் அந்த நாட்டை எந்த விதத்திலும் பாதிக்க மாட்டாது.

வேறு எந்த நாடும் இங்கிலாந்தைவிட இத்தொல்லைகளுக்கு இலக்காகவில்லை. 19ஆம் நூற்றுண்டில் இங்கிலாந்தில் ஏற்றுமதித் தொழில்களே முதன்முதலில் மந்தத்தால் தாக்கப்பட்டன. அதே தொழில்கள் முதன்முதலில் மந்தத்திலிருந்து மீட்சியடைந்தன. இதுவரை நாம் கூறியதிலிருந்து முதலீடு ஒரு நாட்டின் உற்பத்தியையும், வேலை வாய்ப்புக்களையும் பாதிக்கும் என்ற உண்மை தவறுனது என்று நாம் கருத முடியாது. இங்கிலாந்து வெளிநாடுகளில் செய்த முதலீட்டில் அடிக்கடி ஏற்றத்தாழ்வுகள் ஏற்பட்டதால், அதன் ஏற்றுமதியும் அவ்வப்போது மாறியது. இங்கிலாந்தின் மூலதனத்தைக்கொண்டு கனடா நாட்டின் பொருளாதாரத்தை வளர்த்தால், கனடாவில் இருப்புப் பாதைகள் அமைக்கப் படலாம். அந்த நாட்டில் வேலை வாய்ப்புக்கள் பெருகலாம்; உற்பத்தியும், வருமானமும், தேவையும் அங்குப் பெருகலாம். இதன் விளைவாகக் கனடியர்கள் இங்கிலாந்தில் உற்பத்தியான ரயில்வே எஞ்சின்கள், ஆடைகள் முதலிய பொருள்களை வாங்கலாம். கனடியப் பொருளாதாரம் வளர்ச்சியடைவதால் பயனடையும் மற்ற நாடுகளும் இங்கிலாந்தின் சரக்குகளை வாங்கலாம். இங்கிலாந்தின் ஏற்றுமதித் தொழில்கள் செழிப்படைவதால் கப்பல்கட்டும் தொழில்கள் போன்ற மற்றத் தொழில்களும் பெருகலாம். உலக நாடுகளுள் இங்கிலாந்து முதன்மையான இடத்தைப் பெற்றிருந்த காலத்தில்கூட ஏற்றுமதி குறைந்ததால், உள்நாட்டுப் பொருளாதாரம் பாதிக்கப்பட்டது, வேலை வாய்ப்புக்களும் நாட்டில் குறைந்தன.

முதல் உலகப் போருக்குப்பின் இங்கிலாந்து முன்பைவிட அதிகமாக மற்ற நாடுகளைச் சார்ந்து வாழவேண்டியதாயிற்று. 1925க்குப் பின் ஏற்றுமதி 1913ஆம் ஆண்டின் ஏற்றுமதியைவிட மிகவும் குறைந்தது. ஏற்றுமதித் தொழில்கள் நலிவுற்றன.' இத் தொழில்கள் இருந்த இடங்களில் வேலையின்மை ஏற்பட்டது.[1] 1929-ல் ஒரு பொருளாதார மந்தம் தொடங்கியது. மூன்று ஆண்டு களுக்குள் ஏற்றுமதித் தொழில்களில் ஒரு மில்லியன் ஆட்கள் வேலையை இழந்தனர்.[2] 1931ஆம் ஆண்டில் சுமார் அரை மில்லி யன் ஆட்கள் வேலையை இழந்தனர். அக் காலத்தில் அயல்நாட்டு வர்த்தகமே இங்கிலாந்தில் வேலை வாய்ப்புக்களைப் பாதித்தது. 1929 முதல் 1935 வரை நீடித்த பொருளாதார மந்தம் மிகவும் கடுமையாக இருந்தது. ஏற்றுமதி மட்டுமல்லாமல் எல்லாத் தொழில் களும் கடுமையாகத் தாக்கப்பட்டன. 1938-ல் ஒரு மந்தம் ஏற் பட்டது. அப்பொழுது ஏற்றுமதியில் ⅛ பகுதி குறைந்தது, 200,000 தொழிலாளர்கள் வேலை இழந்தனர். இந்த மந்தம் விரைவில் மறைந்துவிட்டது.

இந்தப் பிரச்சினைக்கு இங்கிலாந்து ஒரு முடிவுகாண வேண்டும். இதன் விளைவுகளையும் தீமைகளையும் பல வழிகளில் நாம் சமாளிக்க லாம்.[3] ஏற்றுமதி பொருளாதார மந்தத்தை ஏற்படுத்தும்பொழுது ஒரு நாடு தனிப்பட்ட முறையில் நிலைமையை எந்த விதத்திலும் சீர் படுத்தமுடியாது. உலகநாடுகள் எல்லாம் ஒத்துழைக்கவேண்டும்.

## பெருக்கியும் வேகவிசையும்

### பெருக்கி

இதுவரை நாம் கூறிய கருத்துகள் பொருளாதாரத்தில் ஏற்படும் மாறுதல்களை விளக்குகின்றன. ஆனால் அவ்வப்போது வர்த்தகச் சகடம் நாட்டில் புகுத்தும் மாறுதல்களை அவை விளக்கவில்லை. அவை முதலீடு எவ்வாறு நிலையற்ற தன்மையைக் கொண்டிருக் கின்றன என்பதை விளக்குகின்றன. அதாவது முதலீட்டின் வீதம் அடிக்கடி மாறும் என்பதையும், தேசிய வருமானமும் சேமிப்பும் அவ்வப்போது வருமானத்திற்குத் தகுந்த புதிய சமன்பாட்டைக் கொண்டிருக்கும் என்பதையும் நமது கருத்துகள் எடுத்துக்காட்டு

1 1924-ல் வேலையிலிருந்த மனித சக்தியின் அளவு 1913-ல் இருந்ததைவிட 25 சதவீதம் குறைவாக இருந்தது. 1924-ல் 2.4 மில்லியன் ஆட்கள் வேலையில் இருந்தனர் என்றும் 800,000 ஆட்கள் வேலையை இழந்தனர் என்றும் டாக்டர் இ. எஸ். ஸ்நோ ((Dr. E. S. Snow) கருதுகிறார்.

2 இ. ஏ. ஜி. ராபின்சன் (E.A.G. Robinson.) "Sir William Beveridge and Full Employment," *Economic Journal*, April 1945, p. 73.

3 பக்கங்கள் 639-40, 643-4 பார்க்க.

கின்றன. ஆனால் பொருளாதாரத்தில் ஏற்படும் மாறுதல்களிலும், ஏற்றத்தாழ்வுகளிலும் ஓர் ஒழுங்கு இருப்பதை அவை எடுத்துக் காட்டவில்லை. இது நமக்கு வியப்பைத் தருகிறது. இக்கருத்துக்களை முதன்முதலில் கீன்ஸ் அவர்கள் வெளியிட்டார். நாட்டில் வேலையின்மை (unemployment) தொடர்ந்து நீடிக்கக் காரணம் யாது என்பதை அவர் ஆராய்ச்சி செய்தார். அவர் வர்த்தகச் சகடத்தில் கவனம் செலுத்தவில்லை. ஒரு நாட்டின் பொருளாதாரத்தில் வேலையின்மை நீண்டகாலம் நிலவலாம் என்பதையும், மீண்டும் உற்பத்தியும், வேலை வாய்ப்புக்களும் தாமாகவே பெருகாமல் இருக்கலாம் என்பதையும் அவர் எடுத்துக்காட்டவிரும்பினார். பொருளாதாரத்தில் எந்தவித முன்னேற்றமும் ஏற்படாமல் ஒரு தேக்கம் (stagnation) ஏற்படலாம். மக்களுடைய சேமிப்பை முதலீடு செய்வதற்குச் சிறந்த வாய்ப்புகள் ஏற்படாமல் இருக்கலாம். ஆனால் கடந்த 20 ஆண்டுகளாக நாம் இந்தப் பிரச்சினைக்கு முடிவு காண வேண்டிய நிலையில் இல்லை. நாம் சிக்கனத்தை (thrift) வளர்த்துச் சேமிப்பைப் பெருக்கி, மூலதனப் பற்றுக்குறையை நீக்கவேண்டிய நிலைமையில் இருக்கின்றோம். சேமிப்புப் பெருகிப் பயனற்றுப் போகவில்லை. பொருளாதார வல்லுநர்கள் கீன்ஸ் அவர்களின் கருத்துகளைக் கொண்டு பொருளாதாரமாறுதல்களையும், வர்த்தகச் சகடத்தையும் விளக்க முயற்சி செய்து வருகின்றனர்.

அவர்கள் நாம் முன்பு குறிப்பிட்ட பெருக்கி(Multiplier) என்ற கருத்தைப் பயன்படுத்தி ஆராய்ச்சி செய்கின்றனர். மக்கள் தம் வருமானத்தின் 10 சதவீதத்தைச் சேமிக்கின்றனர் என்று நாம் கற்பனை செய்துகொள்வோம். அவர்கள் இதே சதவீதத்தைத் தொடர்ந்து சேமிப்பார்கள் என்றும், நாம் கற்பனை செய்து கொள்வோம். நாம் முன்பு கூறியபடி தொடர்ச்சியற்ற முறையில் முதலீடு பெருகினால், வருமானமும் சேமிப்பும் அதற்குத் தகுந்த முறையில் மிகுதியடையும். முதலீடு பெருகும்பொழுது ஒவ்வொரு படிவத்திலும் சேமிப்புத்தொகை வருமானத்தில் பத்தில் ஒரு பங்குக்கு சமமாக இருக்கும். ஒவ்வொரு படிவத்திலும் வருமானப் பெருக்கம் பூர்த்தியடைந்தபிறகு, சேமிப்புக்கும் முதலீட்டுக்கும் இடையே சமன்பாடு ஏற்படும். சேமிப்பையும் முதலீட்டையும் போல் பத்து மடங்கு வருமானம் பெருகும். ஒரு மில்லியன் பவுன் தொகையை முதலீடு செய்தால் அதனால் 10 மில்லியன் பவுன் மதிப்புள்ள வருமானம் ஏற்படும். முதலீடு வருமானத்தைப் பத்துமடங்கு அளவு பெருக்கும். சேமிப்புக்கும் வருமானத்திற்கும் இடையே உள்ள விகிதத்தைத் தலைகீழாக மாற்றினால் அதையே நாம் பெருக்கி என்று கூறுகின்றோம்.

**பெருக்கி என்ற சொல்லின் பொருளில் தெளிவின்மை:** நாம் மேலே கொடுத்த விளக்கத்தில் தெளிவு இல்லை. பெருக்கியின் சிக்கலான கூறுகளை நாம் தெளிவுபடுத்தவில்லை. வருமானம் உடனடியாக மிகுதியடைவதில்லை. முதலீட்டைத் தொடர்ந்து அதிகரிக்கும் வருமானம் சிறிது காலதாமதத்திற்குப் பிறகே படிப்படியாக மிகுதியடையும். ஒவ்வொரு படிவத்திலும் மிகுதியடையும் வருமானம் சமநிலையை அடையும். சிறிது காலத் தாமதத்திற்குப் பிறகே முதலீடு பெருகும். முதன் முதலில் மக்கள் செய்யும் செலவு வருமானத்தைச் சமநிலைக்கு உயர்த்தும். மக்கள் தம் வருமானத்தில் ஒரேவிகிதத்தைச் சேமிக்கின்றனரா? இந்த வினவுக்கு நாம் கீழ்க்கண்ட விடையைத் தவிர வேறு எதையும் கொடுக்கமுடியாது. தனியாட்கள் தம் வருமானத்தில் ஒரே விகிதத்தைச் சேமிக்கின்றனர் என்று சொல்ல முடியாது. சமுதாயத்தின் மொத்தச் சேமிப்பு எவ்வாறு இருந்த போதிலும் இவ்வுண்மை மாறாது. ஆனால் மக்கள் உபரியாகப் பெறும் வருமானம் முழுவதையும் அவர்கள் செலவு செய்வதில்லை. இவ்வுண்மையை கீன்ஸ் அடிப்படையாகக் கொண்டு கீன்ஸ் பெருக்கி என்ற கருத்தை விளக்கினார்.

வரைபடம்—12

**சேமிப்பு ஒரே நிலையில் இருக்கும் துய்ப்பில் ஏற்படும் மாறுதல்**



வரைபடம்—13
சேமிப்பு மிகுதியடையும்பொழுது துய்ப்பில் ஏற்படும் மாறுதல்




துய்ப்பு வருமானத்துடன் கொண்டிருக்கின்ற தொடர்பு: கீன்ஸ் வருமானத்திற்கும் துய்ப்புக்கும் உள்ள தொடர்பை அடிப்படை ஆதாரமாகக் கொண்டு பெருக்கியை விளக்குகின்ருர். கீழ்க்கண்ட சமன்பாடு இத்தொடர்பை எடுத்துக் காட்டுகின்றது:

$$C=F(Y)$$

இத் தொடர்பு மக்கள் துய்ப்பை எவ்வளவு தூரம் நாடுகின்றனர் (Propensity to consume) என்பதைக் காட்டுகின்றது. வருமானம் பெருகப் பெருக துய்ப்பின் அளவும் பெருகும். 12ஆம்

1 K என்பது வருமானத்தில் சேமிக்கப்படும் பகுதியை (பின்னத்தை)க் காட்டுகின்றது.

$$C=(1 K)Y$$

சராசரி நுகர்வு நாட்டம் $=\frac{C}{Y}=1-K$

இறுதிநிலை நுகர்வுநாட்டம் $=\frac{\delta C}{\delta Y}=1-K$

பெருக்கி$=\frac{\delta Y}{\delta Y-\delta C}=\frac{1}{1-(1-K)}=\frac{1}{K}$

படத்தில் தொடக்கப்புள்ளியிலிருந்து ஆரம்பித்துச் செல்லும் நேர் கோடு இத் தொடர்பைக் காட்டுகின்றது. மக்கள் உடனடியாகப் பயன்படுத்தும் துய்ப்புப் பொருள்களை வாங்கச் செலவு செய்யும் தொகை அவர்களுடைய வருமானத்தில் ஒரு விகிதமாக இருக்கும். இந்த விகிதத்தை சராசரி நுகர்வு நாட்டம் (Average propensity to consume) என்று கூறலாம். வருமானம் பெருகப் பெருக, மக்கள் தாம் பெறும் உபரி வருமானத்தில் ஒரு விகிதத்தை உடன்துய்ப்புப் பொருள்களை வாங்கப் பயன்படுத்துவார்கள். இந்த விகிதத்தை இறுதிநிலை நுகர்வு நாட்டம் (Marginal propensity to consume) என்று கூறலாம். சராசரி நுகர்வு நாட்டமும், இறுதிநிலை நுகர்வு நாட்டமும் சமமாக இருப்பதை 12ஆம் படம் காட்டுகின்றது. சாதாரணமாக இறுதிநிலை நுகர்வு நாட்டம் (Marginal propensity to consume) சராசரி நுகர்வு நாட்டத்தைவிடக் (Average propensity to consume) குறைவாகவே இருக்கும். ஏனெனில் செல்வர்கள் தம் வருமானத்தில் ஏழைகளைவிட அதிகமான தொகையைச் சேமிக்கின்றனர். மேலும் வருமானம் குறைந்துகொண்டே சென்றால் அது பூச்சியமாவதற்குமுன்பே, மக்கள் சேமிப்பைக் கைவிடுவர். ஆகையால் படத்தில் வருமானத்துடன் துய்ப்புக் கொண்டிருக்கும் தொடர்பைக் காட்டும் Y அச்சை (axis) மேலிருந்து வெட்டி மேலே செல்லவேண்டும். இவ்வுண்மைகளை 13 ஆம் படம் காட்டுகின்றது.

OT என்ற கோடு (இரு படங்களிலும்) நுகர்வும் வருமானமும் சமமாக இருக்கும் நிலையைக் காட்டுகின்றது. X அச்சிலிருந்து 45 டிகிரி அளவுள்ள கோணத்தில், தொடக்கப் புள்ளியிலிருந்து ஆரம்பிக்கும் இக்கோடு நேராக மேல் நோக்கிச் செல்வதை நாம் காணலாம். நுகர்வுத் தொடர்பு இக்கோட்டின் மேலே இருக்கும்பொழுது மக்கள் வருமானத்தைவிட மிகுதியான தொகையைச் செலவு செய்வர்; அது இக் கோட்டிற்குக் கீழாக இருக்கும்பொழுது மக்கள் வருமானத்தில் ஒரு பகுதியைச் செலவு செய்வர். 13ஆம் படத்தில் உள்ள இரு புள்ளிக் கோடுகளுக்கும் இடையே உள்ள கோணம் சராசரி நுகர்வு நாட்டத்திற்கும் இறுதிநிலை நுகர்வு நாட்டத்திற்கும் உள்ள வேறுபாட்டைக் காட்டுகின்றது. அதாவது வருமானம் பெருகும்பொழுது உபரிவருமானத்தில் அரைப் பகுதிக்கு மேற்பட்ட தொகையை மக்கள் சேமிப்பார்கள்.

14ஆம் படம், அமெரிக்காவில் 1929 முதல் 1958 வரை மக்களுடைய வருமானத்தையும் நுகர்வையும் காட்டுகின்றது. மாறுத விலைவாசியை அடிப்படையாகக்கொண்டு இப்படம் தயாரிக்கப் பெற்றுள்ளது. இப் படம் மொத்த நுகர்வுச் செலவை ஜ

காட்டவில்லை. அதை வருமானத்தின் விகிதமாகவே காட்டுகின்றது. இதே விகிதம் சேமிப்பு விகிதத்தையும் எடுத்துக் காட்டுகின்றது. உண்மை வருமானத்தை (Real income) அடிப்படையாகக் கொண்டு 14ஆம் படம் தயாரிக்கப்பெற்றுள்ளது. போருக்கு முன் இருந்த நிலையையும், போர்க்காலத்தில் எவ்வாறு சேமிப்பு

## வரைபடம்—14

### 1929-லிருந்து 1958 வரை




செலவு செய்யக்கூடிய தனிப்பட்டவர் வருமானம்
(ஆயிரம் மிலியன் டாலர்களில் **1935—39** ஆண்டு)
களில் நிலவிய விலைகளை அடிப்படையாகக் கொண்டுள்ளது.

(1929–52 Historical Statistics of the United States, 1789–1945, Tables A 117, A 142, A 143; 1952–1958 Statistical Abstract of the United States, 1956, Table 353, 1959 Table 395).

# 27. பணத்தின் மதிப்பில் ஏற்படும் மாறுதல்கள்

26ஆம் அதிகாரத்தில் வருமானம், உற்பத்தி முதலியவைகளில் ஏற்படும் மாறுதல்களை நாம் ஆராய்ச்சி செய்தோம். ஆனால் உற்பத்தியும் வருமானமும் மாறும்பொழுது விலைவாசியும் மாறும். ஆனால் விலைவாசியில் ஏற்படும் மாறுதல்களை நாம் இதுவரை கவனிக்கவில்லை. இந்த அதிகாரத்தில் வீக்க காலத்திலும், மந்த காலத்திலும் விலைகள் எவ்வாறு மாறுகின்றன என்பதை நாம் இங்குக் காண்போம்.

விலைவாசி மாறும்பொழுது பணத்தின் மதிப்பும் மாறும். விலைவாசி இரட்டித்தால் பணம் தன் மதிப்பில் அரைப் பகுதியை இழந்துவிடும். அதாவது பணம், வாங்கும் சக்தியில் பாதியை இழந்துவிடும். பணத்தின் மதிப்பும் விலைவாசியும் ஒரே பிரச்சினையின் இரு கோணங்கள் என்று கூறலாம்.

**செலாவணி ஏன் நிலையான மதிப்பைக் கொண்டிருக்கவேண்டும்**

செலாவணியின் (Currency) மதிப்பு மாறுவதால் பல தொல்லைகள் ஏற்படும். ஆனால் இந்த மாறுபாடுகளைச் சில சமயங்கள் நாம் தவிர்க்க முடியாது. அரசியலார் பின்பற்றும் கொள்கையே இந்த மாறுதல்களுக்குக் காரணமாக இருக்கலாம். சமுதாயத்தில் சில வகுப்பினர் விலைவாசி மாறுவதால் பயனடையலாம். விலையுயர்வு உற்பத்திப் பெருக்கத்திற்கு ஒரு தூண்டுதலையும் கொடுக்கலாம். அரசினர் விலைவாசிகளை ஓரளவு கட்டுப்படுத்தாவிடில் பொருளாதார அமைப்பே பாதிக்கப்படலாம். ஒவ்வொருவனும் பணத்தின் மதிப்பைக் கொண்டே தன் மொத்தச் செலவைக் கணக்கிடுகின்றான். வருமானம் செலவு முதலியவைகளையும் பணத்

1 ஒரு தனிப்பட்ட பொருளின் விலையை விலை என்றும், எல்லா விலைகளையும் விலைவாசி என்றும் குறிப்பிடலாம்.

வட்டமாகக் கூறமுடியாது. அதேபோல் முதலீடும் வருமானத்துடன் நிலையான தொடர்பைக் கொள்ளவில்லை. உற்பத்தியாளர்கள் செய்யும் முதலீட்டுக்குப் பல காரணங்கள் இருக்கின்றன. இக்காரணங்களை அறிந்த ஒருவன் விற்பனை மிகுதியடையும்பொழுது அதற்குத்தகுந்த முறையில் முதலீடும் பெருகும் என்று கூறமாட்டான். வருமானம் எப்படி சேமிப்புக்கு ஒரு தூண்டுதலைக் கொடுக்குமோ, அதைப்போல் சாதாரணமாக விற்பனையும் முதலீட்டுக்கு ஒரு தூண்டுதலைக் கொடுக்கும். ஆனால் விற்பனையைத் தவிர மற்றக் காரணங்களும் குறுகிய காலத்தில் முதலீட்டை பாதிக்கும். ஆகையால் விற்பனை பெருகும்பொழுது முதலீடு உடனடியாகப் பெருகாமல் இருக்கலாம்.

மொத்த முதலீடு ஒரு நாடு உற்பத்தி செய்யும் சக்தியை நிர்ணயம் செய்கின்றது. இந்தச் சந்தர்ப்பத்தில் நாம் பயன்படுத்தும் சக்தி என்ற சொல் நெகிழ்ச்சியுடையதாக இருக்கின்றது. ஏனெனில் ஒரு நாடு மூலதனத்தையும், உற்பத்திச் சாதனங்களையும் முன்பைவிட அதிகமாகப் பயன்படுத்தி உற்பத்தியைப் பெருக்கலாம். ஆனால் உபரியாக உற்பத்திச் சாதனங்களை வைத்துக் கொள்ளாவிடில் ஒரு நாடு விரைவில் முதலீட்டைப் பெருக்க வேண்டிய நிலைமை ஏற்படும். முதலாளிகள் உற்பத்திச் சாதனங்களை முற்றிலும் பயன்படுத்தாமல் இருக்கும்பொழுதுகூட அவர்கள் முதலீட்டைப் பெருக்குவதற்காக வகுத்த திட்டங்களைக் கைவிடாமல் செயற்படுத்தலாம். முதலாளிகள் முதலீட்டைப் பெருக்க நீண்ட காலத் திட்டங்களை வகுக்கின்றனர். சாதாரணமாக மக்களுடைய தேவை மாறினாலும் சில நிறுவனங்கள் இத் திட்டங்களை கைவிடாமல் இருக்கலாம். வேகவிசை விதி (The accelerator principle) இந்த நிறுவனங்களுக்குப் பொருந்தாது. விற்பனை மாறும்பொழுது சில நிறுவனங்கள் முதலீட்டுத் திட்டத்தையும் மாற்றலாம். ஆனால் அவை தம் திட்டங்களைச் சிறிது காலதாமதமான பிறகே மாற்றலாம். விற்பனையில் ஏற்பட்ட மாறுதல் தாற்காலிகமானதல்ல, நிரந்தரமானது என்ற நம்பிக்கை ஏற்பட்ட பிறகே முதலாளிகள் தம் முதலீட்டைப் பெருக்க முடிவுசெய்யலாம். புதிய இயந்திரங்களை வாங்குவதற்கு ஏற்பாடு செய்த பிறகோ, அல்லது பழைய திட்டங்கள் வெற்றிகரமாகச் செயல்படுத்தப்பட்ட பிறகோ, முதலாளிகள் மேலும் முதலீடு செய்ய முடிவுசெய்யலாம்.

மேலும், வருமானம் குறிப்பிடத்தக்க அளவு குறைந்தால் முதலும் உடனடியாகக் குறையாது. விற்பனை மிகவும் குறையும்பொழுது புதிய முதலீடு ஏற்படாமல் இருக்கலாம். ஆனால் உற்பத்தி செய்யும் சக்தி விற்பனை எவ்வளவு குறைகின்றதோ அதே அளவு குறையாது.

பொருளாதாரத்தின் நிலையற்ற தன்மையைச் சித்தரிக்கும் உதாரணம்: மேலே குறிப்பிட்டவைகளை நாம் பொருட்படுத்தாமல் வேகவிசையும் பெருக்கியும் நன்கு இயங்குகின்றன என்று கற்பனை செய்துகொள்வோம். கீழ்க்கண்ட இரு சமன்பாடுகளையும் நாம் எழுதலாம்.

$$I_t = KY_t$$

$$I_t = V(y_t - y_t - 1).$$

முதலீடு வருமானத்துடனும், வருமானப் பெருக்க வீதத்துடனும் தொடர்புகொண்டிருக்கின்றது. இதைப் பெருக்கியும் வேகவிசையும் எடுத்துக்காட்டுகின்றன. இதனால் பொருளாதாரம் நிலையற்றதாக இருக்கின்றது. முதலீடு பெருகுவதால் வருமானம் மட்டுமல்லாமல் முதலீடும் மேலும் அதிகரிக்கின்றது. ஏனெனில் உற்பத்தியும் விற்பனையும் பெருகும்பொழுது நாம் மேலே கூறியபடி முதலீடு மேலும் மிகுதியடையும். ஆகையால் பொருளாதார வீக்கமோ அல்லது மந்தமோ ஏற்படும்பொழுது உற்பத்தியும் வருமானமும் பெருகிக்கொண்டே செல்வதாகவோ அல்லதுகுறைந்துகொண்டே செல்வதாகவோ தோற்றமளிக்கலாம். ஆனால் முதலீடு ஓரளவுக்கு மேல் குறையாது. ஆகையால் வருமானமும் ஒரு குறைந்தபட்ச எல்லையைக் கடந்துசெல்ல முடியாது. வருமானம் இவ்வாறு குறையும்பொழுது உற்பத்தியும் குறையும், முதலீடும் குறையும். அதாவது மூலதனத்திற்கும் உற்பத்திக்கும் உள்ள சாதாரண விகிதம் நிலைநாட்டப்படும். முதலீடு இதே நிலையில் நீண்ட நாட்கள் இருக்காது. குறைந்தபட்ச எல்லையை அடைந்தபிறகு முதலீடு மீண்டும் பெருக ஆரம்பிக்கும். இதைத் தொடர்ந்து பெருக்கியும் வேகவிசையும் இயங்கும். குறைந்தபட்ச எல்லையில் இருக்கும் உற்பத்தி மிகுதியடையும்; அது உயர்ந்தபட்ச எல்லையை அடையும். உற்பத்தி உயர்ந்தபட்ச எல்லையை அடைந்ததும், நாட்டில் வேலை நிறைவு (Full employment) ஏற்படும். முதலீடு மேலும் பெருகினால் வருமானம் மிகுதியடையாது; அது மிகுதியடைந்தாலும் மிக்க குறைவாகவே அதிகரிக்கும். இந்த நிலையில் முதலீடு குறையும். பெருக்கி இயங்குவதால் பொருளாதார மந்தம் ஏற்படும்.

மேலே நாம் விளக்கிய உதாரணத்தில் சாதாரணமாக நாம் பொருளாதாரத்தில் காணும் ஏற்றத் தாழ்வுகளைவிட அதிகமான மாறுதல்களைக் காணலாம். ஏனெனில் மந்தம் ஏற்படும்பொழுது எச்ச முதலீடு (net investment) பூச்சியமாகிவிடுகின்றது. ஆனால் சாதாரணமாக முதலீடு இந்த நிலையை அடைவதில்லை. ஏனெனில் உற்பத்தியும் வருமானமும் குறையும்பொழுது முதலீடு உடனடி

யாகக் குறைவதில்லை. 1930ஆம் ஆண்டு தோன்றிய கடுமையான மந்தகாலத்தில் மட்டும் முதலீடு இந்த நிலையை அடைந்தது. ஆனால் சாதாரணமாக இவ்வளவு கடுமையான மந்தம் ஏற்படுவதில்லை.

இந்த நூலைப் படிப்பவர்கள் நாம் இதுவரை கூறிய கருத்துக்களை விரிவுபடுத்தலாம், அல்லது மாற்றி வெளியிடலாம். வர்த்தகச் சகடம் பற்றிய நூல்களில் அவர்கள் பல விவரங்களைக் காணலாம். ஆனால் அந்த விவரங்களை நாம் இங்கு வெளியிடவேண்டிய தேவை இல்லை. இதற்கு இந்த நூலில் இடமும் இல்லை. கணக்கியலார் வேகவிசையையும் பெருக்கியையும் கொண்டு வர்த்தகச் சகடத்தைச் சித்தரித்துக் காட்டலாம். ஆனால் சாதாரணமாக இவை தவறாமல் இயங்கவில்லை என்பதை சாதாரண மக்கள் அறிவார்கள். ஆனால் பெருக்கி, வேகவிசை என்ற இரு கருத்துக்களும் பொருளாதாரத்தின் நிலையற்ற தன்மையை எடுத்துக்காட்டுகின்றன. கணக்கியலார் கொடுக்கும் உதாரணங்கள் உண்மையைச் சரிவர சித்தரிக்கா. ஆனால் பொருளாதாரத்தில் ஏற்படும் மாறுதல்களுக்குக் காரணங்கள் யாவை என்பதை அவை எடுத்துக்காட்டுகின்றன.

1(R.C.O. Mathews) ஆர். சி. ஓ. மாத்யூஸ் எழுதிய "*The Trade Cycle*" Cambridge, 1959). என்ற நூலில் நாம் பயனுள்ள குறிப்பைக் காணலாம்.

# 27. பணத்தின் மதிப்பில் ஏற்படும் மாறுதல்கள்

26ஆம் அதிகாரத்தில் வருமானம், உற்பத்தி முதலியவைகளில் ஏற்படும் மாறுதல்களை நாம் ஆராய்ச்சி செய்தோம். ஆனால் உற்பத்தியும் வருமானமும் மாறும்பொழுது விலைவாசியும் மாறும். ஆனால் விலைவாசியில் ஏற்படும் மாறுதல்களை நாம் இதுவரை கவனிக்கவில்லை. இந்த அதிகாரத்தில் வீக்க காலத்திலும், மந்த காலத்திலும் விலைகள் எவ்வாறு மாறுகின்றன என்பதை நாம் இங்குக் காண்போம்.

விலைவாசி மாறும்பொழுது பணத்தின் மதிப்பும் மாறும். விலைவாசி இரட்டித்தால் பணம் தன் மதிப்பில் அரைப் பகுதியை இழந்துவிடும். அதாவது பணம், வாங்கும் சக்தியில் பாதியை இழந்துவிடும். பணத்தின் மதிப்பும் விலைவாசியும் ஒரே பிரச்சினையின் இரு கோணங்கள் என்று கூறலாம்.

### செலாவணி ஏன் நிலையான மதிப்பைக் கொண்டிருக்கவேண்டும்

செலாவணியின் (Currency) மதிப்பு மாறுவதால் பல தொல்லைகள் ஏற்படும். ஆனால் இந்த மாறுபாடுகளைச் சில சமயங்கள் நாம் தவிர்க்க முடியாது. அரசியலார் பின்பற்றும் கொள்கையே இந்த மாறுதல்களுக்குக் காரணமாக இருக்கலாம். சமுதாயத்தில் சில வகுப்பினர் விலைவாசி மாறுவதால் பயனடையலாம். விலையுயர்வு உற்பத்திப் பெருக்கத்திற்கு ஒரு தூண்டுதலையும் கொடுக்கலாம். அரசினர் விலைவாசிகளை ஓரளவு கட்டுப்படுத்தாவிடில் பொருளாதார அமைப்பே பாதிக்கப்படலாம். ஒவ்வொருவனும் பணத்தின் மதிப்பைக் கொண்டே தன் மொத்தச் செலவைக் கணக்கிடுகின்றான். வருமானம் செலவு முதலியவைகளையும் பணத்

1 ஒரு தனிப்பட்ட பொருளின் விலையை விலை என்றும், எல்லா விலைகளையும் விலைவாசி என்றும் குறிப்பிடலாம்.

தின் மூலமே நாம் கணக்கிடுகிறோம். மக்கள் தம் வருமானத்தில் ஒரு தொகையைச் செலவு செய்யவேண்டும் என்றும், எஞ்சிய தொகையைச் சேமிக்கவேண்டும் என்றும் முடிவு செய்கின்றனர். வெவ்வேறு உற்பத்திக் காரணிகளைப் பயன்படுத்துவதால் அடக்கச் செலவு எவ்வாறு மாறும் என்பதை உற்பத்தியாளர்கள் கணக்கிட வேண்டும். இந்தக் கணக்குகளுக்கெல்லாம் பணம் நிலையான மதிப்பைக் கொண்டிருக்கவேண்டும். பணத்தின் மதிப்பு அடிக்கடி மாறினால் நாம் உற்பத்தி, செலவு, அடக்கச்செலவு முதலியவைகளை எளிதில் மதிப்பிடமுடியாது. பணத்தின் மதிப்புக் குறுகிய எல்லைகளுக்குள் மாறினால்கூட அதனால் தொழில் பாதிக்கப்படும், உற்பத்தியாளர்கள் எதிர்காலத்திய போக்குகளை எளிதில் அறிய முடியாது. பணத்தின் மதிப்பு மாறுவதால் அவர்களுடைய மதிப்பீடுகள் தவறுகிவிடும். விலைகள் உயரும்பொழுது உற்பத்தியாளர்கள் எதிர்பார்த்ததைவிட மிகுதியான இலாபத்தைப் பெறுவார்கள். பணத்தின் மதிப்பு உயரும்பொழுது, அதாவது விலைகள் குறையும் பொழுது அவர்கள் எதிர்பாராத முறையில் பணத்தை இழக்க நேரிடும். பணத்தின் மதிப்பு மாறும்பொழுது அவர்கள் இலாபத்தையோ, அல்லது இழப்பையோ எதிர்பார்க்கமுடியாது. சாதாரணமாகவே திட்டம் வகுத்தல் கடினமான வேலையாகும். பணத்தின் மதிப்பு மாறுவதால் அது மேலும் கடினமாகும். விலைவாசி நிலையாக இருந்தால், பொருளாதாரத்தில் மாறுதல்களும் ஏற்படா. அது சிறந்த முறையில் இயங்கும்.

**விலைகள் வெகு விரைவில் மாறும் காலம்**

பணத்தின் மதிப்பு மாறும் தன்மையைக் கொண்டிருக்கின்றது என்பதை இரு போர்களும் எடுத்துக்காட்டின. பல நாடுகளில் கடந்த 30 ஆண்டுகளில் விலைகள் உயர்ந்தன. போர்க் காலத்திலும் அதற்குப் பின்பும் விலைகள் மிகவும் விரைவில் உயர்ந்தன. ஆனால் 1920 முதல் 1932 வரை விலைகள் குறைந்ததை நாம் இன்றும் மறக்கமுடியாது. ஆனால் மீண்டும் விலைவாசி தாழ்வடையலாம் என்று நாம் கூறமுடியாது. பணவீக்கம் (inflation) எல்லா நாடுகளிலும் ஒரேவிதமாக வளர்ச்சியடையவில்லை. 1946-ல் பெங்கோ என்ற நாணயம் 300,000 மிலியன், மிலியன், மிலியன் மடங்கு பெருகியது. ஆனால் எந்த நாட்டிலும் இந்த நிலை ஏற்படவில்லை. 1960ஆம் ஆண்டு எந்த நாட்டிலும் வாழ்க்கைச் செலவு போருக்குமுன் இருந்ததைப்போல் இரண்டு மடங்குக்குக் குறைவாகவே இல்லை. 19ஆம் நூற்றுண்டில் நடந்த நிகழ்ச்சிகளுடன் போருக்குப்பின் ஏற்பட்ட நிகழ்ச்சிகளை நாம் ஒப்பிடும்பொழுது, இதுவரை நாம் காணுத அளவு பணத்தின் மதிப்பு, போருக்குப்பின் மாறியது என்பதை மறுக்கமுடியாது. 1914ஆம் ஆண்டுக்குமுன்

90 ஆண்டுகளில் பணத்தின் மதிப்பு 20 அல்லது 30 சதவீதத்திற்கு மேல் மாறவில்லை. நெப்போலியன் காலத்துப் போர்களுக்குப்பின் (Napoleonic wars) 1896 வரை விலைகள் குறைந்தன. ஆனால் 1850க்குப்பின் ஒரு குறுகிய காலத்தில் மட்டும் விலைகள் உயர்ந்தன. 1896க்குப்பின் மீண்டும் விலைகள் உயர்ந்தன. முன்பு விலைவாசியில் ஏற்பட்ட உயர்வு அதிகமாக இருந்தது. 1914-ல் போர் தொடங்கியதால் பணவீக்கம் ஏற்பட்டது (1939-லும் இதே காரணம் பணவீக்கத்தை ஏற்படுத்தியது). அமைதி நிலவிய காலத்தில் பணத்தின் மதிப்பில் ஏற்பட்ட மாறுதல்கள் குறுகிய எல்லைகளுக்குட்பட்டிருந்தன.

விலைவாசி தாமதமாக மாறும்பொழுது, அது (மாறுதல்) நமக்கு புலப்படாது. ஏனெனில் சில விலைகள் குறையும்பொழுது மற்றவை உயரலாம். சில குறிப்பிட்ட விலைகள் மாறுவதைக்கண்ட பிறகு நாம் விலைவாசியின் போக்கைத் தவறாகப் புரிந்துகொள்ளலாம். இந்த மாறுதல்களை நாம் சரியான முறையில் அளக்கவேண்டும். விலைகளில் ஏற்படும் சராசரி மாறுதல்களைக் குறியீட்டெண்கள் (Index numbers) மூலம் நாம் அறிந்து கொள்ளலாம். இவ்வதிகாரத்தின் பிற்சேர்க்கையில் குறியீட்டெண்ணை எவ்வாறு தயார் செய்யலாம் என்பதைக் காணலாம்.

பல நோக்கங்களுடனும், பல வகுப்பினருடைய பொருளாதார நிலையை அறியவும் நாம் குறியீட்டெண்களைத் தயார் செய்யலாம். பணம் பல்வேறு வகுப்பினருக்குப் பல மதிப்புக்களைக் கொண்டிருக்கலாம். பிற்சேர்க்கையில் கொடுக்கப்பெற்றுள்ள குறியீட்டெண் வாழ்க்கைச் செலவைக் கணக்கிடுகின்றது. பணத்தின் மதிப்பு மாறுவதால் துய்ப்போருடைய நிலைமை எவ்வாறு மாறுகின்றது என்பதை வாழ்க்கைச் செலவுக் குறியீட்டெண் (Cost of living index) எடுத்துக் காட்டுகின்றது. அதாவது துய்ப்போர் வாங்கும் பொருள்களின் விலைகள் எவ்வளவு உயர்ந்து விட்டன என்பதை வாழ்க்கைச்செலவுக் குறியீட்டெண் எடுத்துக்காட்டுகின்றது. இத்தகைய பொருள்களைத் தவிர, கச்சாப் பொருள்கள் முற்றிலும் உற்பத்தி செய்யப்படாத பொருள்கள் (Semi - manufactured goods) இறக்குமதிப் பொருள்கள், பங்குமாற்று நிலையங்களில் (Stock exchanges) விற்பனையாகும் பத்திரங்கள் (Securities) முதலிய பொருள்களையும் மக்கள் பணத்தைக் கொடுத்து வாங்குகிறார்கள். துய்ப்போர் வாங்கும் பொருள்களின் விலைகள் ஒருவகையில் மாறலாம். மேலே நாம் குறிப்பிட்ட பொருள்களின் விலைகள் துய்ப்போர் பொருள்களின் விலைகளைவிட மிகுதியாகவோ அல்லது குறைவாகவோ மாறலாம். துய்ப்போர் வாங்கும் பொருள்கள் ஒரு விலை

வாசியையும் (Price level), மற்றப்பொருள்கள் வேறு விலைவாசியையும் கொண்டிருக்கலாம். மொத்த விலைவாசி (Wholesale price) ஏற்றுமதிப் பொருள்களின் விலைவாசி (Export price level), மூலதனப்பொருள்களின் விலைவாசி (Price level of capital goods) பத்திரங்களின் விலைவாசி (Price level of bonds), கூலிகளின் விலைவாசி (Price level of wages) முதலிய பல விலைவாசிகள் இருக்கின்றன.

மேலே குறிப்பிட்ட எல்லா விலைவாசிகளும் ஒரே வீதத்தில் மாறவேண்டும் என்ற கட்டாயம் இல்லை. விலைகள் பொதுவாக உயரும்பொழுதும் குறையும்பொழுதும் சில விலைகள் மற்ற விலைகளை விட அதிகமாக உயரும் அல்லது தாழ்வடையும். மொத்த விலைகள் (Wholesale prices) சில்லறை விலைகளைவிட அதிகமாக மாறலாம். விலைகள் மாறும்பொழுது தொழிலதிபர்கள் பெறும் இலாபமும், பல விலைகள் கொண்டுள்ள தொடர்புகளும் பாதிக்கப்படுகின்றன. விலைவாசி மாறுவதால் உற்பத்தி எவ்வாறு பாதிக்கப்படுகின்றது என்பதைக் குறியீட்டெண்களைக் (indices) கொண்டு நாம் கணக்கிடலாம். பல்வேறு விலைகளுக்கிடையே சாதாரணமாக இருக்கும் வேற்றுமை எவ்வாறு பாதிக்கப்பட்டிருக்கின்றது என்பதை நாம் இரு குறியீட்டெண்களை ஒப்பிட்டு அறியலாம். இந்த வேற்றுமை எவ்வாறு பாதிக்கப்பட்டிருக்கின்றது என்பதையும் நாம் அறிந்து கொள்ளலாம். ஏற்றுமதிக் குறியீட்டெண்ணையும் (Export index) இறக்குமதிக் குறியீட்டெண்ணையும் (Import index) ஒப்பிட்டுப் பார்த்தால் ஒருநாடு ஏற்றுமதி மூலம் செலுத்தும் தொகைக்குச் சமமான தொகையை இறக்குமதி மூலம் பெறுகின்றதா என்பது புலனாகும். பொறிசெய்பொருள்களுடைய (Manufactured goods) குறியீட்டெண்ணையும், விவசாயப்பொருள்களுடைய குறியீட்டெண்ணையும் ஒப்பிட்டுப்பார்த்தால், விலைவாசி குறைவதால் விவசாயிகள் எவ்வாறு மற்றவகுப்பினரைவிட அதிகமாகப்பாதிக்கப்பட்டிருக்கின்றனர் என்பதை நாம் அறியலாம். விலைகளின் போக்கை எடுத்துக்காட்டும் குறியீட்டெண்கள், மந்தகாலத்திலிருந்து எப்படி நாடு மீட்சியடைகின்றது என்பதை விளக்குகின்றது. விலைகளில் ஏற்படும் மாறுதல்களை நாம் எளிதில் புரிந்து கொண்டு, அவைகளைக் கட்டுப்பாடு செய்வதற்கும் குறியீட்டெண்கள் உதவி செய்கின்றன.

**பணத்தின் மதிப்பு மாறுவதால் ஏற்படும் விளைவுகள்**

எல்லா விலைகளும் ஒரே வீதத்தில் மாறுவதில்லை. ஆகையால் பணத்தின் மதிப்பு மாறுவதால் எதிர்பார்த்ததைவிட மிகுதியான இலாபத்தை அடைவார்கள். சிலர் எதிர்பாரத வகையில் பணத்தை இழப்பர். சிலர் விற்பனை செய்யும் பொருள்களின் விலைகளைவிட வாங்கும் பொருள்களின் விலைகள் விரைவில் உயரும்.

நாட்டில் ஏற்படும் செலாவணிப் பெருக்கத்திற்குத் தகுந்தவாறு சிலர் பெறும் வருமானம் மிகுதியடையாமல் இருக்கலாம். பலர் இத்தகைய மாறுதல்களை வெறுப்பர். இந்த மாறுதல்கள் உற்பத்தியையும், பங்கீட்டையும் (Distribution) பாதிக்கும்.

**பங்கீட்டில் ஏற்படும் மாறுதல்கள்**

மக்கள் பெறும் வருமானத்தை மார்க்கெட்டில் நிலவும் விலைகளும் ஒப்பந்தங்களும் நிர்ணயம் செய்கின்றன. தொழிலாளர்கள் அவ்வப்போது செய்யும் பேரங்களே அவர்களுடைய கூலிகளை நிர்ணயம் செய்கின்றன. ஆகையால் அவர்கள் தம் கூலிகளை உடனடியாக உயர்த்த முடியாது. பத்திர முதலீடு (Investment in securities) தவணை காலத்திற்குத் தகுந்த வீதத்தைக் கொடுக்கும். நிலம், வீடு முதலியவைகள் மூலம் மக்கள் பெறும் வருமானமும் அடிக்கடி மாறாது. ஏனெனில் வீட்டு வாடகையை, மக்கள் ஒப்பந்தங்கள் மூலம் நிர்ணயம் செய்கின்றனர். ஆனால் உற்பத்தியாளர்கள் பெறும் வருமானம் மட்டும் விலைவாசி உயரும்பொழுது மிகுதியடையும்.

விலைவாசி உயரும்பொழுது கடன் கொடுத்தவர்கள் தம் பணத்தில் ஒருபகுதியை இழப்பார்கள். அவர்கள் இழக்கும் தொகையைக் கடன் வாங்கியவர்கள் பெறுவார்கள். விலைவாசி தாழ்வடையும்பொழுது கடன் வாங்கியவர்கள் இழக்கும் தொகையைக் கடன் கொடுத்தவர்கள் பெறுவார்கள். விலைகள் உயரும் பொழுது வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுப்பது மிகவும் எளியதாக இருக்கும். அப்பொழுது கடன்சுமை குறைந்து விடும். விலைகள் தாழ்வடையும்பொழுது, அதாவது பணத்தின் மதிப்பு உயரும்பொழுது கடன் சுமை அதிகரித்துவிடும். அரசினரே நாட்டில் மற்றவர்களைவிட மிகுதியான தொகையைக் கடனாகப்பெறுகின்றனர். ஆகையால் பணவீக்கத்தை அரசினர் விரும்புவது இயற்கையே. கடன் சுமையைக் குறைப்பதற்காகவே உலகநாடுகள் சென்ற 25 ஆண்டுகளாகப் பணவீக்கத்தை ஏற்படுத்தின என்று நாம் கூறமுடியாது. ஆனால் பணவீக்கத்தின் விளைவாக அரசாங்கத்தின் கடன் சுமை கணிசமான அளவு குறைந்திருக்கின்றது. கடன் கொடுத்த மக்கள் இதனால் பாதிக்கப்பட்டனர். இங்கிலாந்தில் 1935 முதல் 1960 வரை அரசினருடைய கடன் நான்கு மடங்கு பெருகியது. ஆனால் பணவீக்கத்தின் காரணமாக தேசீய வருமானம் கடன் சுமையைவிட விரைவில் பெருகியது. போருக்குப்பின் தேசீய வரவுசெலவுத் திட்டத்தில் (Budget) பொதுக்கடன் (Public debt) முக்கியமான இடத்தைப் பெறவில்லை.

தனியார் துறையில் இன்சூரன்சுக் கம்பெனிகளும் (Insurance companies), வாணிகப் பாங்குகளுமே (Commercial banks) கடன் வாங்கிய நிலையங்களுள் மிகவும் முக்கியமானவையாக இருந்தன. அவை கடன் வாங்கியதோடு மட்டும் அல்லாமல், பலருக்குக் கடன் கொடுத்ததால் அவைகளுடைய நிலையில் மாறுதல் ஏற்பட வில்லை. பணத்தின் மதிப்பு மாறுவதால் ஏற்படும் விளைவுகளை அவை சரிக்கட்ட முடிந்தது. தொழில் நிறுவனங்களும், விற்பனை நிறுவனங்களும் இதே நிலையில் இருக்கின்றன. தொழிலுக்கு வேண்டிய நிதியை அவை கடன் மூலம் பெறுவதால் விலையுயர்வு அவைகளுக்குச் சிறந்த பயனைக் கொடுக்கும். ஆனால் அவை கணிசமான தொகையை ரொக்க (Liquid) நிதியாக (Reserves) வைத்துக்கொள்வதால் மேலே குறிப்பிட்ட பயன் முழுவதையும் அவர்கள் அடையமுடியாது. ஏனெனில் விலைகள் உயர்வதால் அவைகள் கொண்டிருக்கும் ரொக்கத் தொகையின் மதிப்பு குறை யும். ஒரு குறிப்பிட்ட வட்டி வீதத்தைக் கொடுக்கும் பத்திரங்களை வாங்கியவர்கள் விலையுயர்வால் மிகவும் பாதிக்கப்படுவார்கள். இவர்கள் முன்பு செய்துகொண்ட ஒப்பந்தத்தை மாற்றியமைத்து வட்டி வீதத்தை உயர்த்தமுடியாது. வீட்டை அடைமானமாக வைத்துக் கடன் வாங்கியவர்கள் விலையுயர்வால் நலனை அடைவார் கள். பணவீக்கம் (Inflation) கடன் வாங்கியவர்களுக்குச் சிறந்த பயனையும், பணச்சுருக்கம் (Deflation) கடன் கொடுத்தவர்களுக்கு நல்ல பயனையும் கொடுக்கின்றது. விலைகள் உயரும்பொழுது ஒரு வன் திருப்பிப் பெறவேண்டிய கடன் தொகையைவிட, மற்றவர் களுக்குக் கொடுக்கவேண்டிய தொகை மிகுதியாக இருந்தால் விலை யுயர்வு அவனுக்குச் சிறந்த பயனைக் கொடுக்கும். மற்றவர்கள் இழக்கும் தொகையை அவன் அடைகிறான்.

சில விலைகள் மற்ற விலைகளைவிட விரைவில் மாறுவதால், சமு தாயத்தில் சிலருடைய வருமானம் குறைகின்றது. ஆனால் வேறு சிலருடைய வருமானம் மிகுதியடைகின்றது. விலைகளில் ஏற்படும் மாறுதல்கள் மறையும் வரை மேற்கூறிய விளைவும் நாட்டில் நில வும். வாரம் (Rent), வாடகை முதலிய வருமானங்களை உயர்த்தமுடி யாது. ஆனால் மற்ற விலைகள் குறையும்பொழுது இவைகளை நிலச் சுவான்தார்கள் மறுக்கலாம். மற்றப் பொருள்களின் விலைகள் உயரும்பொழுது கூலிகள் உடனடியாக உயரா. ஏனெனில் தொழி லாளர்கள் உற்பத்தியாளர்களுடன் பேரம் செய்தபிறகே கூலிகள் உயரும். மற்ற விலைகள் தாழ்வடையும் பொழுது முதலாளிகள் கூலி களை எளிதில் குறைக்க முடியாது. விலைவாசி மாறும்பொழுது சில விலைகள் மற்ற விலைகளைவிடத் தாமதமாக மாறுவதால் சிலருடைய வருமானம் அதிகரிக்கின்றது, மற்றவர்களுடைய வருமானம் குறை

கின்றது. பணவீக்க காலத்திலும், பணச்சுருக்க காலத்திலும் நிலச் சுவான்தார்களுக்கும், நிலத்தைச் சாகுபடி செய்வோருக்கும் இடையே வருமானமாற்றம் (Transfer of income) ஏற்படுவதை நாம் கண்கூடாகக் காணலாம். ஆனால் பணத்தின் மதிப்பு மாறுவதால் முதலாளிகளுக்கும் தொழிலாளர்களுக்கும் இடையே இத்தகைய வருமானமாற்றம் ஏற்படுகின்றதா என்பதைப்பற்றி நாம் ஒன்றும் திட்டவட்டமாகச் சொல்லமுடியாது. போர்க்காலத்தில் அரசாங்கத்தின் செலவு மிகுதியடையும் பொழுது இவ்வித மாறுதல்கள் ஏற்படுவது இயற்கை. சில சமயங்களில் இலாபம் ஒரே நிலையில் இருக்கும். கூலிகளும் மற்ற விலைகளைப் போலவே உயரலாம். உற்பத்தியாளர்களிடையே ஏற்படும் போட்டியோ, அல்லது தொழிலாளர்கள் சங்கங்களுடைய (Trade unions) போட்டியோ இதற்குக் காரணமாக இருக்கலாம். பணச்சுருக்க காலத்தில் கூலிகள் உடனடியாகக் குறையாததால் விலைகள் தாழ்வடைவதற்குத் தாமதமாகலாம். பணச்சுருக்க காலத்தில் விவசாயப் பொருள்களுடைய விலைகள் விரைவில் குறையும். பணவீக்க காலத்தில் அவை விரைவில் உயரும். ஆகையால் விலைகள் மாறுவதால் விவசாயிகள் வருமானம் பாதிக்கப்படும். விவசாயப் பொருள்களை மிகுதியான அளவில் ஏற்றுமதி செய்யும் நாடுகள் இதனால் பாதிக்கப்படும்.

**உற்பத்தியில் ஏற்படும் மாறுதல்கள்**

விலைவாசி உயரும்பொழுது, உற்பத்தியும் விற்பனையும் மிகுதியடையும். இதன் விளைவாக இலாபம் மிகுதியடையும். இது உற்பத்திக்கு மேலும் ஒரு தூண்டுதலைக் கொடுக்கின்றது. நாட்டில் வேலை நிறைவு ஏற்படும்வரைதான் உற்பத்தியும் பெருகும்; வேலை நிறைவு ஏற்பட்ட பிறகு உற்பத்தி மிகுதியடையாது. ஆனால் குறைவான அளவில் பணவீக்கம் இருந்தால் வேலையின்மை ஏற்படாமல்இருக்க ஏற்பாடு செய்யலாம். விலைவாசி குறைந்தால் வேலையின்மை (Unemployment) ஏற்படும். விலைவாசி உச்சநிலையில் இருப்பதால் வேலை நிறைவு தொடர்ந்து கட்டாயம் நீடிக்கும் என்று நாம் சொல்லமுடியாது. ஏனெனில் உற்பத்தியாளர்கள் எளிதில் இலாபம் பெறும்பொழுது, சாதாரணமாக உற்பத்திமுறையைச் சீர்திருத்த மாட்டார்கள்; உற்பத்தியின் அமைப்பையும் மாற்றியமைக்க மாட்டார்கள். விலைகள் வெகு விரைவில் உயர்ந்தால் வேலை வாய்ப்புக்கள் உடனடியாக மிகுதியடையா. அவை குறைந்தாலும் குறையலாம்.

விலைகள் குறையும்பொழுது அடக்கச் செலவும் குறையாவிடில் இலாபமும் உற்பத்தியும் குறையும். அடக்கச் செலவை விற்பனைத் தொகைக்குச் சமமாக்க விரும்பும் முதலாளிகள் உற்பத்தியைக்

குறைப்பார்கள். இதனால் ஏற்படும் தொல்லைகளில் ஒருபகுதியைத் தொழிலாளர்கள் ஏற்றுக்கொள்கின்றனர். அவர்களுடைய வேலை நேரம் குறையும், அல்லது சிலர் வேலையைஇழப்பார்கள். மொத்தப் பொருளுற்பத்தி குறையும். ஆகையால் பணச்சுருக்கம் (Deflation) மக்களுக்குப் பல தொல்லைகளைக் கொடுக்கும். ஆனால் கட்டுக் கடங்காத பணவீக்கம் பணச்சுருக்கத்தைவிடக் கடுமையான விளைவுகளை ஏற்படுத்தும். வரையற்ற பணவீக்கம் சேமிப்பைப் பாதிக்கும். சில வகுப்பினரைக் கடுமையாகத் தாக்கும். ஆனால் பணச்சுருக்கம் வேலையில்லாத் திண்டாட்டத்தை ஏற்படுத்துவ தோடு மட்டும் அல்லாமல் உற்பத்தியையும் குறைக்கும், தொழில் கள் எல்லாம் நலிவுறும்; மேலும் நாட்டின் உற்பத்திச் சாதனங்கள் முற்றிலும் பயன்படுத்தப்படா.

விலைவாசியில் ஏன் மாறுதல்கள் ஏற்படுகின்றன? விலைகள் விரைவில் உயரும்பொழுது உற்பத்தியாளர்கள் அதிக இலாபம் அடைகின்றனர். ஆனால் மிகுதியான இலாபம் பெறவேண்டும் என்ற நோக்கத்துடன் உற்பத்தியாளர்கள் விலைகளை உயர்த்துகின் றனர் என்று நாம் கருதக்கூடாது. விலைகள் உயர்வதால் முதலாளி கள் அதிக இலாபம் ஈட்டுகின்றனர். இவ்வுண்மை விலைகள் குறை யும் பொழுது புலனாகின்றது. விலைகள் தாழ்வடையும் பொழுது இலாபம் குறையும். விலைகளை முதலாளிகள் வேண்டுமென்று குறைப்பதில்லை. உற்பத்தி குறைவதால் பொருள்கள் வேண்டிய அளவு கிடைப்பதில்லை. ஆகையால் அவைகளுடைய விலைகள் உயரும் என்று சிலர் கருதலாம். போர்க்காலத்தில் உணவுப் பொருள்களின் இறக்குமதி குறைந்தது. தொழிலுற்பத்திக்கு வேண்டிய தொழிலாளர்கள் கிடைக்கவில்லை. ஆகையால் விலைகள் உயர்ந்தன என்று நாம் கருதலாம். ஆனால் இக்கூற்று முற்றிலும் சரியானதல்ல. முன்பைவிட மக்கள் அதிகமான அளவு பணம் வைத்திருப்பதால் அவர்களுடைய செலவு அதிகரிக்கின்றது. அத னால் விலைகள் உயருகின்றன என்று சொல்வது உண்மையாகும்.

## பணப்பரிமாணக் கோட்பாடு
## (Quantity theory of Money)

பணவீக்கத்தையும், பணச்சுருக்கத்தையும் பற்றி நாம் ஆராய்ச்சி செய்வதற்குமுன் பணப்பரிமாணக் கோட்பாட்டை (Quantity theory of money) இங்கு ஆராய்ச்சி செய்யவேண்டும். ஒரு பொருளின் மதிப்பை, அதன் தேவையும் (demand) அளிப்பும் (Supply) நிர்ணயம் செய்கின்றன. பணத்தின் மதிப்பையும், அதன் அளிப்பும் தேவையும் நிர்ணயம் செய்கின்றன. பணவீக்கம் என்ற

சொல்லை நாம் பயன்படுத்தும்பொழுதெல்லாம் இக் கருத்தை மனத்தில் கொண்டே பயன்படுத்துகின்றோம். பணத்தின் அளவு பெருகுவதை நாம் பணவீக்கம் என்றுகுறிப்பிடுகின்றோமா அல்லது விலைகள் உயர்வதைப் பணவீக்கம் என்று குறிப்பிடுகின்றோமா என்று திட்டவட்டமாகக் கூறமுடியாது. ஆக்ஸ்போர்ட் அகராதி கூடப் பணவீக்கம் என்ற சொல்லைச் சரிவர விளக்கவில்லை.

பணத்தைப் பயன்படுத்தி நாம் வாங்கும் பொருள்களின் அளவும், இப் பொருள்களை வாங்குவதற்காகப் பயன்படுத்தும் பணத்தின் அளவும் பணத்தின் மதிப்பை நிர்ணயம் செய்கின்றன என்பது பணப்பரிமாணக் கோட்பாட்டின் உட்கருத்தாகும். பணத்தின் அளவு (Quality of money) அதிகரித்தாலும், பொருள்களின் அளவு குறைந்தாலும் பணத்தின் மதிப்பு குறையும், அதாவது விலைகள் உயரும். மக்கள் செலவுக்குக் கிடைக்கும் மொத்தப் பணத்தைப் பணத்தின் அளவும், அதன் புழக்கவேகமும் (Velocity of circulation) நிர்ணயம் செய்யும். விற்பனையாளர்கள் கொண்டிருக்கும் சரக்குகளின் அளவும் மொத்த உற்பத்தியும் பொருள்களின் அளவை நிர்ணயம் செய்கின்றன. ஓர் ஆண்டு நாட்டில் நிலவும் விலைவாசி அடுத்த ஆண்டு மாறுவதற்கு மூன்று காரணங்கள் உள. நாம் வைத்திருக்கும் பணத்தின் அளவு மாறுவதாலும், பணத்தின் புழக்க வேகம் மாறுவதாலும், பொருளுற்பத்தி மாறுவதாலும் விலைவாசி மாறலாம். முதன் முதலில் பணத்தின் அளிப்பும் அதன் பிறகு அதன் தேவையும் மாறும். உற்பத்தி பெருகும்பொழுது, விற்பனையும் மிகுதியடையும். பணம் செய்ய வேண்டிய வேலையும் மிகுதியடையும். ஆகையால் மக்கள் முன்பைவிட மிகுதியான தொகையைப் பயன்படுத்துவர். பணத்தின் அளிப்புக் குறைந்தால் அதன் மதிப்பு உயரும். பணத்தின் தேவை மிகுதியடைந்தாலும் அதன் மதிப்பு உயரும், அதாவது விலைவாசி தாழ்வடையும். பணத்தின் தேவையும், அதன் புழக்க வேகமும் ஒரே நிலையில் இருந்தால் பணத்தின் அளவுக்குத் தகுந்த விகிதத்தில் அதன் மதிப்பு மாறும். (ஆனால் பொருளுற்பத்தியின் அளவு மாறாமல் இருக்கவேண்டும்.)

பணப்பரிமாணக் கோட்பாட்டை ஒரு சமன்பாட்டின் மூலம் விளக்கலாம். M என்பது பணத்தின் அளவைக் குறிக்கும். V என்பது புழக்க வேகத்தின் குறியாகும். அதாவது பணம் சராசரி எவ்வளவு முறை கைமாறுகின்றது என்பதை V காட்டுகின்றது. T என்பது விற்பனையான பொருள்களின் அளவைக் காட்டுகின்றது. P என்பது சராசரி விலைவாசியைக் (Average price level) காட்டுகின்றது.

$$MV = PT$$

MV செலவான மொத்தப் பணத்தைக் காட்டுகின்றது. ஒரு குறிப்பிட்ட காலத்தில், உதாரணமாக ஓர் ஆண்டில் ஒவ்வொருவனும்

20 பவுன்களைக் கொண்டிருக்கிறான் என்று நாம் கற்பனை செய்து கொள்வோம். ஒவ்வொருவனும் வைத்திருக்கும் ஒவ்வொரு பவுனும் சராசரிப் பத்துமுறை செலவு செய்யப்பட்டால் MV என்பதின் மதிப்பு 200 பவுன் ஆகும். விற்பனையான பொருள்களின் சராசரி விலை P ஆனால் PT என்பதின் மதிப்பு மொத்த விற்பனைத் தொகைக்குச் சமமாகும். செலவு செய்த தொகையும், விற்பனைத் தொகையும் சமமாக இருக்கும். PT என்பதின் மதிப்பு MV என்பதின் மதிப்புக்குச் சமமாகும். சமன்பாட்டை நாம் கீழ்க்கண்ட முறையில் எழுதலாம்.

$$P = \frac{MV}{T}$$

இந்த சூத்திரத்தை நாம் பிஷர் சூத்திரம் (Fisher formula) என்று சொல்லலாம். இதை முதன்முதல் பேராசிரியர் இர்விங்பிஷர் (Professor Irving Fisher) என்பவரே இச்சூத்திரத்தை முதன் முதலில் பயன்படுத்தினர்.

இச் சூத்திரம் மிகவும் தெளிவாக இருப்பதாகத் தோற்றமளிக்கின்றது. ஆனால் இதன் பொருளை நாம் அறிய முயற்சி செய்யும் பொழுது சில சிக்கல்கள் ஏற்படுகின்றன. P என்பது எதைக் குறிக்கின்றது என்று நாம் திட்டவட்டமாகச் சொல்லமுடியாது. பல்வேறு நோக்கங்களுடன் குறியீட்டெண்களைத் தயார் செய்யலாம் என்று நாம் முன்பு குறிப்பிட்டோம். ஆகையால் பல்வேறு விலைவாசிகள் இருக்கின்றன. P என்பது பொதுவாக எல்லா விலைகளையும் எடுத்துக்காட்டுகின்றது என்று நாம் கூறலாம். ஆனால் பொது விலைவாசி என்று நாம் எதையும் கூறமுடியாது. மொத்த விலைகள், சில்லறை விலைகள், கச்சாப் பொருள்களின் விலைகள், பங்குமாற்று நிலையங்களில் விற்பனையாகும் பத்திரங்களின் விலைகள், பழைய வீடுகளின் விலைகள், மோட்டார் வண்டிகளின் விலைகள், பயிற்சி பெற்ற தொழிலாளர்களுடைய கூலிகள், மற்றப் பணிகளுடைய (Services) விலைகள் முதலியவைகளுடைய சராசரித் தொகையை நாம் கண்டுபிடித்து, அதைப் பொது விலைவாசி என்று குறிப்பிட முடியாது. துய்ப்போர்வாங்கும் பொருள்களுடைய விலைகளையே நாம் P என்று கூறுகின்றோம். தெளிவற்ற இந்த விளக்கத்தை அடிப்படையாகக் கொண்டு T, M, V என்ற குறிகளையும் நாம் விளக்கலாம். T என்ற குறி துய்ப்போர் வாங்கும் பொருள்களின் விற்பனையைக் காட்டும். பங்குமாற்று நிலையங்களின் பத்திரங்கள் கச்சாப்பொருள்கள் அரைகுறையாக உற்பத்தியான பொருள்கள் (Semi - finished goods) முதலிய பொருள்களை T என்ற குறி காட்டவில்லை. M என்ற குறி பொருள்கள் வாங்குவதற்கு மக்கள் பயன்படுத்தும் வருமானத்

தொகையையே காட்டும். தொழிலதிபர்களும் முதலீடு செய்வோரும் வைத்திருக்கும் தொகையை M என்ற குறி காட்டாது. V என்பது M என்றகுறியில் அடங்கியுள்ள பணத்தின் புழக்கவேகத்தைக் காட்டுகின்றது. அதாவது V என்ற குறி வருமானத் தொகையில் அடங்கியுள்ள பணம் ஓராண்டுக் காலத்தில் எத்தனைமுறை மாறுகின்றது என்பதைக் காட்டுகின்றது. ஆகையால் இதை வருமானப் புழக்கவேகம் (Income velocity of circulation) என்று நாம் கூறலாம்.

பணத்தின் அளவுக்கும் விலைவாசிக்கும் நேரிடையான தொடர்பு இருக்கின்றது என்பது பணப்பரிமாணக் கோட்பாட்டின் உட்கருத்தாகும். ஆனால் உண்மையில் பணத்தின் அளவுக்கும் விலைவாசிக்கும் நேரிடையான தொடர்பு இல்லை. பணத்தின் மொத்த அளவு விலையை பாதிக்கவில்லை. ஆனால் மொத்தப் பணத்தில் ஒருபகுதியே மக்களுடைய ஆக்க வேலைகளை நிர்ணயம் செய்கின்றது. இப்பகுதி எவ்வளவு பெரியது, எவ்வாறு மாறுகின்றது என்பதை நாம் திட்டவட்டமாகச் சொல்லமுடியாது. பணத்தின் அளவு பெருகும்பொழுது M என்ற தொகையின் அளவும் அதே விகிதத்தில் பெருகும் என்று நாம் கூறமுடியாது. மொத்தப் பணத்தின் அளவு பெருகும்பொழுது மக்கள் பொருள்களை வாங்குவதற்குப் பயன்படுத்தும் தொகையும் பெருகும் என்று நாம் முடிவு செய்வது தவறாகும். ஏனெனில் மக்கள் பணத்தைச் செலவு செய்யாமல் (Hoarding) பதுக்கலாம். குறிப்பாக மந்த காலத்தில் மக்கள் பணத்தை இவ்வாறு பதுக்குவது அவர்களுடைய இயல்பாகும். வீக்க காலத்தைவிட மந்தகாலத்திலேயே அவர்கள் பணத்தைச் சாதாரணமாகப் பதுக்குவர். இந்த நிலையில் நாட்டில் பெருகும் பணத்தைத் தொழிலதிபர்கள் (Businessmen) தம் ரொக்க நிலையைச் (Liquidity) சீர்படுத்திக் கொள்ளப் பயன்படுத்துவார்கள். ஆகையால் பணத்தின் அளவு பெருகும்பொழுது விலைவாசி அதே விகிதத்தில் உயரவேண்டும் என்ற கட்டாயம் இல்லை என்பது புலனாகின்றது. $\frac{MV}{T} = P$ என்ற பிஷருடைய சூத்திரம் M, V, T, P என்ற குறிகள் கொண்டுள்ள தொடர்பை விளக்கவில்லை. சூத்திரத்தை $M = \frac{PT}{V}$ என்று நாம் மாற்றி எழுதினால் P, T, V என்ற குறிகள் M என்பதை நிர்ணயம் செய்கின்றன என்று நாம் கருதலாம். ஆனால் இவ்வாறு நாம் கருதமுடியாது. ஏனெனில் M என்பதை பாங்குகளும், அரசாங்கமும் உற்பத்தி செய்கின்றன. சூத்திரத்தில் காணும் குறிகள் M என்பதுடன் எவ்விதத் தொடர்பும் கொள்ள

வில்லை. V என்பது $\frac{PT}{M}$ என்பதற்குச் சமமாக இருக்கும். ஆனால் மக்களுடைய பழக்க வழக்கங்களே V என்பதின் மதிப்பை நிர்ணயம் செய்கின்றன. T என்பது $\frac{MV}{P}$ என்பதற்குச் சமமாக இருந்த போதிலும், உற்பத்தியாளர்கள் எதிர்பார்க்கும் இலாபமே அதன் மதிப்பை நிர்ணயம் செய்கின்றது. எனவே பொருளாதாரத் தொடர்புகளைக் குறிக்கணக்கியல் சூத்திரத்தின் (Algebraic) மூலம் நாம் வெளியிட முடியாது. சூத்திரம் P என்பதை M,V,T என்பவை நிர்ணயம் செய்கின்றன என்று காட்டுகின்றது. M,V,T என்பவைகளை P நிர்ணயம் செய்கின்றது என்றும் காட்டுகின்றது. ஆகையால் சூத்திரம் உண்மையைப் புலப்படுத்தவில்லை.

இருந்த போதிலும் சூத்திரத்தில் காணும் குறிகளிடையே ஒரு தொடர்பு இருக்கின்றது. பணத்தின் அளவே விலைவாசியை நிர்ணயம் செய்கின்றது என்பது சூத்திரத்தின் உட்கருத்தாகும். பணத்தின் அளவை ஒட்டி விலைவாசி மட்டும் உயர்ந்தால் மக்களுடைய வாழ்க்கைச் செலவு உயரும். பணத்தின் அளவு அதிகரிக்கும் பொழுது உற்பத்தி பெருகும், மக்கள் அதனால் பயனடைவர் என்று சூத்திரம் கூறினால் அது தவறாகும். பணத்தின் அளவை எளிதில் பெருக்கலாம். சமுதாயத்தின் பிரச்சினைகளை நாம் தீர்க்க ஒரு வழி காணவேண்டும். தவறான கோட்பாடுகள் இந்த முயற்சிக்கு இடையூறாக இருக்கின்றன. பணத்தின் அளவு மிகுதியடைவதால் அதன் புழக்கவேகம், வர்த்தகம், விலைவாசி முதலியவை எவ்வாறு பாதிக்கப்படும் என்று நாம் ஆராய்ச்சி செய்யவேண்டும்.

பணத்தின் அளிப்பு (Supply) மிகுதியடையும் பொழுது விலைவாசி உயரும்; அதாவது பணத்தின் மதிப்புக்குறையும் என்பதை நாம் அனுபவ வாயிலாகக் காணலாம். இவ்வுண்மையை வரலாறு மெய்ப்பித்திருக்கின்றது. போர்க்காலத்தில் பணத்தின் மதிப்புத் திடீரென்று குறைந்தது. 16, 17 வது நூற்றாண்டுகளில் அதன் மதிப்புப் படிப்படியாகக் குறைந்தது. பணவீக்கமே இதற்குக் காரணமாக இருந்தது. விலைகள் உயர்வதற்கும் தாழ்வடைவதற்கும் பல காரணங்கள் உள. அவைகளுள் பணவீக்கமும் பணச்சுருக்கமுமே முக்கியமான காரணமாகும். பணத்தின் அளவு ஓரளவுக்கு மேல் பெருகினாலும், இப்பெருக்கும் வரையற்ற முறையில் நீடித்தாலும் விலைவாசியே உயரும்; உற்பத்தி பெருகாது. சில சமயங்களில் பணத்தின் அளவு பெருகாவிடிலும், விலைகள் உயரலாம். சில சமயங்களில் பணத்தின் அளவைப் பெருக்கித் தொழிலுற்பத்தியை, நிலைப்படுத்தலாம் அல்லது பெருக்கலாம். மந்தகாலம்

முடிந்து வீக்ககாலம் தொடங்கும்பொழுது விலைகள் உயரும்; மந்த காலம் தொடங்கும்பொழுது விலைகள் தாழ்வடையும். வீக்ககாலத்தில் பணத்தின் அளிப்பு (Supply) பெருகுவதும் வீக்ககாலத்தில் அது குறைவதும் இயற்கை. வீக்ககாலத்தில் பாங்குச் செலாவணியை (Bank credit) பாங்குகள் பெருக்கும். மந்தகாலத்தில் அதை பாங்குகள் சுருக்கும். பணத்தின் அளவு ஒரே நிலையில் இருந்தாலும் மந்தமும் வீக்கமும் ஏற்பட்டுக் கொண்டேதான் இருக்கும். ஆகையால் விலைவாசி மாறுவதற்குப் பலகாரணங்கள் உள. அவைகளுள் பணத்தின் அளிப்பில் ஏற்படும் மாறுதல் ஒரு காரணமாகும். மந்தகாலத்தில் பணத்தின் அளிப்பு மிகுதியடைவதால் பொருள்களின் தேவை (Demand) அதிகரிக்கலாம். இதன் விளைவாக உற்பத்தியும், வேலை வாய்ப்புக்களும் பெருகலாம். பலர் வேலையில்லாமல் இருப்பதாலும், உற்பத்திச் சாதனங்கள் பயன்படுத்தப்படாமல் இருப்பதாலும் பணம் பெருகுவதால் உற்பத்தி பெருகும், விலைகள் விரைவில் உயரா. எனவே பணம் பெருகுவதால் உற்பத்தியும் விற்பனையுமே பெருகும், விலைகள் உடனடியாக உயரா. பணம் பெருகுவதாலும், அதைத் தொடர்ந்து உற்பத்தி பெருகுவதாலும் மக்களுடைய வாழ்க்கைத்தரம் உயரும்.

பணத்தின் அளவைத் தொடர்ந்து பெருக்கினால் உற்பத்திச் சாதனங்கள் வேண்டிய அளவு கிடைக்காமல் இருக்கலாம். இந்த நிலையில் விலைகள் உயரும். பணப்பரிமாணக் கோட்பாடு இந்த நிலையையே விளக்குகின்றது. பணத்தின் அளிப்பும் மக்களுடைய செலவும் பெருகும். ஆனால் உற்பத்தி பெருகாது. பணத்தின் புழக்கவேகம் அதிகரித்தால் விலைகளும் விரைவில் உயரும். பணம் மதிப்பை இழப்பதால் மக்கள், அதைக் கொடுத்து நகை, ஆடைகள், முதலிய பொருள்களை வாங்குவார்கள். அதாவது மதிப்பை இழந்த பணத்தைவிட மக்கள் பொருள்களையே நாடுவார்கள். அவர்கள் பொருள்களை மிகுதியாக வாங்குவதால் அவைகளுடைய விலைகள் மேலும் உயரும். வரவு செலவுத் திட்டத்தில் இருக்கும் பற்றுக்குறையை நீக்குவதற்காகப் பணவீக்கத்தை ஏற்படுத்தும் அரசாங்கத்தின் செலவுகள் மிகுதியடையும். ஆனால் வரிமூலம் அரசாங்கம் பெறும் வருமானம் மிகுதியடையாது. ஓர் ஆண்டில் செலாவணித் தாள்களை (Currency notes) அதிகமாக அச்சிட்டால், ஒருநாடு அடுத்த ஆண்டில் அதைவிட அதிகமாக அச்சிட வேண்டிய நிலைமை ஏற்படும். பணவீக்கத்தை ஒருநாடு தொடங்கி விட்டால் அதிலிருந்து மீட்சியடைவது எளிதல்ல. பாங்குச் செலாவணிப் பெருக்கத்தால் பணவீக்கம் ஏற்பட்டாலும் நாடு இதே நிலையில்தான் இருக்கும். வாணிகப் பாங்குகள் (Commercial banks) மிகுதியான தொகை

யைக் கடனாகக் கொடுத்தால் தொழிலதிபர்கள் மேலும் அதன் உதவியை நாடுவார்கள். விலைகள் உயரும் பொழுது உற்பத்தியாளர்கள் எளிதில் இலாபத்தை ஈட்டுவார்கள். ஒருவன் பணத்தைக் கடனாகப் பெற்றுப் பொருளுற்பத்தி செய்தால் கட்டாயமாக இலாபத்தைப் பெறலாம். இந்த நிலையில் பாங்குகளுடைய கடனுதவியை எல்லோரும்நாடுவார்கள். சிலர் ஊகவாணிகம் (Speculation) செய்வதற்காகவும், சிலர் நடைமுறை முதலுக்காகவும் (Working capital) பாங்குகளின் உதவியை நாடுவார்கள். மூலதனத்தைப் பெருக்குவதால் விலைகள் மேலும் உயரும். இந்த நிலையில் பாங்குகளின் கடனுதவிக்கு ஏற்படும் தேவை குறையவே குறையாது. பணம் மிகுதியாகக் கிடைக்கும்பொழுது அதற்கு ஏற்படும் பற்றுக் குறையைப்போல் வேறு எப்பொழுதுமே ஏற்படாது என்று கூறுவதுண்டு. $P=\frac{MV}{T}$ என்ற சூத்திரத்தைக் கொண்டு விலைவாசியின் போக்கை நாம் விளக்கமுடியாது. விலைவாசியைச் சிலகோணங்களிலிருந்து நாம் பார்க்கும்பொழுது இது சிறந்த சூத்திரம் அல்ல என்பது புலனாகின்றது. வரலாற்றை நாம் பயிலும்பொழுது எவ்வாறு விலைகள் மாறின என்பதைப் புரிந்துகொள்ள மட்டுமே இச்சூத்திரம் உதவுகின்றது. பணவீக்கத்தின் கொடுமையையும்இது புலப்படுத்துகின்றது. முன்பு பல காலங்களில் நிலவிய விலைவாசிகளை ஒப்பிடுவதற்கும் விலைவாசியில் ஏற்பட்ட மாறுதல்களை அறிவதற்கும் சூத்திரம் உதவியளிக்கின்றது. ஆனால் இது மாறுதல்களைப்பற்றிய விவரங்கள் அனைத்தையும் விளக்கவில்லை. எவ்வாறு மாறுதல் ஏற்படுகின்றது என்பதையும் விளக்கவில்லை. பொதுவாகப் பணத்தின் அளவு மாறும்பொழுது விலைகளும் மாறும் என்பதை மட்டுமே சூத்திரம் புலப்படுத்துகின்றது. ஆனால் இத்தகைய மாறுதல்கள் ஏன் ஏற்படுகின்றன என்பதை நாம் ஆராய்ச்சி செய்யும்பொழுது, கூலி, வட்டி, இலாபம் முதலியவைகளை நன்கு கவனிக்கவேண்டும்.[1] ஆனால் இவைகளைப்பற்றிச் சூத்திரம் எதையும் கூறவில்லை. ஆனால் இவைகளுடைய தொடர்புகளை நாம் வேறு வழியில் அறியலாம். நாம் வேறு வழியில் அறிந்துகொண்டதைப் பயன்படுத்திச் சூத்திரத்தின் குறிகளையும் அவைகளுடைய தொடர்புகளையும் ஆராய்ச்சி செய்யலாம்.

பணப் பரிமாணக் கோட்பாடு ஓரளவு பயனுள்ளதாகவே இருக்கின்றது என்று கருதும் பொருளியலார் கீழ்க்கண்ட இரு சூழ்நிலை

1 ஜெர்மனியில் பணவீக்கம் ஏற்பட்டபொழுது அந்த நாட்டின் மையப் பாங்காகிய (Central Bank) ரீச்பாங்கு (Reich Bank) மக்கள் தேவைக்கேற்றபடி செலாவணித் தாள்களை அச்சிட முடியவில்லை என்று வருத்தத்துடன் ஓர் அறிக்கை வெளியிட்டது. பல மில்லியன் மடங்குகள் செலாவணித்தாள் அச்சிடலை (வாரம் தோறும்) பெருக்கி நிலைமையைச் சமாளிக்கலாம் என்று முடிவு செய்தது.

களை எடுத்துக்காட்டுகின்றனர். பொருளாதார நிலைமையை அரசியலார் நன்கு அறிந்து விலைகளைக் கட்டுப்பாடு செய்வதற்கு இக் கோட்பாடு உதவியளிக்கின்றது. நிலைமையை நன்கு அறிந்த போதிலும் அரசாங்கம் சீர்படுத்த முடியாமல் இருக்கலாம். உதாரணமாக போர்க்காலத்தில் அரசாங்கம் நிதி திரட்டுவதற்காகப் பணவீக்கம் செய்யவேண்டிய தாயிற்று. அமைதி நிலவும் காலத்திலும் அரசாங்கம் உச்ச நிலையிலிருக்கும் விலைகளைக் கட்டுப்பாடு செய்ய முடிவுசெய்யாமலிருக்கலாம். ஏனெனில் பணச் சுருக்கத்தின் விளைவுகளை அரசாங்கம் வெறுக்கலாம். இரண்டாவதாகப் போருக்குப்பின் பணத்தின் அளவும் மற்ற ரொக்கச் சொத்துக்களின் (Liquid assets) அளவும் பெருகிய போதிலும் விலைகள் மிகவும் உயரவில்லை. ஆனால் அரசாங்கம் நடவடிக்கைகள் எடுக்காவிடில் விலைகள் பணத்தின் அளவுக்குத் தகுந்தவாறு விரைவில் உயரலாம்.

## மற்றொரு வழி

பணப் பரிமாணக் கோட்பாடு மதிப்பு விதியின் (Theory of Value) ஒரு கூறுகும். பணத்தின் அளவு பெருகினால் அதன் மதிப்புக் குறையும் என்பது இந்த விதியின் உட்கருத்தாகும். அதாவது பணத்தின் மதிப்பை நாம் பொருள்களின் விலைகள் என்றும் கூறலாம். தனிப்பட்ட விலைகளில் (Individual Prices) மாறுதல்கள் ஏற்படுவதால்தான் விலைவாசியும் (Price level) மாறுகின்றது. ஒரு பொருளின் விலையை, அதாவது ஒரு தனிப்பட்ட விலையை நிர்ணயம் செய்யும் சக்திகள், பணப் பரிமாண விதியுடன் எவ்விதத் தொடர்பும் கொள்ளவில்லை என்பதை நாம் எளிதில் அறியலாம். ஒரு பொருள் முன்பைவிட மிகுதியான அளவில் தேவைப்பட்டாலும், அதன் அடக்கச் செலவு அதிகரித்தாலும், அதன் விலை உயரும். இவ்விரு காரணங்களும் இருவகைப் பண வீக்கத்தை ஏற்படுத்தலாம். தேவை மிகுதியடையும் பொழுது தேவைப் பண வீக்கமும் (Demand inflation) தேவையும், அடக்கச் செலவும் மிகுதியடையும்பொழுது அடக்கச் செலவுப் பண வீக்கமும் (Cost Inflation) ஏற்படுகின்றன. தேவைப்பண வீக்கத்தைத் தேவைப்பட்டியலில் (Demand Schedule) ஏற்படும் மாறுதல்களும், அடக்கச் செலவுப் பணவீக்கத்தை அளிப்பு அட்டவணையில் (Supply Schedule) ஏற்படும் மாறுதல்களும் எடுத்துக் காட்டுகின்றன.

ஒரு நாட்டில் எந்த வகைப் பணவீக்கம் உருவாகின்றது என்பதை நாம் அறியலாம். பணவீக்கம் ஏற்படும்பொழுது மேலே

குறிப்பிட்ட இருவகைக் காரணங்களும் அதை வளர்க்கும். தேவை பெருகுவதால், உற்பத்தியும் பெருகும். தொழிலாளர்கள் உயர்ந்த கூலியைக் கேட்பார்கள். அடக்கச் செலவும் இதன் விளைவாக உயரும். ஆகையால் தேவை பெருகுவதை ஒட்டி அடக்கச் செலவும் மிகுதியடையும். தேவை பெருகுவதைத் தொடர்ந்து தொழிலாளர்களுடைய சங்கங்கள் பேரம் செய்து கூலிகளை உயர்த்தினால் அடக்கச் செலவும் மிகுதியடையும். விலைகள் வெகுவிரைவில் உயரும் என்ற அச்சம் எங்கும் பரவுவதால் மக்கள் விலை மேலும் உயருவதற்கு முன்பே பொருள்களை வாங்க முயற்சி செய்வார்கள். ஒரு தனி நிறுவனத்தின் நிலையை நாம் ஆராய்ச்சி செய்யாமல், நாட்டின் மொத்த உற்பத்தியை ஆராய்ச்சி செய்தால் அளிப்பு தேவையையும், தேவை அளிப்பையும் பெருக்குவதைக் கண் கூடாகக் காணலாம். பணவீக்கத்திற்கு எது காரணமாக இருந்தது என்பதைத் திட்டவட்டமாகக் கூறமுடியாது.

அடக்கச் செலவு (Cost) தானாகவே உயரலாம் என்பதை மறந்து, எவ்வாறு தேவைப் பணவீக்கம் எற்படுகின்றது என்பதை நாம் இங்குக் காண்போம். நாட்டின் பொருளாதாரத்தில் ஏற்படும் மாறுதல்களை ஒட்டி எவ்வாறு செயற்படுத்தும் தேவை மாறும் என்பதை நாம் முன்பே கவனித்தோம். சேமிப்பும் முதலீடும் இந்த மாறுதல்களுடன் தொடர்புகொண்டிருக்கின்றன. விலைவாசியில் ஏற்படும் மாறுதல்கள் பொருளாதாரத்தில் ஏற்படும் மாறுதல்களுடன் பிணைந்திருப்பதால், நாம் முன்பு சேமிப்பையும் முதலீட்டையும் பற்றிக் கொடுத்த விளக்கமே பணவீக்கத்தையும் விளக்கும். பணப் பரிமாணக் கோட்பாடு சேமிப்பையும் முதலீட்டையும் பற்றி ஒன்றுமே சொல்லாதது அதன் ஒரு குறைபாடாகும். பிஷர் சூத்திரத்தில் M V என்ற குறிகள் செயற்படுத்தும் தேவையைக் காட்டுகின்றன. இவைகளை M என்றும் V என்றும் தனித்தனியாகப் பிரித்து எழுதுகின்றனர். ஆனால் துய்ப்போர் பொருள்களின் தேவை என்றும் மூலதனப் பொருள்களின் தேவை என்றும் பிரித்து பிஷர் எழுதவில்லை. பணத்தின் அளவு அதிகரித்தாலோ, அல்லது அதன் புழக்க வேகம் அதிகரித்தாலோ, மக்கள் முன்பைவிட அதிகமாகச் செலவு செய்வார்கள் என்பது பணப் பரிமாணக் கோட்பாட்டின் தத்துவமாகும். நீண்டகாலத்தில் புழக்க வேகம் அதிகரிப்பதால் மட்டும் விலைகள் உயரா என்பது கோட்பாட்டில் மறைந்து கிடக்கும் கருத்தாகும். இக்கருத்தைச் சரியானது என்றே நாம் கூற வேண்டும். ஆனால் பணப்பரிமாணக் கோட்பாடு இக்காலத்திய பொருளாதார விதியுடன் முரண்பாடு கொண்டிருக்கின்றது.

முதலீடே செயல்படுத்தும் தேவையைப் பாதிக்கும் என்பது தற்காலத்திய கருத்தாகும். மக்கள் ஒரு குறிப்பிட்ட தொகையையே

செலவுசெய்து பொருள்களை வாங்குவார்கள். வருமானம் பெருகினாலோ அல்லது முன்பைவிட அதிகமாகச் சிக்கனமாக இருப்பதற்கு ஒரு தூண்டுதல் ஏற்பட்டாலோ அவர்களுடைய செலவு மாறலாம். ஆனால் முதலீட்டுச் செலவு ஒரே நிலையில் இருக்காது. அவ்வப்போது மக்களுடைய தேவையே அவர்கள் உணவு, உடை முதலிய பொருள்களை வாங்குவதற்காகச் செய்யும் செலவை நிர்ணயம் செய்கின்றது. ஆனால் முதலீட்டுச் செலவை அவர்களுடைய எதிர்காலத்தைப்பற்றிய கருத்துக்களே நிர்ணயம் செய்யும். முதலீட்டை நீண்டகாலம் தொடர்ந்து செய்யவேண்டி இருந்தால், உற்பத்தியாளர்கள் எவ்வளவு வருமானத்தைப் பெறமுடியும் என்று கணக்கிட முடியாது. இத்தகைய முதலீடுகள் மிகவும் நிலையற்ற தன்மையைக் கொண்டிருக்கும். மூலதனத்தின் இறுதி நிலைத் திறன் (Marginal efficiency of capital) நிலையற்றதாக இருப்பதால் முதலீடும் நிலையற்றதாக இருக்கின்றது. ஆனால் முதலீட்டைப் பல முறைகளில் நிலைப்படுத்தலாம். அவைகளுள் முதலாளிகளுக்கு நிதி கிடைப்பதை எளிதாகவோ அல்லது கடினமாகவோ செய்வது ஒன்றாகும்.

இந்த நிலையில் பணத்தின் அளவு ஒரு முக்கியமான பணியைச் செய்யலாம். பணத்தின் அளவு பெருகினால் வட்டி வீதங்கள் குறையும். உற்பத்தியாளர்கள் எளிதில் நடைமுறை முதலைப் பெறலாம். இதன் விளைவாக முதலீடு பெருகலாம், செயற்படுத்தும்தேவையும் பெருகும். தேவை பெருகுவதால் விலைவாசி உயரும். பணத்தின் அளவையும் விலைகளையும் வட்டி வீதங்களும் முதலீடும் தொடர்புபடுத்துகின்றன. பணப்பரிமாணக் கோட்பாடு தற்காலத்துக் கருத்துக்களிலிருந்து வேறுபட்டிருக்கின்றது. மேலே நாம் குறிப்பிட்ட தொடர்புகளை பிஷர் சூத்திரம் எடுத்துக் காட்டவில்லை.

**தேவைப் பணவீக்கம் வளர்ச்சியடைதல்**

பணத்தின் அளவு பெருகுவதாலோ அல்லது வேறு காரணத்தாலோ, தேவை மிகுதியடைந்தால் உற்பத்தியும் வேலையும் நாட்டில் பெருகும். தொழிலகங்கள் விறுவிறுப்புடன் வேலைசெய்யும். உற்பத்திச் சாதனங்கள் முற்றிலும் பயன்படுத்தப்படும்வரை இறுதி நிலைச் செலவு (Marginal Cost) அதிகரிக்காது. ஆனால் வர்த்தகம் பெருக ஆரம்பித்தவுடன் விவசாயப் பொருள்களுடைய விலைகள் உயரும். ஏனெனில் இப்பொருள்களுடைய உற்பத்தியில் ஒரு நெகிழ்ச்சி (Elasticity) இல்லை. மந்தகாலத்தில் கச்சாப் பொருள்கள் விற்பனையாகாமல் தேங்கிக் கிடந்தால்தான் விலைகள் விரைவில் உயராமல் இருக்கும்.

தொடக்க காலத்தில் விலைகள் விரைவில் உயரா. அடக்கச் செலவு மிகுதியடையும். தொழில் பெருகுவதால் ஏற்படும் நன்மையை உயரும் அடக்கச் செலவு சரிக்கட்டிவிடும். ஆனால் உற்பத்தி பெருகப் பெருக அடக்கச் செலவுக்கோடு (Cost Curve) மேல் நோக்கிச் செல்லும். திறமையற்ற தொழிலாளர்கள்கூட வேலையில் அமர்த்தப்படுவார்கள். உற்பத்தியாளர்கள் பழைய எந்திரங்களைப் பயன்படுத்துவர். தொழிலாளர்களுடைய வேலை நேரத்தையும் அதிகரிப்பார்கள். எந்திரங்களைச் சாதாரணமாகப் பயன்படுத்துவதைவிட அதிகமாகப் பயன்படுத்துவார்கள். இத்தகைய முறைகளைக் கையாண்டு முதலாளிகள் உற்பத்தியைப் பெருக்க முயற்சி செய்வார்கள். தொழிலாளர்களுடைய உற்பத்தி அதிகரிக்கும். ஆனால் நிருவாகம் பாதிக்கப்படும். தொழிலதிபர்களுக்கு வேண்டிய அளவு கச்சாப் பொருள்களும் பயிற்சிபெற்ற தொழிலாளர்களும் கிடைக்காமல் இருக்கலாம். ஆகையால் உற்பத்தி நிறுவனங்கள் புதிய முறைகளைக் கண்டுபிடிக்க முயற்சி செய்வார்கள். உற்பத்திச் சாதனங்களும் கச்சாப் பொருள்களும் வேண்டிய அளவு கிடைக்காததால் உற்பத்தி பெருகுவதற்கு இடையூறுகள் ஏற்படும். இந்த நிலையில் உற்பத்தியாளர்களைக் குறைந்த விலையில் பொருள்களை விற்கவேண்டும் என்று மக்கள் வற்புறுத்தமாட்டார்கள். ஆகையால் இலாபமும் அடக்கச் செலவும் மிகுதியடையும். இந்த நிலையில் பொருள்களை விரைவில் விற்பனை செய்யமுடியும். மக்களுடைய விருப்பத்திற்கும் நாகரிகத்திற்கும் ஏற்ற முறையில் பொருளுற்பத்தியை மாற்றுவது எளிதாக இருக்கும். புதிய இயந்திரங்களைப் பயன்படுத்தலாம். புதிய உற்பத்தி முறைகளைப் பின்பற்றலாம். உற்பத்தியாளர்கள் புகுத்தும் மாறுதல்களையும், அவர்களுடைய சோதனைகளையும் தொழிலாளர்கள் எதிர்க்கமாட்டார்கள். மேலும் முதலாளிகள் தாம் செய்யும் சீர்திருத்தங்களுக்கு வேண்டிய நிதியைக் கொண்டிருப்பார்கள். இச் சீர்திருத்தங்கள் தொழிலாளர்களைப் பாதிக்கா என்று அவர்கள் நம்பினால், அவர்கள் இவைகளை எதிர்க்கமாட்டார்கள். ஆனால் சிறிதுகாலம் சென்ற பிறகு அடக்கச் செலவு அதிகரிக்கும், விலைகளும் உயரும்.

இதுவரை அயல்நாட்டு வர்த்தகம் எவ்வாறு பணவீக்கத்தைப் பாதிக்கும் என்பதை நாம் ஆராய்ச்சி செய்யவில்லை. செயற்படுத்தும் தேவை பெருகும்பொழுது அதில் ஒரு பகுதி இறக்குமதியான பொருள்களை விற்பனை செய்வதற்கு உதவியாக இருக்கின்றது. ஏற்றுமதியாகும் பொருள்களையும் மக்கள் வாங்கத் தயாராக இருக்கின்றனர். உள் நாட்டில் உற்பத்திப் பெருக்கத்திற்கு இடையூறுகள் இருந்தால் இறக்குமதிப் பொருள்களுக்கு மிகுதியான தேவை ஏற்படும். ஆனால் அயல் நாட்டுக் கொடுப்பல்நிலை (Balance of

Payments) பாதிக்கப்படும். இதேநிலை நீண்டகாலம் நீடித்தால் ஒரு நாடு பொன்னையும், அயல் நாட்டுச் செலாவணியையும் (Foreign Exchange Reserves) இழக்கும். இதன் விளைவாக அந்த நாட்டின் நிதியின் நிலையில் ஒரு நெருக்கடி ஏற்படலாம். பணவீக்கத்தின் கொடுமை உச்சநிலையை அடையும்பொழுது அயல் நாட்டு வர்த்தகம் அதைக் குறைக்கலாம். ஆனால் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை பாதிக்கப்படலாம். பணவீக்கத்தை வெறுக்கும் பொருளியலார் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் ஏற்படும் சிக்கல்களை ஒரு நாடு எளிதில் தீர்த்துக்கொள்ளலாம் என்று கருதுவது இயற்கையே.

நாம் இதுவரை விளக்கிய பணவீக்க முறை தானாகவே வளர்ச்சியடைய வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. விலைகள் உயர்வதால் உற்பத்தியும் அடக்கச் செலவும் மிகுதியடையும். அடக்கச் செலவுக் கோடு (Cost curve) தொடக்கப் புள்ளிக்குச் சற்றுமேல் ஆரம்பித்து x அச்சுக்கு இணையாகச் செல்கின்றது. நாட்டில் வேலை நிறைவு ஏற்பட்டபின் இக்கோடு மேல் நோக்கிச் செல்வதை நாம் படத்தில் காணலாம். 15 வது படம் அடக்கச் செலவுக்கோட்டை எடுத்துக் காட்டுகிறது.

## வரைபடம்—15

**மொத்த உற்பத்தியின் அடக்கச் செலவுக் கோடு**



உற்பத்தி O P என்ற அளவுக்குமேல் பெருகாவிடில் விலைகள் ஒரே நிலையில் இருக்கும். உற்பத்தி O Q வரை பெருகினால் விலைகளும் விரைவில் உயரும். Q C, P B இரண்டும் கொண்டிருக்கும் விகிதத்துக்குச் சமமான விகிதத்தில் விலைகள் உயரும். விலைகள் P என்ற குறிக்குமேல் உயரும்பொழுது அடக்கச் செலவுக்கோடும் மாறுகின்றது அடக்கச் செலவு அதிகரிக்கும்பொழுது கூலி மிகுதியடையாவிடில் தொழிலாளர்கள் கூலிகளை உயர்த்தப் போராடுவார்கள். கூலிகளை உயர்த்துவதற்கு இரு காரணங்கள் உள. தொழிலாளர்களுடைய பணிக்கு எங்கும் தேவை பெருகுவது ஒரு காரணமாகும். நாட்டில் வேண்டிய தொழிலாளர்கள் இல்லாவிடில் உற்பத்தியாளர்கள் போட்டி போட்டுக்கொண்டு புதிய தொழிலாளர்களை வேலையிலமர்த்துவதால் கூலிகள் உயரலாம். இரண்டாவதாகத் தொழிலாளர்களுடைய வாழ்க்கைச் செலவு உயர்வதால் அவர்களுடைய நிலைமை பாதிக்கப்படும். ஆனால் முதலாளிகளுடைய இலாபம் பெருகும். ஆகையால் கூலியை உயர்த்த வேண்டும் என்று தொழிலாளர்கள் போராடுவார்கள். கூலிகள் உயர்வதால் பணவீக்கத்தின் கொடுமை மேலும் அதிகரிக்கும் என்று பொருளியலார் கூறினாலும், தொழிலாளர்கள் கூலிகளை உயர்த்த வேண்டுமென்று போராடுவார்கள்.

கூலிகள் உயர்வதால். அடக்கச் செலவுக்கோடும் மேலே நகரும். அது படத்தில் G H என்ற இடத்திலிருந்து G' H' என்ற இடத்திற்கு மாறும். தேவைக் கோடும் (Demand curve) மாறும்.ஏனெனில் அதிகமான கூலியைப் பெறும் தொழிலாளர்கள் முன்பைவிட அதிகமாகப் பொருள்களை வாங்குவார்கள். அடக்கச் செலவு எந்த விகிதத்தில் உயர்கின்றதோ அதே விகிதத்தில் விலைகளும் உயரும். இந்த நிலையில் ஏற்படும் விலையுயர்வு உற்பத்திப் பெருக்கம், இறுதிநிலை அடக்கச் செலவு முதலியவைகளுடன் தான் கொண்டிருக்கும் தொடர்பை இழக்கின்றது. இந்த நிலையில் பணவீக்கம் தானாகவே வளர்ச்சியடைகின்றது. விலைகள் உயரஉயரத் தொழிலாளர்கள் அதிகமான கூலியை வேண்டுகிறார்கள். கூலி உயர்ந்தால் அடக்கச் செலவும் விலைகளும் மேலும் உயரும்.

கூலியும் விலைவாசியும் தடையற்ற முறையில் உயர்ந்து கொண்டே செல்லும் என்று தோன்றுகிறது. ஆனால் பணத்தின் அளவு பெருகாவிடில் இவை உயரா. தொழிலாளியின் வருமானம் உயர உயர அவன் முன்பைவிட அதிகமான பணத் தொகையைக் கை இருப்பாக வைத்துக்கொண்டிருப்பான். அல்லது பாங்கில் (Bank) டெபாசிட்டாக (Deposit) வைத்திருப்பான், முதலாளி

யும் முன்பைவிட அதிகமான தொகையை கையிருப்பாக வைத்துக் கொள்ளவேண்டும். ஏனெனில் அவன் முன்பைவிட அதிகமான கூலியைக் கொடுக்கவேண்டும். விலையுயர்வும் இதே விளைவை ஏற்படுத்தும். விலைகள் உயர்வதால் முதலாளிகளுடைய செலவு மிகுதியடையும். மேலும் அவர்கள் வைத்துக்கொண்டிருக்கும் சரக்குகளின் விலைகள் உயரும். பணம் அதிகமாகத் தேவைப்படும் பொழுது அதன் அளிப்பு (Supply) மிகுதியடையாவிடில் விலைகள் தாழ்வடையும். ஆகையால் விலைகளும் கூலியும் உயரும்பொழுது பணத்தின் அளிப்புப் பெருகவேண்டும். இங்குச் சில உண்மைகளை நாம் பணப்பரிமாணக் கோட்பாட்டுடன் தொடர்புபடுத்துகின்றோம். பணத்தின் அளவு பெருகுதல் கூலியை நேரிடையாகப் பாதிப்பதில்லை. ஆனால் பணம் பெருகும்பொழுது கூலிகள் சாதாரணமாக உயரும்; அதைத் தொடர்ந்து மற்ற விலைகள் உயரும்; உற்பத்தியும் மிகுதியடையும்.

**அடக்கச் செலவுப் பணவீக்கம்**

அடக்கச் செலவுப் பணவீக்கத்தை நாம் இங்கு ஆராய்வோம். இந்தப் பணவீக்கம் எவ்வளவு தீமைகளை விளைவிக்கும் என்பதை நாம் எளிதில் கணக்கிடமுடியாது. தொழிலாளர்கள் சங்கங்கள் கொண்டிருக்கும் அமைப்பு, முதலாளிகள் சங்கங்கள் கொண்டிருக்கும் அமைப்பு, அவர்களுடைய கருத்துக்கள், நாட்டில் நிலவும் அரசியல் சூழ்நிலை முதலியவை அடக்கச் செலவுப் பணவீக்கத்தின் விளைவுகளை நிர்ணயம் செய்யும். தொழிலுக்கு ஏற்படும் தேவையும் அதன் அளிப்பும் கூலி உயர்வதற்குக் காரணமாக இருக்காது. தொழிலாளர்களுடைய போராட்டம், கூலிகள் உயர்வது முதலியவைகளுக்கு வேறு காரணங்கள் இருக்கின்றன. கூலிகள் உயர்வதற்கு அளிப்பும் தேவையும் காரணங்களாக இருந்தபோதிலும் அடக்கச் செலவுப் பணவீக்கம் ஏற்படாமல் இருக்காது.

இங்கு நாம் பல வினாக்களுக்கு விடைகள் தேடவேண்டும். நாம் அடக்கச் செலவுக் கோட்டில் ஒரு புள்ளியைக் காட்டி, அதைப் பணவீக்கம் தொடக்கமாகும் இடம் என்று சொல்ல முடியுமா? முன்பு, கோட்டில் இத்தகைய புள்ளி இருப்பதாக நாம் கற்பனை செய்துகொண்டோம். ஆனால் இப்படிக் கற்பனை செய்யும்பொழுது நாம் பிரச்சினைக்கு மிகவும் எளிய தோற்றத்தைக் கொடுக்கின்றோம். நாட்டில் வேலை நிறைவு ஏற்படுவதற்கு முன்பே சில தொழில்களில் கூலிகள் உயர்ந்துவிடலாம். வேலை வாய்ப்புக்களும் படிப்படியாக உயரலாம். அல்லது கூலிகள் திடீரென்று உடனடியாக நாடெங்கும் உயரலாம். மேலும் வேலை வாய்ப்புக்கள் படிப்படியாகவே பெருகும். இறுதிநிலைச் செலவு

உயரும் பொழுதே அடக்கச் செலவும் உயரும் என்று நாம் கருத முடியாது. பொருளாதாரத்தில் மாறுதல்கள் எவ்வளவு விரைவில் ஏற்படுகின்றன என்பதையும், மேலும் ஏற்படும் மாறுதல்களைப் பற்றிய கருத்துக்களையும், தொடர்ச்சியாகப் பொருளாதாரத்தில் ஏற்படும் முன்னேற்றத்தையும் அதிலிருந்து நாடு மீட்சியடைதலையும் நாம் நன்கு பரிசீலனை செய்யவேண்டும். பல்வேறு தொழில்கள் பல்வேறு வீதங்களில் பெருகலாம். கூலிகளும் பல்வேறு வீதங்களில் மாறும். நாட்டில் வேலை நிறைவு ஏற்படும்பொழுது வேலையின்மையே இருக்காது என்று நாம் கருதமுடியாது. இங்கிலாந்தில் 1949 முதல் 57 வரை வேலை வாய்ப்புப் பெருகியதால் 1½ மில்லியன் பேர்கள் புதிதாக வேலையில் அமர்ந்தனர். ஆனால் 250,000 பேர்கள் வேலையில்லாமல் இருந்தனர். வேலை செய்யக்கூடியவர்களின் எண்ணிக்கை இக்காலத்தில் அதிகரித்தது. நாட்டில் வேண்டிய தொழிலாளர்கள் இல்லாவிடில் வேலையில்லாதவர்கள் புதியதாக வேலை செய்ய முன்வருவார்கள். உற்பத்திப் பெருக்கம் பூர்த்தியடைவதற்கு முன்பே அடக்கச்செலவுக்கோட்டின் வடிவம் மாறலாம்.

உற்பத்தி ஒரு நிலையை அடையும்பொழுது அடக்கச் செலவுப் பணவீக்கம் தொடங்குகிறது என்று நாம் கூறமுடியாது. ஆனால் உற்பத்தி ஓரளவு பெருகுவதற்குள் பணவீக்கம் ஏற்படாது. அது ஓரளவு பெருகிய பிறகு பணவீக்கம் ஏற்படாமல் இருக்காது. ஆகையால் உற்பத்தி பெருகும்பொழுது ஒரு படிவத்தில் மாறுதல்கள் ஏற்படலாம். அடக்கச் செலவுப் பணவீக்கத்தின் தொடக்கத்தைப் பற்றி நாம் எதையும் திட்டவட்டமாகக் கூறமுடியாது. அதாவது அது ஒரு குறிப்பிட்ட காலத்தில் தொடங்குகின்றது என்று நாம் சொல்லமுடியாது. உற்பத்தி ஓரளவு பெருகிய பிறகு பணவீக்கம் ஏற்படும் என்றுகூட நாம் கூறமுடியாது. ஏனெனில் தொழிலாளர்கள் நீண்ட காலம் உயர்ந்த கூலியைப் பெற்றதால் மேலும் அதிகமான கூலி வேண்டும் என்று போராடலாம். ஆனால் கூலிகள் உயரும்பொழுது உற்பத்தி பெருகாமல் இருக்கலாம். அல்லது உற்பத்தி குறையலாம். இந்த நிலையில் வளரும் பணவீக்கத்தை நாம் அடக்கச் செலவுப் பணவீக்கம் என்றே சொல்ல வேண்டும். செயற்படுத்தும் தேவை பெருகுவதால் இத்தகைய பணவீக்கம் ஏற்படவில்லை.

தேவைப் பணவீக்கம் முதிர்வு பெற்ற பிறகு அடக்கச் செலவுப் பணவீக்கம் ஏற்படும் என்பதைக் கடந்த 50 ஆண்டுகளில் நாம் கண்கூடாகப் பார்த்தோம். கூலிகள் உயர்வதால் முதலாளிகள் சில தொழிலாளர்களை வேலையிலிருந்து விலக்கக்கூடாது. மேலும் விலைகள் உயரும்பொழுது மக்கள் முன்பைவிடப் பண்டங்களைக்

குறைந்த அளவில் வாங்கக்கூடாது. ஏனெனில் வேலையின்மை ஏற்பட்டாலோ அல்லது தேவை குறைந்தாலோ பணவீக்கம் வளர்ச்சியடையாது. இதுவரை நாம் அயல் நாடுகளுடன் வர்த்தகத் தொடர்பு கொள்ளாத நாட்டில் அடக்கச் செலவுப் பணவீக்கம் எவ்வாறு பெருகும் என்பதை விளக்கினோம். ஆனால் அயல்நாடுகளுடன் வர்த்தகத் தொடர்புகொண்டுள்ள நாட்டில் சாதாரணமான அடக்கச் செலவுப் பணவீக்கம் ஏற்படாது. ஏனெனில் பணவீக்கத்தினால் ஏற்படும் தீமைகளை மக்கள் வெறுப்பார்கள். ஆகையால் தேவை பெருகுவதால்தான் இந்த நாடுகளில் பணவீக்கம் ஏற்படும்.

பணவீக்கத்துடன் தொடர்புகொள்ளாத காரணங்கள் அடக்கச் செலவை உயர்த்துமா என்று நாம் கவனிக்கவேண்டும். இத்தகைய காரணங்கள் பணவீக்கத்தை ஏற்படுத்தும் என்பதை மூன்று உதாரணங்களைக்கொண்டு நாம் எடுத்துக்காட்டலாம். மந்த காலத்தில் தொழிலாளர்கள் கூலியை உயர்த்துவதற்கும், வேலை நேரத்தைக் குறைப்பதற்கும் முயற்சி செய்யலாம். பிரான்சு நாட்டில் 1936-37ஆம் ஆண்டில் 'ப்ளம் சோதனை'யைச் (Blum experiment) செயற்படுத்தின. இதன்படி கூலிகளை 30 சதவீதம் உயர்த்தினர். இதன் விளைவாக வாழ்க்கைச் செலவும் 30 சதவீதம் உயர்ந்தது. ஆனால் உற்பத்தி பெருகவே இல்லை. 1933-ல் அமெரிக்காவில் தேசீய மீட்சித் திட்டத்தின்படி (National Recovery Administration) விவசாயிகளும் தொழிலாளர்களும் முன்பைவிட அதிக வருமானத்தைப் பெற்றார்கள்.

இறக்குமதியான பொருள்களுடைய விலைகள் உயர்வதாலும் பணவீக்கம் ஏற்படலாம். ஒரு நாட்டில் விலைகள் உயரும்பொழுது விலையுயர்வு மற்ற நாடுகளுக்கும் பரவலாம். இறக்குமதிப் பொருள்களின் விலைகள் உயர்வதால் இங்கிலாந்து போன்ற தொழில் செறிந்த நாடுகளில் மற்ற விலைகளும் உயரும். விவசாயப் பொருள்களை உற்பத்தி செய்யும் நாடுகளில் ஏற்றுமதிப் பண்டங்களின் விலைகள் முதன்முதலில் உயரும். இவ்வாறு வளர்ச்சியடையும் அடக்கச் செலவுப் பணவீக்கம் எல்லாத் தொழில் வளர்ச்சி பெற்ற நாடுகளுக்கும் விரைவில் பரவும். கொரியாவில் போர் மூண்டபின் இங்கிலாந்திலிருந்து இறக்குமதியான பொருள்கள் இரண்டு ஆண்டுகளில் 50 சதவீதம் உயர்ந்தது. வாழ்க்கைச் செலவும் உற்பத்தியின் அடக்கச் செலவும் இதே விகிதத்தில் உயர்ந்தன. சில நாடுகளில் அறுவடை பாதிக்கப்பட்டதால் உணவுப் பொருள்களிலும் மற்ற முக்கியமான பொருள்களிலும் பற்றாக்குறை ஏற்பட்டது. இதைத் தொடர்ந்து வாழ்க்கைச் செலவு உயரலாம்; தொழிலாளர்கள் அதிகமான கூலியை விரும்பலாம்.

செலாவணியின் புறமதிப்புத் தாழ்வடைவதாலும் பணவீக்கம் ஏற்படலாம். 32வது அதிகாரத்தில் செலாவணியின் புறமதிப்பு மாறுவதால் எவ்வாறு இறக்குமதிப் பொருள்களின் விலைகள் உயரலாம் என்பதையும், ஏற்றுமதிப் பொருள்களின் விலைகள் குறையலாம் என்பதையும் நாம் விவரமாகக் காணலாம். இத்தகைய பணவீக்கம் எவ்வாறு வளர்ச்சியடையும் என்பதை நாம் மேலே விளக்கியிருப்பதால் அதை இங்கு நாம் ஆராய்ச்சி செய்யவேண்டியதில்லை.

**அடக்கப் பெற்ற பணவீக்கம் (Suppressed inflation)**

உற்பத்தி பெருகாமல் மக்களுடைய செலவு மட்டும் பெருகுவதால் பணவீக்கம் ஏற்படுகின்றது. ஆனால் விலைகள் உயராமல் இருக்கலாம். விற்பனையாளர்கள் தம்மிடம் இருக்கும் பண்டங்களை மக்களுக்குப் பகிர்ந்து கொடுக்கலாம். அவர்கள் விலைகளை உயர்த்துவதைவிட இந்த முறையைப் பின்பற்றலாம். அவர்கள் அதிக இலாபம் ஈட்டுகின்றனர் என்று மக்கள் கூறுவார்கள் என்ற அச்சமே இதற்குக் காரணமாக இருக்கலாம். அல்லது அரசாங்கம் விலையுயர்வைத் தடைசெய்யலாம். அரசாங்கம் விலைகளைக் கட்டுப்படுத்தினால், மக்களுடைய தேவைக்கேற்ற அளவு விற்பனை பெருகாது. பங்கீட்டு முறை (rationing) மூலம் அரசினர் மக்களுடைய தேவையையும், விலைகளையும் கட்டுப்படுத்தலாம். உணவு, உடை முதலிய பொருள்கள் நாட்டில் வேண்டிய அளவு கிடைக்காதபொழுது பங்கீட்டுமுறை மூலம் அரசாங்கம் எல்லோருக்கும் பொருள்களை நேர்மையான முறையில் பகிர்ந்து கொடுக்கும். பங்கீட்டுமுறை அமலில் இல்லாவிடில் விலைகள் உயரும். கச்சாப் பொருள்களையும் இதேமுறையில் பகிர்ந்து கொடுப்பார்கள். அரசாங்கத்தின் உத்திரவைப் பெற்ற பிறகே சில பொருள்களை மக்கள் வாங்கலாம்.

இக் கட்டுப்பாடுகள் மக்கள் செலவு செய்யும் தொகைக்கும், நாட்டில் உற்பத்தியாகும் பொருள்களின் அளவுக்கும் ஒரு சமன்பாட்டை ஏற்படுத்தா. ஆகையால் பணவீக்கமும் மறையாது. கட்டுப்பாடுகள் தேவையைக் குறைக்கின்றன. உபரித் தேவை கட்டுப்பாடுகளுக்குட்படாமலே இருக்கும். அரசாங்கம் நிலக்கரியின் அளிப்பைக் (Supply) கட்டுப்படுத்தினால் மக்கள் மின்சக்தியை அதிகமாகப் பயன்படுத்துவார்கள். மின்சக்தியின் அளிப்பிலும் பற்றுக்குறை ஏற்படும்.

கட்டுப்பாடுகள் பணவீக்கத்தை முற்றிலும் ஒழிக்காமல் கட்டுப் படுத்துகின்றன. ஆனால் குறுகிய காலத்தில் விலைக் கட்டுப்பாட்டுக் கொள்கை பணவீக்கத்தின் கொடுமையைத் தணிக்கும். உற்பத்தியாளர்களும், விற்பனையாளர்களும்

சாதாரணமாக ஏராளமான சரக்குகளை வைத்திருப்பார்கள். பற்றுக்குறை ஏற்படுவதற்குமுன் அவர்கள் இச் சரக்குகளை விற்பனை செய்யலாம். பற்றுக்குறை ஏற்படுவதால் மக்கள் பணத்தைச் சேமிப்பார்கள். அரசாங்கம் புகையிலை, பீர் (beer) முதலிய பொருள்கள் மீது விதிக்கும் வரி மக்களுடைய செலவை மேலும் குறைக்கும். வரியும் சேமிப்பும் மக்களுடைய உபரி வருமானத்தைக் கட்டுப்படுத்துவதால் பொருள்களின் அளிப்புக்கும் தேவைக்கும் இடையே ஒரு சமன்பாடு ஏற்படுகின்றது. தேவைப் பணவீக்கம் மிகவும் தீமையான விளைவுகளை ஏற்படுத்தும். கூலிகள் உயர்வதால் வளர்ச்சியடையும் பணவீக்கமும் கிட்டத்தட்ட இதே தீமையை ஏற்படுத்தும். கூலிகளை உயர்த்துவதற்காக தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் (strike) செய்வதை அரசினர் தடை செய்யலாம். அல்லது உணவுப்பொருள்களின் விலைகள் உயரும் பொழுது அரசாங்கம் உதவிக்கொடை மூலம் (subsidy) விலைகளைக் குறைக்கலாம். விலைகள் ஒரே நிலையிலிருந்தால் கூலிகள் உயர வேண்டுமென்று தொழிலாளர்கள் வற்புறுத்தக்கூடாது என்று அரசியலார் தொழிலாளர்கள் சங்கங்களைக் கேட்டுக்கொள்ளலாம். அரசாங்கம் தொழிலாளர்கள் சங்கங்களுடன் ஒப்பந்தம் செய்து கொள்ளாவிடினும் கட்டுப்பாடுகள் மூலம் விலைகள் உயராமல் இருக்கும்படி செய்தால் தொழிலாளர்கள், கூலிகளை உயர்த்த வேண்டும் என்று போராடமாட்டார்கள்.

ஆனால் இந்தக் கொள்கையின் குறைபாடு நாளடைவில் எல்லோருக்கும் வெளிப்படையாகத் தோன்றும். விலைகள் உயர்ந்தாலும், உயராவிடினும் நாட்டில் பணவீக்கமும் பற்றுக்குறையும் இருப்பதால் முதலாளிகள் பொருளுற்பத்தியைப் பெருக்க முயற்சி செய்வார்கள். இந்த நிலையில் உற்பத்தியைப் பெருக்கவே எல்லோரும் முயற்சி செய்வார்கள். ஆனால் இந்த நிலையில் தான் தொழிலாளர்கள் விடுமுறை நாட்கள் வேண்டுமென்றும், வேலை நேரத்தைக் குறைக்கவேண்டுமென்றும், கூலிகளை உயர்த்த வேண்டுமென்றும் கேட்பார்கள். இவ்வாறு அவர்கள் கேட்பதில் வியப்பொன்றும் இல்லை. நாட்டில் அடக்கப்பெற்ற பணவீக்கம் (suppressed inflation) இருக்கும்போது வேலைசெய்து வருமானத்தைப் பெறுதல் கடினமல்ல. ஆனால் பணத்தைச் செலவு செய்வது தான் கடினமாக இருக்கும். சாதாரணமாகச் செலாவணி (currency) கொண்டிருக்கும் மதிப்பைப் பங்கீட்டுச் சீட்டுகள் (ration coupons) பெற்றுவிடும். செலவாணியைக் கொண்டு மிகவும் முக்கியமான பொருள்களை நாம் வாங்கமுடியாது. விலைகள் மட்டும் வாழ்க்கைச் செலவை நிர்ணயம் செய்யவில்லை என்பதை இந்த நிலை புலப்படுத்தும்.

அடக்கப்பெற்ற பணவீக்கம் உற்பத்திக்கு ஒரு தூண்டுதலைக் கொடுக்காது. ஏனெனில் மக்கள் பெறும் உபரி வருமானத்தை அவர்கள் பயன்படுத்தமுடியாது. இது அடக்கப்பெற்ற பணவீக்கத்தின் பெரிய குறைபாடாகும். மேலும் இப் பணவீக்கம் தேவையின் இயல்பை மாற்றும். பங்கீட்டு முறைக்குட்பட்ட பொருள்களை மக்கள் மிகவும் குறைவாகவே வாங்கவேண்டியிருக்கின்றது. பங்கீட்டுக் குட்படாத பொருள்களை அவர்கள் எப்பொழுதும் வாங்குவதைவிட மிகுதியாக வாங்குவார்கள். கால்பந்துப் போட்டிகளைப் பார்க்கவும், பீர் (beer), புகையிலை முதலிய பொருள்களை வாங்குவதற்கும் மக்கள் மிகுதியான தொகையைச் செலவு செய்யலாம். ஆனால் ரொட்டி, பாலடைக் கட்டி முதலிய பொருள்களை வாங்குவதற்கு அதிகமான பணத்தைச் செலவு செய்யமுடியாது. போகப் பொருள்கள் (luxuries) பங்கீட்டுக்குட்படாமல் இருப்பதால் அவைகளுடைய உற்பத்தி பெருகும். முன்பைவிட அதிகமான தொழிலாளர்கள் அப் பொருளை உற்பத்தி செய்யவேண்டும். தொழிலாளர்கள் சில தொழில்களை விட்டு விலகி வேறு தொழில்களை நாடிச் செல்லவேண்டும். கட்டுப்பாடுகளும் பங்கீடும் இல்லாவிடில் தொழிலாளர்கள் பங்கீட்டுக்குட்பட்ட ஒரு தொழிலைவிட்டு அதற்குட்பட்ட மற்றொரு தொழிலை நாடிச் செல்லலாம். மக்கள் விரும்பும் பண்டங்களை வாங்கமுடியாத நிலையில் இருக்கின்றனர்.

கட்டுப்பாடுகளை நிருவாகம் செய்யப் பலர் பணிபுரியவேண்டும். பொருளுற்பத்திக்குத் தேவையான தொழிலாளர்களுள் ஒரு பகுதியினர் மேற்கூறிய நிருவாக வேலையைச் செய்யவேண்டும். அடக்கப்பெற்ற பணவீக்கத்தின் இக் குறையைச் சிலர் மிகைப்படுத்திக்கூறுவர். கட்டுப்பாடுகள் அமலில் வருவதால் லஞ்ச ஊழல்களும், கள்ளமார்க்கட்டும் வளர்ச்சியடையும். விலைகளை அடிப்படையாகக்கொண்டு இயங்கும் பொருளாதாரம் செயற்கை முறையில் இயங்குவது இதன் பெரிய குறையாகும். போர்க்காலத்தில் அடக்கப்பெற்ற பணவீக்கத்தைப் பயன்படுத்தி அரசாங்கம் சில துறைகளில் தேவையைக் கட்டுப்படுத்தவேண்டும். அமைதி நிலவும் காலத்தில்கூட சில சமயங்களில் கட்டுப்பாடுகளை அமலில் கொண்டுவரவேண்டிய நிலைமை ஏற்படலாம். மொத்தத் தேவை பெருகுவதால் பணவீக்கம் ஏற்பட்டால் நாம் பொதுவாகத் தேவையைக் குறைக்கவேண்டும். விலைக்கட்டுப்பாடுகள் மூலம் சில குறிப்பிட்ட பண்டங்களுடைய விலைகளை மட்டும் கட்டுப்படுத்துவது தவறாகும். பணவீக்கம் தீய விளைவுகளை ஏற்படுத்தாமல் இருக்க வேண்டுமென்றால் குறிப்பிட்ட சில நடவடிக்கைகளை எடுக்காமல் பொதுவாக மொத்தத் தேவையைக் குறைக்கவேண்டும். மொத்தத் தேவையும், அளிப்பும் நிர்ணயம் செய்யும் விலைகளிலிருந்து நாட்டில் நிலவும் விலைவாசி வேறுபட்டிருக்கும்.

## 27 வது அதிகாரத்தின் பிற்சேர்க்கை

# குறியீட்டெண்கள்

## (Index Numbers)

ஓர் ஆண்டு சில குறிப்பிட்ட பொருள்களுடைய விலைகளைக் கொண்டு நாம் குறியீட்டெண்ணைத் தயார் செய்யவேண்டும். ஓர் ஆண்டை நாம் மூல ஆண்டாகக் (base year) கொண்டு மற்ற ஆண்டுகளில் நிலவும் விலைகளை மூல ஆண்டின் விலைகளுடன் ஒப்பிடலாம். ஒரு ரொட்டித்துண்டின் விலை முதல் ஆண்டு 8 பென்சாகவும் இரண்டாவது ஆண்டு 6 பென்ஸாகவும் மூன்ருவது ஆண்டு 7 பென்சாகவும் நான்காவது ஆண்டு 9 பென்சாகவும் இருந்தால் நாம் மூல ஆண்டில் (முதல் ஆண்டு) குறியீட்டெண்ணை 100 என்றும், இரண்டாவது ஆண்டில் 75 என்றும், மூன்ருவது ஆண்டில் 87.5 என்றும் நான்காவது ஆண்டில் 112.5 என்றும் சொல்லலாம். இந்த எண்களை நாம் விலைத் தொடர்புகள் (price relatives) என்று கூறலாம். மற்றப் பொருள்களின் விலைகளையும் விலைத்தொடர்புகள் மூலம் நாம் வெளியிடலாம். விலைத்தொடர்புகளை நாம் பார்த்தவுடனேயே விலை எவ்வளவு சதவீதம் மாறிவிட்டது என்பதையும், மூல ஆண்டுக்குப்பின் விலை எந்த விகிதத்தில் மாறியது என்பதையும் அறியலாம். பல பண்டங்களின் விலைத்தொடர்புகளைக் கொண்டு சராசரி விலையை நாம் கணக்கிடலாம். அதாவது எல்லா விலைத் தொடர்புகளையும் கூட்டி, கூட்டுத்தொகையைப் பண்டங்களின் எண்ணிக்கையைக் கொண்டு வகுத்தால் குறியீட்டெண் கிடைக்

1 விலைத்தொடர்புகளைக் கூட்டுவதற்குப்பதிலாக அவைகளைப் பெருக்கி நாம் குறியீட்டெண்ணைத் தயார் செய்யலாம். மொத்தம் n பண்டங்கள் இருந்தால் பெருக்குத்தொகையின் சமூலத்தை (root) நாம் கண்டுபிடிக்கவேண்டும். இப்படிச் செய்வதால் நாம் ஜியாமெட்ரிக் இடைநிலையை (geometric Mean) கண்டுபிடிக்கலாம் சாதாரண முறையில் நாம் கணக்கியல் இடைநிலையைக் (Arithmetic Mean.) கண்டுபிடிக்கலாம்.

கும். ரொட்டி, வெண்ணெய், பால், முட்டை, உருளைக்கிழங்கு முதலிய ஐந்து பண்டங்களின் விலைகளைக் கொண்டு கீழ்க்கண்ட குறியீட்டெண்ணைத் தயாரிக்கலாம்.

## பட்டியல் 20

### விலைத்தொடர்புகள்

| | ஆண்டு 1 | ஆண்டு 2 | ஆண்டு 3 | ஆண்டு 4 |
|---|---|---|---|---|
| ரொட்டி | 100 | 75 | 87·5 | 112·5 |
| வெண்ணெய் | 100 | 90 | 95 | 105 |
| பால் | 100 | 105 | 110 | 120 |
| முட்டை | 100 | 110 | 80 | 90 |
| உருளைக் கிழங்கு | 100 | 70 | 200 | 120 |
| மொத்தம் | 500 | 450 | 572·5 | 547·5 |
| சராசரி | 100 | 90 | 114·5 | 109.5 |

90, 114.5, 109.5என்ற எண்கள் இரண்டாவது, மூன்றாவது, நான்காவது ஆண்டுகளில் விலைகள் எவ்வாறு மாறின, மூல ஆண்டின் விலை வாசியிலிருந்து எந்த விகிதத்தில் மாறின என்பதைக் காட்டுகின்றன. இரண்டாவது ஆண்டில் விலைகள் 10 சதவீதம் குறைவாகவும், மூன்றாவது ஆண்டில் 14.5சதவீதம் அதிகமாகவும் நான்காவது ஆண்டில் 9.5 சதவீதம் அதிகமாகவும் இருந்தன. குறியீட்டெண்கள் மாறுவதற்குத் தகுந்தவாறு பணத்தின் மதிப்பும் மாறும். இரண்டாவது ஆண்டில் பணத்தின் மதிப்பு $\frac{100}{90}$ ஆக இருந்தது; அதாவது111 சதவீதமாக இருந்தது. மூலஆண்டில் 100 சதவீதமாக இருந்தது.

முதன்முதலில் இந்த முறையையே கையாண்டு குறியீட்டெண்களைத் தயார் செய்தனர். ஆனால் இந்த முறை சிறந்ததென்று நாம் சொல்லமுடியாது. பட்டியலில் காணும் எல்லாப் பண்டங்களும் ஒரேமாதிரி முக்கியமானவை என்று கருதி நாம் இந்த முறையைப் பின்பற்றுவதே இதன் பெரிய குறைபாடாகும்.

ரொட்டியின் விலை மாறினாலும், சாக்லட்டின் (chocolate) விலை மாறினாலும் ஒரே விளைவு ஏற்படுவதாகக் குறியீட்டெண் காட்டு கின்றது. ஆனால் ரொட்டியின் விலை சிறிதளவு உயர்ந்தாலும் வாழ்க்கைச் செலவு உயர்ந்துவிடும். சாக்லட்டின் விலை கணிச மான அளவு உயர்ந்தாலும் வாழ்க்கைச் செலவு பாதிக்கப்படாது. ஆகையால் குறியீட்டெண்ணைத் தயார் செய்யும்பொழுது நாம் பொருள்களின் முக்கியத்துவத்திற்குத் தகுந்த நிறையை (weight) அவைகளுக்குக் கொடுக்கவேண்டும்.

**நிறையிடுதல் (weighting)**

சாதாரண விலைத்தொடர்புகளை நாம் பயன்படுத்துவதற்குப் பதிலாக நிறையிட்ட விலைத்தொடர்புகளைக் கொண்டு (weighted price relatives) குறியீட்டெண்களைத் தயார் செய்யலாம். 20வது பட்டியலில் காணும் பொருள்களுக்கு நிறை கொடுப்பதற்கு நாம் பின்வரும் எண்களைப் பயன்படுத்தவேண்டும் என்று கற்பனை செய்துள்ளோம்.—10,3,4,1,2. இவ்வெண்களை நாம் நிறை (weight) என்று கூறலாம். இவ்வெண்களைக் கொண்டு விலைத்தொடர்புகளை நாம் பெருக்கவேண்டும். பெருக்குத்தொகைகளைக் கூட்டிய பிறகு அதை நிறை எண்களுடைய கூட்டுத் தொகையால் வகுக்க வேண்டும். அதை மொத்தப் பண்டங்களின் எண்ணிக்கையைக் கொண்டு வகுக்கக்கூடாது.

20ஆம் பட்டியலில் காணும் குறியீட்டெண் நிறையிட்ட குறியீட்டெண்ணாகும். இரண்டாவது ஆண்டில் 15.5 சதவீதம் விலைகள் குறைந்துவிட்டன. முன்பு நாம் விளக்கிய சாதாரணக் குறியீட்டெண் விலைகள் 10 சதவீதமே குறைந்தன என்று காட்டியது. நிறையிட்ட குறியீட்டெண் நிறையிடாத எண்ணை விடக் குறைவாக இருக்கின்றது. ஏனெனில் மிகவும் முக்கியமான பொருளின் விலை, (அதாவது மக்கள் தம் வருமானத்தில் பெரும் பகுதியை ரொட்டி வாங்குவதற்கே செலவு செய்வார்கள்) மிகவும் அதிகமாகக் குறைந்திருக்கின்றது. 21ஆம் பட்டியலில் இரு பத்திகளில் (columns) நாம் செலவுத் தொடர்புகளைக் (expenditure relatives) காணலாம். 21ஆம் பட்டியலில் 4வது பத்தியில் காணும் எண்கள் மக்கள் ஒவ்வொரு பொருளையும் வாங்குவதற்காகச் செய்யும் செலவைக்காட்டுகின்றது. 4ஆம் பத்தி முதல் ஆண்டின் செலவையும் 5ஆம் பத்தி இரண்டாவது ஆண்டின் செலவையும் காட்டுகின்றன. ஒவ்வொரு பொருளுக்கும் அதன் முக்கியத்துவத்திற்குத் தகுந்த நிறையைக் கொடுக்கவேண்டும். மொத்தச் செலவுக்கும் குறிப்பிட்ட சில பண்டங்களை வாங்குவதற்காக நாம் செய்யும் செலவுக்கும் இடையே உள்ள விகிதத்தை ஒட்டியே நாம்

பண்டங்களுக்கு நிறை கொடுக்கவேண்டும். மற்ற எல்லாப் பண்டங்களுக்கும் நாம் எவ்வளவு நிறையைக் கொடுக்கின்றேமோ அதே நிறையை ரொட்டிக்கு மட்டும் கொடுக்கின்றேம். நமது வருமானத்தில் அரைப் பகுதியை நாம் ரொட்டி வாங்குவதற்குச் செலவு செய்வதால்தான் ரொட்டிக்கு அரைப்பகுதி நிறையைக் கொடுக்கின்றேம். 2000 பண அலகுகளை (monetary units) நாம் செலவு செய்தால் அதில் 1000 அலகுகளைக் கொண்டு ரொட்டியை மட்டும் வாங்குகிறேம். ரொட்டியின் விலை 25 சதவீதம் குறைந்தால், நாம் அதற்காகச் செய்யும் செலவும் 25 சதவீதம் குறையும். முன்பு 1000 அலகுகளைக் கொண்டு வாங்கிய ரொட்டியை இப்பொழுது 750 அலகுகளைக் கொண்டு வாங்கலாம். வெண்ணெய், பால், முட்டை, உருளைக்கிழங்கு முதலிய பொருள்களின் விலைகளும் குறைந்தால் அவைகளுக்காகச் செய்யும் செலவுத் தொகையும் குறையும். முதல் ஆண்டில் 2000 அலகுகளைக் கொண்டு நாம் வாங்கிய பொருள்களை இரண்டாவது ஆண்டில் 1690 அலகுகளைக் கொண்டு வாங்கலாம். 1690: 2000 என்ற விகிதத்தில் வாழ்க்கைச் செலவு குறைந்திருக்கின்றது. 2000 : 1690 என்ற விகிதத்தில் பணத்தின் வாங்கும் சக்தி பெருகியிருக்கின்றது. அதாவது ஒரு குடும்பத்தினர் வாங்கும் பொருள்களின் மொத்த அடக்கச் செலவு எவ்வாறு மாறுகின்றது என்பதை நாம் கணக்கிடுகின்றேம். இதையே நாம் நிறையிட்ட குறியீட்டெண் என்று கூறுகின்றேம். விலைகள் 10 சதவீதம் குறைந்தால் ஒரு குடும்பத்தினர் வாங்கும் பொருள்களை முன்பைவிட 10 சதவீதம் குறைவான தொகையைக் கொண்டு வாங்கலாம். விலைகள் 10 சதவீதம் உயர்ந்தால் முன்பு வாங்கினபொருள்களைவாங்க நாம் 10சதவீதம் மிகுதியான தொகையைச் செலவு செய்யவேண்டும். அதாவது வாழ்க்கைச் செலவு 10 சதவீதம் உயரும். வாழ்க்கைச் செலவு ஆண்டுதோறும் மாறலாம். இந்த மாறுதல்களைக் கொண்டு பணத்தின் மதிப்பை நாம் கணக்கிடலாம். வாழ்க்கைச் செலவுக் குறியீட்டெண்ணைத் தயார்செய்வதற்கு நாம் எப்பொருள்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும்? அவைகளுக்கு எவ்வளவு நிறையைக் கொடுக்கலாம்? பல்வேறு குடும்பங்கள் எவ்வாறு வருமானத்தைச் செலவு செய்கின்றன என்பதை நாம் அறியவேண்டும். ஒவ்வொரு பண்டத்தையும் வாங்குவதற்காகக் குடும்பங்கள் சராசரியில் செலவு செய்யும் செலவு, குடும்பங்களுடைய வருமானத்துடன் கொண்டிருக்கும் விகிதத் தொடர்பைக்கொண்டு பல்வேறு பண்டங்களின் முக்கியத்துவத்தை நாம் அறியலாம். பிறகு விலைகளில் ஏற்படும் மாறுதல்களைக் கொண்டு நாம் குறியீட்டெண்களைத் தயார்செய்யலாம்,

## பட்டியல் 21

### நிறையிடுதல் (Weighting)

| | விலைத்தொடர்புகள் ஆண்டு 1 | விலைத்தொடர்புகள் ஆண்டு 2 | நிறை எண்கள் | செலவுத்தொடர்புகள் (விலைத்தொடர்புகள் x நிறை எண்கள்) ஆண்டு 1 | செலவுத்தொடர்புகள் (விலைத்தொடர்புகள் x நிறை எண்கள்) ஆண்டு 2 |
|---|---|---|---|---|---|
| ரொட்டி | 100 | 75 | 10 | 1000 | 750 |
| வெண்ணெய் | 100 | 90 | 3 | 300 | 420 |
| பால் | 100 | 105 | 4 | 400 | 270 |
| முட்டை | 100 | 110 | 1 | 100 | 110 |
| உருளைக்கிழங்கு | 100 | 70 | 2 | 200 | 140 |
| மொத்தம் | 500 | 450 | 20 | 2000 | 1,690 |
| சராசரி | 100 | 90 | — | 100 | 84·5 |

**குறியீட்டெண்ணைத் தயார் செய்வதற்கு இடையூறுகள்**

எல்லா விலைகளும் ஒரேவிதமாக மாறினால் நாம் குறியீட்டெண்களையே தயார்செய்யவேண்டாம். ஏனெனில் ஏதாவது ஒரு பண்டத்தின் விலையில் ஏற்படும் மாறுதலைக் கொண்டே எல்லா விலைகளும் எவ்வாறு மாறுகின்றன என்பதை நாம் அறியலாம். ஆனால் எல்லா விலைகளும் ஒரேவிதமாக மாறுவதில்லை. பொதுவாக எல்லா விலைகளும் உயரும்பொழுது சில விலைகள் குறையவும் குறையலாம். ஆகையால் விலைகளின் சராசரியை நாம் கணக்கிடவேண்டும். ஒரு பண்டத்தின் விலை மாறுவதால் பலர் பல்வேறு முறைகளில் பாதிக்கப்படலாம். ரோல்ஸ்ராய்ஸ் மோட்டார் வண்டிகளின் விலை மிகுதியடைவதால் ஒரு குறிப்பிட்ட வகுப்பினரே பாதிக்கப்படுவார்கள். இந்த விலையுயர்வு மற்ற வகுப்பினரைப் பாதிக்காது. ரொட்டியின் விலை அதிகரிப்பதால் செல்வர்களைவிட, ஏழைகளே பாதிக்கப்படுவார்கள். பலர் பல்வேறு பண்டங்களைப் பல்வேறு அளவுகளில் வாங்குகின்றனர். ஒரு வகுப்பினருக்காக நாம் தயார் செய்யும் குறியீட்டெண்ணில் நாம் சேர்க்கும் நிறை (weight) மற்ற வகுப்பினருக்குப் பொருந்தாது. வருமானத்திலும், விருப்பத்திலும், மக்கள் வசிக்கும் இடங்களிலும் பல்வேறு குடும்பத்தினரிடையே வேற்றுமைகள் இருப்பதால் நாம் ஒவ்வொரு வகுப்பினருக்கும் ஒரு தனிக் குறியீட்டெண்ணைத் தயார்செய்யவேண்டும். வெவ்வேறு வகுப்பினர் வெவ்வேறு பண்டங்களைப் பயன்படுத்துவர். ஆகை

யால் எல்லா வகுப்பினருக்கும் ஒரே பொதுவான வாழ்க்கைச் செலவுக் குறியீட்டெண்ணைத் தயார்செய்வது சரியல்ல. ஆனால் நடைமுறையில் பல்வேறு வாழ்க்கைச்செலவுக் குறியீட்டெண்களை நாம் தயார்செய்யவேண்டியதில்லை. நிறையிடுதலில் வேறுபாடுகளைப் புகுத்துவதால் நாம் வெவ்வேறு வகுப்பினருடைய நிலையை எளிதில் கணக்கிடலாம். ஆனால் பல்வேறு வருமானத் தொகுதிகளைச் (income groups) சேர்ந்த மக்களுக்கு வெவ்வேறு குறியீட்டெண்களை நாம் தயார்செய்யவேண்டும். தொழிலாளர்களுடைய வாழ்க்கைச் செலவுக் குறியீட்டெண் நடுத்தர வகுப்பினருடைய வாழ்க்கைச் செலவும், மேல்தர வகுப்பினருடைய வாழ்க்கைச் செலவும் எவ்வாறு பாதிக்கப்பட்டிருக்கின்றன என்பதைக் காட்டாது. மக்களுடைய வாழ்க்கைத்தரம் உயர உயர அவர்கள், மருத்துவர், வழக்கறிஞர்கள், தோட்டக்காரர்கள் முதலியவர்களுடைய பணிகளுக்காகச் செலவு செய்வார்கள். தொழிலாளர்கள் இவர்களுடைய பணிகளை நாடுவதில்லை. ஆகையால் அவர்களுடைய குறியீட்டெண்ணைத் தயார்செய்யும்பொழுது இப் பணிகளுடைய விலைகளை நாம் பயன்படுத்தினாலும் இவைகளுக்கு மிகவும் குறைந்த நிறையையே கொடுக்கவேண்டும்.

**பொருள்களை மக்கள் வாங்கும் பழக்கத்தில் ஏற்படும் மாறுதல்கள்**

மக்கள் பல்வேறு காலங்களில் வெவ்வேறு வகைப் பண்டங்களை வாங்குவதால், நாம் குறியீட்டெண்ணைத் தயார்செய்வதற்கு எப்பண்டங்களைத் தேர்ந்தெடுக்கவேண்டும் என்று முடிவுசெய்வது கடினம். மக்கள் புதியதாகச் சில பண்டங்களைப் பயன்படுத்துவதால் ஒவ்வொரு குடும்பமும் தன் வருமானத்தில் ஒரு பகுதியைப் புதிய பண்டங்களுக்காக ஒதுக்கவேண்டும். சில பண்டங்களின் விலைகள் குறைவதாலும், வேறு சில பண்டங்களின் விலைகள் அதிகரிப்பதாலும் மக்கள் தம் செலவு முறையை மாற்றியமைத்துக் கொள்கின்றனர். அரசினர் இலவசக் கல்வி வசதியளிப்பதால் மக்கள் கல்விக்காகப் பணத்தைச் செலவு செய்யவேண்டிய கட்டாயம் நீங்கும். மக்கள் சட்டப்படி இன்சூரன்சுக் கட்டணங்களைச் செலுத்தவேண்டியிருக்கலாம். ஆகையால் முதல் ஆண்டில் மக்கள் வாங்கும் பொருள்களுக்கும் 2வது ஆண்டில் வாங்கும் பொருள்களுக்கும் வேறுபாடு இருக்கும். ஆகையால் இரு ஆண்டுகளில் பணத்தின் மதிப்பை ஒப்பிடுவது சாத்தியமல்ல. ஏனெனில் இரு ஆண்டுகளிலும் மக்கள் ஒரே பொருள்களை வாங்கினால்தான் ஒப்பீடு சரியாக இருக்கும்.[1] முதல் ஆண்டு வாங்கிய பொருள்களு

[1] இது முற்றிலும் சரியல்ல. எனக்கு முதல் ஆண்டு 300 பவுன் கொடுத்த வசதிகளை 2வது ஆண்டு 400 பவுன் கொடுத்தால், பணம் தன் சக்தியில் $\frac{1}{4}$ பாகத்தை இழந்துவிட்டது என்று நான் கூறலாம். முதல் ஆண்டு நான் வாங்கிய

டைய செலவுத்தொகையை இரண்டாவது ஆண்டு நிலவிய விலைகளைக் கொண்டும், இரண்டாவது ஆண்டு வாங்கிய பொருள்களின் செலவுத் தொகையை முதல் ஆண்டின் செலவுத் தொகையைக் கொண்டும் கணக்கிடலாம். முதல் ஆண்டை மூல ஆண்டாகக் கொண்டு இரண்டாவது ஆண்டுக்கு நாம் தயார்செய்த குறியீட்டெண்ணும், இரண்டாவது ஆண்டை மூலமாகக் கொண்டு முதல் ஆண்டுக்கு நாம் தயார்செய்த குறியீட்டெண்ணும் சமமாக இரா. இவ்விரு குறியீட்டெண்களுள் எது உண்மையானது என்றும் நாம் சொல்ல முடியாது. முன்னோக்கிய முறைக் கணக்கு (forward calculation) ஒரு குறியீட்டெண்ணையும் பின்னோக்கிய கணக்கு மற்றொரு கணக்கையும் கொடுக்கின்றன. இரு எண்களுடைய கூட்டுத் தொகையின் சராசரியைப் பயன்படுத்துவதே சிறந்த முறையாகும். இச் சராசரி எண்ணுக்கு நாம் ஒரு விளக்கம் கொடுக்கவேண்டியதில்லை.

மக்கள் பொருள்களை வாங்கும் பழக்கத்தில் ஏற்படும் மாறுதல்கள், மேலே விளக்கியபடி சில சிக்கல்களை ஏற்படுத்துகின்றன. ஆனால் குறுகியகாலத்தில் இந்த மாறுதல்கள் முக்கியமானவையாக இல்லை. ஆனால் இவை நீண்டகாலத்தில் ஒரு முக்கியத்துவத்தைப் பெறுகின்றன. நாம் வாங்கும் பொருள்கள் ஆண்டுதோறும் மிகவும் மாறுவதில்லை. ஆகையால் இந்த மாறுதல்கள் வாழ்க்கைச் செலவைப் பாதியா. புதிய பண்டங்கள் அடிக்கடி புழக்கத்தில் வராததால் வாழ்க்கைச் செலவு அதிகம் மாருது. பண்டங்களின் விலைகள் மாறுவதால் மக்கள் சில பண்டங்களைக் குறைவாகவும், வேறுசில பண்டங்களை மிகுதியாகவும் வாங்குவார்கள் என்றும், அதனால் குறியீட்டெண்ணைத் தயார்செய்வது கடினமாகும் என்றும் நாம் மேலே குறிப்பிட்டோம். ஆனால் இவ்வித மாறுதல்கள் குறியீட்டெண்ணைத் தயார்செய்யும் வேலையைப் பாதிக்கக்கூடிய அளவு ஏற்படுவதில்லை. உதாரணமாக வெண்ணெய் விலை உயர்ந்தால் மக்கள் மார்கரின் என்ற போலி வெண்ணெயை அதிகமாக வாங்குவதில்லை. ஆனால் மிகவும் நீண்டகாலத்தில் பணத்தின் மதிப்பு எவ்வாறு மாறியது என்பதைக் கணக்கிட முடியாது. 1066ஆம் ஆண்டு பவுன்கொண்டிருந்த மதிப்புடன் அது இன்று கொண்டிருக்கும் மதிப்பை நாம் ஒப்பிடமுடியாது.

---

பொருள்கள், 2வது ஆண்டு வாங்கிய பொருள்களிலிருந்து வேறுபட்டிருந்தாலும் பணம் $\frac{1}{4}$ பகுதி மதிப்பை இழந்துவிட்டது என்று கூறலாம். என் சொந்த அனுபவத்தை அடிப்படையாகக் கொண்ட என் கூற்றை மற்றவர்கள் புரிந்துகொள்வது கடினம். அவர்கள் நான் இப்பொழுது கொண்டிருக்கும் விருப்பங்களே என்கூற்றுக்குக் காரணங்களாக இருக்கின்றன என்றும், முதல் ஆண்டில் நான் கொண்டிருந்த விருப்பங்களுக்கு ஏற்றமுறையில் அந்த ஆண்டு வேறுகருத்தை வெளியிட்டிருக்கலாம் என்றும் கூறலாம்.

**சங்கிலிக் குறியீட்டெண்கள் (Chain Index Numbers)**

ஆண்டுதோறும் மக்கள் வாங்கும் பொருள்களின் அளவு மாற லாம். இந்த மாறுதல்களை நாம் நிறைவுகள் மூலம் அளக்கலாம். ஆண்டுதோறும் ஏற்படும் மாறுதல்களுக்குத் தகுந்த நிறையை நாம் விலைத்தொடர்புகளுக்குக் கொடுக்கலாம். இப்படிச் செய்வதால் ஓர் ஆண்டு நிலவும் விலைகளுடன் அடுத்த ஆண்டு நிலவும் விலைகளை இணைக்கலாம். பல்வேறு ஆண்டுகளில் நிலவும் விலைகளை இணைக்கும் கண்ணிகளைக் கொண்டு நாம் ஒரு சங்கலிக் குறியீட் டெண்ணைத் தயார்செய்யலாம். மூல ஆண்டின் விலைகளை 100 என்ற எண் குறிக்கின்றது. இதனுடன் ஒவ்வோர் ஆண்டின் விலைவாசியையும் நாம் இணைக்கலாம். இத்தகைய சங்கிலிக் குறியீட்டெண் (Chain Index Number) இடர்ப்பாடுகளை நீக்காது. அடுத்துவரும் ஆண்டுகளில் ஏற்படும் மாறுதல்கள் முக்கியமானவை அல்ல என்று நாம் கற்பனை செய்துகொண்டே சங்கிலிக் குறியீட் டெண்ணைத் தயார்செய்கின்றோம். ஆனால் இந்த மாறுதல்கள் மிகவும் முக்கியமானவை. மார்கரின் என்ற போலி வெண்ணெய் கிடைக்கும்பொழுது மக்கள் வெண்ணெயை மிகுதியாக வாங் காமல், மார்கரினையே வாங்கலாம். இத்தகைய மாறுதல்களை வாழ்க்கைச் செலவுக் குறியீட்டெண் எடுத்துக்காட்டவேண்டும். மார்கரின் விலையில் மாறுதல் ஏற்பட்டால் அதற்குத் தகுந்த நிறையையே நாம் கொடுத்து, சங்கிலிக் குறியீட்டெண்ணைத் தயார் செய்கின்றோம். ஆனால் சாதாரணக் குறியீட்டெண்ணைவிட (Simple Index Number) நிறையிட்ட குறியீட்டெண் சிறந்ததாகும். நீண்ட காலத்தில் விலைகளில் ஏற்படும் மாறுதல்களைக் கணக்கிட இக்குறியீட்டெண் மிகவும் பயன்படுகின்றது. ஆனால் ஆண்டு தோறும் நாம் புதியதாகப் பயன்படுத்தும் பண்டங்கள் நமக்கு அளிக்கும் நலன்களை சங்கிலிக் குறியீட்டெண் எடுத்துக்காட்ட வில்லை.

**இடையூறுகள்**

குறியீட்டெண்களைத் தயார்செய்வதில் பல இடையூறுகள் ஏற்படுகின்றன. முதன்முதலில் எந்த ஆண்டை நாம் மூல ஆண் டாக வைத்துக்கொள்வது என்று முடிவுசெய்யவேண்டும். விலைகள் சாதாரணமான தொடர்புகளைக் கொண்டிருக்கும் ஓர் ஆண்டை, அதாவது மக்கள் தம் வருமானத்தைச் சாதாரணமான முறையில் பல்வேறு பண்டங்களை வாங்குவதற்காகச் செலவுசெய்யும் ஓர் ஆண்டை நாம் மூலஆண்டாக வைத்துக்கொள்ளவேண்டும். இத்தகைய ஆண்டில் நிலவும் விலையுடனேயே நாம் மற்ற ஆண்டு களின் விலைகளை ஒப்பிடவேண்டும். பல்வேறு ஆண்டுகளில் நிலவும் விலைவாசிகளுடைய சராசரி எண்ணை மூலமாக வைத்துக்கொள்

வதுண்டு. ஓர் ஆண்டை மூலமாக வைத்துக்கொள்வதால் ஏற்படும் பிழைகள் மறையும். ஓர் ஆண்டின் விலைவாசியை மற்றோர் ஆண்டின் விலைவாசியுடன் ஒப்பிடும்பொழுது நாம் கவனமுடன் இருக்கவேண்டும். ஏனெனில் ஆண்டுதோறும் பொருள்களின் தரம் உயரலாம். ஒரு நூற்றாண்டுக்குமுன் நகரங்களில் வேலை செய்த தொழிலாளர்கள் பயன்படுத்திய வெண்ணெயைவிட இன்று அவர்கள் பயன்படுத்தும் வெண்ணெய் தரத்தில் உயர்ந்ததாக இருக்கின்றது. நோய்வாய்ப்படாத பசுக்களுடைய பாலைப் புட்டிகளில் பக்குவமாக அடைத்து நமக்கு விற்பனையாளர்கள் வீடுகளில் கொடுக்கலாம். மக்கள் முன்பைவிட சிறந்த பணிகளை (Services) அனுபவிக்கலாம். தற்காலத்தில் பாங்குகள் இருப்பதால் நாம் முன்பைவிட இப்பொழுது எளிதில் கடன் வசதிகளைப் பெறலாம். குறுகிய காலத்தில்கூட விலைகளில் ஏற்படும் மாறுதல்களை நாம் பொருள்களின் தரத்தில் ஏற்பட்ட மாறுதல்கள் என்று கருதலாம். விலைப் பட்டியல்களை வெளியிடும் கடைக்காரர்கள் தம் பண்டங்களுக்கு ஒரே விலையை வசூல் செய்யலாம். ஆனால் மொத்த விலைகள் மாறும்பொழுது அவர்கள் அதற்குத் தகுந்தவாறு உயர்ந்த ரகப் பண்டங்களையோ அல்லது மட்டரகப் பொருள்களையோ விற்பனை செய்யலாம். ஆகையால் மார்க்கட்டில் பல விலைகள் நிலவும்பொழுது நாம் அவைகளிலிருந்து விலைத் தொடர்புகளைத் தயார் செய்வது கடினம். தவறான வழிகளைப் பின்பற்றி ஏதாவது ஒரு முறையில் குறியீட்டெண்ணை நாம் தயார் செய்யாமல் இருக்க வேண்டுமானால் ஒப்பீட்டுக்குப் பொருத்தமான விலைகளையே நாம் பயன்படுத்தவேண்டும்.

**மற்றக் குறியீட்டெண்கள்**

பணம் வெவ்வேறு வகுப்பினருக்குப் பல்வேறு மதிப்புகளைக் கொண்டிருக்கலாம். வெவ்வேறு வழிகளில் நாம் பணத்தைச் செலவு செய்யும்பொழுது அது வெவ்வேறு மதிப்புகளைக்கொண்டிருக்கின்றது என்பதை அறியலாம். முற்றிலும் உற்பத்தியான பொருள்களை (finished goods) வாங்குவதற்கே பணம் பயன்படுத்தப்படுகின்றது என்று நாம் கற்பனை செய்துகொண்டே இதுவரை குறியீட்டெண்களை விளக்கினோம். ஆனால் கச்சாப் பொருள்கள், அரைகுறையாக உற்பத்தியான பொருள்கள் (semi finished goods) இயந்திரங்கள், ஏற்றுமதிப் பண்டங்கள், இறக்குமதிப் பண்டங்கள் முதலிய பொருள்களை வாங்குவதற்கும் நாம் பணத்தைப் பயன்படுத்துகின்றோம். பல்வேறு பண்டங்களின் விலைகளும் ஒரே அளவு மாறவேண்டுமென்ற கட்டாயம் இல்லை. முற்றிலும் உற்பத்தியான பொருள்களின் விலைகள் எந்த அளவு மாறுகின்றனவோ அதே அளவு மற்ற விலைகள் மாறாமல் இருக்கலாம். நாட்டில் ஒரே விலைவாசி நிலவும் என்று நாம் கருதக்கூடாது.

பல்வேறு பொருள் தொகுதிகளுக்கேற்ற வெவ்வேறு விலைவாசிகள் உள. சில்லறை விலைவாசி அல்லது உற்பத்தி பூர்த்தியான பொருள்களின் விலைவாசி மட்டுமே நாட்டில் நிலவும் என்று நாம் கருதக் கூடாது. மொத்த விலைவாசி (wholesale price level), ஏற்றுமதிப் பண்டங்களின் விலைவாசி (export price level), மூலதனப் பொருள்களின் விலைவாசி (Price level of Capital goods), பத்திரங்களின் விலைவாசி (Price level of bonds), கூலிகளின் நிலை (Wage level) முதலிய பல விலைவாசிகள் இருக்கின்றன. வாழ்க்கைச் செலவுக் குறியீட்டெண்ணைத் தயாரிக்கும் முறையைப் பின்பற்றி நாம் மேலே குறிப்பிட்ட விலைவாசிகளைக் கணக்கிடக் குறியீட்டெண்களைத் தயார் செய்யலாம்.

# 28. பணத்தின் தேவை
## (Demand for Money)

பணம் இக்காலப் பொருளாதார அமைப்பில் பெற்றுள்ள இடத்தை நாம் முந்திய அதிகாரங்களில் கற்பனை செய்து கொண்டோம். பணம் என்ற சொல்லின் பொருள், பணம் செய்யும் வேலை, மக்கள் பணத்தைப் பயன்படுத்தும் பழக்கம், பணத்தின் அளிப்பை (supply) நிர்ணயம் செய்யும் சக்திகள் முதலியவைகளை நாம் கற்பனை செய்துகொண்டோம். பணத்துடன் தொடர்பு கொண்ட சக்திகள் எவ்வாறு உற்பத்தியைப் பாதிக்கும் என்பதை யும் நிதிதிரட்டல் எப்படி உற்பத்தியைப் பெருக்கும் அல்லது குறைக்கும் என்பதையும் நாம் இதுவரை பார்த்தோம். பணத்தின் அளிப்பு மாறுவதால் வட்டிவீதம் மாறும்; இதைத் தொடர்ந்து முதலீடும், செயற்படுத்தும் தேவையும் மாறும். பணத்தின் வேலையை நாம் இங்கு விளக்கலாம்.

### பணம் என்ற சொல்லின் பொருள்

மற்றப் பொருள்களைப்போலல்லாமல் பணத்தை எல்லோரும் ஏற்றுக்கொள்வார்கள். அதாவது பணம் ரொக்கத் தன்மையைக் கொண்டிருக்கின்றது. இதை 24ஆம் அதிகாரத்தில் நாம் விளக்கி யிருக்கின்றோம். சட்ட பூர்வமான பணமும், வழக்கமாக மக்கள் பயன்படுத்தும் பணமும் புழக்கத்திலிருக்கலாம். எல்லாப் பொருள் களையும் நாம் பயன்படுத்துவதற்காகவே வாங்குவோம். ஆனால் பணத்தை மட்டும் மற்றப் பொருள்களை வாங்குவதற்காகவே நாம் பயன்படுத்துகின்றோம். நாம் கொண்டிருக்கும் ஒரு பொருள் நமக்குத் தேவைப்படாவிடில் அதை நாம் விற்பனை செய்யவேண் டும். பணத்தை நாம் மற்றப் பொருள்களைப்போல் பயன்படுத்து வதற்காக ஏற்றுக் கொள்வதில்லை. எல்லோரும் நம்மிடமிருந்து பணத்தை வாங்கிக்கொண்டு பொருள்களைக் கொடுக்கத் தயாராக இருப்பார்கள். ஆகையால் நாம் பணத்தை வைத்துக்கொள்ள

விரும்புகிறோம். பணத்தை ஏற்றுக்கொண்டு பொருள்களைக் கொடுக்க எவனும் தயங்கமாட்டான் என்பதை நாம் அறிவோம். பொருள்களை விற்பனை செய்யமுடியாத நிலைமை சாதாரணமாக ஏற்படுவது இயற்கை. ஆனால் பணத்திற்கு இந்த நிலைமை எப்பொழுதுமே ஏற்படாது. ஒரு பிரயாணி தன் பிரயாணச் சீட்டை இழந்துவிட்டால், அச் சீட்டுகளை வசூல் செய்பவனிடம் ஒரு பவுனைக் கொடுக்கலாம். ஆனால் ஒரு பவுன் மதிப்புள்ள புத்தகத்தைக் கொடுக்கமுடியாது. ஒரு பவுனைக் கொண்டு ஒருவன் எந்தப் பொருளையும் வாங்கலாம். அதை அவசரத் தேவைகளுக்குப் பயன்படுத்தலாம். ஆனால் புத்தகத்தின் மதிப்பை உணர்ந்தவனே அதைப் பயன்படுத்த முடியும். ஆனால் பவுன் ரொக்கத் தன்மையைக் கொண்டிருக்கின்றது.

பணம் நான்கு முக்கியமான வேலைகளைச் செய்கின்றது. பணம் ஒரு பரிவர்த்தனைச் சாதனமாகவும் (medium of exchange) மதிப்பின் அளவு கோலாகவும் (measure of value), மதிப்பின் உறைவிடமாகவும் (store of value), கட்டணங்களைத் தாமதித்துச் செலுத்தும் சாதனமாகவும் (standard of deferred payments) வேலை செய்கின்றது. இப்பணிகளை நாம் இங்கு ஆராய்வோம்.

**பரிவர்த்தனைச் சாதனம் (Medium of Exchange)**

ஒவ்வொருவனும் ஒரு பொருளையோ அல்லது பணியையோ மக்களுக்கு அளிப்பதில் தன் முழுகவனத்தையும் செலுத்தவேண்டுமென்றால், அவன் உற்பத்தி செய்யும் பொருளை விற்பனைசெய்து மற்றப் பொருள்களை வாங்குவதற்கு வசதி வேண்டும். ஒரே ஒரு பொருளைப் பரிவர்த்தனைச் சாதனமாக நாம் பயன்படுத்தினால்தான் பரிவர்த்தனை (exchange) நன்கு அமையும். பண்டமாற்று முறையில் பல சிக்கல்களும் தொல்லைகளும் இருக்கின்றன. ஒருவன் வைத்திருக்கும் பன்றியை விற்பனை செய்து, அதற்குப் பதிலாகப் பதிவானஒலியை வெளியிடும் கருவியை (gramophone) வாங்க விரும்பினால், அவன் அக்கருவியைக் கொடுத்து அதற்குப் பதிலாகப் பன்றியை வாங்கத் தயாராக இருக்கும் ஒருவனைத் தேடவேண்டும். மேலும் கருவியை வாங்கிக் கொள்பவன் அது சிறந்தது என்றும், அதைப் பன்றிக்குப் பதிலாக வாங்கலாம் என்றும் கருதவேண்டும். கருவியை விற்பனை செய்பவனும் பன்றியை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கவேண்டும். பன்றியின் ஒரு பகுதியையோ, அல்லது கருவியின் ஒரு பகுதியையோ விற்பனை செய்யமுடியாது. அவைகளைத் தனி அலகுகளாகவே (units) பரிவர்த்தனை செய்ய வேண்டும். பண்டங்களைப் போலவே பணிகளையும் (services) பரிவர்த்தனை செய்வது கடினம். உதாரணமாக தச்சு வேலைத்

தொழிலாளி, ஆசிரியர், பல்கட்டும் மருத்துவர் முதலியவர்கள் தம் பணிகளை எளிதில் பரிவர்த்தனை செய்யமுடியாது. ஆனால் பணத்தைப் பயன்படுத்திப் பரிவர்த்தனை செய்யும்பொழுது இத்தகைய தொல்லைகள் ஏற்படா. பல்வேறு பண்டங்களை உற்பத்தி செய்வோர் தம் பண்டங்களை விற்பனை செய்து பொதுவாக எல்லாப் பண்டங்களையும் வாங்கும் சக்தியைக் கொண்ட பணத்தைப் பெறலாம். அதைப் பயன்படுத்தி எல்லாப் பொருள்களையும் வாங்கலாம். பணத்தை எல்லோரும் விரும்புவதால் அது பரிவர்த்தனைக்கு ஏற்றதாக இருக்கின்றது. அதை நாம் மிகச் சிறிய அலகுகளாகப் பிரிக்க முடியும். ஆகையால் பொருள்களை எந்த அளவிலும் வாங்கலாம்.

இக்காலத்தில் நாம் பொருள்களைச் சிறப்பான முறையில் உற்பத்தி செய்வதால் (அதாவது ஒவ்வொருவரும் ஒரு தனிப் பண்டத்தை உற்பத்தி செய்வதில் தம் முழுகவனத்தையும் செலுத்துகின்றார்), பரிவர்த்தனைக்குப் பணம் வேண்டும். போக்குவரத்து வசதிகள் நன்கு வளர்ச்சியடைந்தால் பல்வேறு பகுதிகள், பல்வேறு பொருள்களை உற்பத்தி செய்யலாம். இதேபோல் சிறந்த செலாவணி முறை (monetary system) சிறப்பு உற்பத்திமுறை (specialisation)க்கு ஊக்கம் கொடுக்கும்.

**பணம் மதிப்பின் உறைவிடம் (Store of Value)**

உடனடியாகச் செய்யவேண்டிய செலவுகளுக்கு மட்டுமின்றி, எதிர்காலத்தில் நாம் செய்யவேண்டிய செலவுகளுக்கும் நாம் பணத்தைப் பயன்படுத்தலாம். சில செலவுகளை நாம் மிக்ககால தாமதமின்றிச் செய்யவேண்டும். உதாரணமாக, நாம் பல பொருள்களை அன்றாடம் கடைகளில் வாங்குகிறோம். மோட்டார் வண்டிகளில் பிரயாணம் செய்யும்பொழுது கட்டணத்திற்கு வேண்டிய தொகையை எப்பொழுதும் கையில் வைத்திருக்க வேண்டும். வீட்டு வாடகைப் பணத்தையும் கையில் வைத்திருக்கவேண்டும். சில கட்டணங்களை நாம் வெகுநாட்களுக்குப் பிறகு செலுத்த வேண்டியிருக்கலாம். அல்லது ஒரு மோட்டார் வண்டி வாங்குவதற்காகவோ, வீடு வாங்குவதற்காகவோ நாம் பணத்தைச் சேமிக்கலாம். நாம் எதிர்பாராத முறையில் சில செலவுகளைச் செய்ய வேண்டியிருக்கலாம். நோய்வாய்ப்படுவதாலும், உறவினர் நம் உதவியை நாடுவதாலும், கடன் கொடுத்தவர்கள் எதிர்பாராத முறையில் பணத்தைக் கேட்பதாலும் நாம் உபரித் தொகையைச் செலவு செய்யவேண்டிய நிலைமை ஏற்படலாம். இச் செலவுகளைச் செய்வதற்காக நாம் எப்பொழுதும் உபரி வருமானத்தைப் பண்டங்களாகப் பெறுமல் பணமாகப் பெறுவதால், அவர்கள் கொண்

டிருக்கும் உபரிப் பணத்தை முதலீடு செய்யத் தயங்கமாட்டார்கள். முதலீடு செய்வதில் தொல்லைகள் இருந்தாலும் அவர்கள் அவை களைப் பொருட்படுத்த மாட்டார்கள். பங்குகள், பத்திரங்கள், சொத்துக்கள் முதலியவற்றை வாங்காமல் நாம் பணத்தை ரொக்க மாக வைத்திருக்கலாம். இவைகளுடைய மதிப்பு மாறலாம் என்ற அச்சமே இதற்குக் காரணமாக இருக்கலாம். பல நோக்கங் களுடன் நாம் பணத்தைச் செலவு செய்யாமல் ரொக்கமாக வைத் திருக்கலாம்.

**பணம் மதிப்பின் அளவுகோல்** (measure of value)

பொருள்களை வாங்குவதற்கு மட்டும் நாம் பணத்தைப் பயன் படுத்துவதில்லை. அதைக்கொண்டு பொருள்களின் மதிப்பை அளக்கலாம். வெப்பமானியைக்கொண்டு நாம் எவ்வாறு வெப் பத்தை அளக்கலாமோ அதே முறையில் பணத்தைக்கொண்டு பொருள்களின் மதிப்பை அளக்கலாம். பவுன், ஷில்லிங், பென்ஸ் முதலியவைகளை நாம் அளவு கோல்களாகப் பயன்படுத்தலாம். பண்டமாற்று முறையிலும் (barter) பொருள்களின் மதிப்பை அளப் பதற்கு நாம் ஓர் அளவுகோலைப் பயன்படுத்த வேண்டும். ஒவ்வொரு பணமும் மற்றப் பண்டங்களை எந்த அளவில் வாங்க முடியும் என்பதை நாம் எப்பொழுதும் மனத்தில் கொண்டிருக்க முடியாது. பொருள்களின் மதிப்பை அளக்கும் ஒரு பொது அளவு கோல் வேண்டும். இப்பொது அளவுகோலைப் பணம் என்று நாம் கூறலாம். நாம் சாதாரணமாகப் பயன்படுத்தும் பணத்தையே இவ் வளவுகோல் என்று நாம் கருதக்கூடாது. அளவு கோலாகப் பயன்படுத்தும் பணத்தை நாம் கணக்குப் பணம் (money-of-account) என்று கூறலாம். இக் கணக்குப் பணத்தைப் பயன் படுத்தியே நாம் விலைப் பட்டியல்களைத் தயார் செய்கின்றோம், கடன் தொகையையும் மதிப்பிடுகின்றோம். இங்கிலாந்தில் ஒரு பவுன் மதிப்புள்ள செலாவணித்தாள் சாதாரணப் பணமாகவும் ஸ்டெர்லிங் பவுன் (pound sterling) கணக்குப் பணமா கவும் இருக்கின்றன. ஸ்டெர்லிங் பவுனை ஒருவரும் இதுவரை பார்த்ததில்லை. சென்டிகிரேட் (centigrade), மைல் (mile) முதலிய அளவைகளை நாம் எவ்வாறு பார்க்க முடியாதோ, அதே போல் கணக்குப் பணத்தையும் (money-of-account) நாம் பார்க்க முடியாது. ஒரு ஸ்டெர்லிங் பவுனை ஒருவன் மற்றொருவனுக்குக் கொடுக்க வேண்டியிருந்தால், அவன் அதற்காக இங்கிலாந்தின் தலைமை பாங்கு (Bank of England) வெளியிடும் ஒரு பவுன் செலா வணித்தாளைக் கொடுக்கலாம். பவுன் ஸ்டெர்லிங் என்பது புழக் கத்தில் இல்லை. அதை ஒருவனும் பார்க்க முடியாது, அதைக் கருத்தளவிலேயேதான் புரிந்து கொள்ளலாம். உருவமற்ற பவுன்

ஸ்டெர்லிங்கைக் கொண்டு நாம் மதிப்புகளை ஒப்பிடலாம். ஆனால் ஒரு பவுன் மதிப்புள்ள செலாவணித்தாள் புழக்கத்தில் இருக்கின்றது. காகிதத்தில் அச்சடிக்கப் பெற்ற செலாவணித்தாள் ஏறக்குறைய நிலையான மதிப்பைக் கொண்டிருக்கின்றது. ஸ்டெர்லிங் பவுன் மிகத் தொன்மையான காலத்திலிருந்தே கணக்குப் பணமாகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றது. அது சார்லமேன் (Charlemagne) காலத்திலேயே பயனில் இருந்தது. இங்கிலாந்தின் தலைமை பாங்கு 1928-இல்தான் ஒரு பவுன் செலாவணித்தாளை வெளியிட்டது. கணக்குப் பணம் எவ்வித மாறுதலையும் அடையவில்லை. ஆனால் செலாவணித்தாள் என்ற ஒரு புதிய பணம் புழக்கத்தில் வந்தது. 1922-23 ஆம் ஆண்டில் ஜெர்மனியில் பணவீக்கம் ஏற்பட்டபொழுது இங்கிலாந்தில் நடந்த நிகழ்ச்சிக்கு எதிர்மறையான நிகழ்ச்சி ஏற்பட்டது. மார்க் (mark) என்ற செலாவணியின் மதிப்பு திடீர் திடீரென்று இறங்கியது. ஒரே வாரத்தில் சில சமயங்களில் செலாவணி தன் மதிப்பில் அரைப்பகுதியை இழந்தது. மக்கள் ஒப்பந்தங்களைச் செய்துகொள்ள அமெரிக்க டாலர் (dollar) நாணயத்தையும், ஸ்விட்ஜர்லாந்து நாட்டின் பிராங் (franc) நாணயத்தையும், நிலக்கரி, எண்ணெய் முதலிய பண்டங்களையும் பயன்படுத்தினர். ஆனால் செலுத்தவேண்டிய தொகைகளை மக்கள் மார்க் நாணயத்தைக் கொண்டே செலுத்தினர். மார்க் சாதாரணப் பணமாகப் புழக்கத்தில் இருந்தது. ஆனால் அது கணக்குப் பணமாகப் பயன்படவில்லை. பணத்தை அளவு கோலாகப் பயன்படுத்துவதால் விலைகள் நிர்ணயிக்கப்படுகின்றன. பண்ட மாற்றுமுறையில் ஒவ்வொரு முறையும் ஒரு பொருளை விற்பனை செய்யும்பொழுது அதற்கு ஒரு விலை நிர்ணயமாகும். ஆனால் பணத்தைப் பயன்படுத்தும்பொழுது அளிப்பும் (Supply) தேவையும் (Demand) ஒருமுகப் படுத்தப்படுவதால் ஒவ்வொரு பொருளுக்கும் மார்க்கட்டில் ஒரு விலை நிர்ணயிக்கப்படுகின்றது. இதன் விளைவாக வர்த்தகம் பெருகும். உற்பத்தியாளர்கள் சிறப்பு உற்பத்தி முறையைப் (specialisation) பின்பற்ற முடியும்.

**கட்டணங்களைத் தாமதித்துச் செலுத்தும் சாதனம் (standard of deferred payments)**

பணம் நாம் அவ்வப்போது வாங்கும் பொருள்களின் மதிப்பை அளப்பதோடல்லாமல், எதிர்காலத்தில் செலுத்த வேண்டிய கடன் தொகையின் மதிப்பையும் நிர்ணயம் செய்யும். எதிர்காலத்தில் நாம் ஒருவனுக்கு ஒரு குறிப்பிட்ட தொகையைக் கொடுக்க ஒப்புக்கொள்ளும்பொழுது கடன் ஏற்படுகின்றது. கடன் தொகையை நாம் பணத்தைக்கொண்டே மதிப்பிடுகிறோம்.

இதற்குக் கணக்குப் பணத்தையே பயன்படுத்துகிருேம். இங்கிலாந்தில் ஸ்டெர்லிங் பவுனேயே கொண்டு ஒப்பந்தங்கள் செய்யப்படுகின்றன. ஆனுல் பணத்தைச் செலுத்தும்பொழுது செலாவணித்தாள், ரொக்கம் அல்லது செக்கு (cheque) முதலியவைகளை மக்கள் பயன்படுத்துகின்றனர்.

ஒரு பொது அளவுகோல் இல்லாவிடில் விற்பனை எவ்வாறு பாதிக்கப்படுமோ, அதேபோல் கடன் தொகையின் மதிப்பை அளப்பதற்கும் ஓர் அளவுகோல் வேண்டும். பணம் இல்லாவிடில் நாம் பொருள்களையே கடனுக வாங்கித் தவணை முடிந்ததும் அவைகளை வட்டியுடன் திருப்பிக் கொடுக்கவேண்டும். வட்டிக்காகவும் பொருளையே கொடுக்கவேண்டும். பணம் இல்லாவிடில் கடனுகப் பெற்ற பொருள்களுக்குப் பதிலாக எல்லோரும் ஒரு பொதுவான பொருளைக் கொடுக்க முடியாது. வாங்கிய பொருளுக்குச் சமமான மற்றப் பொருளையும் நாம் கொடுக்கமுடியாது. வாங்கிய தொகையின் மதிப்பையும், திருப்பிக் கொடுக்கவேண்டிய தொகையின் மதிப்பையும் நிர்ணயம் செய்வது கடினம். ஒவ்வொரு கடனும் தனித்தனியாக மற்றவைகளுடன் தொடர்பு கொள்ளாமல் இருக்கும். இதனுல், கடன் வாங்குதல், பங்கு மாற்று நிலையங்களின் வேலைகள், இன்சூரன்சு வேலை, பாங்குகளின் பணி, கட்டடச் சங்கங்களின் (building societies) வேலை முதலியன பாதிக்கப்படும்.

பணம், கடனை அளக்கும் ஒரு கருவியாகப் பயன்படுவதால் கடன் வாங்குதல் மிகவும் எளிதாக இருக்கின்றது. இதன் விளைவாக ஒரு மூலதன மார்க்கட்டு வளர்ச்சியடைகின்றது. பெருவாரி உற்பத்தி முறையும் (large-scale production) சிறப்பு உற்பத்தி முறையும் (specialisation) வளர்ச்சியடைகின்றன. பணத்திற்கும் சிறப்பு உற்பத்தி முறைக்கும் ஒரு தொடர்பு இருக்கின்றது.

## பணத்தின் தேவை (Demand for Money)

மதிப்பின் அளவு கோலாகவும், அதன் உறைவிடமாகவும் பணம் இருப்பதால் எல்லோரும் அதை நாடுகின்றனர், உடைகளை நாம் கையிருப்பாக வைத்துக் கொண்டிருப்பதைப்போல் பணத்தையும் கைவசம் வைத்துக்கொள்ள விரும்புகிருேம். நாம் கைவசம் கொண்டிருக்கும் பணம் ரொக்கத் தன்மையைக் கொண்டிருக்கின்றது. ஆனுல் நாம் வட்டியைப் பெறமுடியாது. ஒவ்வொருவரும் கையிருப்பாகக் கொண்டிருக்கும் தொகைகள் பணத்தின் மொத்த அளிப்பின் (supply) பகுதிகளாக இருக்கின்றன. புழக்கத்தில் இருக்கும் பணத்தை மக்களே கொண்டிருக்கின்றனர். புழக்கத்திலிருக்கும் தொகை மிகுதியடைந்தால் சிலர் முன்பைவிட

அதிகமான தொகையைக் கையிருப்பாக வைத்திருப்பர். பணத்தின் அளிப்பு பெருகாமல் ஒரே நிலையில் இருக்கும்பொழுது சிலர் மிகுதியான தொகையை நாடினால் வேறு சிலர் குறைவான தொகையை வைத்துக்கொள்ள வேண்டும். அதாவது சிலர் பத்திரங்களை ஏற்றுக்கொண்டு தம்மிடம் இருக்கும் பணத்தைக் கொடுக்கத் தயாராக இருக்கவேண்டும். சிலருடைய தேவை பெருகினால் மக்களிடம் இருக்கும் தொகையை அவர்களுடைய தேவைக்கேற்றவாறு வேறுமுறையில் பங்கீடு செய்யவேண்டும். மக்கள் கையிருப்பாகக் கொண்டிருக்கும் தொகையைக் கொண்டு நாம் ஓர் ஆண்டின் உற்பத்தியில் ஒரு பகுதியை விலைக்கு வாங்கலாம். இப்பகுதியை K என்று நாம் குறிப்பிடலாம். பணத்தின் தேவை பெருகினால் கையிருப்புப் பணம் பணத்தின் மொத்த அளிப்புடன் கொண்டிருக்கும் விகிதம் உயரும். அதாவது K என்ற குறியின் மதிப்பு மிகுதியடையும்.

பணத்தின் தேவையைக் காட்டும் K என்ற குறியைத் தலைகீழாகத் திருப்பினால் அது V (பணப் புழக்கத்தைக் காட்டும் குறி) ஆகும். இக்குறியை 27ஆம் அதிகாரத்தில் விளக்கினோம். $MV=PT$ என்ற சூத்திரத்தை $V=\frac{PT}{M}$ என்று நாம் எழுதலாம். PT என்பது தேசீய வருமானத்திற்குச் சமமாகும். தேசீய வருமானம் பணத்தின் அளிப்புடன் கொண்டிருக்கும் விகிதமே V என்ற குறியின் மதிப்பாகும் என்று நாம் கூறலாம். மேலே நாம் கூறியபடி பணத்தின் அளிப்புத் தேசீய வருமானத்துடன் கொண்டிருக்கும் விகிதமே K ஆகும். V என்ற குறியின் மதிப்புக் குறைந்தாலோ அல்லது K என்ற குறியின் மதிப்பு மிகுதியடைந்தாலோ பணத்தின் தேவை மிகுதியடைகின்றது என்று நாம் புரிந்துகொள்ள வேண்டும்.

பணத்தைக் கையிருப்பாக வைத்துக் கொள்வதற்குச் சில காரணங்கள் இருக்கவேண்டும். பணத்தை ரொக்கமாக வைத்துக் கொள்வதால் நாம் வட்டியை இழக்கின்றோம். மக்கள் ஏன் ரொக்கத்தை வைத்துக் கொண்டிருக்கின்றனர்? K என்ற குறியை நிர்ணயம் செய்யும் சக்திகள் யாவை?

பணத்தைக் கையிருப்பாக வைத்துக் கொள்ள மூன்று வகை நோக்கங்கள் இருக்கின்றன:—

1. வரவு-செலவு நோக்கம் (Receipts and Payments Motive) நாம் வருமானத்தைப்பெற்ற நாளிலிருந்து அதை முற்றிலும் செலவு செய்யும் காலம்வரை அவ்வப்போது செய்ய வேண்டிய செலவுக்

காக ஒரு தொகையை எப்பொழுதும் கையிருப்பாக வைத்துக் கொள்ள வேண்டும். சம்பளமாகவும், கூலியாகவும், இலாப ஈவாக வும் மக்கள் பெறும் தொகையை அவ்வப்போது செலவு செய்து பொருள்களை வாங்குகிறார்கள். நாம் பெறும் ஊதியத்தை உடனடி யாக நாம் செலவு செய்தால் பணத்தைக் கையிருப்பாக வைத்தி ருக்க வேண்டாம், அல்லது மிகக் குறைந்த தொகையை வைத்தி ருந்தால் போதும். ஆனால் நாம் மூன்று மாதத்திற்கு ஒரு முறை வருமானத்தைப் பெற்று அதை அவ்வப்போது செலவு செய்தால் வருமானத்தைப் பெறும் நாளில் மிகுதியான ரொக்கத்தை வைத் திருப்போம். இந்த ரொக்கம் சிறிது சிறிதாகக் குறைந்து கொண்டே வரும். மீண்டும் வருமானத்தைப் பெறும் நாளில்தான் நாம் மிகுதியான ரொக்கத்தைப் பெறலாம். வாரந்தோறும் நாம் வருமானத்தைப் பெற்றால் குறைந்த தொகைகளை வருமானமாகப் பெறுவோம். நம்மிடம் இருக்கும் கையிருப்புத் தொகையும் குறை வாகவே இருக்கும். வருமானத்தை நாம் அடிக்கடி பெற்றால் கையிருப்புப் பணம் குறைவாகவும் நீண்ட இடைவேளைக்குப் பிறகு பெற்றால் அதிகமாகவும் இருக்கும். நாம் வாங்கும் பொருள்களுக் காகவும், பணிகளுக்காகவும் செலுத்தும் தொகைகளுக் கிடையே நீண்ட இடைவேளைகள் இருந்தால் கையிருப்புத் தொகை பாதிக் கப்படும். உதாரணமாக வருமான வரியை ஆண்டுக்கு இருமுறை செலுத்தினால் அதற்காக மிகுதியான ரொக்கத்தைக் கையிருப்பாக வைத்துக்கொள்ள வேண்டும். வரியை வாரந்தோறும் செலுத்தி னால் கையிருப்புத் தொகை குறைவாக இருக்கலாம்.

வருமானத்தைப் பெறும் நாளுக்கும், செலவு செய்யும் காலத் திற்கும் இடையே உள்ள காலம் அல்லது இடைவேளை மட்டும் மக்கள் கொண்டிருக்கும் ரொக்கத் தொகையைப் பாதிக்கவில்லை. இடைவேளை (interval) மிகவும் குறுகியதாக இருந்தால் ரொக் கத்தை முதலீடு செய்து வட்டியைப் பெற மக்கள் முன்வரமாட்டார் கள். மேலும் முதலீடு செய்வதால் கணிசமான தொகையை வட்டியாகப் பெற முடியாவிடில் மக்கள் முதலீட்டை விரும்ப மாட்டார்கள். உயர்ந்த வட்டிவீதம் கிடைத்தாலும், முதலீட்டின் அடக்கச் செலவை (cost) எண்ணி அவர்கள் பணத்தை ரொக்க மாகவே வைத்துக்கொள்ளலாம். எதிர்காலத்தில் மக்கள் செய்ய வேண்டிய செலவுகளுக்காக அவர்கள் பணத்தை வைத்திருக்க லாம் என்று நாம் குறிப்பிட்டோம். முதலீட்டுச் செலவும் இச் செலவுகளுள் ஒன்றாகும் என்பதை நாம் மறக்கக் கூடாது. ஒரு வன் சேமித்து வைத்திருக்கும் தொகையைத் தாற்காலிகமாகக்கூட முதலீடு செய்யாமல் இருக்கலாம். ஏனெனில் சிறிது காலம்

சென்றபிறகு அவனுக்கு மிகவும் இலாபகரமான முதலீட்டு வாய்ப்புக் கிட்டலாம்.

தொழிலதிபர்களும் மக்களைப்போலவே, வரவு-செலவு நோக்கத்துடன் பணத்தைக் கையிருப்பாக வைத்துக்கொள்வார்கள். தொழில் செறிந்த நாட்டில் மக்கள் எதிர்காலச் செலவுகளுக்காக எவ்வளவு பணத்தை வைத்துக் கொள்வார்களோ அதே அளவு பணத்தைத் தொழிலதிபர்களும் வைத்துக் கொள்வர். வீக்க காலத்தில், தொழிலதிபர்கள் மிகுதியான தொகையையும் மந்த காலத்தில் குறைவான தொகையையும் வைத்துக் கொண்டிருப்பார்கள். வீக்ககாலத்தில் உற்பத்தி பெருகுவதால் மிகுதியான தொகையை ரொக்கமாக வைத்துக்கொள்ள வேண்டும். ஏனெனில் இலாப ஈவைக் கொடுப்பதற்கும், புதிய கட்டடங்களை எழுப்புவதற்கும், உற்பத்திக் கருவிகளை வாங்குவதற்கும் மிகுதியான தொகை வேண்டும். உற்பத்தியாளர்கள் செலுத்த வேண்டிய மற்றத் தொகைளின் மதிப்பும் உயரும். ஏனெனில் வீக்க காலத்தில் விலைகள் உயரும். ஆகையால் வரவுக்கும் செலவுக்கும் இடையே உள்ள இடைவேளை (interval) மாருமல் இருந்தால் வர்த்தகம் பெருகும் பொழுது உற்பத்தியாளர்களுடைய ரொக்க இருப்பும் அதிகரிக்கும். மந்தகாலத்தில் முதலாளிகள் குறைந்த தொகையைக் கையிருப்புப் பணமாக வைத்துக் கொள்வர். வர்த்தகம் பெருகுவதற்குத் தகுந்தாற்போல் மக்கள் கொண்டிருக்கும் ரொக்கத் தொகையும் பெருகும். விலைகளும் மக்களுடைய வருமானமும் பெருகும்பொழுது அவர்கள் கொண்டிருக்கும் ரொக்கம் மிகுதியடையும். வீக்ககாலத்தில் விலைகள் உயரும்; மக்களுடைய வருமானமும் பெருகும். மந்தகாலத்தில் விலைகள் குறையும்; மக்களுடைய வருமானமும் அவர்கள் கொண்டிருக்கும் ரொக்கமும் குறையும். வர்த்தகத்தின் நிலையும், வரவுக்கும் செலவுக்கும் இடையே உள்ள இடைவேளையுமே வரவு-செலவு நோக்கத்தின் அடிப்படையாக இருக்கின்றன.

2. ஊகலாப நோக்கம் (Speculative Motive): எதிர்காலத்தில் விலைகள் குறையும் என்று மக்கள் கருதினால் பணத்தைச் செலவு செய்யாமல் ரொக்கமாக வைத்துக்கொள்வார்கள். ஏனெனில் விலைகள் குறைந்த பிறகு பொருள்களை வாங்கலாம் என்று மக்கள் கருதுவது இயற்கை. விலைகள் குறையும் என்று எல்லோரும் எதிர்பார்த்தால் செலவு குறையும், தேவையும் குறையும். இதன் விளைவாக விலைகள் தாழ்வடையும். ஆனால் எல்லோருமே விலைகள் தாழ்வடையும் என்று எதிர்பார்க்காமல் இருக்கலாம். அவ்வாறு அவர்கள் எதிர்பார்த்தால் விலைகள் குறையும். மக்கள் மிக உயர்ந்த

விலையைக் கொடுத்துப் பொருள்களை வாங்க வரமாட்டார்கள். விற்பனையாளர்களும் மார்க்கட்டின் நிலைமைக்கேற்றவாறு விலை களை மாற்றிக்கொள்வார்கள். விலைகள் தாழ்வடையும்பொழுது எதிர்பார்த்த விலைவாசிக்கும், மார்க்கட்டில் நிலவும் விலைவாசிக் கும் உள்ள வேறுபாடு நீங்கும். இந்த நிலையில் மேலும் விலைகள் தாழ்வடையும் என்று மக்கள் எதிர்பார்த்தாலன்றி ரொக்கத்தைக் கையிருப்பாக வைத்துக்கொள்ள மாட்டார்கள். விலைகள் தாழ் வடைவதைப்பற்றி மக்களிடையே கருத்து வேற்றுமை இருக்கும். விலைகள் குறைந்தால் சிலர் பொருள்களை வாங்குவார்கள். மற்றவர் கள் விலைகள் மேலும் தாழ்வடையும் என்று கருதி ரொக்கத்தை வைத்துக் கொண்டிருப்பார்கள். ஆனால் விற்பனையாளர்களிட மிருக்கும் சரக்குகள் எல்லாம் விற்பனையாகிவிடும்.

விலைகள் உயரும்பொழுது மக்கள் பணத்தைக் கையில் ரொக்க மாக வைத்துக்கொள்ளாமல் செலவு செய்வார்கள். மதிப்பைச் சிறிது சிறிதாக இழந்து கொண்டிருக்கும் பணத்தைக் கையில் வைத்துக்கொள்ள ஒருவரும் விரும்பமாட்டார்கள். பணவீக்கம் முற்றிவிட்டால் மக்கள் அன்றாடச் செலவுக்கு வேண்டிய தொகையை மட்டும் கையில் வைத்துக் கொண்டு எஞ்சிய தொகை யைப் பண்டங்களாக மாற்றிவிடுவார்கள். பணவீக்க காலத்தில் மக்களுடைய கையிருப்புப் பணம் குறையும், அதாவது K என்ற குறியின் மதிப்புக் குறையும். 1913-ம் ஆண்டில் ஜெர்மன் நாட் டில் புழக்கத்திலிருந்த செலாவணித் தாள்களைப் போல் 400 மிலி யன் மடங்கு தாள்கள் 1923-ஆம் ஆண்டில் அக்டோபர் மாதம் பெருகியது. செலாவணித்தாள் வெளியீடு பெரிய தொழிற்சாலை களில் உற்பத்தி பெருகுவதைப்போல் பெருகியது. ஆனால் முன்பு அதைக் கொண்டு எவ்வளவு பொன்னை வாங்க முடிந்ததோ அதில் சுமார் $\frac{1}{40}$ பங்குக் குறைவான பொன் உலோகத்தைப் பண வீக்கம் ஏற்பட்ட பொழுது வாங்கமுடிந்தது.

3. எச்சரிக்கை நோக்கம்(Precautionary motive): எதிர்காலத்தில் நடக்கப் போகும் நிகழ்ச்சிகளை நாம் அறிய முடியாது. நாம் எதிர் காலத்தில் எவ்வளவு வருமானத்தைப் பெறுவோம் என்பதையும், எவ்வளவு தொகையைச் செலவு செய்வோம் என்பதையும் அறிய முடியாது. நோய், சாவு, எதிர்பாராமல் செய்ய வேண்டிய நன் கொடை, ஒருபொருளை வாங்குவதற்கு நமக்குக் கிடைக்கும் அரிய வாய்ப்பு முதலியவை நாம் எதிர்பாராத விதத்தில் செலவைப் பெருக்கலாம். ஆகையால் நாம் எப்பொழுதுமே இத்தகைய செலவுகளுக்காக ஒரு தொகையைக் கையில் கொண்டிருத்தல் வேண்டும். பணம் நமக்கு ஒரு பாதுகாப்பையும், ரொக்கத் தன்

மையையும் (liquidity) கொடுக்கின்றது. பத்திரங்களின் விலைகள் எவ்வாறு மாறும் என்பதை நாம் அறிய முடியாத நிலையில் இருந்தால் ரொக்கத்தை அதிகமாக வைத்துக் கொள்வோம். பத்திரங்களின் விலைகள் குறையும் என்று நாம் எதிர்பார்க்காவிடினும் அதாவது ஊக இலாப நோக்கம் (speculative motive) இல்லாவிடினும் நாம் சில சமயங்களில் பணத்தைச் செலவு செய்யத் தயங்கலாம். எதிர்காலப் போக்குகளைப் பற்றிய ஐயப்பாடுகள் ஓரளவு மறையும்வரை நாம் பணத்தைச் செலவு செய்யாமல் ரொக்கமாக வைத்துக்கொள்ளலாகும்.

**பதுக்குதல் (Hoarding)**

எச்சரிக்கை நோக்கத்துடனும், ஊக இலாப நோக்கத்துடனும் நாம் கொண்டிருக்கும் தொகை பதுக்கிய தொகையாகும். இவ்விரு நோக்கங்களுமே எவ்வளவு தொகையைப் பதுக்க வேண்டும் என்று நிர்ணயம் செய்கின்றன. எதிர்காலப் போக்குகளை நாம் திட்டவட்டமாக அறியமுடியாத நிலையில் இருப்பதால் பணத்தைக் கொண்டிருக்கின்றோம். அது ஒரு பாதுகாப்பை நமக்குக் கொடுக்கிறது. இவ்வாறு நாம் கொண்டிருக்கும் தொகையை பாங்குகளில் டெபாசிட்டாக வைத்துக் கொள்வது வழக்கம். எதற்கும் உதவாத இந்த டெபாசிட்டுகளை சிலர் கண்டனம் செய்கின்றனர். ஆனால் இவ்வாறு கண்டனம் செய்வோர் பணத்தின் பணிகளைச் சரியாகப் புரிந்து கொள்வதில்லை. வரவு-செலவு நோக்கத்துடன் நாம் வைத்துக் கொண்டிருக்கும் டெபாசிட்டுத் தொகைகளை மட்டும் நாம் பயன்படுத்துகிறோம். மற்ற டெபாசிட்டுத் தொகைகளைப் பயன்படுத்துவதில்லை. மற்ற டெபாசிட்டுத் தொகைகள் பயன்படுவதில்லை. பயன்படாமல் இருப்பதே அவைகளுடைய பணி என்றும் கூறலாம். பாங்குகளுடைய டெபாசிட்டுத் தொகையை நாம் குறைக்கவோ அல்லது பெருக்கவோ முடியாது. நாம் பணத்தைப் பாங்குகளிலிருந்து திரும்பப் பெற்று நமது பெட்டிகளில் வைத்துக் கொண்டால்தான் மொத்த டெபாசிட்டுத் தொகை குறையும். மொத்த டெபாசிட்டுத் தொகையை பெருக்குவதற்கோ அல்லது சுருக்குவதற்கோ ஏற்ற கொள்கையை மையப் பாங்கு (Central Bank) செயல்படுத்த வேண்டும். மந்தகாலத்தில் பயனற்ற டெபாசிட்டுக்கள் (idle deposits) வெறுக்கத் தக்கனவாய் இருக்கின்றன. ஆனால் மந்த காலத்தில் இத்தகைய டெபாசிட்டுக்கள் மிகவும் அதிகமாக இருப்பதில்லை. வீக்க காலத்தில் டெபாசிட்டுத்தொகை மிகுதியடையும். சாதாரண ஆண்டுகளில் அது குறைவாகவே இருக்கும். மந்த காலத்தில் பயனற்ற டெபாசிட்டுத் தொகை மிகுதியடைந்துவிடுகின்றது என்று அதாவது மக்கள் ஊக இலாப நோக்கத்துடனும், எச்ச

ரிக்கை நோக்கத்துடனும் மிகுதியான தொகையைக் கையிருப்பாக வைத்துக் கொள்கின்றனர் என்று சிலர் கருதுகின்றனர். இந்தநிலை ஏற்பட்டால் இதை மக்கள் மாற்றமுடியாது. மக்கள் அதிகமாக ரொக்கத்தை நாடும்பொழுது மையப் பாங்கு டெபாசிட்டுத் தொகையைப் பெருக்கி அவர்களுடைய தேவையைப் பூர்த்தி செய்ய வேண்டும். இந்த நிலையில் மக்கள் மிகுதியான தொகையைச் செலவு செய்யலாம், அதாவது பணத்திற்கு அதிகமான வேலையைக் கொடுக்கலாம். இப்படிச் செய்வதால் மொத்த டெபாசிட்டுத் தொகை மாறாது; அவர்களுடைய சேமிப்புத் தொகை மட்டுமே மாறும்.

**ரொக்கத் தன்மையும் வட்டிவீதமும்**

மந்த காலத்தில் 'பதுக்குதல்' மிகுதியடையும்பொழுது **'K'** என்ற குறியின் மதிப்பு உயரும். கையிருப்பு ரொக்கம் தேசீய வரு

வரைபடம்—16

**பணத்தின் அளிப்பும் வட்டி வீதமும்**




F. W. Paish (எப், டபிள்யூ, பெயிஷ்) "Gilt-edged and Money supply," *The Banker*, January 1959, p. 18.

மானத்துடன் கொண்டிருக்கும் விகிதத் தொடர்பு மாறும். போர்க் காலத்திலும் K என்ற குறியின் மதிப்பு உயரும். 1940 முதல் 1947க்குள் பணத்தின் அளிப்பு தேசீய வருமானத்தைவிட விரைவில் பெருகியது. அரசாங்கம் குறுகிய காலக் கடன் வாங்கியது இதற்கு ஒரு காரணமாகும். கட்டுப்பாடுகள் அமலில் இருந்ததால் மக்கள் பணத்தை விருப்பம்போல் செலவுசெய்ய முடியவில்லை. மக்கள் கொண்டிருந்த ரொக்கத்தை உடனடியாகச் செலவுசெய்ய முடியவில்லை. ஆகையால் அவர்கள் பணத்தைப் போர் முடிந்ததும் செலவு செய்யலாம் என்று கருதினார்கள். போர்க்காலத்தில் பெருகிய K என்ற தொகை நாளடைவில் குறைந்தது. இந்த மாறுதல்களை 16ஆம் படத்தில் நாம் காணலாம். லண்டன் நகரில் செக்குத் தீர்வகத்தில் (clearing house) சேர்ந்துள்ள பாங்குகளுடைய மொத்த டெபாசிட்டுத் தொகை தேசீய வருமானத்துடன் (1919-1958) கொண்டுள்ள விகிதத்தைப் படம் காட்டுகின்றது. K என்ற தொகை மூன்று முறை உச்ச நிலையை அடைந்ததைப் படத்தில் காணலாம். 1933ஆம் ஆண்டு மந்தம் முற்றியபொழுதும், இரு உலகப் போர்களுக்குப் பிறகும் K உச்ச நிலையை அடைந்தது.

16ஆம் படம் கான்சல் (consol) பத்திரங்கள் அளித்த நீண்ட கால வட்டி வீதங்களைக் காட்டுகின்றது. K மிகுதியடையும் பொழுது வட்டிவீதம் உயருவதையும் நாம் படத்தில் காணலாம்.

இதற்கு இரு காரணங்களை நாம் கூறலாம். இக்காரணங்கள் ஊகலாப நோக்கத்துடனும், எச்சரிக்கை நோக்கத்துடனும் தொடர்பு கொண்டிருக்கின்றன. விலைவாசி உயரும் என்று மக்கள் எதிர்பார்க்கும்பொழுது ரொக்கத்தை அதிகமாக வைத்துக்கொள்ள மாட்டார்கள் என்றும் இதற்கு அவர்களுடைய ஊகலாப நோக்கமே காரணமாகும் என்றும் நாம் முன்பு குறிப்பிட்டோம். பணவீக்கம் ஏற்படும் என்று மக்கள் எதிர்பார்க்கும்பொழுது ஒரே வட்டி வீதத்தைக் கொடுக்கும் நீண்டகாலப் பத்திரங்களை மக்கள் வாங்க மாட்டார்கள். ஏனெனில் எதிர்காலத்தில் அவைகளுடைய விலைகளுடன் வட்டிவீதத்தை ஒப்பிடும்பொழுது வட்டிவீதங்கள் மிகவும் குறைந்துவிடும். இதன் விளைவாக நீண்டகாலப் பத்திரங்களின் விலைகள் குறையும். அதாவது நீண்டகால வீதங்கள் உயரும். K குறையும்பொழுது வட்டிவீதம் உயரும்.

K என்ற தொகைக்கும் வட்டி வீதங்களுக்கும் உள்ள தொடர்புக்கு நாம் கொடுக்கும் இரண்டாவது விளக்கம் 24ஆம் அதிகாரத்தில் விளக்கப் பெற்றிருக்கின்றது. கான்சல் (consol) பத்திரங்களைப் போன்ற நீண்டகால முதலீட்டுப் பத்திரங்கள் ரொக்கத்

தன்மை (liquidity)யுடன் இல்லை. நாம் ரொக்கத் தன்மையை நாடுவதால் பணத்தை வைத்துக்கொள்ள விரும்புகிறோம். அதாவது கான்சல் பத்திரங்களை வாங்க மறுக்கின்றோம். அப்பத்திரம் கொடுக்கும் வட்டிவீதம் நமது ரொக்க இழப்புக்கு (loss of liquidity) ஏற்ற ஈடாகாது என்பது நமது கருத்தாகும். எவ்வளவுக் கெவ்வளவு நாம் ரொக்கத்தை விரும்புகிறோமோ அதற்குத் தகுந்த முறையில் உயர்ந்த வட்டிவீதத்தைக்கூட இழக்கத் தயாராக இருப்போம். தேசீய வருமானம் பெருகும்பொழுது பணத்தின் அளிப்புப் பெருகாவிடில் மக்களுக்கு வேண்டிய அளவு ரொக்கம் கிடைக்காது. ஆகையால் அவர்கள் பத்திரங்களை வாங்காமல் ரொக்கத்தை வைத்துக்கொள்வார்கள். மக்களுடைய ரொக்க விருப்பம் (liquidity preference) அதிகமாவதால் வட்டிவீதம் உயரும். அதாவது வட்டிவீதம் உயர்ந்தால் ரொக்கத்தை நாடுவோர் அதற்காக அதிகமான வட்டியை இழக்கவேண்டும். ஆகையால் சிலர் பணத்தை முதலீடு செய்வார்கள்.

இந்த நிலையில் நாம் நமது முக்கியமான ஆராய்ச்சியை மீண்டும் தொடர்ந்து நடத்துவோம். பணத்தின் தேவையும் அதன் அளிப்பும் வட்டிவீதத்தை நிர்ணயம் செய்யும். வட்டிவீதம் பாதிக்கப்படும்பொழுது உற்பத்தியும் பாதிக்கப்படும். பணத்தின் தேவை மிகுதியடையும்பொழுது முதலீடு குறையும்; நிதி திரட்டல் எளிதாகும்.

# 29. பணத்தின் அளிப்பு
## (Supply of Money)

நாம் பல்வேறு பண்டங்களைப் பணமாகப் பயன்படுத்தினோம் என்பதை வரலாறு கூறுகின்றது. புகையிலை, உப்பு, தோல் போன்ற சாதாரணமாக விற்பனையாகும் பொருள்களையும் ஆடு மாடுகள் போன்ற கால்நடைகளையும் மக்கள் பணமாகப் பயன்படுத்தினர். முல்லை நிலத்தில் வசித்தவர்கள் ஆடுமாடுகளையே பணமாகப் பயன்படுத்தினர். பொன், வெள்ளி போன்ற உலோகங்கள் பணத்தின் பணிகளைச் செய்வதற்கு மிகவும் உகந்தவை. ஏனெனில் அவை மற்றப் பண்டங்களைப்போல் அழியாமலும், எளிதில் எங்கும் எடுத்துக்கொண்டு செல்லத் தகுந்தவையாகவும், பல்வேறு சிறிய நாணயங்களாக அச்சடிக்கத் தகுந்தவையாகவும் இருக்கின்றன. மேலும் பொருள்களின் மதிப்பு மாறுவதைப்போல் உலோகத்தின் மதிப்பு மாறுவதில்லை; ஏனெனில் உலோகத்தின் அளிப்பு விரைவில் மாறுவதில்லை. உலோகத்தை நாணயமாக அச்சிட்டுப் பயன்படுத்துவதே சிறந்தது என்பதையும், கட்டிகளாகப் பயன்படுத்துவது சிறந்ததல்ல என்பதையும் மக்கள் உணர்ந்தனர். உலோக நாணயங்கள் சுமார் 1000 ஆண்டுகள் ஐரோப்பா கண்டத்தில் புழக்கத்தில் இருந்தன. மற்றப் பொருள்கள் உலோக நாணயங்களுடன் பணமாகப் பயன்படுத்துவதற்குப் போட்டியிடவில்லை.

### செலாவணித்தாள் (Paper Money)

இன்று நாம் மிகச் சிறிய தொகைகளைச் செலுத்துவதற்கே நாணயங்களைப் பயன்படுத்துகிறோம். பெரிய தொகைகளைச் செலுத்துவதற்குச் செலாவணித்தாள்களையும், மிகப் பெரிய தொகைகளைச் செலுத்துவதற்குச் செக்குகளையும் (cheques) பயன்படுத்துகிறோம். இங்கிலாந்தில் முதன்முதலாக 17ஆம் நூற்றாண்டில் செலாவணித்தாள்களை மக்கள் பயன்படுத்தினர். நிலச்சுவான்தார்

கள் தம்மிடம் இருந்த நாணயங்களையும், நகைகளையும் பொற்கொல்லர்களிடம் கொடுத்து, அதற்குப் பதிலாக ரசீதுகளைப் பெற்றனர். பொற்கொல்லர்கள் நாணயங்களைப் பத்திரமாக வைத்துக்கொள்வதோடல்லாமல் அதற்கு வட்டியையும் கொடுத்தனர். உள்நாட்டுப் போர்க்காலத்தில் இப்பழக்கம் எங்கும் பரவியிருந்தது. மக்கள் சான்றிதழ் அல்லது ரசீதைக்கொண்டு பொற்கொல்லர்களிடம் கொடுத்த பணத்தை மீண்டும் திருப்பிப்பெறலாம். தற்காலத்துச் செலாவணித் தாள்களைப்போல் சான்றிதழ்கள் வேண்டியபொழுது நாணயங்களை மீட்க உதவிபுரிந்தன. ஆனால் தற்காலத்துச் செலாவணித்தாள்களைப் போலல்லாமல், அவைகளைக் குறிப்பிட்ட சிலரே (அதாவது தாள்களில் குறிப்பிட்டவர்களே) பயன்படுத்திப் பணத்தை மீட்கமுடியும். அல்லது அவர்கள் ஆணைப்படி மற்றவர்கள் அவைகளைப் பயன்படுத்தலாம். நாளடைவில் யார் வேண்டுமானாலும் பயன்படுத்தக்கூடிய தாள்கள் தோன்றின. இவைகளைச் புறக்குறிப்பில்லாமலே (endorsement) மக்கள் பயன்படுத்த முடிந்தது. 1729க்குள் செலாவணித்தாள்கள் புழக்கத்தில் வந்தன. ஆனால் இத்தாள்களைக் குறிப்பிட்ட சிலரே மீட்கலாம். ஆனால் 18ஆம் நூற்றாண்டின் இறுதியில் வெளியான தாள்கள் எல்லோரும் மீட்கக்கூடியவையாக இருந்தன.

பொற்கொல்லர்கள் வெளியிட்ட தாள்கள் நாணயங்களுக்குப் பதிலாகவே ஏற்றுக்கொள்ளப்பட்டமையால், அவைகளைப் 'பதிலிப் பணம் (representative money) என்றழைத்தனர். பொற்கொல்லர்கள் வெளியிட்ட செலாவணித்தாள்களுக்குச் சமமான உலோகத்தையும் நாணயங்களையும் அவர்கள் வைத்துக் கொள்ளவில்லை. மக்கள் பொற்கொல்லர்களிடம் கொடுத்த உலோகம் அனைத்தையும் ஒரே சமயத்தில் மீட்காததால், அவர்கள் மக்களுடைய பொன்னில் ஒரு பகுதியை மற்றவர்களுக்குக் கடனாகக் கொடுத்தனர். சிலர் குறைந்த அளவு பொன்னை வைத்துக்கொண்டு, அதிகமான தொகைக்குச் சமமான தாள்களை வெளியிட்டனர். அதாவது அவர்கள் காப்பு நிதியைக் (reserve) கொள்ளாமலே செலாவணித்தாள்களை வெளியிடலாம். தற்காலத்து பாங்குகளும் காப்பு நிதியைக் கொள்ளாமல் செலாவணித்தாள்களை வெளியிடுகின்றனர். பாங்குகள் வெளியிடுவதில் ஒரு பகுதி நம்பிக்கை வெளியீடாகும் (fiduciary issue). நம்பிக்கை வெளியீட்டுக்குக் காப்புநிதி வேண்டியதில்லை. நம்பிக்கை வெளியீடு எவ்வளவு மதிப்பைக் கொண்டிருக்கவேண்டும் என்று இக்காலத்து பாங்குகள் நிர்ணயம் செய்யமுடியாது. ஆனால் பொற்கொல்லர்கள் எவ்வளவு தாள்களை வேண்டுமானாலும் நம்பிக்கை வெளியீடாக வெளியிடலாம். சட்டப்படி நம்பிக்கை வெளியீடு ஒரு எல்லைக்குட்பட்டிருக்க

வேண்டும். இங்கிலாந்தில் நம்பிக்கை வெளியீடு ஒரு தொகைக்கு மேற்படக்கூடாது என்ற சட்டம் அமலில் இருந்தது. அமெரிக்காவில் பாங்குகள் எவ்வளவு பொன்னை வைத்துக்கொண்டிருந்தனவோ அதைப்போல் ஒரு குறிப்பிட்ட மடங்கு செலாவுணித்தாள்களை நம்பிக்கை வெளியீடாக வெளியிட்டன.

**செலாவணித்தாள் வெளியீட்டுக்கு எல்லை**

செலாவணித்தாள்களைப் பொன்னாக மாற்ற மக்களுக்கு உரிமை இருந்தது. ஆகையால் பாங்குகள் வரையற்ற முறையில் செலாவணித்தாள்களை வெளியிட முடியாது. பாங்குகள் மக்களுக்கு வேண்டியபொழுது தாள்களுக்குப் பதிலாகப் பொன்னைக் கொடுத்ததால்தான் அவர்கள் செலாவணித்தாள்களைத் தயக்கமின்றி ஏற்றுக்கொண்டார்கள். பாங்குகளுடைய நிலைமை 'கேவலமாக இருந்தது என்றோ, அல்லது அவைகள் செலாவணித்தாள்களுக்குப் பதிலாகப் பொன்னைக் கொடுக்க இயலாத நிலையில் இருந்தன என்றோ மக்கள் கருதினால், அவர்கள் செலாவணித்தாள்களை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். ஆகையால் பாங்குகள் எப்பொழுதுமே காப்புநிதியைக் கொண்டிருக்கவேண்டும். மேலும் அவைகள் கொடுத்த கடனைத் திருப்பிப் பெறக்கூடிய நிலைமையில் இருத்தல் வேண்டும்.

ஆனால் இப்பொழுது இங்கிலாந்தில் புழக்கத்திலிருக்கும் செலாவணித்தாள்களை நாம் பொன்னாக மாற்றமுடியாது. ஸ்காட்லண்டு, அயர்லண்டு நாட்டுப் பாங்குகளுடைய செலாவணித்தாள்களைத் தவிர இங்கிலாந்தில், இங்கிலாந்தின் தலைமை பாங்கு (Bank of England) வெளியிடும் செலாவணித்தாள்கள் மட்டுமே சட்டபூர்வமானவையாக (legal tender) இருக்கின்றன. சட்டபூர்வமான பணத்தை மக்கள் ஏற்றுக் கொள்ளவேண்டும். சட்டமோ அல்லது வழக்கமோ சட்டபூர்வமான செலாவணியைப் பொன்னுடன் தொடர்பு படுத்தவில்லை. பாங்கு பொன்னைக் காப்புநிதியாக வைத்துக் கொள்ளவில்லை. 1939ஆம் ஆண்டிலிருந்து அரசாங்கம் பரிவர்த்தனைச் சமன் காப்புநிதியில் (Exchange Equalisation Fund) ஒரு தொகையைக் கொண்டிருந்தனர். செலாவணித்தாள் வெளியீட்டுக்கு அரசாங்கம் அவ்வப்போது உச்சவரம்பை ஏற்படுத்தும்.

**பாங்குச் செலாவணி (Bank Money)**

செலாவணித்தாள்களும் நாணயங்களுமே பணம் என்று பலர் கருதுகின்றனர். ஆனால் பாங்குச் செலாவணி என்ற ஒரு வகைப்பணமும் இருக்கின்றது. ஆனால் செலாவணித்தாளைப்போல் பாங்குச் செலாவணித்தாளாகவோ அல்லது ஒரு பொருளாகவோ இருக்

காது. தம் பணத்தை மிகவும் கவனமாகப் பாதுகாக்க விரும்பு வோர் அடிக்கடி பாங்குக்குச் சென்று அதன் நிலைமையை நேரில் பார்ப்பார்கள். அவர்கள் பாங்குகள் மற்றவர்களுக்குச் செலாவணித் தாள்களைக் கொடுப்பதையும் நேரில் பார்ப்பார்கள். ஆனால் பாங்கு கள் கொடுக்கும் செலாவணித்தாள்களே, மக்கள் பாங்குகளில் கொண்டிருக்கும் கணக்குகளாக இருக்கின்றன என்று நாம் கருத முடியாது. செவ்வக வடிவத்திலிருக்கும் செலாவணித்தாள்களை பாங்குகள் நாணயத்தைக் கொடுப்பதாக எழுதிக்கொடுக்கும் வாக்குறுதிச் சீட்டுக்கள் என்று நாம் கருதலாம். ஆனால் பாங்கு களின் கணக்குப் புத்தகத்தில் உள்ள பதிவையே (entry) நாம் கணக்கு (account) என்று கூறுகிறோம். ஆனால் இப்பதிவு பாங்கி லிருந்து நாம் பணத்தைப்பெற நமக்கு உரிமையைக் கொடுக் கின்றது. செக்கை (cheque) நாம் பயன்படுத்தும்பொழுது பாங்கி லிருந்து பணத்தை மீட்பதில்லை. நாம் பணத்தை நடைமுறைக் கணக்கில் (current account) டெபாசிட்டாக வைத்துக்கொண்டால் பணத்தை ஒரு 'கணக்கிலிருந்து' மற்றொன்றுக்குச் செக்கு மூலம் மாற்றலாம். பாங்குகள் பணத்தைத் தாராளமாகக் கொடுக்கக் கூடிய நிலையில் இருந்தாலும் நாம் கொடுக்கும் செக்குகள் ஏற்றுக் கொள்ளப்பட்டாலும் பாங்கில் நாம் கொண்டிருக்கும் 'கணக்கு களை'ப் (accounts) பணமாகவே பயன்படுத்தலாம். ஆனால் நெருக்கடியான காலங்களில் மக்கள் செக்குகளை ஏற்றுக் கொள்ளாமல் செலாவணித்தாள்களையே விரும்பலாம். ஏனெனில் சட்டபூர்வமான பணம், நெருக்கடியான காலங்களில செக்குகளை விட ரொக்கத் தன்மையைக் கொண்டிருக்கின்றது. பாங்குகள் செக்குகளை ஏற்றுக்கொண்டு பணத்தைக் கொடுக்கமுடியாத நிலையில் இருக்கலாம். ஆனால் சாதாரணமான காலங்களில் நாணயங்களும் செலாவணித்தாள்களும் கொண்டிருக்கும் ரொக்கத் தன்மையைப் பாங்குச் செலாவணியும் கொண்டிருக்கும். செக்கு கள் மூலம் கட்டணங்களைச் செலுத்துவதையே நாம் விரும்பலாம்.

செக்குகளையே செலாவணி என்று நாம் கருதக்கூடாது. செக்குகள் மூலம் நாம் ஒருவர் கணக்கிலிருக்கும் தொகையை மற்றொருவர் கணக்குக்கு மாற்றலாம். செக்குகள் மூலம் பணத் தைத் திருப்பக்கூடிய கணக்குகளை (நடைமுறைக் கணக்குகள்) நாம் சாதாரணமாகப் பணம் என்றே கருதலாம். டெபாசிட்டுக் கணக்குகளையும் (Deposit account), சேமிப்பு டெபாசிட்டுக் கணக்குகளையும் (Savings Deposits accounts) நாம் பணம் என்றே கருதலாம். நடைமுறை டெபாசிட்டுத் தொகையைப்போல் இத் தொகைகளை நாம் எப்பொழுது வேண்டுமானாலும் செலாவணியாக மாற்றிக் கொள்ளமுடியாது. டெபாசிட்டர் பணத்தை மீட்பதற்கு

முன் தன் எண்ணத்தைப் பாங்குக்குத் தெரிவிக்க வேண்டும். இந்த டெபாசிட்டு நடைமுறை டெபாசிட்டைவிடக் குறைந்த ரொக்கத் தன்மையைக் கொண்டிருக்கின்றது. ஆனால் மற்றச் சொத்துகளுடன் ஒப்பிடும்பொழுது, இந்த டெபாசிட்டுகள் ரொக்கத் தன்மையுடன் இருப்பதாகவே நாம் கருதவேண்டும். நடைமுறை டெபாசிட்டுக்கும் மேலே குறிப்பிட்ட மற்ற இருவகை டெபாசிட்டுகளுக்கும் உள்ள வேற்றுமையை நாம் மிகைப்படுத்த வேண்டாம்.

**பணமும் மற்ற ரொக்கத் தன்மையுடைய சொத்துகளும்**

சேமிப்புக் கணக்குகளையும் (Savings account) நாம் பணம் என்று கருதமுடியுமா? உண்டியல்களை நாம் பணம் என்று கருத முடியுமா? கான்சல் பத்திரங்களும் பணமாகுமா? இந்த வினாக்களுக்கு விடையளிக்க நாம் பணத்தின் விளக்கத்தை மீண்டும் பார்க்கவேண்டும். பொருள்களுக்காகவும், செலுத்த வேண்டிய மற்றத் தொகைகளுக்காகவும் எவ்விதத் தயக்கமும் இல்லாமல் மக்கள் எதை ஏற்றுக் கொள்கின்றனரோ அதையே பணம் என்று நாம் சொல்லலாம். ஆனால் எல்லாச் சொத்துகளையும் மக்கள் பணத்தைப்போல் தயக்கமின்றி ஏற்றுக் கொள்வதில்லை.

எல்லாவகைச் சொத்துகளையும்விட ஏதாவது ஒன்றை மக்கள் ஏற்றுக்கொள்ள அதிகமாகத் தயாராக இருந்தால் அதையே நாம் பணம் என்று கூறலாம். இத்தகைய சொத்து (asset) இல்லாவிடில் பணம் எது என்றும், எது பணம் இல்லை என்றும் நாம் திட்டவட்டமாகக் கூறமுடியாது. ரொக்கத் தன்மையை அடிப்படையாகக் கொண்டு சொத்துகளை நாம் ஒரு பட்டியலில் குறிப்பிடலாம். இப்பட்டியலில் உள்ள உண்டியல்களையும் (Bills), கான்சல் பத்திரங்களையும் நாம் பணம் என்று சொல்லமுடியாது. இவை கடன் தொகைகளாகவே இருக்கின்றன. ஆனால் சில வகைப் பணங்கள் கடன்களாகவே இருக்கின்றன. உதாரணமாகப் பவுன் தாள்கள் (pound notes) ஒரு குறிப்பிட்டதொகையைத் திருப்பிக்கொடுப்பதாக எழுதிக் கொடுக்கப்பெற்ற உறுதிச் சீட்டுகளாகவே இருக்கின்றன. நடைமுறை டெபாசிட்டு பாங்கு கொடுக்கவேண்டிய கடன் தொகையாகும். பவுன் தாள்களில் குறிப்பிட்டிருக்கும் தொகையை நாம் என்றுமே இங்கிலாந்தின் தலைமை பாங்கிலிருந்து வாங்கமாட்டோம். ஆகையால் பவுன் தாள்கள் நிரந்தரமான கடன் பத்திரங்களாக இருக்கின்றன. கான்சல் பத்திரங்களும் செலாவணித் தாள்களைப் போலவே நிரந்தரமான கடன் தொகைகளாக இருக்கின்றன. அவைகளை அரசினர் மீட்காமலே இருக்கலாம். பணத்திற்கும் இப் பத்திரங்களுக்கும் என்ன வேறுபாடு

இருக்கின்றது? கான்சல் பத்திரங்கள் வட்டியைக் கொடுக்கின்றன என்ற உண்மை மட்டுமே அவைகளைப் பணத்திலிருந்து வேறு படுத்துகின்றனவா? வட்டியைக் கொடுக்கும் செலாவணித் தாள்களை அரசினர் நூற்றுண்டுகளாக வெளியிட்டனர். பணத்திற் கும் கான்சல் பத்திரங்களுக்கும் ஒரே ஒரு வேறுபாடு தான் உண்டு. அதாவது பணம் அப் பத்திரங்களைவிட அதிகமான ரொக்கத்தன்மையைக் கொண்டிருக்கின்றது. மக்கள் பிறர் செலுத்தவேண்டிய தொகைக்காகக் கான்சல் பத்திரங்களை ஏற்றுக்கொள்வதில்லை, பணத்தையே ஏற்றுக்கொள்கின்றனர். ஆகையால் உண்டியல்களையும் சேவிங்ஸ் டெபாசிட்டுகளையும் நாம் பணம் என்று கருதமுடியாது.

பங்குச் செலாவணியைப் பயன்படுத்துவது மிகவும் எளிதாக வும் வசதியுள்ளதாகவும் இருப்பதால் நாம் செலாவணித்தாள் களை யே பயன்படுத்தாமல்இருக்கலாம். வருமானத்தைச் செக்குகள் மூலமே பெற்றுச் செலவுகளையும் செக்குகள் மூலமே செய்யலாம். செலுத்தவேண்டிய தொகைக்காகப் பணத்தைக் கொடுக்காமல் செக்குகளைக் கொடுப்பதால் நமது கணக்கிலிருக்கும் தொகை குறையும். பணத்தை ஒரு கணக்கிலிருந்து மற்றக் கணக்குகளுக்கு மாற்றுவதற்கு வேண்டிய பதிவுகளைக் கணக்குப் புத்தகங்களில் பதிவு செய்வார்கள். ஆனுல் நடைமுறையில் நாம் எல்லாத் தொகைகளையும் செக்குகள் மூலமே செலுத்துவதில்லை. கடை களுக்குப் போய்ப் பொருள்களை வாங்கும்பொழுது நாம் செக்குப் புத்தகங்களைக் கொண்டுசெல்வதில்லை. குறைந்த தொகைகளை செலுத்துவதற்கு நாம் இன்றும் செலாவணித் தாள்களையும் நாண யங்களையுமே பயன்படுத்துகிறோம். ஆனுல் இன்றைய வர்த்தகத் தில் செலாவணி ஒரு முக்கியமற்ற இடத்தையே பெற்றிருக்கின்றது. பாங்கு முறையின் வளர்ச்சியும், செக்குகளைப் பயன்படுத்தும் பழக்கமுமே இதற்குக் காரணங்களாக இருக்கின்றன. 1958ஆம் ஆண்டு இங்கிலாந்தில் மக்கள் கொண்டிருந்த செலாவணியைப் போல் ஐந்து மடங்கு மதிப்புள்ள தொகையை டெபாசிட்டாகக் கொண்டிருந்தனர்.

## பாங்குச் செலாவணியும், பாங்குச் செலாவணியாக்கமும் (credit creation)

புழக்கத்திலிருக்கும் பணத்தில் பெரும்பகுதி பாங்குச் செலா வணியாக இருக்கின்றது என்று நாம் குறிப்பிட்டோம். இச் செலா வணியைப் பாங்குகளே உற்பத்தி செய்யும். இங்கு நாணயங்களை யும், செலாவணித் தாள்களையும் பற்றி நாம் ஒன்றும்கூறவேண்

டாம். ஏனெனில் அவைகளுடைய அளிப்பைத் தேவைக்கேற்ற வாறு இக் காலத்தில் பெருக்குகின்றனர். நாம் வேண்டிய அளவு நாணயத்தையும் செலாவணித் தாள்களையும் வைத்துக்கொள்ளா விடில், பாங்கிலிருந்து செக்குகள் மூலம் வேண்டிய தொகையைப் பெறலாம். மக்கள் எவ்வளவு பணத்தை நாணயமாகவும் செலா வணித் தாள்களாகவும் வைத்துக்கொள்ள விரும்புகின்றனரோ அந்த அளவுக்கு மையப்பாங்கும் (Central Bank) நாணயச்சாலையும் (Mint) அச்சிடும். ஆனால் ஒருவன் மிகுதியான பாங்குச் செலா வணியை வைத்துக்கொள்ள விரும்பினால், அவன் பாங்குகளை அதிகமான பாங்குச் செலாவணியை உற்பத்தி செய்யும்படி கட்டாயப்படுத்தமுடியாது. வேண்டுமானால் செலாவணித் தாள் களைப் பாங்கில் செலுத்தித் தான் கொண்டிருக்கும் டெபாசிட்டுத் தொகையை அதிகரிக்கலாம். ஆனால் வேறு சிலர் செலாவணித் தாள்களைச் செக்குகள் மூலம் மீட்பதால் மொத்த டெபாசிட்டுத் தொகைக் குறையலாம். பொதுவாக எல்லோரும் அதிகமான தொகையைப் பாங்கில் செலுத்தினால், அல்லது செக்குகள் மூலம் மீட்டால் பாங்குகளுடைய மொத்த டெபாசிட்டுத் தொகை மிகுதி படையலாம், அல்லது குறையலாம். செலாவணித்தாள் வெளி யீடும் பாங்குச் செலாவணியாக்கமும் ஒரேசமயத்தில் பெருகும் அல்லது குறையும். ஆகையால் பணத்தின் அளிப்பை மக்கள் மாற்றமுடியாது, பாங்குகளே மாற்றலாம்.

ஒவ்வொருவனும் எவ்வளவு தொகையை டெபாசிட்டாக வைத்துக்கொள்ளவேண்டும் என்பதை முடிவு செய்யலாம். ஆனால் பொதுமக்கள் மொத்த டெபாசிட்டுத் தொகை எவ்வளவு இருக்க வேண்டும் என்பதை முடிவு செய்யமுடியாது. இது எப்படி சாத்தியம் என்பதை அறிய நாம் பாங்குகளுடைய மற்ற வேலைகளை நன்கு புரிந்துகொள்ளவேண்டும்.

**பணத்தை உற்பத்தி செய்தல்**

பணத்தை உற்பத்திசெய்தலே பாங்குகளுடைய இரண்டாவது அலுவலாகும். அதன் முதல்பணி சேமிப்புக்களைத் திரட்டுவதே யாகும். செலாவணித்தாள் புழக்கத்தில் வந்தது முதல் பாங்குகள் பணத்தை எளிதில் உற்பத்தி செய்யமுடிந்தது. முதன் முதலில் பாங்குகள் கொண்டிருந்த காப்பு நிதிக்கு மேற்பட்டதொகைக்குச் சமமான செலாவணித் தாள்களை வெளியிட்டன. அதாவது அவை புதிய செலாவணித்தாள்களை மக்களுக்குக் கடனாகக் கொடுத்தன. சில சமயங்களில் அவைகள் தாராளமாகக் கடன்கொடுக்கவில்லை. மேலும் முன்பு கொடுத்த கடனைத் திருப்பிக்கேட்டுச் செலவாணிச் சுருக்கம் செய்தன. பாங்கு முறை வளர்ச்சியில் இந்த நிலையில்

அவைகள் கொண்டிருந்த காப்பு நிதிக்குச் சமமான செலாவணித் தாள்களையே வெளியிட்டன. உதாரணமாக 20 சதவீதம் காப்பு நிதியை (reserve) அவைகள் கொண்டிருந்தால், 20 பவுன் மதிப்புள்ள பொன்னை வைத்துக்கொண்டு 100 பவுன் மதிப்புள்ள செலாவணித்தாள்களையே வெளியிட்டன. காப்பு நிதி மிகுதியடைந்ததால் செலாவணித்தாள் வெளியீட்டையும் உபரி காப்பு நிதியைப் போல் 5 மடங்கு பெருக்கின. மக்கள் டெபாசிட்டுத் தொகையை மீட்டதால் அதாவது பொன் காப்பு நிதி குறைந்ததால் செலாவணி வெளியீடும் அதற்குத் தகுந்த முறையில் குறைந்தது.

பொன் புழக்கத்திலிருந்து மறைந்ததாலும் அரசினரே செலாவணித்தாள் வெளியீட்டை மேற்கொண்டதாலும் வாணிக பாங்குகள் பணத்தை உற்பத்தி செய்யும் சக்தியை இழக்கவில்லை. அவை மக்களுக்குக் கொடுக்கும் கடனைப் பெருக்கியோ அல்லது சுருக்கியோ செலாவணித்தாள் வெளியீட்டை மாற்றியது போலவே இப்பொழுதும் மக்களுக்குக் கொடுக்கும் கடனைச் சுருக்கலாம் அல்லது பெருக்கலாம். அப்படிச் செய்வதால் மொத்த டெபாசிட்டுத் தொகை மாறும். தாராளமாகக் கடன் கொடுத்தால் டெபாசிட்டுத் தொகை மிகுதியடையும். கடன் கொடுத்தலைக் கட்டுப்பாடு செய்தால் டெபாசிட்டுத் தொகை குறையும்.

காப்பு நிதியே பாங்குச் செலாவணியின் அடிப்படையாக அமைந்திருக்கின்றது. காப்பு நிதி டெபாசிட்டுடன் கொண்டுள்ள விகிதத் தொடர்பே பாங்குகளின், பாங்குச் செலாவணியாக்கம் செய்யும் சக்தியை நிர்ணயம் செய்கின்றது. உதாரணமாகப் பாங்குகள் டெபாசிட்டுத் தொகையில் 10 சதவீதத்தை ரொக்கமாக வைத்துக்கொள்ளவேண்டுமென்று கற்பனை செய்துகொள்வோம். பாங்குகள் கொண்டுள்ள மொத்த டெபாசிட்டுத் தொகை அவைகளுடைய ரொக்கத்தைப் போல்100மடங்கு பெரியதாக இருக்கும். மொத்த ரொக்கம் பெருகும்பொழுது டெபாசிட்டுத் தொகையும் பெருகும். அது குறையும்பொழுது டெபாசிட்டுத் தொகையும் குறையும். 'ரொக்க ஆதாரத்திற்கு'த் தகுந்தவாறு டெபாசிட்டுத் தொகை மாறும்.

### ரொக்க ஆதாரம் (Cash base)

வாணிகப் பாங்குகள் காப்பு நிதி முழுவதையும் பேழை ரொக்கமாகவே (Till money) வைத்துக்கொண்டிருக்கின்றன என்றும், இத்தொகையைப் பாங்குகள் செலாவணித்தாளாக வைத்துக் கொண்டிருக்கின்றன என்றும் நாம் கற்பனை செய்துகொள்வோம். பொதுமக்கள் பணத்தை இருபகுதிகளாக வைத்துக்கொள்

கின்றனர் என்றும், 5 பங்கு டெபாசிட்டுத்தொகை இருந்தால் 1 பங்கு செலாவணித்தாள்களை வைத்துக்கொள்கின்றனர் என்றும் கற்பனை செய்துகொள்வோம். செலாவணித்தாள் வெளியீட்டை அரசினர் மட்டுமே கட்டுப்பாடு செய்யமுடியும் என்றும் நாம் கற்பனை செய்துகொள்வோம். இக் கற்பனையில் ஓரளவு உண்மை இருக்கின்றது. அரசினர் செலாவணித்தாள் வெளியீட்டைப் பெருக்கும் பொழுது பணத்தின் அளிப்பும் பெருகும். புதியதாக அச்சிடப் பெற்ற செலாவணித்தாள்கள் அரசாங்கத்தின் செலவுக்குப் பயன் படுகின்றது. முதன்முதலில் புதிய வெளியீட்டுக்குச் சமமான தொகையே புழக்கத்தில் வரும். பிறகு மொத்தப் பணத்தின் அளிப்பு இந்த வெளியீட்டுக்கும் மேலாகிப் பெருகும். மக்கள் ஒரு குறிப்பிட்டகாலத்தில் ஒரு குறிப்பிட்ட அளவுப்பொருள்களை வாங்கும் சக்தியைக் கொடுக்கக்கூடிய தொகையை ரொக்கமாக வைத்திருப்பார்கள் என்று நாம் முன்பே குறிப்பிட்டோம். பணத்தின் அளிப்புப் பெருகும்பொழுது தேவைக்கு வேண்டிய தொகைக்கு மேல் பணத்தை மக்கள் பெறுவார்கள். ஆகையால் செலாவணித்தாள்களில் ஒரு பகுதியை மக்கள் பாங்குகளில் டெபாசிட்டாக வைத்துக் கொள்வர். பாங்குகள் வசம் இருக்கும் ரொக்கம் பெருகுவதால் அவை மிகுதியான தொகையைக் கடனாகக் கொடுத்துத் தம் டெபாசிட்டுகளைப் பெருக்கலாம், அல்லது பாங்குகள் பத்திரங்களை வாங்கலாம். காப்பு நிதி இடம் கொடுக்கும்வரை பாங்குகள் டெபாசிட்டுத் தொகையைப் பெருக்கலாம். அதற்குமேல் காப்பு நிதி பற்றிய விதிகளை மீறாமல் பாங்குகள் பாங்குச் செலாவணி யாக்கம் செய்யமுடியாது. ஒரு மடங்கு செலாவணித்தாள் வெளியீடு பெருகினால் பாங்குச் செலாவணி 4 மடங்கு பெருகும் என்பது தெளிவாகின்றது.[1]

### பாங்குச் செலாவணியாக்கமும் பாங்குகள் பெறும் இலாபமும்

நாம் மேலே கொடுத்துள்ள விளக்கத்திலிருந்து பாங்குகள் மிகுதியான இலாபத்தை ஈட்டுவதற்குப் பல வாய்ப்புகள் இருக்கின்றன என்று தோன்றுகிறது. பணத்தின் அளிப்பு மிகுதியடையும்பொழுது பாங்குகள் அதிகமான இலாபத்தைப் பெறவேண்டும் என்ற கட்டாயம் இல்லை. பணத்தின் அளிப்புக் குறையும் பொழுது பாங்குகளின் இலாபம் குறையாமல் இருக்கலாம்.

[1] செலாவணித்தாள்கள் புதியதாகப் புழக்கத்தில் வந்தால் அதில் $\frac{2}{3}$ பகுதியை மக்கள் வைத்துக்கொண்டு $\frac{1}{3}$ பகுதியை டெபாசிட்டாக வைத்துக்கொள்வர். பணத்தின் அளிப்புக் கீழ்க்கண்டவாறு பெருகும். $\frac{2x}{3}+\frac{10x}{3}=4x$ அதாவது பணத்தின் அளிப்பு மடங்கு பெருகும்.

பாங்குகள் புதிய பணத்தை உற்பத்தி செய்யும்பொழுது அவைகளுடைய (கடன், பத்திர முதலீடு போன்ற) சொத்துகளும், டெபாசிட்டுகளும் (பாங்குச் செலாவணி) பெருகும். பாங்குகள் சொத்துகள் மூலம் பெறும் வருமானத்தையும் அவைகள் டெபாசிட்டுக்களுக்குக்கொடுக்கும் வட்டியையும், பணவீக்கம் பாதிக்கும். அவைகள் எவ்வாறு பாதிக்கப்படுகின்றனவோ, அதற்குப் பொருத்தமான இலாபத்தைப் பாங்குகள் பெறும். பணவீக்கத்தின் காரணமாகப் பாங்குகளுடைய சொத்துகளும் (assets), பொறுப்புகளும் (Liabilities) பெருகுவதால், அவைகள் அதிக இலாபத்தைப் பெறும் என்று நாம் கூறமுடியாது. பணவீக்க காலத்தில் சாதாரணமாக வட்டிவீதங்கள் உயரும். ஆகையால் சிறப்பீட்டுப் பத்திரங்களின் (guilt edged securities) விலைகள் குறையும். பாங்குகள் இப் பத்திரங்களை அதிகமாக வைத்துக்கொண்டிருப்பதால் அவைகளுடைய வருமானம் குறையும். ஆனால் பாங்குகள் செலுத்தவேண்டிய தொகைகள் விரைவில் குறையலாம். ஆனால் சாதாரணமாக இந்த மாறுதல் ஏற்படாது.

**பாங்குகளும் மற்ற நிதி நிலையங்களும்**

பாங்குச் செலாவணியை (Bank credit) பாங்குகள் எவ்வாறு உற்பத்தி செய்கின்றன என்பதைப் பலர் சரிவரப் புரிந்துகொள்வதில்லை. மற்ற நிதி நிலையங்கள் எவ்வாறு பணியாற்றுகின்றனவோ அதே போல் பாங்குகளும் பணியாற்றுகின்றன. அவைகள் நிதி சம்பந்தமான சொத்துகளை வாங்குகின்றன, விற்பனையும் செய்கின்றன. பாங்குகள் சிலரிடமிருந்து பணத்தைக் கடனாக வாங்குகின்றன, வேறுசிலருக்குக் கடன்கொடுக்கின்றன. கட்டடச் சங்கங்களும் (Building Societies), இன்சூரன்சுக் கம்பெனிகளும், முதலீட்டு டிரஸ்டுகளும் (Investment Trusts), தள்ளுபடி நிலையங்களும் (Discount houses) நிதி நிலையங்களும் (Finance houses) பாங்குகள் செய்யும் வேலையையே செய்கின்றன. ஆனால் இந்த நிலையங்கள் வேறு வழிகளில் பணத்தைப் பெறலாம். தம்மிடம் இருக்கும் தொகையை வேறு வழிகளில் முதலீடும் செய்யலாம். பாங்குகளிடையேகூட நாம் வேறுபாடுகளைக் காணலாம். சில பாங்குகளின் பங்குதாரர்களிடத்திலிருந்தும், வேறு சில டெபாசிட்டர்களிடமிருந்தும் தம் தொழிலுக்கு வேண்டிய தொகையில் பெரும் பகுதியைப் பெறலாம். சில பாங்குகள் தம் நிதியைத் தொழில் நிறுவனங்களுக்குக் கடனாகக் கொடுகின்றன, சில அரசாங்கத்திற்கும், மற்ற நிறுவனங்களுக்கும் கடன்கொடுகின்றன, மற்றும் சில குறுகிய காலக் கடன் தொகைகளை மக்களிடமிருந்து பெற்று, மக்களுக்குக் குறுகிய காலக் கடன் வசதியளிக்கின்றன. ஆனால் எல்லா நிதி நிலையங்களும், பொறுப்புகள் பெருகும்பொழுது,

சொத்துகளையும் பெருக்கும். உதாரணமாக ஒரு கட்டடச் சங்கம், தான் பெறும் டெபாசிட்டுத் தொகையைப் பெருக்கி, முன்பைவிட அதிகமான தொகையை மக்களுக்கு ஒற்றியாகக் (Mortgage) கொடுக்கலாம். டெபாசிட்டுத் தொகைகளை மக்களிடமிருந்து பெற்றுத் தொழில் செய்யும் பாங்கு, கொண்டிருக்கும் பொறுப்புகள் (liablities) மற்ற நிதி நிலையங்களுடைய பொறுப்புகளிலிருந்து வேறுபட்டிருக்கும். இதுவே பாங்குகளுடைய சிறப்பான கூறும். கட்டடச் சங்கங்களுடைய டெபாசிட்டுகளையும், இன்சூரன்சுக் கம்பெனிகளுடைய பத்திரங்களையும், முதலீட்டு டிரஸ்டுகளுடைய பங்குகளையும் போலல்லாமல் பாங்குகளுடைய பொறுப்புகள் நிதி சம்பந்தமான பொறுப்புகளாகவே இருக்கின்றன. இப் பொறுப்புகளை நாம் பணமாக மாற்றவேண்டியதேவை இல்லை. அவைகளை ஈடாக வைத்துக் கடனை வாங்கவேண்டாம். ஏனெனில் இவைகளே பணத்திற்குச் சமமானவை.

பாங்குச் செலாவணியை (Bank credit) ரொக்கத்தன்மை யுடைய சொத்து என்று நாம் விளக்கம் கொடுக்கலாம். மற்ற நிதி நிலையங்களும் இத்தகைய சொத்துகளை உற்பத்தி செய்யலாம். அதாவது இவை உற்பத்தி செய்யும் சொத்துகளை நாம் எளிய முறையில் விற்பனை செய்யலாம்; இப்படி இவைகளை விற்பனை செய்யும்பொழுது அதிகமான தொகையை இழக்காமலும் விற்பனை செய்யலாம். ஆனால் இந்தச் சொத்துகள் பணத்திலிருந்து வேறு பட்டிருக்கின்றன. ஆனால் இவை பணத்திலிருந்து அதிகம் வேறு பட்டிருக்கவில்லை. மற்ற நிதி நிலையங்களுடைய பொறுப்புகள் (liabilities) பெருகினால், பணத்தின் அளிப்புப் பெருகாது. ஆனால் நாட்டின் பொருளாதாரம் ரொக்கத்தன்மையைப் பெறும், பணத் தின் தேவை குறையும். மக்கள் மிகுதியான தொகையைக் கட்ட டக் கம்பெனிகளில் டெபாசிட்டாகவும், இன்சூரன்சுப் பத்திரங் களாகவும், சேமிப்புப் பத்திரங்களாகவும் (Savings certificates) கொண்டிருந்தால், அவர்கள் பாங்குகளில் மிகுதியான தொகையை டெபாசிட்டாகக் கொள்ளவேண்டியதில்லை. மேலே குறிப்பிட்ட சொத்துகள் அவர்களுக்கு வேண்டிய அளவு ரொக்கத் தன்மை யைக் கொடுக்கின்றன. எல்லா நிதிநிலையங்களும் மக்களுடைய பணத்தைப் பெறுவதில் போட்டிபோடுகின்றன. இப் போட்டியில் கலந்து கொள்ளும் பாங்குகள் தம் முயற்சியில் முழு வெற்றி காணத்தவறலாம். அதாவது இன்சூரன்சுக் கம்பெனிகளும், மற்ற நிதி நிலையங்களும் மக்களிடமிருந்து பணத்தைப் பெறுவதில் வெற்றியடையலாம். இந்த நிலை ஏற்பட்டால் பாங்குகள் செய்யும் தொண்டு மாறலாம். நாட்டின் நிதியமைப்பில் பாங்குச் செலா வணியின் இடத்தை மற்ற ரொக்கத்தன்மையுடைய சொத்துகள்

கைப்பற்றிவிடும். இந்த நிலையில் பணத்தின் அளவு பெருகும் பொழுது நாட்டின் ரொக்கத்தன்மை அல்லது ரொக்க நிலை இவ்வாறு மாறும் என்பதை நாம் சொல்லமுடியாது. நாட்டின் ரொக்க நிலைமையே பொருளாதாரத்தைப் பாதிக்கும்; பொருளாதாரத்திற்கு ரொக்க நிலையைக் கொடுக்கக்கூடிய பல்வேறு நிறுவனங் களுள் பாங்குகளும் ஒரு வகையாகிவிடும்.

ஒரு பாங்கு எவ்வாறு பாங்குச் செலாவணியாக்கம் செய் கின்றது என்பதை நாம் சற்றுக் கவனித்தால், அது மற்ற நிதிநிலை யங்களைப் போலவே இருக்கின்றது என்பதைக் காணலாம். காப்பு நிதி உபரியாக இருந்தால் அது மக்களுக்குக் கடன்கொடுக்கலாம், பத்திரங்களையும் வாங்கலாம். மற்ற நிதிநிலையங்களைப் போலவே பாங்குகளும் மிகுதியான தொகையையோ அல்லது குறைந்த தொகையையோ காப்பு நிதியாகக் கொள்ளலாம். பாங்கைப் போலவே மற்ற நிலையங்களும் தம் மதிப்பைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டிய தொகையைக் காப்பு நிதியாகக் கொண்டிருக்க வேண்டும்.

பாங்குகளை மற்ற நிதி நிலையங்களுடன் ஒப்பிடும்பொழுது, நாம் சற்றுக் கவனமாக இருத்தல்வேண்டும். ஒரு நிலையம் மற்றொன்றுக்குக் கடன் உதவியளிக்கலாம். நாட்டின் பொருளா தாரத்தில் பாங்குகள் ஒரு முக்கியமான இடத்தைப் பெற்றிருக் கின்றன. மற்ற நிலையங்களைவிட பாங்குகள் மிகுதியான தொகையை வைத்துக்கொண்டிருக்கின்றன. உதாரணமாக இங்கிலாந்தில் வாணிக பாங்குகள் 1958ஆம் ஆண்டின் இறுதியில் 10,000 மில்லியன் பவுன்களுக்குச் சமமான சொத்துகளைக் கொண்டிருந்தன. கட்டடச் சங்கங்கள் 2,600 மில்லியன் பவுன் மதிப்புள்ள சொத்துகளையும், தள்ளுபடி நில்யங்கள் (discount houses) 1,050 மிலியன் பவுன் மதிப்புள்ள சொத்துகளையும், முதலீட்டு நிறுவனங்கள் 800 மிலியன் பவுன் மதிப்புள்ள சொத்து களையும் கொண்டிருந்தன. இன்சூரன்சுக் கம்பெனிகளும், ஓய் வூதிய நிதிகளும் (Pension Funds) 9,000 மிலியன் பவுன் மதிப் புள்ள சொத்துக்களைக் கொண்டிருந்தன. ஆனல் இன்சூரன்சுப் பத்திரங்கள் பாங்குச் செலாவணிபோல் ரொக்கத்தன்மையைக் கொள்ளவில்லை. ஆகையால் அவை பாங்குகளுடன் போட்டியிட முடியாது. பாங்குச் செலாவணியே ரொக்கத்தன்மையின் உறை விடம் என்று நாம் கூறமுடியாது. ஆனல் பாங்குச் செலாவணியே மற்ற எல்லாச் சொத்துகளையும் விட மிகுதியான ரொக்கத்தன் மையைக் கொண்டிருக்கின்றது. இதுவும் பாங்குகளின் முக்கியத்து வத்திற்கு ஒரு காரணமாகும். மேலும் நாட்டில் நிலவும் ரொக்க

நிலைமையையும், மொத்தப் பணத்தையும் அரசாங்கம் பாங்குகள் மூலம் கட்டுப்பாடு செய்யலாம்.

**பாங்குப் பணமும் ரொக்க ஆதாரமும்**

நாம் இங்கு முன்பு எழுப்பிய முக்கியமான வினாவுக்கு விடையளிக்கவேண்டும், பணத்தின் அளிப்பு எவ்வாறு நிர்ணயிக்கப்படுகின்றது? மக்கள் கொண்டிருக்கும் செலாவணித்தாள்களில் எவ்வளவு தொகையை பாங்குகளில் டெபாசிட்டாக வைத்துக் கொள்ளலாம் என்று முடிவு செய்யலாம். இந்த முடிவு பணத்தின் அளிப்பை ஓரளவே பாதிக்கும் என்று நாம் முன்பு குறிப்பிட்டோம். ஒரு பாங்கு தன் காப்பு நிதியைப் பெருக்காமல் டெபாசிட்டைப் (பாங்குச் செலாவணியை) பெருக்கமுடியாது. பாங்குகளின் ரொக்க ஆதாரம் (Cash base) மாறினால் பாங்குச் செலாவணியும் மாறும். ஆகையால் பாங்குகளுடைய ரொக்கம் எவ்வாறு மாறுகின்றது என்பதை நாம் இங்குக் கவனிக்கவேண்டும். நாம் மேலே கொடுத்த உதாரணத்தில் பாங்குகளின் ரொக்கம் முழுவதும் பேழை ரொக்கமாக இருக்கின்றது என்று கற்பனை செய்துகொண்டோம். இதை பாங்குகள் செலாவணித்தாள்களாகவே வைத்திருக்கின்றன என்றும் நாம் கற்பனை செய்துகொண்டோம். மக்கள் தம் தேவைக்கு வேண்டிய தொகையை வைத்துக்கொண்டு எஞ்சிய செலாவணித்தாள்களை பாங்குகளில் டெபாசிட்டாகச் சேர்த்துவிடுகின்றனர் என்று நாம் குறிப்பிட்டோம். இந்த நிலையில் செலாவணித்தாள் வெளியீடும், மக்கள் எவ்வளவு தொகையைக் கையில் ரொக்கமாக வைத்துக்கொள்ளவேண்டும் என்று முடிவு செய்கின்றனரோ அந்த முடிவு பணத்தின் அளிப்பை நிர்ணயம் செய்கின்றது.

மேலே குறிப்பிட்ட உதாரணம் இயற்கைக்கு முரணாக இருக்கின்றது. ஏனெனில் தற்காலத்தில் பணியாற்றும் இங்கிலாந்தின் தலைமை பாங்கு (Bank of England), பெடரல்ரிசர்வ் சபை (Federal Reserve Board) போன்ற மையப் பாங்குகளைப் (Central Banks) பற்றி நாம் உதாரணத்தில் எதையுமே குறிப்பிடவில்லை. மைய பாங்கும் அரசாங்கமும் நாட்டில் புழக்கத்திலிருக்கும் மொத்தப் பணத்தை நிர்ணயம் செய்கின்றன. அரசாங்கமும் மைய பாங்கும் செலாவணிக் கொள்கையை வகுத்து, அதைச் செயற்படுத்துகின்றன. அரசாங்கத்தின் அதிகாரத்தைக் கருவூலம் (Treasury) அல்லது நிதி இலாகா (Finance Department) செலுத்தும். பல்வேறு நாடுகள் பல்வேறு முறைகளில் பணத்தின் அளிப்பைக் கட்டுப்படுத்துகின்றன. மைய பாங்கிற்கும் அரசாங்கத்திற்குமிடையே நிலவும் உறவிலும் உலகநாடுகளிடையே வேற்றுமைகள் இருக்

கின்றன. 30வது அதிகாரத்தில் இங்கிலாந்தில் நிலவும் நிலைமையை நாம் விளக்கியிருக்கிறோம். சில பொதுவான உண்மைகளை நாம் இங்குக் காணலாம். பாங்கு முறையைப் (Banking) பற்றிய விவரங்கள் அனைத்தையும் நாம் இங்குக் கொடுக்க இயலாததால், மைய பாங்கின் பணிகளை மட்டும் விளக்குவோம். அரசியலாரின் அனுமதியுடன் மைய பாங்கு, வாணிக பாங்குகளுடைய காப்பு நிதியைக் கட்டுப்படுத்தி, அதன் மூலம் செலாவணியாக்கத்தைக் கட்டுப்பாடு செய்கின்றது என்று நாம் கற்பனை செய்து கொள்வோம்.

நாட்டில் ஒரு மைய பாங்கு இருந்தால், வாணிக பாங்குகள் தம் ரொக்கத்தில் ஒரு பகுதியை மைய பாங்கில் டெபாசிட்டாக வைத்துக்கொள்வது வழக்கம். இதற்குச் சட்டம் இடங்கொடுக்கலாம், அல்லது இது சட்டத்திற்கு நிகரான பழக்கத்தை ஒட்டியதாக இருக்கலாம். வாணிக பாங்குகள், மைய பாங்கில் டெபாசிட்டுத் தொகையைக் கொண்டிருப்பதால் சில வசதிகளைப் பெறலாம். அன்றாடம் பாங்குகள் மற்ற பாங்குகளுக்குச் செலுத்தவேண்டிய தொகைகளைச் செக்குத் தீர்வக முறைப்படி (Clearing House system) செலுத்துவதற்குப் பாங்குகள் மைய பாங்கில் டெபாசிட்டுத் தொகையை வைத்திருப்பது பேருதவியாக இருக்கின்றது. உதாரணமாக மைய பாங்கில் டெபாசிட்டைக் கொண்டிருக்கும் ஒரு வாணிக பாங்கு மற்றொரு பாங்கிற்குச் செலுத்தவேண்டிய தொகையைச் செக்குகள் மூலம் செலுத்தலாம். வாணிக பாங்குகள் மைய பாங்கில் காப்பு நிதியை டெபாசிட்டாக வைத்துகொள்வதால், வாணிக பாங்கின் காப்பு நிதி ஒருமுகப்படுத்தப்படுகின்றது. பொதுமக்கள் வாணிக பாங்குகளுடன் கொண்டிருக்கின்ற உறவை, அவை மைய பாங்குடன் கொண்டிருக்கின்றன. பொதுமக்கள் வாணிக பாங்குகளில் டெபாசிட்டை வைத்துக்கொண்டிருக்கின்றனர். வாணிக பாங்குகள் மைய பாங்கில் டெபாசிட்டுத் தொகையைக் கொண்டிருக்கின்றன. வாணிக பாங்குகள் டெபாசிட்டுப் பணத்தை எவ்வாறு உற்பத்தி செய்து பொதுமக்களுக்குக் கொடுக்கமுடியுமோ, அதேபோல் மைய பாங்கு டெபாசிட்டுப் பணத்தை உற்பத்தி செய்து வாணிக பாங்குகளுக்கு கொடுக்க முடியும். மைய பாங்கு வாணிக பாங்குகளுக்கு நேரிடையாகக் கடன் கொடுக்கலாம். (ஆனால் இங்கிலாந்தில் அவை வாணிக பாங்குகளுக்கு நேரிடையாகக் கடனுதவி யளிப்பதில்லை). இங்கிலாந்தில் மைய பாங்கு தள்ளுபடி நிலையங்கள் மூலமே வாணிக பாங்குகளுக்கு உதவியளிக்கின்றது. தள்ளுபடி நிலையங்கள் தாம் பெற்ற கடன்தொகையை வாணிக பாங்குகளுக்குத் திருப்பிக் கொடுக்கவேண்டியபொழுது, மைய பாங்கின் உதவியை நாடு

கின்றன. மைய பாங்கும் அவைகட்குவேண்டிய தொகையைக் கடனாகக் கொடுத்து உதவுகின்றது. மைய பாங்குப் பத்திரங்களை யும் மார்கட்டில் வாங்கலாம். 'வெளி மார்க்கட்டு நடவடிக்கை' (open market operations) என்ற முறையை மைய பாங்கு பின் பற்றும்பொழுது பத்திரங்களை வாங்குகின்றது. அப் பத்திரங்களை விற்பனை செய்தவர்கள் மைய பாங்கின் செக்குகளைப் பெற்று, அவைகளைத் தம் வாணிக பாங்குகளுக்கு அனுப்புகிறார்கள். இதன் விளைவாக வாணிக பாங்கில் அவர்கள் டெபாசிட்டாக வைத்திருக் கும் தொகை மிகுதியடைகின்றது. வாணிக பாங்குகள் செக்குகளை (Cheques) மைய பாங்கிடம் கொடுக்கின்றன. அவை மைய பாங்கில் கொண்டிருக்கும் டெபாசிட்டுத் தொகையும் மிகுதியடை கின்றது. அதாவது பொதுமக்கள், பத்திரங்களுக்குப் பதிலாக, பணத்தை வாணிக பாங்குகளில் டெபாசிட்டாகக் கொள்கின்றனர். இதன் விளைவாக வாணிக பாங்குகளுடைய காப்பு நிதி (Reserves) மிகுதியடைகின்றது. வாணிக பாங்குகள் முன்பைவிட மிகுதியான தொகையைக் கடனாக மக்களுக்குக் கொடுக்கலாம். செலா வணித்தாள் வெளியீடு பெருகுவதால் ஏற்படும் விளைவை வெளி மார்க்கட்டு நடவடிக்கை மூலம் மைய பாங்கு ஏற்படுத்தி முடியும்.

மைய பாங்கு செலாவணிச் சுருக்கம் செய்யவேண்டுமென்று கருதினால், பத்திர விற்பனையைக் குறைக்கலாம். மற்ற பாங்கு களுக்குக் கொடுக்கும் கடனையும் குறைக்கலாம். இதன் விளைவாக வாணிக பாங்குகளின் காப்புநிதி குறையும். மைய பாங்கிடமிருந்து பத்திரங்களை வாங்குவோர் அதற்குச் செக்குகளைக் கொடுப்பார்கள். வாணிக பாங்குகள் மைய பாங்கில் கொண்டிருக்கும் டெபாசிட்டுத் தொகையும் குறையும். ஆகையால் வாணிக பாங்குகள் மக்களுக் குக் கொடுக்கும் கடன் தொகை குறையும். ஏனெனில் காப்புநிதி- டெபாசிட்டு விகிதம் மாறாமலிருத்தல் வேண்டும்.

இதுவரை நாம் பேழை ரொக்கத்தைப் பற்றி எதுவுமே கூற வில்லை. வாணிக பாங்குகள் தம் ரொக்கம் முழுவதையும் பேழை ரொக்கமாகவே வைத்துக்கொண்டிருக்கின்றன என்று நாம் குறிப் பிட்டோம். ஆனால் உண்மையில் பாங்குகள் தம் ரொக்கத்தில் ஒரு பகுதியைப் பேழை ரொக்கமாகவும் ((Till money) மற்றொரு பகுதியை மைய பாங்கில் டெபாசிட்டாகவும் வைத்திருக்கின்றன. சிலசமயங்கள் பாங்குகள் ஒரு பகுதியை மற்ற பாங்குகளில் டெபா சிட்டாகவும் பொன்னாகவும் வைத்திருக்கும். பல நாடுகளில் வாணிக பாங்குகள் காப்புநிதியில் பெரும்பகுதியை மைய பாங்கில் டெபாசிட்டாகவே கொண்டிருக்கின்றன. மைய பாங்குகள்

வளர்ச்சியடையாத நாடுகளின் நிலைமை மிகவும் சிக்கலாக இருக்கின்றது.

**செலாவணிக் கட்டுப்பாட்டின் முறைகள் (Methods of Credit Control)**

நிலைமை சிக்கலாக இல்லாத நாடுகளில்கூட மையபாங்கு வெளிமார்க்கட்டு நடவடிக்கையை மட்டும் மேற்கொள்ளாமல், வேறு செலாவணிக் கட்டுப்பாட்டுக் கருவிகளையும் (Instruments of Credit Control) பயன்படுத்தலாம். வாணிக பாங்குகள் கொண்டிருக்கும் காப்புநிதியை மையபாங்கு அதிகரிக்கலாம் அல்லது குறைக்கலாம். இந்த முறை வெளிமார்க்கட்டு நடவடிக்கையைப் போலல்லாமல் எளிதாகவும், தொல்லைகளற்றதாகவும் இருக்கின்றது. வெளிமார்க்கட்டு நடவடிக்கை மூலம் மையபாங்கு பத்திரங்களை எளிதில் விற்பனை செய்யமுடியாத நிலைமையில் இருக்கலாம். பத்திரங்களை விற்பனை செய்வதற்கு நன்கு அமைந்த ஒரு பத்திர மார்க்கட்டு வேண்டும். மேலும் ஒரே நிறுவனம் ஏராளமான பத்திரங்களை விற்பனை செய்வதால் சில பிரச்சினைகள் எழும். ஆகையால் மையபாங்கு வட்டிவீதங்களை மாற்றலாம். அதாவது மையபாங்கு கொடுக்கும் கடனுக்கு உயர்ந்த வட்டிவீதத்தை வசூல் செய்யலாம்; கடன் கொடுப்பதைக் குறைக்காமல் வட்டிவீதங்களை உயர்த்தலாம். கொடுக்கும் கடன் தொகையைக் கட்டுப்படுத்தினால் வட்டிவீதம் தானாகவே உயரலாம். ஆனால் மையபாங்கு கடன் தொகையைக் குறைத்தோ, அல்லது நேரிடையாகவோ வட்டி வீதத்தை உயர்த்தலாம். மையபாங்கு தேர்ந்தெடுத்த செலாவணிக் கட்டுப்பாட்டு முறைகளையும் (Selective Credit Control) பின்பற்றலாம். மக்கள் பல்வேறு காரணங்களுக்காக வாணிகப் பாங்குகளில் கடன் வாங்கலாம். சில நோக்கங்களுடன் அவர்கள் கடன் வாங்குதலை மையபாங்கு கட்டுப்பாடுகளுக்குட்படுத்தலாம். உதாரணமாகப் பங்கு மாற்று நிலையங்களின் (Stock Exchanges) பத்திரங்களை அடைமானமாக வைத்துக் கடன் வாங்குவோருக்குக் கொடுக்கும் கடன் தொகையைக் குறைக்கலாம். அதாவது அடைமானப் பொருளின் மதிப்பில் 75 சதவீதத்திற்குச் சமமான தொகையை முன்பு பாங்குகள் கடனாகக் கொடுத்தால், அவை இப்பொழுது 60 சதவீதத்திற்குச் சமமான தொகையையே கொடுக்கலாம். இறக்குமதி செய்வோர், பொருள்களை இறக்குமதி செய்வதற்கு முன் ஒரு குறிப்பிட்ட தொகையை டெபாசிட்டாகப் பாங்கில் செலுத்த வேண்டுமென்ற விதியை அமலில் கொண்டு வரலாம். இப்படிச் செய்வதால் இறக்குமதி செய்வது கடினமாகி விடும். இறக்குமதி செய்வோருடைய அடக்கச் செலவும் அதிகரிக்கும். இத்தகைய தேர்ந்தெடுத்த செலாவணிக் கட்டுப்பாடு

கள் கடனின் ரகத்தை (quality) மட்டும் கட்டுப்படுத்துவதில்லை. மற்றச் செலாவணிக் கட்டுப்பாடுகள் ஏற்படுத்தும் பொதுவான விளைவுகளையும் ஏற்படுத்தும்.

## ஆங்கிலேய முறையின் சிறப்பான இயல்புகள்

இங்கிலாந்தில் வாணிக பாங்குகளும் மையபாங்கும் நேரிடையான தொடர்பு கொள்ளவில்லை, இயற்கைக்கு மாறான-மறைமுகத் தொடர்பையே கொண்டிருக்கின்றன. 30ஆம் அதிகாரத்தில் விளக்கியுள்ளபடி தள்ளுபடி மார்க்கட்டு மையபாங்கை மற்ற பாங்குகளுடன் இணைக்கின்றது. இதுவே ஆங்கிலேய முறையின் சிறப்பான அம்சமாகும். இதைத் தவிர வேறு ஒரு சிறப்பான அம்சத்தையும் நாம் இங்குக் குறிப்பிடலாம். வாணிக பாங்குகளுடைய காப்புநிதி இன்று ஆங்கிலேயச் செலாவணி முறையில் முக்கியமான இடத்தைப் பெறவில்லை. காப்புநிதி, பணத்தின் அளிப்பை நிர்ணயம் செய்யாமல் அதனுல் நிர்ணயம் செய்யப்படுகின்றது. இன்றும் காப்புநிதி டெபாசிட்டுத் தொகையில் 8 சதவீதத்திற்குச் சமமாக இருக்கின்றது. ஆனுல் மொத்த டெபாசிட்டுத் தொகை வேறு வழியில் நிர்ணயம் செய்யப்படுகின்றது.

மொத்த டெபாசிட்டுத் தொகை அல்லது பணத்தின் அளிப்பு எவ்வாறு நிர்ணயம் செய்யப்படுகின்றது என்பதை நாம் மீண்டும் ஆராய்ச்சி செய்யவேண்டும் என்று தோன்றுகிறது. ஆனுல் இந்த ஆராய்ச்சி செய்யவேண்டியதில்லை. இதுவரை நாம் கூறியதைக் கொண்டே பணத்தின் அளிப் ; எவ்வாறு நிர்ணயம் செய்யப்படுகின்றது என்பதை நாம் புரிந்து கொள்ளலாம். ரொக்கம் மட்டுமல்லாமல் மற்ற ரொக்கத் தன்மையைக் கொண்ட சொத்துகளையும் (assets) நாம் இன்று காப்புநிதியில் சேர்க்கலாம். கீழ்க்கண்டவை இத்தகைய சொத்துகளாவன :—அழைப்புக்கடன் (call loans or call money); வர்த்தக உண்டியல்கள் (bills of exchange); கருவூல உண்டியல்கள் (Treasury bills) இத்தகைய ரொக்கத் தன்மை கொண்ட சொத்துகளை (liquid assets or "quick" assets) டெபாசிட்டுத் தொகையில் 30 சதவீதத்திற்குக் குறையாமல் ஆங்கிலேய பாங்குகள் கொண்டிருக்கின்றன; இவ்வாறு வர்த்தக பாங்குகள் 30 சதவீதம் ரொக்கத் தன்மையுடைய சொத்துகளை வைத்துக்கொண்டிருப்பது அவைகளுடைய வழக்கம் என்று மட்டும் நாம் கூறமுடியாது. இங்கிலாந்தின் தலைமை பாங்கின் (Bank of England) விருப்பத்தை ஒட்டியும் வாணிகப் பாங்குகள் இப்பழக்கத்தைக் கடைப்பிடிக்கின்றன. இந்தச் சொத்துகளை எளிதில் ரொக்கமாக மாற்றமுடியும். இவ்வாறு

மாற்ற முயற்சி செய்யும்பொழுது வாணிகப் பாங்குகள் மையப் பாங்கின் உதவியையும், ஆதரவையும் பெறும். ஆகையால் வாணிக பாங்குகள் 8 சதவீதத்திற்குமேல் ரொக்கத்தை வைத்துக் கொள்ள வேண்டியதில்லை. 22 சதவீதம் ரொக்கத் தன்மை யுடைய சொத்துகளை வைத்துக்கொண்டால் அவைகள் மூலம் பாங்குகள் வருமானத்தைப் பெறலாம். மேலும் வேண்டும் பொழுது அந்தச் சொத்துகளை ரொக்கமாக மாற்றிக்கொள்ளலாம்.

**ரொக்கத் தன்மையுடைய சொத்துகள் அளிக்கும் ஆதாரம்**

மேலே கொடுக்கப் பெற்றுள்ள விளக்கத்திலிருந்து மைய பாங்கு வணிக பாங்குகளின் ரொக்கத்தை மட்டும் கட்டுப்பாடு செய்யாமல், மைய பாங்கு ரொக்கத் தன்மையுடைய எல்லா சொத்துகளையும் கட்டுப்பாடு செய்யவேண்டும் என்பது புலனு கின்றது. அதாவது பாங்குகள் கொண்டிருக்கும் கருவூல உண்டியல்களை அதிகமாக்கவோ அல்லது குறைக்கவோ அதி காரம் பெற்றிருக்க வேண்டும். கருவூல உண்டியல்கள் மூன்று மாதத் தவணை உண்டியல்களாகவே இருக்கின்றன. ரொக்கத் தன்மையுடைய சொத்துகள் கிடைக்காவிடில் பாங்குகள் தம் மிடம் இருக்கும் ரொக்கம் இடம் கொடுக்கும்வரைதான் கடன் கொடுக்கமுடியும். ஆனால் ரொக்கத்தைக் கட்டுப்பாடு செய்வது போலவே மற்றச் சொத்துகளையும் பாங்குகள் கட்டுப்பாடு செய்ய முடியாது. வாணிக பாங்குகளுடைய ரொக்கத்தைக் குறைக்க வேண்டும் என்று மைய பாங்கு கருதினால், அது பத்திரங்களை விற் பனை செய்யும். ரொக்கத் தன்மையுடைய சொத்துகளைக் குறைக்க, மைய பாங்கு, குறைந்த அளவில் கருவூல உண்டியல் களை வெளியிடவேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்ளவேண்டும்.

ஆனால் அரசினர் மக்களிடமிருந்து கடன் வாங்கும் தொகை யைக் குறைத்துக் கொள்ளமுடியாது. ஆனால் குறுகிய காலக் கடனுக்குப் பதிலாக, நீண்டகாலக் கடனைப் பெறவேண்டும் என்று மைய பாங்கு அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளலாம். குறுகிய காலக்கடன் பத்திரங்களுக்குப் பதிலாக நீண்டகாலக் கடன் பத்திரங்களை விற்பனை செய்யலாம். இதன் விளைவாகப் பணமார்க் கட்டில் (money market) கிடைக்கும் குறுகிய காலத் தவணைப் பத்திரங்களின் எண்ணிக்கை குறையும். இவ்வாறு நீண்டகாலப் பத்திர வெளியீட்டைக் கடனுக்காக நிதிதிரட்டல் (funding) என்று கூறுவர்[1]. பத்திரங்களின் தவணைக் காலத்தை நீட்டுவதால்

[1] பல்வேறு கடன் தொகைகளை ஒருமுகப்படுத்துவதையே இச்சொல் முன்பு குறிப்பிட்டது. அதாவது புதிய பத்திர வெளியீட்டின் மூலம் கடன் தொகை களை ஒரு முகப்படுத்துவது வழக்கம். குறுகிய காலக் கடன் பத்திரங்களை நீண்ட காலப் பத்திரங்களாக மாற்றுவதையும் இப்பொழுது இச்சொல் குறிக்கின்றது.

பாங்குகளுடைய ரொக்கத் தன்மையும், மற்ற நிதிநிலையங்களுடைய ரொக்கத் தன்மையும் பாதிக்கப்படும்; பணச் சுருக்கமும் (deflation) ஏற்படும். அரசினர் பத்திர வெளியீட்டின் மூலம் மக்களிடம் கடன் வாங்குவதைக் கைவிடுவதைவிட, குறுகிய காலப் பத்திரங்களை நீண்டகாலப் பத்திரங்களாக மாற்றுவது எளியதாக இருக்கின்றது. ஆனால் இப்படிச் செய்வதிலும் சில சிக்கல்கள் இருப்பதால் மைய பாங்கு இவ்வாறு செய்வதைத் தவிர்க்க வேண்டுமென்று விரும்புலாம்.

மையபாங்கு ரொக்கத் தன்மையுடைய சொத்துகளை மக்களிடமும், பாங்குகளிடமும் பங்கீடு செய்து செலாவணியைக் கட்டுப்படுத்தலாம். இப்படிச் செய்வதற்காக மையபாங்கு கருவூல உண்டியல்களுடைய வீதத்தை உயர்த்தவேண்டும். ஆனால் இவ்வுண்டியல்களை மக்கள் வாங்கும் பழக்கம் இல்லாவிடில் இக்கொள்கை தோல்வியடையும். மேலும் கருவூல உண்டியல்களின் வீதம் உயரும்பொழுது, பாங்குகள் தம் டெபாசிட்டு வீதங்களையும் உயர்த்தினால், மக்கள் கருவூல உண்டியல்களை வாங்காமல் தம்மிடம் இருக்கும் பணத்தை பாங்குகளில் டெபாசிட்டாகவே வைத்துக்கொள்ளலாம். சில நாடுகளில் செம்மையாக அடைந்த கருவூல உண்டியல் மார்க்கட்டு இருக்கின்றது. கருவூல உண்டியல்களின் வீதங்கள் டெபாசிட்டு வீதங்களுடன் தொடர்புகொள்ளவில்லை. ஆகையால் மைய பாங்கு ரொக்கத்தன்மையுடைய குறுகியகாலத் தவணை உண்டியல்களை மக்களுக்கே அதிகமான விற்பனை செய்யலாம். இங்கிலாந்தில் பொதுமக்கள் கருவூல உண்டியல்களை வாங்குவதில்லை. ஆனால் இன்று பாங்குகள் அல்லாத மற்ற நிறுவனங்களும் இங்கிலாந்தில் கருவூல உண்டியல்களை வாங்குகின்றன. ஆனால் கருவூல உண்டியல் வீதங்களும், டெபாசிட்டு வீதங்களும் மைய பாங்கு வீதத்துடன் (Bank rate) தொடர்பு கொண்டிருக்கின்றன.

**நேரடியான நடவடிக்கை**

இங்கிலாந்தில் பணத்தின் அளிப்புடன், காப்புநிதி (Cash reserve) நெருங்கிய தொடர்புகொள்ளவில்லை. ஆனால் இத் தொடர்பு இருப்பதாக நாம் முன்பு கற்பனை செய்துகொண்டோம். ஆனால் மைய பாங்கு நேரிடையான கருவிகளைப் பயன்படுத்தலாம். உதாரணமாக மைய பாங்கு வாணிக பாங்குகளைக் கருவூல உண்டியல்களுக்குப் பதிலாகக் குறுகிய காலத் தவணைப் பத்திரங்களை வாங்கிக்கொள்ளவேண்டும் என்று வற்புறுத்தலாம். இப் பத்திரங்களைப் பாங்குகள் தாம் வைத்திருக்கும் ரொக்கத்தன்மையுடைய பத்திரங்களாகக் கருதமுடியாது. 1950 முதல் 60க்குள் இருமுறை

மைய பாங்கு இங்கிலாந்தில் இந்த வழியைப் பின்பற்றியது. மேலும் வாணிக பாங்குகள் மைய பாங்கில் சாதாரணமாகக் கொண்டுள்ள காப்புநிதியைவிட மிகுதியான தொகையை டெபாசிட்டாகக் கொள்ளவேண்டுமென்று மைய பாங்கு ஆணையிடலாம். ராட்கிளிப் குழுவினர் (Radcliffe Committee) சிபார்சு செய்தபடி, எதிர்காலத்தில் பாங்குகள் ரொக்கத்தன்மையுடைய சொத்துகளை முன்பைவிட அதிகமாகக் கொள்ளவேண்டுமென்று மைய பாங்கு ஆணையிடலாம். அதாவது டெபாசிட்டுத் தொகையில் 30 சதவீதத்திற்கும் அதிகமான தொகையை அவைகள் ரொக்கத்தன்மையுடைய சொத்துகளாக வைத்துக்கொள்ள வேண்டும் என்று ஆணையிடலாம். மேலும் பாங்குகள் கொடுக்கும் கடனையும் மைய பாங்கு கட்டுப்பாடுகளுக்குட்படுத்தலாம். அதற்கு ஓர் உச்சவரம்பை (ceiling) ஏற்படுத்தலாம். பணத்தின் அளிப்பைக் கட்டுப்படுத்துவதைவிட அதை மக்கள் பெறுவதை கடினமாக்கிவிடலாம். இவ்வாறு செய்வதால் பாங்குகள் தம் சொத்துகளைப் (assets) பெருக்கமுடியாது. அவைகளுடைய பொறுப்புகளும் பெருகா. இந்த நிலையில் பத்திர முதலீடும் கவர்ச்சிகரமாக இருக்காது. ஏனெனில் பத்திரங்களுடைய விலைகள் தாழ்வடையலாம்.

## இங்கிலாந்தின் முறையும் மற்ற நாடுகள் பின்பற்றும் முறையும்

இங்கிலாந்தைப் பற்றி நாம் இதுவரை கூறிய கருத்துக்கள் மற்ற உலகநாடுகளுக்குப் பொருத்தமாக இருக்கின்றன. எல்லா விவரங்களையும் நாம் இங்குப் பரிசீலனை செய்யாமல், மூன்று முக்கியமான அம்சங்களைக் குறிப்பிடலாம்:

### 1. செலாவணிக் கொள்கையும் கடன் நிருவாகமும்

பொதுக் கடனுக்கும் பணத்தின் அளிப்புக்கும் ஒரு நெருங்கிய தொடர்பு இருக்கின்றது. பொதுக்கடன் நிருவாகமும் (Management of Public debt) செலாவணிக் கொள்கையும் பிணைந்திருக்கின்றன. இங்கிலாந்தில் மட்டுமின்றி எல்லா நாடுகளிலும் இதே நிலை இருக்கின்றது. வெளி மார்க்கட்டு நடவடிக்கைக்கு அரசினர் பத்திரங்கள் தேவையாக இருக்கின்றன. அரசினர் பத்திர வெளியீட்டின் மூலமே மக்களிடமிருந்து கடன் தொகையைத் திரட்டுகின்றனர். மேலும் இங்கிலாந்தைப் போலவே மற்ற நாடுகளிலும் அரசாங்கம் பத்திரங்களின் தவணைக் காலத்தை மாற்றிப் பாங்குகளுடைய ரொக்க நிலையை மாற்ற முயற்சி செய்யலாம். இது தற்செயலாக ஏற்படக்கூடிய நிகழ்ச்சியல்ல, தவிர்க்கமுடியாத நிகழ்ச்சியாகும். மேற்கு ஜெர்மனி போன்ற சில நாடுகளில் வேண்டிய அளவு

பொதுக்கடன் பெருகாததால் அரசினர் பத்திரங்கள் வேண்டிய அளவு கிடைக்கவில்லை. ஆகையால் பாங்குகள் தம் பணிகளைச் சரிவரச் செய்யமுடியவில்லை.

மேற்கூறிய உண்மையை நாம் தவிர்க்கமுடியாத செயல் என்று குறிப்பிட்டோம். இதற்குக் காரணம் யாது என்பதை இங்கு காண்போம். செலாவணித்தாள்களே கடன் பத்திரங்களாக இருக்கின்றன. ஆனால் இப் பத்திரங்களை அரசினர் மீட்க வேண்டியதில்லை. ஆனால் பாங்குகள் வெளியிடும் செலாவணித் தாள்களை அவை மீட்கவேண்டிய நிலைமை ஏற்படலாம்; அவை தனிப்பட்ட நிறுவனங்களின் பொறுப்புகளாகவே இருக்கின்றன. ஆனால் அரசினர் நிருவகிக்கும் மையப் பாங்கு வெளியிடும் செலாவணித்தாள்கள் அரசாங்கத்தின் பொறுப்புகளாக (liabilities) இருக்கின்றன. பாங்குகள் பெரும்பாலும் அரசினர் பத்திரங்களையே சொத்துகளாகக் கொண்டிருக்கின்றன. ஆகையால் தனிப்பட்ட நிறுவனங்களுடைய பொறுப்புகளைக் (liabilites) கொடுத்து அரசினர் பொறுப்புகளை பாங்குகள் வாங்குகின்றன. பாங்குகள் கொண்டுள்ள ரொக்கத்தன்மையுடைய சொத்துகளுள் மிகக் குறுகிய காலக் கருவூல உண்டியல்கள் முதல், தவணையற்ற பத்திரங்களே மிகவும் முக்கியமான இடத்தைப் பெற்றுள்ளன. இங்கிலாந்தில் மக்கள் தனிப்பட்டவர்களுடைய கடன் பத்திரங்களைவிட, அரசினர் கடன் பத்திரங்களையே மிகுதியாகக் கொண்டிருக்கின்றனர். பத்திர மார்க்கட்டில் விற்பனையாகும் தனிப்பட்ட நிறுவனங்களுடைய பத்திரங்களை மக்கள் அதிகமாக வைத்துக் கொள்ளவில்லை. அவர்கள் கொண்டுள்ள செலாவணித்தாள்கள் அவர்கள் வைத்துக்கொண்டிருக்கும் பத்திரங்களில் அரைப்பகுதியாகவே இருக்கின்றன. ஆகையால் மக்கள் பணத்தை மிகுதியாக வைத்துக்கொள்ள விரும்பாவிடில், அரசினர் பத்திரங்களையே வைத்துக்கொள்ளவேண்டும். அவர்களுடைய ரொக்கவிருப்பமும் (liquidity preference), பணத்திற்குக் கிடைக்கும் வட்டிவீதமும், அவர்கள் கையிருப்பாக வைத்திருக்கும் பணத்தின் அளவை நிர்ணயம் செய்யும். பணத்தின் அளிப்பைக் கட்டுப்பாடு செய்யவிரும்பும் மைய பாங்கு மற்ற ரொக்கத்தன்மையுடைய சொத்துகளின் அளிப்பை எவ்விதத்திலும் கட்டுப்படுத்தமுடியாத நிலைமையில் இருக்கலாம். குறிப்பாக அரசினர் கடன் பத்திரங்களின் அளிப்பை மைய பாங்கு கட்டுப்படுத்தமுடியாது.

## 2. பணத்தின் அளிப்பும் ரொக்கத்தன்மையும்

நாம் இதுவரை பணத்தின் அளிப்பைப் பற்றியே பேசவில்லை, நாட்டில் நிலவும் ரொக்கநிலைமையையே இதுவரை நாம் பரிசீலனை

செய்தோம். ஆங்கிலேய பாங்கு முறையை நாம் நன்கு புரிந்து கொண்டால், பணத்தின் அளிப்பு இங்கிலாந்தில் ஒரு முக்கியமான பிரச்சினை அல்ல என்பது தெளிவாகும். பணத்தின் அளிப்புச் செயற்படுத்தும் தேவையைப் பெருக்கலாம். இதனுல்தான் அது முக்கியமாகக் கருதப்படுகின்றது. பணத்தின் அளிப்பு ரொக்கத் தன்மையுடைய சொத்துகளின் அளிப்பைப் பெருக்கலாம், அல்லது சுருக்கலாம். இப்படிச் செய்வதால் அது செயற்படுத்தும் தேவையை பாதிக்கின்றது. ஆனுல் வேறு வழிகளிலும் நாம் நாட்டின் ரொக்கநிலையை மாற்றலாம். பணத்தின் அளிப்பை மாற்றுவதால் நாம் விரும்பிய வண்ணம் ரொக்கநிலைமையை மாற்றமுடியாமல் இருக்கலாம். உதாரணமாக மைய பாங்கு எல்லா வட்டி வீதங்களை மாற்றியமைக்கலாம்.

இதைப்பற்றிப் பொருளியலாரிடையே கருத்து வேற்றுமைகள் இருக்கின்றன. மைய பாங்கு வட்டிவீத அமைப்பை மாற்றுவதற்கோ, அல்லது நிலைநாட்டுவதற்கோ உகந்த கொள்கையைப் பின்பற்றவேண்டும் என்று சிலர் கூறுகின்றனர். வேறு சிலர் பாங்குச் செலாவணியைப் பெருக்கவோ அல்லது குறைக்கவோ வேண்டும், இப்படிச் செய்வதால் வட்டிவீதங்கள் தாமாகவே மாற வேண்டும் என்று கருதுகின்றனர். இங்கிலாந்தில் பெரும்பாலும் பொருளியலார் முதல் கருத்தையே கொண்டிருக்கின்றனர். ஆனுல் நீண்டகால வீதங்களை மாற்ற முயற்சி செய்வது சரியா என்பதைப் பற்றிச் சிலர் ஐயப்பாடுகள் கொண்டிருக்கின்றனர். இங்கிலாந்தின் தலைமை பாங்கு (Bank of England) பொதுக் கடனை நிருவாகம் செய்வதால் குறுகிய கால வீதங்களை (short term rates) மட்டுமல்லாமல் நீண்டகால வீதங்களையும் (long term rates) மாற்றலாம். ஆனுல் பெடரல் ரிசர்வ் குழு (Federal Reserve Board) பொதுக் கடனை நிருவாகம் செய்யாததால் நீண்டகால வட்டிவீதங்களை எளிதில் மாற்றியமைக்கமுடியாது. பத்திரங்களுடைய தவணைக் காலத்தையும் மாற்றமுடியாது; அவைகளுடைய பங்கீட்டையும் மாற்றமுடியாது.

### காப்புநிதியில் ஏற்படும் மாறுதல்கள்

இங்கிலாந்திலும் மற்ற நாடுகளிலும் காப்புநிதி முக்கியத்துவத்தை இழந்துவிட்டது. போருக்குப் பின் மைய பாங்குகள், வாணிக பாங்குகளை, வழக்கமாக (மைய பாங்கில்) வைத்திருக்கும் தொகையைத் தவிர ஒரு உபரித் தொகையையும் டெபாசிட்டாக வைத்துக்கொள்ளவேண்டும் என்று வற்புறுத்தின. இப்படிச் செய்வதால் பாங்குச் செலாவணியைக் குறைக்கலாம். அரசினர் செலவு மிகுதியடையலாம். அல்லது ஒரு நாட்டின் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை (Balance of payments) சாதகமாக மாறுவதால்

பணவீக்கம் ஏற்படலாம். இதைத் தடைசெய்வதற்காக மைய பாங்கு காப்புநிதியின் விகிதத்தை உயர்த்திப் பணத்தின் அளிப்புப் பெருகாமலிருக்கும்படி செய்யலாம்.

## அயல்நாட்டுத் தொடர்பும் பணத்தின் அளிப்பும்

அயல்நாட்டுத் தொடர்பு ஒரு நாட்டின் பொருளாதாரத்தை பாதிப்பது போலவே, பணத்தின் அளிப்பையும் பாதிக்கும். இது வரை அயல் நாட்டுத் தொடர்புகளைப் பற்றி நாம் ஒன்றும் கூறவில்லை. அதைப் பற்றிய முழு விவரங்களையும் நாம் 32 ஆம் அதிகாரத்தில் காண்போம். ஆனால் அயல்நாட்டு வர்த்தகத்தின் விளைவுகளைச் சுருக்கமாகக் காண்போம்.

ஒரு வாணிக பாங்கு மற்றொரு பாங்கிற்குச் செக்குத் தீர்வகத்தில் செலுத்தவேண்டிய தொகையைத் தான் கொண்டிருக்கும் காப்புநிதியைப் பயன்படுத்திச் செலுத்தும். அதாவது வாணிக பாங்குகள் மைய பாங்கில் வைத்திருக்கும் டெபாசிட்டைப் பயன்படுத்தி மற்ற பாங்குகளுக்குச் செலுத்தவேண்டியதொகைகளைச் செலுத்தும். இதைப் போலவே ஒரு மைய பாங்கும் தான் வைத்திருக்கும் அயல்நாட்டுச் செலாவணியைப் பயன்படுத்தி வேற்று நாடுகளுக்குச் செலுத்தவேண்டிய தொகைகளைச் செலுத்தும். ஆனால் மைய பாங்கை வாணிக பாங்குகளுடன் ஒப்பிடுவது முற்றிலும் சரியல்ல. மைய பாங்கு நாணயமாற்றுக் கட்டுப்பாட்டின் (Exchange control) மூலம் ஒரு நாடு மற்ற நாடுகளுக்குச் செலுத்தவேண்டிய தொகையையும், மற்ற நாடுகள் அந்த நாட்டுக்குச் செலுத்தவேண்டிய தொகையையும் சமமாக்கலாம். ஆனால் வாணிக பாங்குகள் இவ்வாறு செய்யமுடியாது. அல்லது நாணயமாற்று வீதம் (Exchange rate) அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையைச் சரிபடுத்தும். சில தனிப்பட்ட நிறுவனங்கள் நாணய மாற்று வீதம் பாதிக்கப்படாமல் இருப்பதற்குவேண்டிய ஏற்பாடுகள் செய்யலாம். ஆனால் ஒரு நாடுதன் நாணயத்தின் புறமதிப்பை (external value) உயர்த்தி, அதே நிலையில் நிலைநாட்ட வேண்டுமென்றால் அயல்நாட்டுச் செலாவணியின் அளிப்பை அதிகரிக்கவேண்டும். இதற்காக எல்லா நாடுகளும் ஏற்றுக்கொள்ளும் செலாவணியைக் காப்புநிதியில் வைத்துக்கொள்ளவேண்டும்.

### அயல்நாட்டுச் செலாவணியைக் காப்புநிதியாக வைத்துக் கொள்ளுதல்

அயல்நாட்டுச் செலாவணியை மூன்று வகைகளில் காப்புநிதியாகப் பயன்படுத்தலாம். மிகத் தொன்மையான காலத்திலிருந்தே பொன்னை உலகநாடுகள் பரிவர்த்தனைச் சாதனமாகப் பயன்படுத்தி வருகின்றன. அயல்நாட்டுச் செலாவணிக்குச் சமமான பொன்னை

ஒரு நாடு (மைய பாங்கு) காப்புநிதியாகக் கொள்ளலாம். டாலர் (dollar), ஸ்டெர்லிங் (sterling) போன்ற நாணயங்களையும் காப்பு நிதியில் வைத்துக்கொள்ளலாம். இந்தச் செலாவணிகளை எல்லா நாடுகளும் ஏற்றுக்கொள்கின்றன. மேலும் இவைகளுடைய மதிப்பு அதிகம் மாருமல் இருக்கும். அல்லது ஒரு நாடு சர்வதேச நிறுவனங்கள், பாங்குகள் போன்றவைகளில் டெபாசிட்டுத் தொகையைக் கொள்ளலாம், அல்லது அவைகளிடம் கடன் வசதியைப் பெறலாம். நடைமுறையில் உலகநாடுகள் பொன்னையே பெரும்பாலும் காப்புநிதியாகக் கொண்டிருக்கின்றன. ருஷிய நாட்டைத் தவிர மற்ற நாடுகள் 1957-ல் 37,400 மிலியன் டாலர் மதிப்புள்ள பொன்னைக் கொண்டிருந்தன. மொத்த அயல்நாட்டுச் செலாவணியில் மூன்றில் ஒரு பங்கை அமெரிக்கா கொண்டிருந்தது. மற்றநாடுகள் கொண்டிருந்த தொகையில் அரைப் பகுதிக்கு மேற்பட்ட தொகையை (16,500 மிலியன் டாலர்களுக்குச் சமமான தொகை) அவை டாலர், ஸ்டெர்லிங், போன்ற செலாவணிகளாகவும், ஐரோப்பிய நாடுகளின் செலுத்தும் சங்கத்தைப்போன்ற (European Payments Union) நிறுவனங்களின் பொறுப்புகளாகவும் கொண்டிருந்தன. மேலே குறிப்பிட்ட காப்புநிதி மிகவும் குறைவாக இருந்தபோதிலும் உலகநாடுகள் மற்றநாடுகளுக்குச் செலுத்தவேண்டிய தொகைகளைச் செலுத்துவதற்கு இக் காப்பு நிதியையே பயன்படுத்தின.

ஒரு மைய பாங்கின் காப்புநிதி குறைந்தால், பணத்தின் அளிப்புக் குறையும். அயல்நாடுகளுக்குப் பணத்தைச் செலுத்துவோர் தம் சொந்த நாட்டுச் செலாவணியைச் செக்கு மூலம் மைய பாங்கில் செலுத்தி, அயல்நாட்டுச் செலாவணியைப் பெறுவார்கள். மைய பாங்கு செக்கில் குறிப்பிட்டுள்ள தொகையை வாணிக பாங்குகளிடம் வாங்கிக்கொள்ளவேண்டும். வாணிக பாங்குகளுடைய காப்புநிதியும், டெபாசிட்டுத் தொகையும் இதன் விளைவாகக் குறையும். மைய பாங்கு வெளி மார்க்கட்டு நடவடிக்கை மூலம் வாணிக பாங்குகளுடைய காப்புநிதியைப் பெருக்கலாம். அல்லது தன் காப்புநிதி குறையாமலிருக்கவேண்டும் என்ற எண்ணத்துடன் பணச் சுருக்கம் செய்யலாம். வாணிக பாங்குகள் ஒரே காப்புநிதியை வைத்துக்கொள்ளவேண்டும். அதாவது காப்புநிதி டெபாசிட்டுடன் கொண்டுள்ள விகிதம் மாருமல் இருத்தல்வேண்டும். (ஆனல் மைய பாங்கின் காப்புநிதி சாதாரணமாக மாறலாம். ஆனல் சில நாடுகளில் சட்டப்படி மைய பாங்கின் காப்புநிதி ஒரு தொகையைவிடக் குறையாமல் இருக்கவேண்டும்) காப்புநிதி மிகவும் குறைந்துவிட்டது என்று மைய பாங்கு கருதினல் காப்புநிதி குறையும்பொழுது மைய பாங்கு நிலைமையை நன்கு பரிசீலனை செய்து அதற்கேற்ற நடவடிக்கைகள் எடுக்கலாம்.

# 30. ஆங்கிலேய நிதி நிலையங்கள்

ஆங்கிலேய நிதி நிலையங்களை நாம் இங்குப் பரிசீலனை செய்வோம். உற்பத்தியைப் பெருக்கக்கூடிய முதலீட்டை இவை எவ்வாறு பாதிக்கின்றன என்பதை நாம் இங்குக் காண்போம். ஆங்கிலேய நிதி நிலையங்களுடைய சிறப்பான இயல்புகளையும், மற்றநாடுகளில் உள்ள நிலையங்களின் தன்மைகளையும், குறிப்பாக அமெரிக்கா நிலையங்களின் இயல்புகளையும் நாம் விளக்குவோம்.

ரொக்கத்தன்மையுடைய சொத்துகளில் தம் பணத்தை முதலீடு செய்ய விரும்புவோர் பல்வேறு வகைச் சொத்துகளை வாங்கலாம். இவைகள் கொண்டிருக்கும் ரொக்கத்தன்மை ஒரே மாதிரி இருக்காது. உதாரணமாக, பாங்குகள், இன்சூரன்சுக் கம்பெனிகள், முதலீட்டு டிரஸ்ட்டுகள் முதலிய நிறுவனங்களுடைய பொறுப்புகளை (liabilities) ஒருவன் வாங்கலாம். மூலதன மார்க்கட்டில் (Capital Market) பணத்தைப் பெறுவதில் நிதிநிறுவனங்களிடையே ஒரு போட்டி இருப்பதை நாம் காணலாம். அவை ரொக்கத்தை முதலீடு செய்வதற்கும் இந்த மார்க்கட்டையே பயன்படுத்துகின்றன. இந்த மார்க்கட்டுச் செம்மையாக அமையவில்லை. ஏனெனில் ராட்கிளிப் குழுவினர் (Radcliffe Committee) குறிப்பிட்டபடி கடன் கொடுப்பவர்கள் தலைமுறை தலைமுறையாகப் பின்பற்றிய பழைய வழக்கத்தையே பின்பற்றுகின்றனர். 'கடன் வாங்குவோர் வழக்கமாகப் பின்பற்றும் முறையைத் தவிர வேறு முறைகளைப் பற்றிச் சிந்திப்பதில்லை. அவர்களுக்கு மார்க்கட்டைப் பற்றிய முழுவிவரங்கள் தெரியாததும், அவர்களுடைய பழக்கங்களும், அவர்களுடைய விருப்புவெறுப்புக்களும், புதியமுறைகளைப் பின்பற்றுவதால் ஏற்படும் தொல்லைகளும், வேறு வழிகளைப் பின்பற்றுவதில் ஏற்படும் அடக்கச் செலவும், மூலதன மார்க்கட்டு செம்மையற்றதாக இருப்பதற்குக் காரணங்களாக இருக்கின்றன'. ஆனால், 'பணமார்க்கட்டில் ஓர் ஒற்றுமை இருக்கிறது.'

ஒரு சிறிய தொழிலதிபர் எவ்வாறு மூலதனத்தை அடைகின்றார் என்பதை நாம் ஆராய்ச்சி செய்யும்பொழுது மேலே குறிப்பிட்ட உண்மை தெளிவாகும். ஒருவன் தான் சேமித்து வைத்த பணத்தையே பயன்படுத்திக்கொள்ளலாம், அல்லது அவன் பெறும் இலாபத்தை முதலீட்டுக்குப் பயன்படுத்தலாம். அவன் பாங்கில் கடனைப் பெறலாம், அவன் இன்சூரன்சுப் பத்திரத்தை ஈடாக வைத்துக் கடன் வாங்கலாம். அல்லது உற்பத்திக்கு வேண்டிய தளவாடப் பொருள்களைத் தவணைக் கடன் முறையில் (Hire purchase system) வாங்கலாம். அவன் செலுத்த வேண்டிய தொகைகளைத் தாமதித்துச் செலுத்தலாம். சிறிய தொழில்களுக்கு நீண்டகாலக் கடன் வசதியளிக்கும் நிறுவனங்களிடம் தனக்குவேண்டிய மூலதனத்தைப் பெறலாம். எல்லா நிதி நிறுவனங்களுடைய உதவியையும் அவன் நாடலாம்.

## தொழிலதிபர்கள் சொந்த நிதியைப் பயன்படுத்தல்

22ஆம் பட்டியல் 1952 முதல் 58 வரை இங்கிலாந்தில் நிதி எவ்வாறு முதலீடு செய்யப்பட்டது என்பதைக் காட்டுகின்றது. நிதி திரட்டும் வழிகளுள் மிகவும் முக்கியமான ஒன்றைப் பற்றிய விவரங்களை நாம் பட்டியலில் பார்க்கமுடியாது. தனிப்பட்டவர்கள் தம் சொந்தச் சேமிப்புத் தொகையைப் பயன்படுத்தி, மோட்டார் வண்டி, சலவை எந்திரம் (Washing Machine), படுக்கை அறைக்கு வேண்டிய பொருள்கள் முதலியவற்றை வாங்குகின்றனர். தொழிலதிபர்கள் தம் சொந்த நிதியை முதலீட்டுக்குப் பயன்படுத்துகின்றனர். ஆனால் இது பற்றிய புள்ளிவிவரங்கள் கிடைக்கவில்லை. பாங்குகள், இன்சூரன்சு நிறுவனங்கள், நிதி நிலையங்கள் முதலியவை நீங்கலாக மற்றக் கம்பெனிகள் 1955 முதல் 1957 வரை 1500 மிலியன் பவுனைக் காப்புநிதியில் சேர்த்தன. 22ஆம் பட்டியலில் காணும் தொகைகளுள் இதுவே மிகவும் பெரிதாகும். இத் தொகையில் பெரும் பகுதியைத் தொழிலதிபர்கள் எந்திரங்களைப் பழுதுபார்ப்பதற்கும், செப்பனிடுவதற்குமே பயன்படுத்தியதால் இதை 22ஆம் பட்டியலில் நாம் சேர்ப்பதே சரியல்ல. தேய்மானத்தைச் சரிக்கட்டுவதற்காகச் செலவு செய்யும் தொகையை நீக்கி எஞ்சிய தொகையை மட்டும் நாம் பட்டியலில் சேர்த்தால் கூட இத் தொகை மற்றவைகளைவிடப் பெரிதாக இருக்கும்.

## புதிய பங்கு வெளியீட்டு மார்க்கட்டு (New Issue Market)

பொதுக் கம்பெனிகள் (Public Companies) நிதி திரட்டுவதற்கு வெளியீட்டு மார்க்கட்டையே பெரும்பாலும் பயன்படுத்துகின்றன. சொந்தக் கம்பெனிகள் இந்த மார்கட்டைப் பயன்படுத்தமுடியாது.

# பட்டியல் 22

## பல்வேறு வழிகளில் இங்கிலாந்தின் நிறுவனங்களும் மக்களும் பெற்ற கடன்வசதி 1952-1958

| | ஆண்டின் சராசரி (மிலியன் பவுன்களில்) | | |
|---|---|---|---|
| | 1952-54 | 1955-57 | 1958 |
| தனியார் துறையில் (Private Sector) | | | |
| 1. இங்கிலாந்தில் பொதுக் கம்பெனிகளின் புதிய மூலதனம் (பங்குகள் வெளியீடு) | 151 | 245 | 195 |
| 2. பாங்குகள் கொடுத்த கடன் (நாட்டுடைமையான தொழில்கள் நீங்கலாக) | | | |
| (a) லண்டன் செக்குத் தீர்வகப் பாங்குகள் | —37 | 12 | 353 |
| (b) ஸ்காட்லாந்தின் பாங்குகள் | 2 | —3 | 29 |
| 3. வர்த்தக உண்டியல்கள் | —7 | 40 | —40 |
| 4. இங்கிலாந்தில் நிறுவப்பெற்ற இன்சூரன்சுக் கம்பெனிகளின் ஒற்றி (Mortage) | 39 | 77 | 65 |
| 5. பங்கு மாற்று நிலையங்களில் விற்பனையாகும் பங்குகளைக் கொண்ட கம்பெனிகளுடைய வர்த்தக்கடன் | 82 | 188 | ... |
| 6. தவணைக் கடன் முறையில் வாங்கிய தொகை | ... | 2 | 25 |

22ம் பட்டியலின் தொடர்ச்சி

| | ஆண்டின் சராசரி (மிலியன் பவுன்களில்) | | |
|---|---|---|---|
| | 1952-54 | 1955-57 | 1958 |
| 7. மக்கள் வீடு வாங்குவதற்குக் கொடுத்த கடன் தொகை | | | |
| (a) லண்டன் செக்குத் தீர்வகப் பாங்குகள் (2, 10) | —3 | —5 | 22 |
| (b) கட்டடச்சங்கங்கள்கொடுத்த கடன் | 139 | 153 | 143 |
| (c) இன்சூரன்சுக் கம்பெனிகள் கொடுத்த கடன், ஒற்றித் தொகை (4) | ... | (47) | (40) |
| (d) ஸ்தலஸ்தாபனங்கள் | 23 | 45 | 20 |
| 8. இன்சூரன்சுப் பத்திர அடைமானக் கடன், அடைமானம் இல்லாமலும் பெற்ற கடன் - இன்சூரன்சுக் கம்பெனிகள் கொடுத்தவை. | 5 | 7 | 7 |
| 9. தவணைக் கடன் முறை - துய்ப்போர் பெற்றது. | ... | 3 | 98 |
| 10. ஆங்கிலேயப் பாங்கர்கள் சங்கத்தினர் அடைமானத்தைக் கொண்டும் அடைமானம் இல்லாமலும் கொடுத்தகடன் (இதன் ஒரு பகுதி 2-ல் சேர்ந்துள்ளது) | —17 | —22 | 90 |
| வெளிநாடுகளில் | | | |
| 11. புதிய வெளியீடுகள் மூலம் பெற்ற தொகை - வெளிநாடுகளுக்கு | 63 | 61 | 74 |
| பொதுத்துறை Public Sector | | | |
| 12. கருவூல உண்டியல்கள் | 225 | 4 | 46 |
| 13. சிறப்பீட்டுப் பத்திரக் கடன் | 292 | 56 | 101 |
| 14. ஸ்தலஸ்தாபனங்களின் ஒற்றிக் கடன் முதலியவை | 129 | 243 | 376 |

Source : Report of the Comittee on the working of the Monetary System Table 21.

சொந்தக் கம்பெனிகளுடைய பங்குகளை பங்கு மாற்று நிலையங்களில் (Stock Exchanges) விற்பனை செய்ய முடியாது. பங்கு மாற்று நிலையங்களுடைய அனுமதிப்பைப் பெற்றபின் சொந்தக் கம்பெனிகளுடைய பங்குகளை மற்றப் பொதுக் கம்பெனிகளுடைய பங்குகளுடன் சேர்த்து விற்பனை செய்யலாம். 1955-லிருந்து பொதுக் கம்பெனிகள் சராசரி 200 மிலியன் பவுன் மதிப்புள்ள பங்குகளை விற்பனை செய்தன. இத் தொகையில் சுமார் 30 சதவீதம் எச்ச முதலீட்டுக்குப் (net investment) பயன்பட்டிருக்கலாம். ஒரு மிலியன் டாலர்களுக்கு மேற்பட்ட தொகையை தொழிலதிபர்கள் பெரும்பாலும் பங்கு மாற்று நிலையங்கள் மூலம் பெற்றனர். சிலர் 250,000 பவுன்களையும் பெற்றனர். ஒருசிலர் 50,000 பவுன் களைக் கூடப் பெற்றனர். மிகக் குறைந்த பங்குகளை விற்பனை செய்தவர்கள் தம் தொழில் நிறுவனங்களைப் பற்றிய விளம்பரங்களை (Prospectus) வெளியிடவில்லை. இத்தகைய பங்குகளை மற்றப் பெரிய நிறுவனங்களுடைய பங்குகளுடன் சேர்த்தே விற்பனை செய்தனர். குறைந்த தொகையைப் பங்கு மாற்று நிலையங்கள் மூலம் பெறுவோர் அதிகப் பங்குகளை வாங்காமல் மூலதனத்தைப் பங்கு மாற்று நிலையங்கள் மூலமே பெரும்பாலும் அடைய முயற்சி செய்கின்றனர். ஆகையால் பங்கு வெளியீட்டின் மூலம் மூலதனத்தைப் பெற்றவர்கள் 250,000 பவுன்களுக்கும் குறைவான தொகையைப் பங்கு மாற்று நிலையங்கள் மூலம் பெறவில்லை. பெரிய நிறுவனங்களே வெளியீட்டு மார்க்கட்டு அளிக்கும் வசதிகளைப் பயன் படுத்தின.

**வர்த்தகத்திற்கு நிதியுதவி**

வியாபாரிகள் பெறும் கடன் நாட்டில் மூலதன மார்க்கட்டுக்கு அடுத்த இடத்தைப் பெற்றிருக்கின்றது. பல வியாபாரிகள் மற்றவர்களுக்குக் கடன் கொடுக்கவேண்டிய நிலைமையிலும், மக்களிடமிருந்து பணத்தை வசூல் செய்யவேண்டிய நிலைமையிலும் இருக்கின்றனர். அவர்கள் கொடுக்கவேண்டிய கடன் தொகையும், வசூல் செய்யவேண்டிய தொகையும், அவர்களுடைய ரொக்கநிலைமையைப் பாதிக்கும். சிலசமயங்களில் அவர்களுடைய ரொக்கநிலைமை பாதிக்கப்பட்டால் அவர்களுடைய தொழில் திவாலாகலாம். 22ஆம் பட்டியலில் நாம் அவர்கள் மற்றவர்களிடமிருந்து பெற்ற கடன் விவரங்களை மட்டுமே காணலாம். அவர்கள் வசூல் செய்யவேண்டிய தொகையைப் பற்றிய விவரங்களை அதில் நாம் காணமுடியாது. பங்கு மாற்று நிலையங்களில் விற்பனையாகும்

1 1949-லிருந்து 53 வரை மொத்த வெளியீட்டில் 25 சதவீதம் புதிய முதலீட்டுக்குப்பயன்பட்டது[Studies in Company, Finance,ed. B. Tew and R. F. Henderson (Cambridge 1959) P. 65.]

பங்குகளைக் கொண்ட பொதுக் கம்பெனிகளுடைய (Public Companies) நிலையை மட்டுமே பட்டியல் காட்டுகின்றது. எல்லா நிறுவனங்களுடைய விவரங்களையும் நாம் பட்டியலில் கொடுத்தால் அவைகளுடைய எச்சக் கடன் (Net credit) குறைவாக இருக்கும். ஆனால் இத் தொகை பூச்சியமாக (zero) இருக்காது. ஏற்றுமதி செய்வோர் அயல்நாட்டினருக்கு ஏராளமான தொகை மதிப்புள்ள பொருள்களை அனுப்புகின்றனர், பணத்தைப் பிறகு வசூல் செய்து கொள்கின்றனர். சில்லறை விற்பனையாளர்கள் மக்களுக்குக் கடன் கொடுக்கின்றனர்.

**தனியாட்கள் பெறும் கடன் தொகை**

தனியாட்கள் பெற்ற கடன் தொகைகளை 7 முதல் 10 வரை உள்ள இனங்களில் காணலாம். தனியாட்கள் வீடுகளை வாங்குவதற்காகவே பெரும்பாலும் கடனை வாங்குகிறார்கள். கட்டடச் சங்கங்கள், இன்சூரன்சுக் கம்பெனிகள், ஸ்தலஸ்தாபனங்கள் முதலியவைகளிடமும் மக்கள் கடன் வசதிகளைப் பெற்றனர். ஆனால் கட்டடக் கம்பெனிகளிடமே அவர்கள் பெரும்பாலும் கடன் வசதிகளைப் பெற்றனர். நிலையான பொருள்களை மக்களும் தவணைக் கடன் முறையில் பெற்றனர். நிதியகங்கள் (Finance houses) மக்களிடம் டெபாசிட்டுத் தொகையையும், பாங்குகளில் கடனையும் பெற்றுப் பொதுமக்களுக்குத் தவணைக் கடன் முறையில் பொருள்கள் வாங்குவதற்கு உதவிபுரிந்தன.

22ஆவது பட்டியலில் மற்ற இனங்கள் (2, 3 ஆவது இனங்கள் நீங்கலாக) அயல்நாடுகளில் முதலீடு செய்வதற்காக வெளியிட்ட பாங்குகளையும், ஸ்தலஸ்தாபனங்களுடைய ஒற்றிகளையும், கருவூல உண்டியல்களையும், அரசினர் பத்திரங்களையும் குறிக்கின்றன. அயல்நாடுகளில் முதலீடு செய்வதற்காக வெளியிட்ட பங்குகள் முழுவதும் இங்கிலாந்திலிருந்து ஏற்றுமதியான மூலதனத்திற்குச் சமமாக இருக்கும் என்று நாம் கருதக்கூடாது. ஏனெனில் ஆங்கிலேயர்கள் வேற்று நாடுகளில் பெற்ற இலாபத்தையும், அயல்நாட்டினர் ஆங்கிலேயர்களுக்குச் செலுத்தவேண்டிய தொகையையும் மற்ற நாடுகளில் முதலீடு செய்வதற்குப் பயன் படுத்தினர். பட்டியலில் காணும் அரசினர் வாங்கிய கடன் தொகை பூர்த்தி பெறாததாக இருக்கின்றது. ஏனெனில் அரசாங்கம் சேமிப்புப் பத்திரங்கள் போன்ற பல்வேறு பத்திரங்கள் மூலம் பொதுமக்களிடமிருந்து கடனைத் திரட்டுகின்றது. அரசாங்கத்தின் கடன்தொகை முழுவதையும் பட்டியலில் நாம் குறிப்பிடவில்லை.

ஆகையால் மூலதன மார்க்கட்டைப் பற்றிய விவரங்கள் அனைத்தையும் 22ஆவது பட்டியலில் நாம் காணவில்லை. மூலதன

## பட்டியல் 23

### ஆங்கிலேய நிதி நிலையங்களுடைய சொத்துகள் மிலியன் பவுன்களில்

| | 1938 | 1958ஆம் ஆண்டின் இறுதி | 1958ல் ஏற்பட்ட உபரிச் செலவுகள் |
|---|---|---|---|
| 1. லண்டன் செக்குத் தீர்வகப் பாங்குகள். | 2320 | 7300 | 300 |
| 2. ஸ்காட்லாந்துப் பாங்குகள் | 340 | 950 | 10 |
| 3. வட அயர்லாந்துப் பாங்குகள். | 50 | 150 | 5 |
| 4. ஆங்கிலேயப் பாங்குகளின் சங்கத்தைச் சேர்ந்தவை (வேறு எந்த இனத்திலும் சேர்க்கப் படாதவை) | 50 | 120 | ... |
| 5. C.W.S; S.C.W.S. பாங்குகள். | 110 | 200 | —20 |
| மொத்த ஆங்கிலேய வாணிகப் பாங்குகள் | 2870 | 8700 | (300[3]) |
| 6. வெளிநாட்டுப் பாங்குகள் (இங்கிலாந்தில் அலுவலகங்களைக் கொண்டவை). | ... | 1060 | 190 |
| 7. டிரஸ்டி சேவிங்ஸ் (Trustee savings (முதலீட்டுத்துறைகள்) | 100 | 350 | 30 |
| 8. தள்ளுபடி நிலையங்கள் | ... | 1050 | 100 |
| 9. ஏற்பு அகங்கள் (Accepting houses) | ... | 260 | 60 |
| 10. நிதியகங்கள் (Finance houses) நிதியகச் சங்கத்தின் அங்கத்தினர்கள். | ... | 280 | 60 |
| 11. இங்கிலாந்தில் நிறுவப் பெற்ற இன்சூரன்சுக் கம்பெனிகள் | 1740[1] | 5990 | 400 |

23ம் பட்டியலின் தொடர்ச்சி

| | 1938 | 1958ஆம் ஆண்டின் இறுதி | 1958ல் ஏற்பட்ட உபரிச் செலவுகள் |
|---|---|---|---|
| 12. ஓய்வூதிய நிதியகங்கள்... | ... | 2500 | (250[3]) |
| 13. பணத்தை வசூல் செய்யும் நிலையங்கள் | 90 | 300 | 15 |
| 14. கட்டடச் சங்கங்கள் | 760 | 2620 | 200 |
| 15. லண்டன் பங்கு மாற்று நிலையங்களில் விற்பனையாகும் பங்குகளைக் கொண்ட முதலீட்டு டிரஸ்டு | ... | 710[2] | 15 |
| 16. யூனிட் டிரஸ்ட்டு (Unit Trust) | 80 | 90 | ... |
| மொத்தம் மற்ற நிலையங்களுடையது | ... | 15210 | (1350[3]) |
| 17. தொழில் நிதிக் கார்ப்பரேஷன் | ... | 40 | 13 |
| 18. தொழில், வர்த்தக நிதிக் கார்ப்பரேஷன் | ... | 40 | 2 |
| 19. விவசாய அடைமானக் கார்ப்பரேஷன் | 10 | 40 | 3 |
| | ... | 24300 | (1665[3]) |

1 1937 2 1957 3 சுமார் எண்

Source: Report of the Committee of Monetary System, Table 20

மார்க்கட்டுக்குப் பல்வேறு வழிகளில் எவ்வாறு பணம் கிடைக்கின்றது என்பதை பட்டியலில் நன்கு சித்தரித்துக் காட்டவில்லை. பல்வேறு நிதி நிலையங்களுடைய முக்கியத்துவத்தை நாம் 23வது பட்டியலில் காணலாம். 23வது பட்டியலில் காணும் நிலையங்களின் சொத்துகளைவிட மதிப்புள்ள சொத்துகளைத் தனியாட்கள் கொண்டிருந்தனர். 1958ஆம் ஆண்டின் இறுதியில் தனியாட்களின் சொத்துகளுடைய மதிப்பு (இன்சூரன்சுப் பத்திரங்கள், ஓய்வூதியங்கள் முதலியவை நீங்ககலாக) சுமார் 25,000 மிலியன் பவுனுக்குச் சமமாக இருந்திருக்கலாம். அதாவது வேலையிலிருந்த ஒவ்வொருவனும் 1000பவுன் மதிப்புள்ள சொத்தைக் கொண்டிருந்திருக்கலாம். ஒரு நிறுவனத்தின் சொத்து மற்றொரு நிறுவனத்தின் பொறுப்பாக இருப்பதால் சில இனங்கள் பட்டியலில் இருமுறை சேர்க்கப்பட்டிருக்கின்றன என்பதை நாம் மறக்கக்கூடாது. உதாரணமாகத் தள்ளுபடி நிலையங்கள் பாங்குகளிடமிருந்தே தம் தொழிலுக்கு நிதியை வாங்கிக் கொள்கின்றன. பாங்குகளுடைய பொறுப்புகளை முதல் 6 இனங்கள் காட்டுகின்றன.

## ஆங்கிலேயப் பாங்குகள்

நிதி நிலையங்களுள் மிகவும் முக்கியமானவை பாங்குகள். ஆகையால் அவைகளைப் பற்றிய விவரங்களை நாம் பார்க்கவேண்டும். இங்கிலாந்தில் மற்ற நாடுகளைப் போலவே பலவகைப் பாங்குகள் இருப்பதால் பாங்கு என்ற சொல்லின் பொருளை விளக்குவது சற்றுக் கடினமாகும். சில சிறிய நிதிநிலையங்கள் 'தொழில் பாங்குகள்' என்று தங்களை அழைத்துக்கொள்கின்றன. ஆனல் அவைகளை நாம் பாங்குகள் என்று கூறமுடியாது. லண்டன் மாநகரத்திலுள்ள 'வர்த்தகப் பாங்குகளை' (Merchant Banks) ஏற்பு அகங்கள் (accepting houses) என்று கூறுகின்றனர்.

அஞ்சல் அலுவலக பாங்குகள் (Post Office Savings Banks), அரசினர் பத்திரங்களிலேயே பணத்தை முதலீடு செய்யும் டிரஸ்டி சேவிங்ஸ் பாங்கு (Trustee Savings Bank) முதலியவைகளைப் பற்றி நாம் இங்கு ஒன்றும் கூறமாட்டோம். சில நாடுகளில் நில உடைமைச் சொத்துகளை அடைமானமாக ஏற்றுக்கொண்டு கடன் கொடுக்கும் பாங்குகள் இருக்கின்றன. கட்டடச் சங்கங்கள் (Building Societies) இங்கிலாந்தில் அடைமானப் பாங்குகளுடைய வேலையைச் செய்கின்றன. இவைகளைப் பற்றிய விவரங்களை நாம் வேறு இடத்தில் கொடுப்போம். விவசாய அடைமானக் கார்ப்பரேஷனும், ஸ்காட்லாந்து விவசாயக் கார்ப்பரேஷனும் (Agricultural Mortgage Corporation; Scottish Agricultural

Securities Corporation) விவசாயிகளுக்கு நீண்டகாலக் கடனைக் கொடுக்கின்றன. 60 ஆண்டுகள் வரை உள்ள தவணைக் கடன்களைக் கொடுக்கும் இக் கார்ப்பரேஷன்கள் விவசாயிகளிடமிருந்து வட்டியைப் பெறுகின்றன. புதிய தொழில்களுக்கு நிதியுதவி செய்யும் 'வளர்ச்சிப் பாங்குகளை'ப் (development banks) பற்றியும் நாம் ஒன்றும் கூறவேண்டியதில்லை. உதாரணமாகக் 'காமன்வெல்த் டெவலப்மென்ட் பினான்ஸ் கம்பெனி' (Commonwealth Development Finance Co.,) என்ற நிறுவனம் காமன்வெல்த் நாடுகளில் வளர்ச்சித் திட்டங்களுக்கு நிதியளிக்கின்றது. தொழில் நிதிக் கார்ப்பரேஷன் (Finance Corporation for Industry) பெரிய தொழில்களுக்கும், தொழில் வர்த்தக நிதிக் கார்ப்பரேஷன் (Industrial and Commercial Finance Corporation) சிறிய தொழில்களுக்கும் கடன் உதவியளிக்கின்றன. தொழில் வர்த்தக நிதிக் கார்ப்பரேஷன் 2 இலட்சம் பவுன் வரை கடனுதவியளிக்கின்றது. ஆனால் மேலே நாம் குறிப்பிட்ட பாங்குகளைப் பற்றி ஆராய்ச்சி செய்யாமல் டெபாசிட்டுத் தொகையைக் கொண்டு தொழில் செய்யும் பாங்குகள் எவ்வாறு இயங்குகின்றன என்பதைப் பார்ப்போம்.

**செக்குத் தீர்வகப் பாங்குகள்**

"பேரைந்துகள்" (Big Five) என்று கூறப்படும் பார்கிளேஸ் (Barclays), லாய்ட்ஸ் (Lloyds), தி மிட்லண்டு (The Midland), தி நாஷனல் புரொவின்ஷியல் ((The National Provincial) தி வெஸ்ட்மின்ஸ்டர் (The Westminster) முதலிய பாங்குகளே இங்கிலாந்திலும் வேல்ஸிலும் பாங்குத் தொழிலைப் பெரும்பாலும் நடத்துகின்றன. இவைகளும், 6 சிறிய பாங்குகளும் லண்டன் நகரத்துச் செக்குத் தீர்வகத்தில் சேர்ந்திருக்கின்றன. மேற்கூறிய 11 பாங்குகளும் 1958ஆம் ஆண்டின் இறுதியில் 7,400 மிலியன் பவுன் மதிப்புள்ள சொத்துகளைக் கொண்டிருந்தன. இதில் ஏழில் ஐந்து பங்கு பேரைந்துகளைச் சேர்ந்ததாக இருந்தது. ஐந்து பெரிய பாங்குகளும் இங்கிலாந்திலும், வேல்ஸிலும் கிளைகளைக் கொண்டிருக்கின்றன. ஆனால் கிளின்மில்ஸ் (Glyn Mills), கவுட்ஸ் (Couthes) என்ற இரு பாங்குகளும் லண்டன் நகரில் மட்டும் அலுவலகத்தைக் கொண்டிருக்கின்றன. வில்லியம் டீகன்ஸ் (William Deacon's) என்ற பாங்கு லங்காஷயர் பகுதியிலேயே தொழில் செய்கின்றது. மார்ட்டின்ஸ் (Martin's) டிஸ்டிரிக்ட் (District) என்ற பாங்குகள் வடபகுதியிலும், நாஷனல் (National) பாங்கு அயர்லாந்திலும் தொழில் நடத்துகின்றன. நாஷனல் பாங்கு இங்கிலாந்திலும் வேல்ஸிலும் கிளைகளைக் கொண்டிருக்கின்றது.

## பட்டியல் 24

**ஆங்கிலேய பாங்குகள் பொறுப்புகளும் சொத்துகளும் 1958ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 31ஆம் தேதி இருந்த நிலை**

| | லண்டன் செக்குத் தீர்வகப் பாங்குகள் | | ஸ்காட்லாந்து பாங்குகள் | |
|---|---|---|---|---|
| | மிலியன் பவுனில் | டெபாசிட்டின் சதவீதம் | மிலியன் பவுனில் | டெபாசிட்டின் சதவீதம் |
| பொறுப்புகள் (Liabilities) | | | | |
| மொத்த டொபாசிட்டு | 7199 | 100 | 791 | 100 |
| நடைமுறைக் கணக்கு | 4227 | 58·7 | 323 | 40·8 |
| டெபாசிட்டுக் கணக்கு | 2486 | 34·5 | 381 | 48·2 |
| மற்றக் கணக்குகள் | 486 | 6·8 | 87 | 11·0 |
| புழக்கத்திலிருக்கும் செலாவணித்தாள் | | | 120 | 15·2 |
| செலுத்தப்பட்ட மூலதனமும் காப்புநிதியும் | 212 | 2·9 | 42 | 5·3 |
| மொத்தப் பொறுப்புகள் | 7411 | | 953 | |

24ம் பட்டியலின் தொடர்ச்சி

| | லண்டன் செக்குத் தீர்வகப் பாங்குகள் | | ஸ்காட்லாந்து பாங்குகள் | |
|---|---|---|---|---|
| | மிலியன் பவுனில் | டெபாசிட்டின் சதவீதம் | மிலியன் பவுனில் | டெபாசிட்டின் சதவீதம் |
| **சொத்துகள் (Assets)** | | | | |
| கையில் இருக்கும் ரொக்கம் | 374 | 5·2 | 113[1] | 16.8 |
| இங்கிலாந்தின் தலைமை பாங்கில் கொண்டிருக்கும் ரொக்கம் | 213 | 3·0 | 2 | 0·3 |
| அழைப்புக் கடன் | 587 | 8·2 | 78 | 9·9 |
| இங்கிலாந்தின் கருவூல உண்டியல்கள் | 1185 | 16·5 | 26 | 3·2 |
| மற்ற உண்டியல்கள் | 135 | 1·9 | 6 | 0.7 |
| ரொக்கத் தன்மையுடைய மற்றச் சொத்துகள் | 2493 | 34·6 | 245 | 30·9 |
| மற்ற பாங்குகளில் கொண்டிருக்கும் தொகையும் வசூல் செய்ய வேண்டிய தொகையும் | 581 | 8·1 | 104 | 13·1 |
| பத்திர முதலீடு[புத்தகமதிப்புப்படி (Book value)] | 2102 | 29·2 | 349 | 44·1 |
| 5 ஆண்டு அல்லது குறைவான தவணைக்காலச் சிறப்பீட்டுப் பத்திரங்கள் | 985 | 13·7 | (98) | 12·4 |
| மற்ற முதலீடுகள் | 1117 | 15·5 | (237) | 30·0 |
| மக்களுக்குக் கொடுத்த கடன் தொகையும் மற்றக் கணக்குகளும் | 2126 | 29·5 | 236 | 29·8 |
| கட்டடங்கள்மற்ற கம்பெனிகளில் கொண்டுள்ள பங்குகள் முதலிய சொத்துக்கள் | 109 | 1·5 | 20 | 2.6 |
| மொத்தப் பொறுப்புகள் | 7411 | | 953 | |

1 ஸ்காட்லாந்து பாங்குகளின் செலாவணித்தாள்களுக்குக் காப்பு நிதியாகக்கொண்டுள்ள இங்கிலாந்தின் தலைமை பாங்குகளுடைய செலாவணித்தாள்கள் உள்பட. Source: Report of the Committee on the working of the Monetary System p p 45, 53

**மற்ற பாங்குகள்**

மேலே குறிப்பிட்ட பாங்குகளைத் தவிர பல சிறிய பாங்குகள் இருக்கின்றன. அவைகளுள் C. W. S. பாங்கு (C. W. S. Bank) என்ற நிறுவனமே மிகப் பெரியதாகும். இவைகளைப் பற்றிய விவரங்களை நாம் வேறு இடத்தில் காணலாம். இவைகள் லண்டன் நகரத்துச் செக்குத் தீர்வகத்துடன் தொடர்பு கொள்ளவில்லை. இந்தப் பாங்குகளை 23ஆம் அட்டவணையில் அயல்நாட்டு பாங்குகள் என்று நாம் குறிப்பிட்டிருக்கின்றோம். பார்கிளேஸ் பாங்கு (Barclays Bank), D.C.O. பாங்கு, தென் அமெரிக்கா-லண்டன் பாங்கு (Bank of London and South America) முதலிய பாங்குகள் தலைமை அலுவலகத்தை லண்டனிலும் மற்றக் கிளைகளை அயல் நாடுகளிலும் கொண்டிருக்கின்றன. அவைகளுடைய சொத்துகளின் மதிப்பு 1958ஆம் ஆண்டின் இறுதியில் 1000 மிலியன் பவுனுக்குச் சமமாக இருந்தபோதிலும், அவைகள் டெபாசிட்டுக்களை, லண்டன் நகரத்துக்கு வெளியே வசிப்பவர்களிடமிருந்தே வசூல் செய்தன. லண்டன் வாசிகள் 1958ஆம் ஆண்டில் 200 மிலியன் பவுன்களுக்கு மேற்படாத தொகையையே இப்பாங்குகளில் கொண்டிருந்தனர் என்பதை நாம் 23ஆம் அட்டவணையில் காணலாம்.

ஸ்காட்லாந்தில் உள்ள 5 பாங்குகளில் இரண்டு 'பேரைந்து'களுக்குச் (Big Five) சொந்தமானவை. ஒரு பாங்கில் 'பேரைந்தின்' சில அங்கத்தினர்கள் சிறுபான்மையான பங்குகளைக் கொண்டிருக்கின்றனர். தி ராயல் பாங்கு ஆப் ஸ்காட்லண்டு (The Royal Bank of Scotland) என்ற பாங்கு, கிளின் மில்ஸ் (Glyn Mills), வில்லியம் டீகன்ஸ் (William Deacon's) என்ற இரு பாங்குகளையும் தம் வசம் கொண்டிருக்கின்றது. ஸ்காட்லாந்தின் 5ஆம் பாங்காகிய தி பாங்கு ஆப் ஸ்காட்லண்டு (The Bank of Scotland) என்ற பாங்கு ஆங்கிலேய பாங்குகளுடன் எவ்விதத் தொடர்பும் கொள்ளவில்லை.

**அமெரிக்க பாங்குகள்**

அமெரிக்க பாங்கு முறை ஆங்கிலேய முறையிலிருந்து வேறுபட்டிருக்கின்றது. அமெரிக்காவில் 14000 பாங்குகள் இருக்கின்றன. 9,000 பாங்குகள் மத்திய அரசாங்கத்தின் சாசனங்களையும், 5000 பாங்குகள் 50 மாநில அரசுக்களின் சாசனங்களையும் கொண்டிருக்கின்றன. மாநிலச் சாசனங்களைக் கொண்டிருக்கும் பாங்குகளை மாநிலப் பாங்குகள் (State Banks) என்று கூறுகின்றனர். ஆனால் இங்கிலாந்தில் இரு பெரிய பாங்குகள் 2000 கிளைகளைக் கொண்டிருக்கின்றன. அமெரிக்காவில் மொத்தம் 4000 கிளைகளே இருக்கின்றன. பாங்குகள் பெரும்பாலும் இக்

கிளைகளைத் தலைமை அலுவலகம் இருக்கும் ஊர்களிலேயே கொண்டிருக்கின்றன[1]. அமெரிக்கர்கள் கிளை பாங்கு முறையை (Branch-Banking) சட்டத்தின்மூலம் தடை செய்தனர். ஏனெனில் 'பண டிரஸ்டுகள்' (Money Trusts) நாட்டில் உருவாகாமல் இருக்க வேண்டும் என்றும், 'சர்வாதீனங்கள் (Monopolies) வளரக்கூடாதென்றும் அவர்கள் விரும்பினார்கள். மாநிலங்கள் கிளை பாங்கு முறையை ஆதரிக்கவில்லை. இங்கிலாந்தில் வலிமையுள்ள சில நிறுவனங்கள் சர்வாதீனங்களாகப் பணியாற்றுகின்றன. அமெரிக்க முறை பாங்குகள் திவாலாவதைத் தடைசெய்வது கடினமாகும். 1921 முதல் 1933க்குள் அமெரிக்காவில் 10,000 பாங்குகள் கவிழ்ந்தன. ஆனால் அமெரிக்க முறை இன்று செம்மையாக இருக்கின்றது. எதிர்காலத்தில் பாங்குகள் ஆபத்துகளுக்கு இலக்காகாமல் பணிபுரியலாம். ஆனால் அமெரிக்க பாங்கு முறையைவிட ஆங்கிலேய முறை செம்மையாக இருக்கின்றது[2].

ஆங்கிலேய பாங்குகள் தம் தொழிலுக்கு வேண்டிய நிதியைப் பெரும்பாலும் டெபாசிட்டுத் தொகை மூலமே பெறுகின்றன. பாங்குகள் இன்றும் முதலையும் காப்புநிதியையும் முக்கியமானவைகளாகக் கருதுகின்றன. ஏனெனில் அவைகள் வைத்திருக்கும் சொத்துகளின் மதிப்பு மாறலாம், அது அவைகளுடைய டெபாசிட்டின் மதிப்பைவிடக் குறைந்துகூடப் போகலாம். எனவே பாங்குகள் பங்குதார்களிடமிருந்து (share holders) தொடர்ந்து மூலதனத்தைத் திரட்டிக்கொண்டே இருக்கலாம். ஆனால் காப்புநிதியையும், மூலதனத்தையும் நாம் புறக்கணித்து டெபாசிட்டுத் தொகையை மட்டுமே பாங்குகளின் பொறுப்புகள் என்று கருதலாம். அட்டவணையில் காணும் மற்றக் கணக்குகள் என்ற இனத்தையும் நாம் புறக்கணிக்கலாம். வசூலாக வேண்டிய செக்குத் தொகைகளையும், பதுக்கிய காப்புநிதியையுமே இந்த இனம் குறிக்கின்றது. இத்தொகைகள் டெபாசிட்டர்களைச் சேர வேண்டியவை அல்ல.

இங்கிலாந்திலும், வேல்ஸிலும் டெபாசிட்டுத் தொகையில் $\frac{2}{3}$ பங்கு நடைமுறை டெபாசிட்டாக இருக்கின்றது. ஸ்காட்லாந்தில்

1 உதாரணமாக, சிகாகோவில் கிளை பாங்குகளே இல்லை. நகரின் மையப் பகுதியில் இரு அலுவலகங்களே இருக்கின்றன. ஆனால் காலிபோர்னியாவில் எங்கும் கிளை பாங்குகள் இருக்கின்றன. நியூயார்க்கில் பல கிளை பாங்குகள் இருக்கின்றன. [R. S. Sayers ஆர். எஸ். சேயர்ஸ் American Banking System p.p.21-3]

2 கிளை பாங்கு முறை வளராத முக்கியமான நாடுகளுள் அமெரிக்காவே மிகப் பெரியதாகும். பிரான்சில் 4 பெரிய பாங்குகள் இருக்கின்றன. அவை பாரிஸில் தலைமை அலுவலகத்தையும், நாடெங்கும் கிளைகளையும் கொண்டிருந்திருந்தன. ஜெர்மனியில் போர்க்காலம் வரை மூன்று பாங்குகள் இருந்தன. இப்பொழுது நூற்றுக்கணக்கான பாங்குகள் இருக்கின்றன.

அரைப் பகுதிக்குக் குறைவான தொகையைப் பாங்குகள் நடைமுறை டெபாசிட்டாகக் கொண்டிருக்கின்றன. இந்த டெபாசிட்டுத் தொகைக்கு வட்டி இல்லை. இதை எப்பொழுது வேண்டுமானாலும் செக்குகள் மூலம் மீட்கலாம். டெபாசிட்டுக் கணக்கு என்ற டெபாசிட்டுக்கு மையபாங்கு வீதத்தைவிட 2 சதவீதம் குறைவாக வட்டி கொடுக்கின்றனர். 7 நாட்கள் முன்பு அறிவித்த பிறகே இத்தொகையை மக்கள் மீட்கலாம். ஆனால் நடைமுறையில் பாங்குகள் முன் அறிவிப்பு இல்லாமலேயே பணத்தை டெபாசிட்டுக் கணக்கிலிருந்து நடைமுறைக் கணக்குக்கு மாற்றத் தயாராக இருக்கின்றன. ஆனால் இப்படிச் செய்யும்பொழுது மக்கள் வட்டியை இழக்கத் தயாராக இருக்கவேண்டும். ஆகையால் டெபாசிட்டுக் கணக்குகள், நடைமுறை டெபாசிட்டைப்போலவே ரொக்கத் தன்மையைக் கொண்டிருக்கின்றன. அமெரிக்காவில் இருப்பதைப்போலவே இங்கிலாந்திலும் நடைமுறை டெபாசிட்டுக்கும், தவணை டெபாசிட்டுக்கும் வேறுபாடு இருக்கின்றது. ஆனால் அமெரிக்காவில் பல்வேறு வகை டெபாசிட்டுக்கள் இருக்கின்றன. மற்ற நாடுகளில் இங்கிலாந்தைவிட அதிகமான போட்டி இருக்கின்றது.

டெபாசிட்டுக் கணக்குகளுக்கு வசூல் செய்யும் வட்டி வீதத்தையும், முன்னறிவிப்புக்கு எவ்வளவு காலம் கொடுக்கவேண்டுமென்பதையும் பாங்குகள் ஒப்பந்தம் செய்துகொண்டு நிர்ணயம் செய்கின்றன. மக்களுக்குப் பணியாற்றுவதில் அவைகளிடையே ஒரு போட்டி நிலவுகின்றது. பாங்குகள் மக்கள் சார்பில் பொறுப்பாளர்களாகப் (Trustees) பணியாற்றுகின்றன; இறுதி விருப்பப் பத்திரத்தைச் (will) செயற்படுத்துகின்றன; மக்களுக்குச் சேர வேண்டிய இலாப ஈவை வசூல் செய்கின்றன. மக்கள் செலுத்த வேண்டிய தொகைகளைப் பாங்குகள் அவர்கள் சார்பில் செலுத்துகின்றன. இப்பணிகளை ஆற்றவேண்டுமானால் ஒருவன் பாங்கில் நடைமுறைக் கணக்கில் பணத்தை வைத்துக் கொள்ளவேண்டும்.

**பாங்கின் சொத்துகள்**

பாங்குகள் தம்மிடம் இருக்கும் பணத்தை மக்களுக்குக் கடன் கொடுக்கப் பயன்படுத்துகின்றன. ஒரு சிறிய பகுதியைக் குறிப்பிட்ட தொகைகளாகப் பலருக்குப் பாங்குகள் கடன் கொடுக்கின்றன. ஆனால் பெரும்பகுதியை அதிகப் பற்றுக் கடனுக்கே (Over draft) பயன்படுத்துகின்றன. அதிகப் பற்றுக் கடனைப் பெறும் ஒருவன் ஒரு குறிப்பிட்ட தொகைவரை பணத்தைச் செக்குகள் மூலம் பெற்றுக் கொள்ளலாம். அதிகப் பற்றுகப் பெற்ற தொகைக்கு ஒருவன் சாதாரணமாக மைய பாங்கு வீதத்தைவிட

(Bank Rate) ஒரு சதவீதம் அதிகமான வட்டியைச் செலுத்த வேண்டும். அதிகப் பற்றுக் கடனின் குறைந்த பட்சவீதம் ஐந்து சதவீதமாகும். பங்கு மாற்று நிலையங்களின் பத்திரங்களையும், இன்சூரன்சுப் பத்திரங்கள், பொருள்கள் முதலியவற்றையும் அடைமானமாகக் கொண்டு பாங்குகள் மக்களுக்குக் கடன் கொடுக்கின்றன. சிலருக்கு அடைமானம் வாங்காமலே கடன் கொடுக்கின்றன.

சாதாரணமான ஒரு மனிதனுக்கு அதிகப் பற்றுக்கடன், வேண்டிய வசதிகளைக் கொடுக்கின்றது. அவன் மற்ற நிதி நிலையங்களைவிட பாங்குகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பதால், தன் நிலைமையை விளக்கி வேண்டிய தொகையை அதிகப் பற்றுகப் பற்றிக்கொள்ளலாம். வேண்டும்பொழுதெல்லாம் புதிய கடனைக்கோர வேண்டிய தேவையில்லை. அதிகப் பற்று எல்லைவரை வேண்டியபொழுதெல்லாம் வேண்டிய தொகையை அவன் வாங்கிக் கொள்ளலாம். பணம் கிடைக்கும்பொழுது வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்கலாம். பாங்குகள் ஆண்டு தோறும் அதிகப்பற்று எல்லையைப் பரிசீலனை செய்து குறைக்கலாம். இவ்வாறு செய்வதால் ஒரு தொழிலதிபருக்குத் தொல்லைகள் ஏற்படலாம். அதாவது அவனுக்கு அதிகமாகப் பணம் தேவையாக இருக்கும்பொழுது பாங்கு அதிகப்பற்று எல்லையைக் குறைக்கலாம். இதுவே அதிகப்பற்றுக் கடனின் ஒரு பெரிய குறைபாடாகும். ஆனால் உண்மையில் பாங்குகள் நீண்டகாலத்துக் கடனைக் கொடுத்து வருகின்றன. ஆண்டுதோறும் அதிகப்பற்று எல்லையைக் குறைக்காமலிருப்பதாக பாங்குகள் ஒத்துக் கொள்கின்றன. ஆனால் கடனை வாங்குவோர் சிறந்த துணையீட்டுப் பொருள்களை (Collaterals) அடைமானமாகக் கொடுக்கவேண்டும். மேலும் மக்கள் வாங்கிய கடனைச் சிறிது சிறிதாகத் திருப்பிக் கொடுக்கவேண்டும்.

**தவணைக் கடன் (Term Loans)**

மற்ற நாடுகளில் குறிப்பாக அமெரிக்காவில் பாங்குகள் தவணைக் கடன்களை மக்களுக்குக் கொடுக்கின்றன. இக் கடனை வாங்கும் ஒருவன் பாங்கிலிருந்து ஒரு குறிப்பிட்ட தொகையைக் கட்டாயமாக வாங்கமுடியும். ஆகையால் அவன் நம்பிக்கையுடன் நீண்டகாலத் திட்டத்தை வகுக்கலாம். ஆனால் அவன் உயர்ந்த வட்டி வீதத்தைக் கொடுக்கவேண்டி இருக்கலாம். திருப்பிக் கொடுப்பதிலும் அவனுக்கு வசதி இருக்கின்றது. ஒருவனுடைய தொழில் செம்மையாக இருந்தால், பாங்குகள் அதிகாரத்தைப் பயன்படுத்தி அவனுக்குத் தொல்லைகளைக் கொடுக்காது. தொழிலதிபர்களையும் வியாபாரிகளையும் பாங்குகள் விரோதித்துக்

கொள்ளாமல் இருக்கும். தவணைக் கடனைத் திருப்பிக் கேட்காமல் இருப்பதற்காக பாங்குகள் ரொக்கத் தன்மையுடைய சொத்துகளை ஏராளமாக வைத்துக்கொள்ள முயற்சி செய்யும்.

இத்தகைய நீண்டகால முதலீட்டை ஆங்கிலேய பாங்குகள் விரும்புவதில்லை. இத்தகைய முதலீடுகள் பாங்குத் தொழிலை மற்றத் தொழில்களுடன் இணைத்துவிடலாம். பாங்குகளில் நிருவாக சபை அங்கத்தினர்களாகப் பணியாற்றுவோர் வேறு தொழிலகங்களிலும் இயக்குநர் சபையில் அங்கம் வகிக்கலாம். ஆனால் பாங்குகள் மற்றத் தொழில்களை நிருவாகம் செய்வது செம்மையான பாங்கு முறைக்கு உகந்ததல்ல என்பது அவர்கள் கருத்தாகும். டெபாசிட்டுத் தொகையைக்கொண்டு பாங்குகள் தொழில் செய்வதால் நீண்டகால முதலீட்டை அவைகள் விரும்புவதில்லை. மேலும் தொழில் வளர்ச்சிக்குப் பாங்குகளின் உதவி தேவைப்படவில்லை. ஆனால் ஐரோப்பிய நாடுகளில் மூலதன மார்க்கட்டு நன்கு அமையவில்லை. ஆகையால் தொழில்கள் பாங்குகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தன. தொழிலகங்கள் பாங்குகளுடைய நிதியுதவியை நாடின.

**தாமாகவே தீர்ந்து போகும் கடன்கள்** (Self-liquidating advances)

ஆங்கிலேய பாங்குகள் மக்களுக்குத் தாற்காலிகமாக ஏற்படும் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கே நிதியுதவி செய்கின்றன. உதாரணமாக அறுவடைகாலத்தில் விவசாயிகள் ஏராளமான பணத்தைத் தொழிலாளர்களுக்குக் கூலியாகக் கொடுக்க வேண்டும். அவர்கள் பொருளை விற்பனை செய்த பிறகே முதலீடு செய்த பணத்தைத் திருப்பிப் பெறலாம். ஆகையால் விவசாயிகள் சில பருவகாலங்களில் பாங்குகளுடைய உதவியை நாடுவர். வியாபாரிகளும் தம்மிடம் இருக்கும் சரக்கைப் பெருக்கிக் கொள்வதற்காக பாங்குகளின் உதவியை நாடலாம். சரக்குகள் விற்பனையானவுடன் வியாபாரிகள் பணத்தைத் திருப்பிக் கொடுப்பார்கள். ஒருவன் வருமான வரியைச் செலுத்த வேண்டியபொழுது, ஏராளமான தொகையை பாங்குகளிடம் நாடலாம். ஒரு தொழிலதிபரும் தாற்காலிகமாகக் கடன் தொகையை விரும்பலாம். சிலரிடமிருக்கும் உபரிப் பணத்தை பாங்குகள் மற்றவர்களுக்கு வேண்டியபொழுது கொடுத்துதவும். கடன் வாங்கியவர்கள் அவ்வப்போது பணத்தைத் தவணைகளில் திருப்பிச் செலுத்தலாம்.

எல்லாப் பாங்குகளும் இவ்வாறு தாமாகவே தீர்ந்துபோகும் கடன்களை மட்டுமே மக்களுக்குக் கொடுப்பதில்லை. பல தொழிலதி

பர்கள் பாங்குகளில் அதிகப் பற்றுக் கடனைப் பாங்குகளிடம் வாங்குகின்றனர். அவர்கள் கடனை ஓராண்டுக்குள் திருப்பிக் கொடுக்க முடியாத நிலையில் இருப்பார்கள். பாங்குகள் நெடுங்காலக் கடன்களையும், நடுத்தரக் காலக்கடன்களையும் (Medium-Term Loans) தொழிலதிபர்களுக்குக் கொடுக்கின்றன. ஏற்றுமதிக் கடனுக்கு உறுதி கொடுக்கும் இலாகாவின் (Export Credit Guarantee Department) உறுதியுடன் பாங்குகள் ஏற்றுமதியாளர்களுக்கு ஐந்தாண்டுவரை உள்ள தவணைக் கடன்களைக் கொடுக்கின்றன. பாங்குகள் எண்ணெய்க் கப்பல்களைக் (Tanker) கட்டுவதற்குத் தொழிலதிபர்களுக்கு நிதியுதவியளிக்கின்றன. அவை தொழில்-வர்த்தக நிதிக் கார்ப்பரேஷனுடைய பங்குகளைக் கொண்டிருக்கின்றன. இந்தக் கார்ப்பரேஷன் நீண்டகால முதலீடு செய்து, தொழிலகங்களுக்கு உதவி புரிகின்றது. தவணைக் கடன் முறையில் வீடுகளையும், மற்றப் பொருள்களையும் வாங்குவோர் பாங்குகளின் உதவியை நாடுகின்றனர். ஆகையால் பாங்குகள் தாமாகவே தீர்ந்துபோகும் குறுகிய காலக் கடனை மட்டும் மக்களுக்குக் கொடுக்கின்றன என்று நாம் கருதக்கூடாது.

பழைய காலத்தில் ஒரு சிறிய பாங்கு ரொக்கத் தன்மையுடைய சொத்துகளை வைத்துக்கொள்ள வேண்டியிருந்தது. ஏனெனில் ஏதாவது நெருக்கடி ஏற்பட்டால் பாங்கு உடனே தன் சொத்துகளை ரொக்கமாக மாற்றவேண்டும். அக்காலத்தில்கூட பாங்குகள் குறுகிய காலக் கடனை மட்டுமே மக்களுக்குக் கொடுக்கவில்லை. ரெயில்வே தொழிலிலும், மற்றப் பெரிய தொழில்களிலும் முதலீடு செய்வதற்கு பாங்குகள் மக்களுக்கு உதவிபுரிந்தன. தற்காலத்தில் பாங்குகள் திடீரென்று டெபாசிட்டுத் தொகையில் கணிசமான பகுதியை இழக்கா. ஆனால் குறுகிய காலக் கடனைக் கொடுப்பது அவைகளுக்கு எளிதாக இருக்கின்றது. ஏனெனில் குறுகிய காலத்தில் ஒருவனுடைய நாணயத்தையும், தொழில் நிலைமையையும் மதிப்பிடுவது எளிதாக இருக்கின்றது[1].

### பாங்குகள் கொடுக்கும் கடனுக்கு ஒரு எல்லை

பாங்குகள் ஒரு குறிப்பிட்ட தொகைக்குமேல் தாம் கொடுக்கும் கடனைப் பெருக்கா. அவை கொடுக்கும் கடன் தொகைகள்

1 "பாங்குகளுடைய கிளை-அலுவலகங்களின் அதிகாரிகளே பெரும்பாலும் மக்களுக்கு அதிகப்பற்றுக் கடனைக் கொடுக்கின்றனர். அவர்கள் தொழிலதிபர்களுடைய நாணயத்தைக் குறுகிய காலத்தில் எளிதில் மதிப்பீடு செய்யலாம். அவர்கள் கடன் தொகையைத் திருப்பிக் கொடுக்கமுடியுமா என்பதையும் மதிப்பிடலாம். ஆனால் நீண்டகாலத்தில் நிலவும் நிலைமையை அவர்கள் எளிதில் மதிப்பிடமுடியாது. ஆனால் ஆங்கிலேய பாங்குகள், 'விதைக்கும் காலத்திலிருந்து அறுவடைவரை வேண்டிய தொகையையும்' (Seed time to harvest) தாற்காலிகத் தேவைக்கு வேண்டிய தொகையையும் மக்களுக்குக் கொடுக்கத் தயாராக இருக்

தாமாகவே தீர்ந்து போகக்கூடியவையாக இருந்தபோதிலும், ஒரு குறிப்பிட்ட எல்லைக்குமேல் தாம் கொடுக்கும் கடனைப் பெருக்கா. அவைகள் கொண்டிருக்கும் பத்திரங்களைப்போல் கடன் தொகைகளும் அவைகளுடைய சொத்துகளாக இருந்தபோதிலும், பாங்குகள் கடன் தொகைகளை மற்றவர்களுக்கு விற்பனை செய்ய முடியாது. ஆகையால் கடன் ரொக்கத் தன்மையற்ற சொத்தாகும். ஒருவனுக்குக் கடன் கொடுக்கும்பொழுது ஒரு பாங்கு, அவனுடைய நிலைமை, அவன் கொடுக்கும் அடைமானத்தின் மதிப்பு, அவனுடைய நாணயம், அவன் செய்யும் தொழில் பற்றிய விவரங்கள் முதலியவற்றை நன்கு பரிசீலனை செய்த பிறகே அவனுக்குக் கடன் கொடுக்கும். பாங்கு தான் கொடுக்கும் கடனை மற்றொருவனுக்கு விற்பனை செய்யவேண்டுமானால் அதை வாங்கத் தயாராக இருப்பவன் நாம் மேலே விளக்கிய விவரங்கள் அனைத்தையும் நன்கு அறிந்திருக்க வேண்டும். இது நடைமுறையில் சாத்தியமல்ல. எனவே பாங்குகள் கடன் தொகைகளை மற்றவருக்கு விற்பனை செய்யமுடியாது. மேலும் ஒரு பாங்கு ஒருவனுக்குக் கொடுத்த கடனைத் திடீரென்று திருப்பி வாங்கவோ அல்லது குறைக்கவோ முடியாது. ஏனெனில் அவ்வாறு செய்தால் கடன் வாங்கியவனுடைய தொழில் பாதிக்கப்படும். அவன் திடீரென்று திவாலாகும் நிலைமை உருவாகலாம். ஒரு பாங்கில் பல ஆண்டுகள் தொடர்புகொண்ட ஒருவனுக்கு அது திடீரென்று அதிகப் புற்றுக் கடனைக் கொடுக்க மறுக்க முடியாது. ஆனால் பாங்கு கருவூல உண்டியல்களை வாங்காமல் இருக்கலாம். பணம் தேவையாக இருக்கும்பொழுது ஒரு பாங்கு பத்திரங்களை விற்பனை செய்யலாம்; மக்களுக்குக் கொடுத்த கடன் தொகையைத் திருப்பிக் கேட்காமல் மற்றச் சொத்துகளை விற்பனை செய்யலாம். ஒரு பாங்கில் உபரிப் பணம் இருந்தால், பத்திர முதலீட்டையே (investment) பாங்கு பெருக்கும், கடன் தொகையைப் பெருக்காது. கடன் தொகையைப் பெருக்கும் நோக்கத்துடன் அடைமானப் பொருளின் மதிப்பைக் குறைக்காது.

லண்டன் செக்குத் தீர்வகப் பாங்குகள் தாம் கொண்டுள்ள டெபாசிட்டுத் தொகையைப்போல் 50 சதவீதம் மதிப்புள்ள தொகையை மக்களுக்குக் கடனாகக் கொடுக்க விரும்புகின்றன.

---

கின்றனர். தொழிலதிபர்கள் நிலையான மூலதனத்தைத் திரட்ட ஏற்பாடு செய்யலாம். அதற்குள் அவசரத் தேவைகளுக்கு வேண்டிய பணத்தைப் பாங்குகளிடம் முதலாளிகள் தாற்காலிகக் கடனாக வாங்கிக் கொள்ளலாம். பாங்குகள் நிலையான முதலீட்டுக்குப் பண உதவியளிப்பதில்லை. ஆனால் முதலீடுசெய்யும் தொழிலதிபர்களுக்குத் தாற்காலிகப் பண உதவியைப் பெறலாம்."

(Report of the committee on the working of the Monetary System Para 136)

1929-ல் கடன் தொகையின் சதவீதம் 59 ஆக இருந்தது. ஆனால் அடுத்து வந்த மந்தகாலத்தில் கடன் தொகையின் மதிப்புக் குறைந்தது. 1933-ஆம் ஆண்டு இது 40 சதவீதத்தைவிடக் குறைந்தது. நீண்டகால வீதங்கள் 3 சதவீதத்தைவிடக் குறைந்த போதிலும், அதிகப்பற்று வீதம் 5 சதவீதமாகவே இருந்தது. மற்றக் குறுகிய கால வீதங்களும் குறைந்தன. இந்த நிலையில் குறுகிய காலக்கடனை வாங்குவதே மலிவாக இருந்தது. அதிகப் பற்று வீதம் உயர்ந்ததால் தொழிலதிபர்கள் பாங்குகளின் கடன் தொகையைத் திருப்பிக் கொடுத்தனர். அவர்கள் பரப்பு நிதியைப் பயன்படுத்தினர். பாங்குகள் அல்லாத மற்ற நிறுவனங்களிடம் கடன் வசதி பெற்றனர். மேலும் 'ஓல்டிங் கம்பெனிகள்' (holding companies) வளர்ச்சியடைந்ததால் சில நிறுவனங்களுக்குக் கடன் தேவையானால், தொழிலதிபர்கள் மற்ற நிறுவனங்கள் கொண்டிருந்த உபரிப் பணத்தைப் பயன்படுத்தினர். 1939-ல் போர் தொடங்கியபொழுது பாங்குகள் கொண்டிருந்த டெபாசிட்டுத் தொகையில் 40 சதவீதத்துக்குச் சமமான தொகையை கடனாக மக்களுக்குக் கொடுத்தன.

போர்க்காலத்தில் பாங்குகள் தொழிலகங்களுக்குக் கொடுத்த கடன் தொகையின் விகிதம் மேலும் குறைந்தது. பாங்குகள் அரசினருக்கே மிகுதியான தொகையைக் கடனாகக் கொடுத்தன. அரசாங்கத்துடன் ஒப்பந்தம் செய்துகொண்ட நிறுவனங்கள் 'முன்னேற்றத் தொகைகளைப்,' (Progress Payment) பெற்றமை யால் பாங்குகளின் உதவியை நாடவில்லை. 1945-ஆம் ஆண்டின் இலையுதிர் காலத்துக்குள் பாங்குகள் கொடுத்த கடன்தொகை அவைகளுடைய டெபாசிட்டில் 15 சதவீதமாகி விட்டது. அதாவது சாதாரணமாகப் பாங்குகள் எவ்வளவு தொகையைக் கடனாகக் கொடுக்கவேண்டும் என்று கருதுகின்றனவோ அதைவிடக் கடன் தொகை மிகவும் குறைந்துவிட்டது. போர்க்காலம் முழுவதும் இதேநிலை நீடித்தது. ஏனெனில் தொழிலதிபர்கள் பெருகும் தம் வருமானத்தை முதலீடு செய்யமுடியவில்லை. போர்க்காலத்தில் முதலீட்டுக்கு வேண்டிய தளவாடப் பொருள்கள் போதிய அளவில் கிடைக்கவில்லை. எனவே தொழிலதிபர்களுடைய நிலை ரொக்கத் தன்மையுடன் இருந்தது. அவர்கள் பாங்குகளுடைய உதவியை நாடவில்லை. மேலும் பாங்குகள் கொடுக்கும் கடன் அரசாங்கத்தின் பல்வேறு கட்டுப்பாடுகளுக்குட்பட்டிருந்தது. ஊக வாணிகத்திற்காகப் பாங்குகள் கடன் கொடுக்கக்கூடாது என்று அரசினர் ஆணையிட்டனர். பொருள்களை ஏற்றுமதி செய்வதாக ஒப்பந்தம் செய்துகொண்ட நிறுவனங்களுக்கே கடன் கொடுப்பதில் சலுகைகள் காட்டவேண்டுமென்று அரசினர் ஆணையிட்டனர். 1955-லும்,

1956-லும் கடன் கொடுப்பதைக் கட்டுப்பாடு செய்யவேண்டுமென்று அரசினர் பாங்குகளைக் கேட்டுக் கொண்டனர். பாங்குச் செலாவணியின் (Credit) ரகத்தையும் (quality), அளவையும் அரசாங்கம் கட்டுப்பாடு செய்தது; பாங்குகள் கொடுக்கும் கடனுக்கு உச்ச வரம்பையும் (ceiling) ஏற்படுத்தியது. 1958-லிருந்தே கடனைப் பெருக்கும் வாய்ப்புகளைப் பாங்குகள் நன்கு பயன்படுத்த முடிந்தது. 1958-க்குப் பிறகே பாங்குகள் தவணைக் கடன் முறை (hire purchase loans) போன்ற புதிய வகைக் கடன்களை மக்களுக்குக் கொடுக்க முன்வந்தன. இத்தகைய கடன்களை போர்க் காலத்திலும் அதற்குப் பின்பும் பாங்குகள் கொடுக்கமுடியாத நிலையில் இருந்தன. 1958-க்குப் பின் பாங்குகள் கொடுத்த கடன் தொகை பெருகிய போதிலும், 1959-ஆம் ஆண்டின் இறுதியில், அவைகள் விரும்பும் அளவு கடன் தொகையின் விகிதம் பெருகவில்லை. பாங்குகள் தம் ரொக்க நிலையைப் பாதுகாக்கவேண்டும் என்ற எண்ணத்துடன் சாதாரணமாகக் கடன் தொகையைக் கட்டுப்பாடு செய்யும். ஆனல் 30 ஆண்டுகளாக வேறு காரணங்கள் பாங்குச் செலாவணியைக் கட்டுப்பாடு செய்தன.

குறைந்த தொகைகளைக் கடனாக வாங்குவோருக்கே பாங்குகள் கொடுக்கும் கடன் மிகவும் முக்கியமாக இருக்கின்றது. பெரிய நிறுவன்ங்களுடைய கடனும் அவைகளுடைய சொத்துகளும் கொண்டுள்ள விகிதத் தொடர்புக்கும், சிறிய நிறுவனங்களுடைய சொத்துகள் அவைகளுடைய கடனுடன் கொண்டிருக்கும் விகிதத் தொடர்புக்கும் அதிக வேறுபாடில்லை. பங்கு மாற்று நிலையங்களில் விற்பனையாகும் பங்குகளைக் கொண்ட நிறுவனங்கள் தம் சொத்தில் 4 சதவீதத்திற்குச் சமமான தொகையையே பாங்குகளில் கடனாகப் பெற்றன. இதிலிருந்து பாங்குகள் தொழிலகங்களுக்கு மிகுதியான அளவில் கடனுதவியளிப்பதில்லை என்பது தெளிவாகின்றது. ஒரு நிறுவனம் பாங்கிடம் பெறும் கடன் தொகையைக் கொண்டு எவ்வளவு தூரம் தன் தொழிலைப் பெருக்கலாம் என்றோ, அல்லது தொல்லைகள் எழும்பொழுது நிலைமையைச் சமாளிக்க எவ்வாறு இக்கடன் உதவுகின்றது என்பதையோ நாம் ஊகிக்கமுடியாது.[1] பெரிய நிறுவனங்கள் பல்வேறு வழிகளில் நிதி திரட்டுகின்றன. ஆனல் சிறிய நிறுவனங்கள் பெரும்பாலும் பாங்குகளுடைய உதவியை மட்டுமே நாடுகின்றன.

1 1949 முதல் 1953 வரை அதிக பாங்குகளில் கடன் வாங்கிய நிறுவனங்களுள் $\frac{2}{3}$ பகுதி சிறிய நிறுவனங்களாகவும், $\frac{1}{4}$ பகுதி பெரிய நிறுவனங்களாகவும் இருக்கின்றன. பல பெரிய நிறுவனங்கள் பாங்குகளில் அதிகப் பற்றுக் கணக்கை வைத்துக் கொண்டிருக்கின்றன. ஆனல் சிறிய நிறுவனங்களே கணிசமான தொகைகளை அதிகப் பற்றுக் கடனாகப் பெற்றன. (பி. டியூ; ஆர். எப். ஹெண்டர்சன். B.Tew and R. F. Henderson.

பாங்குகள் பெரும்பாலும் பெரிய தொகைகளையே கடனாகக் கொடுக்கின்றன. 1958-ல் கொடுத்த கடன்களில் $\frac{1}{5}$ பகுதியை ஒரு மிலியன் பவுன்களாகவும் $\frac{1}{3}$ பகுதியை 10,000 பவுன்களாகவும் பாங்குகள் கொடுத்தன.

## பட்டியல் 25

**லண்டன் செக்குத் தீர்வகப் பாங்குகள் கொடுத்த கடன் தொகைகள்—1958**

| | கடன்கள் சதவீதம் | மதிப்பு சதவீதம் |
|---|---|---|
| 10,000 பவுனுக்குக் குறைவான தொகை | 98· 07 | 33·2 |
| 10,000-100,000 | 1· 75 | 22·9 |
| 100,000 ஒரு மிலியன் வரை | ·165 | 23·0 |
| ஒரு மிலியன் பவுனுக்கு மேற்பட்டதொகை | ·015 | 20·8 |
| | 100· 0 | 100·0 |

Source : Evidence given to Committee on the working of the Monetary System.

**பத்திர முதலீடுகள்**

தற்காலத்தில் பாங்குகள் பணத்தை அரசினர் பத்திரங்களிலேயே முதலீடு செய்கின்றன. அரசினர் பத்திரங்கள் கடனை விட ரொக்கத் தன்மையைக் கொண்டிருக்கின்றன. இப்பத்திரங்களைப் பாங்குகள் மார்க்கட்டில் விற்பனை செய்யலாம். ஆனால் மற்றச் சொத்துகளைவிட அவை குறைந்த ரொக்கத் தன்மையைக் கொண்டிருக்கின்றன. ஏனெனில் இப்பத்திரங்கள் நீண்டகாலப் பத்திரங்களாக இருப்பதால் பாங்குகள் இவைகளை விற்பனை செய்யும்பொழுது பணத்தை இழக்கலாம். 19-ஆம் நூற்றாண்டில், அதாவது கருவூல உண்டியல்கள் தோன்றுவதற்குமுன் அரசினர் பத்திரங்களே ரொக்கத் தன்மையுடைய சொத்துகள் என்று பாங்குகள் கருதின. செம்மையாக அமைந்த பெரிய மார்க்கட்டில் அப்பத்திரங்களைப் பாங்குகள் எப்பொழுது வேண்டுமானாலும் குறிப்பிட்ட விலைக்கு விற்பனை செய்யலாம். தள்ளுபடி செய்யக் கூடிய உண்டியல்கள் ரொக்கத் தன்மையுடைய சொத்துகளாகத் தோன்றிய போதிலும், உண்மையில் அவைகள் ரொக்கத் தன்மை

கொண்டனவாக இல்லை. இவ்வுண்டியல்களைப் பாங்குகள் தவணை முதிர்வுகாலம் (maturity) வரை வைத்துக்கொண்டிருக்கின்றன. ஏனெனில் இவைகளை விற்பனை செய்தால், விற்பனை செய்யும் பாங்குகள் செம்மையான நிலையில் இல்லை என்று மக்கள் கருதலாம். ஒரு பாங்கு வர்த்தக உண்டியல்களையும் (Commercial bills) நீண்டகால அரசினர் பத்திரங்களையும் வாங்கிய பிறகு, எஞ்சிய தொகையை நீண்டகாலப் பத்திரங்களை வாங்குவதற்குப் பயன்படுத்துவதா அல்லது குறுகிய காலப் பத்திரங்களை வாங்குவதற்குப் பயன்படுத்துவதா என்று முடிவு செய்யவேண்டிய நிலையில் இருக்காது. வர்த்தக உண்டியல்கள் ஏராளமாகக் கிடைப்பதில்லை. 5 ஆண்டுகளுக்குட்பட்ட தவணைக்கால அரசினர் உண்டியல்களும், கருவூல உண்டியல்களுமே பண மார்க்கட்டில் கிடைக்கின்றன. இத்தகைய குறுகிய காலப் பத்திரங்கள் ஏராளமாக மார்க்கட்டில் கிடைக்கின்றன. இப்பத்திரங்களை பாங்குகள் எளிதில் விற்பனை செய்யும். நீண்டகால அரசினர் பத்திரங்கள் இன்று கவர்ச்சிகரமாக இல்லை. அவைகளுடைய விலைகள் குறைந்தன. திருப்பிப் பணமாக மாற்றமுடியாத பத்திரங்களுடைய விலைகளே மிகவும் குறைந்தன. கான்சல் பத்திரங்களைப் பணமாக மாற்ற முடியாததால், பாங்குகள் அவைகளை ரொக்கத் தன்மையற்ற பத்திரங்கள் என்று கருதுகின்றன. பாங்குகள் வைத்துக்கொண்டிருக்கும் பத்திரங்களில் அரைப்பகுதி குறுகிய காலப் பத்திரங்களாகவே இருக்கின்றன. இப்பத்திரங்களுடைய விலைகள் அடிக்கடி மாறுமல் இருந்தபோதிலும், இவைகளை விற்பனை செய்வது கடினம். எல்லாப் பாங்குகளும் இவைகளைக் கணிசமான அளவில் வைத்துக் கொண்டிருக்கின்றன. 1957-ல் புழக்கத்தில் இருந்த குறுகிய காலப் பத்திரங்களுள் அரைப் பகுதியைப் பாங்குகளும் தள்ளுபடி நிலையங்களும் கொண்டிருந்தன[1].

பாங்குகள் கடன் கொடுத்தது போக எஞ்சிய தொகையைப் பத்திர முதலீட்டுக்குப் பயன்படுத்தின. டெபாசிட்டில் 50 சதவீதம் வரை மதிப்புள்ள தொகையை பாங்குகள் கடனாகக் கொடுக்க எப்பொழுதும் விரும்புகின்றன. 30 சதவீதத்திற்குச் சமமான தொகையை ரொக்கத் தன்மையுடைய சொத்துகளாக வைத்துக் கொள்கின்றன. எனவே பத்திர முதலீடு 20 சதவீதத்திற்குச் சமமாக இருக்கும் என்பது தெளிவாகின்றது[2]. சில சமயங்களில்

Report of the Committee onthe working of the Monetary System, p. 191. நீண்டகால அரசினர் பத்திரங்களுள் ஐந்தில் ஒருபகுதியைப் பாங்குகள் வைத்துக் கொண்டிருந்தன.

2 பாங்குகள் கொடுக்கும் கடன் தொகை, அவைகளுடைய பத்திர முதலீடு, மற்றச் சொத்துகள் முதலியவை அவைகளுடைய டெபாசிட்டுத் தொகைக்குச் சமமாக இருக்கும் என்று நாம் கருதமுடியாது. ஏனெனில் டெபாசிட்டைத் தவிர

பாங்குகள் பத்திரங்களை விற்பனைசெய்யலாம். பாங்குகளுடைய கடனைத் தனியார் துறையும் (Private sector), பத்திர முதலீட்டைப் பொதுத் துறையும் (Public sector) பெற்றுக் கொள்கின்றன. பாங்குகள் தம் விருப்பம்போல் பணத்தைப் பத்திர முதலீட்டுக்கும், கடன் கொடுப்பதற்கும் பயன்படுத்த முடியாது. அரசினர் விருப்பத்தை ஒட்டியே அவைகள் தம் முதலீட்டுக் கொள்கையை அமைத்துக் கொள்ளவேண்டும். 29-ஆம் அதிகாரத்தில் நாம் குறிப்பிட்ட முறைகளைப் பின்பற்றி அரசாங்கம் பாங்குகளைக் கட்டுப் படுத்தலாம்.

டெபாசிட்டுக்கும் பத்திர முதலீட்டுக்கும் உள்ள விகிதத் தொடர்பு அடிக்கடி மாறியது என்பதை வரலாறு கூறுகின்றது. 1925-க்கும் பின் பாங்குகள் கொடுத்த கடன் தொகை மிகுதியடைந்தது; பத்திர முதலீடு டெபாசிட்டுடன் கொண்டிருந்த விகிதம் குறைவாக இருந்தது. செக்குத் தீர்வகப் பாங்குகளின் பத்திர முதலீடு அவைகளுடைய டெபாசிட்டில் $\frac{1}{7}$ பகுதிக்குச் சமமாக இருந்தது. அடுத்து வந்த மந்தகாலத்தில் கடன் வாங்கியவர்கள் பணத்தைத் திருப்பிக் கொடுத்தமையால் பத்திர முதலீட்டின் விகிதம் இரட்டித்தது. போர்க்காலத்தில் இதே நிலைமை நீடித்தது. ஆனால் போருக்குப்பின் கடன் தொகை உயர்ந்தது. 1955 முதல் 1958 வரை அமலில் இருந்த பாங்குச் செலாவணிக் கட்டுப்பாடுகளை அரசினர் கைவிட்ட பிறகே பாங்குகள் கொடுத்த கடன் தொகை மிகுதியடைந்தது. சாதாரண காலத்தில் பாங்குகளுடைய சொத்துகளிடையே இருக்கும் விகிதத் தொடர்பு மீட்கப் பெற்றது.

### ரொக்கத் தன்மையுடைய சொத்துகள்

24-ஆம் பட்டியலில் குறிப்பிட்டுள்ள முதல் 5 இனங்களே செக்குத் தீர்வகப் பாங்குகள் சாதாரணமாகக் கொண்டுள்ள ரொக்கற் தன்மையுடைய சொத்துகளாக இருக்கின்றன. இச்சொத்துகள் டெபாசிட்டுத் தொகையில் ஒரு பகுதிக்குச் சமமாக இருக்கின்றன. இச் சொத்துகளின் மதிப்பு, பருவத்திற்குத் தகுந்தவாறு மாறும். பாங்குகள் மற்ற 4 சொத்துகளையும்விட, கருவூல உண்டியல்களையே மிகுதியான அளவில் கொண்டிருக்கின்றன. மார்ச்சு மாதம் அவைகள் கொண்டுள்ள கருவூல உண்டியல்களுடைய அளவு குறையும். ஏனெனில் அரசாங்கம் வாங்கும் கடன் தொகை ஆண்டுதோறும் மார்ச்சு மாதம் குறைகின்றது.

---

பாங்குகளுக்கு மற்றப் பொறுப்புகளும் (liabilities) இருக்கின்றன. பாங்குகளுடைய முதல், கட்டடம், வசூலாக வேண்டிய தொகை முதலியவற்றை நாம் இருப்பு நிலைக் குறிப்பில் (Balance Sheat) காணலாம்.

பருவகாலத்தில் (மார்ச்சு மாதம்) பாங்குகள் கொண்டிருக்கும் ரொக்கத் தன்மையுடைய சொத்துகள், டெபாசிட்டுத் தொகையில் 30 சதவீதத்திற்குக் குறையாமல் இருக்கும். மற்ற காலங்களில் பாங்குகள் 30 சதவீதத்திற்கு மேற்பட்ட அளவில் இச்சொத்துகளை வைத்துக் கொண்டிருக்கின்றன. பருவகாலத்தில் கூட சாதாரணமாகப் பாங்குகள் ரொக்கத் தன்மையுடைய சொத்துகளை 30 சதவீதத்திற்கும் மேலான அளவிலேயே கொண்டிருக்கின்றன. பாங்குகள் கொண்டிருக்கும் ரொக்கத் தன்மையுடைய சொத்துகளின் அளவைக் கட்டுப்பாடு செய்து, மையபாங்கு, மொத்தப் பணத்தின் அளிப்பை (supply) மாற்றலாம். பாங்குகளின் டெபாசிட்டுத் தொகை, ரொக்கத் தன்மையுடைய சொத்துகளைப்போல் 3⅓ மடங்குக்குச் சமமாக இருக்கும்.

பாங்குகள் பேழை ரொக்கத்தையும் (Till Money), மையப் பாங்கில் கொண்டிருக்கும் டெபாசிட்டுத் தொகையையும் மூலக் காப்பு நிதியாகக் (First line of reserve) கருதுகின்றன. பாங்குகள் அண்மைக் காலம்வரை மூலக்காப்பு நிதியையே முக்கியமானது என்று கருதின. ஆனால் இன்று மூலக்காப்பு நிதி அல்லது ரொக்கம், டெபாசிட்டுத் தொகையில் 8 சதவீதத்திற்குச் சமமாக இருக்கின்றது. இதன் அளவு பாதிக்கப்பட்டால் பாங்குகள் இதைப் பழைய நிலைக்குக் கொண்டுவர முயற்சி செய்யும். இம் முயற்சி ஒரு காலத்தில் பாங்குச் செலாவணிக் கட்டுப்பாட்டின் அடிப்படையாக இருந்தது. ஆனால் பாங்குகளின் மற்ற ரொக்கத் தன்மையுடைய சொத்துகள் மாறுவிடில் பணத்தின் அளிப்பும் மாறாது.

அழைப்புக் கடன் (Money at call and short notice) ரொக்கத்திற்கு அடுத்த இடத்தைப் பெற்றிருக்கின்றது. பாங்குகளிடம் அழைப்புக் கடனைப்பெறும் தள்ளுபடி நிலையங்கள், கருவூல உண்டியல்களையும், குறுகிய கால அரசினர் பத்திரங்களையும் வாங்குகின்றன[1]. தள்ளுபடி நிலையங்களைப் பற்றிய விவரங்களை நாம் ஆராய்ச்சி செய்யும்பொழுது அழைப்புக் கடன் எவ்வளவு முக்கியமானது என்பதை நாம் அறியலாம்.

பாங்குகள் ஏராளமான கருவூல உண்டியல்களையும், சில வர்த்தக உண்டியல்களையும் வைத்துக்கொண்டிருக்கின்றன. கருவூல உண்டியல்கள் 91 நாட்கள் தவணைக்கால அரசினர்

1 1958-ஆம் ஆண்டின் இறுதியில் லண்டன் நகரத்துச் செங்குத் தீர்வகப் பாங்குகள் 587 மிலியன் பவுனை அழைப்புக் கடனுகக் கொடுத்தன. இதில் 519 மிலியன் பவுனைத் தள்ளுபடி நிலையங்களே பெற்றன. (Report of the Committee on the working of the Monetary System pp. 45, 48)

உண்டியல்களாக இருக்கின்றன. 63 நாட்கள் தவணைக்கால உண்டியல்களையும் சில சமயம் அரசினர் வெளியிடுவதுண்டு. அரசாங்கக் கருவூல உண்டியல்களை மையபாங்கு வாராவாரம் ஏலம். போடுகின்றது. மிகவும் அதிகமான விலை கொடுக்கத் தயாராக இருப்பவர் இவ்வுண்டியல்களை வாங்குவார்கள். இவ்வுண்டியல்களை வாங்குவோர் இவைகளைத் தள்ளுபடி செய்கின்றனர். தள்ளுபடித் தொகையே இவைகளை வாங்குவோருடைய வருமானமாகும். செக்குத் தீர்வகப் பாங்குகள் கருவூல உண்டியல்களை நேரிடையாக வாங்காமல் தள்ளுபடி நிலையங்களிடமே வாங்குகின்றன. ஆனால் மக்களுக்காக இப்பாங்குகள் கருவூல உண்டியல்களை நேரிடையாக வாங்கலாம். பாங்குகள் உண்டியல்களை வாங்கும்பொழுது வாரந்தோறும் சில உண்டியல்கள் முதிர்வு பெறக்கூடியவையாக இருக்கும் உண்டியல்களை வாங்குகின்றன.

அவ்வப்போது அரசினர் தம் தேவைக்கு வேண்டிய தொகையை உண்டியல் வெளியீட்டின் மூலம் திரட்டிக் கொள்கின்றனர். நீண்டகாலப் பத்திரங்கள் மூலம் அரசாங்கம் வேண்டிய தொகையைத் திரட்ட முடியாவிடில் கருவூல உண்டியல் வெளியீட்டைப் பெருக்கும். பாங்குகளும், தள்ளுபடி நிலையங்களும் அதிகமான உண்டியல்களை வாங்கினால் பாங்குகளுடைய ரொக்க நிலை மிகுதியடையும். அவைகள் கருவூல உண்டியல்களை நேரிடையாக வாங்கும் அல்லது தள்ளுபடி நிலையங்களுக்கு அதிகமான தொகையை அழைப்புக் கடனாகக் கொடுக்கும். இதன் விளைவாகப் பணத்தின் அளிப்பு பெருகும்.

## மற்ற நிதிநிலையங்கள்

**வர்த்தக உண்டியல்கள் (Bills of Exchange)**

வாணிகப் பாங்குகள் வர்த்தக உண்டியல்களை வைத்துக் கொண்டிருக்கின்றன என்று நாம் முன்பு குறிப்பிட்டோம். ஏற்பகங்கள், தள்ளுபடி நிலையங்கள் முதலியவைகளுடைய தொழிலுடன் வர்த்தக உண்டியல்கள் தொடர்பு கொண்டிருக்கின்றன. ‘உண்டியலை ஒருவன் எழுதுகிறான். எழுதப் பெற்றவன் (drawee) உண்டியலைக் கொண்டிருப்பவனுக்கு, அதில் குறிப்பிட்ட தொகையை வேண்டும்பொழுதோ, அல்லது ஒரு காலத்திற்குப் பிறகோ கொடுக்கக் கடமைப்பட்டிருக்கின்றான். உண்டியலை வைத்துக்கொண்டிருப்பவன் ஆணைப்படி மற்றவர்களுக்கும் உண்டியல் தொகையைச் செலுத்தலாம்’. இதுவே உண்டியலின் சட்ட பூர்வமான விளக்கமாகும். உண்டியலை ஏற்கும் (accepting) ஒருவன் அதில் கையெழுத்திடுகிறான். உண்டியல் முதிர்வு பெற்ற

வுடன் அதை எழுதியவன் (drawer) உண்டியல் தொகையைக் கொடுப்பான் என்ற நம்பிக்கையுடன் ஏற்பவன் (acceptor) அதில் கையெழுத்திடுகிறான். ஏற்பவன் இத்தொகையுடன் ஒரு தொகையைத் தரகாகப் (Commission) பெறுகின்றான். ஏற்கப்பெற்ற உண்டியல்களை மார்க்கட்டில் விற்பனை செய்வது எளிதாகும். ஆகையால் ஏற்பகங்களுக்குத் (acceptance houses) தரகைக் கொடுக்கின்றனர். உண்டியல்கள் பெரும்பாலும் மூன்று மாதத் தவணை உண்டியல்களாகவே இருக்கின்றன. உண்டியலை எழுதுபவன் அதைத் தள்ளுபடி செய்து உடனடியாகப் பணத்தைப் பெறலாம். தரிசன உண்டியல்களை (sight bills) எப்பொழுது வேண்டுமானாலும் பணமாக மாற்றலாம். பன்னாட்டு வர்த்தகத்தின் காரணமாக உலகநாடுகள் செலுத்தவேண்டிய தொகைகளைச் செலுத்துவதற்கு இவ்வுண்டியல்கள் பயன்படுகின்றன.

உள்நாட்டு வர்த்தகத்திற்குச் சில உண்டியல்களைப் பயன்படுத்துகின்றனர். ஆனால் வர்த்தக உண்டியல்கள் பெரும்பாலும் வெளிநாட்டு வர்த்தக உண்டியல்களாகவே இருக்கின்றன. உதாரணமாக கம்பளியை இறக்குமதி செய்யும் ஒருவன் தான் செலுத்தவேண்டிய பணத்தை உண்டியல் மூலம் செலுத்தலாம். இவ்வுண்டியலை ஒரு பாங்கு அல்லது ஏற்பகம் ஏற்றுக்கொள்ளும். பொருளை ஏற்றுமதி செய்தவன் இவ்வுண்டியலையும் மற்ற ஆவணங்களையும் (documents) அவனுடைய பாங்கில் கொடுத்து ஏற்கப்பட்ட பிறகு, அதை லண்டன் தள்ளுபடி மார்க்கட்டில் தள்ளுபடி செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்வான். உண்டியல் தள்ளுபடியாவதற்கு ஏற்பகத்தின் நாணயமே காரணமாக இருக்கின்றது. ஏற்றுமதி செய்பவன் உடனடியாகப் பணத்தைப் பெறுவதற்கு உண்டியல் உதவியளிக்கின்றது. இறக்குமதி செய்பவனும் மற்றவர்களுடைய உதவியைக் கொண்டு தன் தொழிலை நடத்துவது எளிதாகின்றது. உண்டியல் முதிர்வடைவதற்குள் கம்பளியை இறக்குமதி செய்தவன் சரக்குகளை விற்பனை செய்திருப்பான். ஆகையால் உண்டியல் தொகையை அவன் திருப்பிக் கொடுக்கமுடியும்.

வர்த்தக உண்டியல்கள் 19ஆம் நூற்றாண்டில் அயல்நாட்டு வர்த்தகத்திற்குப் பேருதவி புரிந்தது. அயல்நாட்டினர் லண்டனில் குறுகிய காலக் கடனைப் பெறுவதற்கு இவ்வுண்டியல்கள் உதவி புரிந்தன. இன்றும் வர்த்தக உண்டியல்களுக்கும் அயல்நாட்டு வர்த்தகத்திற்கும் ஒரு தொடர்பு இருக்கின்றது. ஆனால் இன்று வேற்று நாட்டினர் லண்டன் தள்ளுபடி மார்க்கட்டின் மூலம் மட்டுமே குறுகிய காலக் கடன் தொகையைப் பெறுகின்றனர்

என்று நாம் சொல்லமுடியாது. வர்த்தக உண்டியல்களைவிட இன்று கருவூல உண்டியல்களே தள்ளுபடி மார்க்கட்டில் முக்கியமான இடத்தைப் பெற்றிருக்கின்றன, அதிகமாகவும் தள்ளுபடியாகின்றன.

**தள்ளுபடி நிலையங்கள்**

தள்ளுபடி நிலையங்கள் ஆங்கிலேயச் செலாவணி முறையின் சிறப்பான அம்சமாகும். 12 பெரிய தள்ளுபடி நிலையங்களும் பல்வேறு சிறிய நிலையங்களும் இருக்கின்றன. சிறிய நிறுவனங்கள் தள்ளுபடிமார்க்கட்டுச் சங்கத்தில் (Discount Market Association) அங்கம் வகிக்கவில்லை. இவை சில சிறப்பான தொழில்களையே செய்கின்றன. பெரிய நிறுவனங்கள் 1000 மிலியன் பவுன் மதிப்புள்ள சொத்துகளை வைத்துக்கொண்டிருக்கின்றன. இதில் $\frac{1}{10}$ பகுதியைச் சிறப்பீட்டுப் பத்திரங்களாகவும் (gilt edged securities) கருவூல உண்டியல்களாகவும் வைத்துக்கொண்டிருக்கின்றன. தள்ளுபடி நிலையங்கள் பாங்குகளிலேயே பெரும்பாலும் கடனைப் பெற்றுத் தொழில் நடத்துகின்றன. பாங்குகளுடைய ரொக்கம் (cash) அடிக்கடி மாறலாம். ஆகையால் அவை தம்மிடம் இருக்கும் உபரி ரொக்கத்தைத் தள்ளுபடி நிலையங்களுக்குக் கடனாகக் கொடுக்கின்றன.

இங்கிலாந்தின் தலைமைப் பாங்கு (Bank of England) 'இறுதியில் கடன் கொடுக்கும் நிலையமாகப்' (Lender of the last Resort) பணியாற்றுகின்றது. தள்ளுபடி நிலையங்களே இங்கிலாந்தின் தலைமைப் பாங்கு இப் பணியைச் செய்வதற்கு உதவியளிக்கின்றன. பாங்குகளுடைய ரொக்கம் குறைந்தாலும், மைய பாங்கு வீதம் உயர்ந்தாலும், பாங்குகள் அழைப்புக் கடனைத் திருப்பி வாங்கும். தள்ளுபடி நிலையங்கள் இந்த நிலையில் இங்கிலாந்தின் தலைமைப் பாங்கிடம் உண்டியல்களை அடைமானமாக வைத்துக் கடன் வாங்குகின்றன. மையப் பாங்கு தகுதியுடைய பத்திரங்களையே (Eligible papers) அடைமானமாக ஏற்றுக்கொள்ளும்.[1] வாணிகப் பாங்குகள் இங்கிலாந்தின் தலைமை பாங்கிடம் நேரிடையாகக் கடன் வசதியை பெறமுடியாது. ஆகையால் தள்ளுபடி நிலையங்கள் மைய பாங்குக்கும் வாணிக பாங்குகளுக்கும் இடையே ஒரு தொடர்பை ஏற்படுத்துகின்றன. ஒரு காலத்தில் மைய பாங்கு உண்டியல் மார்க்கட்டு (Bill Market) மூலமே பண மார்க்கட்

1 கருவூல உண்டியல்கள், 5 ஆண்டுகளுக்குள் முதிர்வுபெறும் ‹ சிறப்பீட்டுப் பத்திரங்கள், சில நிபந்தனைகளுக்குட்பட்ட முதல்தர வர்த்தக உண்டியல்கள் முதலியவைகளையே இங்கிலாந்தின் தலைமை பாங்கு தகுதியுடைய பத்திரங்களாகக் கருதுகின்றன.

டைக் கட்டுப்படுத்த விரும்பியது. அப்பொழுது மேலே விளக்கிய முறை பயனுள்ளதாக இருந்தது. ஆனால் இன்று வாணிக பாங்குகளும், மைய பாங்கும் ஒரு நெருங்கிய தொடர்பு கொள்ள வேண்டும். ஆகையால் இக் காலத்தில் வாணிக பாங்குகள் மைய பாங்குடன் மறைமுகத் தொடர்புகொள்வது சரியல்ல.

தள்ளுபடி மார்க்கட்டு உண்டியல் மார்க்கட்டின் முக்கியமான உறுப்பாக இருக்கின்றது. குறுகியகால வீதங்களில் ஏற்படும் மாறுதல்கள் முதன் முதலில் தள்ளுபடி வீதங்களையே பாதிக்கின்றன. இங்கிலாந்தின் தலைமை பாங்கு பத்திரங்களை விற்பனை செய்தால், வாணிக பாங்குகளுடைய ரொக்கம் குறையும். வாணிக பாங்குகள் தள்ளுபடி நிலையங்களுக்குக் கொடுத்த அழைப்புக் கடனைத் திருப்பி வாங்கும். தள்ளுபடி நிலையங்கள் தம் ரொக்க நிலையைப் பாதுகாக்கும் நோக்கத்துடன் மைய பாங்கின் உதவியை நாடும். மைய பாங்கு, பாங்கு வீதத்தை (Bank rate) தன் விருப்பப்படி உயர்த்தலாம். மைய பாங்கு வீதம் உயர்ந்தால் தள்ளுபடி நிலையங்களுடைய அடக்கச் செலவும் உயரும். ஏனெனில் வாணிக பாங்குகளிடம் பெற்ற கடனைத் திருப்பிக்கொடுப்பபற்காகத் தள்ளுபடி நிலையங்கள் மைய பாங்கிடம் உயர்ந்த வட்டியைக் கொடுத்துக் கடனுதவியைப் பெறுகின்றன. கருவூல உண்டியல் விற்பனையைப் பெருக்கினாலும் இதே விளைவு ஏற்படும். ஏனெனில் கருவூல உண்டியல் விற்பனை மிகுதியடையும்பொழுது வாணிக பாங்குகளுடைய ரொக்கம் குறையும். மையபாங்கு வீதம் உயர்ந்தால் வாணிக பாங்குகளும் தம் வட்டி வீதத்தை உயர்த்தும். அடக்கச் செலவு மிகுதியடைவதால் தள்ளுபடி நிலையங்கள் தள்ளுபடி வீதத்தை உயர்த்தும்.[1] மையப் பாங்குவீதம் உயராவிடினும், தள்ளுபடி நிலையங்கள் அது உயரும் என்று அஞ்சினால் தள்ளுபடி வீதத்தை உயர்த்தும். மூன்று மாதத் தவணை உண்டியல்களை அவை வாங்கிய பிறகு வட்டிவீதம் உயர்ந்தால் அவை ஏராளமான தொகையை இழக்க நேரிடும். இவ் விழப்பைத் தவிர்க்கும் நோக்கத்துடன் தள்ளுபடி வீதத்தை மைய பாங்கு வீதம் உயர்வதற்கு முன்பே, தள்ளுபடி நிலையங்கள் உயர்த்தும்.

சென்ற 20 ஆண்டுகளில் இங்கிலாந்தின் தலைமை பாங்குக்கும், தள்ளுபடி நிலையங்களுக்கும் இடையே நிலவும் உறவில் ஒரு பெரிய

1 தள்ளுபடி நிலையங்கள் குறைந்தபட்சம் 7 நாட்களுக்கு மைய பாங்கிடம் கடன் வாங்கவேண்டும். இக் கடனுக்கு அவை மைய பாங்கு வீதத்திலேயே வட்டி கொடுக்கின்றன. ஆனால் வாணிக பாங்குகள் இந்த வீதத்தைவிட 1 முதல் $1\frac{3}{4}$ சதவீதம் வரை குறைவான வீதத்தையே தாம் கொடுக்கும் கடனுக்கு வசூல் செய்கின்றன.

மாறுதல் ஏற்பட்டிருக்கின்றது. தள்ளுபடி நிலையங்கள் இங்கிலாந்தின் தலைமைப் பாங்குடன் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கின்றன. அதாவது தள்ளுபடி நிலையங்கள் கருவூல உண்டியல்களைக் கூட்டாக வாங்குகின்றன. இதற்கு வேண்டிய தொகையை மைய பாங்கு மார்க்கட்டுக்குக் கொடுக்கும். அதாவது இங்கிலாந்தின் தலைமை பாங்கு 'இறுதியில் கடன் கொடுக்கும் பணியை' முன்பு போல் இப்பொழுது அதிகமாகச் செய்வதில்லை.

ஆனால் மற்ற நாடுகளுடன் இங்கிலாந்தை ஒப்பிடும்பொழுது பண மார்க்கட்டு மைய பாங்கிலிருந்து வேண்டிய பணத்தை அவ்வப்போது இன்றும் நேரிடையாகப் பெற்றுக்கொள்ளவில்லை என்பதை நாம் மறக்கக்கூடாது. மற்ற நாடுகளில் வாணிகப் பாங்குகள், கருவூல உண்டியல்கள், வெண்ணிலைக் கடன் பத்திங்கள் (Promissory notes), மற்றத் தகுதியுடைய பத்திரங்கள் முதலியவற்றை அடைமானமாக வைத்து மைய பாங்கில் கடன் வசதியைப் பெறுகின்றன.

### ஏற்பகங்கள் (Accepting Houses)

ஏற்பகங்கள் உண்டியல்களை ஏற்றுக்கொள்ளும் பணியைச் செய்கின்றன. இவ் வேற்பகங்களை வர்த்தகப் பாங்குகள் என்றும் அழைப்பதுண்டு. ஏனெனில் இவை ஒரு காலத்தில் வர்த்தகத் தொழிலில் ஈடுபட்டிருந்தன. இவை முதன் முதலில் தம் உண்டியல்களை ஏற்றுக்கொண்டன. பிறகு நாளடைவில் மற்றவர்களுடைய உண்டியல்களையும் ஏற்றுக்கொண்டன. ஏற்பகங்களின் குழுவில் (Accepting Houses Committee) 18 அங்கத்தினர்கள் இருக்கின்றனர். மொத்த உண்டியல்களில் 20 முதல் 25 சதவீதம் வரை உண்டியல்களை ஏற்பகங்கள் ஏற்றுக்கொள்கின்றன. ஏற்பகத்தின் கையெழுத்தும், மற்றொரு ஆங்கிலேய நிலையத்தின் கையெழுத்தும் ஓர் உண்டியலில் இருந்தால் அது தகுதியுடைய பத்திரமாகும். அதாவது அதை இங்கிலாந்தின் தலைமை பாங்கு தள்ளுபடி செய்யத் தயாராக இருக்கும்.

ஏற்பகங்கள் உண்டியல்களை ஏற்றுக்கொள்வதோடல்லாமல் மற்ற பாங்குத் தொழிலையும் செய்கின்றன. ஏற்புத் தொழிலும் அவைகளுடைய மற்றப் பணிகளும் தொடர்பு கொண்டிருக்கின்றன. அயல்நாட்டுப் பாங்குகளும், நிறுவனங்களும், பொது மக்களில் சிலரும் ஏற்பகங்களில் டெபாசிட்டை வைத்துக்கொண்டிருக்கின்றனர். ஏற்பகங்களுடைய டெபாசிட்டுத்தொகை திடீரென்று குறையக்கூடியவையாக இருந்தது என்பதை 1957ஆம் ஆண்டின் அனுபவம் எடுத்துக்காட்டியது. ஆகையால் ஏற்பகங்கள்

ரொக்கத்தன்மையுடைய சொத்துகளை ஏராளமாக வைத்துக் கொள்ளவேண்டும். 1958ஆம் ஆண்டின் இறுதியில் அவைகள் தம் சொத்துகளில் அரைப் பகுதியை மற்றப் பாங்குகளில் டெபாசிட்டாகவும், பணமார்க்கட்டுக்குக் கொடுத்த கடனாகவும், உண்டியல்களாகவும் வைத்துக்கொண்டிருந்தன. ஸ்தலஸ்தாபனங்களுக்கும் அவைகள் கடன் கொடுத்தன.

ஏற்பகங்கள் வர்த்தகத் தொழிலையும், நாணயமாற்றுத் தொழிலையும் (Foreign Exchange Business) ஏற்புத் தொழிலையும் செய்வதோடல்லாமல் மக்களுக்கு முதலீடு பற்றிய விவரங்களையும் கொடுக்கின்றன. அவை வெளியீட்டகங்களாகவும் பணியாற்றுகின்றன. மற்ற வெளியீட்டகங்களும் நாட்டில் பணியாற்றுகின்றன.

**வெளியீட்டகங்கள் (Issuing Houses)**

வெளியீட்டகம் புதிய நிறுவனத்திற்குத் தானே நிதியளிப்பதில்லை. பாங்குகளையும் பத்திரங்களையும் வெளியிட்டு, அவைகள் மூலம் மக்களிடம் புதிய கம்பெனிகளுக்கு வேண்டிய நிதியை வெளியீட்டகம் திரட்டுகின்றது. புதிய நிறுவனங்களுடன் வெளியீட்டகம் வெளியீடு பற்றிய விவரங்கள் அனைத்தையும் பற்றிப் பேசி, அவற்றைப் புரிந்துகொள்கின்றது. வெளியீடு நேர்மையான நிபந்தனைகளுக்குட்பட்டிருக்கின்றதா என்பதை வெளியீட்டகம் நன்கு பரிசீலனை செய்த பிறகே வெளியீட்டுப் பணியை ஏற்றுக்கொள்கின்றது. ஏனெனில் புதிய வெளியீடு வெளியீட்டகத்தின் பெயரையும் நன்மதிப்பையும் நாட்டின் பொருளாதார நிலைமையையும் வெளியீட்டகம் நன்கு அறிந்துகொண்ட பிறகு மிகச் சிறந்த முறையில் நிதியைத் திரட்டும். வெளியீட்டுத் துறையில் தேர்ச்சி பெற்ற வல்லுநர்களுடைய உதவியைக் கொண்டு நிறுவனங்கள் சிறந்த முறையில் தமக்குவேண்டிய நிதியைத் திரட்டுகின்றன. மிகச் சிறந்த சூழ்நிலை நிலவும்பொழுது வெளியீட்டகம் பங்குகளையும் பத்திரங்களையும் வெளியிடுகின்றது.

வெளியீட்டுப் பணியை ஏற்றவுடன் வெளியீட்டகம் உறுதி கொடுக்கும் தொழிலையும் (Underwriting business) ஏற்கின்றது. இன்சூரன்சுக் கம்பெனி, முதலீட்டு டிரஸ்டு (Investment Trust) முதலிய முதலீட்டு நிறுவனங்களுடைய உதவியைக்கொண்டு வெளியீட்டகம் உறுதி கொடுக்கின்றது.[1] வெளியீட்டகம் புதிய

[1] உறுதி கொடுப்போன் (under writer) புதிய வெளியீட்டின் மூலம் வேண்டிய தொகையைத் திரட்டத் தவறினால், எஞ்சிய தொகையைத் தானே கொடுக்க வேண்டும்.

வெளியீட்டுக்கு வேண்டிய விளம்பரத்தைத் தயார்செய்கின்றது. பங்கு மாற்று நிலையத்துடன் வெளியீட்டுக்கு வேண்டியபடி பேரம் செய்கின்றது. வெளியீட்டின் அடக்கச் செலவைக் குறைக்க வேண்டுமென்று விரும்பினால் விளம்பரம் செய்யாமல் சில குறிப்பிட்ட நிறுவனங்கள் மூலம் வெளியீட்டகம் பத்திரங்களை விற்பனை செய்யலாம்.

இங்கிலாந்தில் எல்லாப் பத்திரங்களையும் வெளியீட்டகங்களே வெளியிடுகின்றன என்று நாம் கருதக்கூடாது. அரசினர் பத்திரங்களையும், நாட்டுடைமையாக்கப் பெற்ற தொழில்களின் பத்திரங்களையும் இங்கிலாந்தின் தலைமைப் பாங்கு வெளியிடுகின்றது. பொதுக் கம்பெனிகளும் (Public Companies) ஸ்தலஸ்தாபனங்களுமே வெயீட்டகங்களைப் பயன்படுத்திக்கொள்கின்றன. சில பொதுக் கம்பெனிகள் கூடத் தரகர் (Broker) மூலம் தம் பங்குகளை விற்பனை செய்யலாம். பொதுக் கம்பெனிகள், போருக்குப்பின் சுமார் 40 சதவீதம் பணத்தைத் தரகர் மூலம் திரட்டின.

**இன்சூரன்சுக் கம்பெனிகளும், ஓய்வூதிய நிதியும் (Pension Funds)**

இன்சூரன்சுக் கம்பெனிகளும், ஓய்வூதிய நிதிகளும் கொண்டிருக்கும் சொத்துகளுடைய மதிப்பு ஆண்டுதோறும் 650 மிலியன் பவுனுக்கு மேல் மிகுதியடைகின்றது. இதிலிருந்து இவ்விரண்டு நிதி நிலையங்களுடைய முக்கியத்துவத்தையும் நாம் அறியலாம். இதிலிருந்து இன்சூரன்சுப் பத்திரங்களைக் கொண்டிருப்பவர்களுடைய சேமிப்பும், கூட்டுத்திட்டம் (Group Scheme) பரவியதால் நிறுவனங்களில் பணியாற்றுவோருடைய ஓய்வூதிய நிதியும் எவ்வாறு பெருகின என்பதை நாம் அறியலாம். ஓய்வூதிய நிதி பெருகுவதற்கு மற்றொரு காரணம் இருக்கின்றது. சமுதாயத்தில் இளையோரைவிட முதியோரே அதிகம் இருப்பதால் ஓய்வூதிய நிதியிலிருந்து மக்கள் பணத்தை எடுத்துப் பயன்படுத்துவதைவிட அதில் மிகுதியான தொகையைச் செலுத்தினர். இன்சூரன்சுக் கம்பெனிகளுடைய வருமானம் மிகுதியடைந்தது. ஆனால் பண வீக்கத்தின் காரணமாக இன்சூரன்சுப் பத்திரங்களின் மதிப்புக் குறைந்துவிட்டது. ஆகையால் மக்கள் தம் சேமிப்புத் தொகையை இன்சூரன்சுப் பத்திரத்தில் முதலீடு செய்வதைவிட வேறுவழிகளில் முதலீடு செய்யலாம்.

ஆயுள் இன்சூரன்சுக் கம்பெனிகள் (Life Insurancc Companies) தம் பணத்தை நீண்டகால முதலீட்டுக்கே பயன்படுத்துகின்றன. போர் முடிந்த பிறகு இக் கம்பெனிகள் தம் சொத்தில் ஒரு பெரும்

பகுதியைச் சிறப்பீட்டுப் பத்திரங்களை வாங்குவதற்குப் பயன் படுத்தின. ஏனெனில் அரசாங்கம் இக் கம்பெனிகளைப் பத்திர முதலீடு செய்யும்படி கேட்டுக்கொண்டது. போர் முடிந்த காலத்தில் ஒரே நிலையான வட்டிவீதத்தைக் கொடுக்கக்கூடியப் பத்திரங்கள் கவர்ச்சிகரமாக இல்லை. ஆனால் பங்குகள் (Shares) கவர்ச்சிகர மாக இருந்தன. இன்சூரன்சுக் கம்பெனிகளுடைய சொத்து களின் நிலைமை பாதிக்கப்பட்டதும் இதற்குக் காரணமாக இருந்தது. இன்சூரன்சுக் கம்பெனிகள் பெற்ற நடைமுறை வருமானத்தில் ஒரு பெரும் பகுதியைக் கொண்டு அவைகள் பத்திரங்களை வாங்கின. ஓய்வூதிய நிதியையும் இதேமாதிரி முதலீடு செய்தனர். 1957-ல் இந்த நிதியில் 37 சதவீதத்தைப் பங்குகள் வாங்குவதற்குப் பயன்படுத்தினர்[1]. 1957ஆம் ஆண்டின் இறுதியில் நிதியின் முதலீட்டில் 21 சதவீதம் பங்குகளாகவும் 40 சதவீதம் இங்கிலாந்து அரசாங்கத்தின் பத்திரங்களாகவும், அரசாங்கத்தின் உறுதிபெற்ற நிலையங்களுடைய பத்திரங்களாகவும் இருந்தன.

இன்சூரன்சுக் கம்பெனிகளுடைய பணமும், ஓய்வூதிய நிதி யும், ஸ்தலஸ்தாபனங்களுக்கு நீண்டகாலக் கடன் கொடுக்கப் பயன்படுகின்றன. 20 ஆண்டுகள் அல்லது அதைவிட நீண்ட காலத் தவணைக் கடன்களை ஸ்தலஸ்தாபனங்கள் வாங்கிக்கொள் கின்றன. அவைகளுடைய பணத்தில் ஒரு பகுதி டிபஞ்சர் பத்திரங்களில் முதலீடு செய்யப்படுகின்றன. எஞ்சிய தொகை யைக் கம்பெனிகள் முன்னுரிமைப் பங்குகளை வாங்குவதற்கும் (Preference Shares) நிலம் வீடு போன்ற சொத்துகளை வாங்குவதற் கும்; பொருள்களை ஒற்றியாக (Mortgage) வாங்குவதற்கும் பயன் படுத்துகின்றன. மற்றக் காமன்வெல்த் நாடுகளுடைய அரசினர் பத்திரங்களையும் அவை வாங்குகின்றன.

இன்சூரன்சுக் கம்பெனிகள் தொழில் நிறுவனங்களுடைய பத்திரங்களை வாங்குகின்றன என்று நாம் குறிப்பிட்டோம். இந்த நிறுவனங்களை இன்சூரன்சுக் கம்பெனிகள் நிருவாகம் செய்ய விரும்புவதில்லை. வருமானத்தை ஈட்டுவதற்காகவே அவை பத்திர முதலீடு செய்கின்றன. ஆகையால் ஒரே நிறுவனத்தின் பங்குகளை அவை மிகுதியாக வாங்குவதில்லை.

இன்சூரன்சுக் கம்பெனிகள் வெளியீட்டு மார்க்கட்டில் ஒரு முக்கியமான இடத்தைப் பெற்றிருக்கின்றன. ஏனெனில் அவை

1 பங்குகளின் விலைகள் உயர்ந்ததையும் கணக்கிட்டே இங்குக் குறிப்பிட்டிருக் கும் சதவீதத் தொகைக் கணக்கிடப்பட்டிருக்கின்றது.

மிகுதியான அளவில் பத்திரங்களை வாங்குகின்றன. அவை உறுதி கொடுக்கும் தொழிலில் அரைப் பகுதியைச் செய்கின்றன. உறுதி கொடுக்கும் தொழிலைச் செய்வதாலும், பத்திர முதலீட்டைச் செய்வதாலும் அவை பங்கு மாற்று நிலையத்தில் முக்கியமான இடத்தைப் பெற்றிருக்கின்றன. அவை தொழில்களுக்கு நிதி திரட்ட உதவுகின்றன.

**முதலீட்டு டிரஸ்டு (Investment Trust)**

முதலீட்டு டிரஸ்டு, பங்குதார்களுடைய பணத்தையும், டிபஞ்சர்பத்திரங்களை வாங்கியவர்களுடைய பணத்தையும் பல்வேறு துறைகளில் முதலீடு செய்து பங்குதார்களுக்கு மிகுதியான இலாபத்தைத் தேடிக் கொடுக்கின்றது. ஒரு முதலீட்டு டிரஸ்டுக் கம்பெனி த்ன் விருப்பம்போல் பல்வேறு சொத்துகளை வாங்கலாம். பழைய நிருவகிக்கப்பட்ட டிரஸ்டுகள் (Managed Trust) இவ்வாறு செய்தன. அல்லது டிரஸ்டுப் பத்திரத்தில் (Trust deed) குறிப்பிட்ட சொத்துகளையே வாங்கலாம். 'யூனிட் டிரஸ்டுகள்' (Unit trusts) இவ்வாறு செய்கின்றன. யூனிட் டிரஸ்டின் முதலாளிகள் பங்குகளுக்குப் பதிலாக சான்றிதழ்களை (certificates) வாங்கிக்கொள்கின்றனர். டிரஸ்டுக் கம்பெனி கொண்டிருக்கும் பத்திரங்களுடைய மதிப்புக்குத் தகுந்தவாறு சான்றிதழ்களின் மதிப்பும் மாறும். உபரி முதல் தேவைப்பட்டால் கம்பெனி விளம்பரம் செய்யாமல் புதிய சான்றிதழ்களை வெளியிடலாம்[1].

1957-ல் இங்கிலாந்தில் நிருவகிக்கப்பட்ட டிரஸ்டுக் கம்பெனிகளுடைய சொத்தின் மதிப்பு 1,150 மிலியன் பவுனாக இருந்தது. அக் காலத்தில் யூனிட் டிரஸ்டுக் கம்பெனிகளுடைய தொழில் பெருகவில்லை. ஆனால் 1960க்குள் அவைகளுடைய முதலீடு பெருகியது. அவைகளுடைய சொத்துகளின் மதிப்பு 200 மிலியன் பவுன்களுக்கு மேல் உயர்ந்துவிட்டது. ஆனால் 1930க்குப்பின் இருந்த அவைகளுடைய செழிப்பான நிலைமை மீட்கப்படவில்லை. அவைகள் செய்த வேலையை அமெரிக்காவில் 'பரஸ்பர நிதிகள்' (Mutual Funds) செய்தன. அமெரிக்காவில் இந்த நிதிகளுடைய தொழில் பெருகியதைப் போல் இக்கிலாந்தில் யூனிட் டிரஸ்டுகளுடைய தொழில் வளரவில்லை. 1959-ல் பரஸ்பர நிதிகள் 5000 மதிப்புள்ள சொத்துகளை வைத்துக்கொண்டிருந்தன.

தொடக்க காலத்தில் இங்கிலாந்தில் முதலீட்டு டிரஸ்டுகள் விரைவில் வளர்ந்தமைக்கு நிருவாகிகளுடைய திறமையே காரண

[1] இதனால் 'யூனிட் டிரஸ்டுக் கம்பெனிகளைப் புறமுடிவு டிரஸ்டுகள் (Open-end Trusts) என்று அழைக்கின்றனர்.

மாகும். அயல்நாடுகளில் அவை செய்த முதலீடே இதற்குச் சான்றாகும். தனிப்பட்டவர்களைவிட இந்த நிறுவனங்களே அயல் நாட்டு விவரங்களை நன்கு அறிந்திருந்தன. பிற்காலத்தில் அவைகளுடைய வளர்ச்சிக்குப் பணவீக்கமே காரணமாக இருந்தது. அவை தம் சொத்துகளைப் பெரும்பாலும் பங்குகளாகவே கொண்டிருக்கின்றன. பல்வேறு நிறுவனங்களுடைய பங்குகளைக் கொண்டிருப்பதால் அவை பணவீக்கத்தின் விளைவுகளைச் சமாளிக்கின்றன. யூனிட் டிரஸ்டுகளுடைய சான்றிதழ்களை மக்கள் ஏராளமாக வாங்குகின்றனர்.

இன்சூரன்சுக் கம்பெனிகளைப் போல் முதலீட்டு டிரஸ்டுகளும் உறுதிகொடுக்கும் தொழிலை மேற்கொள்கின்றன; இவை நிறுவனங்களை நிருவாகம் செய்ய விரும்புவதில்லை. ஆனால் சில டிரஸ்டுகள் மற்ற நிதிநிலையங்களோடும், சிறிய தொழில் நிறுவனங்களோடும் நெருங்கிய தொடர்புகொண்டிருக்கின்றன. பங்கு மாற்று நிலையங்களுடைய உதவியைக் கொண்டு சிறிய நிறுவனங்களுடைய முதலைப் பெருக்குவதே டிரஸ்டுகளின் நோக்கமாகும். சில டிரஸ்டுகள் பங்கு மாற்று நிலையங்களில் விற்பனையாகாத பங்குகளையும் வாங்குகின்றன. ஆனால் சிறு நிறுவனங்களுடைய பங்குகளை டிரஸ்டுகள் குறைந்த அளவிலேயே வாங்குகின்றன. பெரிய தொழிலகங்களுடைய பத்திரங்களையே அதிகமாக வாங்குகின்றன.

### கட்டடச் சங்கங்கள்

மக்கள் சேமிக்கும் சிறிய தொகைகளைத் திரட்டுவதற்கு இச் சங்கங்கள் போட்டிபோடுகின்றன. வீடு வாங்குவதற்கு வேண்டிய நிதியளிக்க இச் சங்கங்கள் நிதியளிக்கின்றன. 1958-ல் சுமார் 4 மிலியன் பேர்கள் 2500 மிலியன் பவுன்களை இச் சங்கங்களில் முதலீடு செய்திருந்தனர். இவர்கள் இத் தொகையை டெபாசிட்டாக வைத்துக்கொள்ளாமல் பங்குகளாகவே கொண்டிருந்தனர். மக்கள் கட்டடச் சங்கங்களில் கொண்டிருக்கும் டெபாசிட்டுக்கும் பங்குக்கும் அதிக வேறுபாடு இல்லை. மக்கள் டெபாசிட்டுத் தொகையை மீட்க ஒரு மாதத்திற்கு (அல்லது அதற்கு மேற்பட்ட காலத்திற்கு) முன்பு சங்கத்திற்குத் தம் விருப்பத்தைத் தெரிவிக்க வேண்டும். மக்கள் வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுப்பார்கள். இத் தொகையைக் கொண்டு சங்கங்கள் மக்களுக்கு முதல் ஒற்றியாகக் (First Mortgage) கடன் கொடுக்கின்றன. சுமார் 2 மிலியன் பேர்கள் சங்கங்களில் ஒற்றிக் கடனை வாங்கினார்கள். அவர்கள் கடன் தொகையை நீண்ட காலத்தில் பல தவணைகளில் திருப்பிக் கொடுக்கின்றார்கள். ஒற்றிக் கடன்களை மக்கள் பெரும்பாலும் 20 ஆண்டுகளுக்கு அல்லது அதைவிட

நீண்ட காலத்திற்குக் கடனாக வாங்குகின்றனர். மக்கள் வாங்கிய கடனை விரைவில் திருப்பிக் கொடுப்பதால் சங்கங்கள் கொடுத்த கடன் தொகை மிகக் குறைவாக இருக்கின்றது; கடன் தவணைக் காலமும் 20 ஆண்டுகளுக்கும் குறைவாகவே இருக்கின்றது. சொந்த வீடுகளைக் கொண்டிருப்பவர்களே பெரும்பாலும் சங்கங்களில் கடன் வாங்குகின்றனர். வீட்டின் அடக்கச் செலவில் $\frac{2}{3}$ பகுதியை இவர்கள் கடனாக வாங்கிக் கொள்கின்றனர். சில சங்கங்கள் வீடுகளைக் கட்டுவோருக்கும், கட்டிய வீடுகளைக் கொண்டிருப்பவருக்கும் கடன் வசதியளிக்கின்றன. சில சங்கங்கள் வர்த்தகச் சொத்துகளைப் பெருக்குவதற்குக் கடன் கொடுக்கின்றன. ஆனால் இந்தத் தொழில் எப்பொழுதுமே வெற்றிகரமாக இருப்பதில்லை.

டெபாசிட்டர்களுக்கும் பங்குதாரர்களுக்கும் சங்கங்கள் கொடுக்கும் வீதத்தை மார்க்கட்டில் நிலவும் போட்டியே நிர்ணயம் செய்கின்றன. டிரஸ்டி சேவிங்ஸ் பாங்கு (Trustee Savings Bank), தவணைக் கடன் முறையில் கடன் வசதியளிக்கும் நிறுவனங்கள் முதலியவை அதிகமான வட்டி வீதத்தைக் கொடுத்து மக்களிடமிருந்து டெபாசிட்டுத் தொகையை ஈர்த்தால், கட்டடச் சங்கங்களும் உயர்ந்த வட்டி வீதங்களைக் கொடுக்கும். சங்கங்கள் மிகவும் அதிகமான தொகையை மக்களிடமிருந்து டெபாசிட்டாகப் பெற்றால் ஒவ்வொரு நபரிடமிருந்தும் பெறும் தொகையைக் கட்டுப்படுத்தலாம். அவை கொடுக்கும் வட்டிவீதமும் வசூல் செய்யும் வட்டிவீதமும் ஒரேமாதிரி மாறும். அவை ஒற்றி காலம் முழுவதும் ஒரே வீதத்தை வசூல் செய்வதில்லை. வட்டிவீதம் அவ்வப்போது மார்க்கட்டு நிலைக்குத் தகுந்தவாறு மாறும். சங்கங்களுடைய பொறுப்புகள் ரொக்கத்தன்மை யுடைவையாகவும் சொத்துகள் ரொக்கத்தன்மையற்றவையாகவும் இருக்கின்றன. ஆகையால் சங்கங்கள் மிகவும் வலிமையற்ற நிலையில் இருக்கின்றன என்று நாம் கருதலாம். ஆனால் உண்மையில் அவை வலிமை பெற்றிருக்கின்றன. ஆனால் நடைமுறையில் அவை வட்டிவீதங்களை அடிக்கடி மாற்றுவதை விரும்பவில்லை. அவை கொண்டிருக்கும் பணம் குறைந்தால், அவை கொடுக்கும் கடனையும் குறைக்கின்றன. கடன் வாங்குதலைப் பல புதிய நிபந்தனைகளுக்குட்படுத்துகின்றன.

### தவணைக் கடன் முறையில் நிதியுதவியளிக்கும் நிறுவனங்கள் (Hire – Purchase Finance Houses)

இங்கிலாந்தில் தவணைக் கடன் முறையில் நிதியுதவி பெற்று மக்கள் நிலையான சொத்துகளை வாங்குகின்றனர். 1960-ல் மக்கள்

சுமார் 900 மிலியன் பவுனை இந்த முறையில் வாங்கினார்கள். இத் தொகையில் அரைப்பகுதியை மோட்டார் வண்டிகளையும், தொழிலுக்குத் தேவையான வண்டிகளையும் வாங்குவதற்கும், கால் பகுதியை வீட்டுக்கு வேண்டிய நாற்காலி போன்ற பொருள்களை வாங்குவதற்கும், எஞ்சிய தொகையில் பெரும்பகுதியை ரேடியோ, டெலிவிஷன், சலவை எந்திரம் போன்ற மின்சாரக் கருவிகளை வாங்குவதற்கும் மக்கள் பெற்றனர். இங்கிலாந்தில் தொழிலுக்கு வேண்டிய நிதியைத் தவணைக் கடன் முறையில் மக்கள் அதிகம் பெறுவதில்லை. தொழிலுக்கு வேண்டிய தளவாடப் பொருள்களை (மோட்டார் வண்டிகள் உள்பட) வாங்குவதற்காக மக்கள் 100 முதல் 150 மிலியன் பவுன்வரை கடனைப் பெற்றனர். மோட்டார் வண்டிகள், எந்திரங்கள் முதலிய பொருள்களை மக்கள் பெரும் பாலும் தவணைக் கடன் முறையிலேயே வாங்கினார்கள். சிறிய நிறுவனங்கள் இந்த முறையில் கடன் வசதிபெற்றன.

சில்லறையில் பொருள்களை விற்பனை செய்வோர் தவணைக் கடன் முறையில் பொருள்களை விற்பனை செய்கின்றனர். ஆனால் சில நிறுவனங்கள் தவணைக் கடன் முறையில் நிதியுதவியளிக்கும் தொழிலை மேற்கொண்டிருக்கின்றன. இத்தகைய சிறிய நிறுவனங்கள் பல இங்கிலாந்தில் இருக்கின்றன. பெரிய நிறுவனங்கள் நிதியகங்களின் சங்கத்தில் (Finance Houses Association) அங்கம் வகிக்கின்றன. இவை பெரும்பாலும் செக்குத் தீர்வகப் பாங்குகளுடன் தொடர்புகொண்டிருக்கின்றன. பெரிய நிறுவனங்கள் பாங்குகளிடமும் தொழிலதிபர்களிடமும் டெபாசிட்டுத் தொகையைப் பெறுகின்றன. அவை தம் சொந்த நிதியையும் பயன்படுத்துகின்றன. தம் தொழிலுக்கு வேண்டிய நிதியைப் பெரும்பாலும் பாங்குகளிடமே வாங்கிக் கொள்கின்றன. 1940-க்குப் பின் அவை பாங்குகளிடம் மிகுதியான தொகையை வாங்க முடியவில்லை. இதைப்போன்ற காலங்களில் அவை உயர்ந்த வட்டியைக் கொடுத்து மக்களிடம் மிகுதியான தொகையை டெபாசிட்டாகப் பெறலாம். பாங்குச் செலாவணியை அரசினர் கட்டுப்படுத்திய காலத்தில் சில நிறுவனங்கள் தவணைக் கடன் முறையில் மக்களுக்குத் தாராளமாகக் கடன் கொடுக்கலாம். டெபாசிட்டைப் பெருக்குவதில் இந்த நிறுவனங்கள் பாங்குகளுடன் போட்டியிடுகின்றன. இந்த நிறுவனங்களுடைய தொழிலைக் கட்டுப்படுத்தாமல், பாங்குத் தொழிலை மட்டும் கட்டுப்படுத்துவது நேர்மையல்ல என்று அரசாங்கம் கருதியது. ஆனால் நாம் இங்கு தவணைக் கடனைக் கட்டுப்படுத்துவதைவிட அதற்கு ஏற்படும் தேவையைக் கட்டுப்படுத்துவதே சிறந்ததாகும் என்று குறிப்பிடலாம். சில குறிப்பிட்ட நோக்கங்களுடன் வாங்கும் கடன் தொகையையும், தவணைக்

காலத்தையும், தவணைகளில் செலுத்தவேண்டிய கட்டணங்களை யும் எளிதில் கட்டுப்பாடு செய்யலாம்.

## இங்கிலாந்தின் தலைமை பாங்கு

இங்கிலாந்தின் நிதி நிலையங்களுக்குள் மிகவும் முக்கியமான தாகிய இங்கிலாந்தின் தலைமை பாங்கைப் பற்றிய விவரங்களை இங்குக் காண்போம். இங்கு எல்லா விவரங்களையும் சுருக்கமாகவே நாம் பார்க்க முடியும். ஆனால் 29ஆம் அதிகாரத்திலும், அதற்கு முந்திய அதிகாரத்திலும் நாம் சில விவரங்களைக் கொடுத்திருக் கின்றோம்.

இங்கிலாந்தின் தலைமை பாங்கு நாட்டின் மைய பாங்காகத் தொண்டாற்றுகின்றது. நாட்டின் செலாவணிக் கொள்கையைச் (Monetary Policy) செயல்படுத்துவதே இதன் முக்கியமான பொறுப்பாகும். மற்ற மைய பாங்குகளைப்போலவே இதுவும் அர சினர் வசம் இருக்கின்றது. இது அரசாங்கத்தின் பாங்காகவும் பணியாற்றுகின்றது. நாட்டுடைமையாக்கப்படுவதற்கு முன்பே அது மைய பாங்காகப் பணியாற்றியது. அரசாங்க இலாகாக் களுடன், குறிப்பாகக் கருவூலத்துடன் அது நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தது. அதன் கொள்கைக்கு அரசாங்கமே பொறுப் பாளியாகும். கொள்கையை உருவாக்குவதில் பாங்கு அரசின ருக்கு இப்பாங்கு வழிகாட்டவேண்டும். மைய பாங்கு தன் பணி களைச் செய்யும்பொழுது மற்ற நிதிநிலையங்களுடனும், அயல் நாட்டு நிதிநிலையங்களுடனும் நெருங்கிய தொடர்பு கொள் கின்றது.

இங்கிலாந்தின் தலைமை மைய பாங்கு அரசினர் சார்பில் சில பணிகளைச் செய்கின்றது. இது செலாவணித் தாள்களை வெளியிடு கின்றது, அரசாங்கத்தின் கடனை நிருவாகம் செய்கின்றது, அர சாங்கத்தின் பணத்தைப் பல்வேறு கணக்குகளில் வைத்துக் கொள்கின்றது. அன்றாடம் எழும் நிதிப் பிரச்சினைகளையும், மற்றப் பிரச்சினைகளையும் தீர்ப்பதற்கு, இப்பாங்கு அரசியலாருக்கு ஆலோசனை கூறுகின்றது.

அரசாங்கம் வெளிநாடுகளுடன் கொண்டுள்ள தொடர்பும் இதன் கண்காணிப்புக்குட்பட்டிருக்கின்றது. அது பரிவர்த்தனைச் சமன் காப்பு நிதியை (Exchange Equalisation Fund) நிருவாகம் செய்கின்றது. பன்னாட்டு நாணய நிதி (International Monetary Fund) ஏற்றுக்கொண்ட எல்லைகளுக்குள் நாணய மாற்று வீதத்தை (Exchange rate)நிலைநாட்டுவது அதன் பொறுப்பாகும். நாணய

மாற்றுக் கட்டுப்பாட்டுக் கொள்கையை (Exchange Control Policy) கருவூல இலாகாவுடன் உருவாக்கி அதைச் செயற்படுத்து கின்றது. அது உடனடி பேரத்தையும் (Spot transactions), முன்னோக்கிய பேரத்தையும் (Forward transactions) செய்து நாணய மாற்று வீதத்தை மாற்றலாம். அது மற்ற நாடுகளுடைய மைய பாங்குகளுடனும், பன்னாட்டு நாணயநிதி, உலகப் பாங்கு முதலியவைகளுடனும் தொடர்பு கொண்டிருக்கின்றது. அது ஸ்டெர்லிங் பகுதியின் (Sterling area) நிதியை நிருவாகம் செய்கின்றது; சில சமயங்களில் நிலைமைக் கேற்றவாறு பொன்னை வாங்குகிறது.

அரசாங்கத்துடன் தொடர்பு கொண்டிருப்பதால் இங்கிலாந் தின் மைய பாங்கு மற்ற நிதி நிலையங்களைத் தன் ஆதிக்கத்துக்குட் படுத்தி விட்டது. செக்குத் தீர்வகப் பாங்குகள் பேழை ரொக்கத் தைத் தவிர, மற்றக் காப்புநிதியை மைய பாங்கில் டெபாசிட்டாக வைத்துக்கொண்டிருக்கின்றன. மக்கள் வாணிக பாங்குகளிடம் பெறும் வசதியை வாணிக பாங்குகள் மைய பாங்கிடம் பெறும். அது செக்குத் தீர்வகப் பாங்குகளுடன் செலாவணிக் கொள்கை யைப் பரிசீலனை செய்கின்றது; அப் பாங்குகளுக்கும் கருவூலத்திற் கும் ஒரு தொடர்பை ஏற்படுத்துகிறது. அது தள்ளுபடி நிலையங் களுக்குக் கடன் வசதியளிக்கின்றது. தள்ளுபடி நிலையங்கள் மைய பாங்கில் ஒரு குறிப்பிட்ட தொகையை டெபாசிட்டாக வைத்துக் கொள்ளவேண்டும். தள்ளுபடி நிலையங்கள் தகுதியுடைய பத்திரங் களைக் கொண்டு துணையீட்டுக் கடனை (Collateral loans) மைய பாங்கிடம் வாங்காமல் தம் தொழிலை நடத்தமுடியாது. இத்தகைய தள்ளுபடி நிலையங்களுக்கு மைய பாங்கு உதவியளிக்கின்றது. மைய பாங்கு ஏற்பகங்களுடன் நெருங்கிய தொடர்பு கொண் டிருக்கின்றது; அவை ரொக்க நிலையில் இருக்கின்றனவா என்பதை யும் கவனித்துக் கொள்கின்றது.

ஒரு வாணிக பாங்கு அதன் பணிகளைப் பயன்படுத்தும் மக்களுடன் கொண்டுள்ள தொடர்பை மட்டும் மைய பாங்கு மற்ற நிதி நிலையங்களுடன் கொள்ளவில்லை; அரசாங்கத்தின் கொள் கையை வகுப்பதில் மட்டும் மற்ற நிதி நிலையங்களுடைய உதவியை நாடுவதில்லை. சிறப்பீட்டுப் பத்திர மார்க்கட்டிலும் உண்டியல் மார்க்கட்டிலும், பாங்குகள் பத்திரங்களை வாங்கு வதால் அவை மைய பாங்குடன் கொண்டுள்ள தொடர்பு ஒரு முக்கியத்துவத்தைப் பெறுகின்றது. மைய பாங்கு அரசினர் பத்திரங்களை வெளியிடுவதால் சிறப்பீட்டுப் பத்திர மார்க்கட்டில் ஒரு சிறப்பான இடத்தையும், கருவூல உண்டியல்களை வெளியிடு

வதால் பண மார்க்கட்டில் ஒரு முக்கியமான இடத்தையும் பெற்றிருக்கின்றது. அது பத்திரங்களை விற்பனை செய்வதோடல்லாமல் சில சமயங்கள் அவைகளை வாங்கலாம். செலாவணிக் கொள்கை அரசினர் கடன் நிருவாகக் கொள்கையுடன் எவ்வாறு தொடர்பு கொண்டிருக்கின்றது என்பதை நாம் முன்பே பார்த்தோம். இங்கிலாந்தின் மைய பாங்காகிய இங்கிலாந்தின் தலைமை பாங்கு செலாவணிக் கொள்கையை மட்டும் செயற்படுத்தாமல் அரசியலாரின் கடனையும் நிருவாகம் செய்கின்றது.

**பெடரல் ரிசர்வ் சபை** (Federal Reserve Board)

அமெரிக்காவில் மைய பாங்கின் பொறுப்புகளைக் கருவூலமும் பெடரல் ரிசர்வ் சபையும் பகிர்ந்துகொண்டிருக்கின்றன. இந்த முறை ஆங்கிலேய முறையிலிருந்து வேறுபட்டிருக்கின்றது. வாணிக பாங்கு பெடரல் ரிசர்வ் சபையுடனும் அரசாங்கத்துடனும் கொண்டிருக்கும் தொடர்பும் அமெரிக்காவில் வேறுபட்டிருக்கின்றது. இங்கிலாந்தின் தலைமை பாங்கைப் போன்ற ஒரு நிறுவனம் அமெரிக்காவில் இல்லை. அமெரிக்காவில் 12 பெடரல் ரிசர்வ் மாநிலங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு மாநிலத்திலும் ஒரு பெடரல் ரிசர்வ் பாங்கு இருக்கின்றது. வாஷிங்டன் நகரில் ஒரு பெடரல் ரிசர்வ் கவர்னர்கள் சபை (Board of governors of the Federal Reserve System) இயங்குகிறது. பெடரல் ரிசர்வ் சபைகள் மைய பாங்குகளாகப் பணியாற்றுகின்றன. ஆனால் இங்கிலாந்தின் தலைமை பாங்கு செலுத்தும் அதிகாரத்தை இவை செலுத்தவில்லை. கொள்கைகளையும் திட்டங்களையும் வகுப்பதே இவைகளுடைய முக்கியமான பணியாகும்.

வாணிக பாங்குகளுள் பெரும்பான்மையானவை பெடரல் ரிசர்வ் சபையில் அங்கம் வகிக்கின்றன. ஆனால் சில பாங்குகள் பெடரல் ரிசர்வ் சபையில் சேரவில்லை. பெடரல் ரிசர்வ் பாங்குகள் அங்கத்தினர்களுடைய பாங்காகப் பணியாற்றுகின்றன. சபையில் அங்கம் வகிக்கும் பாங்குகளுக்குப் பெடரல் ரிசர்வ் சபை கடன் வசதியளிக்கின்றது; அவைகளுடைய உண்டியல்களைத் தள்ளுபடி செய்கின்றது; அவைகளுடைய காப்பு நிதியை டெபாசிட்டாக வைத்துக் கொள்கின்றது; செக்கு தீர்வக வசதிகளையும் அளிக்கின்றது; அவைகளுக்கும் பெடரல் ரிசர்வ் கவர்னர்கள் சபைக்கும் இடையே ஒரு தொடர்பை ஏற்படுத்துகின்றது. அமெரிக்காவில் புழக்கத்தில் இருக்கும் செலாவணித் தாள்களில் $\frac{4}{5}$ பகுதியை பெடரல் ரிசர்வ் பாங்குகளே வெளியிடுகின்றன. பெடரல் ரிசர்வ் பாங்குகள் முதன்முதலில் வாணிக பாங்குகளை மேற்பார்வையிட்டன. 1935-ஆம் ஆண்டு அவை மிகுதியான அதிகாரத்தைப்

பெற்றன. பாங்குகளுடைய டெபாசிட்டு அவைகளுடைய காப்பு நிதியுடன் எவ்வித விகிதத் தொடர்பைக் கொண்டிருக்கவேண்டும் என்பதைப் பெடரல் ரிச்ர்வ் பாங்குகள் முடிவு செய்யலாம். சபையில் அங்கம் வகிக்கும் பாங்குகளும் மற்ற பாங்குகளும் வசூல் செய்யவேண்டிய வட்டி வீதத்தை அவை நிர்ணயம் செய்யலாம். ரிசர்வ் பாங்குகள் அரசினர் பத்திரங்களை வாங்குதல் பெடரல் வெளி மார்க்கட்டுக் குழுவின் (Federal Open Market Committee) ஆதிக்கத்திற்குட்பட்டிருக்கின்றது. இக்குழுவில் ரிசர்வ் பாங்குகளின் கவர்னர்கள் (governors) அங்கத்தினர்களாக இருக்கின்றனர். பெடரல் ஆலோசனைக் குழுவில் (Federal Advisory Council) ரிசர்வ் பாங்குகளின் பிரதிநிதிகள் அங்கம் வகிக்கின்றனர். இக்குழு, கவர்னர்கள் சபைக்கு ஆலோசனை கூறுகின்றது. அமெரிக்காவில் கருவூலம் பெடரல் ரிசர்வ் பாங்குகளை எதிர்த்துப் போராடுவதற்கு வேண்டிய அதிகாரத்தைப் பெற்றிருக்கின்றது. குறிப்பாகப் பொன்னையும் அயல் நாட்டுச் செலாவணியையும் வாங்குவதில் கருவூலம் ரிசர்வ் பாங்குகளை எதிர்க்கலாம்.

# 31. பன்னாட்டு வாணிகம்

ஒருவகை வர்த்தகத்திற்கும் மற்றொரு வகை வர்த்தகத்திற்கும் அடிப்படை வேற்றுமைகள் எதுவும் இல்லை. சிறப்பான உற்பத்தி முறையே (specialisation) வர்த்தகத்திற்குக் காரணமாகும். இருவர் அல்லது நாட்டின் இருபகுதிகள் அல்லது இருநாடுகள் செய்யும் வர்த்தகத்திற்குச் சிறப்பான உற்பத்தி முறையே காரணமாக இருக்கின்றது. ஒருவன் இயற்கையாகக் கொண்டுள்ள திறமையோடு உபரி சக்தியையும் பெறுவதற்கு வர்த்தகம் உதவுகின்றது. மற்றப் பகுதிகளுடன் வர்த்தகத்தில் ஈடுபட்டிருக்கும் ஒரு பகுதி வேறு இடங்களில் உற்பத்தியாகும் பொருள்களைப் பயன்படுத்தலாம். சிறப்பான உற்பத்தி முறையில் ஈடுபட்டிருக்கும் ஒருவன் தொழிற்சாலையில் ஒரு குறிப்பிட்ட வேலையை மட்டுமே செய்கின்றான். ஒரு பகுதியின் உற்பத்திச் சாதனங்கள் எப்பொருளை உற்பத்தி செய்வதற்கு உகந்தனவாக இருக்கின்றனவோ, அதே பொருளை அப்பகுதி உற்பத்தி செய்கின்றது. மற்றப் பொருள்களை உற்பத்தி செய்வதில் அப்பகுதி அதிகம் கவனம் செலுத்துவதில்லை. பல்வேறு பகுதிகள், மாவட்டங்கள், நாடுகள் முதலியவைகளைப் பிரிக்கும் எல்லைக் கோடுகள் வர்த்தகத்தை எவ்விதத்திலும் பாதிப்பதில்லை.

**உள்நாட்டு வாணிகமும் அயல்நாட்டு வாணிகமும் :**

ஒரு நாட்டின் பல பகுதிகள், தட்பவெப்ப நிலையிலும் நிலவளத்திலும் வேறுபட்டிருப்பதால் அவைகளிடையே எவ்வாறு வர்த்தகம் ஏற்படுகின்றதோ அதே மாதிரி பல்வேறு நாடுகளிடையே வர்த்தகம் ஏற்படுகின்றது. எனவே, உள்நாட்டு வர்த்தகத்திற்கும் பன்னாட்டு வர்த்தகத்திற்கும் ஒரே காரணம் இருக்கின்றது; ஒரே தத்துவத்தை அவை இரண்டும் அடிப்படியாகக் கொண்டிருக்கின்றன. நாட்டின் ஒருபகுதி ஏன் தன்னிறைவுடன் (self sufficiency) இல்லை? ஏன் சில தொழில்களே அங்கு வளர்ந்திருக்கின்றன? மற்றத்தொழில்கள் வளரவில்லை? ஏன் அது செழிப்பாகவும், மற்றப்

பகுதிகள் வளமற்றும் இருக்கின்றன? ஒரு பகுதியைப்பற்றி நாம் கேட்கும் இவ்வினுக்கள் ஒரு நாட்டுக்கும் பொருந்தும். இவ்வினுக்கள் மூலம் உள்நாட்டு வர்த்தகத்தை நாம் அறிந்து கொள்வதால் சிறந்த பயன் ஏற்படுகின்றது. ஏனெனில் உள்நாட்டு வாணிகத்திற்கும், அயல்நாட்டு வாணிகத்திற்கும் இடையே அடிப்படை வேற்றுமைகள் இருக்கின்றன என்று சிலர் தவருகக் கருதுகின்றனர். அயல்நாட்டு வர்த்தகத்தைக் கட்டுப்பாடு செய்யலாம் என்றும், ஆனுல் உள்நாட்டு வர்த்தகத்தைக் கட்டுப்படுத்துவது சரியல்ல என்றும் அவர்கள் கருதுகின்றனர். பன்னுட்டு வர்த்தகத்தைப் பற்றி விவாதம் செய்யும் பொழுது எழும் வினுக்களைக் கொண்டு நாம் உள்நாட்டு வர்த்தகத்தைப் பரிசீலனை செய்வதால் மக்கள் கொண்டுள்ள கருத்துகளில் இருக்கும் சில தவறுகள் புலப்படும். கூலிகள் குறைந்த ஜப்பான் நாட்டிலிருந்து இறக்குமதியாகும் பொருள்களை வரிகள் மூலம் தடை செய்ய வேண்டுமென்று அமெரிக்கர்கள் கருதுவதும், கூலிகள் குறைவாக இருக்கும் டென்னசிப் பகுதியிலிருந்து மற்றப் பகுதிகளுக்குப் பொருள்களைச் செலுத்துவதைத் தடை செய்யக் கூடாதென்று கருதுவதும் ஒன்றுக்கொன்று ஒவ்வாத கருத்துகளாக இருக்கின்றன. அயல்நாட்டு வர்த்தகத்தையும் உள்நாட்டு வர்த்தகத்தையும் ஒரே கோணத்தில் பார்க்கும் பொழுது இவ்வுண்மை புலப்படுகின்றது. தென் வேல்ஸ் பகுதிக்கும் மற்றப் பகுதிக்கும் இடையே இருக்கும் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலைக்கும் (balance of payments) இங்கிலாந்துக்கும் மற்ற நாடுகளுக்கும் இடையே நிலவும் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலைக்கும் அதிக வேற்றுமை இல்லை. பல்வேறு நாடுகளிடையே இருக்கும் எல்லைக்கோடு தேவையற்றது. பெர்லினுக்கும் (Berlin) வீயன்னு (Vienna) வுக்கும் இடையே நடைபெறும் வர்த்தகம் உள்நாட்டு வர்த்தகத்திலிருந்து வேறுபட்டிருக்க வில்லை. இரு நகரங்களும் வெவ்வேறு நாடுகளிலிருந்தாலும், அல்லது ஒரே நாட்டில் இருந்தாலும் அவைகளிடையே நடைபெறும் வர்த்தகம் ஒரே நிலையில்தான் இருக்கும். வடஅயர்லாந்து (North Ireland) தென் அயர்லாந்திலிருந்து பிரிந்த பிறகும் அதன் வர்த்தகம் முன்பு இருந்ததைப் போல்தான் இருந்தது. இங்கிலாந்தும் ஸ்காட்லாந்தும் இணைந்த பிறகு அவைகளுடைய வர்த்தக உறவு எவ்விதத்திலும் மாறவில்லை.

## பன்னுட்டு வாணிகத்திற்குத் தனிக்கோட்பாடு தேவையா?

உள்நாட்டு வாணிகமும் அயல்நாட்டு வாணிகமும் ஒரே மாதிரி இருந்த போதிலும், அவைகளுக்குள் பல வேற்றுமைகள் இருக்கின்றன. இந்த வேற்றுமைகள் இல்லாவிடில் பன்னுட்டு வாணிகத்திற்கு ஒரு தனிக்கோட்பாடு வேண்டியதில்லை. 7-ஆம்

அதிகாரத்தில் சில இடங்களில் சில தொழில்கள் ஏன் செழித்தோங்கி வளர்கின்றன என்பதைப் பார்த்தோம். பல்வேறு நாடுகளில் பல்வேறு தொழில்கள் எவ்வாறு வளர்ச்சியடைகின்றன என்பதையும் நாம் (ஓரிடத்தில்) தொழிற் செறிவு (localisation) பற்றிய விதியைக் கொண்டே புரிந்துகொள்ளலாம். ஆனால் பல்வேறு நாடுகளை நாம் ஒரு நாட்டின் பல்வேறு பகுதிகளாகக் கருதமுடியாது. அவை வெவ்வேறு பொருளாதார அமைப்புக்களைக் கொண்டிருக்கின்றன. மேலும் எல்லைக் கோடுகள் அவைகளைப் பிரிக்கின்றன. அவை வெவ்வேறு பாங்கு முறைகளையும், செலாவணி முறைகளையும் கொண்டிருக்கின்றன. அவை வரிகளை விதித்துப் பொருள்கள் இறக்குமதியைத் தடை செய்கின்றன. ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டுக்கு மூலதனத்தை எளிதில் அனுப்ப முடியாது. அவை மூலதன இறக்குமதியையும் ஏற்றுமதியையும் தடை செய்கின்றன. வேறு நாடுகளில் முதலீடு செய்வதை மக்கள் விரும்பவில்லை. அயல் நாட்டுத் தொழிலாளர்கள் ஒரு நாட்டில் குடிபுகுதலை அந்த நாடு தடை செய்யும். தொழிலாளர்களும் சாதாரணமாக வேறுநாடுகளுக்குச் செல்ல விரும்புவதில்லை. அயல் நாடுகளில் அவர்களுக்கு நல்ல வாய்ப்புக்கள் கிடைக்குமா என்பதை அவர்கள் நன்கு புரிந்து கொள்வதில்லை. சில நாடுகள் ஆண்டுதோறும் சில குறிப்பிட்ட தொழிலாளர்களையே நாட்டில் குடியேற அனுமதிக்கும். மேலும் வெளிநாடுகளுக்குப் பணத்தைச் செலவு செய்து போகப் பலர் விரும்புவதில்லை. வேற்றுநாட்டு மொழியை அவர்கள் அறியாததும் இதற்கு ஒரு காரணமாகும். ஒவ்வொரு நாட்டு அரசாங்கமும் அதன் வர்த்தகத்தைப் பல கட்டுப்பாடுகளுக் குட்படுத்துகின்றது. உற்பத்திச் சாதனங்கள் ஒரு நாட்டிலிருந்து மற்ற நாடுகளுக்கு எளிதில் செல்லாமையால், பன்னாட்டு வர்த்தகத்திற்கு ஒரு தனிக் கோட்பாடு வேண்டும். ஒவ்வொரு நாடும் ஒரு கொள்கையை வகுத்துக் கொள்வதற்குச் சில பொது விதிகளும் கோட்பாடும் வேண்டும். உற்பத்திச் சாதனங்கள் இடப்பெயர்ச்சியற்றிருப்பதை அடிப்படையாகக் கொண்ட ஒரு கோட்பாடு வேண்டும். பல்வேறு நாடுகள் பன்னாட்டு வாணிகத்தால் எவ்வாறு பாதிக்கப் படுகின்றன என்பதை நாம் பரிசீலனை செய்ய வேண்டும்.

**உற்பத்திச் சாதனங்களின் இடப்பெயர்ச்சியற்ற தன்மையும் அதன் விளைவுகளும் :**

உற்பத்திச் சாதனங்கள் இடப்பெயர்ச்சியற்றிருப்பதால் குறைந்த ஊதியத்தையே பெறுகின்றன. இத்தாலியிலும் (Italy) ஜப்பானிலும் (Japan) தொழிலாளர்கள் குறைந்த கூலியை வாங்குகிறார்கள். அவர்களை அமெரிக்காவில் அல்லது இங்கிலாந்தில் குடி

யேற அனுமதித்தால் அவர்கள் அங்கு உயர்ந்த கூலியைப் பெறுவர். மூலதனத்தை இந்தியாவிலோ (India), அல்லது போலந்திலோ (Poland) முதலீடு செய்தால் முதலாளிகள் அதிக இலாபம் பெறலாம். ஆனால் அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் முதலாளிகள் அதிக இலாபம் ஈட்ட முடியவில்லை. மேலும் உற்பத்திச் சாதனங்கள் மிகச் சிறந்த பயனைக் கொடுக்கக் கூடிய முறையில் பயன் படுத்தப் படாமையால் பொருளுற்பத்தியின் அடக்கச் செலவு குறைவாக இருக்காது. அடக்கச் செலவுப் பணத்தை அளவு கோலாகக் கொண்டு கணக்கிட்டால் அது குறைவாக இருக்கலாம். ஆனால் உண்மையான அடக்கச் செலவு, (அதாவது உற்பத்திக்காக நாம் பயன்படுத்தும் பொருள்களின் மதிப்பு) குறைவாக இருக்காது. கோதுமை உற்பத்தியின் அடக்கச் செலவு இந்தியாவை விடக் கனடாவிலேயே மிகவும் குறைவாக இருக்கின்றது. ஆனால் இந்திய விவசாயிகள் கனடிய விவசாயிகளுடன் கோதுமை உற்பத்தியில் போட்டியிடுகின்றனர். எப்பொருளை உற்பத்தி செய்தாலும் இந்திய விவசாயிகளைவிடக் கனடிய விவசாயிகளுடைய முயற்சியே அதிகமான பலனைக் கொடுக்கின்றது. ஆகையால் இந்திய விவசாயிகள் தம் நாட்டின் தட்பவெப்ப நிலையில் செழித்து வளரக் கூடிய பொருள்களைவிட, எப்பொருளை மிக்க சிக்கனமான முறையில் உற்பத்தி செய்ய முடியுமோ; அதை உற்பத்தி செய்வதிலேயே கவனம் செலுத்துகின்றனர். ஒரு பொருளின் அடக்கச் செலவு ஒரு நாட்டைவிட மற்றொரு நாட்டில் குறைவாக இருந்த போதிலும் அந்த நாடு அப்பொருளை உற்பத்தி செய்யலாம். ஏனெனில் மற்றப் பொருள்களை விட அப்பொருளை அந்தநாடு சிக்கனமான முறையில் உற்பத்தி செய்யலாம். பணத்தை அளவு கோலாகக் கொண்டு மதிப்பிடும் பொழுது ஒரு பொருளின் அடக்கச் செலவு இந்தியாவில் குறைவாக இருக்கலாம். ஏனெனில் இந்தியாவில் கூலி குறைவாக இருக்கின்றது. ஆனால் உண்மையான அடக்கச் செலவு (அதாவது உற்பத்திக்காகப் பயன்படுத்தும் பொருள்களைக் கொண்டு அடக்கச் செலவைக் கணக்கிட்டால்) இந்தியாவில் மிகுதியாக இருக்கும்.

### முழு வசதியும் (Absolute Advantage) தராதர வசதியும் (Comparative Advantage)

ஒரு பொருளை உற்பத்தி செய்வதில் முழு வசதியை அல்லது தராதர வசதியைப் பெறலாம். இதை நாம் ஒரு உதாரணத்தின் மூலம் விளக்கலாம். A, B என்ற இருநாடுகள் இருக்கின்றன என்றும்; A சர்க்கரையை மட்டும் உற்பத்தி செய்கின்றது என்றும், B உப்பை மட்டும் உற்பத்தி செய்கின்றது என்றும் நாம் கற்பனை செய்துகொள்வோம். இவ்விரண்டு நாடுகளும் மனிதனுடைய

உழைப்பைமட்டுமே உற்பத்திச்சாதனமாகப் பயன்படுத்துகின்றன என்றும் நாம் கற்பனை செய்துகொள்வோம். A சர்க்கரை உற்பத்திக்கும் B உப்பு உற்பத்திக்கும் ஏற்றதாக இருக்கின்றன என்று கற்பனை செய்துகொள்வோம்.

10 நாள் உழைப்பைக் கொண்டு A 100 அலகு (unit) சர்க்கரையை உற்பத்தி செய்யலாம்.

10 நாள் உழைப்பைக் கொண்டு A 80 அலகு உப்பை உற்பத்தி செய்யலாம்.

10 நாள் உழைப்பைக் கொண்டு B 50 அலகு சர்க்கரையை உற்பத்தி செய்யலாம்.

10 நாள் உழைப்பைக் கொண்டு B 200 அலகு உப்பை உற்பத்தி செய்யலாம்.

இரு நாடுகளும் வர்த்தகத் தொடர்பு கொள்ளாவிடில் A என்ற நாட்டில் ஓர் அலகு சர்க்கரையின் விலை ஓர் அலகு உப்பின் விலையில் $\frac{4}{5}$ பகுதிக்குச் சமமாக இருக்கும். B என்ற நாட்டில் ஓர் அலகு சர்க்கரையின் விலை ஓர் அலகு உப்பின் விலையைப் போல் 4 மடங்குக்குச் சமமாக இருக்கும். இந்த இரு எல்லைகளுக்கிடையே ஒரு விலையை நிர்ணயம் செய்து A சர்க்கரையை B க்கு ஏற்றுமதி செய்தலால் இரு நாடுகளும் வர்த்தகத்தினால் பயனடையலாம். இரு நாடுகளுடைய தேவையும் விலையை நிர்ணயம் செய்யும். பொருள்களை ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டுக்குச் செலுத்துவதற்கு மிகக் குறைவான தொகையைச் செலவு செய்ய வேண்டுமென்றும், ஆகையால் இச்செலவை நாம் கணக்கில் சேர்த்துக்கொள்ள வேண்டாம் என்றும் கற்பனை செய்துகொள்வோம். 1 அலகு சர்க்கரை = 2 அலகு உப்பு என்ற விலை நிலவுகின்றது என்று நாம் கற்பனை செய்து கொள்வோம். A, 100 அலகு சர்க்கரையை ஏற்றுமதி செய்து 200 அலகு உப்பை இறக்குமதி செய்கின்றது. 10 நாள் உழைப்பைக் கொண்டு A சர்க்கரையை உற்பத்தி செய்து 25 நாள் உழைப்பின் பலனைக் கிடைக்கும் உப்பை வாங்குகிறது. 10 நாள் உழைப்பைக் கொண்டு, B உப்பை உற்பத்தி செய்து 20 நாள் உழைப்பின் பலனைக் கிடைக்கும் சர்க்கரையை வாங்குகிறது. 45 நாள் உழைப்பின் பலனைக் கிடைக்கும் இரு பொருள்களையும், இரு நாடுகளும் 20 நாள் உழைப்பைக் கொண்டு பெறுவதற்கு வர்த்தகம் உதவுகின்றது.

இவ்வுதாரணத்தில் A சர்க்கரை உற்பத்தியில் முழு வசதியையும் (Absolute advantage), தராதர வசதியையும் (Comparative

advantage) கொண்டிருக்கின்றது. B உப்பு உற்பத்தியில் முழு வசதியையும், தராதர வசதியையும் கொண்டிருக்கின்றது. B, 10 நாள் உழைப்பைக் கொண்டு 50 அலகு உப்பையே உற்பத்தி செய்தால், A இரு பண்டங்களையும் உற்பத்தி செய்வதில் முழு வசதியையும், தராதர வசதியையும் கொண்டிருக்கும். இந்த நிலையிலும் A வர்த்தகத்தினால் பயனடையும். ஏனெனில் B உப்பு உற்பத்தியில் முழு வசதியை இழந்தபோதிலும், தராதர வசதியைக் கொண்டிருக்கின்றது. ஒருநாள் உழைப்பைக் கொண்டு அது ஒரே அளவு உப்பையும், சர்க்கரையையும் உற்பத்திசெய்யலாம். ஆனால் A ஒரு நாள் உழைப்பைக் கொண்டு ஓர் அலகு சர்க்கரையை உற்பத்தி செய்தால், அதே உழைப்பைக் கொண்டு $\frac{4}{5}$ அலகு உப்பையே உற்பத்தி செய்யலாம். ஆகையால் $\frac{4}{5}$, 1 என்ற இரு எல்லைகளுக்கிடையில் எந்த விலையை நிர்ணயம் செய்தாலும் இரு நாடுகளும் வர்த்தகத்தின் மூலம் பயன் அடையலாம். இரு நாடுகளுடைய தேவையும் கீழ்க்கண்ட விலையைநிர்ணயம் செய்கின்றன என்று நாம் கற்பனை செய்துகொள்வோம்.

10 அலகுசர்க்கரை = 9 அலகு உப்பு. 10 நாள் உழைப்பைக் கொண்டுA சர்க்கரை உற்பத்தி செய்து, அதைக் கொடுத்து 90 அலகுஉப்பை வாங்கலாம். A-ல் 90 அலகு உப்பை உற்பத்தி செய்வதற்கு $11\frac{1}{4}$ நாட்கள் உழைப்பு வேண்டும். B, 10 நாள் உழைப்பைக் கொண்டு 50 அலகு சர்க்கரையை உற்பத்தி செய்யலாம். ஆனால் 9 நாள் உழைப்பின் பலனாக உற்பத்தியாகும் உப்பை Aக்கு விற்பனை செய்து 50 அலகு சர்க்கரையை வாங்கிக் கொள்ளலாம். இரண்டாவது உதாரணத்தில் B இரு பொருள்களையும் குறைவான அளவிலேயே உற்பத்தி செய்யமுடியும் என்று நாம் கற்பனை செய்து கொண்டோம். உற்பத்தி குறைவதால் Bயில் தொழிலாளர்களுடைய கூலியும் Aஇல் இருப்பதைவிடக் குறைவாக இருக்கும். இதுவே முதல் உதாரணத்திற்கும் இரண்டாவது உதாரணத்திற்கும் உள்ள வேறுபாடாகும். முதல் உதாரணத்தில், 100 அலகு சர்க்கரையின் விலை 200 அலகு உப்புக்குச் சமம் என்று நாம் கற்பனை செய்துகொண்டோம். A, 10 நாள் உழைப்பைக் கொண்டு 100 அலகு சர்க்கரையையும், B அதே உழைப்பைக் கொண்டு 200 அலகு உப்பையும் உற்பத்தி செய்யமுடியும் என்றும் நாம் கற்பனை செய்துகொண்டதால் A, B என்ற இரு நாடுகளிலும் கூலி சமமாக இருக்கவேண்டும். ஆனால் எந்த நாட்டுக்குக் கூலி சாதகமாக நிர்ணயிக்கப்படுகின்றதோ அந்த நாட்டில் மற்ற நாட்டைவிடக் கூலி அதிகமாக இருக்கும். இரண்டாவது உதாரணத்தின்படி A-ல் தொழிலாளர்களுடையகூலி B-ல் தொழிலாளர்கள் பெறும் கூலியைவிட அதிகமாக இருக்கும்;

அதாவது Bயில் நிலவும் கூலியைப்போல் $\frac{9}{5}$ மடங்கு A-ல் கூலி இருக்கும். $\frac{5}{10}$, $\frac{5}{8}$ என்ற இரு எல்லைகளுக்குள் கூலி இரு நாடுகளி லும் மாறலாம். விலை எந்த நாட்டுக்குச் சாதகமாக இருக்கின்றதோ, அந்த நாட்டிலேயேதான் கூலி உயரும்.

**சிறப்பான உற்பத்தி முறை பூர்த்தியற்றிருத்தல்**

மேலே நாம் கூறியதிலிருந்து ஒரு நாடு உற்பத்தி செய்ய முடியாத பொருளை வெளிநாடுகளிலிருந்தே இறக்குமதி செய்ய வேண்டும் என்று கூறமுடியாது. இரு நாடுகளிலும் இரு பண்டங் களும் உற்பத்தி செய்யமுடியும் என்று நாம் கற்பனை செய்து கொண்டோம். ஆனால் சிறப்பான உற்பத்தி முறையைப் பின் பற்றுவதால் இரு நாடுகளும் பயனடைகின்றன என்றும் நாம் பார்த்தோம். இதிலிருந்து ஒரு நாட்டில் சிறப்பான உற்பத்தி முறை முழு வளர்ச்சியடையும் என்று நாம் கருதலாம். A உப்பை உற்பத்தி செய்யாதென்றும், B சர்க்கரையை உற்பத்தி செய்யா தென்றும் நாம் கருதலாம். ஆனால் சிறப்பான உற்பத்திமுறை முழு வளர்ச்சிபெறாமல் இருப்பதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. இக் காரணங்களை நாம் இதுவரை கவனிக்கவில்லை. இரு தொழில் களும் 'குறைந்து செல் விளைவு விதிக்கு' (Law of diminishing returns) உட்பட்டிருக்கலாம். ஆகையால் இரு பொருள்களையும் ஓரளவுக்குமேல் உற்பத்திசெய்வதால் இரு நாடுகளுக்கும் எவ் விதப் பயனும் கிடைப்பதில்லை. பண்டங்களை ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டுக்குச் செலுத்துவதற்காக ஒரு தொகையைச் செலவு செய்யவேண்டும். இச் செலவு சிறப்பான உற்பத்தி முறை யினால் ஏற்படும் பலனைவிட அதிகமாக இருக்கலாம். A என்ற நாட் டில் ஏற்றுமதிக்கு வேண்டிய அளவு உற்பத்தி பெருகாமல் இருக்க லாம். B என்ற நாடு ஒரு புதிய ரக சர்க்கரையை உற்பத்தி செய்வ தால் உலக மார்க்கட்டில் அதை விற்பனை செய்வதில் வெற்றிகர மாகப் போட்டியிடலாம். சிறப்பான உற்பத்திமுறை முழு வளர்ச்சி யடையாமல் இருப்பதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. ஏற்றுமதித் தொழில்களைத் தவிர ஒரு நாட்டில் இறக்குமதியான பொருள்களுடன் மார்க்கட்டில் (விற்பனையாவதில்) போட்டியிடும் பொருள்களை உற்பத்திசெய்யும் தொழில்களும் இருக்கின்றன. கட்டடத் தொழில் (building industries), போக்குவரத்துத் தொழில், பங்கீட்டில் ஈடுபடும் தொழில் முதலியவை அயல்நாட்டுத் தொழில் களுடைய போட்டியைச் சமாளிக்கவேண்டிய நிலையில் இல்லை.

**பன்னாட்டுவர்த்தக விதி இரண்டுக்குமே மேற்பட்ட பண்டங்களுக்கும் பொருந்தும்**

மேலே கொடுக்கப் பெற்றிருக்கும் விளக்கத்தைக் கொண்டு பல்வேறு பண்டங்களின் விற்பனையை நாம் புரிந்துகொள்ளலாம்.

ஒவ்வொரு நாடும் உற்பத்திசெய்யும் பண்டங்களைத் தராதர வசதியை அடிப்படையாகக் கொண்டு ஒரு பட்டியலில் சேர்க்க வேண்டும். எப்பொருள்களை உற்பத்திசெய்வதில் மிகவும் அதிக மான வசதியைப் பெற்றிருக்கின்றதோ அப்பொருள்கள் பட்டியலில் முதல் இடத்தைப் பெறவேண்டும். அந்த நாடு அப்பொருள்களை ஏற்றுமதி செய்யும். சில பொருள்களின் உற்பத்தியில் ஒரு நாடு மிகக் குறைந்த வசதிகளைப் பெற்றிருக்கலாம். இவைகளை அந்த நாடு பட்டியலின் பிற்பகுதியில் சேர்க்கும். இவைகளை மற்ற நாடு களிலிருந்து அந்த நாடு இறக்குமதி செய்யும். பட்டியலில் சேர்க்கப் பெற்றிருக்கும் பொருள்களுள் எவைகளை உள்நாட்டில் உற்பத்தி செய்யலாம், எப்பொருள்களை இறக்குமதி செய்யலாம் என்று ஒரு நாடு முடிவுசெய்யவேண்டும். பொருள்களுடைய விலைகள் சாதக மாக இருந்தால் ஒரு நாடு இறக்குமதி செய்யும் பொருள்களுக்குப் பதிலாகக் குறைந்த அளவில் பொருள்களை ஏற்றுமதிசெய்யும். விலைகள் ஒரு நாட்டுக்குச் சாதகமாக இல்லாவிடில் இறக்குமதிக்குப் பதிலாக அந்த நாடு அதிகமான அளவில் பொருள்களை ஏற்றுமதி செய்யவேண்டும். பொருள்களின் விலைகளுக்கு ஏற்றவாறு ஒரு நாடு எப்பொருள்களை ஏற்றுமதி செய்யவேண்டும், எவைகளை இறக்குமதி செய்யவேண்டும் என்று முடிவுசெய்யும்.

**விலைகளின் முக்கியத்துவம்**

பொருள்களை வாங்கும்பொழுது ஒரு நாடு மற்றொன்றுக்குக் கொடுக்கும் விலை அதன் பொருளாதாரத்தைப் பாதிக்கலாம். அடக்கச் செலவு குறையாதபொழுது ஏற்றுமதிப் பொருள்களின் விலை மட்டும் குறைந்தால் ஒரு நாடு பெறும் இலாபமும் வருமானமும் குறையும். 100 அலகு சர்க்கரை = 100 அலகு உப்பு, என்ற விலை முன்பு நிலவியது என்று நாம் கற்பனை செய்துகொள்வோம். இந்த விலை 100 அலகு சர்க்கரை = 100 உப்பு என்று மாறினால், A என்ற நாட்டில் கூலிகள் (wages) 50 சதவீதம் குறையும். ஆஸ்தி ரேலியா விற்பனை செய்யும் கம்பளி, கோதுமை முதலிய பண்டங் டங்களின் விலை குறைந்தால், மக்களுடைய வருமானமும் கூலியும் குறையும். ஒரு தொழிலில் மக்கள் பெறும் வருமானமும், தொழிலா ளர்கள் பெறும் கூலியும் குறையும்பொழுது மற்றத் தொழில்களும் பாதிக்கப்படும். கோதுமையையும் கம்பளியையும் தவிர மற்றச் சில பொருள்களையும் உற்பத்தி செய்வதில் ஆஸ்திரேலியா தராதர வசதியைப் பெற்றிருந்தால், அந்த நாடு அப்பொருளை மிகுதியான அளவில் ஏற்றுமதி செய்ய முயற்சி செய்யும். ஆனால் தராதர வசதி யுடைய வேறு தொழில்கள் ஆஸ்திரேலியாவில் இல்லாவிடில் விலைகள் குறைவதால் ஆஸ்திரேலியா இழக்கும் வருமானத்தை எவ்விதத்திலும் ஈடுசெய்யமுடியாது. மேலும் ஆஸ்திரேலியாவின்

ஏற்றுமதிப் பொருள்களுக்கு நெகிழ்ச்சியற்ற தேவை (inelastic demand) இருக்கலாம்.[1] இந்த நிலையில் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை (Balance of Payments) ஆஸ்திரேலியாவுக்கு பாதகமாக மாறினால், அந்த நாட்டின் வருமானம் குறையும். கோதுமை, கம்பளி முதலிய பொருள்களின் விலைகள் உயர்ந்தால் ஆஸ்திரேலியா ஏராளமான இலாபத்தைப் பெறும். விலைகள் தாழ்வடைந்தால் அதன் இலாபம் குறையும். சிலி (Chile) என்ற நாடு நைட்ரேட் (Nitrate) என்ற பொருளை மற்றநாடுகளுக்கு ஏற்றுமதி செய்தது. செயற்கை நைட்ரேட் ஏராளமான அளவில் உற்பத்தியான பிறகு சிலி நாடு பாதிக்கப்பட்டது. உற்பத்தி நிலைமைக்கேற்றவாறு மாறாத தன்மையுடையதாக இருந்ததால் சிலி நாட்டின் வர்த்தகம் நலிவுற்றது.

கச்சாப் பொருள்களுடைய விலையும், பொறிசெய்பொருள்களுடைய (Manufactured goods) விலையும் மாறினால் இங்கிலாந்தின் நிலைமையும் மாறும். நீண்டகாலத்திலும் குறுகிய காலத்திலும் மேலே குறிப்பிட்ட விலைகள் மாறலாம். மந்தகாலத்தில் இங்கிலாந்து அயல் நாட்டு வர்த்தகத்தின் மூலம் பெறும் வருமானம் மிகுதியடையும், வீக்ககாலத்தில் குறையும். ஏனெனில் விலைகள் மாறும்பொழுது உணவுப் பொருள்களின் விலையும், கச்சாப் பொருள்களின் விலையும் மற்ற விலைகளைவிட விரைவில் மாறும். ஆகையால் மந்தகாலத்தில் இங்கிலாந்து இறக்குமதி செய்யும் பொருள்களின் விலைகள் குறையும். இங்கிலாந்தை மந்தம் கடுமையாகத் தாக்காது. வீக்ககாலத்திலும் அதன் செழிப்பு ஓரெல்லைக்குட்பட்டிருக்கும். பல ஆண்டுகளாக இங்கிலாந்து இறக்குமதி செய்யும் பொருள்களின் விலைகள் குறைந்தன. இதன் விளைவாக ஆங்கிலேய மக்களுடைய வாழ்க்கைத் தரம் உயர்ந்தது. போக்குவரத்து வசதிகள் பெருகியதாலும், புதிய கண்டங்களை ஐரோப்பிய நாடுகள் கைப்பற்றியதாலும், இங்கிலாந்து விக்டோரியா (Victoria) இராணி காலத்தில் உணவுப் பொருள்களையும் மற்றப் பொருள்களையும் குறைந்த விலையில் வாங்கியது. உணவுப் பொருள்களையும் கச்சாப் பொருள்களையும் இங்கிலாந்து உற்பத்தி செய்திருந்தால் அதன் அடக்கச் செலவு மிகவும் அதிகமாக இருந்திருக்கும்.

அயல் நாட்டு வர்த்தகப் பொருள்களின் விலைகள் மாறியதால் இங்கிலாந்தில் விவசாயத் தொழில் முக்கியத்துவத்தை இழந்தது. உணவை உற்பத்தி செய்வதைவிட இறக்குமதி செய்வதே இலாப

1. கோதுமைக்கு உலக நாடுகளில் இருக்கும் தேவை நெகிழ்ச்சியற்றதாக இருக்கலாம். ஆனால் ஆஸ்திரேலிய கோதுமையின் தேவை நெகிழ்ச்சியற்றதாக இருக்கவேண்டும் என்ற கட்டாயம் இல்லை.

கரமாக இருக்கின்றது. தொழிலாளர்களை உணவு உற்பத்தியி லிருந்து திருப்பித் தொழிலுற்பத்தியில் ஈடுபடுத்தியதால் அவர்கள் அதிகமான கூலியைப் பெற்றனர். விவசாயத்தைக் கைவிட்டுத் தொழிலுற்பத்தியில் அவர்கள் ஈடுபட்டதால், அவர்கள் உற்பத்தி செய்த பொருளின் மதிப்பு உயர்ந்தது. இவ்வாறு செய்ததால் தான் விக்டோரியா இராணி கால மக்களுடைய வாழ்க்கைத் தரம் உயர்ந்தது. தொழிலாளர்கள் புதிய வேலை வாய்ப்புக்களைப் பெற்றதால்தான் விவசாயம் குறைந்துசெல் விளைவு விதிக்கு (Law of Diminishing Returns) உட்படாமல் இருந்தது; நாட்டின் முன்னேற்றமும் தடையாகாமல் இருந்தது.

**பன்னாட்டு வர்த்தக விதி இரண்டுக்கு மேற்பட்ட நாடுகளுக்கும் பொருந்தும்**

இரு நாடுகளைக்கொண்டு உதாரணத்தின்மூலம் நாம் விளக்கிய தத்துவம் எல்லா நாடுகளுக்கும் பொருந்தும். ஒரு நாடு வர்த்தகத் தொடர்பு கொண்டிருக்கும் மற்ற எல்லா நாடுகளையும் ஒரே நாடாகக் கருதலாம். ஆனால் அரசியலார், பன்னாட்டு வாணிகத்தைக் கட்டுப்படுத்தினால் எந்த நாடும் மற்ற நாடுகளை எல்லாம் ஒரே நாடாகக் கருதமுடியாது. இந்த நிலையில் இரு நாடுகளுக் கிடையே மூன்றாவது நாடு ஒன்று வருவதால் பன்னாட்டு வர்த்தக விதி அவைகளிடையே ஏற்படும் வர்த்தகத்திற்குப் பொருந்தாது. இங்கிலாந்து சாம்ராச்சியச் சலுகைக் கொள்கை (Policy of Imperial Preference) மூலம் இங்கிலாந்தின் வர்த்தகத்தைச் சில வழிகளில் திருப்பலாம். இயற்கைச் சக்திகள் பன்னாட்டு வர்த்த கத்தைப் பாதிக்காமல் செயற்கைச் சக்திகளே பாதிக்கின்றன. வர்த்தக ஒப்பந்தங்களும் இவ்வாறு பன்னாட்டு வர்த்தகத்தைப் பாதிக்கின்றன. சலுகை அல்லது ஓரம் காட்டினால் எல்லா நாடுகளுக்கும் வர்த்தகத்தில் கலந்துகொள்ள ஒரே மாதிரியான வாய்ப்புக்கள் கிடைப்பதில்லை. ஒரு நாடு வர்த்தக ஒப்பந்தம் மூலம் மற்றொரு நாட்டில் தன் ஏற்றுமதித் தொழிலுக்கு ஒரு மார்க் கட்டை ஏற்படுத்திக் கொள்ளலாம். மற்ற நாடுகள் இந்த மார்க் கட்டைப் பயன்படுத்த முடியாத நிலையில் இருக்கலாம். இந்த நிலையில் தனியாட்கள் செய்யும் பேரம் பன்னாட்டு வர்த்தகத்தைப் பாதிக்காது. அரசாங்கங்கள் பேரம்செய்து, பன்னாட்டு வர்த்த கத்தை எவ்விதத்திலும் மாற்றலாம். தனி உற்பத்தியாளர் களிடையே தடையற்ற போட்டி நிலவுவதில்லை. அரசாங்கங்கள் தம் பொருளாதார நிலையையும், அதிகாரத்தையும் நிலைநாட்டும் நோக்கத்துடன் சில கொள்கைகளைப் பின்பற்றுகின்றன; வர்த்தக ஒப்பந்தங்களையும் மற்ற நாடுகளுடன் செய்துகொள்கின்றன. இவ்வாறு வர்த்தக ஒப்பந்தங்களைச் செய்து கொள்வதில் உலக

நாடுகளிடையே ஒரு போட்டி ஏற்படுகின்றது. ஆனால் இத்தகைய செயற்கைச் சக்திகள் வர்த்தகத்தை அதிகம் பாதிக்கவில்லை. ஆகையால் நாம் மேலே விளக்கிய விதி இன்றும் பன்னாட்டு வர்த்தகத்திற்குப் பொருந்தும். அரசாங்கங்களும் ஒப்பந்தங்களைச் செய்து கொள்ளும்பொழுது இந்த விதியைப் புறக்கணித்து வேறு எதையும் பின்பற்றும் என்று நாம் சொல்லமுடியாது.

## பல நாடுகளிடையே நடைபெறும் வர்த்தகம் (Multilateral Trade)

ஒரு நாடு மற்ற உலக நாடுகள் எல்லாவற்றையும் ஒரே நாடாக பாவித்து, அவைகளுடன் வர்த்தகத் தொடர்பு கொள்ளலாம். ஆனால் இதைப் பலர் சரியாகப் புரிந்து கொள்வதில்லை. ஒரு நாடு மற்றொரு நாட்டிலிருந்து வாங்கும் பொருள்களும், அந்த நாட்டுக்குச் செலுத்தும் பொருள்களும் ஒரே மதிப்பைக் கொண்டிருக்கவேண்டும் என்று பலர் கருதுகின்றனர். ஆனால் உண்மையில் ஒரு நாட்டின் மொத்த ஏற்றுமதியும், மொத்த இறக்குமதியும் சமமாக இருந்தால் போதும். ஒரு நாட்டுடன் நமது அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை சாதகமாக இருக்கலாம். நாம் தென் ஆப்பிரிக்காவுக்கு எந்திரங்களை ஏற்றுமதி செய்து கொண்டிருந்தால், டென்மார்க்கிலிருந்து முட்டைகளை இறக்குமதி செய்யலாம். இதைவிடச் சுற்றி வளைத்த முறையில் நாம் டென்மார்க்குக்குச் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்தலாம். தென் ஆப்பிரிக்கா, பிரான்சு தேசத்திற்கு ஆரஞ்சுப் பழங்களை ஏற்றுமதி செய்யலாம். பிரான்சு நாடு டென்மார்க்குக்கு சாராயத்தை அனுப்பலாம். வர்த்தகத் தொடர்பு பல்வேறு நாடுகளிடையே நடைபெறுகின்றது. இரு நாடுகளே இதில் பங்கு கொள்கின்றன என்று நாம் கருதமுடியாது. ஒரு சுரங்கத் தொழிலாளி ரொட்டி வாங்கும்பொழுது, ரொட்டி வியாபாரி தன் நிலக்கரியை வாங்க வேண்டும் என்று அவனைக் கட்டாயப்படுத்துவதில்லை. ரொட்டி வியாபாரி செலுத்தவேண்டிய வாடகைத் தொகைக்காக ரொட்டியைக் கொடுப்பதில்லை. ஒரு நாடும் மற்றொரு நாட்டிலிருந்து இறக்குமதி செய்யும் பொருள்களுக்கு நிகரான மதிப்புள்ள பொருள்களை ஏற்றுமதி செய்யவேண்டுமென்ற கட்டாயம் இல்லை. வேற்று நாடு தன் பொருள்களை வாங்கியதற்காக ஒரு நாடு அதற்கு வந்தனம் செலுத்த வேண்டிய நிலையில் இருக்கும்.[1]

1 ஹெப்டார்க்கி (Heptarchy) என்றழைக்கப்பட்ட 8 நாடுகள் இங்கிலாந்தில் தொடர்ந்து நீடித்திருந்தால், அவைகளிடைப் பல சச்சரவுகள் ஏற்பட்டிருக்கும். அண்மையில் இருக்கும் நாடுகள் ஒன்றை ஒன்று நம்பாமல் இருப்பது இயற்கையே. அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை பாதகமாக இருக்கும் என்றும் அவை அஞ்சும். ஒவ்வொரு நாடும் தன் நலத்தைக் காப்பாற்றிக் கொள்ள அளவுக்கு மீறி முயற்சி செய்யும்.' ஹியூம் (Hume).

## வேறு ஒரு வழி

ஒரே ஓர் உற்பத்திக் காரணி இருக்கிறதென்று நாம் கற்பனை செய்துகொண்டு இதுவரை பன்னாட்டு வர்த்தகத்தைப் பரிசீலனை செய்தோம். இப்படிச் செய்ததால் உதாரணம் எளிதாக இருந்த தோடல்லாமல், அதில் அடங்கிய உண்மையும் தெளிவாகப் புலப் பட்டது. ஆனால் இக்கற்பனை இயற்கைக்கு விரோதமாக இருக் கின்றது. மேலும் பன்னாட்டு வர்த்தகம் ஏன் நடைபெறுகின்றது என்பதை உதாரணம் தெளிவாகக் காட்டவில்லை. ஆகையால் பல்வேறு உற்பத்திக் காரணிகளைக் கொண்டு உற்பத்தியாகும் பொருள்கள் எவ்வாறு விற்பனை செய்யப்படுகின்றன என்பதை நாம் ஆராய்ச்சி செய்யவேண்டும். அதாவது வேறு ஒரு வழியில் நாம் ஆராய்ச்சி செய்யவேண்டும்.

### பன்னாட்டு வர்த்தகமும் பல்வேறு உற்பத்திச் சாதனங்களும்

உற்பத்திச் சாதனங்கள் மிகவும் குறைவாக இருப்பதாலும் பல்வேறு உற்பத்திச் சாதனங்கள் பல நாடுகளில் கிடைப்பதாலும், பன்னாட்டு வாணிகம் இலாபகரமாக இருக்கின்றது. பன்னாட்டு வர்த்தகத்தில் பங்கு கொள்வதால் ஒரு நாடு நலன் அடைகின்றது; உள்நாட்டில் உற்பத்தி செய்யமுடியாத பொருள்களை வெளிநாடுகளி லிருந்து இறக்குமதி செய்யலாம். அயல்நாட்டு வர்த்தகத் தில் பங்குகொள்ள மறுக்கும் ஒரு நாடு, தான் உற்பத்தி செய்யமுடியாத பொருள்களை வாங்கமுடியாது. அது தான் 'வாழும் அறையை' (lebensraum) வேண்டுமென்றே சிறியதாக அமைத்துக் கொள்கிறது. கச்சாப் பொருள்களைப் பொருத்தமட்டில் இவ் வுண்மையை எல்லோரும் உணர்கின்றனர். முக்கியமான கச்சாப் பொருள்களை வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யவேண்டும் என்பதை எல்லோரும் ஏற்றுக் கொள்கின்றனர். இதேபோல் வேண்டிய அளவு மூலதனமும், வேண்டிய தொழிலாளர்களும் ஒரு நாட்டில் இல்லாவிடில் இவ்வுற்பத்திச் சாதனங்களையும் அந்த நாடு வெளிநாடுகளிலிருந்தே பெறவேண்டும். ஒரு நாட்டில் பயிற்சி பெற்ற தொழிலாளர்கள் (Skilled Labourers) பலர் இருக்கலாம். வேறு ஒரு நாட்டில் பயிற்சி பெறாத பல தொழிலாளர்கள் இருக் கலாம். முதல் நாடு பயிற்சிபெற்ற தொழிலாளர்களைக்கொண்டு உற்பத்தி செய்த பொருள்களை இரண்டாவது நாட்டுக்கு அனுப்பி, அதற்குப் பதிலாக பயிற்சி பெறாத தொழிலாளர்களைக்கொண்டு உற்பத்தி செய்த பொருள்களை வாங்கிக் கொள்ளலாம். இப்படிச் செய்வதால் இரு நாடுகளும் பயனடையும். மூலதனப் பற்றுக்குறை இருக்கும் நாடுகள், தொழிலாளர்கள் மிகுதி யாக இல்லாத நாடுகளுடன் வர்த்தகத் தொடர்பு கொள்ளலாம்.

பல நாடுகளில் கிடைக்கும் உற்பத்திச் சாதனங்களின் பற்றுக் குறையில் இருக்கும் வேறுபாடே பன்னாட்டு வர்த்தகத்திற்குக் காரணமாக இருக்கின்றது.

உதாரணமாக இங்கிலாந்தின் நிலை எவ்வாறு இருக்கின்றது என்று இங்குக் காண்போம். இங்கிலாந்தில் மக்கள் தொகை மிகுதியாக இருக்கின்றது. ஆனால் வளமுள்ள நிலம் மிகக் குறைவாகவே இருக்கின்றது. பொறி செய்பொருள்களை இங்கிலாந்து சிறந்த முறையில் உற்பத்தி செய்கின்றது. அதன் மூலதனத்தையும், திறமையையும் சிறந்த முறையில் பயன்படுத்துகின்றது. கனடா, ஆஸ்திரேலியா, அர்ஜன்டைனா முதலிய நாடுகள் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கின்றன. இந்த நாடுகளில் ஏராளமான நிலம் இருக்கின்றது. ஆனால் மக்கள் தொழிலுற்பத்திக்கு வேண்டிய திறமையையும் அனுபவத்தையும் பெற்றிருக்கவில்லை. இங்கிலாந்து இந்த நாடுகளுக்கு எந்திரங்களையும், உயர்ந்த ரகப் பொறி செய்பொருள்களையும் மற்ற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்கின்றது. ஆங்கிலேய பாங்குகளும், இன்சூரன்சுக் கம்பெனிகளும் வர்த்தகக் கப்பல்களும் விவசாய நாடுகளுக்குத் தொண்டாற்றுகின்றன. இங்கிலாந்து இந்த நாடுகளிடம் விவசாயப் பொருள்களையும் உணவுப் பொருள்களையும் வாங்கிக் கொள்கின்றது. இங்கிலாந்து விவசாயப் பொருள்களைக் குறைந்த விலையில் உற்பத்தி செய்யமுடியாது. இதிலிருந்து இங்கிலாந்தில் விவசாயத் தொழில் இல்லை என்றும், ஆஸ்திரேலியாவில் தொழிற்சாலைகள் இல்லை என்றும் நாம் கருதமுடியாது. அழியக்கூடிய பொருள்களையும், கனமான தொழில்களையும் வெகு தொலைவிலுள்ள இடங்களுக்கு அனுப்பமுடியாது. ஆகையால் பால், காய்கறி, புதிய இறைச்சி முதலிய பண்டங்கள் இங்கிலாந்திலேயே உற்பத்தியாகின்றன. ஆஸ்திரேலியாவிலும் சில தொழில்கள் மற்ற நாடுகளின் போட்டியால் பாதிக்கப்படாமல் இருக்கின்றன. மேலும் இங்கிலாந்தில் நிலம் குறைந்த அளவிலேயே கிடைப்பதால் சிறிய நிலப் பகுதிகளை மிகுதியான மூலதனத்தையும் உழைப்பையும் கொண்டு சாகுபடி செய்கின்றனர். அதாவது செறிந்த வேளாண்மை முறையை (Intensive cultivation) பின்பற்றுகின்றனர். ஆஸ்திரேலியாவிலும், கனடாவிலும் ஏராளமான நிலம் இருப்பதால் அந்த நாடுகளில் பரந்த வேளாண்மை முறையைப்(Extensive cultivation) பின்பற்றுகின்றனர். இதனால் ஓர் ஏக்கர் நிலத்தின் உற்பத்தி குறைவாக இருக்கின்றது. ஆனால் ஓர் ஆளின் உற்பத்தி மிகுதியாக இருக்கின்றது.

இங்கிலாந்து பொறிசெய்பொருள்களை மற்ற நாடுகளுக்குக் கொடுத்து, அவைகளிடமிருந்து விவசாயப் பொருள்களையே

பெற்றுக் கொள்கின்றது என்று நாம் கருதக்கூடாது. ஜெர்மனி, அமெரிக்கா போன்ற நாடுகளுடன் இங்கிலாந்து வெகுநாட்களாக நெருங்கிய வர்த்தகத் தொடர்பு கொண்டிருக்கின்றது. மற்ற நாடுகளைவிட அமெரிக்காவிலிருந்து, இங்கிலாந்து அதிகமான பொருள்களை வாங்கியது. அந்த நாட்டுக்கு மிகுதியான பொருள் களையும் ஏற்றுமதி செய்தது. 1913-ல இங்கிலாந்து மற்ற நாடுகளை விட ஜெர்மனி நாட்டிலிருந்து அதிகமான பொருள்களை இறக்குமதி செய்தது. ஆனல் இந்தியாவிலிருந்து ஜெர்மனியைவிட அதிக மான பொருள்களை இறக்குமதி செய்தது. ஆஸ்திரேலியாவுக்கு ஏற்றுமதி செய்ததைப்போல் இரண்டு மடங்கு மதிப்புள்ள பொருள் களை இங்கிலாந்து ஜெர்மனிக்கு ஏற்றுமதி செய்தது. இங்கிலாந்து அமெரிக்காவிலிருந்து பருத்தியை இறக்குமதி செய்தது. ஜெர் மனிக்கு நிலக்கரியை ஏற்றுமதி செய்தது. ஆனல் இங்கிலாந்து முற்றிலும் உற்பத்தியான பொறிசெய்பொருள்களையே பெரும்பாலும் ஏற்றுமதி செய்தது. எல்லா உற்பத்தித் துறைகளிலும் மிகவும் அதிகமான திறமையுடைய தொழிலாளர்கள் ஒரே நாட்டில் இருப் பார்கள் என்று நாம் கருதக்கூடாது. சில நாடுகளில் தொழி லாளர்கள் ரசாயனத் துறையில் திறமை பெற்றிருக்கின்றனர். சில நாட்டுத் தொழிலாளர்கள் துணி உற்பத்தியிலும் சில நாட்டுத் தொழிலாளர்கள் கண்ணுடிப் பொருள் உற்பத்தியிலும், கப்பல் கட்டும் தொழிலிலும் தேர்ச்சி பெற்றிருக்கின்றனர். பல்வேறு நாடு களில் தொழிலாளர்கள் வெவ்வேறு துறைகளில் திறமை பெற்றிருக் கின்றனர். உலக நாடுகளில் உற்பத்திச் சாதனங்கள் வெவ்வேறு அளவில் கிடைப்பதோடல்லாமல், ஆங்காங்கே கிடைக்கும் உற் பத்திச் சாதனங்கள் தரத்தில் வேறுபட்டிருக்கின்றன. பன்னுட்டு வர்த்தகம் இலாபகரமாக இருப்பதற்கு இந்த வேற்றுமைகளே காரணங்களாக இருக்கின்றன.

எந்த நாட்டில் ஓர் உற்பத்திக் காரணி மிகுதியாகக் கிடைக் கின்றதோ, அங்கு அது மலிவாகவும் இருக்கும். மற்ற உற்பத்திக் காரணிகளைவிட மலிவான உற்பத்திக் காரணியை மிகுதியாகப் பயன்படுத்தி உற்பத்தி செய்யும் பொருள்களும் அந்த நாட்டில் மலிவாக இருக்கும். தொழிலதிபர்கள், மலிவான உற்பத்திக் காரணியை மிகுதியாகப் பயன்படுத்துவதற்கு ஏற்ற முறைகளைப் பின்பற்றலாம். விலை உயர்ந்த உற்பத்திக் காரணிகளை மிகுதி யாகப் பயன்படுத்தி உற்பத்தி செய்யும் பொருள்களுடைய விலை அதிகமாக இருக்கும். ஆகையால் மலிவான பொருள்களை மக்கள் ஏற்றுமதி செய்வார்கள். விலை உயர்ந்த பண்டங்களை இறக்குமதி செய்வார்கள். வர்த்தகத்தில் பங்குகொள்ளும் நாடுகள் பயனடை கின்றன. விலையுயர்ந்த பொருள்கள் இறக்குமதியாவதால் உள்

நாட்டில் குறைவாக உள்ள உற்பத்திச் சாதனங்களுடைய தேவை மிகுதியடையாமல் இருக்கும். மிகுதியாக இருக்கும் உற்பத்திச் சாதனங்களுக்கு ஏற்றுமதி வெளிநாடுகளில் தேவையை ஏற்படுத்துகிறது.

இவ்வுண்மையை நாம் இங்கு விவரமாக விளக்குவோம். இது நாடுகளின் தராதரச் செலவில் இருக்கும் வேற்றுமையை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. ஒரு பொருளின் முழுச்செலவில் இரு நாடுகளிடையே வேறுபாடு இல்லாவிடில் அவ்விரு நாடுகளிடையே வர்த்தகம் நடைபெறாது. ஏனெனில் வேறு நாடுகளில் ஒரு பொருள் சொந்த நாட்டைவிட மலிவாக இருந்தால்தான் மக்கள் அப்பொருளை இறக்குமதி செய்வார்கள். எல்லா நாடுகளிலும் உற்பத்திக் காரணிகளின் விலை ஒரே நிலையில் இருந்தால் பொருளின் அடக்கச் செலவும் ஒரே மாதிரி இருக்கும். ஆகையால் வர்த்தகம் நடைபெறாது. உதாரணமாக, தொழிலாளர்கள் எல்லா நாட்டிலும் ஒரே திறமையைக் கொண்டிருந்தால் வர்த்தகம் இலாபகரமாக இராது. பல்வேறு நாடுகளில் உற்பத்திச் சாதனங்கள் வேறுபட்டிருந்தால்தான் பன்னாட்டு வாணிகம் இலாபகரமாக இருக்கும். இச்சாதனங்களுடைய விலைகள் பல்வேறு நாடுகளில் வேறுபட்டிருக்கும். ஆகையால் சில நாடுகளில் சில பொருள்கள் மலிவாக இருக்கும். வேறு சில பொருள்கள் மற்ற நாடுகளில் மலிவாக இருக்கும். பொருள்களுடைய விலைகளில் வேறுபாடுகள் இருக்கும் வரை வர்த்தகம் நடைபெறும்.

பன்னாட்டு வர்த்தகம் உற்பத்திச் சாதனங்களுடைய வருமானத்தைச் சமப்படுத்துவதில்லை. கூலிகள், வட்டிவீதங்கள், வாரம் (Rent) முதலியவை வர்த்தகத்தின் விளைவாக எல்லா நாடுகளிலும் சமமாக இருப்பதில்லை. உதாரணமாக, இந்தியாவில் கூலிகள் குறைவாக இருக்கின்றன. ஏனெனில் இந்தியாவில் ஏராளமான தொழிலாளர்கள் இருக்கின்றனர். ஆனால் இயற்கை வளங்களும் மூலதனமும் குறைவாகவே இருக்கின்றன. இங்கிலாந்தில் மூலதனப் பொருள்கள் ஏராளமாக இருப்பதால் அவை பெறும் வருமானம் குறைவாகவே இருக்கின்றன. தொழில் வளர்ச்சிபெற்ற நாடுகளில் தொழிலாளர்கள் உயர்ந்த கூலியைப் பெறுகின்றனர். ஏனெனில் அவர்கள் சிறந்த எந்திரங்களையும் உற்பத்திச் சாதனங்களையும் கொண்டு பணியாற்றுகின்றனர். ஆனால் தொழில் திறமையும், மூலதனப் பொருள்களும் குறைவாக உள்ள நாடுகளில் தொழிலாளர்கள் குறைவான கூலியையே வாங்குகிறார்கள். இங்கிலாந்தில் ஏராளமான மூலதனப் பொருள்கள் கிடைப்பதால், தொழிலாளர்களுடைய, உற்பத்தியும் அவர்

களுடைய ஊதியமும் மிகுதியாக இருக்கின்றன. உற்பத்திச் சாதனங்கள் ஒரு நாட்டிலிருந்து வேறு ஒரு நாட்டுக்கு எவ்விதத் தடையுமின்றிச் செலுத்தப்பட்டால் அவைகளுடைய வருமானத்தில் வேறுபாடுகள் இரா. கூலிகள் குறைவாக இருக்கும் நாட்டிலிருந்து கூலிகள் அதிகமாக இருக்கும் நாடுகளுக்குத் தொழிலாளர்கள் செல்லலாம். மூலதனமும் அதிக வருமானம் கிடைக்கும் இடத்தை நோக்கிச் செலுத்தப்படலாம். உற்பத்திச் சாதனங்களுடைய வருமானம் உலகெங்கும் ஒன்ருகும்வரை, அவை சில நாடுகளிலிருந்து வேறு சில நாடுகளுக்குச் செலுத்தப்படும். ஆனால் உற்பத்திச் சாதனங்களுக்கு அதிகம் இடப்பெயர்ச்சி இல்லாததால் அவை தம் சொந்த நாடுகளைவிட்டு அகலுவதில்லை. ஒவ்வொரு நாட்டிலும் சில உற்பத்திச் சாதனங்கள் மிகுதியாகவும், வேறு சில குறைவாகவும் இருக்கின்றன. ஆகையால் உலக நாடுகளில் மிகுதியாக உள்ள உற்பத்திச் சாதனங்கள் குறைவான வருமானத்தையும், குறைவாக உள்ள உற்பத்திச் சாதனங்கள் உயர்ந்த வருமானத்தையும் பெறுகின்றன.

பன்னாட்டு வர்த்தகம் பல்வேறு உற்பத்திச் சாதனங்களுடைய வருமானங்களைச் சமப்படுத்தாவிடினும் அவைகளிடையே இருக்கும் வேறுபாடுகளைக் குறைக்கும். வர்த்தகம் இல்லாவிடில் நாடுகளில் சில உற்பத்திச் சாதனங்கள் மிகவும் அதிகமாகவும், சில மிகவும் குறைவாகவும் இருப்பதால் சில சாதனங்களுடைய வருமானம் மிகவும் குறைவாகவும் சிலவற்றின் வருமானம் மிகவும் அதிகமாகவும் இருக்கும். சில நாடுகளில் கூலி மிகவும் குறைவாகவும், வட்டிவீதம் மிகவும் அதிகமாகவும் இருக்கும். வர்த்தகம் கூலியை உயர்த்துகின்றது; மற்ற நாட்டுக் கூலிக்கும் இந்த நாட்டில் நிலவும் கூலிக்கும் உள்ள வேற்றுமையைக் குறைக்கின்றது. ஏற்றுமதிப் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்கள் அயல் நாடுகளில் தம் பண்டங்களைக் குறைந்த விலையில் விற்பனை செய்யலாம். தொழிலாளர்களுடைய உழைப்புக்கு ஒரு புதிய தேவை ஏற்படுவதால் அவர்களுடைய கூலி உயரும். போருக்குமுன் ஜப்பானில் ஏற்றுமதித் தொழில் பெருகியதால் தொழிலாளர்களுடைய கூலிகள் உயர்ந்தன. ஜப்பானில் கூலிகள் மற்ற நாடுகளில் இருந்த நிலைக்குக் கிட்டத்தட்ட உயர்ந்தன. உற்பத்திச் சாதனங்கள் உயர்ந்த வருமானம் பெறும் நோக்கத்துடன் வேறு நாடுகளுக்குச் செல்வதால் ஏற்படும் விளைவுகள், பன்னாட்டு வர்த்தகத்தினாலும் ஏற்படும். ஜப்பானியத் தொழிலாளர்களை ஒரு நாட்டில் குடியேற அனுமதிப்பதற்குப் பதிலாக, அந்த நாட்டின் பொருள்களை வாங்கலாம். ஒரு நாட்டின் மக்கள் அயல் நாட்டுப் பொருள்களை வாங்கும்பொழுது அயல் நாட்டினர் தம் நாட்டுத் தொழிலாளர்களுடன் போட்டியிடு

வதை அனுமதிக்கின்றனர். ஆனால் ஜப்பானுக்கும் மற்ற நாட்டுக்கும் இடையே உள்ள தொலைவு இப் போட்டியை ஓரளவு குறைக்கின்றது. ஆங்கிலேயர்களிடம் மூலதனத்தைப் பெறமுடியாத ஒரு நாட்டினர், மிகுதியான மூலதனத்தைக்கொண்டு உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை இங்கிலாந்திலிருந்து வாங்கலாம். ஜப்பானில் கூலிகள் உயரும். ஆனால் ஜப்பானியத் தொழிலாளர்கள் மற்ற நாடுகளில் குடி புகுந்தால் அவர்களுடைய கூலிகள் உயரும் அளவுக்கு ஏற்றுமதி அவர்களுடைய கூலிகளை உயர்த்தாது. ஆங்கிலேயர்கள் வெளிநாடுகளில் முதலீடு செய்வதால் அவர்கள் அதிகமான இலாபம் பெறுவர். பொருள் ஏற்றுமதி அவர்களுடைய இலாபத்தை அவ்வளவு தூரம் உயர்த்தாது.

ஒரு நாட்டில் கூலிகள் குறைவாக இருப்பதால் அந்த நாட்டுடன் வர்த்தகத் தொடர்பு கொள்ளக்கூடாது என்ற கருத்து மிகவும் தவறானது என்பது புலப்படுகிறது. அந்த நாட்டின் பொருள்களை வாங்க மறுப்பதால் நாம் அந்த நாட்டில் கூலிகளை மேலும் குறைக்கின்றோம். நாம் அந்த நாட்டின் தொழிலாளர்களுடைய உழைப்புக்கு ஏற்படும் தேவையைக் குறைக்கின்றோம். அந்த நாட்டில் நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்களுடைய கூலி குறைவாக இருந்தால், அதை ஆட்சேபித்து நாம் அந்த நாட்டின் நிலக்கரியை வாங்க மறுப்பது தவறு. ஏனெனில் நாம் அவ்வாறு செய்வதால் கூலிகள் மேலும் குறையும். நாம் நிலக்கரியை வாங்க மறுப்பதால் நமது நலனும் பாதிக்கப்படும்; நம் வாழ்க்கைத் தரமும் குறையும். ஒரு வேற்று நாட்டிலிருந்து நாம் இரும்புக் கனியை மலிவாக வாங்கமுடிந்தால், அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். ஆனால் நம் நாட்டில் இரும்புச் சுரங்கத் தொழிலாளர்கள், இறக்குமதியால் வேலையை இழக்க நேரிட்டாலோ, அல்லது இரும்புத் தொழிலை நாம் அடிப்படைத் தொழிலாகக் கருதி உள்நாட்டில் வளர்க்க விரும்பினாலோ, அயல் நாட்டிலிருந்து இரும்பை இறக்குமதி செய்ய மறுக்கலாம். அயல் நாடுகள் மலிவான துணியை விற்பனை செய்தால் நாம் அதை வாங்க மறுக்கக்கூடாது. ஆனால் நம் நாட்டில் ஆலைத் தொழிலாளர்கள் வேலை வாய்ப்புக்களை இழக்காமல் இருப்பதற்காக நாம் அயல் நாட்டுப் பொருள்களை இறக்குமதி செய்ய மறுக்கலாம். இந்த நிலையில் அயல் நாட்டுத் தொழிலாளர்களுடைய கூலியை உயர்த்துவதற்காக நாம் துணியை இறக்குமதி செய்யமுடியாது. ஏனெனில் உள்நாட்டில் தொழிலாளர்கள் வேலையை இழக்காமல் இருக்க வேண்டும். இறக்குமதிப் பொருள்கள் மலிவாக இருப்பதற்கு எது காரணமாக இருந்தாலும், மலிவான பொருள்களை இறக்குமதி செய்ய நாம் மறுக்கமுடியாது. தொழிலாளர்களோ அல்லது வேறு

எந்த உற்பத்திக்காரணியோ குறைந்த ஊதியத்தைப் பெறும் காரணத்தால் நாம் ஒரு நாட்டின் பொருள்களை வாங்க மறுக்க முடியாது. இறக்குமதி நம் நாட்டுப் பொருளாதாரத்தைப் பாதித்தால் தான் நாம் அதைத் தடைசெய்யலாம்.

ஜப்பானில் கூலிகள் உயர்வதால் இங்கிலாந்து பயனடையுமா என்பதைப் பற்றி நாம் ஒன்றையும் திட்டவட்டமாகக் கூற முடியாது. ஜப்பானியத் தொழிலாளர்கள் இறக்குமதிப் பொருள்களை வாங்குவதற்காகப் பணத்தை அதிகமாகச் செலவு செய்யாமல் இருக்கலாம். ஆனால் முதலாளிகள் மிகுதியான தொகையைச் செலவுசெய்து எந்திரங்களை இறக்குமதி செய்யலாம். இந்த நிலையில் ஜப்பானிய முதலாளிகளுடைய வருமானத்தைவிடத் தொழிலாளர்களுடைய வருமானம் உயர்ந்தால் ஜப்பானிய இறக்குமதி பாதிக்கப்படும். ஜப்பானுடன் பொருள்களை விற்பனை செய்வதில் இங்கிலாந்து போட்டியிடும் மார்க்கட்டைவிட, ஜப்பானிய இறக்குமதி மார்க்கட்டு முக்கியமானதாக இருக்கலாம். இந்த நிலையில் ஜப்பானில் கூலிகள் உயர்வது இங்கிலாந்துக்கு எவ்வித நன்மையும் பயக்காது, இங்கிலாந்துக்கு இது தீமையையே விளைவிக்கும்.

அயல்நாட்டு மார்க்கட்டுகளில் போட்டி வளர்ந்தால் அதனால் இங்கிலாந்து எவ்வாறு பாதிக்கப்படும் என்பதை விற்பனையாகும் பொருள்களே நிர்ணயம் செய்யும். சில உற்பத்திச் சாதனங்கள் (உதாரணமாகப் பயிற்சிபெற்ற தொழிலாளர்கள்) இங்கிலாந்தில் மிகுதியாகக் கிடைக்கின்றன. ஆனால் அயல்நாடுகளில் இச் சாதனங்கள் மிகவும் குறைவாகவே கிடைக்கின்றன. மற்ற நாடுகள் ஆங்கிலேயத் தொழிலாளர்களுடைய பணியைப் பயன்படுத்திக் கொள்ளும் வரை அவர்களுடைய கூலி அதிகமாகவே இருக்கும். ஆனால் அயல்நாடுகளிலும் பயிற்சி பெற்ற தொழிலாளர்களுடைய எண்ணிக்கை பெருகினால் இங்கிலாந்து தராதர வசதியை இழக்கலாம். மேலும் மற்றநாடுகளில் புதிய நிலக்கரிச் சுரங்கங்களை மக்கள் கண்டுபிடிக்கலாம்; மூலதனமும் பெருகலாம். இங்கிலாந்து குறைவான அளவில் பெற்றிருக்கும் உற்பத்திச் சாதனங்கள் அங்குப் பெருகினால், அதாவது புதிய நாடுகளை இங்கிலாந்து கைப்பற்றினால், அல்லது புதிய சிக்கனமான சாகுபடி முறைகளைப் பின்பற்றினால் வர்த்தகம் முன்பைவிட இங்கிலாந்துக்குச் சாதகமாக இருக்கும். நம்நாட்டில் குறைவான அளவில் உற்பத்தியாகும் பொருள்களை விற்பனை செய்வதில் உலக மார்க்கட்டில் போட்டி வளர்ந்தால் அது நமக்கு நன்மை பயக்கும். நம்நாட்டில் மிகுதியாகக் கிடைக்கும் பொருள்களை விற்பனை செய்வதில் போட்டி வளர்ந்தால், அது நமக்குத் தீமையையே விளைவிக்கும்.

ஆனால் உலகமார்க்கட்டில் ஏற்படும் போட்டியை நாம் எவ்விதத்திலும் மாற்றமுடியாது. ஏற்றுமதிப் பொருள்களை உற்பத்திசெய்யும் தொழில்களே இப்போட்டியால் பாதிக்கப்படும். மற்றத் தொழில்களையும் போட்டி பாதித்தால், ஒரு நாடு அதைவிட்டு விலகி இருப்பதால் நிலைமை மேலும் மோசமாகலாம்.

போட்டி பல்வேறு வகுப்பினரை வெவ்வேறு முறையில் பாதிக்கும். போட்டி புதிய மார்க்கட்டுகளை வெளிநாடுகளில் ஏற்படுத்துவதால், ஒருநாட்டில் மிகுதியாகக் கிடைக்கும் உற்பத்திச் சாதனங்கள் பயனடைகின்றன. குறைவாகக் கிடைக்கும் சாதனங்கள் அயல்நாட்டினர் போட்டியைச் சமாளிக்கவேண்டும். உதாரணமாக அயல்நாட்டு வர்த்தகம் ஆங்கிலேய முதலாளிகளுக்கு இலாபகரமாக இருக்கின்றது. அயல்நாட்டு வர்த்தகம் இல்லாவிடில் ஆங்கிலேய நிலச்சுவான்தார்கள் பயனடைவார்கள். ஆனால் பன்னாட்டு வர்த்தகம் ஒரு நாட்டுக்கு நன்மை பயக்கும் என்பதை நாம் உணரவேண்டும். அன்னியநாட்டுடன் வர்த்தகத் தொடர்பு கொள்ளாவிடில் பல முக்கியமான பொருள்களைப் பயன்படுத்த முடியாது. இந்தநிலையில் ஒரு நாடு ஏற்றுமதிப் பொருள்களை உற்பத்தி செய்யமுடியாது. இறக்குமதிப் பொருள்களுக்குப் பதிலாக உள்நாட்டில் வேறுபொருள்களை உற்பத்திசெய்யவேண்டும். பல நாடுகள் பன்னாட்டு வர்த்தகத்தால் நன்மையடைகின்றன. பன்னாட்டு வர்த்தகம் மறைந்தால் அவை ஏராளமான தொகையை இழக்க நேரிடும். அயல்நாட்டு வர்த்தகத்தின் மூலம் ஒரு நாடு பெறும் பலனைப் பெரும்பாலும் எல்லோரும் அனுபவிப்பார்கள். நிலம் குறைவாக உள்ள நாடுகள், தன்னிறைவுடன் (Self sufficiency) இருந்தால், விவசாயப் பொருள்களின் விலைகளும், வாரமும் (Rent) மிகுதியடையும். இதனால் நிலச்சுவான்தார்கள் பயனடைவார்கள். இங்கிலாந்தில் மற்ற நாடுகளைவிடப் பயிற்சி பெறாத தொழிலாளர்கள் குறைவாகவே இருக்கின்றனர். ஆகையால் அயல்நாட்டு வர்த்தகம் அவர்களைப் பாதிக்கும் என்று நாம் கருதலாம். ஆனால் உண்மையில் மற்ற நாடுகள் ஆங்கிலேயப் பண்டங்களை இறக்குமதி செய்வதால், அப் பொருள்களை உற்பத்திசெய்வதற்கு ஏராளமான பயிற்சிபெறாத தொழிலாளர்கள் வேண்டும். பயிற்சி பெறாத தொழிலாளர்களுக்கும் வேலை வாய்ப்புகள் கிடைக்கின்றன. மேலும் இங்கிலாந்து மலிவான உணவுப் பொருள்களை இறக்குமதி செய்வதால் தொழிலாளர்களுடைய செலவு குறைவாக இருக்கும். பன்னாட்டு வர்த்தகத்தால் பயிற்சி பெறாத தொழிலாளர்கள்கூட பயிற்சி பெற்ற தொழிலாளர்களைப் போல் நலன் அடைகின்றனர். இங்கிலாந்தைப் போல் எல்லா நாடுகளும் அயல்நாட்டு வர்த்தகத்தை நம்பி வாழவில்லை. சில வகுப்பினர் அயல்நாட்டு வர்த்தகத்

தால் சிறந்த பயனடைவார்கள்; ஆனால் வெகுசிலரே பாதிக்கப்படு வார்கள்.

**மேலே விளக்கப் பெற்றுள்ள கோட்பாட்டின் உட்கருத்துகள்**

(Marginal theory of Value) இறுதிநிலை மதிப்பு விதியைப் பயின்ற பிறகு ஒருவன் தலையிடாக் கொள்கையே (Laissez Faire Policy) மிகச் சிறந்தது என்று கருதலாம். அதேபோல் தராதரக் கோட்பாட்டைப் (Theory of Comparative costs) பயின்ற பிறகு தடையற்றவர்த்தகக்கொள்கையையே(Free Trade policy)ஒருநாடு பின்பற்றவேண்டும் என்று சிலர் கருதக்கூடும். ஆனால் உள்நாட்டு வர்த்தகத்தை ஒருநாடு எவ்வாறு பல நோக்கங்களுடன் கண் காணிக்கின்றதோ, அதேபோல் பன்னாட்டு வர்த்தகத்தையும் கண்காணிக்கவேண்டும். இதற்குப் பல காரணங்கள் இருக் கின்றன.

பல்வேறு நாடுகள் பல்வேறு பொருள்களை உற்பத்தி செய்வ தால் பல நன்மைகள் ஏற்படுகின்றன என்ற காரணத்தால் ஒவ் வொரு நாடும் தடையற்ற வர்த்தகத்தால் நன்மை பெறும் என்று நாம் கூறமுடியாது. வர்த்தகத் தடைகள் ஒரு குறிப்பிட்ட நாட்டுக்கு நன்மை பயக்கலாம். ஆனால் பொதுவாக உலக மக்களுக்கு, வர்த்தத் தடைகள் தீமைகளையே விளைவிக்கும். மற்ற நாடுகள் சுங்க வரிகளை (tariffs) விதித்தால் ஒரு நாடு தன் நலத் தைக் காப்பாற்றிக்கொள்ளும்எண்ணத்துடன் சுங்க வரிகளை விதிக் கலாம். வேற்று நாடுகளுடன் பேரம் (bargain) செய்வதற்காக ஒரு நாடு சுங்க வரிகளை விதிக்கலாம். மற்ற நாடு காட்டும் வர்த்த கச் சலுகைகளுக்குப் பதிலாக ஒரு நாடு அந்த நாடுகளுக்குப் பிரதிச் சலுகைகளைக் காட்டலாம். பொருள்களின் விலைகளைத் தனக்குச் சாதகமாக ஏற்படுத்திக் கொள்வதற்காக ஒரு நாடு சுங்க வரிகளை விதிக்கலாம். உதாரணமாக ஒரு நாடு விற்பனை செய்யும் பொருள்களுக்கு மற்ற நாடுகளில் இருக்கும் தேவையும், அவைகளிடமிருந்து வாங்கும் பொருள்களின் அளிப்பும் (Supply) நெகிழ்ச்சியற்றதாக (inelastic) இருந்தால், அந்த நாடு விலைகளைத் தனக்குச் சாதகமாக மாற்றிக்கொள்ள முயற்சி செய்யும். உலக நாடுகள் ஒரு பொருளை ஒரே நாட்டிலிருந்து பெற்றால், அந்த நாடு ஏற்றுமதி வரிகளை (export duties) விதித்து, அப்பொருளின் விலையை உயர்த்தலாம். உலகநாடுகள் ஒரு பொருளை ஒரே நாட்டில் விற்பனை செய்யவேண்டியிருந்தால், அந்த நாடு வரிகளை விதித்து, அப்பொருளின் விலையைக் குறைக்க லாம்.

பெருவாரி உற்பத்திமுறை (large scale production) இலாபகரமாக இருக்கலாம். ஒரு நாடு இந்த முறையில் மற்றத் தொழில்களை விட ஒரு குறிப்பிட்ட தொழிலைப் பெருக்கலாம். இவ்வாறு செய்வதால் ஒரு நாடு அடக்கச் செலவைக் குறைத்துப் பொருளை உள்நாட்டில் ஒரு விலையிலும், அயல்நாடுகளில் அதைவிடக் குறைந்த விலையிலும் விற்பனை செய்யலாம். இந்த முறையைப் பின்பற்றும் ஒரு நாடு காப்பு வரிகளை (Protective duties) விதிக்கும். குறைந்த விலையில் வெளிநாடுகளில் விற்பனையாகும் பொருள்கள் மீண்டும் உள்நாட்டுக்கு அனுப்பப்படும் என்ற அச்சமின்றி உற்பத்தியாளர்கள் 'டம்பிங்' (Dumping) முறையைப் பின்பற்றுவார்கள். 'டம்பிங்' முறையை எதிர்த்து வேற்று நாட்டினர் சட்டமியற்றலாம். ஆகையால் ஒரு நாடு மற்ற நாடுகளில் புதிய மார்க்கட்டுகளை வளர்க்க முயற்சி செய்யலாம்; புதிய மார்க்கட்டை வளர்ப்பதற்காகச் செய்யும் செலவை அயல்நாட்டினரிடமிருந்து வசூல் செய்யாமல் இருக்கலாம்.

பல்வேறு நாடுகளில் தொழிலாளர்கள் கொண்டிருக்கும் திறமையில் வேற்றுமைகள் இருப்பதாலும், மார்க்கட்டுகளைப் பல நாடுகளில் நிறுவுவதில் எல்லா நாடுகளுக்கும் ஒரேவிதமான வாய்ப்புகள் இல்லாமையாலும் வர்த்தகம் ஏற்படுகின்றது. அதாவது இன்று தராதரச் செலவுகளில் நாடுகளிடையே நிலவும் வேறுபாடுகளே வர்த்தகத்திற்குக் காரணமாக இருக்கின்றன. சில தொழில்கள் எதிர்காலத்தில் நன்கு வளரலாம்; ஆனால் தற்காலத்தில் அவை வளர்ச்சியடைவதற்கு ஏற்ற சூழ்நிலை நாட்டில் நிலவாமல் இருக்கலாம். அதாவது அவை இப்பொழுது அடக்கச் செலவைக்கூட விற்பனை மூலம் பெறுமல் இருக்கலாம். ஆனால் எதிர்காலத்தில் அவைகளுக்கு அரிய வாய்ப்புகள் ஏற்படலாம். இறுதி நிலை உற்பத்தியும் செலவும் தொழில் வளர்ச்சியைப் பாதித்தால், பொருள்களின் விலைகளும் அதைப் பாதிக்கும். ஆனால் வளர்ச்சியடையும் ஒரு நாட்டில் நிலைமை வேறுபட்டிருக்கும். உற்பத்தியாளர்களுடைய செயல்களும், பொருள்களைப் பயன்படுத்துவோருடைய செயல்களும் தொழில் வளர்ச்சியைப் பாதிக்கா. நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு ஒரு தூண்டுதலைக் கொடுக்கவேண்டுமென்று அரசினர் விரும்பினால், உடனடியாகக் கிடைக்கக்கூடிய இலாபத்தை கருதாமல் நீண்டகால வளர்ச்சிக்கு ஒரு திட்டம் வகுத்து, அதைச் செயற்படுத்தவேண்டும்.

பல ஆண்டுகளுக்குமுன் தடையற்ற வர்த்தகத்தை ஆதரித்தவர்கள்கூட, தொடக்கக் காலத்தில் தொழில்களைக் காப்பு வரிகள் மூலம் ஆதரிக்கவேண்டும் என்று கூறினார்கள். அதாவது ஒரு

தொழில் நன்கு வளர்ந்து அயல்நாட்டுப் போட்டியைச் சமாளிக்க வல்ல நிலைமையை அடையும்வரை அதைக் காப்பு வரிமூலம் ஆதரிக்கவேண்டும். இன்று அரசினர் புதிய தொழில்களுக்கு மட்டுமன்றி, மற்றத் தொழில்களுக்கும் காப்பு வரிகள்மூலம் ஆதரவு கொடுக்கின்றனர். எல்லாத் தொழில்களுக்கும் பாதுகாப்பு (Protection) அளிக்கவேண்டுமென்று நாம் இங்குக் கூறவில்லை. இக்காலத்தில் அரசாங்கம் தலையிடாக் கொள்கையை ஏற்றுக் கொள்ளவில்லை; இயற்கையான பொருளாதார சக்திகளே வர்த்தகத்தை பாதிக்கவேண்டுமென்ற கருத்தை அரசாங்கம் ஏற்றுக் கொள்ளவில்லை. உள்நாட்டுத் தொழில்களுக்கு எவ்வித ஆதரவு கொடுக்கவேண்டும் என்பதைப் பற்றியும், இவ்வாறு கொடுக்கும் ஆதரவு எவ்வளவு தூரம் வர்த்தகத்தைப் பாதிக்கலாம் என்பதைப் பற்றியும் பொருளியலாரிடம் கருத்து வேற்றுமை இருக்கின்றது.

உலகில் மாறுதல்கள் ஏற்படுவதில்லை; மார்க்கட்டுகள் ஒரே நிலையில் இருக்கின்றன என்று கற்பனை செய்துகொண்டால்தான் தராதரக் கோட்பாட்டுச் செலவு விதியில் (Theory of Comparative Costs) நாம் உண்மை காணமுடியும். ஆனால் உண்மையில் பல மாறுதல்கள் ஏற்படலாம். தொழில் செறிந்த நாடுகளில் வேலையின்மை ஏற்படலாம். விவசாய நாடுகளில் விலைகளும், மக்களுடைய வருமானமும் மாறலாம். அயல்நாட்டு வர்த்தகம் அளிக்கும் நன்மையைவிட, இந்த மாறுதல்கள் பல தீமைகளை விளைவிக்கின்றன. அயல்நாட்டு மார்க்கட்டுகள் நிலையற்ற தன்மையைக் கொண்டிருப்பதால் ஒரு நாடு காப்பு வரிகள் மூலம் உள்நாட்டுத் தொழில்களைப் பாதுகாக்கவேண்டும். பரந்த மார்க்கட்டுகளை ஏற்படுத்துவதற்காகவும், (ஏற்றுமதியையே நம்பி வாழாமல் இருப்பதற்காக) உள்நாட்டில் வேறு தொழில்களை வளர்ப்பதற்காகவும் ஒரு நாடு பன்னாட்டு வர்த்தகத்தைத் தடைகளுக்குட்படுத்தலாம். ஒரு நாடு மற்ற நாடுகளுடன் நீண்டகால வர்த்தக ஒப்பந்தங்களைச் செய்துகொள்ளலாம்; சில நாடுகள் நிறுவும் வர்த்தகச் சங்கங்களில் சேரலாம்.

உள்நாட்டிலும் அயல்நாடுகளிலும் அவ்வப்போது ஏற்படும் மாறுதல்களை நாம் மனத்தில் கொண்டால், பன்னாட்டு வர்த்தகக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்ட கொள்கையை ஒரு நாடு பின்பற்றமுடியாது என்பதை அறியலாம். தடையற்ற போட்டியை ஒரு நாடு அனுமதிக்காது. எனினும் இவ்வதிகாரத்தில் விளக்கியுள்ள கருத்துக்களை நாம் புரிந்துகொள்ளவேண்டும்.

# 32. பன்னாட்டு நிதி
## (International Finance)

### அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை
### (Balance of Payments)

ஒரே நாட்டில் ஒருவர் மற்றொருவருக்குப் பணத்தைச் செலுத்தலாம். அதே போல் ஒரு நாடு மற்றொரு நாட்டுக்கு ஒரு தொகையைச் செலுத்தலாம். ஆனால் இவ்விரண்டுக்கும் வேற்றுமை உண்டு. ஒவ்வொரு நாடும் ஒரு தனிச் செலாவணியைக் கொண்டிருக்கின்றது. ஒரு நாட்டில் மற்றொரு நாட்டின் செலாவணி ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. அயல்நாட்டுச் செலாவணியை விரும்புவோர் தம் சொந்த நாட்டுச் செலாவணியைக் கொடுத்து, வேற்று நாட்டுப் பணத்தைப் பெறவேண்டும். இரு செலாவணிகளுக்கும் இடையே ஒரு மாற்று வீதம் (rate of exchange) ஏற்படுத்தப்படுகின்றது. இந்த வீதம் ஒரு விலையாக இருப்பதால் இது இரு செலாவணிகளுடைய தேவையையும் அளிப்பையும் சமப்படுத்துகின்றது. அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை ஒரு நாட்டுக்குப் பாதகமாக இருந்தால், அந்த நாட்டினர் அயல்நாட்டுச் செலாவணியை அதிகமாக வாங்குவார்கள். நிலையான நாணய மாற்று வீதம் (fixed exchange rate) அமுலில் இல்லாவிடில் அயல்நாட்டுச் செலாவணியின் மதிப்பு உயரும். அதாவது உள்நாட்டுச் செலாவணியின் மதிப்புத் தாழ்வடையும்.

அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை ஒரு நாட்டுக்குச் சாதகமாகவோ அல்லது பாதகமாகவோ இருக்கலாம். இதுவே நாணய மாற்றுக் கோட்பாட்டின் (Theory of Foreign Exchange) அடிப்படையாக இருக்கின்றது. விற்பனையும் வாங்கலும் சமமாகவே இருக்கவேண்டும். ஆகையால் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை எப்பொழுதும் சமநிலையில் தான் இருக்கவேண்டும் என்று நாம்

கூறலாம். அதாவது, இரு நாடுகள் செலுத்திய தொகைகள் எல்லாவற்றையும் கணக்கில் சேர்த்தால் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் துண்டு (deficit) ஏற்படாது. ஒரு நாட்டின் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை பாதகமாக இருக்கின்றது என்று நாம் குறிப்பிடும் பொழுது, அதில் சேர்ந்துள்ள சில இனங்களை (items) கணக்கில் சேர்த்துக்கொள்வதில்லை. உதாரணமாக ஒரு நாடு மற்றென்றுக்குச் செலுத்தும் பொன்னைக் கணக்கில் சேர்த்துக் கொள்ளத் தவறலாம். அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் ஏற்படும் துண்டை அகற்றுவதற்காக ஒரு நாடு தாற்காலிகமாகவே பொன்னை மற்றென்றுக்கு அனுப்பலாம். ஒரு நாடு எப்பொழுதுமே மற்றென்றுக்குப் பொன்னை ஏற்றுமதி செய்துகொண்டிருக்க முடியாது. 'அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை' என்றதின் பொருள் பல்வேறு சந்தர்ப்பங்களில் பல வகைப்பட்டிருக்கலாம். சில இனங்களைக் கணக்கில் சேர்க்காவிடில் அதன் பொருள் வேறுபடும். அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் விழும் துண்டோ அல்லது அதன் உபரியோ (Surplus)முக்கியமாக இல்லை. கொடுப்பல் நிலையில் சமநிலையை ஏற்படுத்துவதற்கு நாம் பின்பற்றும் வழிகளே முக்கியமானவை.

கொடுப்பல் நிலையில் உள்ள மூன்று விதங்களை நாம் இங்குக் காணலாம்.[1]

(I) வாணிகக் கொடுப்பல்நிலை (The Balance of Trade). பாதகமான அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையைப் (unfavourable balance of payments) பற்றி நாம் பேசும்பொழுது, ஒருநாட்டின் ஏற்றுமதியைவிட இறக்குமதி மிகுதியாக இருக்கின்றது என்று குறிப்பிடலாம். ஏற்றுமதி இறக்குமதி பற்றிய விவரங்களை ஒரு நாடு மாதந்தோறும் வெளியிடுவதாலும், அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் இறக்குமதி ஏற்றுமதியும் ஒரு முக்கியமான இடத்தைப் பெற்றிருப்பதாலும் நாம் சாதாரணமாக வாணிகக் கொடுப்பல் நிலையைப்பற்றி அடிக்கடி பேசுகிறோம். சென்ற 100 ஆண்டுகளாக இங்கிலாந்தின் வாணிகக் கொடுப்பல் நிலை பாதகமாக இருந்தபோதிலும், அதனால் தீய விளைவு எதுவும் ஏற்படவில்லை. இதிலிருந்து வாணிகக் கொடுப்பல் நிலை முக்கியமானதல்ல என்பதை நாம் அறியலாம்.

(II) நடைமுறை அல்லது வருமானக் (அயல்நாட்டுக்) கொடுப்பல் நிலை. [The balance of payments on current (or income) account]: வர்த்தகத்தைத் தவிர அயல்நாட்டு வாணிகக் கொடுப்பல் நிலையில் புலனாகாத ஏற்றுமதி இனங்களும், இறக்குமதி இனங்களும்

1. 25ஆம் அதிகாரத்தில் உள்ள 19ஆம் பட்டியலை நாம் மீண்டும் பார்த்துப் பயனடையலாம்.

(invisible exports and invisible imports) சேர்ந்திருக்கின்றன. இவைகளை மாதந்தோறும் வெளியிடும் அறிக்கையில் நாம் காண முடியாது. உதாரணமாக ஆங்கிலேய வர்த்தகக் கப்பல்கள் பிரயாணிகளையும், பொருள்களையும் ஏற்றிச் செல்கின்றன. இங்கிலாந்தில் வர்த்தகச் சபை (Board of Trade) ஏற்றுமதியை மதிப்பிடும்பொழுது பொருள்களைக் கப்பலில் ஏற்றும்வரை ஏற்படும் செலவையே [Free on Board (F. O. B)] கணக்கில் சேர்த்துக் கொள்கின்றது. இறக்குமதியை மதிப்பிடும்பொழுது, விலை, இன்சூரன்சு, கூலி [cost, insurance, freight (C.I.F.)] முதலியவை களைக் கணக்கில் சேர்த்துக்கொள்ளவில்லை. ஆகையால் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை உண்மையில் இருப்பதைவிட அதிகம் பாதகமாக இருப்பதுபோல் தோற்றமளிக்கும். இங்கிலாந்தி லிருந்து ஏற்றுமதியாகும் பொருள்களையும், இங்கிலாந்து இறக்கு மதி செய்யும் பொருள்களையும் ஆங்கிலேயக் கப்பல்களே ஏற்றிச் செல்கின்றன. ஆகையால் பொருள்களை மற்ற நாடுகளுக்குச் செலுத்துவதற்குச் செலவுசெய்யும் தொகையை அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் சேர்க்கக் கூடாது. பிரயாணிகளை ஒரு நாட்டிலிருந்து மற்ற நாடுகளுக்கு ஏற்றிச் செல்லும் கப்பல் கம்பெனிகளும், பொருள்களை பல்வேறு நாடுகளுக்குச் செலுத்து வதற்காகப் பணத்தை வசூல் செய்யும் கம்பெனிகளும் ஈட்டும் வருமானத்தை வரவு இனத்தில் சேர்க்கவேண்டும். ஆங்கிலேயக் கப்பல் கம்பெனிகள் மற்ற நாடுகளுக்கு, எரிபொருள்களை வாங்கு வதற்காகவும், துறைமுகக் கட்டணங்களுக்காகவும் செலுத்தும் தொகையைச் செலவு இனத்தில் சேர்க்கவேண்டும்.

ஆங்கிலேய முதலாளிகள் வெளிநாடுகளில் செய்த முதலீடுகள் மூலம் பெறும் வருமானத்தையும் நாம் புலனாகாத இனமாகவே கருதவேண்டும். வெளிநாட்டினர் ஒரு நாட்டில் பெறும் இலாபத்தையும், வட்டியையும் நாம் புலனாகாத ஏற்றுமதியாகவும், வெளிநாட்டினர் செலுத்தும் தொகையைப் புலனாகாத ஏற்றுமதியாகவும் நாம் கருதலாம். இந்த இனங்கள் ஆங்கிலேய வர்த்தகக் கப்பல் கள் செய்யும் தொண்டைப் போன்றவையே. போருக்கு முன் இங்கிலாந்தின் இறக்குமதியில் ¼ பாகம் முதலீடு செய்தவர்கள் பெற்ற வருமானமாகவே இருந்தது. போர்க்காலத்தில் முதலாளி கள் அயல்நாடுகளில் தாம் கொண்டிருந்த சொத்துகளை விற்பனை செய்தனர். ஆகையால் 1956 முதல் '58 வரை ஆங்கிலேய முதலாளிகள் சராசரி 235 மிலியன் பவுன் மதிப்புள்ள வருமானத்தையே அயல்நாடுகளிலிருந்து பெற்றனர். மொத்த இறக்கு மதியின் மதிப்பு 3,500 மிலியன் பவுனாக இருந்தது. இதன் விளைவாக இங்கிலாந்தின் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை பாதிக்கப் பட்டது.

மேற்கூறிய இரு இனங்களைத் தவிர வேறு சில புலனாகாத இனங்களும் இருக்கின்றன. ஆங்கிலேயப் பிரயாணிகள் வெளி நாடுகளுக்குச் செலுத்தும் தொகைகளையும், அயல் நாட்டில் இருக்கும் உறவினருக்கும் நண்பர்களுக்கும் ஆங்கிலேயர்கள் செலுத்தும் தொகைகளையும், குடியேற்ற நாடுகளுக்கு அரசாங்கம் கொடுக்கும் தொகைகளையும், நாம் புலனாகாத இனங்களுடன் சேர்க்கவேண்டும். மற்ற நாடுகள் இதேபோன்ற தொகைகளை இங்கிலாந்துக்குச் செலுத்த வேண்டும். ஆங்கிலேய நிறுவனங்கள் செய்யும் இன்சூரன்சுத் தொழில், ஏற்புத் தொழில், உறுதி கொடுக்கும் தொழில் முதலியவை மூலம் பெறும் வருமானத்தையும் நாம் புலனாகாத இனங்களுடன் சேர்க்கவேண்டும்.

மேலே குறிப்பிட்ட எல்லா இனங்களையும் சேர்த்த பிறகு, ஒரு நாடு ஏற்றுமதிமூலம் அடையவேண்டிய தொகையையும், இறக்குமதிக்காகச் செலுத்தவேண்டிய தொகையையும் நாம் அறியலாம். இதைத்தான் நடைமுறை அல்லது வருமானக் கொடுப்பல் நிலை என்று கூறுகின்றனர். 19ஆம் நூற்றாண்டின் இரண்டாவது பகுதியில் நடைமுறைக் கொடுப்பல் நிலை இங்கிலாந்துக்குச் சாதகமாக இருந்தது. முதல் போர்க்காலம் நீங்கலாக மற்ற எல்லா ஆண்டுகளிலும், 1931 வரை இக் கொடுப்பல் நிலை இங்கிலாந்துக்குச் சாதகமாக இருந்தது. 1931 முதல் 1939 வரை வருமானக் கொடுப்பல் நிலை சில ஆண்டுகளில் இங்கிலாந்துக்குச் சாதகமாகவும் சில ஆண்டுகளில் பாதகமாகவும் இருந்தது. இரண்டாவது போர்க் காலத்தில் கொடுப்பல் நிலையில் பெரிய துண்டு விழுந்தது. இந்த நிலை போருக்குப் பின்பும் நீடித்தது. 1948ஆம் ஆண்டின் இடையில் சமநிலை ஏற்பட்டது. 1950-ல் முதன்முதலாக இங்கிலாந்தின் கொடுப்பல் நிலையில் ஒரு கணிசமான உபரி (Surplus) ஏற்பட்டது. 1955-ல் இவ்வுபரி, சற்றுக் குறைவாக இருந்தது. ஆனால் 1960 வரை கொடுப்பல் நிலையில் உபரி நீடித்தது.

**(III) குறுகியகால அயல்நாட்டுக் கடன் நிலை. (The balance of Short-term indebtedness):** நடைமுறைக் கொடுப்பல் நிலை மிகவும் முக்கியமானதல்ல. ஒரு நாடு அயல்நாடுகளுக்குக் கடன் பட்டிருக்கின்றதா அல்லது அயல் நாடுகள் அதற்குக் கடன் பட்டிருக்கின்றனவா என்பதை மட்டுமே நடைமுறைக் கொடுப்பல் நிலை காட்டுகின்றது. ஒரு நாடு மற்ற நாடுகளிலிருந்து வாங்கும் பொருள்களைவிட அவைகளுக்கு அதிகம் விற்பனை செய்தால், வேற்று நாடுகள் அந்த நாட்டுக்குக் கடன் பட்டிருக்கும் விற்பனை செய்யும் பொருள்களைவிட அதிகமான பொருள்களை அது

வாங்கினால் அது மற்ற நாடுகளுக்குக் கடன்பட்டிருக்கும். ஒரு நாடு மற்றொரு நாட்டிலிருந்து மூலதனத்தைப் பெறுவதால் எவ்விதத் தீங்கும் ஏற்படாது. ஒரு நாடு புதியதாக இருப்புப் பாதைகளை அமைக்கின்றது என்று நாம் கற்பனை செய்துகொள்வோம். அது தன் சேமிப்பைக்கொண்டு அதற்கு வேண்டிய மூலதனத்தைத் திரட்ட முடியாமல் இருக்கலாம். ஆகையால் அது வேறொரு நாட்டில் கடன் வாங்கலாம். அது இருப்புப்பாதையை அடைப்பதற்கு வேண்டிய தளவாடப் பொருள்களை அயல் நாட்டிலிருந்து பெறலாம். இத் தளவாடப் பொருள்களுக்காகச் செலுத்தவேண்டிய தொகையை அது வழக்கம்போல் ஏற்றுமதியைக் கொண்டு செலுத்தாமல், தான் வாங்கிய கடன் தொகையைக் கொண்டு செலுத்தலாம். இங்கிலாந்தின் நடைமுறைக் கொடுப்பல் நிலை, பாதகமாக இருப்பதற்கு அங்கு முதலீடு பெருகுவதே காரணமாக இருக்கலாம். இங்கிலாந்து வெளிநாடுகளில் செய்திருக்கும் முதலீட்டிலிருந்து பெறும் வருமானத்தைக் கொண்டு உள் நாட்டில் முதலீட்டைப் பெருக்கலாம். ஒரு நாடு தான் சேமித்த தொகையை உள்நாட்டிலோ, அல்லது வெளிநாட்டிலோ முதலீடு செய்யலாம். உள்நாட்டிலேயே ஒரு நாடு முதலீடு செய்தால், அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை அந்த நாட்டுக்குப் பாதகமாகவே இருக்கும். உற்பத்திச் சாதனங்களைப் புதிய முதலீட்டுக்கு மக்கள் பயன்படுத்துவதால் ஏற்றுமதித் தொழில்கள் மிகுதியான சாதனங்களைப் பயன்படுத்த முடியாது. மேலும் முதலீட்டுக்கு வேண்டிய பொருள்களை அயல்நாடுகளிலிருந்து அந்த நாடு பெறும்.

அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை பாதகமாக இருக்கும்பொழுது நீண்டகாலக்கடனை அயல்நாடுகளில் பெற்று ஒரு நாட்டு நிலைமையைச் சமாளிப்பதில் தவறு ஒன்றும் இல்லை. ஆனால் தாற்காலிகமாக நிலைமையைச் சமாளிப்பதற்கு ஏதாவது ஏற்பாடு செய்வதாலும், பாதக நிலையை நீக்குவதற்காகப் பொன்னை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதாலும் சில விளைவுகள் ஏற்படலாம். நீண்டகாலக் கடனை வாங்குவதால் எவ்விதத் தீமையும் ஏற்படாது. வாங்கிய கடனை விரைவில் திருப்பிக்கொடுக்க முடியும் என்ற நம்பிக்கை இருந்தாலன்றி அயல்நாடுகளில் ஒரு நாடு கடனைப் பெறாது. அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் தாற்காலிகமாக விழும் துண்டைச் (deficit) சமாளிப்பதற்கு ஒரு நாடு மற்ற நாடுகளில் குறுகிய காலக்கடனை வாங்கலாம். ஆனால் ஒரு நாடு அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையைச் சமாளிக்க எப்பொழுதுமே மற்ற நாடுகளில் கடன் வாங்கமுடியாது. அயல்நாட்டுக் கடன், பொன் ஏற்றுமதி முதலியவை மூலம் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையைச் சமாளித்தால் நாணயமாற்று வீதம் (rate of

exchange) மாறாமல் இருக்கும். தேவை மிகுதியடையும் பொழுது கையிலிருக்கும் சரக்கை அதிகமாக விற்பனை செய்வதால் விலை உயராமல் இருக்கும். அதேபோல் ஒரு நாடு, கையில் இருக்கும் பொன்னை ஏற்றுமதி செய்தால் அதன் செலாவணியின் மதிப்புக் குறையாமல் இருக்கும். மேலே குறிப்பிட்ட இரு முறைகளும் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையைச் சமாளிக்க உதவுவதோ டல்லாமல், ஒரு நாடு அபாய எல்லையை அணுகிவிட்டது என்பதை யும் காண்பிக்கின்றன. அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் சம நிலையை ஏற்படுத்த ஒரு நாடு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும். மற்ற ஏற்பாடுகள் செய்யாவிடில் செலாவணியின் மதிப்பைக் குறைக்கவேண்டும்.

நடைமுறைக் கொடுப்பல் நிலை சாதகமாக இருக்கும்பொழுது அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை பாதகமாக இருக்கலாம். ஏனெனில் ஒரு நாடு மிகவும் அதிகமான தொகையை மற்ற நாடுகளுக்குக் கொடுக்கலாம், அல்லது மற்ற நாடுகளில் மிகுதியான தொகையை முதலீடு செய்யலாம். இந்நிலையில் பாதகமான அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையைச் சமாளிப்பதற்காக ஒரு நாடு மற்ற நாடுகளில் குறுகிய காலக் கடனைப் பெறவேண்டும். அல்லது பொன்னை ஏற்றுமதி செய்யவேண்டும். இவ்வாறு செய்வதால் தீயவிளைவுகள் ஏற்படலாம். குறுகியகாலக் கடன்நிலை நடை முறைக் கொடுப்பல்நிலையை ஒட்டியதாகவே இருக்கும். இதுவே நாணயமாற்று வீதத்தை நிர்ணயம் செய்கின்றது.

**அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையைப் பாதிக்கும் சக்திகள்.**

உள்நாட்டில் இருக்கும் சக்திகளும், வெளிநாடுகளில் உற்ற சக்திகளும் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையைப் பாதிக்கும். ஒரு நாட்டின் பணவீக்கத்தை அயல்நாட்டு வர்த்தகம் தணிக்கும் என்பதை நாம் முன்பே பார்த்தோம். ஆனால் இந்த நிலையில் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை பாதகமாக இருக்கும். ஆகையால் அந்த நாடு பொன்னை இழக்கும். கொடுப்பல் நிலையில் சமநிலையை ஏற்படுத்துவதற்கு அரசாங்கம் ஓர் ஏற்பாடு செய்யவேண்டும். வெளிநாடுகளில் பணவீக்கம் இருப்பதால் ஒரு நாட்டின் இறக்கு மதி பாதிக்கப்படலாம், என்பதையும் நாம் பார்த்தோம். உணவுப் பொருள்கள், கச்சாப் பொருள்கள் போன்ற இறக்குமதிப் பொருள் களின் விலைகள் உயரும். இதன் விளைவாக உள் நாட்டில் கூலி களும் அடக்கச் செலவும் உயரும். கூலியும் வாழ்க்கைச் செலவும் போட்டிபோட்டுக்கொண்டு உயரும்; பணவீக்கம் ஏற்படும். நாட் டின் ஒரு பகுதியிலிருந்து மற்ற பகுதிகளுக்குப் பணவீக்கம் எவ் வாறு பரவுகின்றதோ அதேபோல் ஒரு நாட்டிலிருந்து பணவீக்கம்

மற்ற நாடுகளுக்குப் பரவும். பணச்சுருக்கமும் (deflation) இதே மாதிரி பரவும். வெளி நாடுகளில் பணத்தின் மதிப்பு உயர்ந்தால் அங்கு விலைகள் குறையும். ஆகையால் ஒரு நாடு அந்த நாடுகளிலிருந்து பொருள்களை மிகுதியாக இறக்குமதி செய்யும். ஆனால் ஏற்றுமதி குறையும், ஏற்றுமதித் தொழில்கள் பாதிக்கப்படும், ஆகையால் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையும் பாதிக்கப்படும். இந்த நிலையில் மைய பாங்கு கொண்டிருக்கும் காப்புநிதி குறையும். உலக மார்க்கட்டில் விலைகள் குறையும்பொழுது பெரும்பாலும் எல்லா நாடுகளும் அதனால் பாதிக்கப்படும்.

ஒரு நாடு உள்நாட்டில் பொருளாதாரத்தையோ அல்லது அயல்நாடுகளுடன் கொண்டிருக்கும் உறவையோ நிலைப்படுத்தலாம். ஒரு நாட்டில் அமைதியும் ஒழுங்கும் இல்லாவிடில்தான் அரசாங்கம் வர்த்தகத்தை ஒழுங்குபடுத்தாமல் கைவிடும். ஆனால் அரசினர் உள்நாட்டு நிலைமையையோ அல்லது அயல்நாடுகளுடன் கொண்டிருக்கும் உறவையோ ஒழுங்குபடுத்துவதில் தன் கவனத்தைச் செலுத்தலாம். ஒரு நாடு தன் செலாவணியின் வீதத்தை (rate) நிலையாக வைத்துக்கொள்ளவும், அதை மாற்றும் (convertibility) சக்தியைப் பாதுகாக்கவும் முயற்சி செய்யலாம். இவ்விரண்டும் பொன் நாணயத்திட்டத்தின் (Gold Standard) இரு முக்கியமான நோக்கங்கள். இந்த நிலையில் அரசாங்கம் விலைகளைக் கட்டுப்பாடு செய்யாததால், அவை மற்ற நாடுகளின் விலைகள் மாறுவதைப்போல் மாறும். அல்லது அரசாங்கம் செலாவணியின் புறமதிப்பைக் கட்டுப்பாடு செய்யாமல் இருக்கலாம். அதாவது உள்நாட்டில் விலைகளைக் கட்டுப்பாடு செய்யலாம். உலக நாடுகளில் விலைகள் மாறும்பொழுது அந்த மாறுதல்கள் உள்நாட்டு விலைகளைப் பாதிக்காமல் இருப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யலாம். உள்நாட்டின் விலைகளுக்குப் பதிலாக செலாவணியின் புறமதிப்பு (external value) பாதிக்கப்படும். ஒரு நாடு நாணயமாற்றுக் கட்டுப்பாட்டை (Exchange Control) அமலில் கொண்டுவரலாம். ஏற்றுமதியாளர்கள் பெறும் அயல் நாட்டுச் செலாவணியை அரசினர் கைப்பற்றி, இறக்குமதியாளர்களிடையே அதைப் பகிர்ந்து கொடுக்கலாம். இவ்வாறு செய்வதால், அயல் நாட்டு வர்த்தகம் பல தொல்லைகளுக்கும் சிக்கல்களுக்கும் உட்படும். ஆனால் அரசினர் உள்நாட்டு நிலைமையையும், வெளி நாட்டு வாணிகத்தையும் தம் விருப்பம்போல் கட்டுப்பாடு செய்ய முடியும்.

வர்த்தகம் கட்டுப்பாடுகளுக்குட்படாமல் இருந்தால் மிகுதியான அளவில் நடைபெறும். கட்டுப்படுத்தப்பட்ட வர்த்தகம்

குறைவாகவே இருக்கும். ஆகையால் ஒரு நாடு வர்த்தகத்தைக் குறைக்கவேண்டுமா அல்லது கட்டுப்படுத்தாமல் இருப்பதா என்று முடிவு செய்யவேண்டும். உள்நாட்டின் நிலைமையைப் பாதுகாக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் சில நாடுகள் பன்னாட்டு வாணி கத்தைக் குறைத்தன. ஆனால் உண்மையில் ஒரு நாடு வர்த்தகத் தைக் குறைப்பதா அல்லது தடை செய்யாமல் இருப்பதா என்பதை முடிவுசெய்வது மிகவும் முக்கியமானதல்ல. பாதகமாக இருக்கும் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் எவ்வாறு சமநிலையை ஏற்படுத் துவது என்பதை முடிவு செய்யவேண்டும். இந்த முடிவே மிகவும் முக்கியமானதாகும். விலைகளைக் கட்டுப்பாடு செய்வதா அல்லது செலாவணியின் புறமதிப்பைக் கட்டுப்பாடு செய்வதா என்பதை ஒருநாடு முடிவு செய்யவேண்டும்.

**அயல்நாட்டுக் கொடுப்பல்நிலையில் சமநிலையை ஏற்படுத்தும்வழி**

கீழ்க்கண்ட காரணங்கள் நாணய மாற்று வீதத்தை (exchange rate) பாதிக்கும்.

(i) இறக்குமதியும் ஏற்றுமதியும் மிகுதியடைவது.

(ii) விற்பனையாகும் பொருள்களின் விலைகள் மாறலாம். இறக்குமதிப் பொருள்களுடைய விலைகளோ, அல்லது ஏற்றுமதிப் பொருள்களுடைய விலைகளோ அதிகம் உயரலாம்.

(iii) நடைமுறைக் கொடுப்பல் நிலையில் சமநிலை இருந்த போதிலும் ஒரு நாடு அதிகமான தொகையைக் கடனாகக் கொடுக்கலாம், அல்லது வாங்கலாம்.

இவ்விதக் காரணங்களால் பாதிக்கப்படும் கொடுப்பல் நிலை சில சமயங்கள் தானாகவே சமநிலையை அடையும். இங்கிலாந்தின் ஏற்றுமதித் தொழில்கள் பெருகுகின்றன என்று கற்பனை செய்து கொள்வோம். அயல்நாட்டினர் இங்கிலாந்தின் சரக்குகளை அதிக மாக வாங்கலாம், அல்லது அதிக விலையை ஆங்கிலேய உற்பத்தி யாளர்களுக்குக் கொடுக்கலாம். இதன் விளைவாக ஆங்கிலேயர் களுடைய வருமானம் பெருகுகின்றது. இந்த நிலையில் பெருக்கி இயங்கும். பெருக்கி முதலீட்டுடன் எவ்வாறு தொடர்பு கொண்டி ருக்கின்றது என்பதை 26வது அதிகாரத்தில் நாம் பார்த்தோம். வருமானத்தில் மக்கள் ஒரு பகுதியைச் சேமிப்பதால் முதலீட்டுப் பெருக்கியின் வேகம் குறையும். இதேபோல் முதலீடு பெருகுவதால், பெருகும் வருமானத்தில் ஒரு பகுதியை மக்கள் இறக்குமதிக்காகச் செலவு செய்யும்பொழுது ஏற்றுமதிப் பெருக்கியின் வேகமும் குறை யும். ஏற்றுமதித் தொழிலில் பணியாற்றும் தொழிலாளர்கள் அதிக

மாகப் பெறும் வருமானத்தைக் கொண்டு அதிகமாகச் செலவு செய்வார்கள். தேவை மிகுதியடைவதால் உள்நாட்டில் உற்பத்தியும் வேலைவாய்ப்பும் பெருகும். புதியதாக வேலையில் அமரும் தொழிலாளர்கள் மிகுதியான தொகையைச் செலவு செய்வார்கள். திரள்முறையில் மக்களுடைய வருமானமும், செலவும் இங்கிலாந்தில் பெருகும். ஆனால் இப் பெருக்கத்தில் ஒவ்வொரு படிவத்திலும் மக்கள் வருமானத்தில் ஒரு பகுதியைக் கொண்டு இறக்குமதிப் பொருள்களை வாங்குகின்றனர். இறக்குமதிப் பொருளை அளிக்கும் நாட்டினர் பெருகும் வருமானத்தில் ஒரு பகுதியைக் கொண்டு இங்கிலாந்தின் பொருள்களை வாங்காவிடில், அந்த நாட்டின் ஏற்றுமதித் தொழிலின் வளர்ச்சி குறையும். முதலீடு பெருகும்பொழுது சேமிப்பும் பெருவதைப்போல், ஏற்றுமதி பெருகும்பொழுது இறக்குமதியும் பெருகும்.

ஒரு விவசாய நாட்டை நாம் சற்று கவனித்தால் இறக்குமதிக்கும் ஏற்றுமதிக்கும் எவ்வாறு ஒரு பொருத்தம் ஏற்படுகிறது என்பது தெளிவாகும். இந்த நாடுகளின் ஏற்றுமதியில் மிகுதியான மாறுபாடுகள் ஏற்படும். ஏற்றுமதியைப் போல் இறக்குமதியும் மாறும். இறக்குமதிக்கும் ஏற்றுமதிக்கும் அதிக வேறுபாடு இருக்காது. ஏற்றுமதிப் பொருள்களுடைய விலைகள் உயர்ந்தால், ஏற்றுமதித் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்கள் முன்பைவிட அதிகமான அளவில் இறக்குமதிப் பொருள்களை வாங்குவார்கள். ஆகையால் இறக்குமதியாளர்கள் தம் கையில் இருக்கும் சரக்கைப் பெருக்கிக் கொள்வார்கள். சாதாரணமாக விவசாய நாடுகளில் இறக்குமதிப் பொருள்களின் தேவை மிகுதியான வருமான நெகிழ்ச்சியைக் (Income-elasticity) கொண்டிருக்கிறது. அதாவது மக்கள் பெருகும் வருமானத்தில் ஒரு பெரும் பகுதியை இறக்குமதிப் பொருள்களுக்காகச் செலவு செய்கின்றனர். ஒரு நாட்டில் இறக்குமதிக்கு ஏதாவது இடையூறு இருந்தால், மக்கள் தம் வருமானத்தை உள்நாட்டில் உற்பத்தியாகும் பொருள்களை வாங்குவதற்கே செலவுசெய்கின்றனர். விவசாய நாடுகளில் உற்பத்தி நெகிழ்ச்சியற்றதாக இருப்பதால், இறக்குமதி பெருகாததால் பணவீக்கம் ஏற்படுகின்றது. அதாவது விலைகள் உயருகின்றன. இந்த நிலையில் இறக்குமதிப் பண்டங்கள் மலிவாகக் கிடைப்பதால், மக்கள் இப்பண்டங்களை மிகுதியாக வாங்குவார்கள். எனவே இறக்குமதிக்கும் ஏற்றுமதிக்கும் ஒரு பொருத்தம் ஏற்படுகின்றது. வருமானம் உயர்ந்த பிறகு ஏற்றுமதிக்கும் இறக்குமதிக்கும் ஒரு பொருத்தம் ஏற்படுகிறது.

தொழில் செறிந்த நாடுகளிலும் இத்தகைய பொருத்தம் ஏற்படும். விலைகளில் ஏற்படும் மாறுதல்கள் மூலம் இப்பொருத்தம் ஏற்

படாது. வேலை வாய்ப்புகளில் ஏற்படும் மாறுதல்களே பொருத்தத்தை ஏற்படுத்தும். ஏற்றுமதி குறைந்தால், ஏற்றுமதித் தொழில்களில் வேலையின்மை (Unemployment) ஏற்படும். ஏற்றுமதித் தொழில்களில் ஏற்படும் மந்தம் மற்றத் தொழில்களையும் தாக்கும். இதனால் இறக்குமதிப் பொருளின் தேவையும் குறையும்.

இறக்குமதியாகும் உணவுப் பொருள்களுக்கும் கச்சாப் பொருள்களுக்கும் தேவை குறையும். அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் பொருத்தம் ஏற்படும்வரை இறக்குமதி குறைந்து கொண்டே இருக்கும்.

மூலதன ஏற்றுமதியிலும் ஒரு பொருத்தம் ஏற்படும். ஆனால் ஒரு சிக்கலான வழியிலேயே இப்பொருத்தம் ஏற்படும். உதாரணமாக இங்கிலாந்து உள்நாட்டில் முதலீடு செய்வதைவிட வெளிநாடுகளில் முதலீடு செய்வதையே விரும்பலாம். இங்கிலாந்தில் முதலீடு குறைந்தால் உற்பத்திச் சாதனங்கள் வேலையிலிருந்து விடுபடும். ஆனால் அயல்நாடுகளில் ஆங்கிலேய முதலீடு பெருகுவதால் ஏற்றுமதி பெருகும். ஏற்றுமதிமூலம் ஆங்கிலேயர் ஈட்டும் அயல் நாட்டுச் செலாவணியைக் கொண்டு முதலாளிகள் அயல் நாடுகளில் முதலீடு செய்யலாம். 50 ஆண்டுகளுக்குமுன் இங்கிலாந்து மூலதனப் பொருள்களை மற்ற நாடுகளுக்கு அனுப்பியகாலத்தில், இத்தகைய நிலைமை ஏற்பட்டிருக்கும். அப்பொழுது கூட அயல்நாட்டுக் - கொடுப்பல் நிலையில் சிக்கலான வழியிலேயே சமநிலை ஏற்பட்டது. அயல் நாடுகளில் முதலீடு செய்தால் உள்நாட்டில் முதலீட்டுக்கு வேண்டிய நிதி திரட்டல் கடினமாகும். இங்கிலாந்தின் ஏற்றுமதி மிகுதியாக இருந்தபோது, அயல்நாடுகள் ஆங்கிலேயர்களிடம் கடன் வாங்கினர். கட்டட வேலை நலிவுற்ற காலத்தில் ஏற்றுமதித் தொழில் பெருகியதால் நாட்டில் தீய விளைவுகள் எதுவும் ஏற்படவில்லை. மூலதனத்தை ஏற்றுமதி செய்வதால் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை பாதிக்கப்படுவதில்லை. கடன் கொடுப்பதால், கொடுக்கும் நாட்டில் வட்டி வீதம் உயரலாம், கடனை வாங்கும் நாட்டில் வட்டி வீதம் குறையலாம். வட்டி வீதங்கள் மாறுவதால் ஒரு நாட்டில் மூலதனம் பெருகும்; மற்றொன்றில் மூலதனப் பெருக்கம் குறையும். மூலதனப்பெருக்கத்தில் ஏற்படும் மாறுதல், செயற்படுத்தும் தேவையையும், வேலை வாய்ப்புக்களையும் பாதிக்கும் என்பதை நாம் 26வது அதிகாரத்தில் பார்த்தோம். கடன் கொடுக்கும் நாட்டில் ஒரு மந்தம் ஏற்படுவதால், அந்த நாடு மிகுதியான பொருள்களை இறக்குமதி செய்ய முடியாது. ஆனால் கடன் வாங்கும் நாட்டில் பொருளாதார வீக்கம் ஏற்படுவதால், அந்த நாடு அயல்நாடுகளில்

மிகுதியான பொருள்களை வாங்கும். இரு நாடுகளும் வர்த்தகத் தொடர்பு கொண்டால், அவைகளுடைய அயல்நாட்டுக் கொடுப் பல் நிலையில் சமநிலை ஏற்படும். அவைகளுடைய இறக்குமதியே சமநிலையை ஏற்படுத்தும் என்று நாம் கருதக்கூடாது. அவைகளு டைய ஏற்றுமதியும் பாதிக்கப்படுவதால், வேலை வாய்ப்பில் ஏற் படும் மாறுதல்கள் குறையும், இதன் விளைவாகச் சமநிலை ஏற்படும்.

ஒரு நாட்டின் செலாவணிக் கொள்கை அதன் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையைப் பாதிக்கலாம், அல்லது அதில் சமநிலையை ஏற்படுத்தலாம். ஆனால் செலாவணிக்கொள்கையை இதுவரைநாம் ஆராய்ச்சி செய்யவில்லை. செலாவணியின் புறமதிப்பு நிலையாக இருத்தல், அல்லது அடிக்கடி மாறுதல், அயல்நாட்டுச் செலாவணி மார்க்கட்டு (Foreign Exchange Market) கட்டுப்பாடுகளுக்குட் படுவது அல்லது கட்டுப்பாடுகளின்றி இருத்தல் முதலியவை அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையை பாதிக்கும். அயல்நாட்டுச் செலா வணி மார்க்கட்டு, கட்டுப்பாடுகளுக்குட்படாமல் இருக்கும் பொழுது, நாணயமாற்று வீதம் (Exchange rate) நிலையாக இருந் தால், செலாவணிக் கொள்கை எவ்வாறு அயல்நாட்டுக்கொடுப்பல் நிலையை பாதிக்கும் என்பதை நாம் இங்குக் காண்போம். செலா வணியின் மதிப்பை ஒரு குறிப்பிட்ட அளவு பொன்னுக்குச் சமம் என்றே நாம் சாதாரணமாக கூறுகின்றோம். ஆகையால் பொன் நாணயத் திட்டத்தையே நாம் இங்கு ஆராய்ச்சி செய்யவேண்டும்.

## நிலையான நாணய மாற்று வீதங்கள்
## (Fixed Exchange Rates)
## பொன் நாணயத்திட்டம் (Gold standard)

ஒரு நாட்டின் செலாவணியை ஒரு குறிப்பிட்ட அளவு பொன் னுக்குச் சமமாக்கினால் நாணயத்தை மக்கள் பொன்னாக மாற்றிக் கொள்ளமுடியும். இந்த நிலை பொன் நாணயத் திட்டத்தின் ஓர் அம்சமாகும். பொன் நாணயங்கள் புழக்கத்தில் இருந்தால், செலாவணித் தாள்கள் போன்ற மற்ற வகைச் செலாவணிகளை மக் கள் பொன் நாணயத்தின் பதிலி நாணயங்களாகவே கருதுவர். இங்கிலாந்தில் 1925 முதல்' 31 வரை பொன்நாணயங்கள் புழக் கத்தில் இல்லை. ஆனால் சட்டப்படி மையபாங்கு தங்கத்தை மக்களி டம் ஒரு விலை கொடுத்து வாங்கத் தயாராக இருக்கவேண்டும்; சிறிது உயர்ந்த விலையில் மக்களுக்குப் பொன்னை விற்பனை செய்யவும் வேண்டும். பொன்நாணயங்கள் புழக்கத்தில் இல் லாவிடினும், இந்த ஏற்பாடு இருக்கும் நாட்டில் பொன் நாணயத்திட்டம் அமலில் இருக்கின்றது என்று கூறலாம்.

சட்டப்படி மையபாங்கு பொன் நாணயத்திட்டத்தைப் பின்பற்றும் நாட்டின் செலாவணியை ஒரு குறிப்பிட்ட விலையில் விற்பனை செய்யவும் வாங்கவும் கடமைப்பட்டிருந்தாலும், பொன் நாணயத்திட்டம் அமலில் இருக்கிறது என்று நாம் கூறலாம். நாம் முதலில் விளக்கிய திட்டத்தை உலக நாடுகள் 1914 வரை பின்பற்றின. முதல் உலகப் போருக்குப்பின் இரண்டாவது வகைத் திட்டத்தை உலக நாடுகள் பின்பற்றின. இதைப் பொன் உலோகத் திட்டம் (Gold Bullion Standard) என்று கூறுவர். பொன் (மறைமுக) நாணயத்திட்டம் (Gold Exchange Standard) என்றழைக்கப்படும் இத்திட்டத்தை இந்தியா போன்ற நாடுகள் பின்பற்றின. ஏனெனில் இந்த நாடுகள், பொன் நாணயத்திட்டத்தைப் பின்பற்றுவதற்கு வேண்டிய பொன்னை வைத்துக்கொள்ள வில்லை. ஆகையால் இந்த நாடுகள் தம் செலாவணிகளை பவுனுடன் இணைத்தன.

பொன் நாணயத்திட்டத்தின் மூலம் மாறுத நாணய மாற்று வீதத்தை நிலைநாட்டலாம். இங்கிலாந்தும், அமெரிக்காவும் பொன் நாணயத்திட்டத்தைப் பின்பற்றினல் டாலரும் பவுனும் (dollar and pound) ஒரே அளவு பொன்னுக்குச் சமமாக இருக்கும். ஆகையால் அவை இரண்டும் நிலையான புறமதிப்பைக் கொண்டிருக்கும். அமெரிக்காவில் ஓர் அவுன்ஸ் பொன்னின் விலை 35 டாலராகவும், இங்கிலாந்தில் ஓர் அவுன்ஸ் பொன்னின் விலை 7 பவுனுகவும் இருந்தால் நாணயச்சாலை மாற்றீடு (Mint par of exchange) $5 = £1 என்ற வீதத்தில் நிர்ணயமாகும். அமெரிக்க நாட்டைச் சேர்ந்த ஒருவன் ஒரு பவுனை வாங்க 5 டாலருக்கு மேல் கொடுக்க மாட்டான். அமெரிக்காவில் ஓர் அவுன்ஸ் பொன்னைவாங்கி இங்கிலாந்துக்கு அனுப்பினுல், அதை இங்கிலாந்தில் ஒரு பவுனுக மாற்றிக் கொள்ளலாம். அமெரிக்கர்களும் ஒரு பவுனுக்கு 5 டாலர்களுக்குக் குறைந்த தொகையைக் கொடுக்க மாட்டார்கள். ஏனெனில் லண்டனில் ஒருவன் ஒரு அவுன்ஸ் பவுனை வாங்கி, அதை அமெரிக்காவுக்கு ஏற்றுமதி செய்தால், அங்கு அவன் அதை மாற்றி 5 டாலரைப்பெறலாம். ஒரு நாட்டிலிருந்து மற்றென்றுக்குப் பொன்னைச் செலுத்துவதற்காக ஒருவன் ஒரு தொகையைச் செலவு செய்யவேண்டும். மேலும் மைய பாங்குகள் பொன்னை இழக்க விரும்புவதில்லை. ஆகையால் சாதாரணமாக ஒருவன் 5 டாலருக்கும் மேற்பட்ட தொகையைக் கொடுத்து ஒரு பவுனை வாங்கத் தயாராக இருப்பான். டாலரை வாங்குபவன் 1 பவுனுக்கு 5 டாலருக்கு குறைவான தொகையை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருப்பான். ஆகையால் நாணயமாற்று வீதத்தில் ஏற்படும் மாறுதல்களைப்

பொன் நாணயத்திட்டம் முற்றிலும் அகற்றுவதில்லை. ஆனால் இந்த மாறுதல்கள் குறுகிய எல்லைகளுக்குட்பட்டிருக்கும். ஒவ்வொரு நாட்டிலும் அயல்நாட்டுச் செலாவணிக்கு ஓர் உயர்ந்த பட்ச விலை இருக்கும். அதன் விலை இதைவிட உயர்ந்தால் மக்கள் பொன்னை ஏற்றுமதி செய்வார்கள். இதைப் பொன் ஏற்றுமதி எல்லை (Gold export point) என்று அழைப்பார்கள். ஒவ்வொரு செலாவணிக்கும் ஒரு குறைந்த பட்ச எல்லை உண்டு. இதைப் பொன் இறக்குமதி எல்லை (Gold import point) என்று அழைப்பார்கள்.

பொன் நாணயத்திட்டம் உலக நாடுகளுக்கு ஒரு பொதுப் பரிவர்த்தனைச் சாதனத்தை அளிக்கின்றது. இச்சாதனத்தைக் கொண்டே ஒரு நாடு மற்ற நாடுகளுக்குச் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்துகின்றது. ஆனால் சாதாரணமாகப் பொன்னைப்பரிவர்த்தனைச்சாதனமாக அவை பயன்படுத்துவதில்லை. தவிர்க்கமுடியாத அவசியம் ஏற்பட்டாலன்றிப் பொன்னைப் பயன்படுத்துவதில்லை. ஒரு நாட்டில் இறக்குமதியாளர்கள் அந்த நாட்டின் ஏற்றுமதியாளர்களிடம் தமக்குவேண்டிய அயல்நாட்டுச் செலாவணியை வாங்குகின்றனர். அயல்நாட்டுக் கொடுப்பல்நிலை சமநிலையில்இருக்கும்வரை இறக்குமதியும் ஏற்றுமதியும் சமமாகவே இருக்கும். இந்த நிலையில் பொன் ஏற்றுமதியாகாது. இறக்குமதிக்கும் ஏற்றுமதிக்கும் வேறுபாடு இருந்தால்தான் ஒரு நாடு மற்றொன்றுக்குப் பொன்னை ஏற்றுமதி செய்யவேண்டும். இறக்குமதியாளர்களுடைய தேவைக்கு மேற்பட்ட அயல்நாட்டுச் செலாவணியை ஒரு நாட்டில் ஏற்றுமதியாளர்கள் வைத்திருந்தால் அந்த நாட்டில் பொன் இறக்குமதியாகும். இந்த நிலையில் செலாவணியின் மதிப்புப்பொன் இறக்குமதி எல்லைக்குச் சமமாகின்றது. தேவைக்கு வேண்டிய அளவு அயல்நாட்டுச் செலாவணி கிடைக்காவிடில், பொன் ஏற்றுமதியாகும். செலாவணியின் மதிப்பு, பொன் ஏற்றுமதி எல்லைக்குச் சமமாகும். மைய பாங்கு நிலைமைக் கேற்றபடி ஏராளமான பொன்னை வாங்கும், அல்லது விற்பனை செய்யும். ஆகையால் தன் கடமையைச் சரிவரச் செய்ய அது ஏராளமான பொன்னைக் கொண்டிருக்கும்.

ஒருநாடு பொன் நாணயத் திட்டத்தைப் பின்பற்றினால், நாணய மாற்று வீதத்தை மட்டும் நிலைநாட்டுவதற்காக ஏராளமான பொன்னைக் கொண்டிருந்தால் மட்டும் போதாது. பொன்னை நாடு ஓர் அளவுக்கு மேல் இழக்கக்கூடாது. அதாவது பொன் காப்பு நிதியைப் பாதுகாக்கவேண்டும். ஓரளவு பொன்னை இழத்தல் தானாகவே நின்றுவிடும். ஆனால் ஒரு நாடு மிகவும் அதிகமான அளவு பொன்னை இழந்தால் அதை அரசாங்கம் தடை செய்யுவேண்டும்.

**பொன் நாணயத்திட்டத்தில் சமநிலை ஏற்படுதல்**

அயல்நாட்டுக் கொடுப்பல்நிலையில் துண்டு விழுந்தால், அது தானாகவே மறைந்துவிடும் என்று நாம் முன்பே குறிப்பிட்டோம். அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் துண்டு விழுந்தால் செலாவணியின் நிலை எவ்வாறு பாதிக்கப்படும் என்பதை நாம் இங்குக் காண்போம். 1914ஆம் ஆண்டு வரை இங்கிலாந்து பின்பற்றிய முறையைப் பரிசீலனை செய்தால் உண்மை புலப்படும். வேறு நாடுகள் பின்பற்றிய முறைகளையோ அல்லது 1914ஆம் ஆண்டுக்குப் பிறகு இங்கிலாந்து புகுத்திய மாறுதல்களையோ நாம் பரிசீலனை செய்ய வேண்டியதில்லை. அரசினர் பொன் நாணயத் திட்டத்தில் ஒரு பொருத்தத்தை ஏற்படுத்தும் நோக்கத்துடன், அதில் சில மாறுதல்களைப் புகுத்துகின்றது.

ஒரு நாடு மற்றொன்றுக்கு உபரியாகச் செலுத்துவதற்கு வேண்டிய நிதியைத் திரட்டவேண்டும். செலாவணியின் மதிப்பு, பொன் ஏற்றுமதி எல்லையை அடைந்த பிறகு ஒரு நாடு பொன்னை ஏற்றுமதி செய்யும். மக்கள் வேண்டிய பொன்னை மைய பாங்கில் வாங்கிக்கொள்வார்கள். பொன்னை வாங்குவோர் மைய பாங்குக்குச் செக்குகள் மூலம் பணத்தைச் செலுத்துவார்கள். செக்கில் குறிப்பிட்ட தொகையை வாணிக பாங்குகள் மைய பாங்குக்குச் செலுத்த வேண்டும். அவை மையபாங்கில் கொண்டிருக்கும் டெபாசிட்டுத் தொகை குறையும். இங்கிலாந்தில் இதுபோன்ற சமயங்களில் இதனால் இரு விளைவுகள் ஏற்பட்டன. (1) பாங்குகள் மையபாங்கில் கொண்டிருக்கும் டெபாசிட்டுத்தொகை (காப்புநிதி) குறைந்தது. (2) அவை மக்களுக்குக் கொடுத்த கடன் வசதி (டெபாசிட்டுத் தொகை) குறைந்தது. காப்புநிதி குறைந்ததால் பாங்குச் செலாவணியின் அளவும் குறைந்தது. இந்த நிலையில் மையபாங்கு வெளி மார்க்கட்டு நடவடிக்கை மூலம் வாணிக பாங்குகளுடைய ரொக்கத்தைப் பெருக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஏனெனில் பத்திர விற்பனையைத்தொடர்ந்து ஏற்படும் பணச் சுருக்கம் இந்த நிலையில் ஏற்பட்டது. வாணிக பாங்குகள் அழைப்புக் கடனைத் திருப்பி வாங்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது. பணச் சுருக்கம் ஏற்பட்டதால் வட்டிவீதங்கள் உயர்ந்தன.

இதனால் முதன்முதலில் தள்ளுபடி வீதங்கள் உயர்ந்தன. பண மார்க்கட்டே (Money Market) முதன்முதலில் பணச் சுருக்கத்தால் பாதிக்கப்பட்டது. தள்ளுபடி வீதம் உயர்ந்ததால் மக்கள் உண்டியல்களை லண்டனுக்கு அனுப்பவில்லை. லண்டனில் தள்ளுபடி செய்தல் கவர்ச்சிகரமாக இல்லை. ஸ்டெர்லிங் நிதியின் தேவையும் மிகுதியடைந்தது. ஏனெனில் லண்டனில் கிடைக்கும் மிகுதியான

ஊதியத்தைப் பெறவேண்டுமென்று மக்கள் கருதினர். அயல்நாட்டுச் செலாவணியின் தேவை குறைந்ததாலும், பவுனின் தேவை அதிகரித்ததாலும், செலாவணியின் மதிப்பு, பொன் ஏற்றுமதியின் எல்லையை விட்டுவிலகும். பொன் ஏற்றுமதியும் நின்றுவிடும்.

அயல்நாட்டுக் கொடுப்பல்நிலையில் தாற்காலிகமாகத் துண்டு விழுந்தால் அது மேலே விளக்கிய முறையில் தானாகவே மறைந்துவிடும். இங்கிலாந்தில் அடக்கச் செலவும் விலைகளும் மற்ற நாடுகளைவிட அதிகமாக இருந்தாலோ, அல்லது இங்கிலாந்தில் தேவை அதிகரித்தாலோ அயல்நாட்டுக் கொடுப்பல்நிலை பாதிக்கப்படும். வட்டிவீதத்தில் ஏற்படும் மாறுதல் கொடுப்பல் நிலையில் பொருத்தத்தை ஏற்படுத்தும். ஆனால் நிரந்தரமான காரணங்கள் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையைப் பாதித்தால், வட்டிவீதமும், குறுகிய காலக் கடன் தொகையும் சமநிலையை ஏற்படுத்தமுடியாது. வட்டிவீதம் தாற்காலிகமான விளைவுகளையே ஏற்படுத்தமுடியும். அயல்நாடுகளில் கடன் வாங்குதல் குறைந்தாலோ, அல்லது அயல்நாட்டினர் இங்கிலாந்தில் தம் பணத்தைக் குறுகியகால முதலீட்டில் செலவு செய்தாலோ, ஏற்றுமதியைவிட இறக்குமதி அதிகமாக இருக்கும்[1]. ஆனால் பொன் ஏற்றுமதியாகாது. ஆனால் உடனடியாக இங்கிலாந்தில் மிகுதியான தொகை முதலீடு செய்யப்படாவிட்டால், மீண்டும் பொன் ஏற்றுமதி தொடங்கும். இங்கிலாந்து நிலைமையைச் சமாளிக்க, நாணயத்தின் மதிப்பை மறைமுகமாகக் குறைக்கும் (devalue) என்று அயல்நாட்டினர் அஞ்சினால் ஸ்டெர்லிங்குக்கு மிகுதியான தேவை ஏற்படும். இறக்குமதி ஏற்றுமதியைவிடத் தொடர்ந்து மிகுதியாக இருந்தால், ஒரு நாடு தன் ஏற்றுமதிக்கு ஒரு தூண்டுதலைக் கொடுக்கவேண்டும், அல்லது இறக்குமதியைக் குறைத்துக்கொள்ளவேண்டும்.

ஏற்றுமதியைப் பெருக்கி, இறக்குமதியைக் குறைப்பதோடல்லாமல் ஒரு நாடு வட்டிவீதத்தை உயர்த்தி, பணச் சுருக்கத்தையும் செய்யலாம். வேலை வாய்ப்புகளும், தேசீய வருமானமும் பாதிக்கப்பட்டால் எவ்வாறு தானாகவே பொருத்தமான நிலையை அடையும் என்பதை நாம் முன்பு விளக்கினோம். அதேபோல் அயல்நாட்டுக்

1. அயல் நாட்டுப் பணத்தை மக்கள் மற்றப் பொருள்களைப் போல் லண்டனில் இறக்குமதி செய்யவில்லை. அயல்நாட்டினர் தம் செலாவணியை விற்பனை செய்து, பவுனை வாங்கினர். உபரியாக இருந்த அயல்நாட்டுச் செலாவணியைக் கொண்டு மக்கள் உபரியாக இறக்குமதியான பொருள்களை வாங்கினர். பவுனும் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகாது. பொன் மட்டும் ஏற்றுமதியாகும். அது வெளிநாட்டினருக்குச் சொந்தமாகும். சிலர் பவுனை விற்பனை செய்கின்றனர். மற்றவர்கள் தம் நாட்டுச் செலாவணியைக் கொடுத்துப் பவுனை வாங்குகின்றனர்.

கொடுப்பல் நிலையிலும் தானுகவே பொருத்தம் ஏற்படும். செலாவணிச் சுருக்கம் உள்நாட்டில் தேவையையும் முதலீட்டையும் குறைக்கும். உற்பத்தியாளர்கள் தம் பொருள்களை வெளிநாடுகளில் விற்பனைசெய்ய முயற்சி செய்வர். மேலும் தேசீய வருமானம் குறைவதால், மக்கள் மிகுதியான பொருள்களை இறக்குமதி செய்ய மாட்டார்கள். ஆகையால் இறக்குமதியும் ஏற்றுமதியும் சமமாகும்.

நாளடைவில் மேலும் ஒரு விளைவு ஏற்படும். பொருளாதார மந்தம் இங்கிலாந்தில் அடக்கச் செலவையும் விலைகளையும் குறைக்கும். ஆகையால் இங்கிலாந்தில் பொருள்களை வாங்குவதும் வேறு இடங்களில் விற்பனை செய்வதும் இலாபகரமாக இருக்கும். உற்பத்தியாளர்கள் இலாபத்தைக் குறைத்துக் கொள்வதாலும், சிக்கனமான முறைகளைப் பின்பற்றுவதாலும் அடக்கச் செலவு குறையலாம். போட்டி கடுமையாக இருக்கும்பொழுது இந்த விளைவு ஏற்படலாம். மந்தகாலத்தில் கூலிகள் குறையலாம். அடக்கச் செலவு குறையும்பொழுது இறக்குமதி குறையும், ஏற்றுமதி பெருகும்.

ஒரு நாடு பொன் நாணயத் திட்டத்தைப் பின்பற்றினுல், பல்வேறு சக்திகள், அதன் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் பொருத்தத்தை ஏற்படுத்தும். இவற்றுள் சில தாமாகவே உருவாகின்றன; வேறு சில செலாவணிக் கொள்கையை ஒட்டியனவாக இருக்கின்றன. செலாவணிக் கொள்கையைத் தொடர்ந்து ஏற்படும் சக்திகள் வட்டிவீதத்தின் மூலம் ஒரு நாட்டிலிருந்து மற்ருென்றுக்கு ஏற்றுமதியாகும் கடன் தொகையை பாதிக்கும். இதன் விளைவாக நாட்டில் அடக்கச் செலவும் விலைகளும் மாறும். சமநிலை பாதிக்கப்பட்டபொழுது அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையில் குறைவு அல்லது உபரி ஏற்படலாம். வட்டிவீதங்கள் குறைவதால் ஏற்படும் விளைவுகளுக்கு எதிர் மறையான முறையில் அவை உயர்வதால் விளைவுகள் ஏற்படும்.

செலாவணிச் சக்தியின் வெற்றி மையபாங்கின் கொள்கையைப் பொறுத்தே இருக்கும். கொடுப்பல் நிலையில் ஏற்படும் குறைபாடு அல்லது உபரியை, மையபாங்கு உடனடியாக நீக்க முயற்சி செய்தால் செலாவணிச் சக்தி வெற்றிகரமாக இருக்கும். உதாரணமாக பொன் இழப்பை செலாவணிச் சக்தி உடனடியாகத் தடை செய்யாது. ஆனுல் பாங்குகளுடைய காப்புநிதி உடனடியாக மாறும். நாட்டில் சட்டப்படி இருக்கவேண்டியதைவிட, பொன், மிகக் குறைவான அளவே அதிகமாகஇருந்தால், பொன் ஏற்றுமதி

ஒரு பீதியை (panic) ஏற்படுத்தும். இந்த நிலையில் ஒரு நாடு மறைமுகமாக நாணயத்தின் மதிப்பைக் குறைக்கலாம் என்று அஞ்சித் தம் டெபாசிட்டுத் தொகையையும் பொன்னையும் தம் சொந்த நாட்டுக்கு எடுத்துச் செல்லும். ஏனெனில் அந்த நாடு நாணயத்தின் மதிப்புக் குறைந்தபின் அதன் செலாவணியையும் பொன்னையும் உயர்ந்த விலை கொடுத்து வாங்கவேண்டியிருக்கும். ஆகையால் நிலைமை மேலும் மோசமாகும். ஆகையால் நாட்டின் நலத்தைக் காப்பாற்றுவதற்காகப் பாங்கு தக்க நடவடிக்கை எடுக்கும். பொன் தாற்காலிகமாகவே ஏற்றுமதி யாகின்றது என்று மைய பாங்கு கருதினால், செலாவணிச் சுருக்கம் செய்யாமல் வேறு வழிகளைப் பின்பற்றலாம்.

மைய பாங்கு வெளிமார்க்கட்டு நடவடிக்கை மூலம் நிலைமை யைச் சாமாளிக்கலாம். அரசினர் பத்திரங்களை மையபாங்கு வாங்குவதால் செலாவணிச் சுருக்கம் ஏற்படுவதைத் தடைசெய்ய லாம். பத்திரங்களை விற்பனை செய்வதால் செலாவணிச் சுருக்கத் திற்கு ஒரு தூண்டுதலைக் கொடுக்கலாம். மையபாங்கு, அரசினர் பத்திரம், கருவூல உண்டியல், பொன், போன்ற சொத்துக்களை வாங்கும்பொழுது, வாணிக பாங்குகள் கொண்டிருக்கும் டெபாசிட் டுத் தொகை மிகுதியடையும். இதைத் தொடர்ந்து பணவீக்கம் ஏற்படலாம். அது பத்திரங்களையோ மற்ற சொத்துகளையோ, விற்பனை செய்தால் வாணிக பாங்குகளுடைய டெபாசிட்டுத் தொகை குறையும். இதைத் தொடர்ந்து பணச் சுருக்கம் ஏற்பட லாம். ஒருவகைச் சொத்தை வாங்குதலும், மற்றொன்றை விற்பனை செய்தலும் நேர்மாறான விளைவுகளை ஏற்படுத்தும். உதாரணமாக, ஒரு நாடு பொன்னை இழக்கும்போது மையபாங்கு அரசினர் பத்திரங்களை வாங்கினால், பொன் விற்பனையால் எந்த விளைவும் ஏற்படாது. பொன்னின் இறக்குமதி ஏற்படுத்தும் விளைவை, பத்திர விற்பனை மூலம் மாற்றலாம். தன் சொத்துகளை மைய பாங்கு மாறாமல் ஒரே நிலையில் வைத்துக்கொண்டால், பொன் ஏற்றுமதியினாலோ, அல்லது இறக்குமதியினாலோ ஏற்படும் விளைவு களை அகற்றலாம். ஆனால் இக் கொள்கையைச் செயல்படுத்து வதற்கு, மையபாங்கு பத்திரங்களையும் பொன்னையும், விற்பனைக் குத் தயாராக வைத்துக்கொண்டிருக்கவேண்டும்.

பொன் நாணயத் திட்டம் ஓரளவு செலாவணியை நிருவாகம் செய்வதற்கு இடம் இருக்கின்றது. பொன் இறக்குமதியாகும் பொழுதும், ஏற்றுமதியாகும்பொழுதும் எந்த நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று ஒரு நாடு முடிவு செய்யவேண்டும். பொன் ஏற்றுமதியை ஆதரிக்கவேண்டுமா அல்லது தடை செய்ய

வேண்டுமா என்பதை ஒரு நாடு முடிவு செய்யவேண்டும். உள்நாட்டில் தொழிலுக்கு எவ்வளவு கடன் வசதி வேண்டும் என்பதையும், செலாவணியின் புறமதிப்பை எவ்வாறு நிலைநாட்ட வேண்டும் என்பதையும் ஒரு நாடு முடிவுசெய்யவேண்டும். மற்ற மையபாங்குகளை தர்மசங்கடமான நிலையில் வைக்காமல், அவைகளுடன் ஒரு நாடு ஒத்துழைக்கவேண்டும். ஆனால் செலாவணியின் புறமதிப்பை ஒரே நிலையில் வைக்க முயற்சி செய்வதால், உள்நாட்டில் செலாவணி நிருவாகம் பாதிக்கப்படும். மைய பாங்கு தர்மசங்கடமான நிலையில் இருக்கும். சில வேளைகளில் பணச் சுருக்கத்தைத் தவிர்க்கமுடியாது. அதனால் உற்பத்தியும் வருமானமும் குறையும்.

உற்பத்தியையும், வருமானத்தையும் குறைக்காமல் ஒரு நாடு பொன் நாணயத் திட்டத்தைப் பின்பற்றமுடியாது என்ற நிலை ஏற்படலாம். ஆனால் பொன் நாணயத் திட்டம் இத்தகைய் தொல்லைகளை ஏற்படுத்தினால் ஒரு நாடு அதைப் பின்பற்ற வேண்டும் என்று கருதாது. வேறு நாடுகளுடன் தொடர்புபடுத்தும் ஒரு செலாவணி முறையையும் அது பின்பற்றாது. ஏனெனில் இந்த முறை மற்ற நாடுகளில் மந்தம் ஏற்படும்பொழுதெல்லாம் உள்நாட்டிலும் அடக்கச் செலவையும், கூலியையும் குறைக்கலாம். ஏனெனில் கூலிகள் குறையும்பொழுது மற்ற விலைகளை அவைகளுக்குத் தகுந்தவாறு மாற்றுவது கடினம். செலாவணியின் புறமதிப்பு மாறாமல் ஒரே நிலையில் இருப்பதால் வர்த்தகத்திற்குப் பல நன்மைகள் ஏற்படும். ஆகையால் பொன் நாணயத் திட்டத்தைக் கைவிடாமல், அதில் சில மாறுதல்களைப் புகுத்திச் செலாவணி நிருவாகத்திற்கு ஓர் ஏற்பாடு செய்யமுடியுமா என்று நாம் பார்க்கவேண்டும். அதாவது செலாவணி நிருவாகத்தின் நன்மைகளையும், பொன் நாணயக் திட்டத்தின் நன்மைகளையும் ஒரு நாடு அனுபவிக்க ஓர் ஏற்பாடு செய்யவேண்டும். இதற்குச் சரியான நேரத்தில் செலாவணியின் புறமதிப்பைக் குறைக்க வேண்டும். ஆனால் அடிக்கடி மறைமுகமாக நாணயத்தின் மதிப்பைக் குறைக்கக்கூடாது. ஆனால் பணச் சுருக்கத்தைவிட நாணயத்தின் மதிப்பைக் குறைப்பதே சிறந்ததாகும்.

**(மறைமுக) நாணய மதிப்புக் குறைப்பு (Devaluation)**

ஒரு நாட்டின் நாணய மதிப்பைக் குறைத்தலே மறைமுக நாணய மதிப்புக் குறைப்பு எனப்படும். அதாவது பொன்னின் விலையை உயர்த்துவதையே (மறைமுக) நாணய மதிப்புக் குறைப்பு என்று நாம் கூறுகிறோம். இவ்வாறு செய்யும்பொழுது பொன்னின் மதிப்பும், அயல்நாட்டுச் செலாவணியின் மதிப்பும்

உயரும். அயல்நாட்டுக் கொடுப்பல்நிலை பாதகமாக இருக்கும் பொழுது அதை மாற்றிச் சாதகமாகச் செய்வதே நாணய மதிப்புக் குறைப்பின் நோக்கமாகும். பவுனின் மதிப்பு 3 டாலரிலிருந்து 2 டாலராகக் குறைந்துவிடுகின்றது என்று நாம் கற்பனை செய்து கொள்வோம். அமெரிக்காவைச் சேர்ந்த ஒருவன் முன்பு 3 டாலர் கொடுத்து வாங்கிய பொருளை இப்பொழுது 2 டாலர் கொடுத்து இங்கிலாந்திலிருந்து வாங்கலாம். அமெரிக்க ஏற்றுமதியாளர்கள், தம் ஏற்றுமதிக்கு முன்பு வாங்கியபடியே ஆங்கிலேய செலாவணியைப் பெறுவர். ஆங்கிலேய விற்பனையாளர்கள் முன்பு நிலவிய விலையை மாற்றாமல் பொருள்களை விற்பனை செய்வர். செலாவணியின் மதிப்பு மாறியதால் இங்கிலாந்தின் பண்டங்கள் மலிவாகும். ஆங்கிலேயர் மற்ற நாட்டினரைவிட மிகுதியான பொருள்களை விற்பனை செய்வர். ஏற்றுமதி பெருகுவதால் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் சமநிலை ஏற்படும். டாலர் நாணயக் கணக்குப் படி முன்பு இருந்த விலையிலேயே ஆங்கிலேயர்கள் தம் பொருள்களை விற்பனை செய்தால், இங்கிலாந்திலிருந்து முன்பு ஏற்றுமதியான அளவே பொருள்கள் ஏற்றுமதியாகும். ஆனால் இந்த அளவை பவுனில் கணக்குச் செய்தால் அதன் மதிப்பு மிகுதியாக இருக்கும். இங்கிலாந்தில் இறக்குமதியாகும் பொருள்களின் விற்பனைத் தொகையை டாலர் கணக்குப்படி ஒரே நிலையில் வைத்துக்கொள்ள வேண்டுமானால், இறக்குமதியின் விலை 50 சதவீதம் உயரும். ஒவ்வொரு பவுனும் முன்பு போலல்லாமல் இப்பொழுது 2 டாலருக்கே சமமாக இருக்கும். தேவையில் நெகிழ்ச்சி இருந்தால் இறக்குமதிப் பொருள்களின் விலைகள் உயரும்பொழுது ஆங்கிலேயர்கள் இறக்குமதியைக் குறைத்துக்கொள்வர். இதனால் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் சமநிலை ஏற்படும். இறக்குமதி உணவுப் பொருள்களாக இருந்தால், செலாவணியின் மதிப்புக் குறைவதால் நிலைமை மேலும் மோசமாகும். இந்த நிலையில் முறைமுக நாணய மதிப்புக் குறைப்பு அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் சமநிலையை ஏற்படுத்தாது. ஆனால் நடைமுறையில் இறக்குமதிப் பொருள்களின் தேவையும், (அயல் நாட்டில்) ஏற்றுமதிப் பொருளின் தேவையும் நெகிழ்ச்சியுடையதாகவே இருக்கும். ஆகையால் சாதாரணமாக மறைமுக நாணய மதிப்புக் குறைப்பு எதிர்பார்த்த பலனைக் கொடுக்கும். அதாவது ஒரு நாட்டின் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை அந்த நாட்டுக்குச் சாதகமாக மாறும்.

அடிக்கடி செலாவணியின் மதிப்பைக் குறைப்பது சரியல்ல. ஏனெனில் இவ்வாறு செய்தால் வியாபாரிகள் செலாவணியில் கொண்டிருக்கும் நம்பிக்கையை இழப்பார்கள். செலாவணி மேலும் தன் மதிப்பை இழக்கலாம் என்று அவர்கள் கருதுவார்கள்.

மக்கள் நம்பிக்கையை ஒரு செலாவணி இழந்தால், பொன் நாணயத் திட்டம் எவ்வித நன்மையையும் பயக்காது. இந்த நிலையில் நாடு நிலையான மாற்றுவீத முறையை விட்டு விலகி, நிலையற்ற மாற்று வீத முறையைப் பின்பற்ற ஆரம்பித்துவிடுகிறது என்று நாம் கூறலாம்.

**காப்புநிதி நாணய மாற்றுச் சமன்பாட்டு நிதி (Reserves: The Exchange Equalisation Fund)**

ஏராளமான அயல்நாட்டுச் செலாவணியைக் காப்பு நிதியாக வைத்திருந்து, அதை அவ்வப்போது பயன்படுத்தினால் பணச் சுருக்கம் ஏற்படாமல் தடைசெய்யலாம். அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை பாதகமாக இருக்கும்பொழுது அதில் சமநிலையை ஏற்படுத்துவதற்கு மையபாங்கு காப்புநிதியைப் பயன்படுத்தலாம். காப்பு நிதியை மையபாங்கு பொன்னாகவோ அல்லது அயல்நாட்டுச் செலாவணியாகவோ வைத்துக்கொள்ளலாம். இந்த நிதியை ஒரு மையபாங்கு பன்னாட்டு ஸ்தாபனத்திடம் ஒப்படைக்கலாம். ஒவ்வொரு நாடும் காப்பு நிதியைத் தன் வசமே வைத்துக்கொள்ள விரும்புகின்றது. ஆனால் எதிர்காலத்தில் உலகநாடுகள் காப்பு நிதியைப் பன்னாட்டு நாணய நிதியிடம் (International Monetary Fund) ஒப்படைக்கலாம். காப்புநிதியை மூலதனத்தைப் போல் சில குறிப்பிட்ட வழிகளில் பயன்படுத்தலாம். பொன் போன்ற காப்புநிதி மூலம் வட்டியை ஒரு நாடு பெறுவதால் ஓரளவுக்குமேல் காப்புநிதியைப் பெருக்காது.

இங்கிலாந்து நாடு பொன்னையும், டாலர் நாணயங்களையும், நாணய மாற்றுச் சமன்பாட்டு நிதியாகக் கொண்டிருக்கின்றது. இங்கிலாந்து நாடு 1932-ல், பொன் நாணயத் திட்டத்தைக் கைவிட்ட பிறகு இந்த நிதியை நிறுவியது. இந்த நிதியை இங்கிலாந்தின் தலைமைப் பாங்கு, கருவூலத்தின் சார்பில் நிருவாகம் செய்கின்றது. பாங்கு இதற்கு வேண்டிய நிதியைக் கருவூல உண்டியல் விற்பனை மூலம் திரட்டியது. இங்கிலாந்தின் அயல் நாட்டுக்கொடுப்பல் நிலை சாதகமாக இருக்கும்பொழுது நிதியில் மிகுதியான பொன்னும், அயல்நாட்டுச் செலாவணியும் இருக்கும். பொன்னையும் அயல்நாட்டுச் செலாவணியையும் வாங்குவதற்காகக் கருவூல உண்டியல் விற்பனை மூலம் பவுன் நாணயத்தைத் திரட்டும். அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை பாதகமாக இருக்கும் பொழுது, பாங்கு பொன்னையும் அயல்நாட்டுச் செலாவணியையும் விற்பனை செய்யும். இந்த நிலையில் பாங்கு கருவூல உண்டியல் விற்பனை மூலம் திரட்டிய ஸ்டெர்லிங் கடனைத் திருப்பிக் கொடுக்கும்.

1930க்குப் பின், இப்பொழுது இருப்பது போல் நாணய மாற்று வீதத்தை ஒரே நிலையில் வைத்திருப்பது நிதியின் நோக்கமாக இல்லை. நிதியை நிருவாகம் செய்வோர் தம் விருப்பம்போல் நாணய மாற்று வீதத்தை உயர்த்தவோ அல்லது குறைக்கவோ முடியும். பவுனின் மதிப்பில் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளைக் குறைப்பதே அக் காலத்தில் நிதியின் நோக்கமாக இருந்தது. பவுனின் மதிப்புக் குறைந்தபொழுது அயல்நாட்டுச் செலாவணியின் அளிப்பைப் (supply) பெருக்கி அதன் மதிப்பை உயர்த்தினர். அதன் மதிப்பு உயர்ந்தபொழுது அயல்நாட்டுச் செலாவணியை அதிகமாக வாங்கி, அதன் மதிப்பைக் குறைத்தனர். ஸ்டெர்லிங் நாணயத்தின் மதிப்புத் தொடர்ந்து குறைந்தபொழுது நிதியை நிருவாகம் செய்தவர்கள் அதைத் தடை செய்யமுடியவில்லை. ஏனெனில் நிதியில் இருந்த அயல்நாட்டுச் செலாவணி குறைவாகவே இருந்தது. ஊக வாணிகம் (speculation) நாணய மாற்று வீதத்தைப் பாதிக்காமல் இருப்பதற்கு நிதி ஏற்பாடு செய்தது. ஆனால் வீதத்தை மாற்றும் 'உண்மையான' காரணங்களையும், அடிப்படைக் காரணங்களையும் நிதி மாற்றமுடியாது.

நிதி ஏற்படுத்திய முறையை நிலையான நாணய மாற்று வீத முறை என்றோ அல்லது நிலையற்ற வீதமுறை என்றோ நாம் கூற முடியாது. 1933க்குப் பிறகு செலாவணியின் மதிப்பில் ஏற்படும் ஏற்றத் தாழ்வுகள் படிப்படியாகக் குறைந்தன. போர் தொடங்கியதிலிருந்து, 1949ஆம் ஆண்டின் (மறைமுக) நாணய மதிப்புக் குறைப்பு வரை $4.02 = E 1 என்ற வீதமே நிலவியது. 1949க்குப் பின் $ 2.80 = E 1 என்ற வீதம் நிலவியது. போருக்குப் பின் இருந்த நிலை போருக்குமுன் நிலவிய நிலைமையை ஒத்திருந்தது. ஆனால் அவைகளுள் வேற்றுமைகளும் இருந்தன.

**ஸ்டெர்லிங் நிதி (Sterling Balances)**

டாலரும், ஸ்டெர்லிங்கும் உலக நாணயங்கள் போல் புழங்குவதால், அமெரிக்காவும், இங்கிலாந்தும் வைத்துக்கொள்ளவேண்டிய காப்புநிதி எவ்வாறு இருக்கவேண்டும் என்று கூறுவது கடினம். ஸ்டெர்லிங் பகுதி நாடுகள் (Sterling area) ஸ்டெர்லிங் நாணயத்தையே காப்புநிதியாகக் கொடுக்கின்றன. அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை பாதிக்கப்பட்டால் இந்த நாடுகள் ஸ்டெர்லிங் நிதியைப் பயன்படுத்துகின்றன. ஸ்டெர்லிங் பகுதி நாடுகள் (தமக்குள்) செலுத்தவேண்டிய தொகைகளைக் காப்புநிதியைக் கொண்டே செலுத்தலாம். பொன்னை ஒரு நாடு மற்ற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யவேண்டாம். ஸ்டெர்லிங் பகுதியைச் சேர்ந்த ஒரு நாடு, பாதகமான கொடுப்பல் நிலையைக் கொண்டிருந்தால், காப்பு நிதி

யில் கொண்டிருக்கும் அயல்நாட்டுச் செலாவணியையோ அல்லது பொன்னேயோ பயன்படுத்தி மற்ற நாடுகளுக்குத் தான் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்தும். இங்கிலாந்தின் தலைமைப் பாங்கு அந்த நாட்டுக்கு வேண்டிய அயல்நாட்டுச் செலாவணியைக் கொடுத்துதவும். ஸ்டெர்லிங் பகுதியின் அங்கத்தினர்களுக்கு இங்கிலாந்தின் தலைமைப் பாங்கு ஒரு வாணிகப் பாங்கு போல் தொண்டு செய்கின்றது. ஸ்டெர்லிங் நிதி அயல்நாடுகளுக்குக் காப்புநிதியாகவும் அயல்நாட்டுச் செலாவணியாகவும் இருக்கின்றது. ஆனால் இங்கிலாந்தின் தலைமைப் பாங்குக்கு இந்த நிதி பொறுப்பாகவும், (liability) காப்புநிதியின் எதிர்மறையாகவும் இருக்கின்றது.

## நிலையற்ற நாணய மாற்று வீதங்கள்
## (Fluctuating Exchange Rates)

நாம் ஒரு நாட்டில் நாணய மாற்றுச் சமன்பாட்டு நிதி இல்லை என்று கற்பனை செய்துகொள்வோம். செலாவணியின் தேவையும் அளிப்பும் (Demand and Supply) செலாவணியின் மதிப்பை நிர்ணயம் செய்யும். அரசினர் அதன் மதிப்பை நிலைப்படுத்த முயற்சி செய்யவில்லை என்று கற்பனை செய்துகொள்வோம். நாணய மாற்று வீதம் எவ்வாறு நிர்ணயமாகும்? விரிந்த எல்லைகளுக்குள்ளாவது நாணய மாற்று வீதம் நிர்ணயம் ஆகுமா? நாணய மாற்று வீதத்தில் ஏற்படும் மாறுதல்கள் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் சமநிலையை ஏற்படுத்துமா?

அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் சமநிலை இருக்கும்பொழுது நாணய மாற்று வீதம் எவ்வாறு நிர்ணயம் ஆகின்றது என்பதை அறிய நாம் குறுகியகால அயல்நாட்டுக் கடன் நிலையைப் பரிசீலனை செய்யவேண்டும். ஒரு நாடு பொன்னை இழந்தாலும், அயல்நாட்டுச் செலாவணியை இழந்தாலும், அல்லது அயல் நாடுகளில் குறுகிய காலக் கடனை வாங்கினாலும், அதன் செலாவணிக்கு மிகுதியான மதிப்பைக் கொடுத்திருக்கின்றனர் என்றும், அச் செலாவணியின் மதிப்பு நாளடைவில் குறையலாம் என்றும் நாம் முடிவு செய்யலாம். ஒரு நாட்டின் இறக்குமதி ஏற்றுமதியைவிட மிகுதியாக இருந்தால் அந்த நாடு வைத்திருக்கும் பொன்னும், அயல்நாட்டுச் செலாவணியும் மிகுதியடையும். அதன் செலாவணிக்குக் குறைவான மதிப்பைக் கொடுத்திருக்கின்றனர் என்று நாம் முடிவு செய்யலாம். சமநிலை நாணய மாற்று வீதம் (equilibrium rate of exchange) நிலவும்பொழுது குறுகிய காலக் கடன் தொகையில் மாறுதல் எதுவும் ஏற்படாது என்று நாம் கூற

முடியாது. ஒரு நாடு குறுகிய கால முதலீட்டுக்கு ஒரு கேந்திரமாக இருக்கலாம். ஆகையால் அந்த நாட்டில் அயல்நாட்டினர் தம் பணத்தை முதலீடு செய்ய விரும்பலாம். அல்லது ஒரு நாடு தன் ஏற்றுமதியில் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகள் விளைவிக்கும் தீமைகளைத் தவிர்க்க, ஏராளமான பொன்னையும், அயல்நாட்டுச் செலாவணியையும் தன் காப்புநிதியில் வைத்திருக்க முயற்சிசெய்யலாம்.

**வாங்கு திறன் சமநிலை** (Purchasing Power Parity)

வாங்குதிறன் சமன்நிலைவிதி சமநிலை மாற்றுவீதம் (equilibrium rate) நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றதா என்று பார்க்க உதவலாம். ஆனால் நடைமுறையில் இந்த விதியைப் பயன்படுத்துவது கடினம்[1]. வாங்கு திறன் சமநிலைக்கும், நாணய மாற்று வீதத்திற்கும் பொருத்தம் இருக்கின்றது என்பது இந்த விதியின் உட்கருத்தாகும். ஒரு பவுன் கொண்டிருக்கும் வாங்கும் திறனை 2.8 டாலர் கொண்டிருந்தால் E 1 = $.8 என்ற வீதம் நிலைநாட்டப்படும் என்று சிலர் இரு செலாவணிகளுடைய வாங்கும் திறனை ஒப்பிடாமல், அவைகளுடைய திறனில் ஏற்படும் மாறுதல்களை ஒப்பிடுகின்றனர். செலாவணியின் (பொருளை) வாங்கும் திறனை விட அதில் ஏற்படும் மாறுதலை ஒப்பிடுவது பொருத்தமாக இருக்கின்றது. உதாரணமாகப் பவுனின் வாங்கும் சக்தி 50 சதவீதம் குறைந்தபொழுது, டாலரின் வாங்கும் சக்தி இரட்டித்துவிட்டால், டாலர் முன்பு இருந்ததைப் போல் 4 மடங்கு பவுனுக்குச் சமமாக இருக்கும். அதாவது செலாவணியின் புறமதிப்பு (external Value) அகமதிப்புடன் (internal Value) தொடர்பு கொண்டிருக்கிறது.

நாம் முதலில் கூறியது, அதாவது இரு செலாவணிகளுடைய வாங்கும் திறனை ஒப்பிடுவது தவறானது. பிரயாணிகள்கூட, சில நாடுகளைவிட மற்ற நாடுகளில் பொருள்கள் மலிவாக இருக்கின்றன என்பதை அறிவார்கள். அமெரிக்காவில் விலைகள் இங்கிலாந்தில் நிலவும் விலைகளைவிட அதிகமாக இருக்கின்றன. ஆகையால் ஒருவன் ஒரு பவுனைக் கொண்டு வாங்கும் பொருள்கள், 2.8 டாலரைக் கொண்டு வாங்கும் பொருள்களைவிட அதிகமாக இருக்கின்றன. வெளிநாடுகளுக்கு விற்பனைக்காகச் செலுத்தப்படும் பொருள்களுடைய விலைகளில் அதிக வேற்றுமைகள் இரா. ஆனால் வாகனங்களின் கட்டணங்கள், உணவு விடுதிகள் விற்பனை செய்யும் பண்டங்களின் விலைகள், வழக்கறிஞர்களுக்கு மக்கள் கொடுக்

[1] இந்த விதியைப் பேராசிரியர் கஸ்டாவ்காசல் (Prof. Gustav Cassel) என்பவருடன் தொடர்புபடுத்துகின்றனர். ஆனால் இதன் உட்கருத்து 100 ஆண்டுகளுக்குமுன் வெளிவந்த "புலியன் அறிக்கை" (Bullion Report)யில் கொடுக்கப்பட்டிருந்தது.

கும் தொகைகள் முதலியவை சில நாடுகளில் மற்ற நாடுகளைவிட மலிவாக இருக்கலாம். செலாவணிகளின் வாங்கும் திறனில் ஏற்படும் மாறுதல்களை ஒப்பிடுவது, அவைகளுடைய வாங்கும் திறனை ஒப்பிடுவதைவிடச் சிறந்ததாகும். ஒரு நாட்டில் பொருள்களின் விலைகள் உயர்ந்தால் (அதாவது செலாவணியின் வாங்கும் சக்தி குறைந்தால்), அதன் ஏற்றுமதி குறையும், இறக்குமதி மிகுதியடையும். அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை அந்த நாட்டுக்குப் பாதகமாக இருக்கும். அதன் செலாவணியின் மதிப்பும் குறையும். ஆகையால் ஒரு செலாவணியின் வாங்கும் சக்தி மாறினால் அதன் மாற்று வீதமும் மாறும் என்று சிலர் கருதுகின்றனர். இக் கருத்தை நாம் ஓரளவுக்குமேல் வலியுறுத்தக் கூடாது. ஏனெனில் செலாவணியின் வாங்கும் சக்தியும் அதன் மாற்று வீதமும் எப்பொழுதும் தொடர்பு கொண்டிருக்கும் என்று கூறமுடியாது.

கோதுமை போன்ற ஒரு பொருள் பன்னாட்டு வர்த்தகத்திற்குட்பட்டிருப்பதால் அது எல்லா நாடுகளிலும் ஒரே விலையைக் கொண்டிருக்கும். போக்குவரத்துச் செலவையும் சுங்கவரியையும் நாம் புறக்கணித்தால் மேலே குறிப்பிட்ட பொருள்களின் விலைகள் எல்லா நாடுகளிலும் ஒரே நிலையில் இருக்கின்றன என்று கூறலாம். நாணய மாற்று வீதம் $ 4 = E 1 என்ற நிலையில் இருக்கின்றது என்றும், ஒரு புஷெல் (Bushel) கோதுமையின் விலை சிகாகோவில் ஒரு டாலராக இருக்கின்றது என்றும் கற்பனை செய்து கொள்வோம். லிவர்பூலில் (Liverpool) அதன் விலை ஏறக்குறைய 5 ஷில்லிங்காக இருக்கும். நாணய மாற்று வீதம் $ 3 = E 1 என்ற நிலையை அடைந்தால் கோதுமையின் விலையும் லிவர்பூலில் அதற்குத் தகுந்தாற்போல் மாறும். மற்றப் பண்டங்களின் விலைகளும் இதே முறையில் மாறும். பல்வேறு நாடுகளில் நிலவும் விலைகளுக்கும், நாணய மாற்று வீதங்களுக்கும் ஒரு பொருத்தம் இருக்க வேண்டும். பன்னாட்டு வர்த்தகத்திற்குட்பட்ட பொருள்களுடைய விலைகளில் ஏற்படும் மாறுதல்களை மட்டும் நாம் ஒப்பிடுவது சரியல்ல. ஏனெனில் பொருள்களை அயல்நாடுகளுக்கு ஏற்றிச் செல்லும் வாகன வசதிகளுடைய கட்டணங்களும் சுங்கவரிகளும் மாறினாலன்றி, செலாவணிகளின் வாங்கும் சக்தியில் ஏற்படும் மாறுதல்கள் ஒரேமாதிரிதான் இருக்கும். அவைகளுள் வேறுபாடுகள் இரா[1]. நாணய மாற்று வீதங்கள் சமநிலையில் இருந்

1 இங்கிலாந்தில் இறக்குமதியாகும் பொருள்கள் மீது விதிக்கும் சுங்கவரியும், வாகனங்களின் கட்டணமும் மிகுதியடைந்தால் இங்கிலாந்தில் நிலவும் விலைகளும் வெளிநாடுகளில் நிலவும் விலைகளும் கொண்டிருக்கும் வேறுபாடு அதிகரிக்கும். இங்கிலாந்தில் விலைகள் உயரும். ஆனால் இறக்குமதி குறைவதால் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை சாதகமாக இருக்கும். செலாவணியின் புறமதிப்பு உயரலாம். ஆகையால் நாணய மாற்று வீதத்திற்கும் செலாவணிகளின் வாங்கும் சக்திக்கும் வேறுபாடு இருக்கலாம்.

தாலும் இல்லாவிட்டாலும் செலாவணிகளின் வாங்கும் சக்தியில் ஏற்படும் மாறுதல்கள் சமமாகவே இருக்கும். பன்னாட்டு வர்த்தகத்திற்குட்பட்ட பண்டங்களின் விலைகளே நாணயமாற்று வீதத்திற்குப் பொருத்தமாக அமைகின்றன. மாற்று வீதங்கள் விலைகளுக்கு ஏற்றவாறு மாறுவதில்லை.

வீடு, பால், பணிகள் (Services) முதலியவற்றை ஒரு நாடு மற்ற நாடுகளுக்கு விற்பனை செய்யமுடியாது. ஆகையால் அவைகளுடைய விலைகள் எல்லா நாடுகளிலும் ஒரே நிலையில் இரா. உதாரணமாக இங்கிலாந்தில் உள்நாட்டிலேயே விற்பனையாகும் பொருள்களின் விலைகள் இரட்டிக்கின்றன என்றும் அமெரிக்காவில் அவைகளுடைய விலைகள் மாறவில்லை என்றும் நாம் கற்பனை செய்துகொண்டால் ஸ்டெர்லிங் - டாலர் வீதம் (Sterling-dollar rate) 50 சதவீதம் குறைவதற்கு எவ்வித காரணமும் இல்லை. ஆகையால் உள்நாட்டிலேயே விற்பனையாகும் பொருள்களின் விலைகளைக் கொண்டு நாம் நாணய மாற்று வீதத்தை மதிப்பிட்டால் செலாவணிகளின் வாங்கும் சக்திக்கும் அவைகளுடைய புறமதிப்புக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை என்பதை அறியலாம். அவைகளுடைய வாங்கும் சக்திக்கும் புறமதிப்புக்கும் உள்ள வேறுபாடு நீடிக்குமா? சமநிலையிலிருந்து செலாவணியின் புறமதிப்பு (நாணய மாற்று வீதம்) எவ்வளவு தூரம் விலகியிருக்கின்றது என்பதை இந்த வேறுபாடு வகுத்துக்காட்டுகிறதா? இதை அடிப்படையாகக் கொண்டு அரசினர் தம் எதிர்காலக் கொள்கையை வகுத்துக்கொள்ளலாமா?

மேற்கூறிய வேறுபாடு உள்நாட்டில் விற்பனையாகும் பொருள்களின் விலைகளுக்கும், பன்னாட்டு வர்த்தகத்திற்குட்பட்ட பொருள்களுடைய விலைகளுக்கும் உள்ள வேறுபாடுகளுக்குச் சமமாக இருக்கும். நாணய மாற்று வீதத்திற்கும் பன்னாட்டு வர்த்தகத்திற்குட்பட்ட பொருள்களுடைய விலைகளுக்கும் உள்ள தொடர்பு, உள்நாட்டில் விற்பனையாகும் பொருள்களுடைய விலைகளையும் பாதிக்கும். பன்னாட்டு வர்த்தகப் பொருள்களுடைய விலைகள் உயரும்பொழுது உள்நாட்டு வர்த்தகப் பொருள்களுடைய விலைகளும் உயராவிடில், செலாவணியின் வாங்கும் சக்தி அதன் புறமதிப்புக்குச் சமமாக இருக்காது. செலாவணியின் வாங்கும் சக்தியும் அதன் புறமதிப்பும் ஒரேவிதமாக மாறவேண்டுமென்றால், உள்நாட்டு வர்த்தகப் பொருள்களுடைய விலைகளும், அயல்நாட்டு வர்த்தகப் பொருள்களுடைய விலைகளைப் போலவே மாறவேண்டும். உள்நாட்டில் வர்த்தகப் பொருள்களுடைய விலைகளையும் பன்னாட்டு வர்த்தகப் பொருள்களுடைய விலைகளையும் தொடர்புபடுத்தும் சில

சக்திகள் இருக்கின்றன. மேலே குறிப்பிட்ட இருவகைப் பொருள்களுள் எந்தப் பொருள்களுடைய விலைகள் உயர்ந்தாலும், அதனால் உற்பத்திச் சாதனங்களுடைய விலைகளும் கூலிகளும் உயரும். இதன் விளைவாக மற்றப் பொருள்களுடைய அடக்கச் செலவும் மிகுதியடையும்; அவைகளுடைய விலைகளும் உயரும். ஏற்றுமதிப் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்களில் கூலிகள் உயர்ந்தால், அவைகளுடன் தொடர்புகொண்ட மற்றத் தொழில்களிலும் கூலிகள் உயரும். முதன்முதலில் ஏற்றுமதித் தொழிலில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளர்களைப் போன்ற மற்றத் தொழிலாளர்களுடைய கூலிகள் உயரும். பிறகு அதே திறமை கொண்ட மற்றத் தொழிலாளர்களுடைய கூலிகளும், இறுதியில் அவர்களைவிடக் குறைந்த திறமை கொண்ட தொழிலாளர்களுடைய கூலிகளும் உயரும். கச்சாப் பொருள்களுடைய விலைகளும் இதே மாதிரி உயரும். எஃகின் விலை உயர்ந்தால், கப்பல்களின் தகடுகளுடை விலை, உத்தரத்தின் விலை முதலியவையும் உயரும். போட்டி எல்லா விலைகளையும் தொடர்புபடுத்துகிறது. ஏதாவது ஒரு விலை மாறினால் அதனால் மற்ற எல்லா விலைகளும் பாதிக்கப்படும்.

விலைகளின் அமைப்பு எவ்வாறு நெகிழ்ச்சியற்றதாக இருக்கின்றது என்பதை நாம் பரிசீலனை செய்தால்தான் வாங்கு திறன் கோட்பாடு உண்மையானதா என்பதை அறியமுடியும். உள்நாட்டு வர்த்தகப் பொருள்களின் விலைகளும் அயல்நாட்டு வர்த்தகப் பொருள்களின் விலைகளும் ஒரேமாதிரி மாறினால், நாணய மாற்று வீதங்களும், செலாவணிகளின் வாங்கும் சக்தியும் தொடர்பு கொண்டிருக்கின்றன என்று நாம் கூறலாம். பொருள் உற்பத்தியில் பல்வேறு தொழில்களிடையே வேறுபாடுகள் இருக்கலாம். தொழிலாளர்கள் இடப் பெயர்ச்சி (Mobility) யற்றிருக்கலாம். சில தொழில்துறைகளில் புதிய உற்பத்தி முறைகள் கண்டுபிடிக்கப்படலாம்; நாட்டில் செம்மையற்ற போட்டி நிலவலாம். ஆகையால் பல்வேறு தொழில்களில் பல்வேறு விலைவாசிகள் நிலவலாம். கூலிகளும் விலைகளும் எல்லாத் தொழில்களிலும் ஒரேவிதத்தில் மாறாமல் இருக்கலாம். உள்நாட்டு வர்த்தகப்பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்கள் அயல்நாட்டுத் தொழில்களுடைய போட்டியைச் சமாளிக்க வேண்டா. இத்தகைய தொழில்களும் அயல்நாட்டு வர்த்தகப் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்களும் ஒரே நிலையில் இருக்கும் என்று நாம் கூறமுடியாது. இவ்விருவகைத் தொழில்களில் ஒருவகை மற்றொன்றைவிட செழிப்பான நிலையில் இருக்கலாம். உள்நாட்டு வர்த்தகப் பொருள்களின் அடக்கச் செலவு உயரும்பொழுது ஏற்றுமதிப் பொருள்களின் அடக்கச்

செலவு உயராமல் இருக்கலாம். இந்த நிலையில் ஒரு நாடு அயல் நாடுகளுடன் போட்டியிடும் திறமை பாதிக்கப்படாது. உள்நாட்டில் விலைவாசி அதிகமாக இருக்கும்; செலாவணியின் வாங்கும் சக்தி குறைவாக இருக்கும். இந்த நிலை வாங்கு திறன் சமநிலை விதியின் பிழையை எடுத்துக்காட்டுகிறது.

ஒரு நாடு வாங்கும் அயல் நாட்டுப் பொருள்களின் விலைகளும், விற்பனை செய்யும் பொருள்களின் விலைகளும் மாறும்பொழுது இதே நிலை ஏற்படும். வர்த்தகத் தொடர்பு கொண்டுள்ள இரு நாடுகள் இருக்கின்றன என்று கற்பனை செய்துகொள்வோம். இந்த நாடுகள் தாம் உற்பத்திசெய்யும் பொருள்களில் ஒரு பகுதியையும், அதற்குச் சமமான அளவு அயல்நாட்டுப் பொருள்களையும் பயன்படுத்துகின்றன என்றும் கற்பனை செய்துகொள்வோம். ஒரு நாட்டில் ஏற்றுமதிப் பொருள்களுடைய விலைகள் குறைந்தால் இரு நாடுகளிலும் விலைகள் ஒரேமாதிரி பாதிக்கப்படும். (ஆனால் தேசீய வருமானம் ஒரேமாதிரி பாதிக்கப்படும் என்று கூறமுடியாது). விலைகள் மாறியதைப் போல் நாணய மாற்று வீதமும் மாறும். அதாவது செலாவணிகளின் வாங்கும் சக்தி மாறாமல் இருக்கும்பொழுது அவைகளுடைய புறமதிப்பு மட்டும் மாறும்.

சில நாடுகள் மற்ற நாடுகளுக்கு மூலதனத்தை ஏற்றுமதி செய்வதாலும், நாணய மாற்று வீதத்திற்கும் செலாவணியின் வாங்கும் சக்திக்கும் வேறுபாடு ஏற்படலாம். ஒரு நாடு மற்றொன்றுக்கு ஏராளமான தொகையைக் கடனாகக் கொடுத்தாலும், ஊக வாணிகம் செய்வோர் அயல்நாடுகளுக்கு ஏராளமான தொகையை அனுப்பினாலும், அந்த நாட்டின் செலாவணி ஏராளமான அளவில் விற்பனையாகும். அதன் புறமதிப்பும் தாழ்வடையும். ஆனால் உள்நாட்டில் விலைகள் பாதிக்கப்படா. ஆகையால் செலாவணியின் புறமதிப்புக் குறையும்பொழுது அதன் அகமதிப்புக் குறையாமல் இருக்கும்.

வாங்கு திறன் சமநிலை விதியின் குறைகளைக் களைந்தபின், அந்த விதி தன் சிறப்பான அம்சத்தை இழந்துவிடுகிறது. அது ஒரு சிறந்த குறுகிய காலக் கோட்பாடு என்று நாம் கூறமுடியாது. ஏனெனில் ஊக வாணிகத்திற்கும், மூலதன ஏற்றுமதிக்கும் அது ஒரு பொருத்தமான விளக்கம் கொடுக்கவில்லை. அது ஒரு சிறந்த நீண்டகாலக் கோட்பாடாகாது. ஏனெனில் கூலிகளும் விலைகளும் பல்வேறு தொழில்களில் வெவ்வேறு வழிகளில் மாறலாம் என்ற உண்மையுள் அது முரணாக இருக்கின்றது.

### நிலையற்ற நாணய மாற்று வீதத்தின் இயங்கும் தன்மை

வாங்குதிறன் விதியை முதல் உலகப் போருக்குப் பின் பலர் ஏற்றுக்கொண்டனர். பணவீக்கமே ஒரு செலாவணியின் புறமதிப்புக் குறைவதற்குக் காரணமாகும் என்று இந்த விதி எடுத்துக் காட்டியதால் தான் இதைப் பலர் ஏற்றுக்கொண்டனர். செலாவணிப் பெருக்கத்தைக் குறைத்தால் அதன் புறமதிப்பு உயரும். என்று இந்த விதி எடுத்துக்காட்டியது. செலாவணிப் பெருக்கம் குறைந்தால், விலைகள் உயரா. பணத்தின் வாங்கும் சக்தியும் குறையாது; அதன் புறமதிப்பும் குறையாது. முன்பெல்லாம் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை பாதகமாக இருந்தால் அது இயற்கையின் விதி என்றோ அல்லது இறைவனுடைய ஆணை என்றோ மக்கள் கருதினர். இந்தத் தவறான கருத்தை மக்கள் கைவிட்டதற்குக் காரணம் வாங்குதிறன் சமநிலைக் கோட்பாடேயாகும். உள் நாட்டு நிதிக்கொள்கை மூலம் நாணய மாற்று வீதத்தை மாற்ற முடியாது என்று அவர்கள் கருதினர். வேலை நிறைவு இருக்கும்பொழுது அரசினர் வரவு-செலவு திட்டத்தினால் பற்றுக்குறை ஏற்பட்டால், அதைத் தொடர்ந்து பணவீக்கமும் ஏற்படும். அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையும் நாணய மாற்று வீதமும் பணவீக்கத்தால் பாதிக்கப்படும். அரசாங்கத்தின் செலவு மிகுதியடைவதால் தொழிலதிபர்களுக்குக் கிடைக்கும் உற்பத்திச்சாதனங்கள் குறையும். ஏற்றுமதித் தொழில்கள் தொழிலாளர்களையும் மற்ற உற்பத்திச் சாதனங்களையும் முன்பு போல் வேலையிலமர்த்தமுடியாத நிலையில் இருக்கின்றனர். அல்லது அயல்நாடுகளிலிருந்து இறக்குமதியாகும் பொருள்கள் உள்நாட்டில் பற்றுக்குறையை நீக்கும். எந்த விளைவு ஏற்பட்டாலும் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை பாதகமாக இருக்கும்; பணவீக்கத்தைத் தொடர்ந்து அடுத்தபடியாக வரும் மந்தம் ஏற்றுமதித் தொழில்களுக்கு ஒரு தூண்டுதலைக் கொடுக்கும். மந்தகாலத்தில் உள்நாட்டில் இறக்குமதிப் பொருள்களுடைய தேவை குறையும். அப்பொருள்களுடைய விலைகளும் குறையும். அரசினர் தம் செலவைப் பெருக்கிக்கொண்டே சென்றால், இறக்குமதி மிகுதியடையும், ஏற்றுமதி குறையும். இந்த நிலையில் பணவீக்கம் விரைவில் வளர்ச்சியடையும். ஏனெனில் ஊக வாணிகம் செய்வோர் நாட்டில் விலைகள் ஓர் உச்ச நிலையை அடைந்து விட்டது என்று கருதாமல் மேலும் விலைகள் உயரலாம் என்று எதிர்பார்த்து அந்த நாட்டுச் செலாவணிக்கு மிகவும் குறைந்த மதிப்பையே கொடுப்பர்.

### நாணய மாற்று வீதங்களில் திறன்முறை மாறுதல்கள்

நாணயத்தின் புறமதிப்புக் குறைந்தால் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை சமநிலையை அடையலாம். ஆனால் சில சந்தர்ப்பங்

களில் செலாவணியின் மதிப்புக் குறைவதால் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை மேலும் பாதகமான நிலையை அடையலாம். ஒரு நாட்டின் ஏற்றுமதி நெகிழ்ச்சியற்றதாக இருக்கின்றது என்றும், இவ்வேற்றுமதிப் பொருள்களின் தேவையும் அயல்நாடுகளில் நெகிழ்ச்சியற்றதாக இருக்கின்றது என்றும் நாம் கற்பனை செய்து கொள்வோம். உணவுப் பொருள்கள் போன்ற சில குறிப்பிட்ட பொருள்களைமட்டுமே ஏற்றுமதிசெய்யும் நாடுகள் இந்த நிலையில் இருக்கும். உதாரணமாக ஆஸ்திரேலியா, கோதுமை கம்பளி போன்ற பொருள்களைக் கட்டாயம் ஏற்றுமதி செய்யவேண்டும். மலேயா, ரப்பரையும் தகரத்தையும் ஏற்றுமதி செய்யவேண்டிய நிலையில் இருக்கின்றது. நாணய மாற்றுவீதம் குறைந்தால், ஏற்றுமதிப் பொருள்களின் விலைகள் குறையும். ஆனால் ஏற்றுமதி மிகுதியடையாது: ஏனெனில் ஏற்றுமதிப் பொருள்கள் தேவை அயல் நாடுகளில் மிகுதியடையவில்லை. மேலும் உள்நாட்டில் ஏற்றுமதிப் பொருள்களின் உற்பத்தியை உடனடியாகப் பெருக்கமுடியாது. ஆகையால் ஒரு நாடு (இந்த நிலையில்) ஏற்றுமதி மூலம் ஈட்டும் அயல்நாட்டுச் செலாவணியின் அளவு குறையும். ஒரு நாட்டின் இறக்குமதியும் நெகிழ்ச்சியற்றதாக இருக்கலாம். இறக்குமதிப் பொருள்கள் உணவுப் பொருளாக இருந்தால் இறக்குமதி நெகிழ்ச்சியற்றதாகஇருக்கும். நாணய மாற்றுவீதம் குறைந்தால் இறக்குமதியோ அல்லது பொருள்களின் அடக்கச் செலவோ குறையாது. இறக்குமதி ஏற்றுமதியைவிட மிகுதியாக இருக்கும். இறக்குமதிக்கும் ஏற்றுமதிக்கும் உள்ள வேறுபாடு முன்பைவிட அதிகமாக இருக்கும். மேலும் இறக்குமதியான பொருள்களுடைய விலைகள் உள்நாட்டில் உயரும். ஆகையால் பணவீக்கத்தின் கொடுமை மேலும் அதிகரிக்கும். ஏற்றுமதியும் இறக்குமதியும் கணிசமான அளவு நெகிழ்ச்சியுடையதாக இருந்தால்கூட பண வீக்கம் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையைப் பாதிக்கலாம். ஏற்றுமதியும் இறக்குமதியும் நெகிழ்ச்சியற்றதாக இருந்தால், அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை மிகவும் பாதிக்கப்படும். நாணய மாற்று வீதம் குறைவதால் பணவீக்கம் ஏற்படும். பணவீக்கம் ஏற்படுவதால் நாணய மாற்றுவீதம் குறையும். இந்த நிலையில் அயல் நாட்டுக் கொடுப்பல்நிலை பாதிக்கப்படும்.

சாதாரணமாக நாணய மாற்றுவீதம் குறைவதால் பணவீக்கம் ஏற்படாது. ஏற்றுமதியாகும் பொருள்களும், இறக்குமதிப் பொருள் களும் மிகவும் குறைந்த நெகிழ்ச்சியைக் கொண்டிருந்தால்தான் அயல்நாட்டுக் கொடுப்பல்நிலை பாதிக்கப்படும். நாணய மாற்று வீதத்தில் ஏற்படும் மாறுதல் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையை உடனடியாகப் பாதிக்காவிடினும், ஊகவாணிகம் அதை மாற்றி

விடும். ஒரு நாணயம் இயற்கையான மதிப்பைவிடக் குறைவான மதிப்பைக் கொண்டிருந்தால், ஊகவாணிகம் செய்வோர் அதை ஏராளமாக வாங்குவர். மேலே கூறப்பட்டுள்ள கருத்தை எல்லாப் பொருளாதார வல்லுநர்களும் ஏற்றுக்கொள்வரென்று நாம் கூற முடியாது. பன்னாட்டு வர்த்தகத்தில் நெகிழ்ச்சி (elasticity) என்ற சக்தி நாம் வியக்கத்தக்க அளவு குறைவாக இருக்கின்றது என்று அவர்கள் கூறுகின்றனர். எது உண்மையாக இருந்த போதிலும் உலகநாடுகள் இறக்குமதி செய்யும் பொருள்களின் தேவை நெகிழ்ச்சியற்றதாக இருக்கின்றது என்று அஞ்சி, அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை பாதகமாக இருந்தபோதிலும், தம் செலாவணி யின் புறமதிப்பைக் குறைக்காமல் இருக்கலாம். சர்வாதீன உற்பத்தியாளர்கள் (Monopolists) தாமாகவே விலைகளைக் குறைக்க விரும்புவதில்லை. அதேபோல் ஒரு நாடும் தன் செலாவணியின் புறமதிப்பைக் குறைக்க விரும்புவதில்லை. தன் செலாவணியின் புறமதிப்பைக் குறைக்கும் ஒரு நாடு, இறக்குமதிப் பொருள்களுக்கு உயர்ந்த விலையைக் கொடுக்கத் தயாராக இருக்கின்றது. ஏற்றுமதிப் பொருள்களுக்குக் குறைந்த விலையை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கின்றது. அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை மூலம் சிறிது நன்மை பெற, ஒரு நாடு மற்ற நாடுகளுக்கு ஏராளமாக ஏற்றுமதிச் சலுகைகள் காட்டவேண்டியிருக்கிறது என்று அது கருதலாம். மேலும் உலகநாடுகள் தம் மதிப்பைக் காப்பாற்றிக்கொள்ளவேண்டும் என்று கருதுகின்றன. ஆகையால் மிகவும் அவசியம் இருந்தாலன்றி ஒரு நாடு தன் செலாவணியின் புறமதிப்பைக் குறைக்காது. ஆனால் சாதாரணமாக உலகநாடுகள் வேண்டுமென்றே தம் செலாவணியின் புறமதிப்பை உயர்த்துவதில்லை.

**டாலர் பற்றுக்குறை**

போருக்குப்பின் உலகநாடுகள் அமெரிக்காவுக்கு ஏராளமான தொகையைச் செலுத்தவேண்டியதாயிற்று. போருக்குப் பின் எல்லாநாடுகளும் தம் செலாவணிகளின் மதிப்பைக் (மறைமுகமாக) குறைத்திருந்தால் அமெரிக்கா, அவைகளிடமிருந்து மிகுதியான பொருள்களை இறக்குமதி செய்திருக்கும் என்று நாம் கூற முடியாது. உலகநாடுகள் தம் ஏற்றுமதியை உடனடியாகப் பெருக்கக்கூடிய நிலையில் இல்லை. மேலும் அமெரிக்கா எழுப்பிய சுங்கவரிச் சுவர்களைக் கடந்து தம் பொருள்களை அந்த நாட்டுக்குச் செலுத்தும் அளவு உலகநாடுகள் உடனடியாக முன்னேற முடியவில்லை. ஐரோப்பிய நாடுகள் அமெரிக்காவிலிருந்து கட்டாயமாகப் பொருள்களை இறக்குமதி செய்யவேண்டிய நிலையில் இருந்தன. போரால் தாக்குண்ட நாடுகள் அமெரிக்கப் பொருள்களைக்

கொண்டே முன்னேற்றத் திட்டங்களைச் செயற்படுத்தவேண்டி யிருந்ததால் இறக்குமதியைக் குறைக்கமுடியவில்லை. சில பொருள் களை அமெரிக்கா மட்டுமே அந்த நாடுகளுக்குக் கொடுக்கக்கூடிய நிலையில் இருந்தது. அமெரிக்காவுடன் கொண்டிருந்த தொடர்பில் ஒவ்வொரு நாடும் சமநிலையை ஏற்படுத்த முயற்சி செய்திருந்தால் டாலருடைய மதிப்பு மேலும் அதிகரித்திருக்கும். மேலும் முக்கிய மான நாடுகள் அமெரிக்காவுடன் கொண்டுள்ள வர்த்தகத் தொடர்பில் சமநிலையை ஏற்படுத்துவதற்காக இறக்குமதியைக் குறைத்திருந்தால், அவைகளுடைய தொழில்கள் மீண்டும் விரை வில் நன்கு வளர்ச்சியடைந்திரா. அவைகளுக்குக் கச்சாப் பொருள் கிடைத்திருக்காது. நாட்டில் வேலையின்மை ஏற்பட்டிருக் கும். ஆனால் சிறந்த நிதிக் கொள்கை (Financial Policy) மூலம் ஓரளவு நிலைமையைச் சமாளித்திருக்கலாம். வரவு செலவுத் திட்டத்தில் ஏற்படும் பற்றுக்குறையை நீக்கி, வட்டிவீதங்களை உயர்த்தினால் நிலைமையில் முன்னேற்றம் ஏற்படலாம். உலக நாடுகள் நிலைமையைச் சமாளிக்க அமெரிக்காவிடம் ஏராளமான தொகையைக் கடனாக வாங்கின. ஆகையால் அவை உற்பத்தி யையும் வருமானத்தையும் குறைக்காமல் அயல்நாட்டுக் கொடுப் பல் நிலையில் சமநிலையை ஏற்படுத்த முடிந்தது.

டாலர் பற்றுக்குறையை ஒரு செலாவணியின் அளிப்பில் ஏற் பட்ட பற்றுக்குறை என்று மட்டும் நாம் கருதமுடியாது. அது மூல தனப் பற்றுக்குறையாகவும் இருந்தது. அயல்நாட்டு உதவியைக் கொண்டே ஐரோப்பிய நாடுகள் மக்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவேண்டியதாயிற்று. மேலும் பொருளாதார மீட்சிக்கும் முதலீட்டுக்கும் அயல்நாட்டு உதவி இன்றியமையாத தாக இருந்தது. அமெரிக்கா மட்டுமே மற்ற நாடுகளுக்கு உதவி புரியக்கூடிய நிலையில் இருந்தது. தம் சக்தியையும், அமெரிக்க உதவியையும் கொண்டு ஐரோப்பிய நாடுகள் முன்னேற முயற்சி செய்தன. அந்நாடுகள் மார்ஷல் திட்ட உதவியைக் கொண்டு (Marshall Aid) புனரமைப்புத் திட்டங்களைச் செயலாற்றின. உள்நாட்டுச் சேமிப்பைக் கொண்டு மீட்சித் திட்டங்களை ஐரோப் பிய நாடுகள் செயலாற்ற முடியாத நிலையில், மார்ஷல் திட்டத்தின் மூலம் அமெரிக்காவிலிருந்து மூலதனத்தைப் பெற்றன. அந்த நாடுகள் அமெரிக்காவிலிருந்து மூலதனத்தை மட்டுமன்றி முக்கிய மான பொருள்களையும் வாங்கிக்கொண்டன. ஐரோப்பிய நாடுகள் உணவுப்பொருள்களையும், கச்சாப் பொருள்களையும், உற்பத்திக்கு வேண்டிய தளவாடப் பொருள்களையும் இறக்குமதி செய்யவேண்டி யிருந்த காலத்தில் அமெரிக்கா மட்டுமே அவைகளைக் கொடுக்கக்

கூடிய நிலையில் இருந்தது. அமெரிக்கா ஏற்றுமதிக்கு வேண்டிய பொருள்களையும் உபரி மூலதனத்தையும் கொண்டிருந்தது.

ஐரோப்பாவில் உற்பத்திச் சாதனங்கள் வேண்டிய அளவு கிடைக்கவில்லை என்பதையே டாலர் பற்றுக்குறை எடுத்துக் காட்டியது. ஐரோப்பாவுக்கு அமெரிக்கா செய்த உதவியும் இதை எடுத்துக்காட்டியது. டாலர் பற்றுக் குறையும், மூலதனப் பற்றுக் குறையும் ஓரளவு தொடர்பில்லாமல் இருந்தது. ஆகையால் ஐரோப்பிய நாடுகள் அமெரிக்காவுக்குப் பொருள்களை ஏற்றுமதி செய்யவேண்டும், ஐரோப்பியப் பொருள்கள் அமெரிக்கச் சுங்க வரிச் சுவர்களைக் கடந்துசெல்லவேண்டும். மேலும் ஐரோப்பியத் தொழில்கள் அமெரிக்கத் தொழில்களுடன் வெற்றிகரமாகப் போட்டியிடவேண்டும். உலக மார்க்கட்டில் நிலவும் விலைகளிலும் வேறு விலைகளிலும் தம் பொருள்களை விற்பனை செய்யவேண்டும். ஐரோப்பா ஏற்றுமதியைப் பெருக்க எவ்வளவு முயற்சி செய்த போதிலும், மிகுதியான அளவு டாலர்களை ஈட்டமுடியும் என்று நம்பவில்லை. ஐரேப்பாவில் உற்பத்தி பெருகிய பிறகு, அமெரிக்கா அதன் பொருள்களை வாங்கும் என்றும் நம்ப முடியவில்லை. மற்ற நாடுகளும் தம் ஏற்றுமதி மூலம் ஏராளமான டாலர்களைப் பெற முடியும் என்றும் தோன்றவில்லை. மற்றநாடுகள் தம் செலாவணி களின் புறமதிப்பைக் குறைத்தால் நிலைமையில் முன்னேற்றம் ஏற்படும் என்றும் நம்புவதற்கிடமில்லை. பிரச்சினைக்கு ஒரு முடிவு காண அமெரிக்காவும் மற்றநாடுகளும் சிறந்த கொள்கையைப் பின்பற்றவேண்யடிதாயிற்று.

## நாணய மாற்றுக் கட்டுப்பாடு (Exchange Control)

மார்க்கட்டில் நிலவும் சக்திகள் சமநிலை மாற்றுவீதத்தை (equilibrium rate of exchange) நிலைநாட்டா என்று ஒரு நாடு அஞ்சினால், அது நாணய மாற்றுக் கட்டுப்பாட்டை அமுலில் கொண்டுவரும். பாங்குகள் அரசினர் அனுமதியின்றி ஒருவருக்கும் அயல்நாட்டுச் செலாவணியைக் கொடுக்கக்கூடாது. ஏற்றுமதி யாளர் ஈட்டும் அயல்நாட்டுச் செலாவணியை அவர்கள் பாங்கு களிடம் கொடுக்கவேண்டும். 1939ஆம் ஆண்டில் போர் தொடங் கியதிலிருந்து இங்கிலாந்தில் நாணய மாற்றுக் கட்டுப்பாடு அமலில் இருக்கின்றது. இக்கட்டுப்பாட்டு முறை 1947ஆம் ஆண்டு இயற்றப்பட்ட நாணய் மாற்றுக் கட்டுப்பாட்டுச் சட்டத்தை (Exchange Control Act) அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. அயல்நாட்டுச் செலாவணியை வாங்குதலையும், கொடுத்தலையும் கட்டுப்பாடு செய்வது மட்டும் எவ்வித நன்மையையும் பயக்காது.

செலுத்தப்படும் தொகையை அரசினர் கட்டுப்பாடுகளுக்குட்படுத்த வேண்டும். முதன்முதலில் மூலதன ஏற்றுமதியையும், இறக்குமதியையும் கட்டுப்பாடுகளுக்குட்படுத்த வேண்டும். பத்திர விற்பனையையும், வெளிநாடுகளில் குடியேறுபவர்கள் எடுத்துச் செல்லும் தொகையையும் அரசினர் கட்டுப்படுத்துகின்றனர். நடைமுறைத் தொடர்புகள்கூட கட்டுப்பாடுகளுக்கு உட்படும். அரசினர் அனுமதியுடனேயே பொருள்களை ஒரு நாட்டில் இறக்குமதி செய்யவேண்டும். ஆகையால் சில பொருள்களின் இறக்குமதிக்கு ஓர் உச்சவரம்பு ஏற்படுத்தப்படும். ஒரு நாடு ஒவ்வொரு நாட்டிலிருந்தும் ஒரு குறிப்பிட்ட அளவு பொருளையே இறக்குமதி செய்யும். பிரயாணிகள் ஒரு குறிப்பிட்ட தொகைக்குமேல் அயல் நாடுகளில் செலவு செய்யக்கூடாது.

நாணய மாற்றுக் கட்டுப்பாடு மற்றக் கட்டுப்பாடுகளைப் போல் தெளிவாகப் புலப்படாததால், அது வெற்றிகரமாக இருக்கின்றது என்று மக்கள் கருதுகின்றனர். ஆனால் மற்றக் கட்டுப்பாடுகளைப் போல் அதிலும் பல குறைகள் இருக்கின்றன. நிருவாகத்தில் ஊழல்கள் ஏற்படுவதற்கு இடம் இருக்கின்றது. மற்றப் பொருள்களைப்போல் அயல்நாட்டுச் செலாவணியையும் மக்கள் கறுப்பு மார்க்கட்டில் (Black Market) வாங்கலாம். மூலதன ஏற்றுமதி தடைகளுக்குட்பட்டிருக்கும்போதும், மூலதனத்தை அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யலாம். ஏற்றுமதியாளர்கள் தாம் ஈட்டும் அயல்நாட்டுச் செலாவணியை அரசனிடம் உடனடியாகக் கொடுக்கத் தவறினாலும், இறக்குமதியாளர்களும் உடனடியாகப் பணத்தைச் செலுத்தத் தவறினாலும் ஏற்றுமதிக்கும் இறக்குமதிக்கும் வேறுபாடு இருக்கும். அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் சமநிலை இருக்காது. அயல்நாட்டு ஏற்றுமதியாளர்கள் ஒரு நாட்டின் செலாவணியில் நம்பிக்கை கொண்டிருந்தால் அந்த நாட்டு இறக்குமதியாளர்கள் கடன் வசதிகள் பெறலாம். இந்த நம்பிக்கை பாதிக்கப்பட்டால் அந்த நாடு பணம் செலுத்தும் முறையும் பாதிக்கப்படும்; அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையும் பாதிக்கப்படும். இறக்குமதியும் ஏற்றுமதியும் மாறுவிடினும் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை பாதிக்கப்படலாம். ஊகவாணிகம் கதவுக்கு வெளியே தள்ளப்பட்டால் அது ஜன்னல் வழியாக உள்ளே நுழையும்.

### கடினச் செலாவணியும் மென்மைச் செலாவணியும் (Hard Currency and Soft Currency)

நாணய மாற்றுக் கட்டுப்பாடு அமலில் வந்ததும், அரசினர் சில செலாவணிகளை ஏராளமாகப் பெற்றனர். சில செலாவணிகளில் பற்றுக்குறை ஏற்பட்டது. தடையற்ற செலாவணி மாற்று

(Free convertibility of currencies) இருந்தால் இந்த நிலைமையில் குறைபாடொன்றும் இருக்காது. ஆனால் 'மென்மைச் செலாவணியை'க் கொடுத்து, 'கடினச் செலாவணி' நாட்டிலிருந்து பொருள்களை இறக்குமதி செய்தல் முடியாது. ஆகையால் அரசினர் கடினச் செலாவணியைக் கடுமையான கட்டுப்பாடுகளுக்குட்படுத்தினர். கடினச் செலாவணியில் பற்றுக்குறை ஏற்படாமல் இருக்கும்படி கட்டுப்பாடு செய்தனர். பொன்னையும், டாலரையும் கடினச் செலாவணி என்று நாம் கூறினால், ஒரு நாடு டாலரில் பணம் செலுத்தவேண்டிய நாடுகளிலிருந்து பொருள்களை இறக்குமதி செய்யாது. ஆனால் அந்த நாடுகளுக்கு ஏராளமான பொருள்களை ஏற்றுமதி செய்வதற்கு முயற்சி செய்யும். டாலர் நாடுகள் ஏற்றுமதி செய்யும் பொருள்களை மற்றநாடுகளிலிருந்து வாங்க முயற்சி செய்யும். டாலர் கொடுத்து வாங்கவேண்டிய பொருள்களைவிட மற்றப் பொருள்களையே ஒரு நாடு விரும்பும். டாலர் கொடுத்து வாங்கும் பொருள்களைவிட மற்றப் பொருள்கள் தரத்தில் மோசமானதாகவும், உயர்ந்த விலை கொடுத்து வாங்கவேண்டியதாகவும் இருக்கலாம். மக்கள் உயர்ந்தரகப் பொருள்களைப் பயன்படுத்தமுடியாது. அரசினர் எடுக்கும் நடவடிக்கை டாலரை மென்மைச் செலாவணியாக்கும்; டாலர் நாட்டுடன் கொடுப்பல் நிலையைச் சரிப்படுத்தும்; மென்மைச் செலாவணிகளைக் கடினமாக்கும்.

டாலர் நாடுகளுடைய பொருள்களை மட்டுமே ஒரு நாடு வாங்க மறுக்காது. தம் ஏற்றுமதிப் பொருள்களுக்கு ஈடாகப் பொன்னையோ அல்லது டாலரையோ கொடுக்கவேண்டும் என்று கட்டாயப்படுத்தும் நாடுகளிலிருந்தும் பொருள்களை வாங்க மறுக்கும்[1]. உதாரணமாக பெல்ஜியம் நாட்டுக்கு இங்கிலாந்து பொன்னைச் செலுத்தினால், அந்த நாட்டிலிருந்து பெறும் இறக்குமதியைக் குறைத்துவிடும். பெல்ஜியம் நாட்டுடன் கொண்டிருக்கும் தொடர்பில் சமநிலையை ஏற்படுத்தும். இங்கிலாந்து பெல்ஜியத்தை வேறு செலாவணியை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளும். அல்லது பொன்னைச் செலுத்துவதற்கு உகந்த காலம் வரும்வரை பெல்ஜியம் தனக்குச் சேரவேண்டிய தொகையைக் கேட்காமல் இருக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளும்.

## இருமுக வாணிகம் (Bilateralism)

உலகநாடுகள் வர்த்தகத் தொடர்பில் ஓரம்காட்டினால் தடையற்ற வர்த்தகம் இருக்காது. தடையற்ற பலமுக வாணிகம்

1. பொன்னை எல்லாநாடுகளும் ஏற்றுக்கொள்ளும். டாலரில் பற்றுக்குறை இருக்கின்றது. எனவே இவை இரண்டும் கடினச் செலாவணியாக இருக்கின்றன.

Multilateral trade) இருந்தால் ஒரு நாடு வாங்கும் பொருள்களை இந்த நிலையில் வாங்காது. உலகநாடுகள் இருமுக வர்த்தக ஒப்பந்தங்களைச் (Bilateral trade agreements) செய்துகொள்கின் றன. ஒரு நாடு ஒப்பந்தம் செய்துகொண்ட நாட்டிலிருந்து வேறு எங்கும் கிடைக்காத பொருளைப் பெறும். வேறு எங்கும் விற்பனை செய்யமுடியாத பொருள்களை அந்த நாட்டில் விற்பனை செய்யும். அரசாங்கம் ஏற்றுமதிக்கும் இறக்குமதிக்கும் உள்ள வேறுபாட்டைக் கட்டுப்படுத்தும். கடினச் செலாவணியைச் செலுத்தி இறக்குமதி செய்யும் பொருள்களை அதிகமான அளவில் இறக்குமதி செய்யாமல் இருத்தலே வர்த்தக ஒப்பந்தங்களின் நோக்கமாகும். இவ்வொப் பந்தங்களால் எல்லா நாடுகளும் ஒரே மாதிரி பாதிக்கப்படுவதில்லை. ஏனெனில் சில நாடுகளில் எப்பொழுதுமே டாலர் பற்றுக்குறை ஒரு பிரச்சினையாக இருக்கின்றது. ஆகையால் அவை பலமுக வாணி கத்தின் மூலம் டாலரை ஈட்டவேண்டிய நிலையில் இருக்கின்றன. சில நாடுகள் உபரியாக டாலரை வைத்துக்கொண்டிருக்கின்றன. கால்நடைகளுக்குவேண்டிய தீவனங்களை டென்மார்க் அமெரிக்கா விலிருந்து வாங்கவேண்டும். ஆகையால் அந்த நாட்டுக்கு ஏராளமான டாலர் வேண்டும். ஆனால் ஸ்விட்ஸர்லாந்து நாடு அமெரிக்காவில் முதலீடு செய்திருப்பதால் ஏராளமான டாலரை உபரியாக வைத்திருக்கின்றது. இங்கிலாந்து அமெரிக்காவிலிருந்து அதிகமான பொருள்களை இறக்குமதி செய்கின்றது. ஆனால் அமெரிக்காவுக்கு குறைவான பொருள்களையே ஏற்றுமதி செய் கின்றது. ஆனால் மற்ற நாடுகளிலிருந்து இறக்குமதியாகும் பொருள்களைவிட மிகுதியான பொருள்களை அவைகளுக்கு ஏற்றுமதி செய்வதால் இங்கிலாந்து அவைகளுடைய செலாவணிகளைக் கொண்டு அமெரிக்காவுக்குச் செலுத்தவேண்டிய தொகையைச் செலுத்துகின்றது.

இருமுகவாணிகம் போட்டிக்குட்பட்ட பகுதியைச் சுருக்கி விடும். ஒரு நாடு சில நாடுகளிலிருந்து பொருள்களை இறக்குமதி செய்கின்றது. ஆனால் மற்றநாடுகளிலிருந்து இறக்குமதி செய்வ தில்லை. வர்த்தக ஒப்பந்தங்களை ஒட்டி ஏற்றுமதி அல்லது இறக்கு மதிப் பொருள்களின் அளவை மாற்றலாம். ஒரு கடினச் செலா வணி மென்மைச் செலாவணியாக மாறுவதாலும் ஒரு நாட்டிலி ருந்து வரும் இறக்குமதியைப் பெருக்கலாம். உள்நாட்டு உற்பத்தி யாளர்கள் கடினச் செலாவணி நாட்டு (Hard Currency Countries) உற்பத்தியாளர்களுடைய போட்டியைச் சமாளிக்கவேண்டிய தில்லை. மென்மைச் செலாவணி நாட்டு உற்பத்தியாளர்கள்கூட உள்நாட்டுத் தொழில்களுடன் வெற்றிகரமாகப் போட்டியிட முடியாது. ஏற்றுமதியாளர்கள் உள்நாட்டில் அரசினருடைய அனு

மதியைப் பெற்ற பிறகே ஏற்றுமதிசெய்யமுடியும். மேலும் மேலும் அயல்நாடுகளின் இறக்குமதிக் கட்டுப்பாடுகளையும் அவர்கள் சமாளிக்கவேண்டும். ஆகையால் இருமுக வர்த்தகம் சாதாரணமாக இருக்கும் வர்த்தகத் தொடர்புகளைப் பாதித்துவிடுகின்றது. இதன் விளைவாக அடக்கச் செலவுகள் மிகுதியடையலாம். உற்பத்தித் திறனும் குறையலாம்.

மேலும் ஓரம்காட்டுவது சிறந்த வர்த்தக முறைக்கு முரணுக இருக்கின்றது. இருமுகவாணிகம் உலகநாடுகளிடையே மனக்கசப்பை ஏற்படுத்தலாம். ஒரு நாடு மற்றென்றுக்கு எதிராக வார்த்த ஒப்பந்தங்கள் செய்துகொண்டால், அந்த நாடும் பழி வாங்குவதற்கு முயற்சிசெய்யலாம். சில நாடுகள் அரசியல் நோக்கங்களுடன் வர்த்தக ஒப்பந்தங்களைச் செய்துகொள்கின்றன. நெருக்கடியான காலங்களில் வர்த்த ஒப்பந்தங்கள் மூலம் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையில் சமநிலையை ஏற்படுத்தலாம். ஆனல் வேறுவழியில் சமநிலையை ஏற்படுத்தக்கூடிய சாதாரண காலத்தில் இருமுக வர்த்தக ஒப்பந்தங்களைச் செய்துகொள்ளக்கூடாது. ஓரங் காட்டும் பழக்கத்தையும் கைவிடவேண்டும்.

**ஸ்டெர்லிங் பகுதி** (Sterling area)

காமன்வெல்த் நாடுகள் ஸ்டெர்லிங் பகுதியை ஏற்படுத்திய பிறகு, இருமுக வர்த்தக ஒப்பந்தங்கள்மூலம் ஏற்பட்ட தொல்லைகள் மறைந்தன. ஸ்டெர்லிங் பகுதியைச் சேர்ந்த நாடுகள் ஸ்டெர்லிங் நாணயத்தை ஏற்றுக்கொள்ளவேண்டும். இப்பகுதியில் உள்ள நாடுகள் ஸ்டெர்லிங்கைக் கொண்டே மற்றநாடுகளுக்குச் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்தவேண்டும். இங்கிலாந்தைத் தவிர மற்றநாடுகள் பொன்னையும், எளிதில் மாற்றக்கூடிய செலாவணிகளையும் அதிகம் வைத்துக்கொள்ளவில்லை. ஸ்டெர்லிங் பகுதி நாடுகள் ஏற்றுமதி மூலம் திரட்டும் மற்றச் செலாவணிகளை ஒருமுகப்படுத்திப் பொதுநிதியில் சேர்க்கின்றன. வேண்டும்பொழுது அவை இந்த நிதியிலிருந்து அன்னியநாட்டுச் செலாவணியை வாங்கிக்கொள்ளலாம். 19ஆம் நூற்றுண்டில் இத்தகைய தொடர்பு காமன்வெல்த் நாடுகளிடையே இருந்தது. வர்த்தகத் தொடர்புகளைத் தவிர அவைகளிடையே பாங்குத் தொழிலிலும் தொடர்புகள் இருந்தன. செயல்முறையில்இயங்கிவந்த இந்த முறையை 1939-ல் பெயரளவிலும் ஊர்ச்சிதம்செய்தனர். ஸ்டெர்லிங் பகுதியில் அங்கத்தினர்கள் அப்பகுதிக்குள் நடக்கும் வர்த்தகத்தின்மீது இருந்த தடைகளையும் கட்டுப்பாடுகளையும் தளர்த்தினர். இப்பகுதிக்கு வெளியே உள்ள நாடுகளுடன் கொண்ட தொடர்பைக் கட்டுப்பாடுகளுக்குட்படுத்தினர். எல்லா நாடுகளும் ஒரேகொள்கையைச்

செயற்படுத்தினர் என்று நாம் கருத முடியாது. ஒவ்வொரு நாடும் ஒரே நோக்கத்துடன் தன் நிலைமைக் கேற்ற கொள்கையைச் செயலாற்றியது. டாலர், பொன் முதலிய செலாவணிகளைக் கொடுத்து வாங்கவேண்டிய இறக்குமதியைக் குறைத்துக் கொண்டன. ஸ்டெர்லிங் செலாவணியை தடையற்ற முறையில் எல்லோரும் ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று கருதி அதற்கு ஏற்பாடு செய்தனர். ஆனால் இந்த முயற்சி பயனளிக்க வில்லை. கடினச் செலாவணியையே ஏற்றுக் கொள்ளத் தாயாராக இருந்த நாடுகளுடன் தடையற்ற வர்த்தகத் தொடர்பு கொள்ள முடியவில்லை. ஸ்டெர்லிங் பகுதிக்குள் பலமுக வர்த்தகம் இருந்தது. ஸ்டெர்லிங் பகுதி உலகில் ஒரு பெரிய பகுதியாக இருப்பதால் இரு முக வாணிக ஒப்பந்தங்கள் எங்கும் அமலில் இருந்தபொழுது ஒரு பெரிய பகுதியில் தடையற்ற வர்த்தகம் நடைபெற்றது.

**ஐரோப்பிய நாட்டுச் செலுத்துவோர் சங்கம் (European Payments Union)**

ஐரோப்பியப் பொருளாதாரக் கூட்டுறவுச்சங்கம் (Organisation for European Economic Co-operation), 1950-ல் ஐரோப்பிய நாட்டுச் செலுத்துவோர் சங்கத்தை (European Payments Union) நிறுவியது. இருமுகவாணிகம் ஓரளவு கைவிடப்பட்டது. மேற்கு ஐரோப்பிய நாடுகள் ஐரோப்பியப் பொருளாதாரக் கூட்டுறவுச் சங்கத்தில் (ஐ. பொ. கூ. ச) சேர்ந்து மார்ஷல் திட்ட உதவியைப் பெற்றன. சங்கத்தில் சேர்ந்து நாடுகளுடைய அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை பாதகமாக இருந்தால், முதன்முதலில் அந்த நாடுகள் ஐரோப்பியச் செலுத்துவோர் சங்கத்தில் (ஐ. செ. ச.) கடன் வசதியைப் பெறலாம். ஆனால் இதேநிலை நீடித்தால் கொடுப்பல் நிலையில் சமநிலையை ஏற்படுத்த ஒரு நாடு கடனை அதிகம் எதிர்பார்க்க முடியாது; பொன்னைப் பயன்படுத்த வேண்டும். ஐ. செ. ச. ஒவ்வொரு நாட்டுக்கும் ஒரு குறிப்பிட்ட தொகைக்கு மேல் கடன்கொடுக்காது. ஒருநாடு ஐ. செ. சங்கத்தின், நிருவாகச்சபையினரிடம் விசேஷ அனுமதிபெற்று உபரிக்கடனை வாங்கிக் கொள்ளலாம்.

இந்த முறை ஐரோப்பியச் செலாவணிகளுக் கெல்லாம் ஒரே மதிப்பைக் கொடுத்தது. அதாவது ஒருநாடு மற்றொன்றுக்குச் செலுத்த வேண்டிய தொகையை எந்தச் செலாவணியில் வேண்டு மானாலும் செலுத்தலாம். இந்த நிலையில் எந்த ஐரோப்பியச் செலாவணியையும் ஒருநாடு மற்றச் செலாவணிகளை விடக் கடின மானது என்று கருதமுடியாது. இந்தமுறையில் ஒருநாடு சங் கத்தில் அங்கம் வகிக்கும் எந்த நாட்டையும் எதிர்த்து ஓரம்

காட்ட முடியாது. சங்கத்தில் சேர்ந்த நாடுகள் மற்ற நாடுகளி லிருந்து பொருள்களை இறக்குமதி செய்ய மக்களுக்கு அனுமதி கொடுக்கவேண்டும். சுமார் 60 சத வீதம் இறக்குமதி கட்டுப்பாடு களுக்குட்படாமல் இருத்தல் வேண்டும். ஐரோப்பாவில் இல்லாத ஸ்டெர்லிங் பகுதி நாடுகள் இச்சங்கத்தில் சேர அனுமதிக்கப்பட வில்லை. ஆனால் சங்கத்தில் சேர்ந்தநாடுகள் மற்ற நாடுகளுக்குச் செலுத்தவேண்டிய தொகையை ஸ்டெர்லிங் செலாவணியைக் கொண்டே செலுத்தியதால் மற்ற நாடுகளும் சங்கம் பின்பற்றிய முறையைப் பின்பற்றின.

ஐ. செ. சங்கம் (E. P. U) பலமுக வாணிகத்திற்குட்பட்ட பகுதியை விரிவு படுத்தியது. அயல் நாட்டுக்கொடுப்பல் நிலையில் ஏற்படும் பற்றுக்குறைக்கு உலகநாடுகள் பொன்னை மற்ற நாடு களுக்கு ஏற்றுமதி செய்யும் பழக்கத்துக்குப் புத்துயிர் அளித்தது. இருமுகவாணிகமும், ஓரம் காட்டும் பழக்கமும் இதன் விளைவாக நலிவுற்றன. உலகின் ஒரு பெரும்பகுதி ஒரே வர்த்தக முறை யைப் பின்பற்றியது; தாற்காலிகமாக ஏற்படும் பற்றுக்குறை யைச் சமாளிப்பதற்கு வேண்டிய ஏற்பாடு செய்தது, வர்த்தகக் கட்டுப்பாடுகளைத் தளர்த்துவதற்கு உலகநாடுகளுக்கு ஊக்கம் காட்டியது. ஆனால் கட்டுப்பாடுகளுக்கு அவசியம் ஏற்பட்டால், அதாவது ஒரு நாட்டின் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை மிகவும் பாதகமாக இருந்தால், அந்த நாடு மீண்டும் வர்த்தகத்தைத் தடைகளுக்குட்படுத்தலாம். ஆனால் சங்கத்தின் அங்கத்தினர் களிடையே பேதம் காட்டுதல் அனுமதிக்கப்படவில்லை. சங்கத்தில் சேர்ந்துள்ள ஒரு நாட்டின் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை மிகவும் சாதகமாக இருந்தால், மற்ற நாடுகள் அந்த நாட்டிலிருந்து வரும் இறக்குமதியைக் கட்டுப்படுத்தலாம். நாம் முதலில் குறிப் பிட்ட சலுகையை மட்டுமே சங்கத்தில் சேர்ந்துள்ள நாடுகள் அனுபவித்தன. மற்றச் சலுகையைப் பயன்படுத்திக் கொள்ள எந்த நாட்டுக்கும் வாய்ப்புக் கிட்டவில்லை.

1958-ல் ஐ. செ. சங்கம் கலைந்தது. 1958-ல் ஐரோப்பியச் செலாவணி ஒப்பந்தத்தை (European Monetary Ageement) அமலில் கொண்டுவந்தனர். கிரீஸ் (Greece), துருக்கி (Turkey), ஐஸ்லாந்து முதலிய நாடுகளைத் தவிர மற்ற எல்லா ஐரோப்பிய நாடுகளும் தம் செலாவணிகளைத் தடையற்ற முறையில் மாற்றக் கூடியவையாகச் செய்தன. அதாவது அயல் நாட்டினர் வசம் இருக்கும் ஒரு நாட்டின் செலாவணியை, அவர்கள் எவ்வாறு வேண்டுமானாலும் பயன்படுத்திக் கொள்ளலாம். இதன் விளைவாக வர்த்தகத்தில் பேதம் செய்யும் பழக்கம் மறைந்தது. ஏனெனில்

அமெரிக்கன் அல்லாத ஒருவனுக்கு ஒருநாடு, டாலரைச் செலுத்தி அவனிடம் ஒருநாடு பொருளை வாங்கலாம். ஆகையால் அந்த நாடு அமெரிக்காவில் பொருளைவாங்கி அதற்கு டாலர் நாணயத்தைச் செலுத்தலாம். ஆனால் சிறிதுகாலம் சென்ற பிறகே ஐரோப்பியநாடுகள், டாலர்நாடுகளிலிருந்து பெற்ற இறக்குமதி மீது விதித்திருந்த தடைகளை நீக்கின.

ஐ. செ. சங்கத்தில் சேர்ந்த நாடுகள் பெற்ற கடனுதவியை, ஐரோப்பிய செலாவணி ஒப்பந்த நாடுகளும் பெற்றன. ஆனால் கடனுதவி எளிதில் கொடுக்கப்படவில்லை; தாராளமாகவும் கொடுக்கப்படவில்லை. இந்த நாடுகள் 600 மிலியன் டாலர் மூலத்தைக் கொண்டிருந்தன. அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை தாற்காலிகமாக பாதிக்கப்பட்டால் ஐரோப்பிய நாடுகள் இந்த மூலத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாம். ஆனால் வர்த்தகத்தைக் கட்டுப்படுத்தக் கூடாது. ஐரோப்பிய நாடுகள் தாம் பின்பற்ற வேண்டிய செலாவணிக் கொள்கையைப் பற்றியும் ஒப்பந்தம் செய்து கொண்டன. மேலும் பேசல் (Basle) நகரத்தில் உள்ள உலகப்பாங்கு (Bank For International Settlements) உலகநாடுகளின் மைய பாங்குகளை அடிக்கடி மாநாடுகளுக்கு அழைத்தது. இந்த மாநாடுகளில் மையபாங்குகள் பல பொதுப்பிரச்சினைகளை ஆராய்ச்சி செய்தன.

**பன்னாட்டு நாணயநிதி** (International Monetary Fund)

ஐ. செ. சங்கம் கலைந்தபிறகு அதன் பணியை ஏற்றுக்கொள்ள வேறு ஒரு ஸ்தாபனம் வேண்டியிருந்தது. ஆகையால் பன்னாட்டு நாணயநிதி (International Monetary Fund) தோன்றியது. இந்த நிதியில் நியூஜிலாந்தைத்தவிர மற்ற எல்லா நாடுகளும் சேர்ந்திருக்கின்றன. அமெரிக்காவும் காமன்வெல்த் நாடுகளும் இதில் சேர்ந்திருக்கின்றன. உலகநாடுகள் எல்லாம் சேர்ந்திருப்பதால் நிதி வலிமை பெற்றிருக்கின்றது. ஆனால் அதே காரணத்தால் போரை அடுத்து வந்த ஆண்டுகளில் வலிமையற்றிருந்தது என்றும் நாம் கூறலாம். போருக்குப்பின் ஆங்காங்கே நிறுவப்பெற்ற மண்டல நிறுவனங்கள் நிதியைவிட வெற்றிகரமாகச் செயலாற்றின. ஐ. செ. சங்கம் போன்ற நிறுவனங்கள் சிறந்த பணியாற்றுமா என்ற ஐயப்பாடுகள் எழுந்தன. ஏனெனில் அவை சிலநாடுகளை எதிர்த்து ஓரங்காட்டின; செயலாற்ற முடியாத சிலவற்றைக் குறிக்கோளாகக் கொண்டிருந்தன. நீண்ட காலத்தில் உலகத்திற்கு ஒரு பொதுவான நிறுவனம் வேண்டும் என்பதை எல்லோரும் உணர்ந்தனர். போருக்குப்பின் எழுந்த பிரச்சினைகள் மறைந்த

பின் உலகநிறுவனம் எல்லாநாடுகளுக்கும் சிறந்த தொண்டாற்றும் என்பதையும் எல்லோரும் அறிந்தனர்.

1944-ல் பிரெட்டன் உட்ஸ் (Bretton woods) என்ற இடத்தில் பன்னாட்டு நாணயநிதித்திட்டத்தை உருவாக்கினர். இந்த நிதி போருக்குப்பின் செயலாற்றத் தொடங்கியது. பலமுக வாணிகத்தையும், செலுத்தும் முறையையும் (Multilateral payments) நிலைநாட்டுவதும், நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளை நீக்குவதுமே நிதியின் முக்கியமான நோக்கமாகும், பொன் நாணயத்திட்டத்தைப் போலவே இந்த நிதியும் செலாவணிகளைத் தடையற்ற முறையில் மாற்றக்கூடியனவாகச் செய்ய, முயற்சி செய்கின்றது. அவைகளுடைய மதிப்பு மாறுமல் இருக்கவும் ஏற்பாடு செய்கின்றது. உள்நாட்டுப் பொருளாதார நிலைமையிலும் நிலையான தன்மையை ஏற்படுத்துவது இதன் நோக்கமாகும். ஆனால் பொன் நாணயத்திட்டம் இதற்கு ஏற்பாடு ஒன்றும் செய்யவில்லை. செலாவணிகளைத்தடையற்ற முறையில் மாற்றக்கூடியவையாகச் செய்தல், அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் சமநிலையை ஏற்படுத்துவது, நாணயமாற்று வீதத்தை நிலைப்படுத்துவது முதலியவைகளை நிதியின் நோக்கங்கள் கூறலாம். இவைகளுள் எது மிகவும் முக்கியமானது, எந்த வழிகளில் இந்த நோக்கங்களைச் செயற்படுத்துவது என்ற வினக்களுக்கும் விடையளிக்க வேண்டும். நிலையான நாணய மாற்று வீதங்களை ஏற்படுத்துவதையும், நாணய மாற்றுக் கட்டுப்பாடுகளை நீக்குவதையும் முக்கியமானவை என்று நிதி கருதியது.

1930-க்குப் பின் நாணயமாற்று வீதங்கள் அடிக்கடி மாறின. உலக நாடுகள் தம் செலாவணிகளின் புறமதிப்பைக் குறைப்பதில் போட்டியிட்டன. இப்பழக்கத்தைத் தடைசெய்வதற்காகவே, நிதி நாணய மாற்று வீதங்களை நிலைப்படுத்தவேண்டும் என்று கருதியது. ஒவ்வொரு நாடும் தன் செலாவணியின் புறமதிப்பைத் தெரிவிக்கவேண்டும். இந்த மதிப்பில் ஏற்படும் மாறுதல் ஒரு சதவீதத்திற்கு மேற்படக் கூடாது. செலாவணியின் மதிப்பை நிதியின் அனுமதியைப் பெற்ற பிறகே மாற்றலாம். ஒரு நாட்டின் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை மிகவும் பாதிக்கப்பட்டால், அது அயல்நாடுகளுக்குச் செலுத்த வேண்டிய தொகை மிகவும் அதிகமானல், அது நிதியின் அனுமதியைப் பெற்று, செலாவணியின் மதிப்பைக் குறைக்கலாம். இங்கிலாந்து 1949-ல் நிதியின் அனுமதியைப் பெருமல் தன் செலாவணியின் புறமதிப்பைக் குறைத்தது. ஆங்கிலேய அரசாங்கம் காலதாமதம் செய்த பிறகே தன் செலாவணியின் மதிப்பைக் குறைத்தது. ஆகையால்

நிதியின் அனுமதியைப் பெற்ற பிறகு தன் செலாவணியின் மதிப்பைக் குறைத்திருக்கலாம். வேறுசில நாடுகள் பல நாணய மாற்று வீதங்களையும் நிலையற்ற வீதங்களையும் நிதியின் அனுமதியின்றி அமலில் கொண்டு வந்தன. ஆகையால் நாணய மாற்று வீதங்களை 10 சத வீதத்திற்குமேல் மாற்றக்கூடாது என்பதும், நிதியின் அனுமதியைப் பெறாமல் அவைகளை மாற்றக்கூடாது என்பதும் அமலில் இல்லாத விதிகளாகிவிட்டன.

நாளடைவில் போர்க்காலத்து மாறுதல்கள் மறைந்தபின் உலக நாடுகளின் செலாவணிகளை விருப்பம் போல் மாற்றக்கூடியவையாகச் செய்து விடலாம் என்று பலர் கருதினர். ஒரு நாட்டின் அயல் நாட்டுத் தொடர்புகளை நடைமுறைத் தொடர்புகள் (Current transactions) மூலதனத் தொடர்புகள் (Capital transactions) என்று வகைப்படுத்தினர். மூலத்தனத்தொடர்புகளை ஒரு நாடு கட்டுப்பாடுகளுக்குட்படுத்தலாம். ஆனால் நடைமுறைத் தொடர்புகளைக் குறுகிய காலத்தில் மட்டுமே கட்டுப்படுத்தலாம். 'சூடானபணம்' (Hot money) என்றழைக்கப்பட்ட தொகைகளை மக்கள் ஒரு நாட்டிலிருந்து மற்றநாடுகளுக்கு அனுப்பியதால் அயல்நாட்டுத் தொடர்புகளை மேலே குறிப்பிட்டபடி வகைப் படுத்த வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இத்தொகைகளை ஒரு நாடு மற்றநாடுகளுக்கு அனுப்பியதால் பொருளாதாரத்தின் நிலையான தன்மை பாதிக்கப்பட்டது: நடைமுறைத் தொடர்புகளுக்கும், மூலதனத் தொடர்புகளுக்கும் உள்ள வேறுபாடு தெளிவாகத் தோன்றிய போதிலும், அவைகளைப் பாகுபாடு செய்தல் எளிதல்ல. நடைமுறைத் தொடர்புகள் மூலம் ஒரு நாடு மற்றொன்றுக்கு மூலதனத்தையும் அனுப்பலாம். ஆகையால் மூலதனத் தொடர்பைக் கட்டுப்படுத்த, நடைமுறைத் தொடர்பையும் கட்டுப்படுத்த வேண்டும். போருக்குப்பின் இரு தொடர்புகளையும் உலகநாடுகள் கட்டுப்படுத்தியதால் அவைகளைப் பாகுபாடு செய்ய வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. போர்க்காலத்து விளைவுகள் மறைவதற்கு முன்பே இங்கிலாந்து தன் செலாவணியை மாற்றக்கூடியதாகச் செய்ய முயன்றது. ஆனால் இந்த முயற்சி பயனளிக்கவில்லை. வாஷிங்டன் கடன் ஒப்பந்தத்தை (Washington loan agreement) ஒட்டி இந்த முயற்சி செய்தது. ஆனால் முயற்சி தோல்வியடைந்ததால் மீண்டும் இந்த முயற்சியைச் செய்ய முடியாதநிலை ஏற்பட்டது. 1950-க்குப்பின் இங்கிலாந்து கட்டுப்பாடுகளைத் தளர்த்தியது. ஆனால் 1960-க்குப் பின்பே இங்கிலாந்து பவுனுக்குத் தடையற்ற முறையில் மாற்றக்கூடிய தன்மையைக் கொடுக்க முடிவு செய்தது.

உள்நாட்டுப் பொருளாதார நிலையிலும், அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையிலும் ஒரு பொருத்தத்தை ஏற்படுத்துவதற்கு நிதி உலக நாடுகளுக்கு உதவியளிக்கின்றது. நிதி இருவழிகளில் இதைச் செய்யலாம். கொடுப்பல் நிலையில் தொடர்ந்து உபரி இருக்கும் நாடுகளை ஒரு கட்டுப்பாட்டுக் குட்படுத்தலாம். கொடுப்பல் நிலையில் பற்றுக்குறை இருக்கும் நாடுகளுக்குக் கடன் உதவி செய்யலாம். உதாரணமாக அது ஒரு நாட்டின் செலாவணியைக் கடினச்செலாவணி என்று கூறலாம். ஒரு நாடு வைத்திருக்கும் அயல் நாட்டுச் செலாவணி மிகவும் குறைந்தால், அதை நிதி கடினச்செலாவணியாகக் கருதலாம். நிதியின் வசம் இருக்கும் ஒரு செலாவணி மிகவும் குறைந்து விட்டால் நிதி அந்தச் செலாவணியையும் கடினச்செலாவணியாகக் கருதலாம். ஆனால் இதுவரை நிதி இக்காரணத்திற்காக ஒரு செலாவணியைக் கடினச் செலாவணியாகக் கருதியதில்லை.

நிதியில் சேர்ந்துள்ள நாடுகள் எந்தச் செலாவணியை வேண்டுமானாலும் கடனாக வாங்கலாம். அங்கத்தினர்கள் செலுத்திய தொகைகளைக்கொண்டு நிதி அவர்களுக்குக் கடன் கொடுக்கின்றது. ஒவ்வொரு நாடும் ஒரு குறிப்பிட்ட தொகையை நிதிக்குச் செலுத்த வேண்டும். செலுத்தும் கட்டணத்தை ஒட்டியே ஒருநாடு நிதியிடம் கடனை வாங்கமுடியும்; அதன் நிருவாகத்திலும் பங்குகொள்ள முடியும். செலுத்தும் கட்டணத்தில் ¼ பகுதியைப் பொன்னாகவோ அல்லது டாலராகவோ ஒவ்வொரு நாடும் செலுத்த வேண்டும். மீதியைத் தன் சொந்தச் செலாவணியில் செலுத்தவேண்டும். ஒருநாடு செலுத்திய தொகையில் ¼ பகுதியை நிதியிடம் எளிதில் வாங்கிக்கொள்ளலாம். ஆனால் இதற்கு மேற்பட்ட தொகையை ஒருநாடு சரியான காரணங்களைக் காட்டியே நிதியிடம் வாங்கலாம். ஒருநாடும் தன் கட்டணத்தைப்போல் 125 சத வீதத்திற்கு மேற்பட்ட தொகையைக் கடனாக வாங்கமுடியாது. கடனாகப் பெற்ற தொகையைப் பொன்னாகவோ அல்லது வேறு மாற்றக் கூடிய செலாவணியாகவோ ஒருநாடு நிதியிடம் திருப்பிக் கொடுக்கலாம். ஆனால் நிதி உலக நாடுகளுக்கு அளிக்கும் சலுகைகளுக்காக அவை பணம் செலுத்த வேண்டும். ஆகையால் ஒரு நாடு நீண்ட காலம் நிதியிடம் கடன் பட்டிருத்தலையும், அதிகமான தொகையைக் கடனாக வாங்குவதையும் அது விரும்புவதில்லை.

தொடக்ககாலத்தில் நிதி பல்வேறு நாடுகளுக்கு ஏராளமான தொகையைக் கடனாகக் கொடுத்தது. ஆனால் மார்ஷல் திட்ட உதவி அமலில் வந்தபிறகு கடன் கொடுத்தல் குறைந்தது. 1956-ல்

சூயஸ் நெருக்கடி (Suez crisis) ஏற்பட்டவரை இந்நிலை நீடித்தது. 1956-ல் இங்கிலாந்து 561 மிலியன் டாலரை நிதியிடம் கடனாகப் பெற்றது. இதைத்தவிர 739 மிலியன் டாலரையும் கடனாகப்பெற்றது. வேண்டுமானால் இத்தொகையை இங்கிலாந்து பயன்படுத்திக் கொள்ளலாம். 1956க்குப்பின் நிதி விறுவிறுப்பான கொள்கையைப் பின்பற்றியது. 1956-ல் நிதி அங்கத்தினர்களுடைய கட்டணத்தை 50 சதவீதம் உயர்த்தியது.

போரை அடுத்துவந்த ஆண்டுகளில் பல பெரிய பிரச்சினைகள் எழுந்தன. நிதி அந்தப் பிரச்சினைகளனைத்தையும் சரிவரத்தீர்க்க முடியாத நிலையில் இருந்தது. பலமுகவாணிகத்தை மீண்டும் நிலை நாட்டவும், கட்டுப்பாடுகளை நீக்கவும் ஏராளமான பொருளைச் செலவுசெய்ய வேண்டியதாயிற்று. மேலும் இதை உடனடியாகச் செய்யமுடியாது. ஆனால் தடையற்றவர்த்தகம் மீட்கப்பட்ட பிறகு நிதிசிறந்த முறையில் இயங்கும் என்பது தெளிவாயிற்று. நிதி, உலகநாடுகளுடைய கொடுப்பல் நிலை சமநிலையில் இருக்கும்படி செய்ய முடியுமா என்பதைப்பற்றிய ஐயப்பாடு இப்பொழுதும் எழலாம். நிதி எதிர் காலத்தில் உலகின் மைய பாங்காக வளரலாம். மற்ற மைய பாங்குகளிடம் காப்பு நிதியையும், பொன்னையும் அது பெறலாம்.

# பாகம் VI — பொருளாதாரக் கொள்கை

## 33. தலையிடாக் கொள்கையின் (Laissez-Faire) வளர்ச்சியும் அது நலிவுறுதலும்

### 1. தலையிடாக் கொள்கையின் வளர்ச்சி

நூற்றுண்டுகளுக்குமுன் அரசாங்கம் தொழில் நிருவாகத்தில் தலையிடுதலை எல்லோரும் வெறுத்தனர். சட்டத்தை அமலில் கொண்டு வருவதும், அமைதியை நிலைநாட்டுவதுமே அரசாங்கத்தின் பொறுப்புக்கள் என்று கருதப்பட்டன. வாய்ப்புக்கிட்டினால் ஒருநாடு புதிய நாடுகளைக் கைப்பற்றலாம். நாட்டின் தொழில்கள் அடக்கச் செலவைக் குறைத்து செம்மையான முறையில் பொருள்களை உற்பத்தி செய்யவேண்டும். அரசினர், அரசியலில் தலையிட்டால் நிருவாகம் செம்மையான முறையில் அமையாது. உற்பத்தியில் அரசினர் தலையிட்டால் உற்பத்தி முறை பாதிக்கப்படும். ஆகையால் அரசினர் அரசியலிலும் தொழிலிலும் தம் அதிகாரத்தைச் செலுத்தினால் தொழிலும் அரசியலும் பாதிக்கப்படும். ஆகையால் ஒருநாடு தலையிடாக் கொள்கையையே பின்பற்ற வேண்டும் என்பது அக்காலத்துக் கருத்தாகும்.

அக்காலத்தில் அரசினர் தலையீட்டை எல்லோரும் வெறுத்தமைக்கு இரு சாராருடைய கருத்துகளே காரணமாக இருந்தன. அரசினர் தலையீடு தனிமனிதனுடைய சுதந்திரத்தைக் குறைக்கும் என்ற காரணத்தினால் சிலர் அதை வெறுத்தனர். வேறு சிலருக்கு அரசினர் செலுத்திய அதிகாரங்கள் தொல்லைகளைக் கொடுத்ததால் அவர்களும் அதை வெறுத்தனர். அரசாங்கத்தின் கொள்கை தவறானது, நேர்மையற்றது என்று அவர்கள் கருதினர். முதலில் நாம் குறிப்பிட்டவர்கள் மனிதனுக்கு இயற்கையான உரிமைகள் (Natural rights) இருக்கின்றன என்று கூறினர். மற்றவர்கள்

கொண்ட கருத்துக்குச் சான்றாக அவர்களுடைய அனுபவத்தை எடுத்துக் காட்டினர். தத்துவ ரீதியில் அரசினர் கொள்கையைக் கண்டித்தவர்களும், தொழிலதிபர்களும் அரசாங்கத்தின் தலையீட்டை எதிர்த்தனர். 'ஆண்டவனிடம் பெற்ற உரிமையைக் கொண்டு அரசன் நாட்டைத் தவறான முறையில் ஆளலாம்' என்ற கருத்தை அவர்கள் எதிர்த்தனர். தொழிலையும் தனி மனிதனுடைய சுதந்திரத்தையும் அரசாங்கம் கட்டுப்படுத்துவதை அவர்கள் வெறுத்தனர்[1]. தலையிடாக் கொள்கையின் உட்கருத்தையும், அதன் விளைவுகளையும், அக்கொள்கையை ஆதரித்தவர்கள் நன்கு உணர்ந்தனர் என்று கூறமுடியாது. தொழிலதிபர்கள் சில குறிப்பிட்ட கட்டுப்பாடுகளை வன்மையாகக் கண்டித்தனர். சுயநலமே அவர்களுடைய போக்கின் அடிப்படையாக இருந்தது.

ஆனால் தொழிலதிபர்களே பல வெறுக்கத்தக்க கட்டுப்பாடுகளைத் தம் தொழிலகங்களில் அமலில் கொண்டுவந்தனர். மேலும் அவர்கள் சர்வாதீன அதிகாரங்களையும் செலுத்தினர். தத்துவ ரீதியில் தலையிடாக் கொள்கையை ஆதரித்தவர்கள் (philosophers) அரசினர் தலையீட்டைக் கண்டித்தனர். ஆனால் அவர்கள் தனியாள் சொத்தை (private property) ஆதரித்தனர். ஆனால் சொத்தைக் கொண்டிருப்பவர்கள், சொத்து இல்லாதவர்களைப் பல தொல்லைகளுக் குட்படுத்தலாம் என்பதை அவர்கள் உணரவில்லை. அரசினர் தலையீட்டைவிட இத் தொல்லைகளின் கொடுமை மிகுதியாக இருக்கும் என்பதையும் அவர்கள் உணரவில்லை. இரு சாராரும் அரசினர் தலையீட்டைக் கண்டித்த போதிலும், பொருளாதார வல்லுநர்களும் இதே கருத்தை வெளியிட்ட பிறகே எல்லோரும் அரசினர் தலையீடு அவசியமற்றது என்று கருதினர். தலையிடாக் கொள்கையின் நலன்களை எல்லாம் அவர்கள் பல சான்றுகள் காட்டி எடுத்து உணர்த்தியதால்தான் அக்கொள்கை இறுதியில் வெற்றியடைந்தது.

**தத்துவ ரீதியில் தலையிடாக் கொள்கையை ஆதரித்தவர்கள் (Philosophers).**

இவர்கள் பிரான்சு தேசத்திலும் இங்கிலாந்திலும் இரு வகைக் கருத்துகளைத் தெரிவித்தனர். 18-ஆம் நூற்றாண்டில் பிரான்சில்

1 மதச் சுதந்திரமும், தலையிடாக் கொள்கையும் தற்செயலாகவே ஒரே காலத்தில் வளர்ச்சியடைந்தன என்று நாம் கூறமுடியாது. புதிய சமுதாயம் மத வெறியையும் அரசினர் அதிகாரத்தையும் வெறுத்தது. பொருளாதாரத்தில் அவர்கள் தடையற்ற வர்த்தகத்தை ஆதரித்தனர்; சர்வாதீனங்களை (monopolies) எதிர்த்தனர். மதச் சுதந்திரத்தையும், பல்வேறு கருத்துகளை மக்கள் கொண்டிருக்கும் உரிமையையும் அவர்கள் ஆதரித்தனர். தடையற்ற போட்டி தொழில் துறையில் திறமையை வளர்க்கும். கருத்தளவில் போட்டி இருந்தால் உண்மையே வெற்றியடையும்.

'பிஸியோகிராட்' (physiocrats) என்றழைக்கப்பட்டவர்கள் 'இயற்கைச் சட்டங்களே (natural laws) சிறந்தவை என்றும், அவைகளை அடிப்படையாகக்கொண்ட சமுதாயத்தை அமைக்கவேண்டும் என்று கூறினர். அரசினர் இயற்றும் 'செயற்கைச் சட்டம்' (conventional laws) சிறந்தவை அல்ல என்பதும் இவர்கள் கருத்தாகும். இயற்கைச் சூழ்நிலேயே நிலைநாட்டப் படவேண்டும் என்றும் பிரான்சில் நிலவிய செயற்கைச் சூழ்நிலையின் சாதனைகளை அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. பிரான்சில் தனியாட்கள் சுதந்திரத்துடன் வாழமுடியவில்லை. ஏனெனில் எந்த நேரத்திலும் அரசாங்கம் ஒருவனை பாஸ்டைல் (Bastille) சிறைக்கு அனுப்பலாம். பொருள்களை மக்கள் ஓரிடத்திலிருந்து வேறு இடத்திற்கு அனுப்பமுடியாது. ஆகையால் தடையற்ற வர்த்தகம் நாட்டில் இல்லை. பழைய நிலமானியத் திட்டம் (feudalism) அமலில் இருந்ததாலும், பல்வேறு வரிகளை அரசினர் விதித்ததாலும் நாடு இயற்கை உற்பத்திச் சாதனங்களை நன்கு பயன்படுத்த முடியவில்லை. அவசியமற்ற கட்டுப்பாடுகளை நீக்கினுலன்றி பிரான்சு ஒரு பெரிய விபத்துக்கு இலக்காகும் என்பது அவர்கள் கருத்து.

இங்கிலாந்தில் அறிஞர்கள், மனிதனுடைய இயற்கையான உரிமைகள் பாதுகாக்கப்படும் என்று கூறினர். வாழ்க்கையைச் செம்மைப் படுத்தவும், தன் நலனைப் பேணுவதற்கும் ஒரு தனி மனிதனுக்கு உரிமை உண்டு. மனிதனுக்குத் தனியாருக்குரிய உரிமைகள் கொடுக்கப்படவேண்டும். அதற்குப் பின்பே அவன் சமுதாயத்தின் அங்கத்தினன் என்ற முறையில் பொறுப்புகளை ஏற்கவேண்டும். ஒருவனுடைய உரிமைகள் அண்டை வீட்டுக்காரனுடைய உரிமைகளுடன் முரணுக இருந்தாலன்றி அவன் தன் உரிமைகளை விட்டுக் கொடுக்கவேண்டா. ஒவ்வொருவனும் தன் உரிமையில் ஒரு பகுதியை விட்டுக் கொடுத்து அரசாங்கத்தை நிறுவுகின்றுன். அரசாங்கம் மக்களுடைய சொத்தையும் உயிரையும் காப்பாற்றவேண்டும். மக்கள் தம்மைப் பாதுகாத்துக் கொள்வதற்காகக் குறைந்தபட்ச அளவே தம் உரிமைகளை அரசாங்கத்திற்குக் கொடுக்கின்றனர். அரசாங்கத்தின் சட்டம் தன் இயற்கை உரிமைகளைக் காப்பாற்றும்வரைதான் தனி மனிதன் அதை ஏற்றுக் கொள்ளவேண்டும். குறிப்பிட்ட சிலர் சுயநலத்துடன் சட்டங்களை இயற்றிக் கொடுங்கோல் ஆட்சியை நாட்டில் நிலைநாட்டமுடியாது. அவ்வாறு செய்தால் மக்கள் கொடுத்த அதிகாரத்தை அரசினர் தவருன வழியில் பயன்படுத்துகின்றனர் என்று நாம் கூறலாம். அரசாங்கம் அவ்வாறு செய்தால் மக்கள் அதை எதிர்த்துப் போராடலாம், அதாவது இயற்கைச் சட்டத்தை மீண்டும் நிலை

நாட்டலாம். அரசாங்கம் இயற்கை உரிமைகளைப் பாதுகாக்க வேண்டும். அவைகளைப் பறிக்கக்கூடாது.

நடுத்தர வகுப்பினரே சொத்து உரிமையையும், மற்ற மேற் கூறிய உரிமைகளையும் ஆதரித்தனர். ஒவ்வொரு மனிதனும் தன் உழைப்பின் பலனை அனுபவிக்க உரிமை வேண்டும். அரசினர் மக்களுடைய சொத்து உரிமையில் தலையிடாமல் இருத்தலே சிறந்த கொள்கையாகும். ஓர் அரசாங்கம் மக்களுடைய சொத்துரிமை யில் தலையிடும்பொழுதும், விருப்பம்போல் வரிகளை விதிக்கும் பொழுதும், தொழிலை அவசியமற்ற கட்டுப்பாடுகளுக்குட்படுத்தும் பொழுதும், சிலருக்குச் சர்வாதீன உரிமைகளை வழங்கும்பொழுதும் விலைகள், கூலிகள், வட்டிவீதங்கள் முதலியவைகளைக் கட்டுப்படுத் தும்பொழுதும், அளவுக்கு மீறிய அதிகாரத்தைச் செலுத்துகின்றது. இவ்வாறு செய்யும்பொழுது சொத்துரிமையை இழந்தவன் அரசாங் கத்தை எதிர்க்கலாம்.

**தொழிலதிபர்கள் (Businessmen)**

சுயநல நோக்கத்துடன் தொழிலதிபர்கள் தலையிடாக் கொள் கையை ஆதரித்தனர். அவர்களும் கட்டுப்பாடுகளின் தத்து வத்தை எதிர்த்தனர். ஆனால் சுயநலமே உண்மையில் இதற்குக் காரணமாக இருந்தது. தொழிற் புரட்சிக் காலம்வரை அவர்கள் சில கட்டுப்பாடுகளை ஆதரித்தனர். அக்காலத்தில் மார்க்கட்டுகள், இடைக்கால ஊர்களைப்போல் மிகவும் குறுகிய எல்லைக்குட்பட்டிருந் தன. ஆகையால் தொழிலதிபர்கள் தங்கள் சுதந்திரத்தையும் நலன்களையும் காப்பாற்றிக்கொள்ள 'கில்டுகள்' (guilds) என்ற சங் கங்களை நிறுவினர். இச்சங்கங்கள் வர்த்தகத்தைக் கட்டுப் படுத்தின. சங்கத்தின் அங்கத்தினர்களே வர்த்தகத்தைக் கட்டுப் படுத்தியதால் அவர்கள் கட்டுப்பாடுகளை எதிர்க்கவில்லை, அயல்நாட்டு வர்த்தகத்தில் இலாபம் ஈட்ட வாய்ப்புகள் அதிகமாக இல்லாவிடினும், வர்த்தகம் செய்வோருடைய உயிருக்கும் பொருளுக்கும் ஆபத்துகள் இருந்தாலும், வியாபாரிகள் அரசாங்கத் தின் உதவியை நாடினர். இந்த நிலையின் வியாபாரிகளுக்கு அரசாங்கத்தின் உதவி இன்றியமையாததாக இருந்தது. சில தொழில்களில் ஏராளமான மூலதனத்தை முதலீடு செய்ய வேண்டும். ஆனால் உடனடியாகப் பலன் கிடைக்காது. இத் தொழில்களில் முதலீடு செய்வோரும் அரசினருடைய ஆதரவையும் பாதுகாப்பையும் நாடினர். நாளடைவில் மார்க்கட்டுகள் விரி வடைந்தன; மூலதனம் பெருகியது. முதலாளிகளுடைய எண்ண மும் மாறியது. வர்த்தகத்திற்கு அரசாங்கத்தின் பாதுகாப்புத் தேவையாக இல்லை, மூலதனம் பெருகியதால் வியாபாரிகளுடைய

எண்ணிக்கையும் அதிகரித்தது. இவர்கள் அரசாங்கத்தின் கட்டுப்பாடுகளைக் கண்டித்தனர். மேலும் மார்க்கட்டுகள் பெருகிய தால் அவர்களுடைய இலாபம் மிகுதியடைந்தது. புதிய வழிகளில் இலாபம் ஈட்ட முடிந்தது. தொழில் நிறுவனங்கள் தனியாட் களுடைய கண்காணிப்பிலிருந்து கூட்டுப் பங்கு நிறுவனங்கள் வசம் மாறியதால், அவைகளை எளிதில் கட்டுப்படுத்த முடியவில்லை. உற்பத்தியாளர்களுக்கும் பொருளை வாங்குவோருக்கும் புதிய தொடர்புகள் தோன்றியதால் மார்க்கட்டுகள் வளர்ச்சியடைந்தன. இந்த நிலையில் போட்டி வலுத்தது. தனியாட்களின் உரிமைகளை யும் பலர் ஆதரித்தனர். வியாபாரிகளின் பழைய முறைக் கூட்டுறவு மறைந்தது. வியாபாரிகடையே இருந்த பழைய உறவும் தொடர்புகளும் மறைந்தன. அவர்கள் ஒவ்வொருவரும் சுயநல நோக்கத்துடன் மார்க்கட்டில் இலாபம் ஈட்ட முயற்சி செய் தனர். அரசினரும் மற்றவர்களும் தொழிலைக் கட்டுப்படுத்துவதை அவர்கள் விரும்பவில்லை.

தொழிலதிபர்கள் சமூக உணர்ச்சி கொள்ளவில்லை. சமு தாயத்திற்கு அவர்கள் பொறுப்பை மறந்தனர். 17, 18 ஆம் நூற்றுண்டுகளில் அரசாங்கம் சுயநலத்துடன் போராடிய தொழி லதிபர்களைக் கண்டித்து சமுதாயத்தின் நலன்களைப் போற்றி வளர்த்தது என்று நாம் கூறமுடியாது. தொழிலதிபர்களைக் கட்டுப் படுத்துவதற்கு வேண்டிய அதிகாரத்தை அக்காலத்தில் பெற்றிருக்க வில்லை. அக்காலத்தில் கட்டுப்பாடுகளை அமலில் கொண்டு வருவதற்குத் தகுந்த பொதுப் பணித்துறை (civil service) இல்லை. அரசாங்கம் தன் அதிகாரிகளுக்கு இத்துறையில் பயிற்சியளிக்கவும் விரும்பவில்லை. தொழிலதிபர்கள் தம் திறமையும் முயற்சியுமே தொழில் முன்னேற்றத்திற்குக் காரணமாக இருந்தன என்றும், அரசாங்க அதிகாரிகள் இந்த முயற்சியில் ஈடுபட முடியாதென்றும் எடுத்துக் காட்டியிருக்க முடியும். இக்கூற்றில் ஓரளவு உண்மை இருக்கின்றது. வேலை வாய்ப்புகளைத் தேடுவோரும், இலஞ்சம், ஊழல்கள் முதலியவைகளுக்குக் காரணமாக இருப்பவரும், ஊதாரித் தனமான செலவுகளை ஆதரிப்பவரும் கட்டுப்பாடுகளை ஆதரிக்கின்றனர் என்று தொழிலதிபர்கள் எடுத்துக் காட்டியிருக் கலாம். கட்டுப்பாடுகள் அவசியம் வேண்டும் என்பதை நாம் மெய்ப்பித்தாலும், அரசாங்கம் கட்டுப்பாடுகளைச் சரிவரச் செயற் படுத்தும் என்று சொல்லமுடியாது.

**பொருளியலார் (The Economists)**

"மெர்க்கன்டலிசம்" (Mercantalism) என்ற கொள்கையைப் பொருளியலார் ஆராய்ச்சி செய்தனர். அரசினர் கட்டுப்பாடுகளை

ஆதரித்த இக்கொள்கையின் குறைபாடுகளை அவர்கள் எடுத்துக் காட்டியபொழுது தலையிடாக் கொள்கையின் சிறப்புக்களையும் விளக்கினர். மெர்க்கன்டலிசக் கொள்கையை ஆதரித்தவர்கள் தம் கருத்துகளைத் தொடர்புபடுத்திச் சிறந்த முறையில் வெளியிட்டனர். இவைகளுள் சிலவற்றை அரசாங்கம் செயற்படுத்தியது. ஆனால் இக்கருத்துகளை மனத்தில் வைத்துக்கொண்டே அரசியலார் தம் கொள்கைகளை உருவாக்கினர்.

**மெர்க்கன்டலிசம் (Mercantalism)**

ஒரு நாட்டின் அயல்நாட்டுக் கொடுப்பல்நிலை சாதகமாக இருக்கவேண்டும் என்பதே மெர்க்கன்டலிசக் கொள்கையின் அடிப்படைத் தத்துவமாகும். இறக்குமதியைவிட ஒருநாடு ஏற்றுமதியைப் பெருக்கினால் அந்த நாடு ஏராளமான பொன்னைப் பெறும். பொன் ஒரு நாட்டுக்கு வலிமையைக் கொடுக்கும் என்று அவர்கள் கருதினர்.

முதன்முதலில் நாட்டின் நிதி நிலைமையில் கணிசமான முன்னேற்றம் ஏற்படும். ஓர் இராணுவத்தை வைத்துக் கொள்வதற்கும் அதை வெளிநாடுகளுக்கு அனுப்புவதற்கும் ஒரு நாட்டின் அயல்நாட்டு முதலீடு இக்காலத்தில் எவ்வாறு உதவுகின்றனவோ, அதேபோல் ஏராளமான பொன்னைப் பெறுதல் நன்மை பயக்கும். அக்காலத்தில் பொதுக்கடன் திரட்டும் முறை இக்காலத்திய முறையிலிருந்து வேறுபட்டிருந்தது. மேலும் கடன் திரட்டுவதற்கு வசதிகள் அதிகம் இல்லை. ஆகையால் ஒருநாடு ஏராளமான பொன்னை வைத்துக்கொண்டிருக்க வேண்டியிருந்தது. வர்த்தக மூலம் ஒருநாடு பெற்ற பொன் அனைத்தையும் அரசினர் பெற வில்லை என்பது உண்மையே. போர்க்காலத்தில் மக்களுடைய அயல்நாட்டு முதலீடுகளை அரசினர் கைப்பற்றுவதுபோல் அரசாங்கம் மக்களிடமிருந்து பொன்னை வாங்கிக் கொள்ளமுடியும். மெர்க்கன்டலிசக் கொள்கையை ஆதரித்தவருள் சிலர் பொன்னை மட்டுமே செல்வம் என்று கருதினர். போரைப் பற்றியே அவர்கள் சிந்தனை செய்ததால்தான் இவ்வாறு கருதினர். உண்மையில் நிலம், கட்டடம் போன்றவைகளையும் அவர்கள் செல்வம் என்றே கருதினர்; ஆனால் அவர்கள் பொன்னையே மிகவும் முக்கியமான செல்வம் என்று கூறினர்.

பாதகக் கொடுப்பல்நிலை தீமையையே விளைவிக்கும் என்பது அவர்கள் கொண்டிருந்த கருத்தாகும். இக்காலத்தில் ஒருநாடு மூலதனத்தை எவ்வாறு இழக்க விரும்பவில்லையோ அதேபோல் ஒருநாடு பொன்னை இழத்தலை விரும்பவில்லை. தற்காலத்தில்

நாணய மாற்றுக் கட்டுப்பாடுகள்மூலம் ஒருநாடு மக்கள் சொந்தச் செலாவணியைக் கொடுத்து அயல்நாட்டுச் செலாவணியை வாங்கு வதைக் கட்டுப்பாடு செய்கின்றது. அதேபோல் அக்காலத்திலும் இப்பழக்கத்தை அரசினர் கட்டுப்பாடு செய்தனர். தற்காலத்தில் பாதகமான வாணிகக் கொடுப்பல்நிலை, பொருளாதார மந்தத்தையும் வேலையின்மையையும் ஏற்படுத்தும் என்பதை நாம் அறிவோம். மெர்க்கன்டலிசத்தை ஆதரித்தவர்களும் இதே கருத்தைக் கொண்டிருந்தனர். 16 முதல் 18 ஆம் நூற்றாண்டுவரை பலர் மெர்க்கன்டலிசத்தை ஆதரித்தனர், அக்காலத்தில் விலைகள் பழக்கத்தை ஒட்டியே நிர்ணயம் செய்யப்பட்டிருந்தன. ஆகையால் கூலிகளும், மற்ற அடக்கச் செலவுகளும் மாறுமல் நிலையாக இருந்தன. ஆகையால் பாதகமான அயல்நாட்டுக் கொடுப்பல் நிலைக்குத் தகுந்தவாறு அவை மாறவில்லை. சாதகக் கொடுப்பல் நிலை சிறிதளவு பணவீக்கத்தை ஏற்படுத்தியது. பணவீக்கம் தொழிலுக்கு ஒரு தூண்டுதலைக் கொடுத்தது. இந்த நிலையில் கூலி கள் குறையா. இதன் விளைவாக இலாபமும் உற்பத்தியும் பெருகும். மெர்க்கன்டலிசக் கொள்கையை ஆதரித்தவர்கள் செயற்கையான முறையில் தம் கருத்துகளை வெளியிட்டனர் என்று நாம் கருதமுடியாது. அவர்களில் பலர் பாதுகாப்புக் கொள்கை யையே (protectionist policy) ஆதரித்தனர். ஏழைகளுக்கு வேலை கொடுக்கவேண்டும் என்ற எண்ணத்துடன் செலாவணியின் புற மதிப்பைக் குறைக்கவேண்டும் என்றும் பாதுகாப்பு வரியை விதிக்க வேண்டும் என்றும் அவர்கள் கூறினர். இக்கருத்துகளை அவர்கள் தெளிவாகக் கூறவில்லை.

அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையைச் சாதகமாகச் செய்வதற்கு அவர்கள் பொருளாதாரத்தைக் கட்டுப்பாடுகளுக்குட்படுத்த வேண்டுமென்று கூறினர். இறக்குமதிப் பொருள்கள்மீது வரியை விதிக்கவேண்டும் என்றும், ஏற்றுமதியை ஆதரிக்கவேண்டு மென்றும் அவர்கள் கூறினர். அயல்நாட்டுப் போகப் பொருள்களை (luxuries) மக்கள் பயன்படுத்துவதைச் சட்டம் தடைசெய்ய வேண்டும். நாட்டுப் பற்றையும், உள்நாட்டில் மக்கள் உழைப்பை யும் சில இறக்குமதி பாதிக்கும். கூலிகள் குறைவாக இருந்தால் தொழிலாளர்கள் நன்கு உழைத்து மிகுதியான வருமானத்தைப் பெற முயற்சி செய்வர், அடக்கச்செலவு குறைவதால் ஏற்றுமதியும் பெருகும். உற்பத்திச் சாதனங்கள் அனைத்தையும் நன்கு (முழு மையாக) பயன்படுத்த வேண்டுமென்று அவர்கள் கூறினர். தொழிலாளர்கள் வேலையில்லாமல் இருக்கக்கூடாது, நிலமும் பயன் படுத்தப்படாமல் இருக்கக்கூடாது. உர்பத்தியையும் ஏற்றுமதியை யும் பெருக்கவேண்டும், ஆனல் நாட்டில் மக்கள் மிகவும் குறைந்த

அளவே பொருள்களைப் பயன்படுத்தவேண்டும். ஏராளமான பொன்னை நாடு சேகரிக்கவேண்டும். நேரடியான முறையில் பொன்னைச் சேகரித்தல் சிறந்ததாகும். ஒரு நாட்டில் தங்கச் சுரங்கம் இருந்தால் அந்த நாடு அதை நன்கு பயன்படுத்த வேண்டும். ஒரு நாடு மற்ற நாடுகளை வென்றால் அவைகளுடைய பொன்னையும் அது அபகரித்துக் கொள்ளலாம். அந்த நாடுகளில் பொன் இல்லாவிடில் அவைகளுடைய பொருள்களை மற்ற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்து ஒருநாடு இலாபம் ஈட்டலாம். காலனி நாடுகளைக் குடியேறுவதற்காக ஏற்படுத்துவதைவிட மேலே குறிப்பிட்ட வழியில் பயன்படுத்திக் கொள்ளவே அவர்கள் விரும்பினர். அவைகளை வென்ற நாட்டுக்கு அவை வேண்டிய கச்சாப் பொருள்களை அனுப்பவேண்டும். ஒருநாடு குடியேற்ற நாடுகளை மார்க்கட்டாகவும் பயன்படுத்தலாம்.

மெர்க்கன்டலிசக் கொள்கையை ஆதரித்தவர்கள் இராணுவ நோக்கங்களையே மனத்தில் கொண்டிருந்தனர். தற்காப்பையும் இராணுவ பலத்தையும் (மக்களுடைய வாழ்க்கைத் தரத்தைவிட) முக்கியமாகக் கருதினர். வாழ்க்கைத் தரம் எவ்வாறு பாதிக்கப்பட்டபோதிலும் மக்கள் தொகை பெருகவேண்டும் என்று அவர்கள் கூறினர், ஏனெனில் இராணுவ பலத்தை அவர்கள் முக்கியமென்று கருதினர். இந்த எண்ணத்துடன் உணவுப் பொருள்கள், கச்சாப் பொருள்கள் முதலியவற்றை இறக்குமதி செய்யக்கூடாது என்று அவர்கள் கருதினர். உணவு இறக்குமதி மற்ற நாடுகளைச் சார்ந்து வாழவேண்டிய நிலைமையை ஏற்படுத்தும். கச்சாப் பொருள்களை ஏற்றுமதி செய்தால் அயல்நாடுகள் ஏற்றுமதிசெய்யும் நாட்டுடன் பொருள்களை விற்பனை செய்வதில் போட்டியிடும். ஆனால் முழுவதும் உற்பத்தியான பொறி செய்பொருள்களை (manufactures) ஏற்றுமதி செய்யலாம். ஏற்றுமதி உள்நாட்டில் வேலை வாய்ப்புகளைப் பெருக்கும். நம் நாட்டின் ஏற்றுமதி அயல் நாடுகளுக்கு எவ்வித நன்மையும் பயக்காது. ஆனால் நம்நாடு ஏராளமான பொன்னைப் பெறும்.

**மெர்க்கன்டலிசத்தின் வீழ்ச்சி**

சாதகமான அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை வேண்டும் என்பதே மெர்க்கண்டலிசக் கொள்கையின் அடிப்படைத் தத்துவமாகும். இத் தத்துவத்தை நாம் தவறானது என்று எடுத்துக்காட்டினால் அக் கொள்கையின் மற்ற அம்சங்களும் தவறானவை என்பது வெளியாகிவிடும். இவ்வடிப்படைத் தத்துவம் தவறானது என்பதை நாம் எளிதில் எடுத்துக்காட்டலாம். இதற்குப் பணப் பரிமாணக் கோட்பாட்டை நாம் பயன்படுத்தலாம். சாதக அயல்நாட்டுக்

கொடுப்பல் நிலையினுல் பொன் இறக்குமதியாகும்; காப்புநிதி (Reserves) பெருகும்; புழக்கத்தில் இருக்கும் பணமும் பெருகும். இதன் விளைவாக விலைகள் உயரும், அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையும் பாதிக்கப்படும். ஆகையால் அரசினர் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையைச் சாதகமாகவே எப்பொழும் வைத்துக் கொள்ளமுடியாது. பணவீக்கமும், பணச் சுருக்கமும் பொன் ஏற்றுமதியையும் இறக்குமதியையும் குறைத்துவிடும். ஆகையால் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையை அரசினர் தம் விருப்பம் போல் மாற்றமுடியாது என்பது தெளிவாகின்றது.

ஆதாம் ஸ்மித் (Adam Smith) என்பவர் போட்டியின் நன்மைகளை விளக்கிய பிறகு அரசாங்கத்தின் கட்டுப்பாடுகள் தேவையல்ல என்பது தெளிவாயிற்று. பொன் ஏற்றுமதி மட்டுமே தானுக மறைவதில்லை. ஒரு நாட்டின் பொருளாதாரம் தானுக இயங்கும் சக்தியைக் கொண்டிருக்கின்றது. இதனுல் சமுதாயம் நன்மையடைகின்றது. எனவே நேர்மையான விலைகளையும், கூலிகளையும் அரசினர் நிர்ணயம் செய்யவேண்டியதில்லை. நேர்மையான விலைகளைப் போட்டியே நிர்ணயம் செய்யும். அரசாங்கம் சில தொழில்களை உதவிப் பணம் மூலம் ஆதரிக்கவேண்டா. வேறு தொழில்கள் மீது வரிப் பளுவைச் சுமத்தக்கூடாது. தடையற்ற போட்டி நிலவினுல் எல்லாத் தொழில்களும் ஒரே நிலையில் இருக்கும். தொழிலதிபர்களுடைய மனநிலையை அரசாங்கம் கட்டுப்பாடுகள் மூலம் மாற்றத் தேவையில்லை. நாம் கண்கூடாகக் காணமுடியாத சக்தி ஒன்று மார்க்கட்டில் நிலவுகின்றது. இச் சக்தி நன்மையே பயக்கும். ரொட்டியை உற்பத்தி செய்வோர் மக்களுடைய தேவையை உணர்ந்து தம் பணியைச்செய்யவில்லை. சுயநலத்துடனேயே அவர்கள் வேலை செய்கின்றனர். இதே சக்தி நாட்டின் பொருளாதாரம் சிறந்த முறையில் இயங்குவதற்குக் காரணமாக இருக்கின்றது. அரசினர் தலையீடு தேவையில்லை. நன்னெறியை விளக்குவோர் சுயநலத்தைக் கண்டனம் செய்கின்றனர். ஆனுல் அரசினர் கட்டுப்பாடின்றிப் பொருளாதாரம் தானுகவே இயங்குவதற்குச் சுயநலமே காரணமாக இருக்கின்றது.

பொருளியலாரின் கருத்துகளில் ஓரளவு ஒரு குறிக்கோள் நெறியும் இருந்தது. அயல்நாட்டு வர்த்தகம் உலகநாடுகளிடேயே நல்லுறவை ஏற்படுத்துகின்றது. வர்த்தகத்தில் பங்கு கொள்ளும் எல்லா நாடுகளும் பயனடைகின்றன. மெர்க்கன்டலிசக் கொள்கையை ஆதரித்தவர்கள் கூறியதைப் போல் வர்த்தகம் ஒரு நாட்டுக்கு மட்டுமே பயனளிக்காது. மற்றநாடுகள் வறுமையில்

இருக்கவேண்டும் என்ற எண்ணம் உலகநாடுகளுடைய உறவைப் பாதிக்கும். அவைகளிடையே விரோத மனப்பான்மையையும், பொறாமை உணர்ச்சியையும் வளர்க்கும். இழிவான தடைகளை நீக்குவதால் உலக சமாதானமும், நாடுகளிடையே நல்லுறவும் வளர்ச்சியடையும் கட்டுப்பாடுகளை அமல் படுத்துவதால் பல இடையூறுகள் ஏற்படும். இங்கிலாந்து 1783-ல் அமெரிக்காவையே இழக்கவேண்டியதாயிற்று. உள்நாட்டிலும் அரசாங்கம் தலையிடாக் கொள்கையைக் கடைப்பிடிக்கவேண்டும் என்று பலர் கூறினர். கட்டுப்பாடுகள் அமலில் இருந்தால் பாராளு மன்ற (Parliament) அங்கினத்தினர்களுக்குத் தொழிலாளர்கள் லஞ்சம் கொடுக்கலாம். ஆனால் சிலருடைய நலன்கள் மற்றவர்களுடைய நலன்களுடன் ஒவ்வாதவையாக இருந்தால் போட்டியே நேர்மையான முறையில் ஒரு முடிவை ஏற்படுத்தமுடியும். அரசியலார் சிலருக்குச் சிறப்பான சலுகைகளையும், சர்வாதீன உரிமைகளையும் வழங்குதலைவிட, போட்டிமூலம் சமத்துவத்தை ஏற்படுத்துவதே சிறந்ததாகும். அரசினர் பல தவறுகளைச் செய்யலாம்; முக்கியமான காரியங்களைச் செய்வதில் காலதாமதம் செய்யலாம், திட்டங்களைச் செம்மையற்ற முறையில் செயற்படுத்தலாம்; ஆனால் தனி மனிதன் முக்கியமான காரியங்களை உடனடியாகச் செய்வான், சிறந்த முறையிலும் செய்வான். அவனுடைய சுயநலமே இதற்குக் காரணமாகும். மனிதனுடைய சுயநல உணர்ச்சியைத் தலையிடாக் கொள்கை சிறந்த முறையில் பயன்படுத்துகிறது. வர்த்தகமும் பிறநாடுகளில் குடிபுகுதலும் இதனால் வளர்ச்சியடைகின்றன[1].

மெர்க்கன்டலிசக் கொள்கை நலிவுறுதலுக்கு மக்களுடைய கருத்துகள் மாறியது மட்டுமே காரணம் என்று கூறமுடியாது. சூழ்நிலையில் ஏற்பட்ட மாறுதலும் இதற்குக் காரணமாகும். தற்காப்பைவிட மக்கள் பொருள் ஈட்டுதலையே விரும்பினர். 18ஆம் நூற்றாண்டில் அமைதி நிலவியதால் மக்கள் போர் வீரர்களைவிடச் செல்வர்களுக்கே மதிப்புக் கொடுத்தனர். வியாபாரிகளுக்குச் சமுதாயம் மதிப்புக் கொடுத்ததால் வர்த்தகமே மிகவும் கவர்ச்சிகரமாக இருந்தது. அரசாங்கம் அமைதியை நிலைநாட்டியதால் வியாபாரிகள் ஏராளமான இலாபத்தை ஈட்டினர். இந்த நிலையில் மக்கள் வர்த்தகத்தின் மூலமாகவும் தொழில் மூலமாகவும்

1. ஜி எம். யங் (G. M. Young) எழுதியதுடன் இக் கருத்தை ஒப்பிடலாம் (Sunday Times, 14th January 1940) அதிகாரத்தை நாடுவோர் செல்வத்தையே நாடுவோரைவிட மிகுதியான அறிவைக் கொண்டிருக்கின்றனர். ஆனால் செல்வத்தை நாடுவோர் 'அதிகாரத்தை நாடுவோரைவிட அதிகமாக மற்றவர்களுக்குத் தீங்கிழைக்கமாட்டார்கள். அவர்கள் தீங்கிழைப்பதற்குக் கவனக்குறைவோ அல்லது சுயநலமோ காரணமாகஇருக்கலாம். ஆனால் இதைப் பொதுமக்களுடைய எண்ணங்களும் சட்டமும் கட்டுப்படுத்தலாம்'.

பொருள் ஈட்ட முயற்சிசெய்தனர்; விஞ்ஞானத்துறையில் புதிய உண்மைகளைக் கண்டுபிடிக்க முயற்சிசெய்தனர். புதிய நாடுகளைக் கண்டுபிடிக்கவும் முயற்சிசெய்தனர்.

உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் போர் ஏற்படுவதற்கு இடம் இல்லாமையால், 'கட்டுப்பாடுகளுக்கும் சர்வாதீனங்களுக்கும்' தேவையில்லை. தற்காப்புக்கே இவை அவசியம் வேண்டும். நாட்டின் வலிமையை நிலைநாட்டவேண்டிய அவசியம் இல்லை[1]. வர்த்தகம் பெருகியதால் நாடு ஏராளமான செல்வத்தைப் பெற்றது. அயல்நாட்டு வர்த்தகத்தையே ஒரு நாடு எதிர்பார்த்திருப்பதால் சில தீமைகள் ஏற்படலாம். ஆனால் வர்த்தகத்தின் மூலம் ஈட்டும் இலாபத்தைக் கொண்டு இத்தீமைகளை எளிதில் சமாளிக்கலாம். ஒரு நாடு சில போர்க் கப்பல்களை இழக்க நேரிடலாம், அல்லது நேசநாடுகளுக்கு உதவி செய்வதின் மூலம் நிலைமையைச் சமாளிக்கலாம். தலையிடாக் கொள்கை மூலம் ஒருநாடு பொருளாதார வலிமையை நிலைநாட்டலாம். இராணுவ வலிமையைவிட இதே சாலச் சிறந்ததாகும். தலையிடாக் கொள்கை இராணுவ தளவாடப் பொருள்களை உற்பத்திசெய்யும் தொழில்களுக்கு ஊக்கமளித்தால் ஒரு நாடு மிகவும் அதிகமான வலிமையைப் பெறலாம்.

மெர்க்கன்டலிசக் கொள்கையை ஆதரித்தவர்கள் அயல் நாட்டு வர்த்தகத்தை உயர்த்திப் பேசியதால் அவர்களுடைய கருத்தின் குறைபாடு வெளியாயிற்று. மன் (Mun) என்பவர் 'England's Treasure by Foreign Trade' என்ற நூலை 1623-ல் எழுதினார். இவர் ஆதாம்ஸ்மித்தின் (Adam Smith) முன்னோடியாக இருந்தார் ஒரு நாட்டின் செழிப்பைவிடத் தற்காப்பே முக்கியமானது என்பதை அவர்கள் இருவரும் ஏற்றுக்கொண்டனர். ஆனால் தற்காப்பின் முக்கியத்துவத்தையும், அதற்காகச் செய்ய வேண்டிய ஏற்பாடுகளைப் பற்றியும் அவர்களிடையே கருத்து வேற்றுமை இருந்தது. ஆதாம்ஸ்மித் மன்னைவிட மிகுதியான பகுத்தறிவையும், உற்றுநோக்கும் சக்தியையும் கொண்டிருந்தார். மேலும் ஸ்மித் தம் கருத்துகளைச் சரியான நேரத்தில் வெளியிட்டார். மக்களும் அவர் கருத்துக்களை ஏற்றுக்கொண்டனர். மன், (Mun) பணப் பரிமாணக் கோட்பாட்டை ஏற்றுக்கொண்டிருக்கலாம். ஆனால் அவர் பொன்னை, விலையுயர்ந்த உலோகம் என்ற காரணத்தால், பரிவர்த்தனைச் சாதனமாகக் கருதியிருக்க மாட்டார். மேலும் மன்னும், அவருடைய காலத்தில் ஆராய்ச்சி

1. 1815 முதல் 1914 வரை தலையிடாக் கொள்கை எங்கும் ஏற்றுக்கொள்ளப் பட்டது. இக்காலத்தில் இங்கிலாந்து 'கிரிமியப்போர்' (Crimean war) என்ற ஒரு முக்கியமான போரிலேயே ஈடுபட்டது.

செய்தவர்களும் வேலையின்மைப் பிரச்சினையையே ஆராய்ச்சி செய்தனர். ஆனால் அக்காலத்தில் வேலை வாய்ப்புகள் நாடெங்கும் பெருகின. ஸ்மித்தும், ஹியூம் (Hume) என்பவரும் மன்னைவிட நம்பிக்கையுடன் பணச்சுருக்கத்தை ஆராய்ச்சி செய்தனர். அக்காலத்தில் இங்கிலாந்தில் இருந்த நிலைமைக்குத் தலையிடாக் கொள்கையை மிகவும் சிறந்ததாக இருந்தது. ஆனால் எப்பொழுதும் எக்காலத்திலும் ஒரு நாட்டுக்கு இக்கொள்கை தேவையாக இருக்கும் என்று நாம் கூறமுடியாது[1].

**சுருக்கமான விளக்கம்**

மார்க்கட்டில் நிலவும் சக்திகளே அரசினர் கட்டுப்பாடுகளை விடச் சிறந்தமுறையில் பொருளாதாரத்தை இயக்கும் என்ற உண்மையைத் தலையிடாக் கொள்கை அடிப்படைத் தத்துவமாகக் கொண்டிருக்கின்றது. உற்பத்தியாளர்களுக்கும்பொருள்களை வாங்குவோருக்கும் இடையே மார்க்கட்டு தொடர்பை ஏற்படுத்துகின்றது. ஒவ்வொருவனும் தன் சுயநலத்தைத் தவிர வேறு எவ்வித விருப்பத்தையோ அல்லது வெறுப்பையோ கொண்டு மார்க்கட்டை அணுகுவதில்லை. மார்க்கட்டில் பேரம் செய்யவேண்டிய தேவை இல்லை. செம்மையான போட்டி நிலவும்பொழுது தனியாட்கள் பேரம் செய்து விலையைக் குறைக்கவோ அல்லது உயர்த்தவோ வேண்டியதில்லை. மொத்தத் தேவையும், மொத்த அளிப்புமே விலையை நிர்ணயம் செய்யும். பல்வேறு வழிகளில் எந்த வழியைப் பின்பற்றலாம் என்பதையும், உற்பத்தி முறையை எவ்வாறு சிக்கனமாகச் செய்யலாம் என்பதையும், உற்பத்தியாளர்களும் மக்களுமே முடிவுசெய்தனர். மக்களே இத்துறையில் சிறந்த அறிவைப் பெற்றிருந்தனர். ஒரு பொருளின் விலை மாறும்பொழுது மக்களிடம் அதன் காரணத்தை விற்பனையாளர்கள் விளக்கவேண்டாம்; கட்டுப்பாடுகளுக்குத் தேவைஇல்லை; நாட்டில் மிகவும் குறைவாகக் கிடைக்கும் பொருளை உற்பத்தியாளர்கள் இவ்வாறு சிக்கனமாகப் பயன்படுத்துகின்றனர் என்பதையும் அவர்கள் மக்களிடம் எடுத்துக்காட்டவேண்டியதில்லை. மார்க்கட்டில் நிலவும் சக்தி விலையை நிர்ணயம் செய்கின்றது; திறமையற்றவர்களை உற்பத்தித் துறையிலிருந்து நீக்கிவிடுகின்றது; மக்கள் குறைந்த விலையில் பொருள்களை விற்பனை செய்யும் நிறுவனங்களுடைய பொருள்களையே வாங்குவதற்கும் காரணமாக இருக்கின்றது. ஒருவன் சிக்கனமான உற்பத்தி முறைகளைப் பின்பற்றினால் மற்றவர்களும் அதே முறையைப் பின்பற்றவேண்டும். அவ்வாறு செய்யத் தவறி

1. மற்றப் பொருள்களைப் போல் ஏற்றுமதி நோக்கத்துடனேயே தலையிடாக் கொள்கையையும் புலர் சிபார்சு செய்தனர் என்று இங்கிலாந்தில் அக்காலத்தில் கூறினர்.

ஞல் அவர்களுடைய தொழில் நலிவுறும். ஒரு மனிதன் தன் விருப்பம் போல் நடந்துகொள்வதற்கும் இடம் இருக்கின்றது. இதற்காக அவன் அரசாங்கத்தின் அனுமதியைப் பெறவேண்டும். தலையிடாக் கொள்கையை தனி மனிதனுடைய விருப்பத்திற்கும், தொழில் முன்னேற்றத்திற்கும், மூலதனம் பெருகுவதற்கும் இடம் கொடுக்கின்றது. திறமையற்றவர்கள் உற்பத்தி செய்யமுடியாது. ஆகையால் அடக்கச் செலவு குறைவாகவே இருக்கும். மேலும் உள்நாட்டில் நிலவும் விலைகளைவிட அயல்நாட்டுப் பொருள்கள் குறைவான விலையிலேயே விற்கப்படவேண்டும். எனவே வாழ்க்கைச் செலவு (Cost of living) குறைவாகவே இருக்கும்.

மார்க்கட்டு மிகவும் சிறந்த அமைப்பைக் கொண்டிருக்கின்றது. ஒவ்வொரு உற்பத்திக் காரணியும் (Factor of production) இறுதிநிலையில் உற்பத்தியை எவ்வளவு தூரம் பெருக்குகின்றதோ, அந்த உற்பத்திக்குச் சமமான தொகையையே வருமானமாகப் பெறுகின்றது. இந்த நிலையில் உற்பத்தி தானுகவே சந்தர்ப்பத்திற்குக் தகுந்தவாறு மாறுகின்றது. அரசியலார் தொழிலைக் கண்காணிக்கவோ அல்லது கட்டுப்படுத்தவோ வேண்டாம். அளிப்பும் (Supply), தேவையும் (demand) விலையை நிர்ணயம் செய்கின்றன. அடக்கச் செலவும் (Cost), பயனும் (utility) சமமாக இருக்கின்றன. அதாவது விலை ஒரு கருவியாக வேலைசெய்கின்றது. பொருளாதாரத் திட்டத்தைவிட இந்த முறையே மிகவும் சிறந்ததாகும். அரசாங்கம் பொருளாதாரத்துறையில் ஈடுபடுவது சரியல்ல. அரசாங்கம் தலையிடுவதால் பொருளாதாரம் தானுக இயங்கும் சக்தி பாதிக்கப்படும். அரசாங்கம் பின்பற்றும் முறை தொழில் முன்னேற்றத்துக்கு உகந்தல்ல. ஒரு சிலரே அரசாங்கத்தின் கட்டுப்பாடுகளால் பயனடைவர். தொழிலதிபர்களே தொழிலைச் சரிவர நிருவாகம் செய்யமுடியும். அதைப்பற்றிய எல்லாவற்றையும் அவர்களே நன்கு அறிவர். தொழில் உற்பத்திக்கு ஏற்ற திட்டங்களை அவர்களே நன்கு வகுக்க முடியும். மிகவும் குறைந்த விலையில் விற்பனையாகும் பொருள்களையே மக்கள் வாங்குவர். அரசினர் விருப்பத்துக் கிணங்கிச் சில குறிப்பிட்ட பொருள்களை அவர்கள் வாங்கமாட்டார்கள்.

தலையிடாக் கொள்கையைப் பின்பற்றுவதற்குத் தகுந்த காரணங்கள் இருந்தன. உயர்ந்த குறிக்கோளுக்கும் அனுபவத்திற்கும் அது பொருத்தமாக இருந்தது. இக்கொள்கை வெற்றிகரமாக இருக்கும் என்பதை வரலாறு கூறுகின்றது. 19ஆம் நூற்றுண்டில் கணிசமான முன்னேற்றம் ஏற்பட்டது. ஆனல் இக்கொள்கையில் சில குறைபாடுகள் இருக்கின்றன.

## 2. தலையிடாக் கொள்கை நலிவுறுதல்

தலையிடாக் கொள்கையை சிலருடைய சித்தாந்தம் அல்லது பிடிவாதக் கொள்கை என்றே நாம் கூறவேண்டும். அதை ஓர் உண்மை என்று கூறமுடியாது. தொழில் நிருவாகத்தில் அரசாங்கம் என்றுமே தலையிடக்கூடாது என்ற கருத்தை அரசினர் என்றுமே பூரணமாக ஒத்துக்கொள்ளவில்லை. குறிப்பாக அது உள்நாட்டுத் தொழில்களைக் கட்டுப்பாடுகளுக்குட்படுத்தாமல் இருக்க என்றுமே இசைந்ததில்லை. தடையற்ற அயல்நாட்டு வர்த்தகத்தைக்கூட அது சிலசமயங்கள் அனுமதித்தது. ஆனால் உள்நாட்டுத் தொழில்களை அது கண்காணித்தது. ஆனால் நாளடைவில் மற்றப் பொருளாதாரத் துறைகளும் கண்காணிப்புக்குட்பட்டன. அதாவது கட்டுப்பாடுகள் மிகச் சாதாரணமானவையாக மாறிவிட்டன.

கட்டுப்பாடுகள் அமலில் வருவதற்கு எவ்வாறு சில காரணங்கள் தோன்றின என்பதை நாம் விளக்கலாம். அல்லது பொருளாதாரக் கோட்பாடுகளில் ஏற்பட்ட மாறுதல்களை ஒட்டி எவ்வாறு கொள்கை மாறியது என்பதையும் நாம் எடுத்துக்காட்டலாம். இவ்விருமுறைகளும் எவ்வாறு வேறுபட்டிருக்கின்றன என்பதை நாம் மறக்கக்கூடாது. புதிய கோட்பாடுகளையும், விதிகளையும் பலர் விளக்கியதால் முதலாளித்துவம் (Capitalism) கட்டுப்பாடுகளுக்குட்படுத்தப்பட்டது என்று நாம் கூறமுடியாது. மாறுதல்களுக்கு அவ்வப்போது அவசியம் ஏற்பட்டதால்தான் கட்டுப்பாடுகள் அமலில் வந்தன. தொழில் உற்பத்தியில் அரசாங்கத்தின் தலையீடு நடைமுறையில் அமைந்திருப்பதைப் பார்த்தபின் பொருளியலார் தம் விதிகளை விளக்கினர் என்று நாம் கூறமுடியாது.

**போரும் அரசினர் தலையீடும்**

இரு உலகப்போர்களும் அவைகளுடைய விளைவுகளும் தொழில்துறையில் அரசினர் தலையீட்டுக்குக் காரணமாக இருந்தன. விலைவாசியை அடிப்படையாகக் கொண்ட உற்பத்திமுறை போர்க்காலத்திற்குத் தகுந்தவாறு எளிதில் மாற முடியாது. மக்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவது மட்டும் பொருள் உற்பத்தியின் நோக்கமாகாது. போரில் வெற்றியடைவதே முதல் நோக்கமாகும். எனவே உற்பத்திச் சாதனங்களுடைய பயனைப் போருக்குத் தகுந்த முறையில் திருப்பவேண்டும். இதை அரசாங்கமே செய்ய வேண்டும். ஏனெனில் போரில் வெற்றிகாணுவதற்கு ஏற்பாடு செய்யவேண்டியது அரசாங்கத்தின் பொறுப்பாகும். உற்பத்திச் சாதனங்களின் பயனைப் புதிய வழியில் திருப்புவதற்கு விலைவாசி

முறை உதவியளிக்கும். உதாரணமாகத் தொழிலாளர்களை ஈர்க்கப் போர்த் தளவாடங்களைச் செய்யும் தொழில்கள் உயர்ந்த கூலியைக் கொடுக்கவேண்டும். உற்பத்தியின் அமைப்பை மாற்றுவதற்குப் பல்வேறு பொருள்களின் விலைகளை மாற்றலாம். ஆனால் போர்க் காலத்துப் பற்றுக்குறையை நீக்குவதற்கு நாம் விலைவாசி முறையைப் பயன்படுத்தமுடியாது. விலைவாசி அரசினர் விருப்பப்படி புதிய சமநிலையை ஏற்படுத்தாமல் கட்டுக்கடங்காத முறையில் உயரலாம். அளிப்பையும் தேவையையும் கட்டுப்பாடுகளுக் குட்படுத்தவேண்டும். எதிர்பார்த்த விளைவுகள் ஏற்படவேண்டு மானால் உற்பத்திக்கும் துய்ப்புக்கும் ஒரு திட்டத்தை வகுக்க வேண்டும்.

போர் முடிந்த பிறகும் அரசினர் தலையீடு தேவைப்படலாம். போர்க்காலத்து அனுபவம் நமது கருத்துகளை மாற்றிவிட்டது. போர்க்காலத்தில் அமலில் இருந்த கட்டுப்பாடுகள் அமைதி நிலவும்பொழுதும் அமலில் இருக்கலாம். அரசாங்கம் செய்ய வேண்டிய வேலைகளைப் பற்றிய பழைய கருத்துகள் மாறிவிட்டன. போருக்கு வேண்டிய நிதி திரட்டுவதற்காக அரசாங்கம் செல்வர்கள் மீது வரிவிதிக்கவேண்டும். மக்களுடைய வாழ்க்கைத் தரம் தாழ்வடையாமல் இருப்பதற்கும் ஓர் ஏற்பாடு செய்யவேண்டும். ஆகையால் அமைதி நிலவும் காலத்தில் ஏழைகளுடைய நலனைக் காப்பாற்றுவதற்காக, அரசினர் ஏன் பொருளாதாரத்தைக் கட்டுப்படுத்தக்கூடாது? சிலர் கள்ள மார்க்கட்டில் பொருள்களை விற்பனை செய்து எளிதில் இலாபம் பெறுகின்றனர். இந்த முறை தனியார் சொத்துக்கு (Private Property) நாம் கொடுக்கும் மதிப்பையே கெடுத்துவிடுகிறது. அரசாங்கம் சிலருடைய செல்வத்தை மற்றவர்களுக்கு மாற்றுவதை இப்பொழுது கண்டனம் செய்ய முடியாது. ஏழைகள் தம் நலனைக் காப்பாற்றிக்கொள்ள அதிகாரம் கொண்டிருக்கின்றனர் என்பதை அவர்கள் உணர்ந்தனர். இவ்வதிகாரத்தை அவர்கள் பயன்படுத்த ஆரம்பித்த பிறகு, இதைக் கைவிடமாட்டார்கள்.

மேலும் எதிர்காலத்தில் மீண்டும் போர் தொடங்காது என்று ஒருவரும் கூறமுடியாது. ஆகையால் எதிர்காலத்தில் ஒரு நாடு போருக்குத் தயாராக இருத்தல்வேண்டும்; அதற்குத் தகுந்தவாறு பொருளாதாரக் கொள்கையையும் ஒரு நாடு பின்பற்றவேண்டும். 1910-ல் அமைதி இருந்தது. இவ்வமைதி நீண்டகாலம் நிலவும் என்றும் தோன்றியது. ஆனால் 40 ஆண்டுகளுக்குப்பின் நிலைமை மாறியது. இரண்டு உலகப்போர்கள் நிகழ்ந்த பிறகு உலகநாடுகள் தலையிடாக் கொள்கையைப் பின்பற்றுவதா அல்லது போர்

ஏற்பட்டால் அதைச் சமாளிக்க ஏற்பாடுகள் செய்வதா என்று முடிவு செய்யவேண்டியிருந்தது. இந்த நிலையில் ஒரு நாடும் தனியார் துறையைக் கட்டுப்படுத்தாமல் இருக்கமுடியாது. 19ஆம் நூற்றுண்டில் அரசாங்கம் பொருளாதாரத்தைக் கட்டுப்பாடுகளுக் குட்படுத்தவேண்டிய அவசியம்இல்லை. ஆனல் இக்காலத்துப் போர் அந்த அவசியத்தை ஏற்படுத்தியிருக்கிறது. அமைதி நிலவும் பொழுதும் ஏற்படும் போர் கட்டுப்பாடுகளின் அவசியத்தை 20ஆம் நூற்றுண்டில் உணர்த்துகிறது.

அரசாங்கக் கட்டுப்பாடுகளுக்குத் தற்காப்பு மட்டுமே காரண மாகும் என்று நாம் கருதக்கூடாது. போர்க்காலத்தில் விலைவாசி முறை (Price mechanism) பாதிக்கப்படுகின்றது. முன்பு உலகில் அமைதி நிலவியதால்தான் மக்கள் தொழில்துறையில் பின்பற்ற வேண்டிய நெறியும், இலாபம் ஈட்டுவதற்கு வாய்ப்புகளும் வளர்ந்தன ; விலைவாசி முறையும் வளர்ந்தது. அமைதி நிலவா விடில் இவைகள் எல்லாம் பாதிக்கப்படும். ஆகையால் அமைதியை நிலைநாட்டுவதற்காக அரசாங்கம் நடவடிக்கைகளை எடுக்க வேண்டும்.

வேலையின்மை (Unemployment): இரு உலகப்போர்களுக்கும் இடையில் வேலையின்மை பெருகியதாலும் அரசினர் தலையீடு அவசியமாயிற்று. போர்க்காலத்தில் அரசினர் வேலையின்மையை ஒழித்து விடுகின்றனர். அமைதி நிலவும் காலத்திலும் அதை நீக்கவேண்டும். பலநாடுகள் ஐக்கியநாடுகளின் ஸ்தாபனத்தின், சாசனத்தின் (charter) 55-ஆம் விதிப்படி நாட்டில் வேலை நிறைவை ஏற்படுத்த முயற்சி செய்வதாக வாக்களித்திருக் கின்றன. ஆகையால் அவை வேலையின்மையை ஒழிப்பதற்குத் திட்டம் வகுக்கவேண்டும். அதாவது தம் பொருளாதாரத்தைச் சில கட்டுப்பாடுகளுக்குட்படுத்த வேண்டும்.

அயல்நாட்டுவர்த்தகம் போருக்கு முன்னும் பிறகும் அயல் நாட்டு வர்த்தகத்தில் சில மாறுதல்கள் ஏற்பட்டன. இந்த மாறுதல்கள் அயல்நாட்டு வர்த்தகமும் வேலையின்மையும் எவ்வளவு முக்கி யமோ அவ்வளவு முக்கியமாக இருக்கின்றன. ஏனெனில் வேலை யின்மையும் போரும் செய்வது போல் இந்த மாறுதல்களும் அரசாங்கக் கட்டுப்பாடுகளுக்கு ஓர் அவசியத்தை ஏற்படுத்து கின்றன. அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் பற்றுக்குறை ஏற் பட்டது. உணவுப் பொருள்களும் மற்ற முக்கியமான பொருள்களும் வேண்டிய அளவு கிடைக்கவில்லை. மேலும் டாலர் பற்றுக் குறையும் ஏற்பட்டது. ஆகையால் அரசினர் கட்டுப்பாடுகளை அமலில் கொண்டுவர வேண்டியதாயிற்று.

**நீண்டகாலத்தில் கட்டுப்பாடுகள் வளர்ச்சியடைதல்.**

முதல் உலகப் போருக்கு முன்பே கட்டுப்பாடுகள் அமலில் வந்தன. தலையிடாக் கொள்கையும் நலிவுற்றது. ஆனால் போர் இக்கொள்கையின் வீழ்ச்சியை விரைவுபடுத்தியது. சர்வாதீனங்களை (Monopolies) அரசாங்கம் கண்காணித்தது. ரெயில்வே கம்பெனி, வாயு, மின்சாரம் முதலியவைகளை வழங்கும் நிறுவனங்கள் முதலியவை கட்டுப்பாடுகளுக்குட்படுத்தப்பட்டன. அவை வசூல் செய்த கட்டணங்களைத் தம் விருப்பம்போல் அவை மாற்றமுடியாது. அவை கொடுத்த இலாப ஈவு, அவை புதிய கட்டடங்களை எழுப்புதல் முதலியவை கட்டுப்பாடுகளுக்குட்பட்டிருந்தன. அரசாங்கம் இன்று மிகவும் முக்கியமானவையாகக் கருதப்படும் சிலவற்றையும் கட்டுப்படுத்தியது. உதாரணமாக 1844-ல் நிதி நிலைமை மோசமாகாமல் இருப்பதற்காகப் பாங்கு சாசனச்சட்டத்தை (Bank charter act 1844) இயற்றினர். மக்களுடைய அடிப்படைத் தேவைகளை மார்க்கட்டு பூர்த்தி செய்யாததாலும் கட்டுப்பாடுகள் அமலில் வந்தன. மக்கள் உடல் நலத்தைப் போட்டி பாதுகாக்காது. உதாரணமாகக் காலரா போன்ற தொத்து நோய்கள் பரவுதலைத் தடைசெய்யச் சுகாதார வசதிகளை ஏற்படுத்தவேண்டும். எல்லோருக்கும் பொதுவான வசதிகளைச் செய்யவேண்டும். இந்த வசதிகளுக்காகக் கட்டணங்களைச் செலுத்தாதவர்களும் இதனால் பயனடைவார்கள். அறியாமையும் நோயைப்போல் கொடியதாக இருப்பதால், அரசாங்கம் எல்லோருக்கும் கல்வி வசதியளிக்கின்றது. சாலைகளையும், பூங்காக்களையும், நூல் நிலையங்களையும், அரசாங்கம் பொதுமக்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக நிறுவுகின்றது. பொதுமக்கள் நலனைக் காப்பாற்றுவதற்காகவும், ஆபத்துக்களை நீக்குவதற்காகவும் அரசாங்கம் ஒரு பெரிய பொதுப்பணித்துறையையே நிறுவியுள்ளது.

மேலே குறிப்பிட்ட கருத்துகளும் தேவைகளும் வளர்ந்ததால் தனியாள் சுதந்திர இயக்கம் நலிவுற்றது. ஜெர்மானிய எழுத்தாளர்களும், அரசியல்வாதிகளும் புதிய கருத்துகள் பரவுவதற்குக் காரணமாக இருந்தனர். மேலும் புதிய கருத்துகளைச் செயலில் கொண்டு வருவதற்கு அரசாங்கக் கட்டுப்பாடுகள் தேவையாக இருந்தன. புதிய சமுதாயத்தை நிறுவவேண்டியது அரசாங்கத்தின் பொறுப்பாகும். கட்டுப்பாடுகள் மூலம் பொதுமக்கள் நலத்தைக் காப்பாற்றவேண்டும். ஆகையால் அரசாங்கம் கல்வி வசதியை மக்களுக்குக் கொடுக்கின்றது. வேலையின்மை இன்சூரன்சுத்திட்டத்தையும், முதியோர் ஓய்வூதியத்திட்டத்தையும் அமலில் கொண்டு வருகின்றது. செழிப்பான ஒரு சமுதாயத்திற்கு

இத்திட்டங்கள் இன்றியமையாதவை. தனியார் துறையில் நேரடியான கட்டுப்பாடுகளும் மிகுதியடைந்து விட்டன. சில தொழில்களின் எல்லைகளை அரசாங்கம் குறுகலாகச் செய்துவிட்டது. தொழிற்சாலைச் சட்டம் (Factory Act) மார்க்கட்டுச் சட்டம் (Marketing Act) முதலியவைகளை நாம் உதாரணங்களாகக் காட்டலாம். வேலைநேரம் நிர்ணயம் செய்யப்பட்டு விட்டது. வர்த்தகச் சபைகள் (Trape Boards) குறைந்தபட்சக் கூலியை நிர்ணயம் செய்யலாம். ஆனால் அரசாங்கம் மார்க்கட்டுமுறையை அறவே நீக்கி விடவில்லை. மார்க்கட்டின் நிலைமையை மட்டுமே அது மாற்ற முயற்சிசெய்தது. சுயநலத்தை அடிப்படையாகக் கொண்ட மார்க்கெட்டு முறையையும், விலைவாசி முறையையும் அரசாங்கம் சீர்குலைத்துவிடவில்லை. சுயநலம் பொதுநலத்தைப் பாதிக்காமல் இருப்பதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்கின்றது. தனியார்துறையும் தனியார் உற்பத்தியும் எப்பொழுதுமே பொது நலத்திற்கு உகந்ததாக இருக்கும் என்ற பழைய கொள்கை தவறு என்பதை அரசாங்கம் ஏற்றுக்கொண்டது. ஆனால் தனியார்துறைக்கு இன்னும் ஏராளமான வாய்ப்புகள் இருக்கின்றன. தனிமனிதனின் உற்பத்தி கட்டுப்பாடுகளுக் குட்பட்டிருக்கின்றது. உதாராணமாகப் பாங்கு சாசனச் சட்டத்தைத் (The Bank Charter Act) தானுக இயங்கும் பணமார்க்கட்டை மாற்றி அமைக்கும் நோக்கத்துடன் இயற்றவில்லை. நிருவகிக்கப்படும் செலாவணிமுறையை நிறுவும் எண்ணத்துடன் அதை இயற்றினர். செலாவணியின் தானுக இயங்கும் சக்தியை அதிகரிக்கும் நோக்கத்துடனேயே அச்சட்டத்தை இயற்றினர். பெண்களையும் குழந்தைகளையும் சுரங்கங்களில் வேலையில் அமர்த்தக்கூடாது என்ற சட்டத்தை அரசாங்கம் இயற்றியபொழுது சுரங்கத்தைச் சிலர் கண்காணிப்பிலிருந்து மாற்றவில்லை. ஒரு குறிப்பிட்டமுறையில் அதை நிருவாகம் செய்யக்கூடாது என்றே அரசாங்கம் கூறியது. பாதுகாப்புவரி, பாதுகாக்கப்பட்ட தொழில்களுடைய நலனைக் காப்பாற்றியது. ஆனால் போட்டியின் அடிப்படைத் தத்துவத்தை பாதிக்கவில்லை. அரசாங்கம் சில துறைகளில் ஆதரவு காட்டலாம். வேறு சில துறைகளில் கட்டுப்பாடுகளைப் புகுத்தலாம்.

ஆனால் கண்காணிப்புக்களையும் கட்டுப்பாடுகளையும் தொடங்கியபின் அரசாங்கம் அவைகளை எளிதில் கைவிடமுடியாது. விஞ்ஞானம் முன்னேறியுள்ள இக்காலத்தில் கட்டுப்பாடுகள் வேண்டும் என்ற கருத்து பழையகாலத்தவர்களுக்கு வியப்பைக் கொடுத்திருக்கும். தனியாட்களுக்கும் சமூகத்திற்கும் நலனைக் கொடுக்கும் என்று கருதப்பட்ட பொருளாதாரமுறை தன் மதிப்பை இழந்தது. பொருளாதாரத்துறையில் முன்னேற்பாடு செய்தலும்,

திட்டங்களை வகுத்தலும் கவர்ச்சிகரமாக இருந்தன. தடையற்ற முறையில் மார்க்கெட்டு சக்திகள் இயங்குவதையே நம்பினவர்கள், மார்க்கட்டு கட்டுப்பாடுகளுக்குட் பட்டிருப்பதைக் கண்கூடாகக் கண்டனர். அவர்கள் தம்குறைகளை அரசாங்கத்திடம் தெரிவிக்க லாம். ஆனால் அரசினர் செய்யும் முடிவுகள் மார்க்கட்டு முறைகளைப் போல் இரா. விளம்பரம், சில கட்சிகளுடைய செல்வாக்கு, அவசரகாலச் சட்டங்கள் முதலியவைகளே அரசினருடைய முடிவுகளுக்குக் காரணமாக இருக்கும். பொதுப்பணித்துறை ஒரு நூற்றாண்டுக்கு முன் நன்கு அமைந்திருக்கவில்லை. அரசாங்க அதிகாரிகள் லஞ்சம் வாங்கினர். தம் விருப்பம்போல் எதை வேண்டுமானாலும் செய்யத் துணிந்தனர். இக்காலத்துப் பொறுப்புக்களை ஏற்க அவர்கள் தயாராக இல்லை. ஆகையால் அக்காலத்தில் அரசாங்கத்தின் அதிகாரம் ஒரு குறுகிய எல்லைக் குட்பட்டிருந்தது.

# 34. அரசாங்கத்தின் பொறுப்பு

அரசாங்கத்தின் கட்டுப்பாடுகள் சிறிது சிறிதாக, அவ்வப் போது தேவை எழுந்ததை ஒட்டி வளர்ச்சியடைந்தன. பொரு ளாதாரக் கோட்பாடுகள் மாறியதை ஒட்டி அரசினர் தம் கொள் கையை மாற்றிக் கொள்ளவில்லை. கலப்புப் பொருளாதார முறை விரும்பத்தக்கதாக இருந்தபோதிலும், இன்று நிலவும் முறை வளர்ச்சியடைந்திருக்கக் கூடும் என்று எவரும் எதிர்பார்த்திருக்க முடியாது. இன்றைய முறையில் தனியார் துறைக்கும் பொதுத் துறைக்கும் இடம் இருக்கின்றது. கட்டுப்பாட்டு முறையை விளக்கும் ஒரு கோட்பாட்டை நாம் ஏற்படுத்துவது கடினம்.

இரண்டாவது அதிகாரத்தில் நாம் விளக்கியுள்ள முக்கியமான பிரச்சினைகளுக்கு ஒருநாடு ஒரு பொருளாதாரக் கொள்கையை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். அப்பிரச்சினைகளை இறுதியிலிருந்து ஒவ்வொன்றுகப் பரிசிலனை செய்யலாம். முதன் முதலில் தனி யாளின் வருமானத்தை தொடர்ச்சியாகப் பெருக்கவேண்டும். இதற்கு நாட்டில் வேலை நிறைவை ஏற்படுத்தவேண்டும். உற் பத்தியையும் அதற்கு வேண்டிய பொருள்களையும் பெருக்க வேண்டும். மற்ற நாடுகளுடன் சிறந்த வர்த்தகத் தொடர்புகள் கொள்வது மூன்றுவது பிரச்சினையாகும். இத்தொடர்புகள் சிறந்த பயனைக் கொடுக்கவேண்டும், வேலை வாய்ப்புகளைப் பாதிக்கக் கூடாது. உற்பத்திச் சாதனங்களைப் பல்வேறு முறைகளில் பயன் படுத்தலாம். மிகச்சிறந்த முறையில் பயன்படுத்தும் பொழுது உற்பத்தியாளர்கள் எந்த அறிகுறிகளைக் காணலாம் என்பதை அவர்களுக்குத் தெரியப்படுத்த வேண்டும். புதிய உற்பத்தி முறைகளை, அதாவது சிறந்த உற்பத்திமுறைகளைப் பின்பற்ற வேண்டும். இதற்கு வேண்டிய சோதனைகளைச் செய்யவேண்டும். மக்களுக்குக்கிட்டும் வாய்ப்புகளிலும், வருமானங்களிலும் வேறு பாடுகள் இருக்கும்; இவைகளையும் ஏழ்மையையும் அகற்ற வேண்டும். சரியான உற்பத்தி முறையைப் பின்பற்றுவதும்,

உற்பத்திச் சாதனங்களைப் பங்கீடு செய்வதும் ஒரே வகையான பிரச்சினைகளாக இருந்த போதிலும் வேறுபட்டிருக்கின்றன. உதாரணமாகச் சர்வாதீனங்கள் உற்பத்தியாளர்களுடைய திறமையைக் குறைக்கும். தடையற்ற போட்டி வீண் செலவுகளுக்குக் காரணமாக இருக்கும். விலைவாசி முறை சரியான வழியில் உற்பத்திச் சாதனங்களைப் பங்கீடு செய்கின்றதா என்பதே மற்ருெரு பிரச்சினையாகும். மார்க்கட்டுச் சக்தி உற்பத்திச் சாதனங்களை, விலைவாசிமுறை அமைக்கும் வழிகளில் திருப்பும். ஆனால் பொருளாதார அமைப்பு மாறும்பொழுது இச்சக்தி மிகவும் தாமதமாக இயங்கும் அல்லது கொடுமையான முறையில் இயங்கும்.

இந்தப் பிரச்சினைகளில் சிலவற்றை முந்திய அதிகாரங்களில் பார்த்தோம். இவைகளைப் பற்றிய விவரங்கள் அனைத்தையும் நாம் இங்குக் கொடுக்க முயற்சி செய்தால் இந்த நூலைப்போல் வேறு ஒரு நூலை எழுதவேண்டும். ஆனால் கீழ்க்கண்ட மூன்றையும் பற்றி நாம் ஒரு விவரங்களைக் கொடுக்கவேண்டும்:—சமத்துவமின்மை (Lnequality); திறமையின்மை (inefficiency); நிலையற்ற தன்மை (instability).

## சமத்துவமின்மையும் சமுதாயத்தின் நலனும்

ஒவ்வொருவனும் தன் விருப்பம்போல் பொருள் ஈட்டுவதற்கு இடம் இருந்தால், தொழில் துணிவும், திறமையும் படைத்தவர்கள் மற்றவர்களைவிட அதிக இலாபம் பெறுவார்கள். சிலர் அதிர்ஷ்டவசமாகச் செல்வத்தையும் சிலர் முன்னோர்களுடைய சொத்தையும் அடைகின்றனர். ஆனால் ஏழைகளும் வேலையில்லாமல் திண்டாடுவோரும் அதிர்ஷ்டசாலிகளைப் பார்த்துப் பொருமை கொள்வது இயற்கையே. ஜனநாயகத்தில் எல்லோருக்கும் ஓட்டுரிமை இருக்கின்றது. சமத்துவமின்மை ஜனநாயக முறையுடன் ஒவ்வாததாக இருக்கின்றது.

போருக்குமுன் தனிப்பட்டவர்களுடைய வருமானத்தில் 29 சதவீதத்தை உயர்ந்த வகுப்பைச் சேர்ந்த 5 சதவீதத்தினரே பெற்றனர். 1957-ல் அவர்களுடைய வருமானம் 18 சதவீதமாகக் குறைந்தது. உயர்ந்த வகுப்பைச் சேர்ந்த ஒரு சதவீதத்தினர் பெற்ற வருமானம் மிகவும் குறைந்தது. 1957-ல் அவர்களுடைய வருமானம், வரிகளைச் செலுத்துவதற்கு முன்னும், செலுத்திய பின்னும் 50 சதவீதத்திற்குமேல் குறைந்தது. அது மொத்த வருமானத்தில் அவர்கள் வருமானம் 5 சதவீதமாகக் குறைந்தது[1].

[1] இந்த விவரங்களையும், கீழேகாணும் விவரங்களையும் Journal of the *Royal Statistical Society* (vol. 122, part 1, 1959) என்ற பத்திரிகையில்

ஆகையால் மக்களுடைய வருமானம் விரைவில் மாறிக் கொண்டிருக்கின்றது. முதல் அல்லது முதலீடுகள் மக்கள் மூலம் பெறும் வருமானம் போருக்குப்பின் குறைந்ததால் போருக்குப்பின் உயர்ந்த வகுப்பினருடைய வருமானம் குறைந்தது. போருக்கு முன் ஓர் உயர்ந்த வகுப்பில் உள்ள ஒரு சதவீத மக்கள், வரி செலுத்துவோருடைய மொத்த வருமானத்தில் 60 சதவீதத்தைப் பெற்றனர். 1954-55-ல் அவர்களுடைய வருமானம் 40 சதவீதமாக இருந்தது. மக்கள் தொகையில் 50 சதவீதத்தினர் மிகக் குறைவான முதலீட்டு வருமானத்தையே பெற்றனர். மக்கள் கொண்டிருந்த செல்வத்திலும் மூலதனத்திலும் இருந்த வேறுபாடுகளே, அவர்களுடைய வருமானத்தில் இருந்த வேறுபாடுகளுக்குக் காரணமாக இருந்தன என்பது புலப்படுகிறது. வருமானத்தைவிட மூலதனப் பங்கீட்டிலேயே அதிக ஏற்றத் தாழ்வுகள் இருக்கின்றன. போருக்குமுன் மொத்தச் செல்வத்தில் $\frac{3}{8}$ பங்கு ஒரு சதவீதம் மக்களிடம் இருந்தது. அவர்களுடைய செல்வம் 10,000 பவுனுக்குக் குறையாமல் இருந்தது[1].

செல்வப் பங்கீட்டில் இருக்கும் வேற்றுமைகள் ஓரளவு முதியோருக்கும் இளைஞர்களுக்கும் இடையே இருக்கும் வேற்றுமைகளாகும். முதியோர் செல்வத்தை ஈட்டி வைத்திருக்கின்றனர் இளைஞர்களிடம் மிகுதியான செல்வம் இல்லை. போருக்குமுன் 55 வயதுக்கு மேற்பட்ட மனிதர்களைவிட 25 முதல் 55க்குட்பட்டவர்களுடைய எண்ணிக்கை மூன்று மடங்கு அதிகமாக இருந்தது. பெண்களில் வயதானவர்கள் ஆண்களைவிட மிகுதியான செல்வத்தைக் கொண்டிருந்தனர். 1938-ல் இறந்த பெண்களில் 60சதவீதத்தினர் £10,000 £50,000 வரை மதிப்புள்ள சொத்தைக் கொண்டிருந்தனர். இவர்களுள் 75 சதவீதத்தினர் 75 வயதுக்கு மேலும், 2 சதவீதத்தினர் 45 வயதுக்குள்ளும் இறந்தனர்.

---

வெளியான எச். எப். லிடல் H. F. Lydall எழுதிய "The long-term trend in the size distribution of income." என்ற கட்டுரையில் காணலாம். வரிகளைச் செலுத்துவதற்குமுன் வருமானத்தில் ஏற்பட்ட மாறுதல்களுக்கு 4 காரணங்கள் இருந்தன என்று லிடல் கூறுகிறார். உள்நாட்டு வருவாய் அதிகாரிகள் திருமணமானவர்களுடைய வருமானத்தை. மனைவிகளுடைய வருமானத்துடன் சேர்க்கின்றனர். அவர்களுடைய வருமானத்தைத் தனியாகக் கருதி அதற்கு வரி விதிப்பதில்லை. ஆகையால் குறைந்த வருமானத்தைப் பெறுவோருடைய மனைவிகள் வேலைசெய்து வருமானத்தை ஈட்டுவதால் குடும்பத்தின் வருமானம் பெருகும். ஆனால் வரி பெருகாது. முதலீட்டு வருமானம் அதிகமாக இருப்பதால் மக்கள் பெறும் வருமானம் சமமாக இருப்பதில்லை. இந்த முதலீட்டு வருமானம் குறைவதற்கு 3 காரணங்கள் இருந்தன. வாடகைக் கட்டுப்பாடு இலாபத்தின்மீது விதித்த வரி, பணவீக்கம் முதலியவை வீட்டுச் சுவான்தார்களுடைய வருமானம், இலாப ஈவு, வட்டி முதலியவைகளைக் குறைத்தன.

1 ஜி. டபிள்யு. டேனியல்ஸ், எச். காம்பியன் (G. W. Daniels and H. Campion எழுதிய Distribution of the National Capital (Manchester, 1936).

சென்ற தலைமுறையில் செல்வத்தின் பங்கீடு படிப்படியாக மாறியது. £ 1000-க்கு மேற்பட்ட ஆனால் £ 5000-க்குட்பட்ட தொகையை இறக்கும்பொழுது சொத்தாகக் கொண்டவர்களின் எண்ணிக்கை 1913 முதல் 1947 க்குள் 6 மடங்காகப் பெருகியது. இறக்கும்பொழுது 10,000 பவுனுக்கு மேற்பட்ட தொகையைக் கொண்டவர்களின் எண்ணிக்கை (சொத்துகளின் மதிப்பு உயர்ந்த போதிலும்) மூன்று மடங்கே பெருகியது. இந்த மாறுதல்கள் பெரும்பாலும் 1939-க்குப்பின் ஏற்பட்டன. வயது வந்தவர்களில் ஒரு சதவீதத்தினர் தனியார் சொத்தில் அரைப்பகுதியை இன்றும் கொண்டிருக்கின்றனர். ஆனால் நாட்டில் பெரிய மாறுதல்கள் ஏற்படுகின்றன என்பது தெளிவாகின்றது. சொத்தின் மதிப்பு, சொத்து வரி (estate duty)யின் மதிப்பை எடுத்துக் காட்டாது. மீண்டும் சொத்தின் சொந்தக்காரர் இறந்தபின் மற்றொருவர் அதை அடையும்பொழுதே சொத்து வரியின் அளவு நமக்குத் தெரியும். சுமார் 30 ஆண்டுகளில் சொத்துக் கைமாறும்.

வருமானத்திலும் சொத்திலும் வேறுபாடுகள் இருப்பது மிகவும் சாதாரணமானதாகும். பெரும்பாலும் எல்லா நாடுகளிலும் இந்த வேறுபாடுகள் இருக்கின்றன. சில நாடுகளில் இந்த வேறுபாடுகள் அதிகமாக இருக்கின்றன; நேர்மையற்றவையாகவும் இருக்கின்றன. ஜனநாயக முறையில் எல்லோருக்கும் ஓட்டுரிமைச் சமத்துவம் இருப்பதால், ஓரளவு வருமானத்திலும் சமத்துவம் இருக்கவேண்டும். இத் தத்துவத்தை நேர்மையானதென்ற காரணத்தால் மக்கள் ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று கூற வேண்டியதில்லை. சிலருடைய பொருளாதார அதிகாரத்தைவிடப் பலருடைய அரசியல் அதிகாரம் மிகுதியாக இருப்பதால் சமத்துவம் நிலை நாட்டப்படுகின்றது. மக்கள் பொருளாதாரச் சமத்துவத்தை விரும்பும்பொழுது அரசாங்கம் பொருளாதார வளர்ச்சியை பாதிக்காமல், மக்களுடைய சுதந்திரத்தைப் பறிக்காமல் நேர்மையான முறையில் அதை நிலைநாட்டுவதற்கு ஏற்பாடு செய்யவேண்டும்.

சமத்துவமின்மையை நீக்குவதற்கு அரசினர் பல ஏற்பாடுகளைச் செய்யவேண்டும். மிகவும் அதிகமாகச் சொத்தைக் கொண்டிருப்பவர்கள்மீது வரியை விதித்து அவர்களுடைய சொத்தைக் குறைக்கலாம். இலவசப் பொதுப்பணிகள் மூலம் ஏழை மக்களுடைய உண்மை வருமானத்தைப் பெருக்கலாம். ஏழைகள் மிகவும் அதிகமாகச் செலவுசெய்து வாங்கும் பொருள்களை அவர்கள் இலவசமாகப் பெறலாம். தனியார் துறைகள் மிகவும் அதிகமான அதிகாரங்களைப் பெறுவதால் ஏற்படும் தீமைகளை, பொதுத் துறையைப் பெருக்குவதால் நீக்கலாம். தொழில்

களைத் தேசிய மயமாக்குவதன் (nationalisation) மூலம் பொதுத் துறையைப் பெருக்கலாம்.

**வளர்வீத வரிமுறை (Progressive taxation)**

சமத்துவமின்மையை நீக்குவதற்கு அரசாங்கம் வரிகளைப் பயன்படுத்தலாம். ராபின் ஹூட்டைப்போல் (Robin Hood) அரசாங்கம் செல்வந்தர்களுடைய பணத்தை வரிகள் மூலம் வசூல் செய்து ஏழைகளுக்குக் கொடுக்கலாம். சொத்து வரிகள் மூலம் மக்கள் பெறும் பூர்வீக சொத்துகளுடைய மதிப்பை குறைக்கலாம். வளர்வீத வரிகள்மூலம் செல்வந்தர்களுடைய வருமானத்தை ஒரெல்லைக்குட்படுத்தலாம். பொதுப்பணித் துறையை ஆரம்பித்து ஏழைகளுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்தலாம். ஆனால் தனியார் தொழில் துறையை எவ்விதத்திலும் பாதிக்காமல் மேற்கூறியவைகளை அரசாங்கம் செய்யலாம். தனியார் உற்பத்தி முறையையும் இந்த மாறுதல்களையும் ஒரேமுறையின் கீழ்க் கொண்டுவரும் நோக்கத்துடன் இங்கிலாந்து முயற்சிசெய்து வருகிறது.

இப்புதிய முறை புரட்சிகரமான வரிக்கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றது. 1900-ஆம் ஆண்டில் வளர்வீத வரிமுறை மக்கள் அதுவரை காணாத புதுமையைக் கொண்டிருந்தது. சமத்துவத்தை ஏற்படுத்துவதற்காக அதைக் கையாளுவது புரட்சிகரமாக இருந்தது. வளர்வீத வரிமுறை நேர்மையானது என்பதை மெய்ப்பிக்கப் பொருளியலார் பல காரணங்களைக் காட்டினர். 'மக்கள் தம் சக்திக்கேற்ற தொகையை அரசாங்கச் செலவுக்கு வரியாகக் கொடுக்கவேண்டும்' என்று ஆதாம் ஸ்மித் (Adam Smith) கூறினார். பொருளாதார வல்லுநர்கள் இக்கருத்தை அடிக்கடி எடுத்துக்காட்டி வளர்வீத வரிமுறையை ஆதரித்தனர். ஒருவன் வருமானம் உயரும்பொழுது அவனுடைய சக்தி விகிதாசாரத்திற்குமேல் மிகுதியடையும். வரி செலுத்துவோர் செய்யும் 'தியாகத்திலும்' (sacrifice) சமத்துவம் இருத்தல்வேண்டும் என்று கூறினர். செல்வந்தர்களும், ஏழைகளும் ஒரேவிதத் தியாகம் செய்யவேண்டுமானால் வருமான வரி எவ்வாறு விதிக்கப்படவேண்டும் என்பதைப் பற்றிப் பொருளியலார் ஆராய்ச்சி செய்தனர்.

'சக்திக்குத் தகுந்தவாறு வரியைச் செலுத்துவது' அல்லது 'சமமான தியாகத்தைச் செய்வது' (Ability to pay or equality of sacrifice) என்ற தத்துவங்களில் எதைப் பொருளியலார் ஆதரித்தபோதிலும் வளர்வீத வரிமுறை ஆதரிக்கப்படுகின்றது. ஆனால்

சிலருடைய சொத்துப் பெருகுவதைத் தடைசெய்யும் நோக்கத்துடனும், பொதுப்பணிக்கு நிதி திரட்டுவதற்கும் அவர்கள் வளர்வீத வரிமுறையை ஆதரிக்கவில்லை, பேதங்காட்டும் விற்பனைச் சர்வாதீனத்தைப்போல் (discriminating) வளர்வீத வரிமுறையும் கணிதக் கோணத்தில் பார்க்கும்பொழுது சரியானதாக இருக்கின்றது. ஆனால் அது நேர்மையானது என்று நாம் கூறமுடியாது. ஒரு குறிப்பிட்ட தொகையைக் குறிப்பிட்ட எண்ணிக்கை மக்களிடம் வசூல் செய்யவேண்டியபொழுது, ஒவ்வொருவரும் எவ்வளவு வரியைச் செலுத்தவேண்டும் என்பதை அரசாங்கம் நிர்ணயம் செய்யவேண்டும். வரி வசூலான பிறகு ஒவ்வொருவரும் எவ்வளவு தொகையைக் கொண்டிருக்கவேண்டும் என்பதை அரசாங்கம் முடிவு செய்யவேண்டும்.

இந்த வினவுக்கு நாம் விடையளிப்பதற்குமுன், 'சக்தி' (abitity) 'தேவை' (need) என்ற இரு விதிகளுள் எது மிகவும் முக்கியமானது என்பதை முடிவு செய்யவேண்டும். மக்கள் பொருள்களைப் பயன்படுத்துவோராகவும், உற்பத்தி செய்வோராகவும் இருக்கின்றனர். ஒரு செல்வப் பங்கீட்டுமுறை பொருளுற்பத்திக்கு மிகவும் அதிகமான ஊக்கமளிக்கலாம். ஆனால் அந்த முறை மக்களுடைய வருமானத்தில் ஏற்றத் தாழ்வுகளை ஏற்படுத்தலாம். ஆகையால் ஒவ்வொருவனும் தன் தேவைக்குத் தகுந்த ஊதியத்தைப் பெறமுடியாது. மக்கள் பெறும் வருமானம் அவர்களுடைய சக்திக்கும் தேவைக்கும் பொருத்தமாக இருக்க வேண்டுமென்று கூறினாலும், அல்லது தேவைக்குப் போதியதாக இருக்க வேண்டுமென்று கூறினாலும் வருமானத்தில் உள்ள ஏற்றத் தாழ்வுகள் மறையவேண்டும் என்பதை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். எல்லோரும் அவரவர் தேவைக்கு வேண்டிய ஊதியத்தைப் பெறுவதில்லை. அவர்கள் வருமானத்திற்கும் வேலைக்கும் விகிதத் தொடர்பு இல்லை. சிலருடைய பெற்றோர் வாழ்க்கையில் சிறந்த வாய்ப்புகளைப் பெற்று ஏராளமான செல்வத்தை ஈட்டினால் அவர்கள் வழியில் வந்த சந்ததியாரும் செல்வத்தை அடைகின்றனர். ஒருவன் சமுதாயத்திற்குச் சிறந்த தொண்டாற்றாமல் தீங்கிழைக்கலாம். ஆனால் அவனுடைய வருமானம் மிகவும் அதிகமாக இருக்கலாம். எனவே மக்கள் செய்யும் தொண்டுக்கும் அவர்களுடைய வருமானத்திற்கும் பொருத்தம் இருக்க வேண்டுமென்று நாம் கூறமுடியாது. ஆகையால் வளர்வீத வரிமுறை வருமானத்திற்கும் தேவைக்கும், மக்கள் செய்த தொண்டுக்கும் ஒரு பொருத்தத்தை ஏற்படுத்தலாம். மேலும் மொத்த வருமானமே (gross income) எச்ச வருமானத்தைவிட (net income) உற்பத்திக்கு ஊக்கம் அளிக்கும். அரசினர் ஒருவன்

வருமானத்தில் பெரும்பகுதியை வரிமூலம் கைப்பற்றிச் சிறிய பகுதியை அவனுக்குக் கொடுக்கலாம். ஆகையால் உற்பத்தி முறையைச் சேதப்படுத்தாமல் அரசாங்கம் புதிய வளர்வீத வரி முறையைப் பின்பற்றலாம்.

ஆனால் இக்கொள்கைக்கு ஓரெல்லை உண்டு. செல்வத்தைப் புதிய முறையில் பங்கீடு செய்ய அரசாங்கம் அளவுக்குமீறி வளர் வீத வரிமுறையைக் கையாளமுடியாது. அரசாங்கம் மிகவும் உயர்ந்த வரிகளை விதித்தால் மக்கள் அதிகமாக வேலைசெய்ய முன் வரமாட்டார்கள். இறுதிநிலை வருமானத்தைக்கொண்டே மக்கள் பெரும்பாலும் மிக உயர்ந்த வரி வீதத்தைச் செலுத்துவதால், உழைத்து அதிக வருமானத்தைப் பெறவேண்டும்; உபரிநேரம் உழைக்கவேண்டும் என்ற எண்ணங்களை வரிப்பளு கெடுத்துவிடும். பயிற்சிபெற்ற ஒரு தொழிலாளி பெறும் வருமானம் ஒரு பவுனாக இருக்கும்பொழுது அவன் அதில் 10 ஷில்லிங் வரியைச் செலுத்த வேண்டும் என்ற கட்டாயம் இருந்தால், உபரிவேலை (overtime work) மூலம் அவன் ஈட்டும் ஒரு பவுன் 10 ஷில்லிங்குக்கே சம மாகும். ஒரு குறைந்த பட்ச எச்ச வருமானத்தை அவன் ஈட்ட முடிவு செய்தால் அவன் கடுமையாக உழைத்தாக வேண்டும். ஏனெனில் வருமானத்தில் ஒரு பகுதியை வரியாகச் செலுத்த வேண்டும். ஆனால் சாதாரணமாக ஒரு தொழிலாளி 10 ஷில்லிங்கை விட ஓய்வையே விரும்புவான். வருமான வரி செலுத்தும் அளவு அவன் வருமானம் பெருகும்பொழுது அவன் ஓய்வை விட்டுக் கொடுக்க விரும்பமாட்டான்.

வரி உயருவதால் சேமிப்பும் பாதிக்கப்படும். சேமிப்பில் ஒரு கணிசமான பகுதியை வரியாகச் செலுத்தவேண்டும். ஆனால் செலவு இவ்வாறு மிதியான வரிகளுக்குட்படுவதில்லை. ஆனால் எதிர்காலத்தைக் கருதி ஒரு குறைந்தபட்சத் தொகையை ஒருவன் சேமிக்கவேண்டும் என்று கருதினால், அவன் தன் சேமிப்பைப் பெருக்குவான். ஆகையால் வரி உயரும்பொழுது சேமிப்புக் கட்டா யம் குறையவேண்டும் என்று நாம் கூறமுடியாது. ஆனால் சாதாரணமாக உயர்ந்த வரிவீதம் அமலில் இருக்கும்பொழுது சேமிப்புக் குறைவாகவே இருக்கும்.

தொழிலதிபர்களுடைய இலாபம் எவ்வாறு பாதிக்கப்படு கின்றது என்பதை இங்கு நாம் விளக்கவேண்டும். அவர்கள் புதிய உற்பத்திநிலையங்களை நிலைநாட்டுவதற்கு இலாபத்தைப் பயன்படுத் துகின்றனர். வரி சேமிப்பைப் பாதித்தால் பொருளாதார வளர்ச்சி பாதிக்கப்படும். சிறிய தொழில் கவர்ச்சிரமாக இருக்காது.

உயர்ந்த வருமானவரி சிறிய நிறுவனங்களைப் பாதிப்பதால் பெரிய நிறுவனங்கள் பாதுகாக்கப்படுகின்றன.

மேலும் வரிகள் அதிகரிக்கும்பொழுது, தொழிலதிபர்கள் ஆபத்துக்களைச் சமாளிக்க முன்வரமாட்டார்கள். இலாபம் பெறும் வாய்ப்பை வரிப்பளு குறைத்துவிடும். ஆனால் தொழிலதிபர்கள் பணத்தை இழந்தால், அரசினர் அவர்களுக்கு இழப்பு ஈடு கொடுப்பதில்லை. முன்பு 10 சதவீதம் இலாபம் பெறுவதற்கும் 2 சதவீதம் நஷ்டம் அடைவதற்கும் வாய்ப்பு இருந்தது என்று கற்பனை செய்து கொள்வோம். ஒரு பவுனில் 10 ஷில்லிங்கை வரியாகச் செலுத்த வேண்டியிருந்தால் இலாப வாய்ப்பு 5 சதவீதமாகவும், நஷ்ட வாய்ப்பு 2 சதவீதமாகவும் இருக்கும். இந்த நிலையில் தொழில் முன்பு இருந்ததைப் போல் கவர்ச்சிகரமாக இருக்காது. நீண்ட நாட்களாக உற்பத்தியில் ஈடுபட்டிருக்கும் நிறுவனங்கள் செய்யும் தொழில் ஆபத்துக்களைச் சமாளிக்கவேண்டாம். ஆனால் வரிப்பளு புதிய நிறுவனங்களுக்கு இடையூறுகளை ஏற்படுத்தும். ஆகையால் பழைய நிறுவனங்கள் புதிய நிறுவனங்களுடைய போட்டியைச் சமாளிக்க வேண்டா.

மேலே குறிப்பிட்ட விளைவுகளை வரி ஏற்படுத்தும். ஆனால் இந்த விளைவுகள் நெகிழ்ச்சியுடையனவாக இருப்பதால் இவைகளை நீக்க வேறு ஏற்பாடுகள் செய்யலாம். தனியார் சேமிப்புப் பாதிக்கப்பட்டால் அரசினர் பொதுச் சொத்தை முதலீட்டுக்குப் பயன்படுத்தலாம். புதிய நிறுவனங்களுடைய வளர்ச்சிக்கு இடையூறுகள் ஏற்பட்டால், அரசினர் தொழில் வளர்ச்சிக்குப் புதிய ஏற்பாடுகளைச் செய்யலாம். இங்கிலாந்தில் நிலவிய பழைய முறைப்படி மிக உயர்ந்த வருமானத்தைப் பெற்றவர்கள் செலுத்திய வரி அவர்கள் வருமானத்தில் 5 சதவீதத்திற்கு மேற்படவில்லை. மிகவும் குறைந்த வருமானத்தைப் பெற்றவர்களும் ஏறக்குறைய அதே சதவீத வரியைச் செலுத்தினர். ஆனால் இன்று நிலைமை மாறிவிட்டது. இன்று மிகவும் உயர்ந்த வருமானத்தில் 90 சதவீதத்திற்கு மேற்பட்ட தொகையைச் செலுத்துகின்றனர். மிகவும் குறைந்த வருமானத்தைப் பெறுவோர், செலுத்தும் வரியைவிட மிகுதியான தொகையை அரசினர் அளிக்கும் பொதுப் பணிகள் மூலம் பெறுகின்றனர். 50 ஆண்டுகளுக்கு முன் இங்கிலாந்தில் தனிமனிதன் ஈட்டக்கூடிய செல்வத்திற்கு எல்லையே இல்லை. ஆனால் இன்று ஒருவன் தன் சொத்தை என்றும் குறையாதபடி வைத்துக் கொள்ளமுடியாது. ஒருவன் தன் சந்ததியாருக்கு 100,000 பவுனுக்கு மேற்பட்ட மதிப்புள்ள சொத்தைக் கொடுக்க முடியாது. வரி நீங்கலாக £6000 மதிப்புள்ள வருமானத்தைப்

பெறுவோரின் எண்ணிக்கை ஆயிரத்துக்கும் குறைவாகவே இருக்கின்றது.

19ஆம் நூற்றுண்டில் ஓட்டுரிமை நடுத்தர வகுப்பினருடைய சிறப்பான உரிமையாக இருந்தது. 20ஆம் நூற்றுண்டில் எல்லோரும் இந்த உரிமையைப் பெற்றனர். எனவே மேலே குறிப்பிட்ட மாறுதல்கள் ஏற்பட்டன. இந்த நூற்றுண்டில் நடந்த மூன்று பெரிய போர்களும் மேலே குறிப்பிட்ட மாறுதலுக்குக் காரணமாக இருந்தன. இந்த மாறுதல்களைச் சோஷலிசக் கட்சியினர் புகுத்தவில்லை; கன்சர்வேடிவ் கட்சியினரே (Conservative Party) புகுத்தினர். கூட்டரசும் (Coalition government) இந்த மாறுதல்களைப் புகுத்தியது. கன்சர்வேடிவ் கட்சியினர், தொழிலாளிகளுடைய ஆதரவைப் பெறும்நோக்கத்துடன் இந்த மாறுதல்களைப் புகுத்தினர்.

**சமுதாயப் பணிகள்** (Social Services)

சிலருடைய வருமானம் பெருகுவதை மட்டும் தடைசெய்யாமல், வறுமையை ஒழிப்பதையும் அரசினர் தம் கடமையாகக் கருதுகின்றனர். சமுதாயப் பணிகள் மூலம் அரசினர் இந்தப் பணியைச் செய்கின்றனர். இலவசக் கல்வி, சுகாதார வசதிகள், முதியோருக்கும் கணவனை இழந்தவர்களுக்கும் ஓய்வூதியம், சமூக இன்சூரன்சுத் திட்டம், மற்றத் தேவைகளுக்குத் தகுந்த உதவி முதலியவை மூலம் அரசாங்கம் வறுமையை ஒழிக்க முயற்சி செய்கின்றது.

இந்த நூற்றுண்டின் தொடக்கத்திலிருந்து சமுதாயப்பணிகளுக்காக அரசினர் செய்யும் செலவு மிகுதியடைந்து வருகின்றது. 1900-ல் ஒரு நபருக்கு ஒரு பவுனையே அரசாங்கம் செலவு செய்தது. 1930-ல் ஒரு நபருக்காக அரசாங்கம் செய்யும் செலவு 10 பவுனுகவும் 1960-ல் 60 பவுனுகவும் உயர்ந்தது. சென்ற 60 ஆண்டுகளின் விலைகளும் மக்களுடைய உண்மை வருமானமும் (Real income) உயர்ந்தபோதிலும், அண்மைக் காலத்தில் கணிசமான முன்னேற்றமே ஏற்பட்டிருக்கின்றது. 1900-ல் சமுதாயப் பணிக்காக அரசு மொத்த வருமானத்தில் $\frac{1}{5}$ பகுதியைச் செலவு செய்தது; மொத்த வருமானத்தில் $\frac{1}{6}$ பகுதியை அரசியலார் செலவு செய்தனர்.

இச்செலவுகள் அனைத்தையும் வரி செலுத்துவோரே ஏற்றுக்கொள்வதில்லை. திட்டங்கள் மூலம் பயனடைவோரும் கட்டணங்களைச் செலுத்துகின்றனர். மக்கள் செலுத்தும் தேசீய இன்சூரன்சுக்

## பட்டியல்-26.

சமுதாயப் பணிக்காக இங்கிலாந்தில் அரசினர் செய்த செலவு.

(மிலியன் பவுனில்)

| | 1900 | 1946 | 1958 |
|---|---|---|---|
| கல்வியும் சேய்நலமும் | 20 | 203 | 700 |
| சுகாதார வசதிகள் | 2 | 92 | 703 |
| ஓய்வூதியங்கள் (போர்க்காலத்திவை உள்பட) | — | 232 | 773 |
| தேசீய இன்சூரன்சுத்திட்டம் (நிருவாகச் செலவு உட்பட) | — | 73 | 281 |
| குடும்பப் படிகள் (Family Allowances) | — | 20 | 130 |
| சத்துள்ள உணவுப் பொருள்களுக்காகக் கொடுக்கப்படும் படி | — | 44 | 84 |
| மற்றத் தேசீய உதவித் திட்டங்கள் (முதியோர்கள், செயலற்றவர்கள் முதலியவர்கள் பெறும் உதவிகள் உள்பட) | 12 | 94 | 149 |
| வீடு கட்டிக்கொள்ள கொடுக்கும் உதவிப் பணம் | 1 | 36 | 89 |
| | 35 | 794 | 2909 |
| உணவு, விவசாய உற்பத்திக்குக் கொடுத்த உதவிப் பணம் | — | 286 | 272 |

கட்டணங்களைக் கொண்டே நோய்வாய்ப்பட்டவர்களுக்கும், வேலையில்லாதவர்களுக்கும் அரசினர் உதவிப்பணம் அளிக்கின்றனர். அட்டவணையில் காணும் தொகைகள், முழுவதும் மக்களுக்குப் பயனாகவில்லை. அவர்கள் செலுத்திய கட்டணங்கள் நீங்கலாக மீதியே அவர்களுக்காகச் செலவு செய்யப்பட்ட தொகையாகும். சமுதாயப் பணிகள் தொழிலாளர்களுடைய வருமானத்தைப் பெருக்கும். ஆனால் சமுதாயப்பணிகள் அவர்களுடைய வருமானத்தை எந்த அளவு பெருக்கும் என்பதை நாம் திட்டவட்டமாகக் கூறமுடியாது. அவர்கள் பெறும் உபரி வருமானத்தை வரி செலுத்துவோரே அவர்களுக்குக் கொடுக்கின்றனர்.

குடும்பப்படித் திட்டம் (Family Allowance), ஓய்வூதியத் திட்டம், இன்சூரன்சுத்திட்டம் முதலியவைகளும் அவைகளுடைய நிபந்தனைகளும் எளியனவாக இருந்தால் அவைகளைச் சிறந்த முறையில் நிருவாகம் செய்யலாம். சமூகப்பணிகளும் எளிதாக இருந்தால் இதே நிலையில் இருக்கின்றன. மருத்துவர்களுக்கும் நோயாளிகளுக்கும் தனிப்பட்ட இருவர்களுக்கிடையே இருக்கும் உறவு இருக்கின்றது. அரசுக்கும் மருத்துவர்களுக்கும் இடையே தொழில் தொடர்பு (businss relations) இருக்கின்றது. ஒரு மருத்துவச்சாலைக்கும் (hospital) மற்றொன்றுக்கும் இடையே நிருவாகத் தொடர்பு இருக்கின்றது. ஆகையால் தேசீயச் சுகாதாரப்பணி (National Health Service) சிக்கலாக இருக்கின்றது; அதை எளிய முறையில் நிருவாகம் செய்யமுடியாது. சமூகப்பணிகள் சிக்கலாக இருந்தால் அவைகளையும் நிருவாகம் செய்வது கடினம்.

பல்வேறு மக்கள் அவரவர் தேவைக்கேற்ற முறையில் தொண்டாற்றவேண்டும் என்ற உண்மையை அடிப்படையாகக் கொண்டிருப்பதே சமூகப்பணித் திட்டத்தின் சிறந்த அம்சமாகும். இத் திட்டத்தின்கீழ் மக்கள் பெறும் சலுகைகளை அவர்கள் உரிமையாகவே கருதலாம். அவைகளை நன்கொடை என்றோ அல்லது தருமம் என்றோ கருதவேண்டாம். திட்டத்தின் விதிப் படித் தகுதியுடையவர்கள் எல்லோரும் சலுகைகளைப் பெறலாம். மக்களுடைய முக்கியமான தேவைகள் பூர்த்தியாகின்றன. மக்களுடைய மொத்த வருமானத்திற்கும் (gross income) அவர் களுடைய உற்பத்திக்கும் பொருத்தம் இல்லை.

**செல்வத்தைச் செயற்கை முறையில் அரசினர் பங்கீடு செய்வதற்கு ஓர் எல்லை உண்டு.**

செல்வப் பங்கீட்டில் அரசினர் குறிப்பிடத்தக்க மாறுதல்களைப் புகுத்திவிட்டனர். 1938 முதல் 48 வரை வருமான வரியும், விலைகளில் ஏற்பட்ட மாறுதல்களும் செல்வர்களுடைய வருமானத்தில் ஒரு பகுதியை மற்றவர்களுக்குத் திருப்பிவிட்டது. சீயர்ஸ் (Seers) என்பவர் 1948ஆம் ஆண்டின் விலைகளை அடிப்படையாகக் கொண்டு இத்திருப்பத்தை அளந்தார். சமூகத்தின் உச்சியிலுள்ள $\frac{1}{7}$ பகுதியினர் 1000 மிலியன் பவுன்களை இழந்தனர். அவர்கள் உண்மை வருமானத்தில் 30 சதவீதத்தை இழந்தனர். மற்ற $\frac{6}{7}$ பகுதியினர் இத் தொகையைப் பெற்றனர். அவர்களுடைய வருமானம் 25 சதவீதம் உயர்ந்தது[1]. இதே காலத்தில் சமுதாயப்

[1] டட்லி சீயர்ஸ் (Dudley Seers 'The levelling of Incomes', Bulletin of the Oxford Institute of Statistics, October, 1950. ) உணவுப்படி (Food subsidy), வாடகைக் கட்டுப்பாடு முதலியவைகளைக் கொண்டு வாழ்க்கைச் செலவு மதிப்பிடப்பட்டிருக்கிறது.

பணிகளும் மிகுதியடைந்தன. ஆகையால் ஏழைகளுடைய நிலைமையில் கணிசமான முன்னேற்றம் ஏற்பட்டது. சொத்து வரியின் விளைவுகள் அடுத்தடுத்து ஏற்பட்டுக்கொண்டே இருக்கும். அதன் முழுவிளைவுகளையும் நாம் எதிர்காலத்திலேயே காண வேண்டும்.

இத்தகைய மாறுதல்கள் ஏற்படவேண்டுமானால் மக்கள் வரிகளைச் செலுத்துவதற்கு மறுக்கக்கூடாது. சிலநாடுகளில் மக்கள் வரிகளைச் செலுத்தாமல் தப்பிவிடுகின்றனர். அவ்வாறு செய்தால் இங்குக் குறிப்பிட்ட மாறுதல்கள் ஏற்படா. ஆனால் இங்கிலாந்தில் வரி செலுத்துவோர் நேர்மையுடன் நடந்துகொள்கின்றனர். வரிகள் சிக்கலாகவும், எளிதில் புரிந்துகொள்ள முடியாதவையாகவும் இருக்கக்கூடாது. வருமானவரி எளியதாக இல்லை. வரிகள், உற்பத்தி முறையையும் உற்பத்தியாளர்களுடைய ஊக்கத்தையும் பாதித்தல்கூடாது. ஏனெனில் தொழில் வளர்ச்சியே இங்கிலாந்தின் எதிர்கால முன்னேற்றத்திற்கு மிகவும் முக்கியமானது. சமத்துவத்தை ஏற்படுத்தவேண்டும் என்ற ஆர்வத்துடன் வரி முறையின் அடிப்படைப் பகுதியை மிகவும் குறுகலாகவும், மற்றப் பகுதிகளை அளவுக்குமீறிப் பெரியதாகவும் அமைக்கக் கூடாது. குறைந்த வருமானத்தைப் பெறுவோர் செய்யும் தியாகத்தைவிட மிகவும் அதிகமான தியாகத்தை உயர்ந்த வருமானம் பெறுவோர் செய்யவேண்டும் என்று எதிர்பார்க்கக் கூடாது. ஓர் அளவுக்கு மேல் வளர்வீத வரியை விதிக்கக் கூடாது.

பொருளாதாரச் சமத்துவத்தை நாம் எந்த அளவு ஏற்படுத்திய போதிலும் ஒரு நாட்டில் தேசீய வருமானம் பெருகினாலன்றி மக்களுடைய சராசரி வாழ்க்கைத் தரம் உயராது. சிலர் பெறும் வாரம், வட்டி, இலாப ஈவு முதலியவைகளைக் குறைத்துப் புதிய பங்கீட்டின் மூலம் தொழிலாளர்களுடைய வருமானத்தை அரசினர் பெருக்கலாம். ஆனால் தேசீய வருமானம் ஒரு சதவீதம் பெருகுவதால் அவர்கள் மிகுதியான பயனை அடைவர். ஏனெனில் இலாப ஈவு, வட்டி முதலியவை தேசீய வருமானத்தில் 11 சதவீதமாகவே இருக்கின்றன என்பதை 25ஆம் அதிகாரத்தில் நாம் பார்த்தோம்.

## தொழிலைக் கட்டுப்படுத்துதல்

அவ்வப்போது ஏற்படும் அவசியமும், அரசினர் கொள்கையும், தொழிலை அரசாங்கம் கட்டுப்பாடு செய்வதற்குக் காரணங்களாக இருக்கின்றன. தொழிலைத் தேசீயமயமாக்குவது பற்றிப்

பொருளாதார வல்லுநர்களிடையே கருத்து வேற்றுமைகள் இருக்கின்றன.

### தேசிய மயமாக்குதல் (Nationalisation)

இடதுசாரிக்கொள்கையை ஒட்டியோ, அல்லது குறிப்பிட்ட காரணங்களுக்காகவோ நாம் தொழிலைத் தேசியமயமாக்குவதை ஆதரிக்கலாம். அண்மைக் காலம் வரை பலர் இடது சாரிக் கொள்கையை ஆதரிப்பதற்காகவே அதை விரும்பினர். தனிப்பட்டவர்கள் தொழிலை வெற்றிகரமாக நிருவாகம் செய்யாவிடினும், தனியார் துறையில் தொழில் இருப்பதால் சமூகத்தில் சிலர் பாதிக்கப்பட்டாலும், அதை அரசினர் தேசிய மயமாக்கவேண்டும். அதாவது எல்லாத் தொழில்களையும் இக்காரணத்திற்காகத் தேசிய மயமாக்கவேண்டும்.

ஒரு தொழிலை அரசாங்கம் தேசிய மயமாக்கவேண்டும்; அவ்வாறு செய்யாவிடில் அத்தொழில் எவ்விதக் கட்டுப்பாடுகளுக்கும் உட்படாது என்ற கருத்தையே மேலே நாம் விளக்கினோம். தனியார் துறையில் இருப்பதால் தொழில்களில் ஏற்படும் குறைகளை மட்டும் சிலர் எடுத்துக்காட்டுகின்றனர். பொதுத் துறையில் இக்குறைகள் எவ்வாறு நீக்கப்படும் என்பதை அவர்கள் கூறுவதில்லை. முதலாளித்துவத்தின் குறைகளை நீக்குவதற்கு வேறு வழிகள் இல்லை என்பது அவர்களுடைய கருத்தாகும். சர்வாதீனங்களை ஒழிப்பதற்கும், பொருளாதார ஏற்றத்தாழ்வுகளை அகற்றுவதற்கும், வேலை நிறைவை ஏற்படுத்துவதற்கும், முதலாளித்துவ முறையை மாற்றி ஒரு புதிய முறையை நிறுவவேண்டுமென்பது அவர்கள் கருத்தாகும். மிகுதியான செல்வத்தைக் கொண்டிருப்பவர்களுடைய செல்வத்தை அரசாங்கம் கைப்பற்றவேண்டும் என்ற எண்ணத்துடன் சிலர் புதிய முறையை ஆதரிக்கின்றனர் தொழிலாளர்களே அவரவர் தொழிலை நிருவாகம் செய்யவேண்டும் என்ற எண்ணத்துடன், அதாவது சிண்டிகலிசம் (Syndicalism) என்ற முறையை நிறுவவேண்டும் என்ற நோக்கத்துடன் சிலர் புதிய முறையை ஆதரிக்கின்றனர். பொருளாதாரத்தை அரசாங்கம் சிறந்த முறையில் அமைக்கவேண்டும், அதற்குவேண்டிய அதிகாரத்தைத் தனி உற்பத்தியாளர்களிடம் அரசாங்கம் பெறவேண்டும் என்றும் சிலர் கருதுகின்றனர். சிலருக்கு இலாபம் ஈட்டுவதற்காகத் தொழிலாளர் தொண்டாற்றுவதைவிட அரசாங்க வேலையில் ஈடுபட்டிருப்பதே சாலச் சிறந்ததாகும்.

பல ஆண்டுகளுக்கு முன் இக் கருத்துகளைப் பலர் ஆதரித்தனர். இப்பொழுது நிலைமை மாறிவிட்டது. ஆனால் இன்னும் சிலர்

இக் கருத்துகளைக் கொண்டிருக்கின்றனர். ஒரு தொழிலைத் தேசீய மயமாக்கும்பொழுது தொழிலதிபர்களுக்கு இழப்பீடு கொடுக்க வேண்டும். இழப்பீட்டைக் கொடுக்கவேண்டியிருந்தாலும் தனியார் துறையில் இருக்கும் தொழிலைப் பொதுத் துறைக்கு மாற்றுவதே சிறந்ததாகும் என்று சமத்துவத்தை விரும்புவோர் கருதுகின்றனர். தொழில்களைத் தேசீய மயமாக்குதல் (நஷ்டஈடு கொடுக்கும்பொழுது) சமத்துவத்தை ஏற்படுத்துவதில்லை என்பதைப் பலர் மறந்துவிடுகின்றனர். தொழில்கள் அரசினர் கட்டுப்பாடுகளுக் குட்பட்டிருக்கும்பொழுது அரசியல் வாதிகள் அவைமீது அதிகாரம் செலுத்துகின்றனர். தொழில்களைத் தேசீய மயமாக்குதல் அவர்கள் செலுத்தும் அதிகாரத்தை மேலும் பெருக்கும் என்று அவர்கள் தவறுகக் கருதுகின்றனர். தொழிலாளர்களும் தொழில்கள் பொதுத்துறையில் இருப்பதால் மேலும் நன்மைகள் அடையலாம் என்று கருதுகின்றனர்[1]. ஆனல் தற்காலத்தில் ஏற்பட்டுள்ள நிகழ்ச்சிகள் இக் கருத்துகளிலிருந்து வேறுபட்டிருக்கின்றன. அரசினர் தம் விருப்பம்போல் தொழிலை எந்தவிதத்திலும் கட்டுப்படுத்தலாம். இதற்கு வேண்டிய அதிகாரங்களை அரசாங்கம் கொண்டிருக்கின்றது. வேண்டுமென்ருல் அதிகாரத்தைப் பெருக்கிக்கொள்ளலாம். எல்லாத் தொழில்களையும் தேசீய மயமாக்க வேண்டியதில்லை.

தொழில்களைத் தேசீயமாக்குதல் சிறந்த கொள்கையாகும் என்ற கருத்தை நாம் புறக்கணித்தபின் ஒரு சில தொழில்களை மட்டுமே அரசாங்கம் நிருவாகம் செய்யலாம் என்ற கருத்தை ஏற்றுக் கொள்கின்ருேம். ஆனல் எத்தொழில்களையும் அரசியலார் நிருவாகத்திற்குட்படுத்த வேண்டும் அல்லது அரசாங்கம் ஒரு தொழிலை எந்த அளவு கட்டுப்படுத்தலாம், தொழிலைக் கண்காணிப்பதில் எந்த முறையைப் பின்பற்றவேண்டும் என்ற பிரச்சினைகளுக்கு முடிவுகாணவேண்டும். சில குறிப்பிட்ட தொழில்களைத் தேசீயமயமாக்குவதற்குப் பல முக்கியமான காரணங்கள் இருக்கின்றன. உதாரணமாக இங்கிலாந்தில் நிலக்கரிச் சுரங்கத் தொழிலைச் சிறந்த முறையில் அமைப்பதற்கு, ஏராளமான மூலதனம் வேண்டி யிருந்தது. தனியார்துறை வேண்டிய அளவு மூலதனத்தைப் பயன்படுத்த முடியவில்லை. மேலும் சுரங்கத் தொழில் தனியார்துறையில் இருந்ததால் முதலாளிகளுக்கும் தொழிலாளர்களுக்கும் இடையே நல்லுறவு நிலவவில்லை. ஆகை

1. டர்ஹாமில் (Durham) உள்ள ஒரு சுரங்கத் தொழிலாளி அரசினர் தொழிலைக் கட்டுப்படுத்துவதைத் தான் விரும்பவில்லை என்றும் தொழில்களைத் தேசீய மயமாக்குதையே விரும்பினுன் என்றும் கூறினுன். ஸ்காட்லாந்தில் ஒரு சுரங்கத் தொழிலாளி, 'சுரங்கங்கள் உங்களுடையனவல்ல, எங்களுடையனவே' என்று (முதலாளிகளிடம்) கூறினுன்.

யால் சுரங்கத் தொழிலைப் பொது நிருவாகத்தின்கீழ் கொண்டு வர வேண்டும் என்று நாம் கூறலாம். அவசர காலங்களிலும், போர்க் காலத்திலும் அரசினர் ரெயில்வே தொழிலைத் தாமும் நிருவாகம் செய்ய முன் வரலாம். ரெயில்வே கம்பெனிகளின் தளவாடப் பொருள்களும் மூலதனப் பொருள்களும் பாதுகாக்கப்பட வேண்டும். மந்தகாலத்தில் தனிமுதலாளிகள் முதலீடு செய்ய முன்வரமாட்டார்கள். அரசாங்கம் மந்த காலத்தில் பெருக்க வேண்டும். ஆகையால் சில தொழில்களை அரசாங்கமே நடத்தவேண்டும். தொழிலாளர்களுக்கும் முதலாளிகளுக்கும் இடையே நல்லுறவு இல்லாத சில தொழில்களையும் தேசியமயமாக்கலாம். மக்களுக்கு நேர்மையான முறையில் பணியாற்றும் நோக்கத்துடனும், சர்வாதீன அதிகாரங்களை ஒழிப்பதற்காகவும் சில தொழில்களை அரசாங்கம் தேசிய மயமாக்கலாம். பலவகைப்பட்ட சர்வாதீனங்கள் இருக்கின்றன. சர்வாதீன அதிகாரங்கள் தவறான வழியில் பயன் படுத்தப்படும்பொழுது அரசாங்கம் அதைத் தடைசெய்ய வேண்டும்.

**சர்வாதீனங்களைக் கட்டுப்பாடு செய்தல்.**

சர்வாதீனங்களுடைய நல்ல அம்சங்களைப் பலர் எடுத்துக் காட்டுகின்றனர். பூரணமான போட்டி நிலவாவிடில் வீண் செலவு ஏற்படும். ஒரே பொருளைச் சிக்கனமான முறையில் ஒரு நிறுவனம் செய்யலாம். ஆனால் பல நிறுவனங்கள் அதை உற்பத்தி செய்கின்றன. பல முத்திரைகளைக் கொண்ட ஆனால் ஒரே வகையான பொருள்களை நிறுவனங்கள் உற்பத்தி செய்கின்றன. திறமையற்ற நிறுவனங்களும் உற்பத்தி செய்கின்றன. ஆனால் ஒரு பெரிய சர்வாதீன நிறுவனம் அடக்கச் செலவைச் சிக்கனப் படுத்தினாலும், பொருள்களின் விலைகளைக் குறைக்கத் தவறலாம். மேலும் மார்க்கெட்டைப் பல பகுதிகளாகப் பிரித்து விலைகளை நிர்ணயம் செய்வதில் அவைகளிடையே பேதம் காட்டலாம். ஆகையால் அரசாங்கம் சர்வாதீனங்களை இரு நோக்கங்களுடன் கட்டுப்பாடு செய்யலாம். ஒரு தொழிலைச் சிறந்த முறையில் நடத்துவதற்காகவும், சர்வாதீனங்கள் அடையும் இலாபத்தை எல்லோருக்கும் பகிர்ந்து கொடுக்கும் நோக்கத்துடனும் அரசினர் தொழில்களைத் தேசீயமயமாக்கலாம். செம்மையற்ற போட்டியினால் ஏற்படும் வீண் செலவுகளை நீக்குவதற்குத் தொழில்களைச் செப்பனிட்டுச் சீராக அமைக்கவேண்டும். மிகவும் திறமையுள்ள தொழில்களே பொருள்களை ஏராளமான அளவில் உற்பத்தி செய்ய வேண்டும். பொதுநலப் பண்பையே முக்கியமான நோக்கமாகக் கொண்டு இந்த வேலைகளைச் செய்ய வேண்டும். இலாப நோக்கத்துடன் இவைகளைச் செய்யக் கூடாது.

பொதுத்துறையில் இருக்கும் நிறுவனங்களுடைய திறமை முன்னேற வேண்டுமானால் அவை பெருவாரி உற்பத்தி முறை மூலம் அடக்கச் செலவைக் குறைக்கவேண்டும். மக்களுடைய தேவைக்குத் தகுந்தாற்போல் நிறுவனத்தின் அளவைப் பெருக்கலாம். இந்த அளவு சிறந்த நிருவாக முறைக்கும் இடம் கொடுத்தால் நிறுவனத்தின் திறமை மிகுதியடையும். சில தொழில்களை மிகச்சிறந்த முறையில் நிருவாகம் செய்யவேண்டும். சில தொழில்களை ஸ்தலஸ்தாபனங்களோ அல்லது மத்திய அரசாங்கமோ நடத்த முடியாதபடி இருக்கலாம். அவைகளுடைய அளவே இதற்குக் காரணமாக இருக்கலாம். இத்தகைய தொழில்களை அரசினரே நிருவாகம் செய்யவேண்டும். சர்வாதீனங்கள் மிகுதியான இலாபத்தை ஈட்டுவதற்காக விலைகளை மிகவும் உயர்த்தினால், அவை மக்களுடைய வெறுப்புக்கு இலக்காகலாம். இந்த நிலைமையில் அவை விலைகளைக் குறைக்கலாம். உற்பத்தி முறையில் ஏற்பட்ட முன்னேற்றம் விலைகள் குறைவதற்குக் காரணமாகாது. முதலாளிகள் தம் இலாபத்தை ஓரளவு குறைத்துக் கொண்டு விலைகளைக் குறைக்கின்றனர். ஆகையால் உண்மையான முன்னேற்றம் ஏற்படுவதில்லை. பெருவாரி உற்பத்திமுறையின் நலன்களைப் பெறும் நோக்கத்துடன் சர்வாதீனங்களை அனுமதிக்கலாம். ஆனால் பொருள்களின் விலைகளுக்கு ஓர் உச்சவரம்பை நிர்ணயம் செய்யலாம்.[1]

சர்வாதீன நிறுவனத்தை அரசாங்கம் அல்லது நகராட்சி (Municipality) நிருவாகம் செய்யும்பொழுது அதிக இலாபம் கிடைக்காது. ஏனெனில் அரசாங்கம் தன் கொள்கையை அடிக்கடி மக்களுக்கு விளக்கவேண்டும். ஆனால் தொழில் வெற்றிகரமாக நடைபெற வேண்டுமானால் தொழிலதிபர்கள் அவ்வப்போது சில பிரச்சினைகளை முடிவுசெய்யவேண்டும். அரசினர் இலாகாக்களை நிருவாகம் செய்வது போல் தொழில்களை நிருவாகம் செய்ய முடியாது. தொழிலதிபர்கள் அனுபவ வாயிலாகப் பெற்ற அறிவைக் கொண்டே தம் தொழிலை நடத்துகின்றனர். நாவன்மை படைத்தவர்கள் எடுத்துக்காட்டுவதை அரசாங்கம் எளிதில் நம்பும். ஆனால் செயல்துறையில் திறமை படைத்தவர்கள் கூறும் உண்மையை அரசினர் எளிதில் ஏற்றுக் கொள்வதில்லை. ஒரு தொழில் அரசினர் வசம் இருந்தால் தொழிலை நிருவாகம் செய்வோர் சிறந்த முடிவுகளை எடுக்க முடியாது[1] அரசாங்க அதிகாரிகள் பின்பற்றும் கொள்

1. இதுபற்றிய எல்லாவிவரங்களையும் ஏ. சி. பிகு (A.C. Pigou) எழுதிய Economics of welfare [(4th edition) pp.336] என்ற நூலில் காணலாம்.

1. ஹாட்ரி (Hawtrey) எழுதிய The Economic problem (p. 3391) என்ற நூலைப்பார்க்கவும். 'கருத்தை சிறந்த நடையில் வெளியிட்டால், வெற்றிகரமான

லைக்குத் தகுந்த காரணங்களைக் கொடுக்க வேண்டும். ஆகை யால் அவர்கள் அவ்வப்போது எந்த முடிவையும் துணிந்து எடுக்க முடியாது. துணிந்து செய்யும் முயற்சி தற்செயலாகத் தோல்வி யடைந்தால் ஆளும் கட்சியை எதிர்க்கட்சி பலமாகத் தாக்கும்.

ஜனநாயகம் மறைந்து விட்டாலோ அல்லது போர்க் காலத்தில், போரை வெல்லும் ஒரே நோக்கத்துடன் அரசினர் பல காரியங்களைச் செய்ய அதிகாரம் பெற்றாலோ மேலே குறிப்பிட்ட இடையூறுகள் ஏற்படா. போர்க்காலத்திலும், சர்வாதிகார நாடுகளில் அரசாங்கம் செய்யும் சாதனைகளை நாம் அமைதி நிலவும் காலத்தில் ஜனநாயகநாடுகள் செய்யும் செயல்களுடன் ஒப்பிடக்கூடாது. ஏனெனில் போர்க்காலத்திலும் ஜனநாயக நாடுகளிலும் மக்கள் தியாகம் செய்யத் தயாராக இருக்கின்றனர். ஆனால் அமைதி நிலவும் காலத்தில் அவர்கள் தியாகம் செய்யத் தயாராக இல்லை. சில வகுப்பினரை, சர்வாதிகாரி சமூக விரோ திகள் என்று கூறி நாடு கடத்தலாம். உள் நாட்டில் அமைதியை ஏற்படுத்தலாம். தொழிலாளர்களைச் சில வேலைகளில் கட்டாயமாக அமர்த்தலாம். அரசினர் தோல்வியை மாபெரும் வெற்றி என்று பறை சாற்றலாம். ஆகையால் அரசினர் தொழில்களை நிருவாகம் செய்யலாம் என்பதற்குப் பிறநாடுகளுடைய அனுபவத்தையும் போர்க்காலத்து அனுபவத்தையும் சான்றுகளாகக் காட்டுவது சரியல்ல.

பொதுநலத்துறைத் தொழில்களையும் (Public Utitty) சர்வா தீன முறையில் நிருவாகம் செய்யப்பட வேண்டிய தொழில்களையும் தவிர மற்றவைகளை அரசாங்கம் நிருவாகம் செய்யக்கூடாது என்று நாம் கருதினால், அவைகளை அரசினர் கட்டுப்பாடுகளுக்குட் படுத்தலாம். பல்வேறு முறைகளில் அரசாங்கம் சர்வாதீன அதி காரங்களைக் கட்டுப்பாடு செய்யலாம். உற்பத்தியைக் குறைப்ப பதற்காகத் தொழில் நிறுவனங்கள் செய்து கொள்ளும் உடன் படிக்கையைச் சட்ட விரோதமானதாகச் செய்யலாம். இவ்வாறு செய்ய அரசினர் சமுதாயத்திற்கு விரோதமான செயல்கள் யாவை என்பதை விளக்க வேண்டும். சர்வாதீன முறைகளை விசாரணை செய்து, தன்முடிவுகளைச் செயலாற்றுவதற்கு வேண்டிய அதி காரங்களை அரசு பெறவேண்டும். 'சர்வாகதிகாரக் குழு' (Monopolies commission) போன்ற ஒரு சபை அல்லது குழுவை நிறுவி சர்வாதிகார நிறுவனங்கள் எவ்வாறு தம் அதிகாரத்தைத்

முடிவு ஏற்படும்; ஆனால் அந்த முடிவுக்குப் பொருத்தமான காரணங்களை வெளி யிடுவது எளிதல்ல. மனோநிலைக்குப் பொருத்தமான படியும், சிறந்த நடையிலும் அதை எழுதுவது கடினம்........எந்த முடிவுகளை எளிதில் வெளியிட முடியுமோ அவைகளைமட்டும் அரசாங்க அதிகாரிகள் எடுப்பார்கள்' (Quoted by Pigou p.388.)

தீய வழிகளில் செலுத்துகின்றன என்பதை காட்டுவது மட்டும் போதாது.

வேறுவழிகளிலும் சர்வாதீனங்களைக் கட்டுப்பாடு செய்யலாம். ஒரு நிறுவனத்தின் பங்குகளை அரசாங்கம் வாங்கலாம். இலாபத்தை அந்த நிறுவனத்துடன் பகிர்ந்து கொள்ளும் நோக்கத்துடன் அரசாங்கம் பங்குகளை வாங்காது. நிருவாக சபையில் சில அங்கத்தினர்களை அரசு அமர்த்தலாம். சர்வாதீன நிறுவனங்களுக்குப் போட்டியாக அரசாங்கம் சில நிறுவனங்களை ஆரம்பிக்கலாம்.

சர்வாதீனங்களைக் கட்டுப்பாடு செய்வதற்காகச் செய்யும் முயற்சியில் ஓர் ஆபத்து இருக்கின்றது. போட்டியை எத்துறைகளில் ஆதரிக்க முடியுமோ அத்துறைகளில் அதை ஆதரிப்பதே நலம். மேலும் போட்டி உற்பத்தியைப் பெருக்க வேண்டும்; தொழில் முன்னேற்றத்துக்கு உதவி புரியவேண்டும். தொழில் முன்னேற்றத்தை ஏற்படுத்தாவிடில் போட்டி எவ்விதப்பயனையும் அளிக்காது. ஆனால் விவசாயத் துறையில் மற்றத்துறைகளைப் போல் உற்பத்திமுறை முன்னேறுவதற்குப் போட்டி ஊக்க மளிக்கவில்லை. பொதுப்பணிகள் (Extension Services) ஆராய்ச்சிகளுடைய பயனை விவசாயிகளுக்கு எடுத்துக் காட்டுகின்றன. போட்டி இப்பணியைச் செய்யாது. இத்தகைய முன்னேற்றங்களை ஏற்படுத்துவதற்குப் போட்டி உகந்ததல்ல. தொழில் முன்னேற்றத்துக்குப் போட்டி எப்பொழுதுமே சிறந்த வாய்ப்புகளைக் கொடுக்கும் என்று நம்புவதற்கிடமில்லை. ஆனால் பொதுவாகச் சர்வாதீன முறையைவிடப் போட்டி முன்னேற்றத்துக்குத் தூண்டுதலைக் கொடுக்கும் என்பதில் ஐயமில்லை. சர்வாதீனத்தை நாம் எதிர்ப்பதற்கு இதுவே அடிப்படைக் காரணமாக இருக்க வேண்டும்.

## வேலை வாய்ப்புப்பற்றிய கொள்கை (Employment policy)

செயற்படுத்தும் தேவை குறைவதால் நாடெங்கும் வேலையின்மை (Unemployment) ஏற்படும். ஆனால் இன்று செயற்படுத்தும் தேவையை நாம் மிகவும் எளிதில் அதிகரிக்கலாம். அதாவது அரசாங்கச் செலவை அதிகப்படுத்தினால் மக்களுடைய வருமானமும் தேவையும் பெருகும். பாங்குச் செலாவணியையும் பெருக்கலாம். அரசினர் ஊதாரித்தனமாகச் செலவு செய்வதையும், சில வாக்காளர்களுடைய (Voters) ஆதரவைப் பெறுவதற்காகவும் அளவுக்கு மீறிச் செலவு செய்வதைக் கடந்த தலை

முறைகளில் மக்கள் எதிர்த்தனர். ஆனால் தேவையை அதிகரிக்க இதே முறையை அரசியலார் கையாளவேண்டும் என்ற உண்மை ஐயத்தையும் வியப்பையும் ஏற்படுத்துகின்றது. வேலை நிறைவினால் (Full employment) ஏற்படும் நலன்கள் பணவீக்கத்தினால் ஏற்படும் தீமைகளைப்போல் தோற்றமளிக்கின்றன. செயற்படுத்தும் தேவையை எவ்வாறு அதிகரிக்கலாம் என்பதையும், பணவீக்கத்தை எவ்வாறு தவிர்க்கலாம் என்பதையும் நாம் இங்குக் காண்போம்.

## 1. வரவுசெலவுத் திட்டக் கொள்கை (Budgetary policy)

தேவையையும் வேலைவாய்ப்புகளையும் ஒழுங்குபடுத்துவதற்கு வரவுசெலவுத் திட்டத்தை அரசு ஒரு கருவியாகப் பயன்படுத்தலாம். ஆனால் இதை அரசினர் அண்மைக்காலம்வரை உணரவில்லை. 1929-ல் கருவூல அதிகாரியாகப் (Chancellor of Exchequer) பணியாற்றிய சர் வின்ஸ்டன் சர்ச்சில் "வரவு செலவுத் திட்டத்தின் மூலம் உபரி வேலை வாய்ப்புகளை அதிகமாக ஏற்படுத்த முடியாது என்றும் அரசாங்கச் செலவுகளை அதிகரித்து அதன் மூலம் நிரந்தரமான வேலைவாய்ப்புகளைப் பெருக்கமுடியாது" என்றும் கூறினார். இக்கருத்துச் சிறந்த ஆராய்ச்சி மூலம் கண்டுபிடிக்கப்பட்ட உண்மையாகாது. போர்க் காலத்து அனுபவமும் இக்கருத்துத் தவறானது என்பதை எடுத்துக் காட்டியது.

அரசினர் செலவையும் வரவையும் மாற்றினால், அதாவது அவைகளிடையே சமநிலை இல்லாமல் செய்தால் வேலைவாய்ப்புகள் ஓரளவே பெருகும். வரவு செலவுத் திட்டத்தில் அரசினர் சமநிலையை ஏற்படுத்த முயற்சி செய்தால், அதாவது முதலீட்டுக்காகக் கடன் வாங்குவதை அரசாங்கம் விரும்பாவிடில், வரவு செலவுத் திட்டம் செயற்படுத்தும் தேவையை எவ்விதத்திலும் பாதிக்காது. அரசினர் செலவை ஒரு வழியிலிருந்து வேறுவழிக்குத் திருப்புவர். நாட்டில் வேலையின்மை இருந்தால், அரசாங்கம் செயற்படுத்தும் தேவையைப் பெருக்குவதற்காகத் தன் செலவை அதிகரிக்க வேண்டும், அல்லது வரிகளைக் குறைக்கவேண்டும்; அல்லது வரவைவிடச் செலவை அதிகமாக்கவேண்டும். 26 ஆம் அதிகாரத்தில் வேலைவாய்ப்புப்பற்றிய கோட்பாடு விளக்கப் பெற்றிருக்கின்றது. வேலை வாய்ப்புப் பெருகினால், மக்களுடைய வருமானமும் சேமிப்பும் பெருகும். பெருகும் சேமிப்பை முதலீட்டுக்குப் பயன் படுத்தவேண்டும். அல்லது தனியார் துறையில் பெருகும் சேமிப்பின் தீயவிளைவை( அதாவது தேவை குறைவது)நீக்குவதற்கு அரசாங்கம் புதிய முதலீடுகளைச் செய்யவேண்டும். ஒருவரும் கடன் வாங்கி முதலீடு செய்ய முன்வராவிடில் அரசாங்கமே

அதைச் செய்ய வேண்டும். மக்களுடைய சேமிப்புக்குச் சமமான தொகையை அரசினர் கடன் வாங்கி முதலீடு செய்ய வேண்டும். செயற்படுத்தும் தேவை வேண்டிய அளவுக்கு மேல் அதிகரித்தால் அரசினர் அதைக் குறைக்க ஏற்பாடு செய்ய வேண்டும். அதாவது வரவு செலவுத் திட்டத்தில் உபரி ஏற்படவேண்டும். உபரித் தொகையைக் கொண்டு அரசாங்கம் தன்கடனைக் குறைக்கலாம். ஆனால் ஒரு காலத்தில் வரவு செலவுத் திட்டத்தில் ஏற்படும் பற்றுக் குறையும் மற்ற காலத்தில் ஏற்படும் உபரியும் சமமாக இருக்கும் என்று நாம் கூறிமுடியாது. தேசீயக்கடனை (National debt) அதிகரித்துக் கொண்டே செல்லவேண்டிய நிலைமை ஏற்படலாம்.

தேசீய வருமானம் உயர்ந்துகொண்டே இருக்கும் நாட்டில் தேசீயக் கடனும் உயரலாம். அதனால் தொல்லைகள் ஏற்படா. உபரிக்கடன் தொகைக்குச் செலுத்த வேண்டிய வட்டி வீதத்திற்குத் தகுந்த வருமானத்தை அரசினர் உபரி வருமானத்தின் மூலம் பெறலாம். வருமானம் பெருகுவதால் மக்கள் செலுத்தும் வரிகளும், வரிகளைச் செலுத்தும் சக்தியும் பெருகும். ஆனால் தேசியக்கடன் போர்க்காலத்தைப் போல், அளவுக்கு மீறிப் பெருகி விட்டால் அது ஒரு சிக்கலான பிரச்சினையாகிவிடும். ஆனால் சாதாரணமாக தேசியக்கடன் ஓரளவுக்குமேல் பெருகாது. செயற்படுத்தும் தேவையைப் பெருக்குவதற்காக அரசினர் செலவை அதிகரிக்காவிடில் வேலையின்மை அதிகரிக்கும். வேலையில்லாதவர்களுக்கு அரசினர் உதவிப்பணம் கொடுக்கவேண்டும். ஆகையால் அரசாங்கத்தின் செலவு வரவைவிட அதிகமாகும். மக்களுக்கு வேலை கொடுப்பதற்காகச் செலவைப் பெருக்குவதே உதவிப்பணம் கொடுப்பதற்காகச் செலவைப் பெருக்குவதைவிடச் சிறந்ததாகும்.

துய்ப்பும் முதலீடும் வேலைவாய்ப்புகளைப் பெருக்குவதற்கு அரசாங்கம் துய்ப்பை (Consumption) அதிகரிக்கலாம், அல்லது முதலீட்டைப் பெருக்கலாம். இவ்விரு வழிகளில் முதல்வழியைப் பின்பற்றுவது சற்றுக்கடினம். அரசாங்கம் வரிகளைக் குறைத்தால் மக்கள் உபரிவருமானத்தைச் சேமிப்பார்கள். வரிகளைக் கணிசமான அளவு குறைத்தாலன்றி மக்களுடைய செலவு பெருகாது. ஆனால் முதலீட்டின் மூலம் அரசினர் செயற்படுத்தும் தேவையை உடனடியாக அதிகரிக்கலாம். மேலும் அரசினர் முதலீடு பெருகுவதால் சாலைகள் கட்டடங்கள் முதலிய நிலையான சொத்துகள் பெருகும்.

இதுமட்டும் முதலீட்டைப் பெருக்குவதற்குக் காரணமாகாது. முதலீட்டைப் பெருக்குவதைவிட வரிகளைக் குறைப்பதே எளி

தாகும். துய்ப்பையும், முதலீட்டையும் பெருக்குவதற்கு மற்ற வழிகளையும் நாம் ஆராய்ச்சி செய்யவேண்டும். குடும்பங்களுக்குக் கொடுக்கும் உதவிப்பணத்தையும் உணவுப் பொருள்களுக்காகக் கொடுக்கும் உதவிப்பணத்தையும் அரசினர் அதிகரிக்கலாம். பாங்குகள் கொடுக்கும் கடன் வசதியைப் பெருக்கிச் சில தொழில்களுக்குத் தூண்டுதலைக் கொடுக்கலாம். வேலையின்மை மிகுதியாக இருக்கும் பகுதிகளில், வேலை வாய்ப்புகளைப் பெருக்குவதற்கு நாம் இந்த முறையைக் கையாளலாம். முதலீட்டு வாய்ப்புகள் எல்லாம் தீர்ந்து விட்டால் புதிய முதலீட்டுக்கு இடம் இல்லாமல் இருக்கலாம். அரசினரே இப்பொறுப்பை ஏற்றுக்கொள்ள வேண்டிய நிலை ஏற்படலாம். அரசாங்கம் முதலீட்டையும் துய்ப்பையும் எந்த அளவு பெருக்கவேண்டும் என்பதை முடிவு செய்ய வேண்டும்.

வரவு செலவுத்திட்டத்தில் உபரியையும் பற்றுக்குறையையும் ஏற்படுத்துவதற்குப் பொருளாதார விதிகள் உதவா. அருள் மொழிகளைப்போல் பொருளியலார் கொடுக்கும் விதியைக்கொண்டு நிதி மந்திரி வரவு செலவுத்திட்டம் தயார் செய்ய முடியாது. கருவூலமும் பாராளுமன்றமும் பேச்சுவார்த்தை நடத்தி இத்திட்டத்தை உருவாக்கவேண்டும். வலிமையுள்ள அரசியல் தலைவர்களே உபரித்திட்டத்தைத் (Surplus budget) தயார் செய்யலாம். கூட்டாட்சியில் நிதிமந்திரி அரசியலமைப்புக்கு (Constitution) விரோதமாகக் கூடச் சில முடிவுகளை எடுக்க வேண்டிய நிலை ஏற்படும். தற்காலத்துப் பொருளாதாரக் கோட்பாடுகளைச் சரிவரப் புரிந்துகொள்ளாதவர்கள் பல தொல்லைகளைச் சமாளிக்க வேண்டிய காலத்தில் ஒரு நாட்டின் வரவு செலவுத் திட்டத்தில் பற்றுக்குறை இருப்பதையும் விரும்பமாட்டார்கள். பல ஆண்டுகள் வரவு செலவுத் திட்டத்தில் உபரியோ அல்லது பற்றுக்குறையோ இருந்திருக்கலாம். அதை மாற்றுவதற்கு உகந்த நேரம் வந்துவிட்டதா என்பதை அரசாங்கம் கவனிக்க வேண்டும். மாற்றுவதற்கு எந்த வழிகளைப் பின்பற்ற வேண்டும் என்பதையும் முடிவு செய்யவேண்டும். வேலை வாய்ப்புகளைப் பெருக்குவதற்குமட்டும் அரசாங்கம் இப்பிரச்சினைகளைச் சமாளிக்க வேண்டும் என்று நாம் கூறமுடியாது. இப்பிரச்சினைகள் ஏற்படுவதற்கு வேறு காரணங்களும் இருக்கலாம். ஏனெனில் பொதுமக்களுடைய எண்ணங்களை அறிந்து அரசினர் தம் கொள்கையை அவைகளுக்கேற்றவாறு அமைத்துக்கொள்ளவேண்டும்.[1]

1 உதாரணமாகப் பொது வேலைத்துறையிலும் Public works செலாவணித் துறையிலும் மக்கள் விருப்பத்தை உணர்ந்து சிறந்த கொள்கையை அரசினர் பின்பற்ற வேண்டும். செலாவணியையும், பொது வேலையையும் சுருக்குவதைவிட பெருக்குவது எளிதாக இருக்கின்றது.

**முதலீட்டைக் கட்டுப்பாடு செய்தல்**

வேலை வாய்ப்புகளில் மாறுதல்கள் ஏற்படுவதற்கு முதலீட்டில் ஏற்படும் மாறுதல்களே காரணங்கள் என்பது உண்மையானல் நாம் முதலீட்டை நிலைப்படுத்தவேண்டும். இதற்குப் பல வழிகள் இருக்கின்றன. முதன்முதலில் மந்தகாலத்தில் செலாவணிக் கொள்கை மூலம் வட்டிவீதங்களைக் குறைக்கலாம். வீக்ககாலத்தில் வட்டிவீதங்களை உயர்த்தலாம். முதலீடு குறையும்பொழுது இக் கொள்கை அதைப் பெருக்கும். முதலீடு மிகுதியாக இருக்கும் பொழுது அதை இக் கொள்கைகள் மூலம் குறைக்கலாம். இரண்டாவதாகத் தனியார் துறையில் முதலீடு குறைந்தால் அரசாங்க முதலீடு மிகுதியடையவேண்டும். தனியார் துறையில் முதலீடு மிகுதியாக இருந்தால் பொதுத்துறையில் அதை அரசினர் குறைக்கலாம். அரசினர் தம் முதலீட்டை நிலைமைக்கேற்றவாறு மாற்றிக் கொண்டால் மந்தமும், பொருளாதார வீக்கமும் ஏற்படுத்தும் விளைவுகளைக் குறைக்கலாம். வேலை வாய்ப்புகளிலும், வர்த்தகத்திலும் அதிக ஏற்றத்தாழ்வுகள் ஏற்படா. மூன்றாவதாக அரசாங்கம் முதலீட்டை நேரடியாகக் கண்காணிக்கலாம். அதாவது பணவீக்கம் ஏற்படும் வரை முதலீட்டை அனுமதிக்கலாம். மந்தகாலத்தில் முதலீட்டுக்குத் தூண்டுதலைக் கொடுக்கலாம். இந்த மூன்று வழிகளையும் நாம் இங்குக் காண்போம்.

(i) செலாவணிக் கொள்கையும் வட்டிவீதமும் அண்மைக் காலம் வரை அரசினர் நீண்டகால வட்டிவீதங்களை மையபாங்கு வீதத்தின் (Bank rate) மூலமே கட்டுப்பாடு செய்தனர். மையபாங்கு வீதம் மாறும்பொழுது குறுகியகால வட்டிவீதங்கள் மாறும். அவைகள் கணிசமான அளவு மாறினல்கூட நீண்டகால வீதங்கள் அதிகம் மாறுவதில்லை. குறுகியகால வீதங்கள் தாற்காலிகமாகவே மாறுகின்றன என்றும் மீண்டும் அவை பழைய நிலையையடைந்துவிடும் என்றும் மக்கள் கருதினல், நீண்டகால வீதங்கள் மாறாமல் இருக்கும். வீக்ககாலத்தில் மையபாங்கு வீதம் சிறிதளவு உயர்ந்தாலும் தொழிலதிபர்கள் மேலும் வட்டிவீதங்கள் உயரும் என்று அஞ்சித் தம் தொழிலை அதற்குத் தகுந்தாற்போல் அமைத்துக் கொள்கின்றனர். ஆனல் மந்தகாலத்தில் ஓரளவுக்குமேல் வட்டியைக் குறைக்கமுடியாது. எனவே ஓரளவுக்குமேல் செலாவணிக் கொள்கை மூலம் மந்தத்தின் தீய விளைவுகளை நீக்கமுடியாது. செலாவணிப் பெருக்கம் செய்தாலும் தொழில்கள் உற்பத்தியைப் பெருக்கா. குறுகியகால வட்டிவீதங்கள் குறைந்தால் மக்கள் மிகுதியான தொகையைக் கடனாக வாங்கமாட்டார்கள். ஏனெனில் கடனின் தேவையை வட்டிவீதம் அதிகரிக்காது. ஆகையால் செலாவணிக் கொள்கை மூலம் மந்தத்தை மாற்றமுடியாது.

ஆனால் மற்றக் கருவிகளுடன் பாங்குச் செலாவணிக் கட்டுப்பாட்டையும் மையபாங்கு பயன்படுத்தலாம். நீண்டகாலத்தில் இக் கொள்கை ஓரளவு வெற்றிகரமாக இருக்கலாம்.

நீண்டகால வட்டிவீதங்களை மற்ற நேரடியான முறைகளில் தற்காலத்தில் மாறுகின்றனர். அரசினர் பாங்குகளை நீண்டகாலப் பத்திரங்களை வாங்கிக்கொள்ளவேண்டும் என்று வற்புறுத்தலாம். வரவு செலவுத் திட்டத்தைத் தவிர, தேசீயக் கடன் குழுவினர் (National Debt Commission), தேசீய இன்சூரன்சு நிதியை (National Insurance Fund) நிருவாகம் செய்வோர் முதலியவர்கள் வசம் இருக்கும் பணத்தையும் அரசாங்கம் கட்டுப்பாடு செய்யலாம். மேலே குறிப்பிட்ட தொகைகள் சில பத்திரங்களில் முதலீடு செய்யப்பட்டிருக்கின்றன. இப்பத்திரங்களின் தவணைக் காலத்தை அரசினர் மாற்றி வட்டிவீதத்தை மாற்றலாம். அதாவது குறுகிய காலத் தவணைப் பத்திரங்களை நெடுங்காலப் பத்திரங்களாக அரசினர் மாற்றலாம். இங்கிலாந்தின் தலைமை பாங்கு தேசீயக் கடன் நிதியை ஏற்படுத்துவதாலும் அல்லது நிதியைக் குறைப்பதாலும் இதே விளைவு ஏற்படலாம். சிறப்பீட்டுப் பத்திரங்களுடைய (guilt edged securities) விலைகளையும் அரசாங்கம் மாற்றி நீண்டகால வீதங்களை அதன் மூலம் மாற்றலாம். தடையற்ற பத்திர மார்க்கட்டு இருந்தால் அரசினர் இக் கொள்கை மூலம் சிறிதளவே வட்டிவீதங்களை மாற்றமுடியும். அரசாங்கம் நீண்டகால வீதங்களைக் கணிசமான அளவு மாற்றமுடியாது.

போர்ப் பிற்காலத்து அனுபவம் இவ்வுண்மையை மெய்ப்பித்துவிட்டது. சில ஆண்டுகள் அரசாங்கம் செலாவணியைப் பெருக்கியது. போர்க்காலத்தில் மூலதனப் பற்றுக்குறை இருந்தது. அதற்குத் தகுந்த வட்டிவீதம் நிலவியது. போர்ப் பிற்காலத்திலும் இதே நிலைமை நீடித்தது. பத்திரங்களைக் கொண்டிருந்தவர்கள் பணவீக்கம் இல்லாவிடில் வட்டி எந்த நிலையில் இருக்கும் என்பதைப் பற்றிய கருத்துகளைக் கொண்டிருந்ததால் அரசினர் வட்டிவீதங்களைக் குறைக்கமுடியவில்லை. வரவு-செலவுத் திட்டத்தில் உபரி இருந்தபோதிலும், முதலீட்டை அரசாங்கம் கட்டுப்பாடு செய்தபோதிலும் மார்க்கட்டுச் சக்தியை அரசினர் எதிர்த்துப்போராட முடியவில்லை. நீண்டகால வீதங்கள் உயர்ந்தன.

(ii) பொது வேலைத் துறைக் கொள்கை (Public works policy) இடர் உதவிக் கொள்கைக்கும் (relief works) பொது வேலைத் துறைக் கொள்கைக்கும் உள்ள வேறுபாட்டை நாம் அறிய வேண்டும். வேலை வாய்ப்புகளைப் பெருக்குவதற்காகவே இடருதவிக் கொள்கையை அரசினர் பின்பற்றுகின்றனர். ஆனால் பொது

வேலைத் திட்டங்களை மந்தம் அல்லது வீக்கம் நிலவுவதற்குத் தகுந்தவாறு அரசினர் மாற்றியமைத்துக்கொள்கின்றனர். மந்த காலத்தில் பொது வேலையைக் குறைக்கலாம். வீக்ககாலத்தில் அதைப் பெருக்கலாம். ஆனால் பொது வேலைக்கும் இடருதவிக்கும் அதிக வேறுபாடில்லை. நாடெங்கும் வேலையின்மை இருந்தால் அரசாங்கம் பொது வேலைகளைப் பெருக்க ஒரு திட்டம் வகுக்கும். பொதுநலத்துறை வேலைகள், வீடுகள் கட்டுதல், காடுகளை அமைத்தல் முதலிய வேலைகளை அரசினர் பெரும்பாலும் வீக்ககாலத்தை விட மந்தகாலத்திலேயே செய்ய விரும்புவர். வேலையில்லாத் திண்டாட்டம் நாட்டில் தாண்டவமாடும் காலத்தில் அரசினர் இக் கொள்கை மூலம் புதிய வேலை வாய்ப்புகளை ஏற்படுத்துவர். சாதாரண காலத்தில் கொடுக்கப்படும் கூலிகளையே தொழிலாளர்கள் இந்த நிலையில் பெறுவர்.

இக் கொள்கை அவசியமற்ற செலவுக்குக் காரணமாக இருக்கும் என்று சிலர் கருதலாம். ஆனால் இக்கொள்கையை அரசாங்கம் சரிவரச் செயற்படுத்தினால் அரசாங்கத்தின் செலவுகள் குறையலாம். மந்தகாலத்தில் விலைகள் வீக்ககாலத்தைவிடக் குறைவாக இருக்கும். ஆகையால் மந்தகாலத்தில் பொது வேலைத் திட்டங்களைச் செயற்படுத்துவதால் இத் திட்டங்களின் அடக்கச் செலவு குறையும். மந்தகாலத்தில் பொது வேலைத்துறையில் முதலீட்டுக்குவேண்டிய சேமிப்பு நாட்டில் இருக்காது என்று சிலர் கூறினர். இக்கருத்தைக் கொண்டவர்கள் காரணம் எது, விளைவு எது என்பதைப் புரிந்துகொள்ளவில்லை. சேமிப்புக் குறைவாகஇருப்பதற்கு, வருமானம் குறைவாக இருப்பதே காரணமாகும். முதலீடு குறைவாக இருப்பதால் வருமானம் குறைவாக இருக்கின்றது. முதலீடு பெருகினால், வருமானமும் சேமிப்பும் மிகுதியடையும். முதலீட்டுக்கு வேண்டிய தொகை கிடைக்கும்.

நிதி திரட்டுவதில் (முதலீட்டுக்கு) எவ்விதத் தொல்லையும் இல்லை. நிலைமையைப் புரிந்துகொள்வதிலேயே உண்மையான சிக்கல் இருக்கின்றது. முன்கூட்டியே தயார் செய்த திட்டங்களைச் சரியான நேரத்தில் அரசாங்கம் செயற்படுத்துமா? அடுத்து வரும் மந்தத்தை எதிர்பார்க்காமல் வீக்காலத்தில் தொடக்கப்பெற்ற திட்டங்களையே அரசாங்கம் நீடித்துச் செயற்படுத்துமா? செழிப்பான காலத்தில் வரவு செலவுத் திட்டத்தில் உபரி ஏற்படுவதால் அரசாங்கம் ஊக்கத்துடன் பொது வேலைத் திட்டத்தைச் செயற்படுத்துமா? மந்தத்தின் முதல் அறிகுறிகளைக் கண்டவுடன் அரசாங்கம் உடனடியாக முதலீட்டுக்குத் தூண்டுதலைக் கொடுத்து மந்தத்தையே நீட்டுமா? உண்மையான மந்தம் ஏற்படும்பொழுது அதைத்

தொழில் அமைப்பு மாறுவதால் ஏற்படும் விளைவு என்றும் அரசினர் கருதலாம். மந்தகால வேலையின்மையை அரசாங்கம் தொழில் நிலை மாற்ற வேலையின்மை (Structural unemployment) என்று கருதி, அதை நீக்குவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யலாம்.

மேலும் சில முதலீடுகளை அரசினர் தாமதிக்கமுடியாது. உதவாத பாலங்களுக்குப் பதிலாகப் புதிய பாலங்களை அமைத்தல், போர்க்கலங்களை அமைத்தல் போன்றவைகளைத் தாமதிக்க முடியாது. கழிசடைப் புறங்களைச் (Slum clearance) சுத்தம் செய்தல் போன்றவைகளைத் தாமதம் செய்தால் மக்கள் அரசினர் கொள்கையை எதிர்ப்பார்கள். சாலைகள், துறைமுகங்கள், கப்பல் தளங்கள், மின்சார நிலையங்கள் முதலியவைகளை ஒரு நாடு தொடங்கிவிட்டால் அவைகளை இடையில் கைவிடமுடியாது. மேலும் ஸ்தாபனங்களும், அரசாங்கமும் அடுத்துவரும் 5 அல்லது 10 ஆண்டுகளுக்கு முன்கூட்டியே ஒரு திட்டத்தை வகுக்க முடியாது. ஏனெனில் அடுத்துவரும் ஆண்டுகளில் புதிய வரிகள் விதிக்கப்படலாம்; புதிய உற்பத்தித் தளவாடங்கள் அகப்படலாம். முன்கூட்டியே தயார் செய்யப்பட்ட திட்டங்களை அவ்வப்போது மாற்றாமல் செயற்படுத்தமுடியாது.

பொது வேலைக் கொள்கை எதிர்பார்த்த அளவு பயனளிக்காமல் இருக்கலாம். ஏனெனில் மக்கள் இக் கொள்கை வெற்றிகரமாக இருக்காது என்று கருதலாம். இக்கொள்கையை அரசாங்கம் தாற்காலிகமாகவே பின்பற்றுகின்றனர் என்று தொழிலதிபர்கள் கருதினால், பொது வேலைகள் முடிந்தபின் மீண்டும் மந்தம் ஏற்படும் என்று அவர்கள் அஞ்சுவார்கள். செயற்கையான முறையில் ஏற்படுத்தப்பட்ட செழிப்பில் அவர்கள் நம்பிக்கை கொள்ளாமல் இருக்கலாம். ஆனால் சாதாரணமாகத் தொழிலதிபர்கள் இவ்வாறு கருதமாட்டார்கள். அரசினர் முழு மனத்துடன் முதலீட்டைப் பெருக்காவிடில் மக்கள் இவ்வாறு கருதுவார்கள். மூலதனத்தின் இறுதிநிலை உற்பத்தி மிகவும் குறைவாக இருந்தால், தொழிலதிபர்கள் முதலீட்டைப் பெருக்கமாட்டார்கள்.

ஆனால் சாதாரணமாகப் பொது வேலைக் கொள்கைக்கு இவ்விடையூறுகள் ஏற்படா. அரசாங்கம் சாதாரணமாகத் துய்ப்போர் பொருள்களை உற்பத்திசெய்யாது. ஏனெனில் தொழிலதிபர்களுடன் போட்டியிடவேண்டிய நிலை ஏற்படும். முதலீட்டைப் பொருத்தமான அளவில் நிலைப்படுத்துவதற்கு பொதுத்துறை இடம் கொடுக்காமல் இருக்கலாம், முதலாளித்துவ நாடுகளில் அரசாங்கம் சாதாரணமாக மக்கள் பயன்படுத்தும் பொருள்களை உற்பத்தி செய்

வதற்குவேண்டிய உற்பத்தி நிலையங்களை அமைப்பதில்லை. மந்த காலத்தில் அரசாங்கம் பொதுத்துறையில் முதலீட்டைப் பெருக்கு வது கடினம். ஆனால் முதலீடு என்றுமே வாட்டமடையாத ஒரே துறை, போர் ஆகும் என்பது வியப்பைக் கொடுக்கின்றது. இத்துறையில் அரசினர் முதலீடு செய்வதால் தனியார் துறை பாதிக் கப்படாது. போருக்குத் தயாராகும் ஒரு நாட்டில் வேலையின்மையே ஏற்படாது.

மற்றக் கருவிகளுடன் பொதுவேலைக் கொள்கையையும் பின் பற்றினால் பொருளாதார மீட்சி (Recovery) ஏற்படும். அடுத்தடுத்து வரும் பொருளாதார மந்தங்களும் வீக்கங்களும் ஏற்படுத்தும் விளை வுகளைப் பொதுத்துறை வேலைகள் மூலம் குறைக்கலாம். ஆனால் நீண்ட காலத்தில் ஏற்படும் வேலையின்மையையும் சில தொழில்கள் நலிவுறுதலையும் இக்கொள்கை மூலம் மாற்றவோ அல்லது நீக் கவோ முடியாது.

**(iii) முதலீட்டை அரசினர் நேரடியாகக் கண்காணித்தல்:**[1] அரசாங் கம் ஆண்டுதோறும் முதலீட்டுக்கு ஒரு திட்டத்தை வகுத்துச் சில முதலீடுகளுக்கு முன்னுரிமை கொடுக்கலாம்; சிலவற்றைத் தாமதம் செய்யலாம். சேமிப்புக்குத் தகுந்த முதலீட்டை அரசாங்கம் ஆத ரிக்கலாம். மனுக்களைப் பரிசீலனை செய்து பல்வேறு முதலீட்டுத் திட்டங்களுக்கு அனுமதி வழங்க அரசாங்கம் ஒரு தனி இலாகா வையே ஏற்படுத்த வேண்டும். முன்னுரிமைகளைகளையும் அனுமதி யையும் வழங்குவதற்குத் தனி விதிகளையும் அரசாங்கம் ஏற்படுத்த வேண்டும். ஒரு வீட்டை அலங்காரம் செய்வதற்கு 10 பவுன் செலவு செய்வதற்குக் கூட அரசாங்க அனுமதியைப் பெற வேண் டிய அளவு கட்டுப்பாடு வளர்ச்சி யடையலாம். இங்கிலாந்தில் போருக்குப்பின் இந்த நிலை இருந்தது. அல்லது ஒரு மிலியன் பவுன் செலவு செய்ய வேண்டிய திட்டங்களுக்குமட்டும் உற்பத்தி யாளர்கள் அரசினர் அனுமதி பெற வேண்டும் என்று ஏற்பாடு செய்யலாம். கட்டுப்பாடு எந்த முறையில் அமைந்தாலும் தனி உற்பத்தியாளர்கள் தம் விருப்பம்போல் முதலீடு செய்ய முடியாது.

நாட்டின் முதலில் ஒரு பெரும்பகுதி அரசினர் வசம் இருப்பதா லும், புதிய முதலீட்டில் சுமார் 40 சதவீதம் பொதுத்துறையில்

1 இங்கு உற்பத்தியாளர்களுடைய முதலீட்டையே நாம் ஆராய்ச்சி செய்கின் றோம். ஆனால் துய்ப்போருடைய முதலீட்டைத் தவணைக் கடன் முறையைக் கண் காணித்தல் மூலம் நாம் கட்டுப்படுத்தலாம். தவணைகளில் செலுத்த வேண்டிய தொகைகளையும், மொத்தத் தவணைகளையும் வெற்றிகரமாகக் கட்டுப்படுத்தலாம். ஆனால் இக்கட்டுப்பாடு இந்த முறையில் விற்பனையாகும் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்களையே பாதிக்கும். உற்பத்தியாளர்கள் பயன்படுத்தும் பொருள்களைத் தயார் செய்யும் தொழில்களை இக்கட்டுப்பாடு அதிகம் பாதிக்காது.

இருப்பதாலும் அடுத்து வரும் ஆண்டுகளில் செய்ய வேண்டிய முத லீட்டுக்கு ஒரு திட்டம் வகுக்க வேண்டும். தனியார்துறை முதலீடு அரசாங்கக் கட்டுப்பாட்டுக் குட்பட்டிருந்தாலும், உட்படாவிடினும் முதலீட்டுக்கு ஒரு திட்டம் இன்றியமையாதது. புதிய வீடுகள், பள்ளிகள், மருத்துவ நிலையங்கள், சக்தியை உற்பத்தி செய்யும் நிலையங்கள், எஃகு தொழிற்சாலைகள், விமானங்கள், இருப்புப் பாதைகள் முதலியவைகளை அமைத்தலையும் உற்பத்தி செய்வதை யும் அரசினர் கட்டுப்பாடு செய்யலாம். அரசினர் கொள்கையைத் தயார் செய்வதற்குமுன் தனியார் துறையின் தேவைகளையும் கணக்கில் சேர்த்துக்கொள்ள வேண்டும். தொழிலதிபர்களுக்குக் கட்டட வேலைப் பொருள்கள் தேவையாக இருக்கும். நிலைமைக் கேற்றவாறு அரசாங்கம் தனியார்துறையின் தேவைகளைப் பூர்த்தி செய்யலாம்; பொதுத் துறையில் முதலீட்டைப் பெருக்கலாம் அல்லது சுருக்கலாம். ஆனால் பொதுத் துறையின் முதலீடுகளும், தனியார் துறையின் முதலீட்டைப்போல் உடனடியாகத் தேவைப் படலாம். ஆகையால் அரசாங்கம் நாட்டில் முதலீட்டை நேரடி யாகக் கட்டுப்படுத்தவேண்டும்.

ஆனால் அரசாங்கம் முதலீட்டைக் கட்டுப்படுத்தும் பொழுது மூன்று இடர்ப்பாடுகளைச் சமாளிக்க வேண்டும். முதலில் கட்டுப் பாடு வெற்றிகரமாக இருத்தல் வேண்டும். நாட்டில் சிலபொருள்கள் போதிய அளவில் கிடைக்காமல் இருக்கும்பொழுது அரசினர் புதிய முதலீடுகளுக்குத் தாராளமாக அனுமதி கொடுத்தால், அரசி னர் அனுமதிகள் மூலம் முதலீட்டைக் கட்டுப்படுத்த முடியாது. அவர்கள் கொடுக்கும் முன்னுரிமை பயனற்றதாகி விடும். எந்த நிறுவனங்கள் உற்பத்திக்கு வேண்டிய பொருள்களை வாங்குவதில் வெற்றியடைகின்றனவோ, அவைகளே முதலீடு செய்ய முடியும். அரசாங்கம் மிகவும் முக்கியமானவை என்று கருதும் முதலீடுகள் தாமதிக்கப்படலாம். மேலும் பல நிறுவனங்கள் முதலீட்டு வேலை யைத் தொடங்கி அதை முற்றுப் பெறுவதற்குமுன் கைவிட வேண் டிய நிலைமை ஏற்படலாம். ஏனெனில் போதிய அளவு சிலபொருள் கள் கிடைக்காமல் இருக்கலாம். நாட்டில் வேண்டிய அளவு முதல் (Capital) கிடைக்காத காலத்தில் முதலீடு முற்றுப்பெறாத கார ணத்தால், குறைந்த அளவில் கிடைக்கும் முதலையும் பயன்படுத்த முடியாத நிலைமை ஏற்படலாம். அரசாங்கம் கட்டடப் பொருள் களைப் பங்கீடு செய்யாமலும் அவைகளுடைய விலைகளைக் கட்டுப் படுத்தாமலும் இருந்தால் மேலே குறிப்பிட்ட தொல்லைகள் எழா. அனுமதிகள் வழங்குதலுக்கும், பொருள்களுடைய அளிப்புக்கும் பொருத்தம் இல்லாவிடில் நாட்டில் குழப்பமும் வீண் செலவுகளும் ஏற்படுவது இயற்கை.

இரண்டாவதாகப் பெரிய திட்டங்களுக்கு அனுமதி கொடுப்பது, சிறிய திட்டங்களுக்கு அனுமதி வழங்குவதைவிட எளிதாகும். நாட்டில் உள்ள 14 மிலியன் வீடுகளுக்குப் பழுதுபார்ப்பதற்கும் அவைகளைச் செப்பனிடுவதற்கும் ஐந்தில் ஒரு பங்கு தொழிலாளர்களுடைய பணி தேவையாக இருக்கின்றது. ஆண்டுதோறும் 200,000 வீடுகளைக் கட்டுவதற்கும் அதே தொழிலாளர்கள் வேண்டும். ஸ்தலஸ்தாபனங்கள் 200,000 வீடுகளைக் கட்டுவதற்கு அனுமதி வழங்குவதற்கும், பழைய வீடுகளைச் செப்பனிடுவதற்கு அனுமதி வழங்குவதற்கும், நிருவாகத்துறையினர் எடுத்துக் கொள்ளும் நேரங்களை நாம் ஒப்பிட முடியாது. நிருவாகச் சிக்கல்களும், அனுமதி வழங்குவதற்கு வேண்டிய நேரமும் மட்டுமே அரசினர் சமாளிக்க வேண்டிய தொல்லைகள் என்று நாம் கருத முடியாது. தொழிலதிபர்கள் எந்த வகை முதலைப் பெருக்க விரும்புகின்றனர் என்பதை அரசாங்கம் தெரிந்து கொள்ளவேண்டும். தயாரான முதலீட்டுத் திட்டங்களைத் தவிரத் தயாராகாத திட்டங்களையும், அவைகளுடையமுக்கியத்துவத்தையும் அரசினர் உணரவேண்டும். அரசினர் வசம் இருக்கும் நிலக்கரி, இரும்பு போன்ற தொழில்களுக்கும் எந்த வகை முதல் உடனடியாகத் தேவை என்பதை அரசாங்கம் அறியவேண்டும். மின்சாரசபை (Electricity Council) பல ஆண்டுகளுக்குமுன் தயார் செய்த திட்டத்தை அரசினர் பரிசீலனை செய்து, அத்தொழிலுக்குக் கட்டடங்களை எழுப்புவதற்கு அனுமதி கொடுத்ததால் மண்பாண்டத் தொழில் புதிய கட்டடங்களை எழுப்ப முடியாமல் இருக்கலாம். பெரிய திட்டங்கள் சில முக்கியமான தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகவே தயார் செய்கின்றனர். அத்திட்டங்களைச் செயற்படுத்துவதால் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் ஏற்படுகின்றது.

முதலீடு மிகுதியாக இருக்கும்பொழுது அதை அரசினர் கட்டுப்பாடு செய்யலாம். ஆனால் முதலீடு குறையும்பொழுது அதைப் பெருக்குவதற்கு நாம் எதையும் செய்யமுடியாது. பணவீக்க காலத்தில் அதைக் கட்டுப்பாடு செய்வதற்கு முதலீட்டைக் கட்டுப்பாடு செய்யலாம். ஆனால் பணச்சுருக்கத்தை மாற்றி விலைகளை உயர்த்த இந்த முறையை நாம் பின்பற்ற முடியாது. விலைகள் உயர வேண்டுமானால் முதலீட்டுக் கட்டுப்பாடுகளைத் தளர்த்த வேண்டும். எதிர்காலத்தில் ஏற்படும் பொருளாதார வீக்கத்தைத் தவிர்க்க, கட்டுப்பாடுகளை அமலில் வைத்திருக்க முடியாது. கட்டுப்பாடுகளை நீக்கிவிட்டு வேண்டும் பொழுது மீண்டும் அவைகளை ஏற்படுத்துவது கடினம்.

வேண்டும் பொழுது முதலீட்டைப் பெருக்குவதற்கு ஓர் ஏற்பாடு செய்யலாம். கட்டுப்பாடுகளைத் தளர்த்து விட்டால் அதுவரை

முதலீட்டுக்கு அனுமதி கிடைக்காத பலருக்குப் புதிய வாய்ப்புகள் கிடைக்கும். மந்தத்தின் கடுமை ஓரளவு குறையும். வீடுகட்டுவதற்குத் தயார் செய்த திட்டங்களை சற்று முன்னதாகவே செயலாற்றினால் கட்டட வேலை ஒரு தூண்டுதலைப் பெறும். ஆனால் இதற்கு முன்னதாகவே தயாரான திட்டங்கள் இருக்கவேண்டும். கட்டட வேலைக்குத் தாராளமாக அனுமதி வழங்கப்பட்டவுடன் திட்டங்களைச் செயலாற்றவேண்டும். எப்பொழுது வேண்டுமானாலும் செயலாற்றுவதற்குத் திட்டங்களை ஒரு நாடு தயாராக வைத்திருக்கவேண்டும் என்று நாம் கூறமுடியாது. அடுத்த ஆண்டு செயலாற்றப்படவேண்டிய திட்டங்களைத் தேவை எழுந்தால் சற்று முன்னதாகவே செயற்படுத்தலாம் என்பதையே நாம் இங்குக் குறிப்பிடுகிறோம்.

**வேலை வாய்ப்புக் கொள்கையின் முரண்பாடுள்ள நோக்கங்கள்**

முதலீட்டுக்கு ஏற்படும் தேவையையும் அவசியத்தையும் அரசாங்கம் வெற்றிகரமாகக் கட்டுப்படுத்தினாலும், வேலை வாய்ப்புக் கொள்கையின் பல்வேறு முரண்பாடுகளைச் சமாளிக்க வேண்டும்.

(i) *முதன்முதலில் நிலையான விலைவாசிக்கும் (stable price level) வேலை நிறைவுக்கும் ஒரு பொருத்தத்தை ஏற்படுத்த வேண்டும்.*

(ii) பொருளாதார வளர்ச்சிக்கு நாட்டில் இருக்கும் வாய்ப்புக்களை நன்கு பயன்படுத்தவேண்டும். இதற்கு வேண்டிய முதலீட்டைச் செய்யவேண்டும். இந்த நோக்கத்திற்கும் முதல் இரு நோக்கங்களுக்கும் ஒரு பொருத்தத்தை ஏற்படுத்தவேண்டும்.

(iii) ஒரு நாடு அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் சம நிலையை ஏற்படுத்த விரும்பலாம். அல்லது அயல்நாட்டுச் செலாவணியை ஈட்ட விரும்பலாம். அல்லது அயல்நாட்டு வளர்ச்சிக்கு ஒரு தூண்டுதலைக் கொடுக்க விரும்பலாம். இந்த நோக்கங்களும் வேலை வாய்ப்புக் கொள்கையின் மற்ற நோக்கங்களும் பொருத்தத்தைக் கொண்டிருக்க வேண்டும்.

(iv) இந்த நோக்கங்களை நிறைவேற்றுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டும். சில குறிப்பிட்ட பகுதிகளிலும் தொழில்களிலும் வளர்ச்சிக்கு சில இடையூறுகள் இருக்கலாம். அவைகளை நீக்கவேண்டும்.

**விலைவாசியை நிலைப்படுத்தல்.**

தேவை மிகுவதால் வேலை நிறைவு ஏற்படும்பொழுது விலைவாசிகள் உயரும். தொழிலாளர்கள் சங்கங்கள் கிளர்ச்சி செய்யாவிடினும், உற்பத்தியும் வர்த்தகமும் பெருகும்பொழுது பொருள்களின் அடக்கச் செலவும் விலைவாசிகளும் உயரும். இலாபமும் வாழ்க்கைச் செலவும் உயருவதால் தொழிலாளர்கள் சங்கங்கள் கூலிகளை உயர்த்துவதற்காக வெற்றிகரமாகப் போராடும்.

தேவையை ஓரளவுக்குமேல் பெருக்கினுல் விலைவாசிகள் உயருவதைத் தடைசெய்யமுடியாது. பணவீக்கத்தையோ அல்லது வேலை நிறைவையோ நாம் ஏற்றுக்கொள்ளவேண்டிய நிலைமை இருக்கின்றது என்று கூறமுடியாது. இரண்டுக்கும் உள்ள வேற்றுமை தெளிவாக இல்லை.

வேலை வாய்ப்புகளையும் உற்பத்தியையும் பணவீக்கம் நீடிக்கும் என்று நாம் கூறமுடியாது. பணவீக்கம் தாற்காலிகமானது, தானுகவே குறைந்துவிடும் என்ருே அல்லது அதை அரசாங்கம் குறைத்துவிடும் என்ருே மக்கள் கருதினுல் பணவீக்கத்தின் கொடுமைகள் குறைந்துவிடும். ஆனுல் பணவீக்கம் நிரந்தரமானது. அதை அரசாங்கம் குறைக்காது என்று மக்கள் கருதினுல் எதிர்காலத்தில் பணத்தின் மதிப்பு மேலும் மேலும் குறையும் என்று மக்கள் அஞ்சுவார்கள். பணவீக்கம் மேலும் வளர்ச்சியடையும். இந்த நிலையில் மதிப்பை இழக்கும் பணத்தை வைத்துக்கொள்வதை மக்கள் விரும்பமாட்டார்கள். வட்டியைப் பெறும் நோக்கத்துடன் மக்கள் பணத்தைக் கடனுகக் கொடுக்கவும் விரும்பமாட்டார்கள். வட்டிவீதம் அளவுக்குமீறி உயர்ந்தாலன்றி மக்கள் கடன் கொடுத்தலை விரும்பமாட்டார்கள். அல்லது அவர்கள் கடன் கொடுப்பதற்கு வேறு ஒரு சாதனத்தைப் பயன்படுத்தவேண்டும். இப்பொழுது நிலவும் விலைவாசியும் அடக்கச் செலவும் உற்பத்தியை நிர்ணயம் செய்யா. அவை எதிர்காலத்தில் எவ்வாறு மாறும் என்பதைப்பற்றிய கருத்துக்களே உற்பத்தியை பாதிக்கும். பணத்தின் மதிப்பு எவ்வாறு மாறும் என்பதை அன்ருடம் மக்கள் சிந்தனை செய்யவேண்டும். உற்பத்தியாளர்கள் மக்கள் விருப்பத்தை அறிய முயற்சி செய்யாமல் பணத்தின் மதிப்பு எவ்வாறு மாறும் என்பதையே அறிய ஆவலாக இருப்பார்கள்.

பணவீக்கம் வெகு விரைவில் வளர்ச்சியடைவதற்குமுன் படிப்படியாக வளரும். குறுகிய காலத்தில் தேவை பெருகுவதால் எவ்விதத் தீமையும் ஏற்படாது. நீண்டகாலத்தில் தொடர்ந்து தேவை பெருகினுல் தீயவிளைவுகள் ஏற்படலாம்.

தேவையின் நிலைமை சாதாரணமாகப் பணவீக்கத்தை ஏற்படுத்தாது. தேவை பெருகிக்கொண்டே சென்றால் பணவீக்கம் ஏற்படும். படிப்படியாக வளர்ச்சி ஏற்படும்பொழுது உற்பத்தி பெருகலாம். ஆனால் பணவீக்கம் ஏற்படாமல் இருக்கலாம். வேலை வாய்ப்புகளும் பெருகலாம். ஆனால் தொடக்கத்திலிருந்தே விலைகள் விரைவில் உயர்ந்தால் பணவீக்கம் ஏற்படும்.

உற்பத்தியும் அடக்கச் செலவும் உயருவதை அரசினர் பல்வேறு வழிகளில் தடைசெய்யலாம். தேவை பெருகுவதால் ஓரளவு விலைகள் உயரும். ஆனால் விலைகளும் கூலிகளும் போட்டி போட்டுக்கொண்டு உயரும்பொழுதே பணவீக்கம் ஏற்படுகிறது. ஆகையால் கூலிகளை நிலைப்படுத்தினால் விலைவாசிகள் மாறாமல் இருப்பதற்கு ஏற்பாடு செய்யலாம். இவ்வாறு செய்தால் தொழிலாளர்கள் சுதந்திரத்துடன் முதலாளிகளுடன் பேரம் செய்யும் உரிமைகளை இழப்பார்கள். மேலும் போர்க்காலத்தைத் தவிர மற்ற காலங்களில் கூலிகளைக் கட்டுப்படுத்தமுடியாது.

### (ii) விரைவில் ஏற்படும் பொருளாதார வளர்ச்சியும் மிகுதியான முதலீடும்.

வேலை நிறைவை ஏற்படுத்துவதற்கு ஒரு குறிப்பிட்ட முதலீடு வேண்டும். ஆகையால் மக்களுடைய செலவின் பல்வேறு பகுதிகளில் ஒரு சமநிலையை அரசினர் ஏற்படுத்தவேண்டும். குறிப்பாக முதலீட்டுச் செலவுக்கும் நடைமுறைச் செலவுக்கும் இடையே சமநிலை அவசியம் வேண்டும். பணத்தைச் சேமித்து முதலீடு செய்தால் பொருளாதாரம் எந்த அளவு வளர்ச்சியடையும் என்று நாம் கூறமுடியாது. ஆனால் முதலீடு மிகவும் குறைவாக இருந்தால் அது பெருகும்பொழுது பொருளாதாரம் கணிசமான வளர்ச்சியடையும். இந்த நிலையில் அரசாங்கம் முதலீட்டைப் பெருக்கவேண்டும். வரிச்சலுகைகளையும் மற்றச் சலுகைகளையும் காட்டித் தனியார் துறையில் முதலீட்டைப் பெருக்கலாம். பொதுத் துறையில் இருக்கும் தொழில்களிலும் முதலீடு பெருகவேண்டும். அதாவது முதலீட்டுக்கு வேண்டிய அளவு சேமிப்புப் பெருகுவதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்யவேண்டும். இதற்காக அரசாங்கம் வரவு செலவுத் திட்டத்தில் உபரியை ஏற்படுத்தலாம். அயல் நாடுகளில் மக்கள் கடன் வாங்குவதை அரசாங்கம் அனுமதிக்கவேண்டும். அவசியம் ஏற்பட்டால் அரசாங்கமே அயல்நாடுகளில் கடன் வாங்க வேண்டும்.

மொத்த முதலீட்டை மட்டும் பெருக்கினால் போதாது. பொருளாதார வளர்ச்சிக்கு அவசியமான துறைகளில் முதலீடு

பெருகவேண்டும். வரவு செலவுத் திட்டத்தில் உபரியை ஏற்படுத்தியோ அல்லது அயல்நாட்டில் கடன் வாங்கியோ முதலீட்டைப் பெருக்கினல் மட்டும் போதாது. சில குறிப்பிட்ட துறைகளில் முதலீட்டைப் பெருக்கவேண்டும். வளர்ச்சியடைய வேண்டிய தொழில்கள் எத்துறையில் இருக்கின்றனவோ அதற்குத் தகுந்த முறையில் அரசாங்கம் தன் கொள்கையை அமைத்துக் கொள்ளவேண்டும். சில நாடுகளில் முதலீட்டைப் பெருக்குவதற்கு அரசினர் நிதி திரட்டவேண்டும். இப்பொறுப்புச் சில சிக்கலான பிரச்சினைகளை ஏற்படுத்தும். ஆனல் தனியுற்பத்தியாளர்கள் நிதி திரட்டினல் இவை எழாமல் இருக்கலாம். உதாரணமாக அரசினர் பத்திர வெளியீட்டின்மூலம் நிதி திரட்டவேண்டும். தனி உற்பத்தியாளர்கள் பங்குகள் மூலம் நிதியைத் திரட்டுவர். பொருளாதாரத் துறையில் பின்தங்கிய நாடுகளில் அரசாங்கமே கணிசமான தொகையை முதலீடு செய்யவேண்டும். அவ்வாறு செய்தால்தான் போக்குவரவு வசதிகள் பெருகும்; பொருளாதார வளர்ச்சியும் விரைவில் ஏற்படும். சிறந்த அமைப்புள்ள மூலதனமார்க்கட்டு இல்லாததால் அந்த நாடு வேறு நாடுகளில் கடன் வாங்கும். அதாவது அயல் நாட்டினர் முதலீடு உள்நாட்டில் பெருகும்.

வளர்ச்சியும் தேக்கமும்: வளர்ச்சி விரைவில் ஏற்பட்டால் போதிய அளவு மூலதனம் இருக்காது. அரசினர் மூலதன வளர்ச்சிக்கு ஏற்பாடு செய்யவேண்டும் என்று நாம் கருதலாம். அவ்வாறு செய்தால்தான் மேலும் வளர்ச்சி ஏற்படும். செல்வம் செறிந்த நாட்டில் சேமிப்பு அதிகமாக இருக்கலாம். ஆகையால் துய்ப்புக்கே நாம் ஒரு தூண்டுதலைக் கொடுக்கவேண்டிய நிலைமை ஏற்படலாம் அல்லவா?

இந்த நிலைமை 1930-க்குப்பின் ஏற்பட்டது. முதலீட்டுக்குச் சிறந்த வாய்ப்புகள் நாட்டில் இல்லை. நாடு ஈட்டிய ஏராளமான செல்வமே வேலையின்மைக்குக் காரணமாக இருந்தது. அக்காலத்தில் தனியார் துறையின் சேமிப்பைப் பலர் கண்டனம் செய்தனர். ஆனல் இந்த நிலையில் தனியார் துறையின் சேமிப்புக் குறையாது. மக்கள் சிக்கன நோக்கத்துடன் பணத்தைச் சேமிப்பதில்லை. சுய நல நோக்குடன் தம் செல்வத்தைப் பெருக்குவதற்காக அவர்கள் பணத்தைச் சேமிக்கின்றனர். செல்வம் திரட்டுவதால் அவர்கள் சமுதாயத்தில் முன்பு இருந்ததைவிட உயர்ந்த வகுப்பினராக முடியும். விக்டோரியா இராணி காலத்தில் மக்கள் வாழ்க்கையில் அடைந்த வெற்றியை எல்லோரும் போற்றினர்கள். ஆனல் சிக்கனப் பழக்கத்தைக் கண்டனம் செய்தனர், ஆனல் விளம்பரம் சிக்கனப் பழக்கத்தையும் சேமிப்பையும் ஒழிக்காது.

சேமிப்பும் முதலீடும் தனியாட்களுடைய பொறுப்புகளாக மட்டும் இல்லை. அரசினர் அவை இரண்டையும் கட்டுப்பாடு செய்யலாம். மக்கள் சிக்கனமாகச் செலவு செய்தால் அரசாங்கம் தேசீயக் கடன் பத்திரங்கள் மூலம் சேமித்த தொகையைப் பெற்றுக் கொண்டு, தன் செலவு மூலம் நிலைமையைச் சரிக்கட்டலாம். முதலீட்டுத் துறையிலும் இதைச் செய்யலாம். அரசாங்கமும், அதன் கண்காணிப்பில் இருக்கும் ஸ்தாபனங்களும் முதலீட்டைப் பெருக்குவதற்கே முயற்சி செய்கின்றன. வட்டி வீதமோ அல்லது முதலீட்டின் மூலம் அரசாங்கம் பெறக்கூடிய வருவாயோ முதலீட்டை நிர்ணயம் செய்யவில்லை. முதலீடு செய்யவேண்டுமா அல்லது செய்ய வேண்டாமா என்பதை நிருவாகத் துறையில் இருக்கும் அதிகாரிகளே முடிவு செய்கின்றனர். எனவே இக்காலத்தில் முதலீட்டை ஒரே நிலையில் வைத்திருக்கலாம். பொருளாதார மாறுதல்களை அகற்றவும், முடிந்தால் முன்னேற்றத்திற்கு ஒரு தூண்டுதலைக் கொடுக்கவும் முதலீடு எந்த நிலையில் இருக்க வேண்டும் என்பதை அரசாங்கம் முடிவு செய்யவேண்டும்.

### (iii) அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் சமநிலையை ஏற்படுத்தல்.

உள்நாட்டிலும் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையிலும் சமநிலையை ஏற்படுத்துவது கடினம். இதற்காக அரசாங்கம் முயற்சி செய்யும்பொழுது சில பிரச்சினைகள் ஏற்படுகின்றன. குறிப்பாக மூன்றுவித ஆபத்துக்கள் ஏற்படலாம். அவைகள் ஏற்படாமல் இருப்பதற்கு நடவடிக்கைகள் எடுக்கவேண்டும். ஒரு நாட்டின் போட்டியிடும் (உலக மார்க்கட்டில்) சக்தி குறையலாம். தற்பொழுது நிலவும் நாணய மாற்றுவீதம் ஏற்றுமதிக்குத் தூண்டுதலைக் கொடுக்காததால் இறக்குமதிக்குச் சமமான மதிப்புள்ள பொருள்களை ஒருநாடு ஏற்றுமதி செய்யத் தவறலாம். வெளிநாட்டில் மந்தம் உருவானால் ஏற்றுமதி பாதிக்கப்படலாம். ஏற்றுமதித் தொழிலில் உள்ள தொழிலாளர்கள் முதலில் வேலையை இழக்கலாம். பிறகு மற்றவர்களும் வேலையை இழக்கலாம். மூலதனம் ஏற்றுமதியாவதால் ஒருநாடு பொன்னை இழக்கலாம். ஆனால் உள்நாட்டில் எந்தவித மாறுதலும் ஏற்படாமல் இருக்கலாம்.

(i) போட்டியிடும் சக்தி குறைதல்: உலக மார்க்கட்டில் ஒரு நாட்டின் போட்டியிடும் சக்தி குறைந்தால், அந்த நாடுகள் செலாவணியின் புறமதிப்பைக் குறைக்கவேண்டும். ஆனால் மக்களுடைய வருமானம் குறையாமல் இருத்தல் வேண்டும். செலாவணியின் புறமதிப்புக் குறைவதால் நாட்டின் போட்டியிடும் சக்தி மிகுதியடையும். ஒரு நாட்டில் விலைகள் உயர்ந்தாலோ 'அல்லது உற்பத்தி

குறைந்தாலோ அதன் போட்டியிடும் சக்தியும் ஏற்றுமதியும் குறையும். செலாவணியின் புறமதிப்புக் குறைவதால் ஏற்றுமதிப் பொருள்களின் விலைகள் குறையும். இறக்குமதிப் பொருள்களின் விலைகள் உயரும். வாழ்க்கைச் செலவு மிகுதியடைவதாலும், மக்களுடைய வருமானம் ஒரேநிலையில் இருப்பதாலும், அவர்களுடைய உண்மை வருமானம் சற்றுக்குறையும். மற்ற விலைகள் உயரும்பொழுது உண்மை வருமானம் மட்டும் உயராது. மக்களுடைய உண்மை வருமானத்தை ஒருநாடு குறைக்க விரும்பாவிடில், செலாவணியின் புறமதிப்புக் குறைவதால் நிரந்தரமான பயனை அடையமுடியாது. பணவருமானமும் (Money Income) கூலிகளும் உயரும்.

விலைகளிலும், பொருள்களின் அடக்கச் செலவிலும் இருநாடுகளிடையே இருக்கும் வேற்றுமையைவிடப் பணவருமானத்திலும், வேலைவாய்ப்புகளிலும் இருக்கும் வேற்றுமையே அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையின் சமநிலையை பாதிக்கும். ஒரு குறிப்பிட்ட நாணயமாற்று வீதம் (rate of exchange) நாட்டில் 10 சதவிதம் வேலையின்மையை ஏற்படுத்தும். ஆனல் இந்த வீதம் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் சமநிலையை ஏற்படுத்தலாம். வேலை நிறைவுக்குப் பொருத்தமான நாணய மாற்றுவீதம் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் சமநிலையை ஏற்படுத்தத் தவறலாம். நம் நாட்டிலும் வெளிநாட்டிலும் அடக்கச்செலவு சமமாக இருந்த போதிலும், ஏற்றுமதிக்கு ஒரு தூண்டுதலைக் கொடுக்க வேண்டிய நிலைமை ஏற்படலாம். ஏனெனில் உபரியாகப் புழக்கத்தில் வரும் பணத்தைக் கொண்டு மக்கள் இறக்குமதிப்பொருள்களையும் ஏற்றுமதிப் பொருள்களையும் வாங்குவதைத் தவிர்க்கவேண்டும். இந்த நிலைமையில் இறக்குமதியைக் குறைக்க வேண்டும்.

அயல்நாட்டுக் கொடுப்பல்நிலை பாதகமாக இருக்கும்பொழுது ஒருநாடு செலாவணியின் புறமதிப்பைக் குறைக்காவிடில், வேறு மூன்று வழிகளைப் பின்பற்றலாம். (1) வேலை நிறைவு ஏற்படுத்த முயற்சி செய்யாமல் பணச்சுருக்கம் செய்யலாம். இப்படிச் செய்வதால் உற்பத்தி, வேலை வாய்ப்புகள் மக்களுடைய வருமானம் முதலியவை குறையும். மிகவும் இக்கட்டான நிலையிலேயே ஒரு நாடு இந்தவழியைப் பின்பற்றும். அவசரகாலத்தில் நாணயத்தின் புறமதிப்புக் குறைவதால் வருமானம் குறைவதை ஒருநாடு ஏற்றுக் கொள்ள மறுத்தால், பணச்சுருக்கம் செய்ய வேண்டிய அவசியம் ஏற்படும் (2) நாளடைவில் நிலைமை முன்னேறலாம் என்றும், வேலை நிறைவை ஏற்படுத்தும் கொள்கை வெற்றிகரமாக இருக்

கின்றது என்றும் கருதி ஒருநாடு கொடுப்பல் நிலையைச் சரிப்படுத்துவதற்குத் தன் காப்பு நிதியைப் பயன்படுத்தலாம். ஒருநாடு ஏராளமான காப்புநிதியைக் கொண்டிருந்தாலன்றி இக்கொள்கையைப் பின்பற்ற முடியாது. நாட்டின் செலாவணி நிலையும் செம்மையாக இருத்தல் வேண்டும். (3) மூன்றாவதாக இறக்குமதியைத் தடைகளுக்குட்படுத்தலாம். இத்தடைகள் ஏற்றுமதியைப் பாதிக்காவிடில் ஒரு நாடு மற்றொன்றுக்குச் செலுத்தவேண்டிய தொகையைக் குறைக்கும். ஏற்றுமதி, இறக்குமதிப் பொருள்களின் விலைகளும் மாறா. சில பொருள்களையோ அல்லது ஒரு குறிப்பிட்ட அளவுப் பொருள்களுக்கு மேலோ இறக்குமதி செய்வதை ஒருநாடு தடைசெய்யலாம். மேலே குறிப்பிட்ட முறைகளில் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் சமநிலையை ஏற்படுத்தலாம். ஆனால் இவ்வாறு செய்வதால் மற்ற நாடுகள் ஆத்திரப்படலாம். ஒரு நாட்டில் விலைவாசி மற்ற நாடுகளில் இருப்பதைவிட அதிகமாக இருந்தால், இறக்குமதிக் கட்டுப்பாடுகள் மூலம் நிலைமையைச் சமாளிப்பது சரியல்ல.

(ii) **வெளி நாடுகளில் தேவை குறைதல்:** ஒரு நாட்டின் போட்டியிடும் சக்தி குறைவதால் அதன் நிதிநிலைமை பாதிக்கப்படும். வெளி நாடுகளின் தேவை குறைவதால் உள்நாட்டில் வேலையின்மை ஏற்படும். முதன் முதலில் ஏற்றுமதித் தொழிலில் பணியாற்றும் தொழிலாளர்கள் வேலையை இழப்பார்கள். அரசாங்கம் நடவடிக்கை ஒன்றும் எடுக்காவிடில் மற்றத் தொழில்களிலும் வேலையை இழப்பார்கள். இந்த நிலையில் ஒருநாடு எடுக்கும் நடவடிக்கை அதன் காப்பு நிதியைப் பொறுத்திருக்கும். ஒருநாடு ஏராளமான தொகையைக் காப்பு நிதியாக வைத்திருந்தால் அது நிலைமையைச் சமாளிக்கக் காப்பு நிதியைப் பயன்படுத்தலாம். மேலும் நாட்டில் தாராளமாகச் செலாவணிப் பெருக்கம் செய்யலாம். அது மிகவும் குறைவான தொகையைக் காப்பு நிதியாகக் கொண்டிருந்தால் செலாவணிப் பெருக்கம் செய்ய முடியாது. அவ்வாறு செய்தால் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை மேலும் மோசமாகி விடும். இறக்குமதியை உடனடியாகக் குறைப்பதற்கு அதைத் தடைகளுக்குட்படுத்தவேண்டும். பெரிய பொருளாதார மந்தம் ஏற்பட்டால் ஒரு நாடு இந்த முறையைக் கையாள வேண்டும். ஒவ்வொரு நாடும் இறக்குமதியைக் குறைத்தால் அவைகளுடைய தொல்லைகள் மேலும் மிகும். ஆனால் சாதகமான அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையைக்கொண்ட நாடுகளிலிருந்துவரும் இறக்குமதியை மட்டும் கட்டுப்படுத்தலாம், மற்ற நாடுகளிலிருந்து வரும் இறக்குமதியைத் தடைசெய்யாமல் இருக்கலாம். இவ்வாறு செய்வதால் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் சமநிலை ஏற்படலாம். ஆனால் இவ்வாறு

இறக்குமதியில் பேதங்காட்டுவது சில தொல்லைகளை ஏற்படுத்தும். ஆனால் வெளிநாடுகள் இதை ஆட்சேபிக்கும். வேலையின்மைப் பிரச்சினையைச் சமாளிக்க வேண்டிய நாடுகள் இதைக் கட்டாயமாக எதிர்க்கும். ஆகையால் இந்த முறையை எதிர்க்கக்கூடிய நாடுகளுடைய சம்மதத்தைப் பெற்ற பிறகு இதைப் பின்பற்றுவதே சிறந்தது. ஏனெனில் சாதகமான அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையைக் கொண்ட நாடு செலாவணிப் பெருக்கம் செய்யலாம். இவ்வாறு செய்வதால் ஓரம் காட்டும் பழக்கத்தின் அவசியத்தை ஒரு நாடு நீக்கலாம். ஒரு நாட்டில் அரசினர் மக்களுடைய துய்ப்பைக் கட்டுப்பாடு செய்திருக்கலாம். இறக்குமதிக் கட்டுப்பாட்டுக்கும் இக்கட்டுப்பாட்டுக்கும் ஒரு பொருத்தம் இருக்கவேண்டும். உதாரணமாக, போகப் பொருள்களை (Luxuries) இறக்குமதி செய்வதை மட்டும் தடை செய்தால் போதாது. ஏனெனில் மொத்த இறக்குமதியில் போகப்பொருள்கள் ஒரு சிறிய பகுதியாகவே இருக்கும். மேலும் போகப்பொருள்களின் இறக்குமதி தடை செய்யப்பட்டால் வெளிநாடுகள் எதிர் நடவடிக்கைகளை (Retaliatary Measures) எடுக்கலாம். உணவுப் பொருள்களுடைய இறக்குமதியைத் தடைசெய்ய வேண்டிய அவசியம் ஏற்படலாம். அல்லது கச்சாப் பொருள்களுடைய இறக்குமதியைக் குறைத்து, அதை உற்பத்தியாளர்களிடையே பங்கீடு செய்யலாம். மந்தம் தாற்காலிகமானது என்று ஒருநாடு கருதினால் சில தீயவிளைவுகள் ஏற்படலாம். இறக்குமதியைக் குறைக்கக் கட்டுப்பாடுகளை அமலில் கொண்டு வருவது எளிது. ஆனால் அவைகளை மந்தம் மறைந்த பிறகு நீக்குவது கடினம். மந்தகாலத்தில் இறக்குமதிகுறைவதால், மக்கள்தேவையைப் பூர்த்தி செய்வதற்காகச் சில புதிய தொழில்கள் நாட்டில் வளர்ச்சியடையும். மந்தம் மறைந்த பிறகு வர்த்தகத்தடைகளை நீக்கினால் புதிய தொழில்கள் பாதிக்கப்படும். அவைகளைப் பாதுகாப்பதற்காகத் தடைகளை நிரந்தமாக வைத்துக் கொள்ளவேண்டும். வெளிநாட்டு வர்த்தகம் இதனால் குறையும்.

(iii) மூலதனம் வெளியேறுதல்: இங்கிலாந்திலிருந்து மூலதனம் வெளியேறினால் பவுனின் அளிப்பும் மற்றச் செலாவணிகளின் தேவையும் பெருகும். மக்கள் ஸ்டெர்லிங் நாணயத்தில் நம்பிக்கை கொள்ளாமல் இருந்தாலோ அல்லது வெளிநாடுகளில் வட்டி வீதங்கள் அதிகமாக இருந்தாலோ மூலதனம் ஏற்றுமதியாகலாம். செலாவணியில் மக்களுடைய நம்பிக்கை குறையும்பொழுது மையபாங்கு வட்டி வீதத்தை உயர்த்தலாம். வட்டி வீதங்கள் உயர்வதால் செலாவணியின் மதிப்பு உயரும் என்று மக்கள் கருதினால் மூலதன ஏற்றுமதி குறையும். மூலதன ஏற்றுமதிக்கு அயல்நாடுகளில் வட்டி வீதம் அதிகமாக இருப்பது காரணமாக இருந்தாலும், உள்

நாட்டில் வட்டி வீதங்கள் உயருவதால் மூலதன ஏற்றுமதி குறையும். வெளி நாடுகளில் வட்டி வீதங்கள் இருப்பது போல் உள்நாட்டு வீதங்களையும் உயர்த்த வேண்டும். ஆனால் உள்நாட்டில் நிலைமை குறைந்த வட்டி வீதத்திற்கே உகந்ததாக இருக்கலாம். உள்நாட்டில் பணப்பெருக்கமும் குறைந்த வட்டி வீதங்களும் தேவைப்படலாம்.

மூலதன ஏற்றுமதியை நேரடியாகக் கட்டுப்படுத்துவதே சிறந்த கொள்கை என்று நாம் கருதலாம். ஆனால் இக்கட்டுப்பாட்டை அமலில் கொண்டு வருவது எளிதல்ல. பலர் இக்கட்டுப்பாடுகளை மீறுவர். மேலும் ஏற்றுமதியாளர்கள் வெளிநாடுகளிலிருந்து ஏராளமான தொகையை வசூல் செய்ய வேண்டியிருக்கலாம். அவர்கள் பவுனில் கொண்டிருக்கும் நம்பிக்கை குறைந்தால் அல்லது வெளிநாடுகளில் வட்டி வீதங்கள் அதிகமாக இருந்தால், அவர்கள் தமக்குச் சேர வேண்டிய தொகையை வசூல் செய்வதைத் தாமதிக்கலாம்[1] இந்த நிலையில் நாடு பெறும் தொகையை விட அயல்நாடுகளுக்குச் செலுத்தும் தொகை மிகுவதால் காப்பு நிதி குறையும்.

அயல்நாடுகளுடைய செலாவணிக் கொள்கை நம் நாட்டைப் பாதிக்காமல் இருப்பதற்குப் பல ஏற்பாடுகளைச்செய்யலாம். ஆனால் கடன் தொகையும் மூலதனமும் அயல்நாட்டிலிருந்து நம் நாட்டுக்கு தடையற்ற முறையில் வந்தால் நம்நாட்டில் வட்டி வீதத்தை ஒரே நிலையில் வைத்திருக்க முடியாது. செலாவணிக் கொள்கை வெற்றிகரமாக இருக்க வேண்டுமானால் அயல்நாட்டுச் செலாவணியை ஒருநாடு வாங்கும் விலைக்கும், விற்பனை செய்யும் விலைக்கும் உள்ள வேறுபாட்டை அதிகரிக்க வேண்டும்[2].

1 ஆங்கிலேய இறக்குமதியாளர்கள் வெளிநாடுகளுக்குச் செலுத்த வேண்டிய தொகைகளைச் சரிவர அவ்வப்போது செலுத்துவார்கள். ஏனெனில் தாமதம் செய்தால் அயல்நாட்டுச் செலாவணியின் மதிப்பு உயரலாம். அதிகப் பணத்தைச் செலுத்தவேண்டும். ஆனால் ஏற்றுமதியாளர்கள் பெறும் அயல்நாட்டுச் செலாவணியைத் தம் நாட்டுக்கு எடுத்துக் கொண்டு வரமாட்டார்கள். வட்டி வீதத்தில் இருநாடுகளிடையே வேறுபாடுகள் இருந்தாலும் இதே விளைவு ஏற்படும்.

2 இப்பொழுது இருக்கும் விலைகள் 2. 78—2. 82. அமெரிக்காவில் வட்டி வீதம் இங்கிலாந்தைவிட 1 சதவீதம் அதிகமாக இருக்கின்றது என்று கற்பனை செய்து கொள்வோம். இப்பொழுது இருக்கும் வேறுபாட்டை (டாலரின் விலையில்) இரட்டித்தால், அரசினர் பவுனின் புறமதிப்பைக் குறைக்கலாம். பவுனின் மதிப்பை 2. 77 என்று குறைத்தால், மூலதனக் கடன் தொகைகள் வெளியேறுவதைத் தடைசெய்யலாம். ஆனால் நடைமுறையில் உடனடி வீதத்தைவிட (Spot rate) முன்னோக்கிய வீதமே (Forward rate) மூலதனக் கடன் தொகைகள் வெளியேறுவதற்குக் காரணமாக இருக்கின்றது. வட்டி வீதங்களிடையே உள்ள வேற்றுமைகளைச் சரிப்படுத்துவதற்கு முன்னோக்கிய வீதத்திற்கும் உடனடி வீதத்திற்கும் இடையே ஒரு சதவீத வேற்றுமை இருத்தல்வேண்டும்.

உலகநாடுகள் எல்லாம் சேர்ந்து கூட்டாகச் செய்ய வேண்டிய காரியம் : ஒவ்வொரு நாடும் தனித்தனியாகத் தன் நலத்தைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்ற கருத்தையே நாம் மேலே விளக்கியிருக்கிறோம். தற்காலத்தில் கட்டுப்பாடுகள், திட்டங்கள் முதலியவை இருந்த போதிலும் பொருளாதார மந்தம் ஏற்படலாம் என்ற அச்சம் இருக்கின்றது. அதைத் தவிர்க்கவே ஒவ்வொரு நாடும் முயற்சி செய்கின்றது. ஆனால் முக்கியமான நாடுகள் கூட்டாக ஒரு முடிவுக்கு வருவதே சிறந்ததாகும். இரண்டு அல்லது மூன்று நாடுகள் தம் பொருளாதாரத்தை நிலைப்படுத்தினால் வேறு பல நாடுகளிலும் வேலை நிறைவு ஏற்படலாம். பெரிய நாடுகள் தம் முயற்சியில் தோல்வி யடைந்தால், மற்ற நாடுகளும் தோல்வியடையும். சில பன்னாட்டுப் பொருளியலார் கூறியபடி தம் நாடுகளில் பொருளாதாரத்தை நிலைப்படுத்தாத நாடுகள் தண்டனைக்குட்படுத்தப்பட வேண்டும். ஒரு நாடு இறக்குமதியைக் குறைத்தால் அதனால் மற்றொரு நாட்டின் அயல்நாட்டுக் கொடுப்பல்நிலை பாதிக்கப்படலாம். அந்த நாட்டுக்கு[1] இறக்குமதியைக் குறைத்த நாடு நிதியுதவி செய்ய வேண்டும். அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் பற்றுக் குறை இருக்கும் நாடுகளுக்குப் பன்னாட்டு நாணயநிதி (I. M. F) உதவி செய்யலாம். கொடுப்பல் நிலையில் உபரி இருக்கும் நாடுகளை எதிர்த்து மற்ற நாடுகள் பேதங்காட்டுதலைப் பன்னாட்டு நாணய நிதி அனுமதிக்கலாம். உலகநாடுகளின் ஸ்தாபனங்களும் பெரிய நாடுகளும் முயற்சி செய்தால் பொருளாதார மந்தங்களை எளிதில் தவிர்க்கலாம். ஒருநாடு தனிப்பட்ட முறையில் செய்யும் முயற்சி எப்பொழுதும் வெற்றிகரமாக இருக்கும் என்று சொல்ல முடியாது.

**பற்றுக்குறையை நீக்குதல் :**

தேவை மிகுதியடையும் பொழுது சில பொருள்களுக்கு மிகவும் அதிகமான தேவை ஏற்படும். வேறுசில பொருள்களுடைய தேவை விரைவில் மிகுதியடையாது. ஆகையால் சில பகுதிகளிலும், சில தொழில்களிலும் கூலி விரைவில் உயரும். வேறுசில பகுதிகளிலும் தொழில்களிலும் கூலி விரைவில் உயராது. இந்த நிலையில் சில இடங்களிலும், சில தொழில்களிலும் வேலையின்மை ஏற்படலாம். சில பொருள்களின் விலைகள் மட்டும் திடீரென்று உயரலாம். இதன் விளைவாக மற்ற விலைகளும் பாதிக்கப்படலாம். தேவை மேலும் அதிகரித்தால் நிலைமை மோசமாகும். சில தொழில்களின் உபரி உற்பத்தியை விற்பனை செய்ய ஏற்பாடு செய்யவேண்டும். பற்றுக் குறை உள்ள பொருள்களின் தேவையைக் குறைக்கவேண்டும். உபரிப்பொருள்களின் தேவையை அதிகரிக்க வேண்டும்.

1 'National and International Measures for Full Employment (United Nations, 1950)

ஆனால் இந்த நடவடிக்கைகளை எளிதில் எடுக்கமுடியாது. மிகவும் குறைவாக இருக்கும் பொருள்களுடைய விலைகள் உயரும். மக்கள் பதிலிப் பொருள்களை (Substitutes) வாங்குவார்கள். வேண்டிய தொழிலாளர்கள் இல்லாத இடங்களில் அடக்கச்செலவு அதிகரிக்கும். இதனால் மற்ற இடங்களில் மிகுதியான பொருள்களை மக்கள் வாங்குவார்கள். இத்தகைய இயற்கைச் சக்திகளைத் தடை செய்வதால் தீமையே விளையும். ஆனால் விலைவாசிகள் மிகவும் பாதிக்கப்பட்டால் அதனால் பெரும் தீய விளைவுகளே ஏற்படும். விலைவாசிகளில் சமநிலை பாதிக்கப்பட்டாலும், மீண்டும் பழைய நிலைமை திரும்பாவிடில் அரசினர் தேவைகுறைவதால் வாடும் தொழில்களை ஆதரித்து நிலைமையைச் சமாளிக்கலாம். ஏனெனில் அரசாங்கம் ஏராளமான பொருள்களை வாங்குகின்றது. சில பொருள்கள் குறைவாக உற்பத்தியாவதால் அரசாங்கம் அவைகளை இறக்குமதி செய்யலாம். வேண்டுமென்றால் அரசினர் சில தொழில் களுக்கு நிதியுதவியும் செய்யலாம். சில பகுதிகளில் வேலையின்மை ஏற்பட்டால் அப்பகுதிகளில் தொழிற்சாலைகளை நிறுவுவோருக்கு அரசினர் நிதியுதவி அளிக்கலாம். அவர்களுக்காகத் தொழிற் சாலைகளை அரசாங்கம் அமைக்கலாம். ஆனால் உடனடியாக இக் கொள்கை பயனளிக்கும் என்று நாம் எதிர்பார்க்கமுடியாது. பல ஆண்டுகளுக்குப்பின்கூட இக் கொள்கை எதிர்பார்த்த பயனைக் கொடுக்கத் தவறலாம்.

**ஏற்றுமதி குறைவதால் சில பகுதிகளிலும் தொழில்களிலும் வேலை யின்மை ஏற்படுதல்:** கடந்த 50 ஆண்டுகளில் இங்கிலாந்தின் ஏற்று மதி அடிக்கடி பாதிக்கப்பட்டமையால் ஏற்றுமதித் தொழில்கள் நலிவுற்றன. இத்தொழில்களில் அவ்வப்போது வேலையின்மை ஏற்பட்டது. இத் தொழில்கள் நாடெங்கும் பரவியிருந்தால் தேவையைப் பொதுவாகப் பெருக்கி நிலைமையைச் சமாளிக்கலாம். ஏற்றுமதித் தொழில்களில் பல்வேறு துறைகளில் திறமை வாய்ந்த தொழிலாளர்கள் அமர்ந்திருந்தால் அவர்களுக்கு எளிதில் புதிய வேலைகளைத் தேடித்தரலாம். நிலைமையைச் சமாளிப்பதற்காக இறக்குமதியைக்கூடக் குறைக்கவேண்டியதில்லை. சில ஏற்றுமதித் தொழில்கள் உள்நாட்டில் பயன்படும் பொருள்களை உற்பத்தி செய்யலாம். ஆனால் ஏற்றுமதித் தொழில்கள் சில சிறப்பான பொருள்களையே உற்பத்தி செய்வதால் பொதுவாகத் தேவையை நாட்டில் பெருக்கும்பொழுது இத்தொழில்கள் பயனடைவதில்லை. உதாரணமாக மக்கள் பீர் (Beer) என்ற பானத்தை மிகுதியாக அருந்துவதால் கிளாஸ்கோ (Glasgow) நகரில் கப்பல் கட்டும் தொழிலாளர்கள் அதிகமான வேலை வாய்ப்புகளைப் பெற மாட்டார்கள். கப்பல் கட்டும் தொழிலில் வேலை செய்வோர்

வேலையை இழக்கக்கூடாது என்று அரசாங்கம் கருதினால் அரசினர் அவர்களுக்குப் புதிய வேலைகளில் பயிற்சியளிக்கவேண்டும். இதற்கான செலவை அரசாங்கமே ஏற்றுக்கொள்ளவேண்டும். இப்படிச் செய்தால் மீண்டும் கப்பல்கட்டும் தொழில் பெருகுவதற்கு வாய்ப்பு ஏற்படும்பொழுது (அயல்நாட்டுத் தேவையின் காரணமாக) அத் தொழில் வளரமுடியாத நிலையில் இருக்கும்.

இப்பிரச்சினையை எளிதில் தீர்க்கமுடியாது. ஏற்றுமதி குறைவதால் பாதிக்கப்பட்ட தொழில்களை அரசாங்கம் ஆதரிக்கலாம். அதாவது அத்தொழில்களுடைய பொருள்களை அரசினர் வாங்கலாம். ஆனால் ஏராளமான பொருள்களை வாங்குவதற்கு அரசினர் ஒப்பந்தம் செய்துகொள்வதும் எளிதல்ல. ஏனெனில் அரசாங்கம் விரும்பும் பொருள்களை இத் தொழில்கள் உடனடியாக உற்பத்தி செய்யமுடியாது. ஏற்றுமதித் தொழில்கள் சில துணைப் பொருள்களை உற்பத்திசெய்வதற்கு எப்பொழுதும் தயாராக இருத்தல்வேண்டும். ஏற்றுமதி குறையும்பொழுது துணைப் பொருள்களை மிகுதியாக உற்பத்திசெய்யலாம். மேலும் ஏற்றுமதி குறையும்பொழுது வேலை நேரத்தை உற்பத்தியாளர்கள் தாமாகவே குறைக்கலாம். இவ்வாறு வேலை நேரத்தைக் குறைப்பதால் ஏற்படும் நஷ்டத்தை அரசாங்கமும், தொழிலதிபர்களும், தொழிலாளர்களும் பகிர்ந்து கொள்ளவேண்டும். இவ்வாறு செய்வதால் ஏற்றுமதித் தொழில்கள் தொழிலாளர்களை இழக்காமலிருக்கலாம். வேலையின்மையும் ஏற்படாது. தொழிலாளர்களுக்குப் புதிய வேலைகளில் பயிற்சியளிப்பதால் அவர்களுடைய இடப்பெயர்ச்சியை (Mobility) அதிகரிக்கலாம். இக் கொள்கை எந்த அளவுக்கு வெற்றிகரமாக இருக்கும் என்று நாம் கூறமுடியாது. பொதுத் துறையில் செலவு அதிகரிப்பதால் வேலைவாய்ப்புகள் பெருகும் என்பது உண்மையானால், மந்த காலத்திலும், ஏற்றுமதி குறையும்பொழுதும் ஏற்படும் வேலையின்மையை நீக்குவதற்கு அரசினர் ஏற்பாடு செய்யவேண்டும்.

## 35. திட்டம் வகுத்தல்

நாம் எல்லோரும் திட்டம் வகுக்கின்ருேம். எவ்வாறு நமது வருமானத்தைப் பயன்படுத்தவேண்டும் என்று நாம் முடிவுசெய்யவேண்டும். உற்பத்தியாளர்கள் எப்பொருள்களை உற்பத்திசெய்யவேண்டும், எவ்வாறு உற்பத்தி செய்யவேண்டும், எங்கு உற்பத்தி செய்யவேண்டும் என்று முடிவு செய்யவேண்டும். நாம் திட்டமிடுவதில்லை, அவ்வப்போது எழும் பிரச்சினைகளையே தீர்க்கின்ருேம் என்று கூறமுடியாது. பொருளாதாரத் திட்டங்களும் இவ்வாறே இருக்கின்றன. அவை அவ்வப்போது எடுக்கப்பட்ட முடிவுகள், முன்கூட்டியே வகுக்கப்பெற்ற திட்டங்கள் அல்ல என்று நாம் கூற முடியாது. சிலர் நன்ருகத் திட்டம் வகுக்கின்றனர். அவர்கள் எதிர்காலத் தேவையை நன்கு உணர்ந்து சிறந்த முடிவுகளை எடுக்கின்றனர். ஒரு குறிப்பிட்ட நோக்கத்துடன் சிலர் சிறந்த கொள்கையைப் பின்பற்றுகின்றனர். திட்டம் சரியாகச் செயலாற்றப்படாவிடினும், எதிர்பார்த்த பலன் ஏற்படாவிடினும், திட்டமிடுவோரை மக்கள் திறமையற்றவர்கள் என்று கூறுகின்றனர்.

அரசியலாரும் நம்மைப் போலவே திட்டமிடுகின்றனர். ஜியார்ஜ் அன்வின் (George Unwin) என்பவர் அரசாங்கத்தை 'அரசாங்க அலுவலகங்களில் இருக்கும் வழக்கை விழுந்தவர்களின் கூட்டம்' என்று கூறினர். பொருளாதாரக் கொள்கையைத் தயார் செய்ய விரும்பினல், அரசாங்கமும் திட்டம் வகுக்கவேண்டும். எதிர்காலத்துப் போக்குகளை நன்கு உணரச்செய்யவேண்டும். செம்மையான கொள்கையைப் பின்பற்றவேண்டுமென்று கருதினல், அரசாங்கம் தன் திட்டத்தை ஓர் அறிக்கை மூலம் வெளிப்படுத்தவேண்டும். அவ்வப்போது பிரச்சினைகளைத் தீர்க்கும் பழக்கத்தைக் கைவிடவேண்டும். ஒரு பெரிய ஸ்தாபனம் திட்டம் வகுப்பதிலும், அதைச் செயலாற்றுவதிலும் தவறுகளைச் செய்வது இயற்கையே. அரசாங்கம் நாட்டில் உள்ள ஸ்தாபனங்களுள் மிகப் பெரிய ஸ்தாபனமாகும். ஆகையால் அரசாங்கத் திட்டங்கள் சரிவரச் செயலாற்றப்படாமல் இருக்கலாம்,

அரசாங்கம் தனியாட்களைப்போல் வருமானம் பெறுகின்றது, செலவு செய்கின்றது, சொத்துகளை வைத்துக்கொண்டிருக்கின்றது. ஆகையால் அரசினர் திட்டமிடவேண்டும். மேலும் அரசாங்கம் நாட்டின் பொருளாதாரத்தைச் செம்மையாக வைத்துக் கொள்ளவேண்டும். நாட்டில் வேலை நிறைவை ஏற்படுத்த வேண்டும். உற்பத்திச் சாதனங்களை மிகவும் சிறந்த முறையில் பயன்படுத்தவேண்டும். சமுதாயத்தில் செல்வப் பங்கீடு நேர்மையாக இருத்தல்வேண்டும். இந்த நோக்கங்களுடன் அரசாங்கம் பல்வேறு கட்டுப்பாடுகளை அமலில் கொண்டுவரும். இக்கட்டுப்பாடுகளை ஒருமுகப்படுத்தினால் அரசினர் திட்டம் உருவாகும்.

**திட்டம் வகுக்கும் முறைகள்**

இருவகைத் திட்டங்களை அரசாங்கம் வகுக்கலாம். மக்களுடைய தேவையைக் கட்டுப்படுத்தி, அதன்மூலம் உற்பத்தியைத் தம் விருப்பம்போல் மாற்றியமைக்கலாம், அல்லது உற்பத்தியை நேரிடையாகக் கண்காணிக்கலாம். தனியார்துறை உற்பத்திமுறையை ஏற்றுக்கொண்ட நாடுகள் முதல் முறையைப் பின்பற்றுகின்றன. இந்த முறையில் உற்பத்திச் சாதனங்கள் எவ்வாறு பயன்படுத்தப்படவேண்டும் என்பதை தனியுற்பத்தியாளர்கள் முடிவுசெய்யலாம். அதாவது மார்க்கட்டில் நிலவும் இயற்கைச் சக்தியே, (மக்கள் தேவையை அடிப்படையாகக் கொண்ட சக்தியே) உற்பத்திமுறையை நிர்ணயம் செய்கின்றது. இரண்டாவது முறைக்கு ஒரு பொருளாதாரத் திட்டம் வேண்டும். பொருள்கள் எந்த அளவில் உற்பத்தியாகவேண்டும் என்பதை அரசினர் முடிவுசெய்யவேண்டும். இந்த அளவுகளுக்கும் நாட்டில் கிடைக்கும் உற்பத்திச் சாதனங்களின் அளவுகளுக்கும் பொருத்தமில்லாமல் இருக்கலாம்.

இரு முறைகளுக்கும் பல வேறுபாடுகள் இருக்கின்றன. மார்க்கட்டின் இயற்கைச் சக்தியையே அடிப்படையாகக் கொண்டுள்ள ஒருமுறை, உற்பத்தியாளர்களுக்குத் தூண்டுதலைக் கொடுத்தும், சில துறைகளில் உற்பத்தியைக் குறைப்பதற்கு ஏற்பாடு செய்தும் அரசாங்கத்தின் நோக்கங்களை நிறைவேற்றுகின்றது. மற்றொரு முறைப்படி அரசாங்கம் உற்பத்தியை நேரிடையாகக் கண்காணிக்கின்றது. ஒரு முறைப்படி அரசாங்கம் துய்ப்போரையும் மற்றொரு முறைப்படி உற்பத்தியாளர்களையும் கட்டுப்படுத்துகின்றது. துய்ப்போருடைய எண்ணங்களையும் கருத்துகளையும் உணர்ந்து விலைவாசி முறையைப் (Price-Mechanism) பயன்படுத்தி அரசினர் தம் விருப்பங்களை நிறைவேற்றலாம். விற்பனையையும், பொருள்களை வாங்குதலையும் இந்த முறையின் அடிப்படையாகக் கருதுகின்

றனர். மக்கள் நேர்த்தியான பொருள்களை வாங்கமுடியும் என்பதை ஏற்றுக்கொள்ளாதவர்கள் இந்த முறையைக் குறைகூறுகின்றனர். இயற்கையான மார்க்கட்டுச் சக்தி சிறந்த முறையில் இயங்காது என்பது இவர்கள் கருத்தாகும். திட்டமிடும் முறையைப் பின்பற்றினல் அரசாங்கம் பொறியாளரைப்போல் (Engineer) அல்லது தொழிலதிபர்களைப்போல் பொருள்களை உற்பத்தி செய்ய ஏற்பாடு செய்யும். அரசாங்கம் தேவையைப் பற்றிக் கவலைப்படாமல் உற்பத்திப் பெருக்கத்தையே விரும்பும். அடக்கச் செலவையும் இலாபத்தையும் பற்றிக் கவலைப்படாமல் அரசாங்கம் மேலும் உற்பத்தியைப் பெருக்குவதிலேயே கவனம் செலுத்தும். தேவையைப் பற்றிக் கவலைப்படாமல் உற்பத்தியைப் பெருக்குவதிலேயே தன் கவனத்தைச் செலுத்துவதால் அரசாங்கம் சர்வாதிகார அதிகாரங்களைச் செலுத்தும்.

இந்த இருமுறைகளுடைய கோட்பாடுகளும் வேறுபட்டிருக்கின்றன. ஆனல் நடைமுறையில் இவ்விருமுறைகளும் அதிகம் வேறுபட்டிருக்கவில்லை. தனியார் துறையில் உற்பத்தி நடைபெறும் ஒரு நாட்டில் பொதுத்துறையிலும் சில பொருள்கள் உற்பத்தியாகலாம். ஆகையால் அரசினர் இத்துறையில் உற்பத்தியையும் முதலீட்டையும் கண்காணிக்கலாம். அரசாங்கம் வரிகள் மூலம் மக்கள் செய்யும் சில செலவுகளை வேறு வழிகளில் திருப்பலாம். அரசினர் கொள்கையை மக்கள் அடுத்த பொதுத் தேர்தலிலேயே ஆதரிக்கலாம். அரசாங்கம் சில துறைகளில் உற்பத்தியைப் பெருக்கவும் சில துறைகளில் குறைக்கவும் செய்யும் நோக்கத்துடன் இயற்கை சக்திகளை மாற்றலாம். இவ்வாறு செய்யும் பொழுது திட்டமிடுவதால் செய்யும் விளைவுகள் ஏற்படும். பொருள்களைப் பயன்படுத்துவோர் ஓட்டுரிமை கொண்டிருப்பதால் இருமுறைகளும் வேறுபட்டிருக்கின்றன.

திட்டமிடும் குழு மக்களுடைய விருப்பங்களைப் புறக்கணித்துத் திட்டங்களை வகுத்து அதிகாரிகளை அதைச் செயலாற்றும்படி ஆணையிடவில்லை. மக்களுடைய விருப்பங்கள் ஓரளவு சக்தியுடையனவாக இருக்கின்றன. உற்பத்தியாளர்கள் மக்கள் கருத்துக்களைப் புறக்கணித்தால் சிறந்த முறைகளைப் பின்பற்றமுடியாது. ஒரு பொருளாதாரத் திட்டம் அமலில் இருப்பதால் மக்களுடைய விருப்பங்கள் உற்பத்தியை எவ்விதத்திலும் பாதிக்கவில்லை என்று நாம் கூறமுடியாது. மக்கள் தமக்குவேண்டிய பொருள்களை வாங்கமுடியாது, அரசினர் கொடுக்கும் பொருள்களையே ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று நாம் கூறமுடியாது. திட்டமிடுவோர் சாதாரணமாகச் சர்வாதிகார அதிகாரங்களைச் செலுத்துகின்றனர்.

ஆனால் மக்களுடைய விருப்பங்களை அவர்கள் அறிய முயற்சி செய்கின்றனர். உற்பத்தி வேலைகள் எல்லாம் திட்டப்படியே நடக்கின்றன என்று நாம் கருதுவதும் தனியார் உற்பத்திமுறைக்கும் திட்டமுறைக்கும் எவ்வித ஒற்றுமையும் இல்லை என்று கருதுவதும் தவறாகும். விலைகள், அடக்கச் செலவு, மார்க்கட்டின் இயற்கைச் சக்தி முதலியவைகளைப் பரிசீலனை செய்து திட்டக் குழுவினர் திட்டங்களை வகுக்கின்றனர்.

**இங்கிலாந்தில் திட்டமிடுதல்**

இங்கிலாந்தில் அரசினர் ஆண்டுதோறும் வரவு செலவுத் திட்டத்தைத் தயார் செய்கின்றனர். இத்திட்டம் நாட்டின் நிதி நிலைமையையும், பொருளாதார நிலைமையையும் எடுத்துக்காட்டும். வருமானம், விலைகள், வேலை வாய்ப்புகள் முதலியவை எவ்வாறு பாதிக்கப்படுகின்றன என்பதை வரவு செலவுத் திட்டம் காட்டுகின்றது. எத்தனை பேர்கள் வேலைகளை நாடுகின்றனர், எந்த அளவு உற்பத்தி பெருகும் என்பவைகளையும் வரவுசெலவுத் திட்டம் காட்டும். மக்கள் உடனடியாகப் பயன்படுத்துவதற்காகச் செய்யும் செலவு, பொருள்களை வாங்குவதற்காக அரசினர் செய்யும் செலவு, முதலீட்டுச் செலவு முதலியவைகளை மொத்தச் செலவில் சேர்க்கவேண்டும். அயல்நாட்டு வர்த்தகம் திட்டத்தை எவ்வாறு பாதிக்கின்றது என்பதையும் நாம் கவனிக்கவேண்டும். அரசினர் தம் திட்டத்தைப் பாதிக்கும் எல்லாவற்றையும் நன்கு பரிசீலனை செய்த பிறகே திட்டத்தை வகுக்கின்றனர். திட்டத்தைப் பாதிக்கக்கூடியவைகளை எல்லாம் அரசாங்கம் அறிகுறிகளைக்கொண்டே மதிப்பீடு செய்கின்றது. பொருளாதாரத்திற்கு ஏற்படக்கூடிய தீமைகளை அரசாங்கம் புள்ளிவிவரங்களைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். விலைகள், உற்பத்தி முதலியவை பற்றிய குறியீட்டெண்கள், வேலையின்மை பற்றிய விவரங்கள், நிதி பற்றிய புள்ளி விவரங்கள், பாங்குச் செலாவணி, வட்டிவீதங்கள் முதலியவை பற்றிய விவரங்கள், துய்ப்போர் செலவு பற்றிய விவரங்கள் கூலிகள், ஏற்றுமதி, இறக்குமதி முதலியவை பற்றிய விவரங்கள்—இத்தகைய விவரங்களைப் பார்த்தால் பொருளாதாரம் எந்த நிலையில் இருக்கின்றது என்பதை நாம் புரிந்துகொள்ளலாம். நாட்டில் இருக்கும் சரக்குகளின் அளவு, தொழிலதிபர்கள் ஈட்டும் இலாபம், தொழிலாளர்கள் வேலை செய்யும் உபரி நேரம் முதலியவைகளும் நாட்டின் நிலையை எடுத்துக்காட்டும். காற்றின் திசையைப் பறக்கும் வைக்கோல் காட்டுவதுபோல் மேலே குறிப்பிட்ட அறிகுறிகள் பொருளாதார நிலைமையைக் காட்டும். செயற்படுத்தும் தேவை மிகுதியடைவதால் பொருள்களில் பற்றாக்குறையும் பணவீக்கமும் ஏற்படுகின்றனவா, அல்லது செயல்படுத்தும் தேவை

குறைவாக இருப்பதால் வேலையின்மை ஏற்படுகின்றதா என்பதை எடுத்துக்காட்டுகின்றன.

**திட்டங்களும் திட்டமிடுதலும்**

மேலே குறிப்பிட்ட விவரங்களில் சில ஒன்றுக்கொன்று ஒவ்வாதனவாக இருக்கின்றன. இந்த விவரங்களை நாம் தேசீயக் கணக்குகளில் காணலாம். இந்த விவரங்களைக் கொண்டே அடுத்த ஆண்டில் மக்கள் பெறும் வருமானத்தையும் உற்பத்தியாகும் பொருள்களின் அளவையும் அவை எவ்வாறு பங்கீடு செய்யப்படும் என்பவைகளையும் மதிப்பீடு செய்கின்றனர். தேசீயக் கணக்குகள் எவ்வாறு முக்கியமானவையாக இருக்கின்றன? பின்னர் நடக்கப்போவதின் அறிகுறிகளாக இருக்கின்றனவா? வளர்ச்சித் திட்டத்தின் இலக்குகளாக இருக்கின்றனவா? எதிர்காலத்தில் அரசினர் எதிர்பார்க்கும் விளைவுகளாகஇருக்கின்றனவா? சில புள்ளி விவரங்களை ஆண்டுதோறும் வெளியிடுவதைத் திட்டம் வகுத்தல் என்று நாம் கூறமுடியாது. அரசினர் உற்பத்தியைக் கண்காணிக்காமல் அதை உற்றுநோக்கினல் மட்டும், புள்ளி விவரங்கள் திட்டங்களாகா. மற்ற விவரங்களைப் போல் அல்லாமல் இப் புள்ளி விவரங்கள் அரசாங்கக் கொள்கைகள் எவ்வாறு இருக்கலாம் என்பதைக் காட்டுகின்றன. ஆனல் அரசாங்கத்தின் கொள்கையும் அதன் முடிவுகளுமே முக்கியமானவையாக இருக்கின்றன. எதிர்காலத்துப் போக்குகளை அரசாங்கம் எதிர்பார்ப்பதைத் திட்டம் என்று நாம் கூறுவதில்லை. அப்போக்குகளைக் கண்காணித்துச் சில முடிவுகளை ஏற்படுத்துவதற்காகச் செய்யும் முயற்சியையே திட்டம் என்று நாம் கூறலாம்.

திட்டக் குழுவினர் தம் கொள்கையைத் தெளிவுபடுத்த வேண்டும்; பிற்காலத்துப் போக்குகளை அறியவேண்டும். தம் திட்டங்கள் பிற்காலத்துப் போக்குகளை எவ்வாறு பாதிக்கும் என்பதையும் அறியவேண்டும். அரசினர் கொள்கை பிற்காலத்துப் போக்குகளை பாதிக்காமல் இருந்தால் அவை எவ்வாறு இருக்கும் என்பதைப் புள்ளிவிவரங்கள் எடுத்துக்காட்டுகின்றன. ஏற்றுமதியை 10 சதவீதம் பெருக்குவதற்கான ஏற்பாட்டையே திட்டம் கொண்டிருக்கலாம். ஆனல் அதை 20 சதவீதம் பெருக்குவதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்யலாம். அரசினர் அளிக்கும் உதவியைக் கொண்டு தனி உற்பத்தியாளர்கள் எந்த அளவு ஏற்றுமதியைப் பெருக்குவார்கள் என்பதையே புள்ளிவிவரங்கள் எடுத்துக்காட்டுகின்றன. திட்டக் குழுவினர் ஏற்றுமதியைப் பெருக்குவதில் உள்ள இடையூறுகளை நன்கு அறிவர். இந்தவிதமாக வகுக்கும் ஏற்றுமதித் திட்டமும் இலக்கும் வேறுபட்டிருக்கின்றன. பாதக அயல்

நாட்டுக் கொடுப்பல் நிலையைச் சரிப்படுத்துவதற்காக அரசினர் ஏற்றுமதியை ஓர் அளவு பெருக்கவேண்டும் என்று முடிவு செய்யலாம். இந்த அளவையே நாம் இலக்கு என்கிறோம். இத் திட்டத்தைச் செயலாற்ற எந்த நடவடிக்கைகளை நாம் எடுக்க வேண்டும் என்பதை இலக்குக் காட்டவில்லை. ஏற்றுமதி பெருகுவதால் பொருளாதாரம் எவ்வாறு பாதிக்கப்படும் என்பதையும், ஏற்றுமதித் தொழில்களில் வேலைவாய்ப்புகள் பெருகுவதாலும் பொருளாதாரம் எவ்வாறு மாறலாம் என்பதையும் இலக்கு எடுத்துக் காட்டாது.

முதலீடு, இறக்குமதி, தேசீய வருமானம், செலவு முதலியவை பற்றிய திட்டங்களையும் வகுத்து அரசினர் செயலாற்றலாம். நாட்டின் பொருளாதாரம் எவ்வித மாறுதல்கள் அடையும் என்பதைத் திட்டங்கள் காட்டுகின்றன. திட்டங்கள் பொருளாதாரத்தைக்கட்டுப்பாடு செய்யாமல் ஒழுங்குபடுத்துகின்றன. தற்சமயம் இருக்கும் தேசீய வருமானத்தையும், அதன் பங்கீட்டையும் மாற்றாமல், அவைகளை அடிப்படையாகக் கொண்டு அரசினர் திட்டம் வகுப்பதில்லை. திட்டத்தின்மூலம் தேசீய வருமானத்தையும், அதன் பங்கீட்டையும் அரசாங்கம் மாற்ற முயற்சி செய்கின்றது. அரசாங்கம் தன் வரவுசெலவுத் திட்டத்தில் ஒரு சமநிலையை ஏற்படுத்த மட்டும் முயற்சி செய்யாமல், தேசீய வருமானத்தையும், செலவையும் மாற்றியமைக்கவும் முயற்சி செய்கின்றது. இவ்விரண்டு திட்டங்களும் தொடர்புகொண்டிருக்கின்றன. தேசீய வருமானம் அரசாங்கத்தின் வரவையும் செலவையும் பாதிக்கின்றது. உதாரணமாக தேசீய வருமானம் மாறினால், அரசினர் வேலையில்லாதவர்களுக்குக் கொடுக்கும் உதவிப் பணமும், அவர்கள் வசூல் செய்யும் வரித்தொகையும் மாறும். அரசாங்கத்தின் வரவு-செலவுத்திட்டமும் தேசீய வருமானத்தைக் கணிசமான அளவு மாற்றலாம். அரசினர் தம் செலவைவிட வரவை அதிகரித்தால் பணவீக்கம் குறையும். நாட்டில் வேலை நிறைவு ஏற்படுதல், உற்பத்திச் சாதனங்களைப் பல்வேறு துறைகளிடையே பங்கீடு செய்தல், அவைகளுடைய உற்பத்தி முதலியவைகளை அரசினர் கொள்கையும், திட்டங்களும் நிர்ணயம் செய்யும். தேசீய வருமானத்தின் பங்கீட்டையும் அரசினர் கண்காணிக்கலாம். தேசீய வருமானத்தில் 30 சதவீதத்தையே அரசினர் அடைகின்றனர் என்றும், எஞ்சிய தொகை மக்களிடையே பங்கீடாவதை அரசாங்கம் கட்டுப்படுத்தமுடியாதென்றும் நாம் கருதக்கூடாது. செல்வப் பங்கீட்டை அரசினர் நேரிடையாகக் கட்டுப்பாடு செய்யலாம்; கூலிகளையும் இலாப ஈவையும் அரசாங்கம் ஒரே நிலையில் வைத்திருக்கலாம். அரசினர் தொழிலா

ளர்கள் சங்கங்களுடனும், தொழிலதிபர்களுடனும் ஒப்பந்தம் செய்துகொண்டு கூலிகளை நிலைப்படுத்தலாம். இக்கூலிகள் அரசியலாரின் கொள்கைக்குப் பொருத்தமாக இருக்கவேண்டும்.

அரசாங்கம் குறிப்பிட்ட சில பிரச்சினைகளை மட்டும் தீர்க்காமல் பொருளாதார அமைப்பையே கட்டுப்பாடு செய்வதால் இரு புதிய பிரச்சினைகள் எழுகின்றன. அரசாங்கத்தின் திட்டம் வெற்றிகரமாக இருப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். இரண்டாவதாக எந்த அளவுக்குத் தன் அதிகாரத்தைப் பெருக்கிக்கொள்ளவேண்டும் என்பதை அரசாங்கம் முடிவுசெய்யவேண்டும். இந்த இரு பிரச்சினைகளின் விவரங்கள் அனைத்தையும் நாம் இங்குப் பரிசீலனை செய்யமுடியாது. சில முக்கியமான விவரங்களை இங்குக் குறிப்பிடலாம்.

**தூண்டுதல்களும் கட்டாயப்படுத்தலும்**

போர்க்காலத்தில் கட்டாய முறையைப் பின்பற்றியே அரசாங்கம் தன் கொள்கையைச்செயலாற்றுகின்றது. இராணுவத்தில் எல்லோரும் சேரவேண்டும் என்று அரசாங்கம் மக்களைக் கட்டாயப்படுத்தலாம். மக்கள் சாதாரணமாக விரும்பாத வேலைகளில் அவர்கள் அமரவேண்டும் என்றும் அரசாங்கம் கட்டாயப் படுத்தலாம். அனுமதி வழங்கல், தடை செய்தல், பங்கீட்டு முறை முதலியவை மூலம் பல்வேறு கட்டுப்பாடுகளை அரசாங்கம் நாட்டில் புகுத்தலாம். அரசாங்கம் மக்களுக்கு வேலை செய்யத் தூண்டுதல்களையும் அளிக்கலாம். மார்க்கட்டுச் சக்தி வழக்கம்போல் இயங்குகின்றது. ஆனால் புதிய கட்டுப்பாடுகளுக்குட்பட்டிருப்பதால் இச்சக்தி குறுகிய எல்லைகளுக்குள் இயங்குகிறது. கட்டுப்பாடுகளே மக்களுடைய விருப்பங்களுக்கும், உற்பத்திச் சாதனங்களின் பயனுக்கும் ஒரு பொருத்தத்தை ஏற்படுத்துகின்றன. அரசாங்கம் கச்சாப் பொருள்களைப் பங்கிடுசெய்யும் பொழுது அதற்கான செலவை உற்பத்தியாளர்களிடமிருந்து வசூல் செய்கின்றது.

அமைதி நிலவும்பொழுது அரசாங்கத்தின் கட்டாயத்தை ஒருவரும் விரும்புவதில்லை. ஆகையால் தூண்டுதல்கள் மூலமே அரசாங்கம் தன் திட்டங்களைச் செயலாற்ற வேண்டும். புழக்கத்திலிருக்கும் செலாவணியைப் பெருக்குவதற்காக அரசினர் தம் செலவைப் பெருக்குவர். அரசினர் உபரியாகச் செலவு செய்யும் தொகையை மக்கள் ஏற்றுக் கொள்வதற்குக் கட்டாயம் தேவைப்படவில்லை. புதிய வரிகளை விதிக்கும்பொழுதுதான் கட்டாயமுறை அமலில் வருகின்றது. ஓரளவுக்குமேல் வருமானத்தைப் பெருக்க ஒருவன்

மறுத்தால், வருமானவரியை அதிகம் செலுத்த வேண்டியதில்லை. புகையிலையைப் பயன்படுத்தாத ஒருவன் அதன்மீது விதிக்கப்பட்டிருக்கும் வரியைச் செலுத்த வேண்டாம்.

இங்கிலாந்தில் அரசாங்கம் தன் திட்டத்தைச் செயலாற்றுவதற்கு வரிகளையும் விலைகள் மூலம் கொடுக்கும் தூண்டுதல்களையும் மட்டும் பயன்படுத்துவதில்லை. அரசாங்கம் குறைவாக இருக்கும் பொருள்களை மக்களிடையே பகிர்ந்து கொடுத்தது; கச்சாப் பொருள்களை உற்பத்தியாளர்களிடையே பங்கீடு செய்தது; புதிய கட்டடங்களுக்கு அனுமதி கொடுத்தது; விவசாயம், சுரங்க வேலை முதலியவைகளிலிருந்து தொழிலாளர்கள் விலகக் கூடாதென்று ஆணையிட்டது. விலைவாசி முறையை முழுவதும் நம்பாமலே மேலே குறிப்பிட்ட முறைகளை அரசாங்கம் பின்பற்றியது. பண்டங்களின் அளிப்பில் பற்றுக்குறை ஏற்பட்ட பொழுது விலைகள் உயர்ந்தன. உற்பத்தி உடனடியாகப் பெருக முடியாத நிலையில் இருந்தால் அரசாங்கம் பங்கீட்டு முறையைப் பயன்படுத்தியது. பற்றுக்குறை மறைந்தபின் கட்டுப்பாடுகளும் நீங்கின. கட்டுப்பாடுகளும் கட்டாய முறையும் பிணைந்திருக்கின்றன. இறைச்சி பங்கீடு செய்யப்பட்டால், ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மேல் ஒருவரும் அதை வாங்க முடியாது.

கட்டுப்பாடுகளைக் கண்டு நாம் அஞ்சவேண்டாம். மக்களைக் கட்டுப்பாடுகளுக்குட் புடுத்தாத சட்டங்களே இல்லை. ஜனநாயக நாட்டில் அரசாங்கம் யதேச்சாதிகாரத்தைச் செலுத்த முடியாது. பொது மக்களுடைய ஆதரவும் அனுமதியும் இல்லாமல் திட்டத்தை அமலில் கொண்டு வரமுடியாது. திட்டம் எவ்வளவு பெரியதாக இருக்கின்றதோ அதற்கேற்ற அளவு கட்டுப்பாடுகள் வேண்டும்; மார்க்கட்டின் இயற்கைச் சக்தி தடையற்ற முறையில் இயங்காது.

### பொதுத் திட்டம் (Central Planning)

பொருளாதாரத்தின் அமைப்பை உடனடியாக மாற்ற வேண்டிய அவசியம் ஏற்பட்டால் அரசாங்கம் ஒரு பொதுத் திட்டத்தை அமலில் கொண்டு வரவேண்டும். வரவு செலவுத் திட்டத்தின் மூலம் மாறுதல்களைப் புகுத்தினால் மட்டும் போதாது. இறுதிநிலையில் மாற்றங்களை ஏற்படுத்துவதற்கு விலைவாசி முறையைப் பின்பற்றலாம். ஆனால் அளிப்பையும், தேவையையும் கணிசமான அளவு மாற்றுவதற்கு விலைவாசி முறையைப் பயன்படுத்த முடியாது. மக்களுடைய விருப்பங்கள் மாறினால், இப்பொழுது நிலவும் விலைவாசியை அடிப்படையாகக் கொண்டு உற்பத்திச் சாதனங்களைப் பல்வேறு தொழில்களுக்குப் பங்கீடு செய்யமுடியாது. மார்க்கட்டின்

இயற்கையான சக்தி மிகவும் தாமதித்தே நாம் விரும்பும் மாறுதல்களைப் புகுத்தும். மேலும் இந்த மாறுதல்கள் ஏற்பட வேண்டுமானல் விலைகள் அளவுக்கு மீறி மாறவேண்டும். கணிசமான மாறுதல்களை நாம் ஏற்படுத்த விரும்பினாலும், பொருள்களின் அளிப்பும், தேவையும் மிகக் குறைந்த நெகிழ்ச்சியைக் (Elasticity) கொண்டிருந்தாலும் அரசாங்கம் விரும்பும் மாறுதல்களைப் பொருளாதாரத்தில் எளிதில் புகுத்த முடியாது. சாதாரணமாக அளிப்புக்கும் தேவைக்குமிடையே சமநிலையை ஏற்படுத்தும் விலை, இதுபோன்ற சூழ்நிலையில் சமநிலையைப் பாதிக்கும்.

போர்க்காலத்தில் சாதாரணமாக இச்சூழ்நிலை ஏற்படுவது இயற்கை. பொதுத்திட்டத்தைப் பின்பற்ற வேண்டிய அவசியம் ஏற்படும். பொது மக்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்வதை விடப் போருக்கு வேண்டிய பொருள்களை உற்பத்தி செய்வதிலேயே அரசாங்கம் தன் கவனத்தைச் செலுத்த வேண்டும். போரில் வெற்றியடைவதற்காக ஏற்பாடுகள் செய்ய வேண்டும். உற்பத்திச் சாதனங்களில் ஏறக்குறைய அரைப்பகுதியை அரசினர் பயன்படுத்தலாம். மேலும் போருக்காகத் தேவையாக இருக்கும் பொருள்களுக்கு உற்பத்தியில் அரசினர் முதல் இடம் கொடுக்கலாம். போரில் வெற்றியடைய வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் அரசாங்கம் பொருள் உற்பத்திக்கு ஒரு முன்னுரிமைப் பட்டியலைத் தயார் செய்து உற்பத்தியைப் பல கட்டுப்பாடுகளுக்குட்படுத்தலாம்[1].

**பொருளாதாரத் துறையில் பின்தங்கிய நாடுகளில் திட்டம் வகுத்தல்:**

பல்வேறு மக்களுடைய ஒன்றுக்கொன்று ஒவ்வாத விருப்பங்களை நிறைவேற்றுவதற்கு எவ்வாறு திட்டமிடுதல் இன்றியமையாததாக இருக்கின்றதோ, அதே போல் தொழில் வளர்ச்சி விரைவில் ஏற்படவேண்டுமானல் திட்டம்வகுத்தல் இன்றியமையாததாக இருக்கின்றது. மார்க்கட்டின் இயற்கைச் சக்தியைப்பயன்படுத்திச் சில குறிப்பிட்ட தொழில்களை வளர்க்க முடியாது. முன்னுரிமைப் பட்டியல்களும் திட்டங்களும் அவசியம் வேண்டும். விலைவாசி முறையைக் கொண்டு விரைவில் தொழில் வளர்ச்சியை ஏற்படுத்த முடியாது. பல்வேறு தொழில்களில் ஏற்படும் வளர்ச்சியில் ஒரு பொருத்தத்தை ஏற்படுத்துவதற்குத் திட்டங்கள் அவசியம் வேண்டும். விலைவாசி முறையையும் மார்க்கட்டுச் சக்தியையும் மாற்றி

1 இ. டெவன்ஸ்: (E. Devons) "Economic Planning in war and peace." The Manchester School January, 1948.

யமைக்க வேண்டும். அவ்வாறு செய்தால்தான் தொழில் வளர்ச்சியைத் திட்டத்திற்குத் தகுந்தவாறு மாற்றலாம். மார்க்கட்டிலும் உற்பத்தியிலும் அரசாங்கம் சட்டம், விதி, ஆணைகள் முதலியவை மூலமே நெகிழ்ச்சியை ஏற்படுத்துகின்றது. சில துறைகளில் உற்பத்தி உடனடியாகப் பெருக வேண்டும் என்று அரசாங்கம் விரும்பினால், ஏராளமான உற்பத்திச் சாதனங்களை இத்துறைகளுக்குக் கொடுக்கலாம். எத்துறையில் உற்பத்தி குறையவேண்டுமென்று அரசாங்கம் விரும்புகின்றதோ, அத்துறைக்குக் குறைவான அளவில் கச்சாப் பொருள்களையும், மற்ற உற்பத்திச் சாதனங்களையும் கொடுக்கலாம்.

பொருளாதாரத் துறையில் பின் தங்கிய நாடுகள் பொதுத் திட்டத்தை வகுக்கப் பல காரணங்கள் இருக்கின்றன.

(1) இத்தகைய நாடுகளே தம் பொருளாதார அமைப்பில் உடனடியாக மாறுதல்களை ஏற்படுத்த விரும்புகின்றன. இந்த மாறுதல்கள் தேவையாகவும் இருக்கின்றன.

(2) பொருளாதாரத் துறையில் பின் தங்கிய நாடுகளில் மற்ற நாடுகளைப் போல் மார்க்கட்டின் இயற்கைச் சக்தி விரைவாக இயங்குவதில்லை. இந்த நாடுகளில் உற்பத்தியில் நெகிழ்ச்சி இல்லை. விலைகளுக்குத் தகுந்தவாறு உற்பத்தி உடனடியாக மாறுவதில்லை. இந்த மாறுதல்களை மதிப்பிடுவது கடினம்.

(3) தொழில் செறிந்த நாட்டில், வளர்ச்சி ஏற்படும் பொழுது, ஒரு தொழிற்சாலையில் எவ்வித மாறுதல்கள் ஏற்படுகின்றன என்பதை எளிதில் மதிப்பிடலாம். ஆனால் பொருளாதாரத் துறையில் பின் தங்கிய நாடுகளில் இவ்வாறு செய்வது கடினம். ஒரு நிறுவனத்தின் செயல்கள் மற்ற நிறுவனங்களைப் பாதிக்கலாம். உற்பத்தி முறையில் ஏற்படும் மாறுதல் எல்லாத் தொழில்களையும் பாதிக்கலாம். முதலீடு பெருகுவதால் பழைய நிறுவனங்கள் வளர்ச்சி யடையலாம். ஒரு நிறுவனம் தொழிலாளர்களுக்குச் சிறப்பான பயிற்சியளித்தால் மற்ற நிறுவனங்களும் இதே பயிற்சியைக் கொடுக்கலாம். ஆகையால் தனி நிறுவனங்கள் தம் விருப்பம் போல் உற்பத்தியைப் பெருக்குவதை அனுமதிப்பதை விடத் தொழில் வளர்ச்சிக்கு ஒரு திட்டம் வகுப்பதே சிறந்ததாகும்.

(4) தொழில் வளர்ச்சிக்கு ஒரு தூண்டுதலைக் கொடுக்க விரும்புவதால் அரசாங்கம் திட்டத்தை வகுக்கின்றது. திட்டம் மக்களுக்கும் ஒரு ஊக்கத்தைக் கொடுக்கின்றது. பொதுத் திட்டம் செயலாற்றப்படும் பொழுது, வரிகள் மூலம் வசூலான தொகையைக்

கொண்டு அரசினர் முதலீடு செய்கின்றனர். அரசாங்கம் வரிகள் மூலம் உபரித்தொகையை வசூல் செய்யும் பொழுது, இத் தொகையை ஏன் வசூல் செய்ய வேண்டியிருக்கின்றது என்பதை மக்களுக்கு உணர்த்த வேண்டும். திட்டம் செயலாற்றப்படுவதால் உற்பத்தி பெருகும், வாழ்க்கைத் தரம் உயரும் என்ற நம்பிக்கையுடன் மக்கள் வரிகளைச் செலுத்துவார்கள். பொருளாதாரத்துறையில் பின் தங்கிய நாடுகள் எதிர்காலத்தில் மக்களுடைய வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். இந்த நோக்கங்களை நிறைவேற்றுவதற்கு ஒரு திட்டம் வேண்டும்.

### திட்டம் வகுத்தலும் அரசினர் செலுத்தும் அதிகாரமும்

தூண்டுதல்கள் மூலம் திட்டத்தைச் செயலாற்றுவதைச் சிலர் கண்டனஞ் செய்கின்றனர். ஒரு திட்டக்குழு மிகச் சிறந்த முறையில் தொண்டாற்ற முடியும் என்பது அவர்கள் கருத்தாகும். திட்டக் குழுவினர் அளவுக்கு மீறிய திறமையுடன் பணிபுரிவர் என்பது இவர்கள் எண்ணம். ஆனால் இத்தகைய திறமையுடையவர்களே இல்லை. இத்தைய திறமைசாலிகள் நாட்டில்இருந்தாலும் அவர்கள் மையக்குழுவில் அங்கம் வகிக்கவில்லை. மேலும் அவர்கள் குழுவின் அங்கத்தினர்களாகஇருந்தாலும் நாட்டின் நலனைக்கருதித் தொண்டாற்றுவதில்லை. இவ்வாறு தொண்டாற்றினாலும் அவர்கள் நீண்ட நாட்கள் பொதுநலத்தொண்டையே கருதி வேலை செய்வதில்லை. பொதுத் திட்டத்தை நிருவாகம் செய்யும் குழு மிகச் சிக்கலான பிரச்சினைகளைத் தீர்க்கவேண்டும். திட்டக்குழுவின் வேலைக்குப் பல இடையூறுகளும் தொல்லைகளும் இருக்கின்றன. மேலும் திட்டக்குழுவினரிடம் எல்லா அதிகாரங்களும் குவிந்திருக்கவேண்டும். இதன் விளைவாக ஜனநாயக உரிமைகள் பாதிக்கப்படலாம். முதன் முதலில் தனியாட்கள் சிலஉரிமைகளை விட்டுக்கொடுக்கவேண்டும். பிறகு ஜனநாயக உரிமைகளே பாதிக்கப்படலாம். திட்டக்குழுவினர் ஜனநாயக முறைகளாகிய தடைகளையும், தூண்டுதல்களையும் பயன்படுத்த விரும்ப மாட்டார்கள். திட்டங்களைச் செயலாற்ற அவர்கள் அதிகாரத்தைச்செலுத்துவர்; கட்டுப்பாடுகளை அமலில் கொண்டு வர முயற்சி செய்வர். தனியார் துறையில் பொருள்கள் உற்பத்தியாகும் பொழுது இந்த விளைவுகள ஏற்படா.

19-ஆம் நூற்றாண்டில் பலர் தனியாட்களின் சுதந்திரத்தையே போற்றினர். மேலே நாம் குறிப்பிட்ட குறைகளை எல்லோரும் எடுத்துக் காட்டியிருப்பார்கள். ஆனால் 20-ஆம் நூற்றாண்டில் மக்கள் சமத்துவத்தை விரும்புவதால் பழைய கருத்தை ஓரளவு விட்டுக் கொடுக்கவேண்டும். அரசினர் தலையிடாக் கொள்கையைப் பின்பற்றினால் சமத்துவம் ஏற்படாது. சமத்துவத்தை நிலை

நாட்ட அரசாங்கம் ஏற்பாடு செய்யவேண்டும். இந்த ஏற்பாட்டைச் செய்வதற்காக அரசாங்கம் தன் அதிகாரங்களைப் பெருக்கிக் கொள்ளவேண்டும். ஜனநாயக அரசாங்கம் சர்வாதிகார அதிகாரங்களைச் செலுத்த வேண்டிய நிலைமை ஏற்படலாம்.

அரசாங்கத்தின் பொதுத் திட்டமும், தனியார் துறை உற்பத்தி முறையும் குறைபாடுகள் நிறைந்திருக்கின்றன. அரசாங்கம் எதையும் உடனடியாகவும், செம்மையான முறையிலும் செய்யாது. அதிகாரிகள் ஏழைகளைத் துன்புறுத்தலாம். பொதுத்திட்டம் இக்குறைபாடுகளைக் கொண்டிருக்கின்றது. தனியார் துறை உற்பத்தி முறையைப் பின்பற்றினால் வேலையின்மை இருக்கும். மேலும் சர்வாதீனங்கள் ஏற்படலாம். இவ்விரு முறைகளின் குறைகளை நீக்கித் தனியார் துறை உற்பத்தி முறையில் ஏற்படும் வீண் செலவுகளையும், அரசினர் திட்டத்தின் ஊழல்களையும் அகற்றி, ஒருபுதிய, குறைபாடற்ற, செம்மையான முறையை உருவாக்குவது கடினமான காரியமாகும்.

இந்த முறையை அரசாங்கம் அனுபவ வாயிலாகவே கற்க வேண்டும். இதற்காக முன் கூட்டியே திட்டம் வகுக்கமுடியாது. போர்க்காலத்து அனுபவத்தையும், அமைதிகால அனுபவத்தையும் கொண்டே இந்த முறையை அரசாங்கம் பின்பற்றவேண்டும். தம் அனுபவத்தை அரசாங்கம் பரிசீலனை செய்து, எப்பிரச்சினைகளுக்கு இதுவரை முடிவு காணவில்லையோ அவைகளுக்கு முடிவு காண முயற்சி செய்யவேண்டும். பிரச்சினைகளை வகைப்படுத்தி, அவைகளிடையே உள்ள ஒற்றுமைகளை அறியவேண்டும். எல்லாப் பிரச்சினைகளையும் ஒரே வழியில் தீர்க்க முடியாது. பொருளாதார நிலைமையை அரசாங்கம் நன்குஅறிந்து, பிரச்சினைகளைப் பரிசீலனை செய்து, நாட்டின் பொருளாதாரத்தைச் செப்பனிடலாம். இவ்வாறு செய்தால் நிலைமை விரைவில் முன்னேறும். நிலைமையைச் சரியாகப் 'பரிசீலனை' செய்யாமல் ஒரு கொள்கையைப் பின்பற்றினால் முன்னேற்றம் ஏற்படாது. இந்த வழிகளை அரசாங்கம் அனுபவ வாயிலாகவே கற்கவேண்டும்.

முற்றிற்று

